

# பாதகங்கள் தீர்க்கும் பரமன்

"தீராத வினையெல்லாம் தீர்த்து வைப்பாய், கோவிந்தா" என்று வேண்டிடும் மக்களின் வினைகள் அனைத்தையும் தீர்த்திடும் கோவிந்தனும், திருவேங்கடவன், வீற்றிருக்கும் திருமலையென்னும் திருப்பதி, இன்று நாட்டு மக்கள் அனைவருடைய உள்ளத்தையும் ஈர்த்திடும் திருத்தலமாகும். பல்லாயிரக்கணக்கான பாமர மக்கள், படித்தவர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் இந்த "வடமாலவன் குன்றத்திற்கு" நாள்தோறும் வந்து, "ஸ்ரீநிவாஸா கோவிந்தா, வேங்கடேசா, பாலாஜி" என்றும், இன்னும் பலபல நாமங்களாலும் துதித்து, அங்கு நின்ற திருக்கோலத்தில் மக்களுக்காகக் காத்திருக்கும் நெடியோனிடம் தன்னுடைய மனக் கவலையெல்லாவற்றையும் ஒப்புவித்து, மனச்சாந்தி பெற்றுத் திரும்புவது உலகறிந்த விஷயம்.

"தாழ்சடையும் நீள்முடியும்,
ஒண்மழுவும் சக்கரமும்
சூழ் அரவும் பொன்னுடும்
தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும்
திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய்
இசைந்து"

என்று பேயாழ்வாரின் உள்ளத்திலே சமஷ்டித் தெய்வமாய்த் தோன்றி அருள் புரிந்து, இக்கலியுகத்தில் கண்கண்ட தெய்வமாய் வீற்றிருக்கும் ஏழுமலையாண்டவனின் திருவருளை, இப்புத்தாண்டு தினத்திலே நாமனைவரும் வேண்டி நிற்போமாக!

அனைத்துக்கும் காரணமாய பரம் பொருள் தான் மக்கள் அனைவருக்கும் அம்மையாகவும், அப்பனாகவும் இருந்து அருள் பாலித்து வருவது கண்கூடு. பலபல நாமங்கள், பலபல உருவங்களைத் தாங்கி ஆணாகவும், பெண்ணாகவும் இரண்டும் சேர்ந்த ஒன்றாகவும் இருந்து விந்தைகள் செய்யும் "எந்தையர் இறைவன்" தான் திருவேங்கடத் திருப்பதியிலும் வீற்றிருக்கிறான்.

அந்தத் தூய திருவேங்கடத் தானை நம்மாழ்வார்,

"அகலகில்லேன் இறையுமென்
றும்
அலர்மேல் மங்கையுறை
மார்பா!
நிகரில் புகழாய்! உலகமூன்றுடை
யாய்
என்னையாள்வோனே!
நிகரில் அமரர் முனிக்கணங்கள்
விரும்பும் திருவேங்கடத்
தானே!
புகலொன்றிலா அடியேன் உன்
னடிக்
கீழ் அமர்ந்து புகுந்தேனே!"

என்று போற்றிச் சரணடைந்தார்.

இவ்விதம், மலைமேல் வீற்றிருக்கும் அண்ணல் ஸ்ரீ வேங்கடேஸ்வர ஸ்வாமியையும், அவனது திருமார்பில் என்றும் உறைந்து, திருச்சானூரிலும் இருந்து, வழிபடவரும் மக்களை வழியனுப்பிவைக்கும் ஸ்ரீ அலர் மேல் மங்கைத் தாயாரையும் தத்ரூபமாக "சில்பி" வடித்துக் கொடுத்திருக்கும் திருவுருவ வண்ணப் படங்களைக் கதிர் வாசகர்களுக்கு மகிழ்ச்சியுடன் அளிக்கிறோம்.

**ஆசிரியர்.**





# மதுரா விஜயம்

ஸ்ரீ வேணுகோபாலன்

எழிலுடைய அம்மனைமீர்!
என் அரங்கத்து இன் அமுதர்,
குழலழகர்; வாயழகர்;
கண்ணழகர், கொப்பூழில்
எழுகமலப் பூவழகர்,
எம்மானுர், என்னுடைய
கழல் வளையைத் தாமும்!
கழல்வளையே ஆக்கினரே!

ஆண்டாளின் பக்திப் பரவசமான பாடலை மனத்துள் நினைத்து, அரங்கனது திவ்ய வடிவழகில் முழுதுமாய் லயித்து, இந்தத் தொடரை எழுதத் தொடங்குகிறேன்.

'திருவரங்கன் உலா'வில் கடைசிப் பகுதியில், அரங்கரை மேல்கோட்டை ★ என்னும் திரு நாராயணபுரத்தில் தங்க வைத்துவிட்டு விடை பெற்றிருந்தேன்.

இப்போது அங்கிருந்து அவரைப் புறப்படச் செய்து மேலும் 'உலா'ப் போகச் செய்வதற்கான சந்தர்ப்பம் வந்து விட்டது.

## தலைப்பு என்னுடையதல்ல

'மதுரா விஜயம்' என்ற இந்தத் தலைப்பு நான் கொடுத்த தலைப்பு அல்ல.

மற்றொருவரது தலைப்பை எடுத்துக் கையாண்டிருக்கிறேன்.

இதற்காக எனக்கு முன் அறுநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த கங்காதேவி என்பவளிடம் மன்னிப்புக் கேட்கக் கடமைப் பட்டிருக்கிறேன்.

இந்தத் தலைப்பை வைத்து ஒரு காவியமே உருவாக்கியவள் கங்கா தேவி!

நான் எழுதும் இந்தக் கதை நிகழ்ந்த காலத்திலேயே அவளும் வாழ்ந்து வந்தாள்.

நான் எடுத்துக் கொண்டுள்ள இந்தக் கதையின் கருப் பொருளை அவள் ஏற்கெனவே ஒரு சிறிய காவியமாகப் பாடிவிட்டுப் போய்விட்டாள்.

அந்த வடமொழிக் காவியத்தின் பெயர்தான் 'மதுரா விஜயம்.' மதுரையின் வெற்றி என்று பொருள்.

அவள் கொடுத்துள்ள இதே தலைப்பை அறுநூறு ஆண்டுகளுக்குப் பின்னால் வாழும் நான் எடுத்துக் கையாள்வதற்கு மிகவும் பேறு பெற்றிருக்கிறேன்.

## கங்கா தேவியின் சிறப்பு

இந்தியர்களுக்குச் சரித்திர உணர்வு குறைவு என்று கூறுவார்கள். அதில் ஓரளவு உண்மையிருக்கிறது.

தங்கள் தங்கள் காலத்தில் நிகழ்ந்த சம்பவங்களையோ, போர்களையோ அல்லது இதர செய்திகளையோ பெரும்பான்மைக் கவிஞர்களும் காவியம் படைத்தவர்களும் தாங்கள் வடித்த நூல்களில் எழுதி வைக்கவில்லை.

★ தற்போதைய மைசூர் அருகில் இருக்கிற ஊர்.

அப்படி அவர்கள் செய்து வைத்திருந்தால், இன்று நம் வரலாறுகளை எழுத அவை பேருதவியாக இருந்திருக்கும்.

செய்திகளுக்கோ, நிகழ்ச்சிகளுக்கோ அந்நாளில் அறிஞர்கள் அதிக முக்கியத்துவம் கொடுக்கவில்லை. வாழ்க்கைக்கு அவை அவசியம் இல்லை என்று அவர்கள் கருதினார்கள் என்று நினைக்கிறேன்.

ஆனால் இதற்கு விதிவிலக்காக இருந்திருக்கிறாள் கங்காதேவி.

## கங்காதேவி செய்தது என்ன?

கங்காதேவி அரச குடும்பத்தைச் சேர்ந்தவள்.

குமார கம்பணன் என்ற அரசரின் பட்டத்து ராணியாக விளங்கியவள்.

கம்பணன் செய்த அரிய செயல்களையும் போர்களையும்தான் ஒரு சிறு காவியத்தில் உருவாக்கி விட்டாள் கங்காதேவி.

அப்படி அவள் செய்தது அந்நாளில் மற்ற கவிஞர்களும், அறிஞர்களும் செய்யாத ஒரு தனித்தன்மையான செயல்!

இதற்காக நாம் கங்கா தேவிக்குப் பெரிதும் கடமைப் பட்டிருக்கிறோம்.

அவள் எழுதிய நூலால் அந்நாளையச் செய்திகளில் பல நமக்குத் தெரிய வந்துள்ளன.

வரலாற்றுக்கு அவை பேருதவி செய்துள்ளன. இந்தக் கதைக்கு அவை பெரிதும் பயன்பட்டுள்ளன.

தென் இந்தியச் சரித்திரத்துக்குப் பயன்பட்ட நூல்களில் முதன்மையான நூல் என்று சரித்திர ஆசிரியர்கள் அவளது நூலைக் கூறுகிறார்கள்.

## கங்காதேவியின் புலமை

கங்கா தேவி மிகவும் புலமை மிகுந்த கவி.

வடமொழியில் தேர்ச்சி பெற்றவள். காளிதாசன், பட்டபாணர், பாரவி, ஆசாரிய தண்டி, பவபூதி ஆகிய வடமொழி மகாகவிகளை ரசனையோடு படித்துப் போற்றுகிறவள் அவள்.

அழகாகவும், ரசத்தோடும் கவிதை எழுதும் சக்தி பெற்றவள்.

'மதுரா விஜயம்' என்று அவள் எழுதிய இந்நாலுக்கு 'வீரகம்பராய சரிதம்' என்ற மற்றொரு பெயரும் உண்டு.*

நான் எழுதும் இந்தக் கதையில் இவள் பல இடங்களில் தோன்றப் போகிறாள்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் இந்தக் கதை நிகழ்ந்த காலத்திலேயே வாழ்ந்து கதைச் சம்பவங்களை நேரிலேயே காணும் வாய்ப்புப் பெற்று, அதை ஒரு நூலாகவும் வடித்துக் கொடுத்த கங்கா தேவிக்கு என் பக்தி மிகுந்த வணக்கங்களைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

## முன்னர் நடந்த கதை

'உலா'வைப் படித்தவர்க்கும், படியாதவர்க்கும் முன் கதையைச் சிறிது உணர்த்துகிறேன்.

கிட்டத்தட்ட அறுநூறு ஆண்டுகளுக்கு முன், கி.பி. 1323-ல் டில்லிப் படைகள்* உலுக்கான் என்பவர் தலைமையில் தென்னாடுகளை நோக்கிப் படை எடுத்தன.

தமிழ் பேசும் நாட்டில் அப்போது பாண்டிய ஆட்சி நடந்து கொண்டிருந்தது.

ஒரே குடும்பத்தைச் சேர்ந்த ஐவர் பாண்டிய நாட்டைப் பிரித்து ஆண்டு வந்ததால், நாட்டில் ஒரு எதிரியை எதிர்க்கத் தக்க ஒற்றுமை இல்லாமலிருந்தது.

இது காரணம் பற்றியே, உலுக்கான் நாட்டில் புகுந்து, நகரங்களை எல்லாம் ஒரே வேகத்தில் சூறையாடத் தொடங்கினான்.

---

* கரையான் அரித்த ஏடுகளில் ஒன்றாக 'மதுரா விஜயம்' திருவனந்தபுரத்தில் 1916-ல் கண்டுபிடிக்கப்பட்டது. கிரந்த லிபியில் இருந்த இந்த நூல் பின்னர் பிரசுரிக்கப்பட்டது.

* பின்னர் முகமமது-பின்-துக்ளக்காக டில்லியில் அரசு ஏற்றவர் இவர்.



காவிரிக் கரையில் உள்ள திருவரங்க நகரமும் [illegible]ச் சூறையாடலுக்கு இலக்காக வேண்டிவந்தது.

ஏற்கெனவே, பதினொரு வருடங்களுக்கு முன் மாலிக் கஃபூர் படை எடுத்து வந்தபோது ஒருமுறை சூறையாடப்பட்ட நகரம் அது.

அதன் கொடுமைகளையும் கஷ்ட நஷ்டங்களையும் அந்த நகரவாசிகள் நன்கு அறிந்திருந்தார்கள்.

ஆகவே, இம்முறை மீண்டும் ஆபத்து வந்தபோது ஒருசேரத் திரண்டு ஆலோசித்தார்கள்.

நகரத்தை விட்டு யாவரும் வெளியேறிவிடுவது என்று முடிவெடுத்துக் கொண்டார்கள்.

ஆனால் ஊரில் கோவில் கொண்டிருக்கும் திருவரங்கப் பெருமானை என்ன செய்வது? அதுதான் அவர்களுக்குக் கவலையாக இருந்தது.

கோவிலில் உள்ள அரங்கர் வெறும் உலோகந்தாலோ, காரைச் சுதையாலோ ஆன உயிரில்லாப் பிம்பமல்ல. நகரவாசிகளைப் பொறுத்தவரை அவர் ஒரு வாழும் தெய்வம். அவர்களிடையே வாழ்ந்து அவர்களது சுக துக்கங்களைப் பகிர்ந்து வரும் தெய்வம். அவருக்கு நடத்தும் வழிபாடுகளையோ, நைவேத்தியப் படைப்புகளையோ வெறும் விக்கிரகத்துக்குப் படைப்பது போல் அவர்கள் எண்ணவில்லை. தங்களுடன் வாழும் ஒரு மனித தெய்வத்திற்குச் செய்யும் கைங்கரியங்களாக நினைத்துக் கொண்டார்கள். பெருமாளின் ஆரோக்கியத்தை முன்விட்டு மருந்துக் கஷாயம் கொடுக்கும் அளவுக்கு அவர்களுக்கு ஒரு பக்தி பூர்வமான நம்பிக்கை இருக்குமானால், அது அவர்கள் அப்பெருமானை வெறும் உதட்டளவில் நேசிக்கவில்லை, மனத்தளவிலும், ஆன்ம அளவிலும் நேசித்தார்கள் என்பதைத்தான் காட்டுகிறது.

இவ்வாறு ஒரு சமுதாயத்தின் பக்திக்கும் நம்பிக்கைக்கும் பாத்திரமானவர் திருவரங்கர்.

நகரத்திற்குப் படை எடுப்பால் ஆபத்து வந்து, நகரவாசிகள் வெளியேற நினைத்தபோது, அவர்கள் மனத்தில் எழுந்த தலையாய எண்ணம் திருஅரங்கர் தான்.

அவரைக் கோவிலிலேயே விட்டுச் செல்ல அவர்களுக்கு விருப்பமில்லை.

தங்களுடன் அழைத்துச் செல்ல விரும்பினார்கள்.

கோவிலின் மூலவர் இருக்கும் கருவறையைச் சுவர் எழுப்பி மூடிவிட்டு, தங்கள் அன்புக்குப் பாத்திரமான திருஅரங்கனின் உற்சவ விக்கிரகத்தை, அதி கவனத்துடன், அதி சிரத்தையுடன், தங்களோடு எடுத்துக் கொண்டு நகரை விட்டு வெளியேறினார்கள்.

டில்லி படை எடுப்புக்காரர்களுக்கு அரங்கன் மீது ஒரு [illegible] அரங்கனுடன் ஏராளமான அணி, மணி, செல்வங்கள் எல்லாம் செல்கின்றன என்று நம்பினார்கள்.

தவிர, தென்னாட்டு விக்கிரகங்கள் பொன்னால் ஆனவை என்று அவர்கள் கருதியதால் அவை மீது அதிகமான நாட்டமும் இருந்தது.

ஆகவே, டில்லிக்காரர்கள் அரங்கனைத் துரத்திப் போக, அரங்கவாசிகள் மிகச் சாமர்த்தியமாகத் தப்பித் தெற்கு நோக்கி ஓடிக் கொண்டிருந்தார்கள்.

இவ்விதம்தான் திருவரங்கன் உலாச் செல்வது ஆரம்பமாயிற்று.

அரங்கன் ஊர்வலத்தாருக்கு வழியில் எவ்வளவோ சோதனைகளும் கஷ்டங்களும் ஏற்பட்டன.

அவற்றுக்கு எல்லாம் ஈடு கொடுத்துக் கொண்டு அவர்கள் திருக்கோஷ்டியூர், ஜ்யோதிஷ்குடி, அழகர் கோயில், நாகர்கோவில் மார்க்கமாகச் சென்று கேரள நாட்டைச் சுற்றிக் கன்னட நாட்டில் இருக்கும் திருநாராயணபுரம் என்று வழங்கும் மேல்கோட்டைத் தலத்திற்கு வந்து சேர்ந்தார்கள்.

ஊர்வலத்திற்கு ஏற்படும் இன்னல்கள் களைவதற்கும், அதற்கான உதவிகள் அனைத்தும் செய்வதற்கு உறுதுணையாக இருந்தவன் குலசேகரன் என்னும் இளைஞன்.

அரங்கனை மீளவும் திருவரங்கம் கொண்டு சேர்த்து விடுவதாகச் சபதம் எடுத்துக்கொண்டவன் அவன்.





ற்காக அவன் பல அரசர்களைச் சந்திக்கிறான். பல ஊர்களுக்குச் செல்கிறான். முடிவில் ஒய்சள அரசர் வீர வல்லாளரைத் திருவண்ணாமலையில் சந்திக்கிறான்.

வல்லாளரின் ராணியான கிருஷ்ணாயியிக்கு குழந்தைப் பேறு இல்லை. அந்தத் தாபத்தைப் போக்குவதற்காக அவனுடன் உறவு கொள்ள வேண்டி வருகிறது. கிருஷ்ணாயியின் வம்சமான துளுவ இனத்தில் அத்தகைய உறவை அனுமதிக்கும் பழக்கம் அந்நாளில் இருந்து வந்தாலும், வலுக்கட்டாயமாக நேர்ந்த இந்த உறவு அவன் மனச்சாட்சியை உறுத்திக் கொண்டே இருக்க, இன்னும் பல இக்கட்டுகளில் அவன் அகப்படுகிறான்.



எவ்வளவோ தியாகங்களையும், சாகசங்களையும் செய்தும், அவன் கனவு வெகுகாலம் நிறைவேறாமல் இருந்து விடுகிறது.

டில்லிக்காரர்கள் நிரந்தரமாக மதுரையில் தங்கித் தங்களது சுல்தானிய ஆட்சியை நிலை நிறுத்தி விடுகிறார்கள்.

திருவரங்க நகரமும் அந்த ஆட்சிக்கு உட்பட்ட நகரமாகப் போய்விடுகிறது.

இருந்தும் மனம் தளராது குலசேகரன் உழைத்து வர, கிட்டத்தட்டப் பத்தொன்பது ஆண்டுகளுக்குப் பிறகு அவனுக்கு ஒரு நம்பிக்கை உதயமாகிறது.

திருவண்ணாமலையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரியும் வீர வல்லாளர் மதுரை மீது படை எடுக்கத் துணிகிறார்.

இதற்கு முதல்படியாகச் சுல்தானியருக்குச் சொந்தமான கண்ணனூர் (தற்காலச் சமயபுரம், திருச்சி அருகில் இருப்பது) கோட்டையை முற்றுகை இடுகிறார். (கி.பி. 1342.).

மாதக் கணக்கில் முற்றுகை நடக்கிறது. வெற்றி ஒய்சளருக்கே என்னும் தறுவாயில் இருக்கிறது.

ஆனால் ஓர் அசம்பாவிதம் நடந்து விடுகிறது.

இனிக் கவலை இல்லை என்று அவர்கள் ஒரு மதியத்தில் கோட்டைக்கு வெளியே உண்டு களைத்திருக்கும் வேளையில், மதுரையிலிருந்து வந்த சுல்தானியப் படை தாக்கி அவர்களைச் சின்னாபின்னமாக்கி விடுகிறது.

ஒய்சள வல்லாளர் கொல்லப்படுகிறார்.

குலசேகரன் யுத்த களத்தில் குற்றுயிராகி விடுகிறான்.

குலசேகரன் மீது மானசீகமாகத் தூயப் பிரேமை கொண்டிருப்பவள் வாசந்திகா என்ற தேவதாசி.

குலசேகரனை அவள் போர்க்களத்துக்கு வெளியே வெகுதூரம் எடுத்துச் சென்று ஒரு பாழடைந்த சத்திரத்தில் தங்க வைத்துப் பணிவிடை செய்கிறாள்.

பிறகு அவனை அவள் காந்தருவ விவாகம் செய்து கொள்கிறாள்.

சில நாட்களில் குலசேகரன் இறந்து விடுகிறான். அந்தச் சில நாள் மணவாழ்க்கையிலேயே கர்ப்பவதி ஆகிவிட்ட வாசந்திகா சத்தியமங்கலம் நோக்கிப் பிரயாணித்துப் போகிறாள்.

இவ்விதம் ஒரு தவிப்பான சூழ்நிலையில் திருவரங்கன் உலாவின் முதல் பாகம் முடிந்திருந்தது.

அதற்குப் பிறகு திருவரங்கருக்கு என்ன நடந்தது என்பதைத்தான் அடுத்த இதழிலிருந்து எழுதப் போகிறேன்.

— தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

### 1

கல்யாணாய ஸதாம் பூயாத் தேவோ தந்தாவலானன:
சரணாகத ஸங்கல்ப கல்பனாகல்ப பாதப:
தன்மதீயமிதம் காவ்யம் விபூதா: ச்ரோதுமர்ஹத
''மதுரா விஜயம்'' நாம சரிதம் கம்பபூபதே:

சரணாகதி அடைந்தவர்களின் விருப்பங்களைக் கற்பக விருட்சம் போல் நிறைவேற்றித் தரும் யானைமுகக் கடவுள் நன்மைகள் செய்வாராக!

நான் எழுதிய காவியமான 'மதுரா விஜயம்' என்ற இந்த கம்பண அரசரின் சரிதத்தை அறிஞர்கள் கேட்பார்களாக!

கங்கா தேவியின் மதுரா விஜயத்தில்
1, 25-வது பாடல்கள்

பூந்தூறல் விழுந்து பூமியை எங்கும் குளிர்வித்துக் கொண்டிருந்த ஐப்பசி மாதத்து நன்னாள்! (கி. பி. 1360).

இளங்காலையில் கொங்கு நாட்டைச் சேர்ந்த சத்தியமங்கலம் என்னும் ஊரில் கையில் பயண மூட்டையுடன் ஒரு இளைஞன் புறப்பட்டுக் கொண்டிருந்தான்.

அவனை அனுப்புவதில் கடமை வாய்ந்த உணர்ச்சியுடன் ஒரு ஐம்பத்தாறு வயதுப் பெண்மணி ஈடுபட்டிருந்தாள்.

செழிப்பான கேசமும், சந்தனம் போன்ற நிறமும் கொண்டிருந்த அந்தப் பெண்மணி பார்ப்பதற்கு நாற்பது பிராயத்தவள் போலத் தென்பட்டாள்.

அவளது நடையையும், மேனி இயக்கங்களையும், கண்களின் அசைவுகளையும் பார்த்தவுடனேயே இவள் லளிதமான கலை எதையோ பயின்றவள் என்று தோன்றி விடும்.

கையில் பளபளக்கும் வெள்ளி ரட்சையுடன் வந்த அவள், ''வல்லபா! இப்படி வா!'' என்று அன்போடு அழைத்தாள். பத்தொன்பது வயதுள்ள அந்த இளைஞனும் துள்ளி அவள் பக்கலில் வந்து நின்றான்.





அவ்வளவில், அவனை ஆரத்தழுவி உச்சி முகர்ந்து, கண்ணீர் ஆறாய்ப் பெருக்கிய அந்தப் பெண்மணி, ''வல்லபா, வல்லபா!'' என்று பலவாறும் அரற்றி அவன் புஜத்தில் அந்த வெள்ளி ரட்சையைக் கட்டி விட்டாள். பின்னர் விடை கொள்ளும் நேரம் வந்ததால், தனது ஆற்றாமையைச் சிறிதே ஆற்றிக்கொண்டு, ''வல்லபா! என் ஆசைகளை நிறைவேற்றுவாயா?'' என்று ஆதங்கத்துடன் அந்தப் பெண்மணி நயந்து கேட்டாள்.

''நிச்சயம் நிறைவேற்றுவேனம்மா!'' என்று கூறிய அந்த இளைஞன் புன்னகை சிந்தி அவளைப் பார்த்து முறுவலித்தான்.

அந்த முறுவலின் பிரதிபலிப்பில் தனது இறந்து போன கணவன் குலசேகரனின் சாயல் கண்டு குதூகலித்த வாசந்திகா என்னும் பெயருடைய அப்பெண்மணி அவனுக்குத் திருஷ்டி கழித்து, அவனது முன்னுச்சி மயிர்களை விலக்கி, சிந்தூரக் குங்குமம் இட்டு விட்டாள்.

பிறகு அவன் இரு கைகளையும் இறுகப் பற்றிக் கொண்டு, விழிகளில் அருவி சோர, ''வல்லபா! நான் சொல்வதைக் கவனமாகக் கேள்! உன் தந்தையின் கனவை நிறைவேற்றுவதற்காகவே நீ பிறந்தாய்! அந்த ஒரு காரியத்திற்காகவேதான் அவர் மரணம் அடையும்

மாட்டேன் என்று உறுதி மொழி கொடு! அதைப் போன்ற ஆசாபாசங்களுக்கே இடம் கொடுக்க மாட்டேன் என்று உறுதிமொழி கொடு!'' என்று கூறினாள்.

வல்லபன் நிமிர்ந்து பார்த்தான். அவன் கண்களில் வீரமும் பெருமிதமும் விம்மி ஓடின.

''அம்மா! இவ்வளவுதானா கேட்டீர்கள்? இதையா நான் உங்களுக்குச் செய்யாமல் இருப்பேன்? இதோ உறுதி மொழி கொடுக்கிறேன். உங்கள் கனவு நிறைவேறும்வரை நான் திருமணமே செய்து கொள்ள மாட்டேன்'' என்று கம்பீரமாகக் கூறினான்.

பிறகு தார்ப்பாய்ச்சிய உத்தரீயம் தரையில் புரள கீழே விழுந்து தானும் தடக்கையுமாகத் தாயாரை நமஸ்கரித்தான்.

வாசந்திகாவின் கண்களில் நீர் புலபுல வென்று பொழிந்தது.

அவன் தோளைச் செல்லமாகத் தட்டி, ''நீ என் மகன்! என் அன்பு மகன்!'' என்று பெருமிதத்தோடு கூறி, ''வெற்றி பெறுவாய்! அரங்கன் உனக்கு எல்லா அருளும் புரிவார்'' என்று வாழ்த்தினாள் அவள்.

அங்கு நடப்பதை எல்லாம் வாயிலில் நின்றிருந்த மற்றொரு இளைஞன் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருந்தான்.

அவனுக்குப் பதினெட்டுப் பிராயமிருக்கும். கையில் தாழங்குடையும், தோளில் பயண மூட்டையுமாக இருந்தான். முகம் சதா முறுவலித்தவாறே இருந்தது.

''காலதத்தா! இரண்டு பேரும் சாவதானமாய்ச் செல்ல வேண்டும். நல்லபடியாய்த் திரும்பி வர வேண்டும்'' என்று அந்த இளைஞனை நோக்கி வாசந்திகா கூறினாள்.

''நல்லதம்மா!'' என்று கூறி அதே முறுவலுடன் இருந்தான் காலதத்தன்.

பின்னர் இளைஞர்கள் இருவரும் சகுனங்களையும் நன் நிமித்தங்களையும் பார்த்துப் புறப்பட்டார்கள்.

வாயில் தூணின் மீது சாய்ந்து கொண்டு அவர்கள் போவதையே பார்த்துக் கொண்டிருந்த வாசந்திகா கற்சிலையாகச் சமைந்து விட்டாள்.

இளைஞர்கள் உற்சாகம் பொங்க நடந்து ஊரைக் கடந்தார்கள். கோவில் விமானத்தைக் கடைசியாகத் தூரத்திலிருந்தவாறே தரிசித்துவிட்டு, கடம்ப மரங்கள் செழித்து அடர்ந்திருந்த பாட்டையில், அதி குதூகலத்துடனே நடந்து சென்றார்கள்.

கிழக்கே உள்ள நாடுகளுக்குச் செல்லும் ராஜ பாட்டை அது!

அந்தப் பாட்டையில் அதிக ஜன நடமாட்டமோ, வாகன நடமாட்டமோ அப்போது இல்லை! அதைக் கண்டு, ''ஆச்சரியம்! இந்தச் சாலை எப்போதும் ஜே ஜே என்று இருக்குமே! யாத்திரிகர்களும், பிரயாணிகளும் போய் வந்த வண்ணமாய் இருப்பார்களே! இப்போது எல்லாருக்கும் பயம் வந்து விட்டது. அதிக நடமாட்டமே இல்லை பார்'' என்று கூறினான் காலதத்தன்.

அவன் சொன்னதில் தவறில்லை. சாலையில் எப்போதாவது ஆட்கள் தென்பட்டார்களே ஒழிய, நெடுந் தூரத்திற்கு நெடுந்தூரம் சாலை வெறிச்சென்று கிடந்தது.

பல இடங்களில் தழைகளும் சருகுகளும் விழுந்து சாலையே மூடிக் கிடந்தது.

இரு இளைஞர்களும் களைப்புச் சிறிதும் அடையாமல் உல்லாசமாகப் பேசிக் கொண்டு ஐந்து நாழிகை தூரம் நடந்து சென்றார்கள்.

பிறகு அவர்கள் ஒரு ஓடை அருகே தாகவிடாய் தீர்த்த பிறகு வல்லபன் தனது நண்பனை நோக்கி, ''காலதத்தா! ஒரு விஷயம் கேள்! 'ஊரைவிட்டு ஒரு காததூரம் போன பிறகு நான் கொடுக்கும் இந்த ஓலைச்சுருளைப் பார்' என்று என் தாயார் பணித்திருந்தார்கள். இப்போது ஒரு காதத்திற்கு மேல் வந்து விட்டோம்! அது என்ன என்று பார்க்கலாம்!'' என்று கூறினான்.

உடன் சுருக்குப் பையை அவிழ்த்து அதிலிருந்து அந்த மஞ்சள் தடவிய ஓலையை வெளியே எடுத்துப் படித்தான்.

''மங்களம் உண்டாகட்டும்! வல்லபனுக்குத் தாயார் ஆசீர்வதித்துச் சொல்லுவது'' என்று தொடக்கத்தில் எழுதியிருந்தது. அதன் கீழே,

''மொழியில் பிறழாதே,
வழியில் பிறழாதே,
விழியில் பிறழாதே.''

என்று கண்டிருந்தது.

அதைப் படித்து விட்டு ராஜவல்லபன் மெதுவாகச் சிரிக்க, காலதத்தன் அந்த ஓலை நறுக்கைக் கையில் வாங்கிக் கொண்டு பார்த்தான்.

பிறகு வல்லபனை நோக்கி, ''வல்லபா! இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது! உன் தாயார் அறிவில் சிறந்தவர்! இந்த நறுக்கை எழுதினால், அதில் ஆழப்பொதிந்த கருத்துரை ஏதோ நிச்சயமாக இருக்கும். அது உன் வருங்காலத்துக்கு அனுகூலமாக இருக்கும். ஆகவே உன் தாயாரின் இந்த உபதேசத்தை நீ கவனத்துடன்போற்ற வேண்டும்'' என்று கூறினான்.

வல்லபனும், ''நல்லது காலதத்தா! நான் அவசியம் அவர் சொற்படி எல்லாம் நடப்பேன். ஆனால் என் தாயார் என்னை இன்னும் ஒரு சிறுவன் என்று நினைத்து மிகுந்த பாதுகாப்பாக இருக்கிறார். நீ மட்டும் எனக்குத் துணை கிடைக்கவில்லை என்றால் என்னை அனுப்பியிருக்க மாட்டார்'' என்று கூறினான்.

இரண்டாம் நாள் மாலையில் வெகு வேகமாகப் பல நாழிகைகள் நடந்த பிறகு காலதத்தனுக்குச் சற்றே காலில் நோவு எடுக்கவே அவன்

ரா"ஜ வல்லபனை அழைத்து, "அப்பா, ராஜவல்லபா! சற்று இளைப்பாறிச் செல்வோமே!" என்ன, வல்லபனும் அதற்கு இசைந்து நின்று விட்டான்.

பிறகு இருவரும் சாலையோரம் உள்ள தரையில் அமர்ந்து, மூட்டைகளைக் கீழே இறக்கி, ஒரு துணிப் பொதியை அவிழ்த்து, அதனுள் நறு நெய்யும் வெல்லப்பாகும் மணத்துக் கொண்டிருந்த சத்து மாவை எடுத்து உண்ண ஆரம்பித்தார்கள்.

"இரவு எங்கே தங்குவோம்?" என்று அப்போது கேட்டான் ராஜவல்லபன்.

"இன்னும் அரைக் காத தூரத்தில் ஒடுமானூர் என்னும் ஊர் இருக்கிறது. அங்கே ஒரு சத்திரம் இருக்கிறது" என்று கூறினான் காலதத்தன்.

"உனக்கு இந்த இடங்கள் எல்லாம் எப்படி இவ்வளவு நன்றாக நினைவிருக்கிறதே!" என்று கேட்டான் வல்லபன்.

"என் தந்தையோடு எத்தனை முறை பிரயாணம் செய்திருக்கிறேன். காஞ்சிக்கும், திருப்பதிக்கும் பத்து முறைகளாவது போயிருப்பேன்" என்றான் காலதத்தன்.

அப்போது வீசிய திடீர்க் காற்று தாழங்குடையை* வாரி விடவே, அதுவும் அத்திரிப் பாய்ச்சலில் குட்டிக்கரணம் இட்டுச் சாலையில் ஓடவே, அவனும் விருட்டென்று எழுந்து அதன் பின்னாலேயே ஓடி, "ஏலேய், சத்திரபதி! ராஜாதிராஜன் இங்கிருக்க ஓடவா பார்க்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டு அதை ஒரே தாவலில் போய்ப் பிடித்து வலைக்காரன் கொண்டையைத் தூக்குவது போல் தூக்கி யெடுத்தான்.

அந்தக் கணத்திலே அவன் பார்வை சாலையின் தூரத்தில் விழ, சிறிதே கலவரமும் அடைந்தவனாய், "வல்லபா! சேவகர்கள் வருகிறார்கள்!" என்று கூறிச் சாலையை விட்டு அகன்று உடனே ஓரம் ஓடினான்.

அவன் காட்டும் திசையை வல்லபனும் பார்த்து விட்டு, "யாருடைய சேவகர்கள்?" என்று கேட்டான்.

"யாருடைய சேவகர்கள் என்று எங்கே சொல்ல முடிகிறது? நாட்டில்தான் நிலையான ராஜாக்கள் இல்லையே! இவர்கள் நம் நண்பர்களா, எதிரிகளா என்று சொல்ல முடியாது! சீக்கிரம் ஒளிந்து கொள்ளலாம்!" என்று பரபரத்தான் காலதத்தன்.

மூட்டைகளை அவசரமாக எடுத்த வல்லபன் கண நேரம் சாலையை உறுத்து நோக்கினான்.

பிறகு தன் பரபரப்பைக் குறைத்துக் கொண்டு, "காலதத்தா! சேவகர்களும் வருகிறார்கள். பின்னால் கூண்டு வண்டியும் வருகிறது" என்று கூறினான்.

"அப்படியா?" என்றான் காலதத்தன். அவன் பரபரப்பும் அந்த நேரத்தில் குறைந்து விட்டது.

"யாராவது பிரபுவாக இருப்பார். சேவகர்கள் அவரது காவலாளாக இருக்க வேண்டும்" என்று கூறினான்.

இருவரும் அங்கேயே நின்று விட்டார்கள்.

வண்டி அவர்களை நோக்கி வர வர, அதன் டிணிங் டிணுங் என்ற மணிமயமான நன் நாதம் இன்னுரமாய்க் கேட்டு வந்தது.

அந்த அந்தி நேர நிசப்தத்தை அது உளி கொண்டு பொழிப்பது போல் பொழிந்து கொண்டிருந்தது.

கம்பீரமான இரு ஒட்டன் காளைகள் பூண் போட்ட நீண்ட கொம்புகளுடன் பருநடையில் நடந்து வந்தன.

அவற்றின் நெற்றியில் இரு சிறிய வெண்சங்குகள் மேலும் கீழும் ஆடிக் கொண்டிருந்தன.

கழுத்தில் கண்ணைப் பறிக்கும் பட்டு நூல் மாலை ஒன்று சுற்றப்பட்டிருந்தது.

வண்டிக் கூட்டின் மேலே பெரிய தாமரைப் பூ போட்ட சீலைத்துணி மூடியிருந்தது.

*சத்ரம் (வடமொழி)—குடை.



ஒருவர்: புதுப் பத்திரிகை ஒன்று துவங்கப் போகிறேன். முதல் இஷ்யூ எத்தனை காப்பி அடிக்கலாம்?

இஷ்யூ ... காப்பி-அடிக்கிறதைப் பற்றிப் பேசணுமா, என்ன?

வண்டியில் பித்தளைக் கைப்பிடிகள் தங்கம் போல் பளபளத்துக் கொண்டிருந்தன.

இவ்வளவு ... ளும் பின்னும் ... கப்பட்டிருந்தது.

இந்த வண்டியின் இரு புறங்களிலும் இரு சேவகர்கள் குதிரை மேல் ஆரோகணித்துக் கையில் வேல்களுடன் வந்து கொண்டிருந்தார்கள்.

இளைஞர்களின் ... வைத்தாற்போல் அது நின்று விட்டது.

மாடுகள் இரண்டும் வெகுதூரக் களைப்பால் மூக்கில் நுரை தப்ப, நீளமாகச் சிறுநீரைக் கழித்து விட்டன.

வந்த சேவகர்களில் ஒருவன் வல்லபனின் பக்கலில் வந்து, "தம்பி! பொழுது சாயுமுன் தங்குவதற்கு வசதியாய் அருகில் ஏதும் ஊர் உண்டோ?" என்று கேட்டான்.

"அரைக் காத தூரத்தில் ஒடுமானூர் இருக்கிறது. அங்கே ஒரு சத்திரம் உண்டு" என்றான் காலதத்தன்.

"அரைக் காதமா? ... தலைவன் புருவத்தை மேலே உயர்த்தினான்.

"சரி, புறப்படுவோமா?" என்று வண்டிக்காரன் கேட்க, மற்ற மூன்று சேவகர்களும் தலையை அசைத்தார்கள்.

வண்டி புறப்பட்டது.

அதன் உருளைகள் இரண்டும் உருண்டுமேலே செல்ல மகிழம்பூவின் வாசனை கொல்லென்று அங்கே அடித்தது.

அதே தருணத்தில் திடீரென்று ஒரு பெருங்காற்று அகர வேகமாய்ப் புறப்பட்டு அந்தச் சாலையையும் அதன் மரங்களையும் மோதிக் கொண்டு ஓட, சேவகர்கள் ... பறந்தோடியது. குதிரையை விட்டுக் குதித்த அவர்கள் அவற்றின் பின்னே ஓட, அந்தக் களேபரத்தின் மத்தியில் மற்றொரு சம்பவமும் நடந்து விட்டது.

சிக்கென அடைத்திருந்த வண்டியின் திரைச் சீலைகள் பொத்துக் கொண்டு திறந்து கொள்ளவே, அந்தக் கணத்தில் ராஜவல்லபனின் பார்வை கூண்டு வண்டிக்குள் ஓடியது.

அங்கே, மின்னல் இறைத்தாற் போல் ஒரு இளம் பெண் அமர்ந்து அவனை நோக்கியிருந்தாள்.

அவளது கண்களில் அபரிமிதமான சோகம் வழிந்து கொண்டிருந்தது.

அரைக் கண நேரமே அவளைப் பார்த்திருப்பான்.

அடுத்த நொடியில் சேவகத் தலைவன் பரபரத்து, "மூடு, மூடு" என்று இரைந்து கொண்டே ஓடி வந்து பின்புறத் திரைச்சீலையை இழுத்து மூடத் தலைப்பட்டான்.

அதே கணத்தில் வல்லபனின் பார்வையில் அந்தப் பெண் தன் முகத்தை இரு கைகளாலும் துடைக்கப் போவது தெரிந்தது.

அதைப் பார்த்த போது அவனுக்கு ஒரு அதிர்ச்சியே ஏற்பட்டது.

ஏனெனில் அவளது கைகளில் விலங்கு பூட்டப்பட்டிருந்தது.

—தொடரும்

## நல்ல வேளை, பாப்பாவுக்கு ஃபாரெக்ஸ் தொடங்கினோம்

# எங்கள் டாக்டர் சொன்னாரே: "பாப்பாவின் பச்சிளம் ஜீரணசக்திக்கு முதல் தேவை- வேறெந்தத் திட உணவுக்கும் முன்பாக— ஃபாரெக்ஸ்."

**முதலில் ஃபாரெக்ஸ் : இவ்விதம் டாக்டர்கள் கூறுவதேன்?**

3 ஆம் மாத முதல் பாப்பாவுக்குப் பால் மட்டும் போதாது. போதுமான போஷாக்குக்காக மட்டுமின்றி, மென்று தின்னப் பழக்குவதற்கும் திட உணவு தேவை. எனினும் பச்சிளம் ஜீரண சக்தி ஆதலால் திட உணவு என்று எதையும் (மசித்த உருளைக் கிழங்கைக் கூட) தந்துவிட முடியாது. தனிப்படத் தயாரிக்கப்பட்ட உணவே அவனுககுத் தேவை-- அதுதான் ஃபாரெக்ஸ்.

**பாப்பாவுக்கு எவ்விதம் ஊட்ட நிறைவு த்ருகிறது ஃபாரெக்ஸ்?**

மூளை வளர்ச்சிக்கும் உடல் வளர்ச்சிக்குமான புரதச் சத்துக்களை உரிய அளவிலே, செரிக்கத் தக்க வடிவிலே தருகிறது ஃபாரெக்ஸ். அதோடு சக்தியூட்டிட: கார்பொஹைட்ரேட்.

பாப்பாவின் தேவைகளுக்கு முழு நிறைவு தரும் இரும்புச் சத்து அடங்கியது ஃபாரெக்ஸ்; அதோடு எலும்புகளைத் திடமுடனும், பற்களைப் பலமுடனும் வைத்திருக்கப் போதுமான கால்ஷியம் பாஸ்பரஸ், வைட்டமின் D2 சத்துக்கள் செறிந்தது.

**எதற்காக 3 ஆம் மாத முதல்?**

3 ஆம் முதலே மென்று தின்னப் பழகினால், பிற்பாடு 'பெரிய வயது உணவுகளை ஏற்பது எளிதாகும், தக்கபடி ஜீரணிக்கவும் இயலும். கெட்டி உணவுகளை விழுங்கிவிடுவா-னேயானால், பிற்பாடு வயிற்று வலி வரும், வளர்ச்சி பாதிக்கப்படும்.

**'வயதேறிய' உணவுகளைத் துவக்குவது எப்போது?**

பாப்பா முதலடி வைத்து நடக்கும போது, பழம், காய்கறிகள், பருப்பு, முட்டை போன்றவற்றை ஏற்கத் தயாராகி விடுவான். எனினும், தொடர்ந்து ஃபாரெக்ஸின் நலன்கள் அவனுக்குத் தேவை. 3 வயது வரை பாப்பாவுக்கு எல்லா உணவுகளிலும் கலந்து கொடுப்பீர் ஃபாரெக்ஸ்.




## விரைவான முழு வளர்ச்சி பெற பாப்பாவுக்கான முதல் திட உணவு.

லின்டாஸ்—GF-58-2317 TM

## 2

அந்த ராஜ பாட்டையில் அந்த அந்தி நேரக் காட்சிகள் விரைவாக நடந்தன.

கூச்சலிட்டுக் கொண்டு ஓடி வந்த சேவகத் தலைவன் சரேலென்று பாய்ந்து, பின்பக்கத் திரைச் சீலையை அள்ளிப் பிடித்து, அவசர அவசரமாக அதன் காதுகளை இழுத்துக் கட்டத் தொடங்க,

காற்றின் வசப்பட்ட சீலையும் மூலைக்கு மூலை பிய்த்துக் கொண்டு படபடக்க,

உள்ளிருந்த மின்னலின் உருவம் இடைக்கொரு முறை இடைவழியே பளிச்சிட்டுக் கொண்டிருந்தது.

அதே நேரத்தில் வண்டிக்குள்ளிருந்த நாற்பது வயது மதிக்கத்தக்க மற்றொரு பெண்மணி ஒரு புறமாக ஒருக்களித்து அவசரம் காட்டி அந்தச் சீலையை இழுத்துக் கட்டுவதற்கு உதவி புரிந்தாள்.

காற்றுவிடாமல் சீழ்க்கையாய் சப்திக்க, கடம்பம், வாகை, மருது, மஞ்சள்நாறி கோங்கு ஆகிய மரங்கள் எல்லாம் உச்சியில் சலசலத்துப் பெரிய சதங்கை ஒலிபோல் ஓசையை எழுப்பி விட்டன.

ஒருவாறு சீலையைக் கட்டி முடித்து, 'அப்பாடா!' என்ற உணர்ச்சியில் களைத்துக் கொண்டு, அந்தச் சேவகத் தலைவன் தன் அங்கி நுனிகளைச் சுருக்கிட்டவாறு அந்த இளைஞர்களைச் சூக்குமாக ஒரு முறை பார்த்தான்.

பின்னர் வண்டிக்காரனைப் பார்த்து, 'போ!' என்று சமிஞ்ஞை செய்தான்.

வண்டி புறப்பட்டது.

இடது பக்க நொடியில் அதன் உருளை இறங்கி ஏற, வண்டி ஒரு பல்லக்குக் குலுங்குவபோல் ஆடிக் கொண்டு சென்றது.

டிண் டிணிங் என்ற அதன் நாதம் ஒரு இன்னிசை போல் எண் திசையிலும் தவழ்ந்து சென்றது.

இளைஞர்கள் இருவரும் போகும் வண்டி மீது இட்ட பார்வை இட்டபடியாகவே இருந்தது.

பிறகு ''ஹூம்'' என்று பெருமூச்சு விட்ட வல்லபன் கீழே கிடந்த பொதியை எடுத்துத் தோளில் சாய்த்துக் கொள்ள காலதத்தனும் அவ்வாறே செய்தான்.

இருவரும் மௌனமாகப் புறப்பட்டார்கள்.

காற்று அலைபோல் மோதியதால் காலதத்தனின் தாழங்குடை மட்டும் அடிக்கடி முறைத்து பலவிதமாய் ஜாலம் செய்தது. அவனும் அதைச் சமாதானப் படுத்தி அவ்வப்போது வெவ்வேறு விதமாகத் தாலாட்டிக் கொண்டிருந்தான்.

இருவர் மனங்களும் கனக்க, சிறிது தூரம் பேச்சில்லாமல் நடந்து போனார்கள்.

சாலையில் ஒரு மேடு ஏறியதும், சடக்கென்று காலதத்தன் நின்று விட்டான்.

உடன் நண்பனை நோக்கி, ''வல்லபா, அந்தப் பாறை மேலே ஏறு; அவசரம்!'' என்று கூவி விட்டு அவனே முன்னதாக அங்கே விரைந்தான்.

வல்லபனும் விரைந்து ஒரு மருது மரத்தின் அடியில் யானை உயரத்தில் இருந்த கரிய பாறையின் மீது தட்டுத்தடுமாறி ஏறினான்.

ஈரப் பாசி சிறிச்சிறிதே வழுக்கிவிட ஒருவாறு மேலே ஏறி, சில சதுர அடிகளே உள்ள உச்சியில் இருவரும் நெருங்கி அமர்ந்து கொள்ள, வல்லபனும் நண்பனைப் பார்த்து, ''தத்தா! இதெல்லாம் என்ன!'' என்று கேட்டான்.

''அதோ பார்!'' என்றான் தத்தன்.

தூரத்தில் காற்று எழுப்பிய தூசுப் படலத்தின்



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்



சக்தி கபூர்

# கதாநாயகன்- வில்லன் ஒரே வீட்டில்!



ராஜு வர்மன்

பம்பாய் ஜுகு-தாரா ரோடில் ஒரு சந்துக்குள் ஒளிந்து கொண்டிருக்கும் 'அப்ஸரா' கட்டடத்திற்குள் நுழையும் பொழுதே சுவரில் பொருத்தப் பட்டிருந்த இரண்டு கத்திகள் இது வில்லன் வீடு என்று சொல்ல வைத்தன.

புலியும் ஆடும் ஒரே துறையில் தண்ணீர் குடித்து நான் பார்த்தது இல்லை. ஆனால் அந்த அபார்ட் மெண்டில் ஒரு சினிமாக் கதாநாயக நடிகரும் ஒரு வில்லன் நடிகரும் ஒன் ருகத் தங்கியிருப்பதைக் கண்டேன்.

ஹீரோவின் பெயர் ராஜு வர் மன்: வில்லனின் பெயர் சக்திகபூர். இருவரும்புதுடில்லியிருந்து கிளம்பி வந்து புனே பிலிம் இன்ஸ்டிடியூட் டில் பயிற்சி பெற்று சினிமாவில் நடித்துவருகிறார்கள்.

## சுனில்தத் சொன்னது என்ன?

''ஆரம்பத்தில் டிராவலிங் ஏஜென்ஸி ஒன்றில் சில காலம் பணியாற்றி வந்தேன். ஊர் ஊரா கச் சுற்றி வந்ததில் எனக்குக் களைப்பு ஏற்பட்டதே தவிர, வேலை யில் ஈடுபாடு உண்டாகவில்லை. என்னைக் கண்டவர்கள் சினிமா நடிகருக்குரிய தோற்றம் எனக்கு இருப்பதாகச் சொன்னார்கள். யாரோ ஒரு சினிமா நடிகரின் பெயரை எனக்கு வைத்து சினிமா வில் நடிக்காமலேயே என்னை நடிகனாக்கிவிட்டார்கள்! அதற்குப்

பிறகுதான் மு...
இன்ஸ்டிடியூட்...
புப் பயி...
கிறார் சக்திகபூர்.

இவருக்கு டை...
நான் சினிமாவில்
அளித்தார். இ...
நடித்த 'கெல்-கில...
படத்தில் பலவித...
கள் புரிந்து கொ...
செய்திருக்கும் ...
ரசிகர்களின் பா...
பெற்று இருக்கின்ற...

''நீங்கள் வேறு
கர்களைச் சந்தித்...

''ஓ! அம்ஜத்க...
தேன். என்னை ...
தட்டிக் கொடுத்து...
கம் எத்தனை புது...
கள் வந்தாலும் ...
ளும். என்னை ஒ...
படம் வாயிலாக எ...
வில்லையா? நீங்கள்...
இழக்காமல்' தொ...
கள்' என உற்சாக...

சுனில் தத்தைச்
பற்றி இவர் சுவைய...
ஒரு விவரம்:

''பம்பாயில் ஒரு...
வில் சுனில் தத்தை ...
சினிமாவில் நடிக்க...
பற்றியும் என்னுடை...
சுனில் கபூர் என்...
தேன். அவர் நி...
போடு என்னை ...
'உன்னுடைய பெய...
மாற்றிக்கொண்டு வி...
ரும் சுனிலாக இரு...
குழப்பங்கள் ஏற்பட...
'நீங்களே எனக்கு ஒ...
வையுங்களேன்!' எ...
பணிவன்போடு ...
அவர் எனக்கு ...
தான் சக்திகபூர்.
மாவுக்கு என்று அவ...
கொடுத்ததோடு அவ...
வந்த படம் ஒ...
வேடம் அளித்து ...
அதோடுஅவர் தன் ந...
வியான நர்கிஸிடம் ...
கப்படுத்தி, 'அழகான...
சினிமாவில் நடிக்க ...
என் பெயர் தான்...
இவர் பட உலகில் ந...
ஆசி வழங்கு. ...
என் பெயர் கெட்டு...
சிரித்துக்கொண்டே

## சுருக்குப் பையை திறந்து ....

அதே சமயம் அந்...
நுழைந்த ஓர் இளை...
தான் ராஜு வர்...
எனக்கு அறிமுகப்படு...
வர் எனக்கு 'நமஸ்...
விட்டு அந்த வில்ல...
ஏதோ இந்தியில் ரக...
சக்தி கபூர் தன் இடுப்...
கொண்டிருந்த சுரு...
ருந்து சில ரூபாய் ...
எண்ணிப் பார்க்காம...
அவரிடம் கொடுத்த...

நான் கேட்டேன்: ''பொதுவாக ஹீரோவை மிரட்டி வில்லன் பணம் பறிப்பதைப் படங்களில் பார்த்திருக்கிறேன். இங்கே வேறு விதமாக இருக்கிறதே!''

சக்தி கபூர் வில்லன் சிரிப்புச் சிரித்தார். ''எங்களுக்குள் வித்தியாசமே கிடையாது. என் பணம், அவர் பணம் என்றெல்லாம் வைத்துக் கொள்வதே இல்லை. நாங்கள் இருவரும் உற்சாகமாக இருப்பதற்கு அதுதான் காரணம்.''

''உங்கள் நண்பர் ராஜு வர்மன் கதாநாயகனாக எந்தப் படத்தில் நடித்திருக்கிறார்?''

'' 'பாலிகா பாது' படத்தில். அதற்குப் பிறகு இப்போது சுமார் பத்துப் படங்களில் நடித்து வருகிறார். அவருக்காக நானும், எனக்காக அவரும் மாறி மாறிப் படத் தயாரிப்பாளர்களிடம் 'சான்ஸ்' கேட்டுக் கொண்டு இருக்கிறோம்.''

வர்மன் கொஞ்சம் பேசுவதற்குக் கூச்சப்பட்டவராகக் காணப்பட்டார். சக்தி கபூர் அவரை இழுத்து முதுகில் தன்னுடைய கையை வளைத்துப் போட்டுக் கட்டிக் கொண்டு, ''ஏதாவது உன்னைப் பற்றிச் சொல்லு பிரதர்! இவர் மெட்ராஸில் இருந்து வந்திருக்கிறார்'' என்று அவரை ஊக்குவித்தார்.

''டில்லியிலிருந்து இருவரும் ஒன்றாகப் புறப்பட்டு வந்தோம். அசட்டுத் துணிவுதான். ஆனாலும் எப்படியோ சினிமாவில் வாய்ப்பு பெற்றுவிட்டோம். இருவரும் ஒன்றாகவே புகழ் பெறுவோம், நன்றாகவே வாழ்வோம் என்ற நம்பிக்கை இருக்கிறது'' என்றார் ராஜு வர்மன்.

## கையில் காயம் ஏன்?

சக்தி கபூரின் கையில் சில காயங்களின் வடுக்கள் இருப்பதைக் கண்டுவிட்டு, ''படப்பிடிப்பின்போது ஏற்பட்டதா?'' என்று கேட்டேன். அவரது பதில்:

''ஒரு குதிரை என்னைக் கீழே தள்ளியதால் எனக்குக் கிடைத்த பரிசு! குதிரை ஓட்ட நான் பயிற்சி பெற்ற பொழுது பொல்லாத குதிரை (ஜாக்னு) என்னைக் கீழே தள்ளிவிட்டது. நல்ல வேளையாக அதன் கால்களில் மிதிபடாமல் தப்பினேன்.''

''சினிமாவில் வில்லனாக நடித்தால் இதெல்லாம் சகஜம்தான்!''

''சில காதல் விபத்துக்கள், உள் காயங்கள் உனக்கு ஏற்பட்டிருக்குமே?'' என்று அவரைப் பரிகாசம் செய்தார் சக்தி.

''இதுவரை ஏற்படவில்லை!'' என்று சமாளித்தார் வர்மன்.

''நீ யாரையாவது 'அப்ரோச்' பண்ணினால்தானே?'' என்று சக்தி கபூர் சொல்லிவிட்டு அவரைச் செல்லமாக ஓர் அடி அடித்தார்.

-நவீனன்

நடுவில் அந்தச் சேவகத் தலைவன் திரும்பி வருவதை வல்லபன் பார்க்க நேர்ந்தது.

''வல்லபா! வாளும் கத்தியும் கைவசத்தில் இருக்கட்டும்'' என்றான் காலதத்தன்.

பொதிக்குள் இருவரும் தங்கள் தங்கள் கொடுவாட்களை மறைத்து வைத்திருந்தார்கள். இருவரும் அவற்றின் கைப்பிடிகளில் கை வைத்து ஒரு ஆயத்த நிலையில் இருந்து கொண்டார்கள்.

சேவகத் தலைவன் அந்த எல்லைக்குள் வந்ததும், தனது வேகத்தைக் குறைத்துக் கொண்டு பொய்க்கால் குதிரை வருவதுபோல மந்தமான நடையில் வரத் தொடங்கினான்.

வருகிறபோது சுற்றுப்புறத்தை மிக உன்னிப்புடன் கவனித்தவாறு வந்தான்.

அவர்கள் இருக்கும் பாறைப் பக்கலில் வந்ததும் அங்கேயும் நின்று சுற்றிவரப் பார்த்தான்.

அவனை அந்த நிலையில் சில நொடிகள் வேடிக்கை பார்த்துவிட்டு, பின்னர் காலதத்தன் அவனை நோக்கிக் கைகளைக் கொட்டினான்.

திடுக்கிட்ட சேவகன் மேலே பார்த்து, கீழே பார்த்து, ஆகாசத்தைப் பார்த்து, கடைசியில் பாறை மீது பார்வையைச் செலுத்தியதும் அங்கே அண்டரண்டப் பறவைகள் போல் இணையாக அமர்ந்திருந்த இளைஞர்களைக் கண்டு, முதலில் கடுகடுப்பும், பிறகு அதை மறைத்து மந்தகாசமும் கொள்ள,

''தம்பிகாள், இதென்ன? கிட்கந்தையில் இருப்பதாக அல்லவா தோன்றுகிறது?'' என்று கூறிக் கடகட என்று ஒரு சிரிப்பை வரவழைத்தான்.

அவனை உன்னிப்போடு கவனித்த காலதத்தன், ''ஐயா! தெற்கேதானே இலங்கை இருக்கிறது. கிட்கந்தையும் இங்கேதானே இருக்க வேண்டும்!'' என்று மிக நகுதலாகக் கூறினான்.

சேவகத் தலைவன் அதற்குப் பகபக வென்று ஒரு பகட்டாகச் சிரித்து, குதிரைப் பிடரியைத் தட்டிக் கொடுக்கும் பாவனையில் அவசரமாக ஒரு யோசனை பண்ணி, மீண்டும் அந்தக் குறும்புக்கார இளைஞர்களை நோக்கி,

''தம்பிகாள்! அங்கே ஏறி அமர்ந்திருக்கிறீர்களே! ஓடுமானூர் வரவில்லையோ?'' என்று வினவினான்.

அதற்குக் காலதத்தன், ''பொழுது இன்னும் சாயவில்லையே! சாய்ந்தால் அவசியம் வருவோம். எங்களுக்கு இந்த ஈரக் காற்றும், பூந்தூறலும் நன்றாகப் பிடித்திருக்கின்றன'' என்று கூறினான்.

உடன் சேகவத் தலைவன் மீளவும் யோசித்து, ''நல்லது தம்பிகாள்! எனக்கு ஒரு காரியம் உண்டு. எம்மைச் சேர்ந்த பணியாட்கள் இவ்வழியே வருவார்கள் அவர்களை ஓடுமானூர் சத்திரத்திற்கு அனுப்பி வைப்பீர்களா?'' என்று கேட்டான்.

''ஆகட்டும்!'' என்றான் காலதத்தன்.

அவ்வளவில் அந்தச் சேவகன் குதிரையை வளைத்துக் திருப்பி அந்த எதிர்க் காற்றில் நீச்சலிட்டுக் கொண்டு அடிக்கடி திரும்பியவாறே கடந்து போனான்.

அவன் போனவுடனே, வல்லபன் தன் கையைத் தளர்த்தி, காலதத்தனை நோக்கி, ''தத்தா! இதெல்லாம் என்ன? மூடு மந்திரமாக இருக்கிறதே!'' என்று கேட்டான்

தத்தனும் உடன் சாவகாசமாயச் சம்மணம் இட்டுக் கொண்டு, ''வல்லபா! ஒரு ஆபத்திலிருந்து தப்பினோம்'' என்று கூறினான்.

''என்ன ஆபத்து?'' என்றான் வல்லபன்

''இரண்டாம் முறையாக இந்தத் தலைவன் திரும்பி வந்தானே! காரணம் என்ன என்று நினைக்கிறாய்?''

''தெரியவில்லையே!''

''நம்மைக் கொல்வதற்குத்தான் வந்திருக்கிறான்!''

''எப்படி ஊகிக்கிறாய்?''

''கூண்டு வண்டி புறப்பட்டதும், அவன் நம்மைப் பார்த்த பார்வையில் ஊகித்துவிட்டேன்



அடுத்த ஓடை அருகே அவன் நமககாகக காத்திருப்பான், நாம் வராதது கண்டு அவனே திரும்ப வந்து விடுவான் என்று நினைத்தேன். நினைத்தபடியே வந்துவிட்டான்.''

''அதற்காக ஏன் பாறை மீது ஏறச் சொன்னாய்?''

''வருகிறவன் சிநேகிதனாக வருகிறானா, எதிரியாக வருகிறானா என்பது எப்படித் தெரியும்? சிநேகிதம் பேச வந்து விட்டு, திடீரென்று வாளை உருவி ஒரே வீச்சில் இருவரையுமே நமன் உலகத்துக்கு அனுப்பி விட்டால் என் செய்வது? இது பற்றியே முன் எச்சரிக்கையாகப் பாறை மேலே ஏறி அமரத் துணிந்தேன். இங்கே இந்தப் பாறை மீது ஒருவர் அமரலாம், இருவர் ஒடுங்கலாம்,மூவர் நிற்கலாம்.இந்த இடத்திற்கு ஏறி வந்து நம்மை அவன் கொல்வது முடியாத காரியம். அதற்குள் நாம் எச்சரிக்கையாகி விடுவோம்'' என்றான் காலதத்தன்.

''சரி தத்தா! அவன் நம்மைக் கொல்ல வந்திருப்பான் என்று சொன்னாய்? அதற்குக் காரணம் என்ன?''

''வழியில் அந்தக் கூண்டு வண்டியைப் பார்க்கவில்லையா?''

''பார்த்தேன்!''

''அந்த இளம் பெண்ணைப் பார்க்கவில்லையா?''

''பார்த்தேன்!''

''அவள்தான் காரணம்!''

''எப்படியோ?''

''அவள் ஒரு அரச குலப் பெண்!'''

''உனக்கு எப்படித் தெரியும்?''

''சொல்கிறேன் கேள்! அவள் முகம் வட்டச்சந்திரன் போல் இருந்தது. கண்களில் செவ்வரி படர்ந்திருந்தது. அம்பு போல் அவை நீண்டிருந்தன. அன்றியும், அவைகளைப் பார்ப்பதற்கு மாவடு போல் தோற்றம் தந்தது. புருவங்கள் கரி கீறினல் போல் இருந்தன. ஒன்றுக்கொன்று கூடவில்லை. கீழ் உதடுகள் பவழத் துண்டுகள் போலிருந்தன. நெற்றி மூன்று விரல் அளவில் இருந்தது. கூந்தல் கரியமையாய்த் தெரிந்தது. புஜங்கள் இரண்டும் பருத்திருந்தன. கொங்கைகள் அடி பருத்திருந்தன. சிறுத்திருந்த வயிற்றில் மூன்று மடிப்புகள் இருந்தன. இப்படிப் பட்டவள் அரச குலப் பெண்ணாகத்தான் இருக்க வேண்டும்!''

''ஓகோ! அனுமானமோ?''

''இல்லை, அதுதான் அரச குல லட்சணம். இந்தப் பெண்ணைப் பிடித்துப் போவதை நாம் பார்த்து விட்டோம். இதனல் அவர்களுக்கு விபரீதம் நேரலாம் என்று நினைத்து விட்டார்கள். நம்மைக் கொன்று விடுவதுதான் அதற்குப் பரிகாரமாய்த் தோன்றியிருக்கும்.''

வல்லபன் யோசனையில் ஆழ்ந்தான்.

பிறகு நிதானமாக தத்தன் பக்கலில் திரும்பி, ''தத்தரே! அந்தப் பெண் எந்த ராஜ்யத்தைச் சேர்ந்தவள்? அந்தச் சேவகர்கள் யார்?'' என்று கேட்டான்.

''யார் கண்டார்கள்? தென்னடு முழுவதும் ஒரு நாயகன் இல்லாமல் கொந்தளித்துக்கொண்டிருக்கிறதே! ஒரு வருடமா, இரண்டு வருடங்களா? நாற்பது வருடங்களாக இப்படி ஒரு அவலை நிலை! இதில் யார், எந்தப் பெண்ணை, எந்த ஊருக்குக் கடத்திக் கொண்டு போகிறார்கள் என்று எப்படிக் கண்டோம்? வா, நம் வழியைப் பார்த்துக் கொண்டு போகலாம்'' என்று கூறிப் பாறையிலிருந்து இறங்கத் தொடங்கினன்.

வல்லபனும் அவனைத் தொடர்ந்து இறங்க, பிறகு இருவரும் கீழே சாலையோரம் நின்றார்கள்.

அப்போதும் காற்றின் விசை குறையாமல் சீராக வீசிக் கொண்டிருந்தது. வானம் முழுவதும் மேகக்கூட்டங்கள் பெரும் பெரும் குன்றுகள் போல் ஒரே திசை நோக்கி விரைந்து கொண்டிருந்தன. அவை விரித்த நிழலில் பூமியில் ஏற்கனவே இருள் இறங்க ஆரம்பித்து விட்டது.

''வல்லபா, புறப்படு!''



வல்லபன் இட்ட அடி அப்படியே சிக்கென்று பிடித்துக் கொண்டிருந்தது.

''ம்! புறப்படு!''

வல்லபன் தத்தனை விழித்துப் பார்த்தான்.

''தத்தா! நீ சொன்ன வார்த்தை என் மனத்தில் தைத்துவிட்டது!'' என்றான்.

''என்ன வார்த்தை?''

''நாற்பது வருடங்களாக ஒரு நாயகன் இந்த தென்னாடுகளில் இல்லை என்றாய்!''

''ஆமாம்.''

''நாற்பது வருடங்கள் என்றால் எவ்வளவு நீண்ட நெடுங்காலம் என்று பார்த்தாயா?''

''என் பாராமல்! இந்த நாற்பது வருடங்களில் ஒரு பரம்பரை ஒழிந்து மற்றொரு பரம்பரை தோன்றி விட்டதே!''

''ஆமாம்! அந்தப் புதிதான பரம்பரையிலே வந்து நாம் தோன்றியிருக்கிறோம். நம் காலத்தில் குழப்பம், சண்டை, சச்சரவு, கலகம் எல்லாம் பார்க்கிறோமே ஒழிய, நீதி, நேர்மை, அமைதி எதையும் காண்பதில்லை. அந்த நாளில் பாண்டியர்கள், சோழர்கள், பல்லவர்கள் நமது பூமியை ஆண்டு வந்தார்களாம். அவர்கள் சமயங்களையும் வளர்த்துப் பேணி, மக்களை நல்வழியில் உய்ப்பித்தார்களாம். இவைகளைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறோமே தவிர நேரில் காணும் பேறு கிடைக்கவில்லை. நமது பாட்டனார்கள் சொல்லியதைத்தான் நம்புகிறோம். அந்நாளில் கோவில்களில் ஆறு கால பூஜையும் தின உற்சவங்கள், பட்ச உற்சவங்கள், மாத உற்சவங்கள், வருட உற்சவங்கள் எல்லாம் நடக்குமாம். ஒரு உற்சவத்தையும் நாம் கண்டதில்லை. உற்சவங்களில் சுவாமி எழுந்தருள, முன்னால் எம்பெருமானடியார்கள் சதிர் ஆட, வேத பாராயணக் கோஷ்டிகள் வேதங்களைச் சந்தத்தோடு ஓத, திராவிட வேதமாகிய திவ்யப் பிரபந்தங்களை ராகத்தோடு பெரியவர்கள் பாடி வர, அதி கோலாகலமாகவே சுவாமி பவனி வருவாராம். அதையும் பார்த்ததில்லை. பண்டிகை நாள் என்று வீடுகளிலும், வீதிகளிலும் விழாக்கள் கொண்டாடுவார்களாம். ஜனங்கள் ஆனந்தமாகக் கூடி பரவசமாகப் பொழுதைக் கழிப்பார்களாம். அதையும் நாம் பார்த்ததில்லை.

''கார்த்திகை என்றால் தெரியவில்லை. நவராத்திரியின் பெயரைக் கேட்டிருக்கிறோம். கொண்டாடியதில்லை. எவ்வளவு அதிருஷ்ட ஈனர்கள் நாம்?

''கோவில்களைப் பார்! எல்லாம் அழிந்து வழிகின்றன. பூஜைகள் நடப்பதில்லை. கதவுகள் பூட்டப்பட்டே கிடக்கின்றன. நிறையக் கோவில்கள் பாழடைந்து விட்டன. கோபுரத்திலும், விமானத்திலும் ஆலஞ்செடிகள் முளைத்து விட்டன. மதில்கள் உடைந்து திருக்குளங்கள் தூர்ந்து போய்விட்டன. கோவில் விக்கிரகங்களை நம் முன்னோர்கள் பூமியில் புதைத்து விட்டார்கள். நம்மில் நிறையப்பேர் கோவில் மூலவர்களையோ விக்கிரகங்களையோ [illegible] கண்டதில்லை.

''[illegible] விழாக்களும் இல்லாம [illegible] கொண்டிருக்கிறோம். [illegible] ஆட்சிக்குப பயந்து வீட்டுக்குள் [illegible] நான்கு பேர் சேர்வதில்லை. கல்வி பயில [illegible] ஓதுவதில்லை. நுண்ணிய பல கலை[illegible]

[illegible] துருப் பிடித்த நிலையில் இருக்கிறது. நன்றாகத்தானே நீ சொன்னாய், நாற்பது வருடங்களாக நமக்குத் தலைவன் இல்லை என்று! அதை நினைத்தால் மனம் பதைக்கிறது!''

படபடவென்று மொழிந்த வல்லபன் நெஞ்சத்தில் கையை வைத்துக் கொண்டு உள்ளே ஒரு துக்கத்தை அனுபவித்தவாறு நின்றான்.

''இவை எல்லாம் தெரிந்த விஷயமாயிற்றே! நீ ஏன் படபடக்கிறாய்?'' என்றான் தத்தன்.

''நம்மிடையே ஒரு நாயகன் தோன்றவில்லை. அது நம்மை எவ்வளவு கேவலமாகக் காட்டுகிறது?'' என்று மீண்டும் துயரம் பொங்கக் கூறினான் வல்லபன்.

''இல்லை என்று ஏன் சொல்கிறாய்? எத்தனையோ பேர்கள் தோன்றினார்கள். தோன்றப் போகிறார்கள்! நாம் பிறக்கு முன்தானே ஒய்சளஅரசர் வள்ளாள தேவர் தோன்றினார்? துரதிருஷ்டவசமாகப் போரில் மடிந்து விட்டார்'' என்றான் கால தத்தன்.

வல்லபன் இன்னும் நிலைத்த பார்வையுடனே இருந்தான்.

''இதற்கெல்லாம் ஒரு விடிவு காலம் வரவேண்டுமே? எனக்கு நெஞ்சு அடங்குவதில்லை. நாமே ஏதாவது செய்துதான் ஆக வேண்டும்'' என்றான் வல்லபன்.

''நாமா?'' என்று சொல்லி அவனை ஏறிட்டுப் பார்த்தான் தத்தன். ''நாம் என்ன செய்ய முடியும்?''

''தீமையைக் கண்டால் அதை அந்த இடத்திலேயே எதிர்க்க வேண்டும்.''

''அப்படியா?''

''ஆமாம், இப்போது ஒரு பெண்ணைப் பலர் கடத்திக் கொண்டு போகிறார்கள். அதை நாம் தடுக்க வேண்டும்.''

''வல்லபா!'' என்று சொல்லி அவனை ஆழ்ந்து பார்த்தான் தத்தன். ''உனக்குப் பைத்தியமா என்ன?''

''ஏன்?''

''நாம் வந்த காரியம் என்ன? அதைவிட்டு....''

''நாம் அரங்கனைத் தேடிச் செல்கிறோம். அவர் எங்கிருக்கிறார் என்பதைக் கண்டறியச் செல்கிறோம்''

''அதுவேதான் நமது குறி! அதை நினைவில் வைத்துக் கொள். வழியில் பிறழாதே!''

''பிறழவில்லை. அரங்கனைக் கண்டு பிடித்தால் மட்டும் என் பெற்றோர் கனவு நிறைவேறிவிடப் போகிறதா? அவரை மீண்டும் திருவரங்கத்தில் சேர்த்தால்தானே என் தந்தையின் ஆசை நிறைவேறும்?''

''ஆமாம்!''

''அதற்கு நாட்டில் நல்ல மனது உடையவர்கள் எல்லோரும் ஒருசேரத் திரண்டு ஒரு பெரும் பலத்தையே உண்டு பண்ணவேண்டும்.''

''உண்மை!''

''அதற்கு அனுசரணையாக நாம் இப்போதே தீமைகளைக் களைய ஆரம்பிக்க வேண்டும். தீமைகள் அழிக்கப்படுகிறது என்று தெரிந்தால்தான் நல்லவர்கள் ஒன்று கூட ஆரம்பிப்பார்கள்.''

''அதாவது அந்தப் பெண்ணைக் காப்பாற்ற வேண்டும் என்று சொல்கிறாய்!''

''ஆமாம்!''

''வழியில் பிறழாதே!''

வெறுப்புடன் வல்லபன் திரும்பினான். ''பிறழவில்லை. அவளோ, அவள் அழகோ என்னை ஒன்றும் செய்யவில்லை'' என்றான் படபடப்புடன்.

''இதில் ஆபத்து உண்டு.''

''அது ஒரு பொருட்டல்ல!''

''வலுவில் சென்று ஆபத்தை வரவழைத்துக் கொள்கிறோம்.''

''தீமையைக் களைய வேண்டுமானால் ஆபத்தை [illegible] வேண்டியதுதான்!''

—தொடரும்

[illegible] வண்டியில் ஓடும்போது சாதாரண [illegible] போது பலர் தலை எழுத்தையே

[illegible] செல்லப்பா

# மகர விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

3

இருவரும் இது பற்றி சிறிது நேரம் வாக்குவாதம் நடத்திக் கொண்டிருக்க, எங்கும் கணகண என்று இருட்டிக் கொண்டிருந்தது.

அப்போது குதிரைகள் வரும் சத்தங்கள் மேற்கிலிருந்து கேட்டன.

''வல்லபா! சேவகத் தலைவன் சொன்னானே அவனது படையாட்கள் பின்னால் வருகிறார்கள் என்று. இப்போது அவர்கள்தான் வருகிறார்கள் போலும்!'' என்றான்.

இருவரும் பாகை தரித்து யாத்திரிகர்கள் போல் வழியோரமாய் நின்றார்கள்.

சிறிது நேரத்தில் இருபது பேரடங்கிய குதிரை வீரர் கூட்டம் அங்கே வந்தது.

அந்த இரு யாத்ரிகர்களைப் பார்த்ததும் கூட்டம் சடக்கென்று நின்றது.

கூட்டத் தலைவன் அவர்களை நோக்கி, ''யாத்ரிகர்களே! இந்தப் பாட்டை வழியாக ஒரு கூண்டு வண்டியும் நான்கு வீரர்களும் போவதைக் கண்டீர்களா?'' என்று கேட்டான்.

உடனே தத்தன் ''கண்டோம். அவர்கள் வடகிழக்கே ஒரு காத தூரத்தில் இருக்கும் அம்பலப்புரம் என்ற ஊரில் உள்ள சத்திரத்தில் இன்றிரவு தங்குகிறார்கள். உங்களைப் பார்த்தால் அங்கே வரச் சொன்னார்கள்! நீங்கள் கிழக்கே போன பிறகு வடக்கே திரும்பவேண்டும். கிளை வழி இருக்கிறது'' என்று கூறினான்.

''நல்லது'' என்று கூறிய தலைவன் புறப்பட கூட்டமும் அவன் பின்னே புறப்பட்டது.

அவர்கள் போன பிறகு தத்தன், வல்லபனை நோக்கி' ''வல்லபா! முதலில் தீமைக்கு ஒரு தடங்கல் போட்டு விட்டோம். படையாட்களை தவறான வழியில் திருப்பி விட்டோம்!'' என்று கூறினான்.

இரவு ஆகி கருகரு வென்ற முதல் யாமத்து முடிவில் ஒடுமானூர் சத்திரத்தை வல்லபனும் தத்தனும் அணுகினார்கள்.

ஊரின் தெரு நிசப்தமாய் இருந்தது. விளக்குகளே இல்லை.

தூரத்து மூலையில் கோவில் இடிபாடுகளோடு வெறும் கூடாகக் காட்சி அளித்தது.

வீதியில் எந்த விதச் சத்தமோ அரவமோ சந்தடியோ இல்லை.

சத்திரத்தை அடைந்தபோது மௌனத்தில் மூழ்கியிருந்தது.

அதைக் கண்ட தத்தனுக்கு மனத்தில் பல சந்தேகங்கள் ஏற்பட்டன.

சத்திரத்தின் முன் கதவைக் கவனமாகத் திறந்தபோது நடுக்கூடத்தில் ஒரு குத்துவிளக்கு எரிந்து கொண்டிருந்தது. சுற்றி வரப் பொன்னிறமாய் வெளிச்சம் விழுந்து கொண்டிருந்தது.

இருவரும் வெகு எச்சரிக்கையுடன் உள்ளே போனார்கள்.

சத்திரம் பெரிய சத்திரம் ஆதலால் பெரிய கூடமாயிருந்தது.

அதன் நடுவில் நின்று கொண்டு ''ஐயா!'' என்று விளித்துக் கொண்டு இருவரும் சுற்றி வரப் பார்த்தார்கள்.

வல்லபனின் கண்கள் சுழன்று வந்தபோது ஒரு சாளரத்தில் வந்ததும் நின்றுவிட்டன.

அங்கே கூண்டு வண்டியில் பார்த்த அந்த இளம் பெண் அவனைத் தன் கரிய விழிகளால் பார்த்துக் கொண்டிருந்தாள்.

வல்லபன் ஒரு கணம் திடுக்கிட்டபோது, சாளரத் துணிகளை மற்றொரு பெண்ணின் கை விருட்டென்று இழுத்து மூடுவது தெரிந்தது.

அடுத்த கணத்தில் அந்த உள் அறைக்குள்ளிருந்து ஒரு பாடல் கேட்டது.

அந்தப் பாடலை அந்தப் பெண் தான் பாடிக் கொண்டிருந்தாள்.

ஒமானூர் சத்திரத்தின் விசாலமான கூடத்தில் இரவின் முன் யாம வேளையில் அந்தப் பெண்ணின் பாடல் தீங்கனியாய் எழத் தொடங்கியது.

நட்டராகப் பண்ணில் எழுந்த பாடல் நம்மாழ்வாரின் பாடல்தான்.

தூதுரைத்தல் செப்புமின்கள்
    தூமொழிவாய் வண்டினங்காள்!
போது இரைத்து மது நுகரும்
    பொழின் மூழிக் களத்துறையும்
மாதரைத் தம் மார்பகத்தே
    வைத்தார்க்கு என் வாய்மாற்றம்●
தூதுரைத்தல் செப்புதிரேல்
    சுடர்வளையும் கலையுமே!

ஒரு பாடல் முடிந்து அதன் ரீங்காரம் அந்தச் சத்திரத்து நிசப்தத்தில் அமிழ்ந்திடு முன் அந்தப் பெண் மற்றொரு பாடலைத் துவக்கினாள்.

● வாய் மாற்றம்—வாய்ச் சொல்

★ எல்லியும் நன்பகலும் இருந்தே
　　ஏசிலும் ஏசுக ஏந்திழையார்!
நல்லரவர் அவர் திறம் நாமறியோம்,
　　நாண் மடம் அச்சம் நமக்கு இங்கு இல்லை,
★ வல்லன சொல்லி மகிழ்வரேனும்
　　மாமணி வண்ணரை நாம் மறவோம்!
கொல்லை வளர் இள முல்லை புல்கு
　　குறுங்குடிக்கே என்னை உய்த்திடுமின்!

டைசி அடிகளைப் பல முறை பாடி முடித்தாள் அவள்.

ராஜவல்லபன் அந்தப் பாடல்களைக் கேட்டு ற்றதை எல்லாம் இனிதே மறந்து விட்டான்.

அவன் தோள் மீது கையை வைத்தான் காலதத் ன்.

அப்போதும் வல்லபன் பரவசத்தில் திளைத்தவனாகி, தத்தா! கேட்டாயோ பாடலை! அமுது போல் இனிக் றதே!'' என்று கூற.

தத்தனும் அவனை ஒரு விழி விழித்துப் பேச்சை டக்கிக் காதோடு காதாக,

''வல்லபா! பாடலின் பண்ணை ரசிப்பதைவிடப் பாருளை உணர்ந்துகொள்'' என்று கூறினான்.

அப்போதும் வல்லபன் புரியாமல் நிற்க,

''தூதுரைத்தல் செப்புமின்கள்!'' என்று ஒரே டியைப் பலமுறை பாடினாள் கேட்டாயா?'' என்றான் ாலதத்தன்.

''கேட்டேன். அழகாயிருக்கிறதே!''

''அழகாயில்லை; அழுகையா யிருக்கிறது.''

''அழுகையா?''

''ஆமாம், அந்தப் பெண் சூசகமாக நமக்கு வேண்டுகோள் விடுக்கிறாள்.''

''என்ன வேண்டுகோள்?''

''தூதுரைத்தல் செப்புமின்!''

''அப்படி என்றால்?''

''எனக்காகத் தூது செல்லுங்கள்!''

''எங்கே?''

''அதுதான் மர்மமாயிருக்கிறது! இரண்டாவது பாடலில் வேறு ஏதோ சொல்கிறாள். அதைப் புரிந்து கொள்ள வேண்டும். இப்போது அதற்கெல்லாம் அவகாசமில்லை. நாம் உடனே இதைவிட்டு அகல வேண்டும். இங்கே எல்லாம் மர்மமாக இருக்கிறது. ம்! சீக்கிரம் புறப்படு.''

மேற்பேச்சுக்கு இடம் கொடுக்காமல் வல்லபனின் கையைப் பிடித்துக் கொண்டு காலதத்தன் விரைவாக இழுக்க, இருவரும் வாயில் நிலையை நோக்கி நடந்தார்கள்.

அப்போது,''தம்பிகாள்!''என்ற குரல் திடீரென்று கேட்கஇருவரும் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தார்கள்.

சத்திரத்தின் குச்சில் கதவை ஓசையுடன் திறந்து கொண்டு மந்தகாசத்துடன் சேவகத் தலைவன் அங்கு நின்றான்.

இளைஞர்கள் திகைப்பில் மூழ்கினார்கள்.

''உணவு அருந்த வேண்டாமோ, களைப்பாற வேண்டாமோ?அதற்குள் சத்திரத்தைவிட்டு வெளியேறுகிறீர்களே!'' என்று தலைவன் கூற,

அதே நேரத்தில் சத்திரத்தின் வாயிற்புறக கதவையும், ஒரு சேவகன் இரு கைகளால் தள்ளிச் சிக்கென மூடிவிட்டான்.

நொடிமாத்திரத்தில்காலதத்தன், முகத்தில் பெரிய ...ப்பை உண்டு பண்ணி, தலைவனை நோக்கி ''தலை...!நீங்கள் இங்கே இருந்தது நல்லதாய்ப் போயிற்று. இது பேய் வீடோ என்று பயந்து விட்டோம். சத்திரத்து





மடைப்பள்ளிக்காரர் இருக்கிறாரோ? எங்களுக்கு ஒரே பசியாய் இருக்கிறதே! இங்கே கட்டளை போஜனம் கிடைக்குமா? கிரயத்துக்குக் கிடைக்குமா தெரியவில்லையே?'' என்று கூறினான்.

பிறகு ராஜ வல்லபனைப் பார்த்து, ''ஏன் அப்படித் திகைத்துப் போய் நிற்கிறாய்? இரவில் உணவு கிடைக்கும். அழாதே!'' என்று கூறி அவனைக் கீழே தரையின் மீது இருத்தினான்.

---

★ எல்லி—இரவு

★ வல்லன சொல்லி—வாய்க்கு வந்தபடி சொல்லி



பிறகு தானும் அமர்ந்து, தன் பாதவிரல்களை வல்லபனின் பாதத்தைத் தொடும்படி வைத்துக் கொண்டு, அவனை எச்சரிக்கையாக இருக்குமாறு காலில் நிமிண்டிக் காட்டி, அதே நேரத்தில் வேகமாகத் தனது பொதியில் கைவிட்டு, ஏட்டுக் கட்டு ஒன்றைக் கையில் எடுத்து, விளக்கின் அருகில் வைத்துக் கொண்டு இராகம் போட்டுப் படிக்க ஆரம்பித்தான்.

தலைவன் நமட்டலாய்ச் சிரித்துக் கொண்டு, ''என்ன தம்பி? மந்திரம் படிக்கிறாயா?'' என்று கேட்டவாறு அவனை நோக்கி வந்தான்.

''ஆமாம், நாங்கள் ஜோசியர்கள்! ஆருடம் பார்த்துப் பிழைப்பை நடத்துபவர்கள். இன்று இரவு நாங்கள் உண்ண வேண்டியது பலகாரமா, பழமா சோறு என்று சாத்திரம் பார்க்கிறேன்'' என்று கூறினான்.

இதற்குள் தலைவன் அவனுக்கு மிக அருகே வரவே, சமயம் பார்த்திருந்த காலதத்தன் ஒரே பாய்ச்சலில் அந்தக் குத்து விளக்கைக் கீழே தள்ளி அணைத்து விட்டான். சத்திரத்தின் ஒரே விளக்கு அணைந்ததும் எங்கும் இருள் பற்றிக் கொண்டது. தானோ, ஆளோ எதுவும் கண்ணுக்குத் தெரியவில்லை. உடன் எழுந்த கால

தத்தன் தலைவனை ஒரே தள்ளலில் கீழே தள்ளி வல்லபனை இழுத்துக் கொண்டு தடதடவென்று வாயிலை நோக்கி ஓடினான்.

கீழே விழுந்த தலைவன் ஆத்திரமான குரலில், "விடாதீர்கள், பிடியுங்கள், கணபதி! கதவைத் திறக்க விடாதே!" என்று கத்தினான்.

வாயிற் கதவருகில் நின்ற கணபதி என்ற அந்த வீரனும் இருட்டில் ஏதும் தெரியாமல் தன் வாளை உருவி அங்கும் இங்குமாகச் சுழற்றி விட்டான்.

தலைவன் இதற்குள் எழுந்து, "ஏய் பயல்களா?" என்று இடிபோல் கர்ஜித்து, கையில் வாளை எடுத்து இங்கும் அங்கும் சுழற்றி, கூடத்தில் இஷ்டப்பட்ட திசைகளை நோக்கி ஓடினான்.

அப்படியே வெளியே இருக்கும் சேவகன் பெயரைச் சொல்லி, "நெருப்பு கொண்டு வா! சீக்கிரம் பந்தம் ஏற்று!" என்று கட்டளைகளையும் உதிர்த்துக் கொண்டே ஓடினான்.

வெளியில் இருந்தவனும் அவசர அவசரமாக வன்னிக்கட்டையை எடுத்து நடுக்கோலால் கடைய ஆரம்பித்தான்.

மழை நாள் ஆனதால் கட்டை ஈரம் பாய்ந்து கிடக்கவே, நெருப்புப் பொறி அதிலிருந்து தெறிக்கவே இல்லை.

ஊரிலே யார் வீட்டிலாவது நெருப்பு வைத்திருப்பார்கள் என்று நினைத்து கிராமத்துத் தெருவுக்குள் அவன் விரைவாக ஓடினான்.

இதற்குள் தலைவன் வாயில் நிலைப்பக்கம் போய் நின்றுகொண்டு,

"இங்கே வாங்களடா, பலி போடுகிறேன்" என்று கர்ஜித்தான்.

வல்லபனும் தத்தனும் இருட்டில் துழாவி மெள்ள நடந்தார்கள். வாயில் நிலையில் இருவர் நிற்பதால் அந்தப் பக்கம் போவது சரியல்லவென்று நினைத்தார்கள். புழக்கடைப்பக்கம் ஏதாவது வழி இருக்கும் என்று நினைத்து, பின்புறம் செல்லும் வழியைத் தடவியவாறு தேடினார்கள்.

எங்கே திரும்பினாலும் இருட்டுதான் முகத்தில் அடித்தது. திசையே தெரியவில்லை. சீக்கிரம் ஏதாவது செய்தாக வேண்டும் என்று நினைவு ஓடியது.

சுவரைத் துழாவிக்கொண்டு செல்லுங்கால் ஒரு இடைவெளி கண்டு அதனுள் நுழைந்தார்கள். அது அவர்களை நீள இழுத்துக் கொண்டு சென்றது. நீளத் தாழ்வாரமா? நீள நடையா? ஒன்றுமே புரியவில்லை!

ஒரு இடத்தில் அந்த நீளச் சுவர் இரண்டாகப் பிரிவதைப் பார்த்து, இருவரும் சிறிது தயங்கி நின்றார்கள். அவசரமாக யோசித்து, ஒவ்வொருவரும் நூறு எண்ணும் வரை ஒவ்வொரு திசையிலும் போய்விட்டு, மறு நூறு எண்ணும்போது திரும்பி வரவேண்டும் என்றும் தீர்மானித்தார்கள்.

இருவரும் தத்தம் திசை நோக்கிச் சென்றார்கள்,

ராஜவல்லபன் தடவித் தடுமாறிச் செல்லத் தொண்ணூற்று எட்டு என்று எண்ணும் அளவில் திடீரென்று நாசியில் மகிழம்பூ வாசனை வீசி மணத்தது. அந்தக் கணத்தில் மனம் சிலிர்த்துப் பரவசமடைந்தது. கூண்டுவண்டியில் இந்த நெடி அடித்ததே என்று நினைக்கும்போது மேலே எண்ணுவது மறந்துவிட்டது.

சுவரின் கீழே ஓரமாய்த் தடவியபோது, ஒரு இரும்புச் சங்கிலி அவன் கையில் நெருடவே சங்கிலியின் கண்ணிகளைத் தடவிக் கொண்டு கீழே தரை வழியாய் அவன் ஊர்ந்து போனான்.

முடிவில் அவன் கைகளில் மிருதுவான தாமரை போன்ற எதுவோ தென்பட,

"யாரது?" என்று ஒரு பெண்ணின் மெதுவான இரைச்சல் உடன் அங்கே கேட்டது.

வல்லபன் மறுமொழி கூற வாயெடுக்குமுன், கூடத்தில் திடீரென்று அரவங்கள், கதவு திறக்கும் சத்தங்கள் காலடி ஓசைகள் யாவும் ஒருங்கே கேட்டன.

மறுகணம் சத்திரத்தின் கூடம் பிரகாசமாகி, அதன் அறைகள் எல்லாவற்றிலும் வெளிச்சத்தின் படிவங்கள் ஓடிப் பாய்ந்து நிரம்பி விட்டன.

இரண்டு தீவர்த்திகளைத் தூக்கிக் கொண்டு ஒரு சேவகன் உள்ளே நுழைந்து விட்டான்.

"அப்படிக் கொண்டா, அந்தப் பதர்களைப் பிடிப்போம்! நீ அப்படிப் போ! நான் இப்படிப் போகிறேன்" என்று தலைவன் இரைந்து கூவினான்.

அதே நேரத்தில் அந்தத் தீவர்த்திகளின் வெளிச்சம் சாளரம் வழியாக அந்த அறைக்குள் பாய்ந்தது. அதன் துணையில், தரையில் மண்டியிட்டிருந்த வல்லபன், தன் முன்னால் கட்டிலில் அபலையாக அமர்ந்திருக்கும் அந்த இளம் பெண்ணை நிமிர்ந்து பார்த்தான்.

அவளது பாதம் ஒன்றைப் பிணைத்துக் கொண்டிருக்கும் இரும்புச் சங்கிலி மீது, அவனது இரு கைகளும் தொட்டுக்கொண்டு ஸ்தம்பித்து நின்றன.

அவன் பார்வை அந்தப் பெண்ணின்மீது விழுந்து நிலைகுலைந்து நின்றது.

அவளது நீண்ட கரிய விழிகளில் ஒரு கடலே கொந்தளித்துக் கொண்டிருந்தது.

அந்தக் கடலில் திகைப்பு, பிரமிப்பு, இரக்கம் ஆகிய அலைகள் எல்லாம் புரண்டு கொண்டிருந்தன.

வல்லபன் அதே நிலையில் மெய் மறந்திருக்கும் வேளையில், அந்தப் பெண்ணின் முகம் மேலும் மேலும் பிரகாசமாகிக் கொண்டே வந்தது.

முடிவில் அவன் திடுக்கிடும்போது, அந்த அறைக்குள் ஒரு சேவகன் தீவர்த்தியைக் கொண்டு வந்திருப்பதையும், சேவகத் தலைவன் உருவிய வாளுடன் அருகில் நிற்பதையும் அறிந்து கொண்டான்.

"எழுந்திருடா பதரே!" என்று அவனை உலுக்கி எழுப்பினான் தலைவன்.

—தொடரும்

வானொலி அறிவிப்பாளர்:

"...இந்தக் காற்றின் விளைவாக அலைகள் 10 முதல் 20 மீட்டர் வரை உயரமாக எழும்பக்கூடும். கடல் ஓரம் இருப்பவர்கள் எச்சரிக்கையுடன் இருக்கவும். ...ஆ! கடல் அலைகள் வானொலி நிலையத்திலேயே புகுந்து விட்டதால் இன்றைய நிகழ்ச்சிகள் இத்துடன் முடிவடைகின்றன!"

## எங்கும் மழை என்பதே பேச்சு.

சென்ற வருட தீபாவளிக்கு மாமனார் வீட்டுக்குச் சென்று அங்கேயே தங்கி உள்ள ஒரு மாப்பிள்ளை:

"ஊருக்குப் போகலாம் என்று பார்த்தால் இந்த மழை இப்படிப் பெய்து கொண்டே இருக்கிறதே!"

•

"சிதம்பரத்தில் இருந்து எப்படி வந்தாய்? பஸ்ஸா, ரயிலா?"

"பஸ்ஸும் இல்லை, ரயிலும் இல்லை. படகில் வந்தேன். வீராணம் கால்வாய் வழியாக."

எஸ். ராஜாராமன்

# மதுரா விஜயம்

4

ஸ்ரீவேணுகோபாலன்

தீஜுவாலை வெளிச்சத்தில் அந்த அறை முழுவதும் வெண்ணிறமாய்த் தகதகக்க, ரோக நிமிர்ந்த அந்தப் பெண்ணின் வதனம் பாலாறாக வழிந்து ஓடியது. மருட்சி விழுந்த இரு கண்களிலும் இருளின் திரட்சி கூடி இருந்தது. குறுகுறுத்த புருவமும், அதன் அடியில் மீன் வடிவில் இருந்த இரு கருவிழிகளுமே அவனை ஆழ்ந்து பார்த்தன.

வல்லபனின் மனத்தில் ஒரு குயில் வந்து கூவியது.

இன்னது செய்வோம் என்று அவன் யோசிக்கு முன்பே, சேவகத் தலைவன் அவனைக் குலுக்கித் தூக்கினான்.

''தப்பி விடவா பார்த்தாய்?'' என்று கூறி நெட்டித் தள்ளி அவனைக் கூடத்திற்குக் கொண்டு போனான். அருகே ஒரு தூணில் அவனைப் பிணைத்துக் கட்டினான்.

''இன்னொருத்தன் எங்கே? அவனையும் பிடியுங்கள்'' என்று சொன்ன பிறகு, இரு சேவகர்கள் தத்தனைத் தேடிப் போனார்கள்.

சத்திரம் முழுமையும் தேடினார்கள். குச்சில், மச்சில் பாவுள், கூடம், உக்கிரான அறை, சமையல் அறை, பரண், குதிர்கள் எல்லாம் தேடினார்கள். பிறகு சத்திரத்திற்கு அப்பாலும் தேடினார்கள். கடைசியில் அவனைக் காணாமல் வெறும் கையாய்த் திரும்பி வந்தார்கள்.

தலைவனுக்குக் கோபம் அதிகரித்தது.

''எங்கே அவன், அந்தக் கோமாளி?'' என்று வல்லபனைப் பார்த்து அதட்டிக் கேட்டான்.

''தெரியாது.''

''ஏன் தெரியாது? நீங்கள் இருவரும் என்ன தைரியத்துடன் இங்கே வந்தீர்கள்? எங்களை யார் என்று நினைத்து விட்டீர்கள்?'' என்று பலவாறாக ஏசி, உடனே, ''ஏய் கணபதி'' என்று சேவகனைக் கூப்பிட்டான்.

கணபதி தழைந்து நின்றான்.

''இவனைச் சிரச்சேதம் செய்!''

வல்லபன் பொறி கலங்கி நின்றான்.

ஊதலான காற்று சத்திரத்துள் அப்போது வீசி அடித்தது.

அறைக்குள் பிணைப்புச் சங்கிலி நகர்ந்து கொள்ளும் ஓசை கேட்டது.

''ம்! சீக்கிரம்!'' என்றான் தலைவன்.

கணபதி வாளை உருவினான்.

அவன் நாலடி வைத்து முன் வருவதற்குள் தலைவன், ''இரு! ஒரே நொடியில் இவனைக் கொல்ல வேண்டாம். இவனைத் தூக்கில் தொங்க விட்டு ஊசலாட விடுவதுதான் நல்லது. அப்போதுதான் இவனுடைய அருமைச் சினேகிதன் அதைப் பார்த்துப் புத்தி அடைவான்'' என்று கூறி, ''உத்திரத்தில் ஒரு கயிற்றைக் கட்டு'' என்று கட்டளை யிட்டான்.

கயிற்றைக் கட்டும் வேளையில் வல்லபனின் எண்ணங்கள் படபடத்து ஓடின. ''தத்தா, என் அருமை நண்பா! நீ எங்கே போனாய்? உன்னைக் காணாமலே போய் விடுவேனோ?'' என்று மனத்துள் புலம்பினான்.

தாயார் வாசந்திகாவின் சோகமான முகம் நினைவிலே வந்தது. அந்தக்கணமே கண்கள் கலங்கிவிட்டன.

''அம்மா! எந்தன் மீது எவ்வளவு நம்பிக்கை வைத்தீர்கள்! ஆசை வைத்தீர்கள்! உங்கள் கனவுகளை நிறைவேற்றாமல் போகிறேனே, அம்மா! உங்கள் மொழி கேட்காது இப்படி வழியில் பிறழ்ந்து விட்டேனே!'' என்று மனத்துள் நைந்து கொண்டான்.

அப்பால் சேவகன் ஏணி கொண்டு வந்து உத்தரத்தில் ஒரு கயிற்றைக் கட்டி அதில் ஒரு சுருக்குப் போட்டு வைத்துக் கீழே இறங்கினான்.

பிறகு வல்லபன் அருகே வந்து, அவனைப் பிணைத்திருந்த கயிற்றை அவிழ்த்து, ''ம்! முன்னே போ!'' என்று கட்டளை யிட்டான்.

அவ்வளவில் வல்லபனின் கண்களில் நீர் பாய்ந்து வந்தது.

அவன் நிமிர்ந்து பார்க்கையில், சத்திரத்து அறைச் சாளரத்தில் அந்தப் பெண்ணின் முகம் வைகறை நேரத்துச் சந்திரன் போல் வெளிறியவாறு விகசித்தது.

''ஒரு பெண்ணின் முன்னால் இப்படி வீரமில்லாத, கீர்த்தியில்லாத மரணத்தை அடைகிறோமே!'' என்று மனத்துள் வெதும்பினான்.

மறு நொடியில் ஒருவாறு ஊக்கம் அடைந்தவனாய், அந்தச் சேகவத் தலைவனை நோக்கி, ''ஐயா, தலைவரே! எனக்கு இவ்வளவு பெரும் தண்டனை விதிக்கிறீர்களே, இது முறையா? நான் என்ன குற்றம் செய்தேன்?'' என்று கேட்டான்.

''ஒரு குற்றமா செய்தாய்?'' என்று ஆரம்பித்தான் தலைவன். ''இந்தச் சத்திரத்துள் வந்தது ஒரு குற்றம்! விளக்கை அணைத்தது ஒரு குற்றம்! எங்களுடன் சண்டையிடப் பார்த்தது மூன்ருவது குற்றம்!'' என்று கூறினன்.

உடனே வல்லபன், ''தலைவரே! அதற்கு இவ்வளவு பெரிய தண்டனை தரலாமோ?'' என்று கேட்க,

அவனை வெறுப்புடன் பார்த்த தலைவன், ''நீதி, நியாயம் பேசுவதற்கு இது சமயமல்ல, இடமும் அல்ல!'' என்று கூறி, சேவகனுக்கு ஜாடை காட்டினன்.

உடன் வல்லபன் பரபரத்து, ''ஐயா, எனக்குப் பிரார்த்தனை செய்யவாவது அவகாசம் கொடுங்கள்!'' என்று கூறி, தலைவனது மறுமொழியைக் கூட எதிர் பாராமல், கீழே மண்டியிட்டு, கூரத்தாழ்வார் அருளிய வட மொழி சுலோகம் ஒன்றை இராகம் போட்டுப் பாட ஆரம்பித்தான்.

சேவகத் தலைவனும் மிக ஆத்திரமாகத்தானே, ''ஏய்! மந்திரத்தைச் சொல்லிக் கொண்டே இருக்கிறுயே! எழுந்திரு!'' என்று கூறி அவனது முடி பிடித்து உலுக்கி எழுப்பினன்.

அதே நேரத்தில், வாயிற்புறத்திற்குச் சற்றுத் தொலைவிலிருந்து 'கூவேகூ' என்று ஒரு அமானுஷ்யமான குரல் வெளிப்பட்டு, அந்தப் பிரதேசத்தை எல்லாம் அதிர வைத்தது. 'இதென்ன?' என்று திடுக்கிட்ட தலைவனும் சேவகர்களும் நிலைவாயில் வழியே வெளிப்புறத்தை நோக்கினர்கள்.

தூரத்தில் மை பூசிய இருட்டுக்குள் ஐந்தாறு தீவர்த்திகள் கரும் பட்டுத் துணியில் தைத்த வைடூரியங்கள் போல் ஜொலித்துக் கொண்டிருக்க,

''ஐயா, நமது படையாட்கள்தான் வருகிருர்கள்'' என்று கூறினன் ஒரு சேவகன்.

''வரட்டும்! அவர்களும் வந்து இந்தப் பையலின் கடைசி நேரத்தை நேரில் பார்க்கட்டுமே'' என்று தலைவன் கூறினன்.

தீவர்த்திகள் நெருங்கி வர வர, குதிரைகளின் களைப்பான குளம்பு ஓசைகள், தாளம் இல்லாமல், சோர்ந்து போய்த் தொய்யலாகக் கேட்கத் தொடங்கின.

யாவரும் வருபவர்களை ஆவலோடு பார்த்திருந்தார்கள்.

வல்லபனின் நெஞ்சம் படபடத்துக் கொண்டிருந்தது.

அந்தக் காட்சியை மிக உன்னிப்புடன் கவனித்து வந்த தலைவன், திடீரென்று முகத்தில் கலவரம் காட்டி, ''ஏய், இவர்கள் நம் ஆட்கள் இல்லை'' என்று கூறினன்.

மற்றவர்களும் சந்தேகப்பட்டுப் பார்த்தார்கள்.

அவர்களது ஆச்சரியம் மாறுமுன்பே, எட்டு ஆள் பரிவாரமாய் வந்த அந்தக் கூட்டம் சத்திரத்து வாசலில் சம்பிரமமாக வந்து நின்றது.

குதிரைகள் சோர்வுடனே நிற்க, அவற்றில் இருந்து மனிதர்கள் தொப்தொப்பென்று கீழே குதித்து, பெரிய பெரிய பொதிகளையும் அவற்றின் முதுகிலிருந்து கீழே இறக்கினர்கள்.

தலையில் வரிந்து கட்டிய பாகையும், நீளமாகத் தரித்த பட்டு அங்கியும், வளைந்த பாதக் குறடுகளும் தரித்த ஒரு ஆஜானுபாகுவான மனிதன், கையில் ஒரு பட்டுப் பையை இடுக்கிக் கொண்டு, ''ஹேய், ஹேய்! இதுதானே சத்திரம்! சத்திரம் இதுதானே!'' என்று கனம் பாடுவதுபோல் மாறி மாறிக் கேட்டுக் கொண்டு, அர்த்தமில்லாமல் வெறிச் சிரிப்பும் சிரித்துக் கொண்டு, வெகு சுவாதீனமாக அந்தச் சத்திரத்து வாயிலுக்குள் நுழைந்தான்.

கூடத்தில் வந்ததும், அங்கே நடந்து கொண்டு இருக்கும் காட்சியைப் பார்த்து, ''அடாடாடாடா டாடா! இப்படி ஒரு காரியம் இங்கு நடக்கலாமோ? சிறு பிள்ளையைத் தூக்கில் இடுகிறீர்களே!'' என்று சேவகத் தலைவனை மிக உரிமையோடு பார்த்துக் கேட்டான்.

முதலில் முகத்தைச் சுளித்த தலைவன், பிறகு வறட்சியாக ஒரு சிரிப்பை வரவழைத்து, ''ஐயா இவனும் மற்ருெருவனுமாகச் சேர்ந்து எங்கள் பொருள்களைத் திருடினர்கள்'' என்று கண்களை உருட்டிக் கொண்டே கூறினன்.

''அப்படியா? அப்படியானுல் தூக்கில் இட வேண்டியதுதான்! சரியான தண்டனை! ஆமாம் அது தான் தண்டனை!'' என்று அந்த ஆஜானபாகு. 'கனம்' பாடினன்.

உடனே வல்லபனும் ஆர்த்து எழுந்து, ''பொய், ஐயா, பொய்! நாங்கள் திருடவே இல்லை. இவர் பொய் சொல்கிருர். இந்தச் சத்திரத்தில் தங்க வந்தோம். அநியாயமாய் எங்கள் மீது பழி சாட்டுகிருர்'' என்று ஆவேசமாகக் கூறினன்.

உடன் ஆஜானுபாகுவும், ''அநியாயம்! அநியாயம்! இவன் திருடவில்லை. இவன் மீது அநியாயமாய்க் குற்றம் சொல்கிறீர்கள்'' என்று கூறினன்.

அவனை ஆத்திரத்துடன் பார்த்த தலைவன், ''ஐயா, யாத்திரிகரே, சிறு பையன் சொல்வதைக் கேட்டதும் உடனே அவன் பக்கம் சாய்கிறீரே! அவன் சொல்வது நிஜமானுல் அவன் ஏன் விளக்கை அணைத்தான் என்று கேளுங்கள்?'' என்று கேட்டான்.





உடன் அந்த யாத்திரிகன் பையன் பக்கம் திரும்பி, ''விளக்கை அணைத்தாயா? அது தப்பிதம். தப்பிதம். தூக்கில் தொங்க வேண்டியதுதான்!'' என்று கூறினான்.

எந்த விதப் பச்சாதாபமும் இல்லாமல், வெகு சாதாரணமாக அந்த யாத்திரிகன் அப்படிக் கூறுவதைப் பார்த்து மேலும் கொதித்து எழுந்த வல்லபன்,

''ஐயா! ஒரு உண்மையைச் சொல்லவா?'' என்று வினவினான்.

''சொல்லு, சொல்லு, சொல்லு!'' என்று அடுக்கினான் யாத்திரிகன்.

''இந்தக் கூட்டத்தார் ஒரு பெண்ணைச் சங்கிலி போட்டுப் பிணைத்து எங்கேயோ கடத்திப் போகிறார்கள். அவர்கள் கடத்துவதை நானும் என் நண்பனும் பார்த்து விட்டோம். அதற்காக என்னை இவர் கொல்ல நினைக்கிறார்'' என்று சொன்னான்.

''அப்படியா? அப்படியா?'' என்று அசமஞ்சம் போல் கேட்டுவிட்டு, தலைவனைப் பார்த்து முகம்எல்லாம் மகிழ்ச்சி பொங்க, ''பெண்ணைக் கடத்தினீர்களா? யாருடைய பெண்? உங்கள் சொந்தத்திற்கா? வேறு ஆட்களுக்கா?'' என்று கேட்டான்.

அந்தத் தலைவன் அவனை முகத்தைச் சுளித்துக் கொண்டே சிறிது பார்த்தான்.

அப்போது அந்த யாத்திரிகனின் இதர ஏழுஆட்கள் பொதிகளுடன் உள்ளே வர, அவர்கள் களைத்திருந்தாலும் தேகக் கட்டுடன் இருப்பதைத் தலைவன் கவனித்துக் கொண்டான்.

முகத்தில் உடனே ஒரு நகைப்பை வரவழைத்து, ''நன்றாகச் சொன்னாயப்பா பையன்!'' என்று கிளு கிளு என்று வயிறு மடியச் சிரித்து, வல்லபனைப் பார்த்து, ''தம்பி! கேள்! எங்கள் பிரபு காளிங்க மர்த்தனன் இருக்கிறாரே, அவரது பெண்தான் அந்தப் பெண்மணி! அவளுக்கு ஒரு வருடமாகச் சித்தப்பிரமை! கொங்கு நாட்டில் ஒரு சாமியாரிடம் அந்தப் பெண்ணைக் காண்பித்துவிட்டுத் திருப்பி அழைத்துப் போகிறோம். அவளது கால்கைகளைச்சங்கிலியால் பிணைத்திருப்பதை நீ பார்க்கவில்லையோ?'' என்று கேட்டான்.

ராஜவல்லபன் விலவிலத்து நிற்க, ''ஹூம், நீ பார்க்கவில்லையா?'' என்று அதே கேள்வியை அசட்டுத்தனமாகக் கேட்டான் அந்த யாத்திரிகன்.

வல்லபன் கண்ணை மூடி ஒரு கணம் தடுமாறி விட்டான்.

பிறகு யோசனை பண்ணி, பளிச்சென்று திரும்பி, ''ஐயா! அவர் சொல்வதெல்லாம் பொய்! அந்தப்பெண்ணுக்குச் சித்தப்பிரமை இருக்க முடியாது! அவள் ராஜகுலமாக இருக்க வேண்டும். அவளிடமே நீங்கள் நேரில் கேளுங்கள்!'' என்று சொன்னான்.

உடனே யாத்திரிகனும், ''அவளிடமே நேரில் கேளுங்கள்! அவள் யார்? எந்த ஊர்ப் பெண்? அவளே மறுமொழி சொல்லட்டுமே!'' என்று தலைவனைப் பார்த்துக் கூறினான்.

தலைவனின் முகம் கறுத்தது.

''நல்லது'' என்றான் அவன்.

பிறகு, ''ஐயா யாத்திரிகரே! உம்மைப் பெரிய மனிதர் என்று நினைக்கிறேன். நல்லவேளையாக இங்கே வந்தீர்! நான் கூறுவது உண்மையா என்று பார்க்க விரும்புகிறீர். அந்தப் பெண்மணியிடமே அதைப் பற்றிக் கேட்போமா?'' என்று கேட்டான்.

தலைவன் உடனே சேவகனுக்குக் கண்காட்ட அவன் தீவர்த்தியைத் தூக்கிக் கொண்டு முன்னே அறையை நோக்கிப் போனான்.

அறையுள் நுழைந்ததும், எல்லோரும் நின்றார்கள்.

அங்குள்ள கட்டிலில் அந்தப் பெண் சோர்ந்து படுத்திருந்தாள். அவள் கையிலும் காலிலுமாகப் பிணைந்திருந்த சங்கிலி அவள் மீது தாறுமாறாகக் கிடந்தது.

— தொடரும்

25

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

சத்திரத்தின் கட்டிலைச் சூழ்ந்துகொண்டு எல்லோருமாய் நிற்க, சேவகத் தலைவன் பையப் பையக் கட்டிலின் அருகில் சென்று, ''அம்மணி'' என்று குரல் கொடுத்தான்.

அது அவள் செவியில் ஏறாதது போல் தோன்றவே, மேலும் குரலைத் தூக்கி, ''அம்மணி! ''என்று அழைத்தான்.

பலமுறை அழைத்த பிறகு அவள் தன் கண்களை அலர்த்தி மெதுவாகப் பார்த்தாள்.

''தாங்கள் யார் என்று இவர்கள் எல்லோரும் கேட்க வந்திருக்கிறார்கள். அதைத் தயை செய்து கூறுங்கள், அம்மா!'' என்றான் சேவகத் தலைவன்.

எல்லோரும் ஆவலோடு அவள் என்ன சொல்லப் போகிறாள் என்பதைக் கேட்டிருந்தார்கள்.

அப்போது அந்த இளம் பெண்ணானவள் எதுவும் பேச விருப்பம் இல்லாதவள் போல் முகத்தை வலித்து கண்களைச் ★ செம்பளித்து, ''நா...ஹாக்கு...தேமு...'' என்று விவரமில்லாமல் வாய்க்கு வந்தபடி ஏதோ சொன்னாள்.

உடன் சேவகத் தலைவனும், ''அம்மணி! நீங்கள் பேசுவது, எங்களுக்குப் புரியவில்லையே! தெளிந்து பேச வேணும்'' என்று விண்ணப்பிக்க,

அந்த இளம் பெண்ணும் முன்னைப் போலவே, ''நா.... நா... நா'' என்றே ஏதும் புரியாதது போலச் சொல்வாள். ஆயினள்.

அப்பால் அனைவரையும் அழைத்துக்கொண்டு கூடத்திற்கு வந்த சேவகத் தலைவன்,

''கேட்டீரா, யாத்திரிகரே! பெண்ணுக்கு உன்மத்தம் பிடித்திருக்கிறது என்றேனே, நான் சொன்னது சரியாகப் போய்விட்டதா?'' என்று கேட்டான்.

''ஆமாம்! உன்மத்தம்! உன்மத்தம்! உன்மத்தம்!'' என்று மூன்று முறை அடுக்கிவிட்டு, பாகை தரித்த அந்த யாத்திரிகனும், வியப்பில் இருக்கும் ராஜவல்லபனை நோக்கி,

''தம்பி! இப்படித் தப்பிதமாகக் கணக்குப் போட்டுவிட்டாயே! இவர்கள் ஒரு பயித்தியமான பெண்ணை அல்லவோ விலங்கு பூட்டி அழைத்துச் செல்கிறார்கள்! அப்படியிருக்க அநாவசியமாய் சந்தேகப்பட்டு விட்டாயே!'' என்று கூறினான்.

பின்னர் அவன் அந்தத் தலைவனை நோக்கி, ''உமது காரியத்தைப் பற்றி இந்தப் பிள்ளை சந்தேகம் கொண்டு விட்டான்! அதனால் நேர்ந்த விபரீதங்கள்தான் இவை! ஆகவே, அவனை சுமிருதி நியாயப்படி தண்டிக்கலாகாது!'' என்று கூறினான்.

அதை அந்தச் சேவகத் தலைவன் மறுத்துப் பேச யாத்திரிகனுக்கும், அவனுக்கும் ஒரு நீண்ட வாக்குவாதம் எழுந்தது.

முடிவில் அந்த யாத்திரிகன் ''நீர் எந்த நாட்டுக்காரர் ஐயா!'' என்று தலைவனை, நோக்கிக் கேட்க,

''ஏன்? தொண்டைமண்டலத்தான்!'' என்று இறுமாப்புடனே மறுமொழி கூறினான்.

''ஓகோ! சம்புவராயர் ஆளும் பூமியா? அதுதான் அப்படிப் பேசுகிறீர்! இருக்கட்டும். நாம் இப்போது இருப்பது எந்த நாடு, தெரியுமா?''

''கொங்கு நாடு.''

''இந்த நாட்டை ஆள்வது யார்?''

''மதுரையில் அரசு பண்ணும் ★ சுரத்தான்!''

''அதை நினைவில் வைத்துக் கொள்ளுங்கள்! நீங்கள் வேற்று நாட்டவர். நீங்கள் நிற்கும் இடமும் வேற்று நாடு! இங்கே நீங்களாக நியாயம் பண்ணி சிட்சை பண்ணினால் அது தப்பு! தப்பு! தப்பு'' என்றான் கண்டிப்பாக.

உடனே யாத்திரிகர்களுடன் வந்தவர்களும், ''அது தப்பு! தப்பு! தப்பு'' என்று கோஷ்டியாக ஒத்துப் பாடினார்கள்.

அது கேட்டத் தலைவனும் அவ்வளவு பேர் சொல்வதைப் பார்த்து அயர்ந்து போய், மவுனமாகச் சிறிது நேரம் நின்றுவிட்டுப் பிறகு, ''நல்லது நீங்கள் சொல்வதை ஏற்றுக் கொள்கிறேன்'', என்று கூறிச் சுருக்குக் கயிற்றை ஒரே வாள் வீச்சால் வெட்டிக் கீழே சாய்த்துவிட்டு, விறுவிறுப்பாய் எட்டத்தில் போய் நின்றுவிட்டான்.

அப்போது வாயிலில் யாரோ கையைக் கொட்டிக் கொண்டு வரும் சப்தம் கேட்கவே, எல்லாரும் திரும்பிப் பார்த்தார்கள்.

வந்தவன் காலதத்தன்!

அவனைப் பார்த்ததும் வல்லபன் துள்ளி எழுந்து ஓடிப் போய் அவனைச் சேர்த்து அணைத்துக்கொண்டு

★ செம்பளித்து - கூசியவாறு மூடி

★ சுரத்தான் - சுல்தான்

ஆனந்தக் கண்ணீர் உகுக்க, அநேகயுகங்களுக்குப பிறகு சந்தித்தவர்கள் போல் இருவரும் அளவளாவினார்கள்.

அப்போது தத்தல், "ஆகா! எதை விட்டாலும் என் குடையை விடுவேனா?" என்று கூறி, கூடத்து ஓரத்திலே ஒதுங்கிக் கிடந்த தாழங் குடையைப் பாய்ந்து சென்று எடுத்துக்கொண்டு, சேவகத் தலைவனைச் சிரித்தவாறே பார்த்துவிட்டுத் திரும்பினான்.

பின்னர், எல்லோரும் அமைதியைக் கடைப்பிடிப்பவர்களாய், தனித் தனிக் கூட்டங்களாய் அமர்ந்து பேசிவிட்டுப் படுக்கப் போனார்கள்.



வல்லபனும், தத்தனும் தனியாக அமர்ந்து கொள்ள, தத்தன் அவன் காதோடு காதாக, குளியல் அறையின் புகைப் போக்கியில் ஏறித்தப்பி ஓடியதையும், தூரத்திலே போய் அங்கே வழி தெரியாது திணறிக் கொண்டிருந்த யாத்திரிகனுக்கு வழி கூறியதையும் அவனிடம் சத்திரத்தில் நடந்த விஷயங்களை எல்லாம் கூறி உதவி கேட்டதையும் ஆதியோடு அந்தமாக எடுத்துக் கூறினான்.

"அப்பா, வல்லபா! இனி முன்பின் யோசியாமல் இது போன்ற இக்கட்டில் [illegible] ஆகாது. தவிர, நான் சொல்வதை [illegible] பின்பற்ற வேண்டும். நாறு எண்ணுவதற்குள் திரும்பி வந்து விடு என்றால் இப்படி என்னைத் தவிக்க வைத்து விட்டு வாராமலே இருந்துவி[illegible]" என்று கூறினான்.

பொழுது புலரும்போது, இருவரும் முன்னதாக எழுந்து, அருகிலுள்ள வாவியில் குளித்து விட்டு சுத்தமாய் உடை தரித்து நிற்க, சத்திர வாயிலிலே கூண்டு வண்டி மாடுகள் பூட்டிச் சித்தமாக இருப்பதையும், அதைச் சுற்றியும் வீரர்கள் கூடி நிற்பதையும், சத்திரத்துள்ளிருந்து அந்த [illegible] பெண்பிள்ளையும் [illegible] நடந்து வருவதையும் கண் [illegible]

"வெள்ளிச் [illegible] போது போல் இளம் பெண்ணின் [illegible] இட, அவளது குவளைக் கண்கள் [illegible] சொரிந்து வழிய, [illegible] போல் தழைந்து வர,

சிற்றிடையும், நடையும், நல் [illegible] உடையும் ஏதோ



தாளக் கட்டுக்குள் அமிழ்ந்து பரத நிருத்தியமிட்டது போல் நடந்து வந்தாள் அவள்.

அந்த அதி சௌந்தர்யமான காட்சியில் கண்ணும் மனமும், கருத்தும் பறிபோய் ஆவியெலாம் நைந்து நிற்க,

[illegible]

டாளா?'' என்று அந்தரங்கத்தில் ஒரு சிறிதான வல்லப உருவம் மண்டியிட்டு யாசிக்க,

ராஜவல்லபன் [illegible] பொருட்படுத்தா [illegible]

[illegible] தவன [illegible] நின்று விட்டான்.

அந்தப் பெண் அப்போது திடீரென்று திரும்பிப் பார்த்து அவனைக் கண்டு திடுக்கிட்டு ஒரு கணம் பிரமித்துப் போய் நின்றாள்.

அவளது ஸ்தம்பித்த விழிகளில் ஒரு கடல் அப்படியே சித்திரமாகி நின்று விட்டது.

அந்தப் பார்வையின் காந்தியில் கட்டுப்பட்டு வல்லபன் மெய்மறந்து நின்றான்.

மறுகணத்திலே அவள், தன் முகத்தைத் திருப்பி, வண்டியிலே போய் ஏறிக் கொண்டாள்.

வண்டிக்குள் அமர்ந்ததும் தன் பார்வையைத் தாழ்த்தியவாறு இருந்தாள்.

பிறகு இடதுகை இரு விரல்களால் அபிநயமாகத் தன் ஒரு கண்ணைச் சுற்றி இரு கோடுகளால் நீவி விட்டாள். பிறகு ஐவிரல்களாலும் கழுத்தைச் சுற்றியும் தடவிவிட்டாள்.பிறகு கையை மடித்து நெற்றியிலே அழுத்தி முகத்தைத் தாழ்த்திக் கொண்டாள்.

அப்போது சேவகர்களில் ஒருவன் திரைச் சீலையை எடுத்துக் கட்ட வரவே, திரும்பி மீண்டும் ஒருமுறை வல்லபனைப் பார்த்தாள்.

பிறகு அந்த அழகியின் வதனம் சந்திர கிரகணத்தில் மறைந்தாற் போல் மறைந்துவிட்டது.

சேவகத்தலைவன் அலட்சியமாக அந்த இளைஞர்கள் இருவர்களையும் பார்த்துக்கொண்டு, குதிரையை ஓட்டிச் செல்ல வண்டி புறப்பட்டது.

சத்திரத்துத் திண்ணை ஓரத்தில் நின்ற வல்லபன் அப்படியே நிற்க, ''என்னப்பா!'' என்று சொல்லி காலதத்தன் அவன் கையைப் பிடித்தான்.

''ஒன்றுமில்லை, ஒன்றுமில்லை'' என்று கண்களைக் கொட்டிக்கொண்டு வல்லபன் பிறழ்ந்தான்.

''பிறழ்கிறாயா?'' என்று கேட்டான் தத்தன்.

''இல்லை; ....அந்தப் பெண்ணின் கதியை நினைத்தேன்..... அவ்வளவுதான்.'' என்றான்.

அவனை அழைத்துக்கொண்டு திண்ணைமீது ஏறினான் தத்தன்.

''வல்லபா, உனக்குத் தெரியுமா? இளம் பெண்களின் தளிர்க்கரம் பட்டால் பிரியங்குக் கொடி பூத்து விடும். மெல்லிய பாதங்களால் உதைத்தால் அசோக மரம் பூத்து விடும். பவழ வாயில் மதுவை ஊற்றி, அடி மரத்தின் கொப்பளித்தால் பகுல மரம் புஷ்பித்து விடும். சிருங்காரக் காதல் மொழி பேசினால் மந்தாரம் மலர்ந்து விடும். சிரித்தால் சம்பகம் மலர்ந்து விடும். சுவாசித்தால் மரங்கள் மலர்ந்து விடும். பாடினால் சுரபுன்னாகம் பூத்து விடும்.'

தத்தன் கூறுவதை எல்லாம் வல்லபன் மெய்மறந்து கேட்டான்

கடைசியில், ''இதை ஏன் கூறுகிறாய்?'' என்று கேட்டான்.

தத்தனும், ''வல்லபா! இளம் அழகிகளின் நடை உடை பாவனைகளுக்கெல்லாம் இவ்வளவு மகிமை இருக்கிறது என்று கூறுகிறார்கள். ஆனால் வண்டியில் போகும் இந்தப் பெண்ணுக்கு அவர்கள் எல்லாரையும் விட மகிமை இருக்கிறது. இவள் பார்வைபட்ட மாத்திரத்திலேயே பட்டுப் போனதும் தளிர்த்து விடும். துஞ்சியதும் பிஞ்சு விடும். [illegible] ததும்பச் செய்யும் பார்வை. [illegible]

தத்தனின் அந்த விளக்கம் கேட்டபோது வல்லபனின் மனத்தில் ஆயிரம் பொழில்கள் கிண்கிணி வாய் [illegible]

அடுத்த நாழிகையில் வெய்யில் சிறிது சிறிதாக ஏறிக் கொண்டிருந்தபோது, கிழக்கு நோக்கிச் செல்லும் ராஜபாட்டையில் அந்த இளைஞர்கள் இருவரும் மௌனமாகச் சென்று கொண்டிருந்தார்கள்.

காலையில் உணவு அருந்தாததால் ஒருவாறு ஊக்கமில்லாமல் நடைபயிட்டு அவர்கள் போய்க் கொண்டிருந்தார்கள்.

வல்லபனின் மனம் மட்டும் கனத்துக் கொண்டிருந்தது.

அவன் கண்களில் அடிக்கடி அந்தக் கூண்டு வண்டியும், அதில் செல்கிற அந்த இளம் பெண்ணும் வந்து கொண்டிருந்தார்கள்.

இந்தப் பாட்டையில்தானே அவள்சென்றிருப்பாள், இதே மரங்களையும் கொடிகளையும்தானே அவள் பார்த்திருப்பாள், இதே பட்சி ஜாலங்களின் இசைகளைத் தானே அவள் கேட்டிருப்பாள், இந்தப் பாட்டையில் எவ்வளவு தூரம் போயிருப்பாளோ? இப்போது எங்கே இருப்பாளோ?

வல்லபன் மௌனமாகவே வருவதை அறிந்து கொண்ட தத்தன், ஒரு காத தூரம் போன பின், ''வல்லபா! உன் மனத்திலே ஒரு கிலேசம் இருக்கிறதே!'' என்று கூறினான்.

திடுக்கிட்ட வல்லபன், ''இல்லையே!'' என்று கூற,

''இல்லை, நீ உண்மையைச் சொல்லவில்லை. மனத்தில் ஏதோ இருந்ததால்தான் இவ்வளவு தூரம் பேசாமல் வருகிறாய்!'' என்றான்.

''இல்லை, எதுவும் இல்லை. என் மனசில் ஒரு துக்கம் இருக்கிறது. அவ்வளவுதான்.''

''என்ன துக்கமோ?''

''ஒரு ஜீவனை அதன் விருப்பத்திற்கு மாறாக இப்படிக் கடத்திப் போகிறார்களே!'' என்றான் வல்லபன்.

தத்தன் அவனைப் பார்த்துச் சிரித்தான்.

''இது போன்று நாடெங்கிலும் கடத்திப் போகிறார்களே! இது நமக்கு அதிசயமில்லையே! ஒரு ஜீவனுக்காக ஏன் இப்படி நிலை குலைய வேண்டும்?''

''இப்போதுதான் அந்தக் கொடுமையை நேரிலே பார்க்கிறேன்!'' என்று கூறினான் வல்லபன்.

பகலெல்லாம் பல காத தூரங்கள் நடந்து இரவு வந்ததும் ஒரு காட்டாற்று அருகிலே தனியாக இருந்த மண்டபம் ஒன்றில் தங்கினார்கள்.

இரவு நிச்சந்தையாக நித்திரை போய்விட்டு, காலையில் எழுந்து சலசலக்கும் காட்டாற்றில் குளித்துவிட்டு, கரையேறி ஆடைகளைப் புனையும்போது,

''வல்லபா! அதோ!'' என்று கலவரத்துடன் கூறினான் காலதத்தன்.

குதிரையில் உருவிய வாளுடன் தலைதெறிக்கும் வேகத்தில் வந்து கொண்டிருக்கும் அந்த ஆளைக் கண்டு திடுக்கிட்டான் வல்லபன்.

''ஆகா! மோசம் போனோமே!'' என்றான் காலதத்தன்.

—தொடரும்

# ஒப்பற்ற பிலிப்ஸ் ஒலித்திறன் இணைந்த நவநாகரீகமான இரு ரேடியோக்கள்




பிலிப்ஸ்ப்ரிஸ்டீஜ் மற்றும்ப்ரைடு முழுமையான டிரான்ஸிஸ்டரைஸ்டு ஸாலிட்-ஸ்டேட் மெயின்ஸ் துறையிலே வியப்பூட்டும் இருபடைப்புகள் ஆகும். இவை இரண்டிலுமே நேர்த்தியான, செயல்திறன் வாய்ந்த 2-உள்ளிணைக்கப்பட்ட ஏரியல்கள், அத்துடன் பிக்-அப் மற்றும் டேப் ரெக்கார்டர் வசதிகள் பொருத்தப்பட்டுள்ளன. பல வருட உபயோகத்திற்குப் பிறகும் இவற்றின் ஒலித்திறன் மிகவும் தெளிவானதாகவும் சக்தி வாய்ந்ததாகவும் உள்ளது.




பிலிப்ஸ் ப்ரிஸ்டீஜ் (4-பாண்டு)

ரூ. 695*

- 4-வாட்ஸின் அதிகபட்ச இசை ஒலி பரப்பு.
- ஃபாயில் பிரின்டெட் காபினட்
- SW நிலையங்களைப் பெறுவதற்கு- எலெக்ட்ரிக்கல் ஃபைன் ட்யூனிங்




பிலிப்ஸ் ப்ரைடு (3-பாண்டு)

ரூ. 495*

- டெக்ஸ்சுரைஸ்டு காபினட்
- உயர்ந்த ஒலித்திறன் வாய்ந்த ஸ்பீக்கர்

**உன்னதமானவற்றை உங்களுக்கே வழங்க விரும்புகிறோம்**

*சிபாரிசு செய்யப்பட்ட விலை, எக்ஸைஸ் வரி உள்ளிட்டது. தலவரிகள் தனி.

**பிலிப்ஸ்**

பிலிப்ஸ் இந்தியா லிமிடெட்

CASPR.435-103-Tam

**சேலம்**
கலே ரேடியோ கம்பெனி
118, முதல் அக்ரகாரம்

**ஈரோடு**
ஸ்டாண்டர்டு எலெக்டிரானிக்ஸ்
247, ப்ரப் ரோடு
பாஷா எலெக்ட்ரிகல்ஸ்
341, நேதாஜிரோடு

**கோயமுத்தூர்**
அலோஸியேடட் எலெக்டிரானிக்ஸ்
15/60, ஒப்பனக்கார தெரு
எலெக்ட்ரானிக் சர்விஸஸ்
215, டாக்டர் நஞ்சப்பா ரோடு.
என். மகாலிங்கம் & கம்பெனி
225, டாக்டர் நஞ்சப்பா ரோடு.
& மேட்டுப்பாளையம் ரோடு

**திருநெல்வேலி**
ரேடியோ ஹவுஸ்
11, சென்ட்ரல் பஸ் ஸ்டாண்ட் பில்டிங்
ஸ்டாண்டர்ட் எலெக்ட்ரிக் கம்பெனி
ஹைரோடு & 77 தெற்கு ரத வீதி

**கரூர்**
பாத்திம ரேடியோ கம்பெனி

# உங்கள் உணவிற்கு ருசியூட்டுவது எங்கள் தரமான ரோஸ்சீல் துவரம்பருப்பு

## ரோஸ்சீல் துவரம் பருப்பு




50 Kg அளவுகளில் இப்போது கிடைக்கிறது



தயாரிப்பாளர்கள்:
A.N. கோவிந்தசுவாமி கோ
9-A, தாதா முத்தையப்பன் தெரு
சென்னை-600 001.
தொலைபேசி: 30079, 24715

DHAVAN-A.N.G.-107

# மகாராஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

வாளை உருவிக் கொண்டு குதிரையில் வேகமாக வந்தவன் சத்திரத்தில் சந்தித்த அந்த யாத்திரிகன்!

அவனைக் கண்டதும் இளைஞர்கள் இருவரும் ஆச்சரிப்பட்டார்கள். பிறகு, "என்ன நடக்குமோ?" என்று சிந்தனை பண்ணித் தங்கள் பொதிகளிலிருந்து வாள்களை உறுவிக் கொண்டார்கள்.

யாத்திரிகன் சகட்டுமேனியில் குதிரையை ஓட்டி வந்தான். அருகில் நெருங்கி வரும்போது, இளைஞர்கள் இருவரும் சடக்கென இடை விட்டு விலகி நின்றார்கள். அந்த இடை வழியில் யாத்திரிகன் அப்படியே புகுந்து ஓடினான்.

ஆனால் ஓடும்போது ஒரு காரியம் செய்தான். வாளை ஒரு மின்னல் சொடுக்கில் அப்படியும் இப்படியும் சக்கரவாளமாக வீசிவிட்டு ஓடிப் போனான். ஆச்சரியம்! இளைஞர்களின் இரு வாள்களும் அவர்கள் கைகளிலிருந்து விடுபட்டு அப்பால் போய் டொணிங் என்று விழுந்து விட்டன.

பரக்கப் பரக்க அவர்கள் இருவரும் ஓடிப்போய் வாள்களை எடுத்துக் கொண்டார்கள்.

இதற்குள் யாத்திரிகன் குதிரையை மீண்டும் திருப்பிக் கொண்டு வந்து விட்டான்.

இளைஞர்கள் அருகில் வந்ததும், தொப்பென்று குதித்து, அவர்களை நோக்கிப் பாயவே, மூவருக்கும் அங்கே வாட்போர் தொடங்கி விட்டது.

தத்தனுக்கும் வல்லபனுக்கும் கோபம் மூண்டதால், தங்கள் சினத்தின் தீ வாளில் பறக்க, பல வியூகங்களில் வாளை வளைத்து அங்கும் இங்கும் சுழற்றிப் போரிட்டார்கள்.

சிறிதுநேரம் வரை அங்கே வெறும் டிண்டிணார்களே சத்தங்கள்!

முடிவில் யாத்திரிகன் 'ஹூம்' என்று ஹுங்காரமிட்டு, வாளைத் தென்னிவிட், தத்தனின் வாள் மீண்டும் கையிலிருந்து கழன்று போய்த் தூரே விழுந்தது.

பிறகு அவன் வல்லபனுடன் பம்பரம் போல் சுழன்று போரிட்டான். வல்லபன் ஜ்வாலையைப் போல வீசி அடித்துக் கொண்டு வாளை எண்ணற்ற விதங்களில் வளைத்து வீசினான். முடிவில் யாத்திரிகனுக்கும் வீம்பு அதிகமாகி விடவே அங்கு இங்கு என்று துள்ளி வல்லபனுக்கு இடம் கொடுக்காமல் சண்டையிட்டான்.

தடால் என்று ஒரு சத்தம். இமைக்கும் நேரத்தில் வல்லபன் கீழே விழுந்து விடவே, அவன் மார்பின் மீது ஒரு காலை வைத்து, வாளை ஓங்கி உயரே தூக்கினான் யாத்திரிகன்.

தூரத்தில் தத்தன் நெஞ்சு பதறி நிற்க, வல்லபன் தன் மேல் விழவிருக்கும் வாளை உற்று நோக்க,

அதே நிலையில் சிறிது நேரம் நின்றிருந்த யாத்திரிகன் சடக்கென தன் வாளைத் தூர எறிந்து விட்டுப் பகபகவெனச் சிரித்தான்.

முறுக்கு ஏறியிருந்த அந்தச் சூழ்நிலை திடீரென்று இறுக்கம் விடுபட்டுத் தளர்நதது.

தத்தன் புரியாமல் நடந்து வர, வல்லபன் மெதுவாக எழுந்து நின்று மண் உதறினான்.

"தம்பிங்களா? இவ்வளவு திறமையை வைத்துக் கொண்டு சத்திரத்தில் ஏதும் செய்யாமல் இருந்தீர்களே!" என்று சொல்லி வல்லபனின் தோளில் தட்டி, "தம்பி! நன்றாகச சண்டை போட்டாயே! இந்தத் திறமையை நீங்கள் காண்பிக்க வேண்டிய இடத்தில், காண்பிக்க வேண்டிய நேரத்தில் காட்டினால அவசியம் சுத்தவீரர்கள் ஆவீர்கள்! சத்திரத்தில் காண்பிக்காமல் சோர்நது விட்டாயே! இனி அப்படிச் செய்யாதே! ஒரு உறுமல் உறுமினால் வாளை உறுவு! ஒரு அதட்டல் அதட்டினால் ரத்தத்தைப் பறக்க அடி!" என்று சொல்லி, மீண்டும் பழையபடியே 'ஹேஹே' என்று சிரித்தான்.

இளைஞர்கள் இருவருக்கும் அவனைப் பார்ப்பதற்கே வெறுபபாக இருநதது.

தங்கள் இருவரையும் இவ்வளவு சாதாரணமாகவும், சீக்கிரமாகவும் அம்மானை ஆடி விட்டானே! அவ்வளவுக்கு இடம் கொடுத்து விட்டோமே! சண்டை முறையில் பல நுணுக்கங்களைக் கற்கவில்லையே என்று நினைத்தார்கள்.

தத்தன் முதுகிலே யாத்திரிகன் தட்டப்போக, அவன் அலட்சியத்துடனும் வெறுப்புடனும் தள்ளிப் போனான்.

சிரித்துக் கொண்டே யாத்திரிகன், "தம்பி! உனக்கு ஏன் இவ்வளவு கோபம்? உங்களைச் சோதிக்க அல்லவா வந்தேன்?" என்றான்.

"அதற்கு இதுதான் வழியா? குப்பாயம்* எல்லாம் கிழிந்து விட்டது. உத்தரியம் அழுக்காகி விட்டது. நாங்கள் இரண்டாம் முறை அல்லவா குளிக்க வேண்டும்!" என்றான் கோபமாக.

"வழிநடை என்று புறப்பட்டு விட்டால் இதை எல்லாம் பொருட் படுத்தக் கூடாது தம்பி!"

தத்தன் போய் தாழங்குடையை எடுத்துக்கொண்டு திரும்பினான். பிறகு ஆத்திரமாக,

"சோதனை என்று சொன்னீரே! எங்களை நீர் சோதனை செய்ய வேண்டிய அவசியம் என்ன?" என்று கேட்டான்.

உடன் வல்லபனும் தொடர்ந்து.

---

*குப்பாயம் - சட்டை

''ஆமாம், நீங்கள் யார் எங்களைச் சோதனை செய்ய?'' என்று கேட்டான்.

''அப்படியா கேட்கிறீர்கள்? உங்கள் இருவருக்கும் அந்தப் பெண்ணுக்கும் ஏதோ சம்பந்தம் இருப்பது போல் எனக்குத் தோன்றியது. ஆகையால் உங்களை யார் என்று சோதிக்க வந்தேன்!'' என்றான்.

''எங்களுக்கும் அந்தப் பெண்ணுக்குமா? உங்கள் அதி யூக மதிநுட்ப மூளையிலே அப்படி ஒரு அபாரமான எண்ணம் தோன்றியதே! அதை மெச்சிக் கொள்ளத்தான் வேண்டும்!'' என்றான் வல்லபன்.

''என் மூளையிலே நுட்பமானது எதுவும் தோன்றாது. ஏனெனில் நான் அதிகமாக யோசிப்பதே இல்லை. உங்களுக்கு அந்தப் பெண் ஒரு முறி எழுதியிருந்தாள். அதைப் பார்த்துத்தான்...'' என்று இழுத்தான்.

''முறியா?''



''ஆமாம்!''

''அந்தப் பெண்ணு எழுதியிருக்கிறான்?''

''ஆமாம்!''

வல்லபன், அந்தக் கணத்திலே பரபரக்க,

''வல்லபா! அவர் சொல்வதை நம்பாதே! அந்தச் சேவகத் தலைவனை விட இவர் ஒரு பெரியபசப்புக்காரர்'' என்றான் தத்தன்.

''ஹேஹ்ஹே!'' என்று சிரித்த யாத்திரிகன், ''தம்பி! இன்னும் உன் கோபம் அடங்க வில்லையோ? உனக்குச் சந்தேகம் இருந்தால் நீயே இதைப் படித்துப் பார்த்துக் கொள்!'' என்று இடுப்புக் கச்சத்தை எடுத்து, அதிலிருந்து ஒரு நறுக்கை எடுத்து அவன் முன் போட்டான்.

நறுக்கு முறையான ஓலை நறுக்காக இல்லை. ஏதோ சாதாரண ஓலைப்பெட்டியின் மெருகேற்றாத ஓலையைப் போல் கச்சித உருவம் இல்லாமல் இருந்தது.

அது கீழே உருண்டு போய் நின்று காலைத் தென்றலிலே உயிருள்ளது போல் சிலுசிலுப்புக் காட்டியது.

வல்லபனுக்கு அதை ஓடிச் சென்று எடுக்க எண்ணம்! ஆனால் தத்தனின் அனுமதி அதற்கு வேண்டும் போல் தோன்றியது.

தத்தன் இடத்தை விட்டு நகரவில்லை. பேசவும் இல்லை. தாழங்குடையைச் சக்கரம் போல் வெறுமே சுழற்றிக் கொண்டிருந்தான்.

''ஓகோ! நீங்கள் பெரும் பனுவர்கள் போல் இருக்கிறதே! நான் சொல்வதை நம்ப மாட்டீர்கள் போலத் தோன்றுகிறதே. இந்தா மற்றுமொரு அடையாளம்!'' என்று சொல்லி மீண்டும் கச்சையின் மற்றொரு பகுதியை எடுத்து அதிலிருந்து மிகக் கவனமாக எதையோ வெளியில் எடுத்தான்.

உயரே அவன் அதைத் தூக்கிக் காட்டிய போது, ஒரு மகரகண்டிகை இளம்காலை ஒளியில் மினுமினுத்தது.

இருவரும் அதை அதிசயத்தோடும் சந்தேகத்தோடும் பார்த்தார்கள்.

''தம்பிங்களா? கேளுங்கள் கதையை! நீங்கள் இருவரும் சொல்லாமல் புரியாமல் சத்திரத்தை விட்டுப் போய் விட்டீர்கள்! நானே நன்றாக விடிந்து ஒரு ஜாமத்திற்குப் பிறகுதான் புறப்பட்டேன். புறப்படுவதற்கு முன்னாலே சத்திரத்தை எல்லாம் பார்வை பண்ணினேன். முக்கியமாய் அந்தப் பெண் இருந்த அறையிலே போய்ப் பார்த்தேன். அங்கே கட்டில் கால் பக்கத்தில் ஏதோ மின்னியது! போய்ப் பார்த்தால் இந்த மகர கண்டிகை! அதனுடன் நூலில் சுற்றி ஓலை போல் ஏதோ கிடந்தது. பார்த்தால் இந்த நறுக்கு முறி! அதைப் பிரித்துப் படித்த போது அது உங்களுக்கு என்று தெரிந்தது. ஆகா! இந்த இளைஞர்களுக்கு இந்தப் பெண் தெரிந்தவள் போல் இருக்கிறதே! நறுக்கையும், கண்டிகையையும் உங்களிடம் கொடுக்க வேண்டுமே என்று நினைத்து உங்களைத் தேடி இங்கே வந்தேன். நம்பினால் நம்புங்கள்; நம்பாவிட்டால் போங்கள்! ...சரி நீங்கள் நிற்கும் நிலையைப் பார்த்தால் என்னிடம் சரியாகப் பேச மாட்டீர்கள் போல இருக்கிறது. நான் உத்தரவு பெற்றுக் கொள்கிறேன்'' என்று கைகூப்பினான்.

வல்லபனின் பார்வை அந்த நறுக்கு மேலே கிடந்தது. அதன் மீதுள்ள மந்தமான ஒளி கூட ஏதோ தகதகக்கும் ஒளிபோல் அவனுக்குத் தோன்றியது.

மெதுவாக எழுந்தான் அவன். நறுக்கின் அருகில் போய் அதை எடுத்தான். அது ஒரு எழுத்து ஓலையே அல்ல! சாதாரண கூடை முடையும் ஓலை! அதைப் பிரித்துப் பார்த்தான்! முதலில் ஒன்றுமே தெரியவில்லை? எழுத்துக்களே இல்லை. பிறகு கூர்ந்து கவனித்ததில் எழுத்துக்கள் தெளிவில்லாமல் இருப்பது தெரிந்தது. அதை எழுத்தாணி கொண்டும் எழுதவில்லை. வேறு அதிகக் கூர்மை இல்லாத எதையோ கொண்டு முறையாக எழுத முயன்றிருந்தார்கள். சிரமப்பட்டு வல்லபன் அந்த நறுக்கை வாசித்தான். அவசரத்தில் அலங்கோலமாக எழுதப்பட்டிருந்தது.

''சத்திரத்திலே தாமசம் செய்த இளைஞர்களுக்கு கண்டிகையை அடையாளம் வைத்து நான் எழுதுவது. நான் தெற்கே...''

என்ற இடத்தில் சடக்கென நின்று விட்டது.

வல்லபன் முன்னும் பின்னும் திருப்பிப்பார்த்தான். அதற்கு மேல் எதுவும் இல்லை.

அதை எடுத்துப் போய் தத்தனிடம் கொடுத்தான், தத்தனும் படித்துவிட்டு மேலும் கீழும் புரட்டினான். பிறகு மெல்லிய குரலிலே, ''இவன் பசப்புக்காரன்! இவனை நம்பக் கூடாது'' என்றான்.

''நறுக்கையும் கண்டிகையையும் பார்த்தால் பொய் என்று தோன்றவில்லையே! கண்டிகை பலநூறு கழஞ்சுகள் பெறும்'' என்றான் வல்லபன்.

பிறகு அவன் யாத்திரிகனை நோக்கி, ''ஐயா! நீர் சொல்வது, செய்வது எல்லாமே எங்களுக்குச் சந்தேகத்தைக் கொடுக்கின்றன. முதலில் சொல்லுங்கள். நீங்கள் யார்?'' என்று கேட்டான்.

''ஹே ஹே'' என்று சிரித்த யாத்திரிகன், ''நான் யார்? யார் நான்?'' என்று கனம் பாடிவிட்டு, ''தம்பி, அந்தத் தம்பியிடம் நான்தான் ஏற்கெனவே சொல்லி விட்டேனே. உனக்கும் சொல்கிறேன். நான் ஒரு கற்பூர வியாபாரி'' என்றான் அழுத்தமாக.

''வியாபாரியா?''

''ஆமாம் வியாபாரிதான்! ... ஆட்களுடன் நான் வியாபார யாத்திரையிலே ப... கிறேன். கற்பூரம் மட்டும் நான் வியாபாரம் செய்ய...வில்லை. கிராம்பு, இலவங்கப்பட்டை, ஜைப்பட்டு, சா...பத்திரி, வாசனை திரவியம் எல்லாம் வியாபாரம் செ...கிறேன். ஊரில்

# அர்த்தங்கள் ஆயிரம்

**நேதாஜி**

புதிய தொடர் கதை

20 1-78
பொங்கல் சிறப்பிதழில்

**வாழ்க்கை எத்தனையோ பேருக்கு
எத்தனையோ அர்த்தங்களைக்
கற்பித்து விடுகிறது.
ஆனால் அந்த ஓவியனின்
தூரிகையில் தோய்ந்த அந்தக்
கடைசி ஓவியம் கற்பித்த அர்த்தம்?
அது ஆத்மாவின் தரிசனம்!**

---

உள்ள தனவந்தர்கள், நாயகர்கள், குறுநிலக்காரர் கள், சிற்றரசர்கள் ஆகிய பெரும் தனிகர்களிடையே விற்றுக் கொண்டு போகிறேன். இதுதான் என்னைப் பற்றிய உண்மை! என்மீது எந்தச் சந்தேகமும் படா தீர்கள். முந்தாநாள் உன் உயிரைக் காப்பாற்றியவன் நான் தம்பி, மறந்து விடாதே!'' என்றான்.

''மறக்கவில்லை, வணிகரே!'' அதற்காக நான் என்றென்றும் கடமைப் பட்டிருக்கிறேன். ஆனால் இந்த நறுக்கையும் கண்டிகையையும் பார்த்தால்...'' என்று இழுத்தான்.

''ஒகோ! அவைகளைக் கூட நீங்கள் நம்பவில்லை யோ? நான் உங்களை ஏதோ சூழ்ச்சியில் ஆழ்த்துகி றேன் என்று பார்க்கிறீர்களோ? ஹேஹே! தம்பி! கண்டிகையைப் பார்! பசும்பொன்! உயர்ந்த பொன்! இதை நான் அவ்வளவு சுலபமாக உங்களிடம் கொடுத்துவிட்டுப் போவேனா? எனக்கு என்ன பயித்தியமா என்ன?, கண்டெடுத்தேன். உரிய இடத்தில் கொடுத்துப் போகிறேன். நம்பினால் நம்புங்கள்! நம்பா விடில் போங்கள்! நான் வருகிறேன்'' என்று கூறி, குதிரை மீது சிறிது சிரமத்தோடு ஏறி அமர்ந்து கொண்டு அதைச் செலுத்தத் தொடங்கினான்.

தத்தனும் வல்லபனும் ஒருவரை ஒருவர் பார்த் துக் கொண்டார்கள். நடப்பதெல்லாம் என்னவென்றே அவர்களுக்குப் பிடிபடவில்லை. புறப்படும் போது நல்ல சகுனம் பார்த்துத்தானே புறப்பட்டோம் என்று நினைத்தார்கள்.

யாத்திரிகன் அனாயாசமாய்க் கீழே போட்டுச் சென் றிருந்த கண்டிகை கீழே பளபளத்தது.

வல்லபன் ஏதோ நினைத்து, திடீரென்று அந்தக் கண்டிகையைப் போய் எடுத்தான். நல்ல கனமான கண்டிகை! நுணுக்கமான பொன் வேலைப் பாடுகள். கொடிகளும் மலர்களும் மீன்களும் பின்னியிருந்தன. தெய்வங்களின் உருவங்களும் காணப்பட்டன.

''இது அவளது கண்டிகையா? இல்லையா? எல்லாம் ஏமாற்றா? எதுவும் புரியவில்லையே!'' என்று நினைத்து, யோசனை பளிச்சிட்டவனாய் முகர்ந்து பார்த்தான்.

அவன் கண்கள் மலர்ந்து விட்டன. அதே மகிழம்பூ வாசனை!

''தத்தா! இதை நுகர்ந்து பார்!'' என்றான். அவனும் நுகர்ந்து பார்த்தான்.

''மகிழம்பூ வாசனை!''

''ஆமாம்! கண்டிகையைத்தான் செய்யலாமே ஒழிய அதில் மகிழம்பூ வாசனை ஏற்ற முடியாது. இது அந்தப் பெண் நெடுநாள் அணிந்திருந்ததால் ஏற்படக் கூடிய வாசனை. இது அவள் உடம்பின் வாசனைதான்'' என்றான் வல்லபன்.

உடனே அவன் திரும்பி, ''ஐயா வணிகரே?'' என்று கூவி அழைத்தான்.

அதற்குள் வணிகன் குதிரை மீது சிறிது தூரம் போயிருந்தான்.

''ஐயா, வணிகரே?''

மீண்டும் கூவி அழைத்தான்.

வணிகன் குதிரையை இழுத்துப் பிடித்தான். திரும்பிப் பார்த்தான்.

''தம்பி! கிழக்குத் திசை நோக்கித்தான் நான் வியாபார யாத்திரையில் போய்க் கொண்டிருக்கிறேன். உங்களுக்குச் சற்று முன்னால் போய்க்கொண்டிருப்பேன். விருப்பம் இருந்தால் என் கோஷ்டியில் வந்து கலந்து கொள்!'' என்று சொல்லிக் குதிரையைத் தளர்த்தி விட்டான். அது மேலே செல்ல ஆரம்பித்தது.

சிறிது நேரத்தில் கரடுகளைத் தாண்டி சமவெளியி லே வந்ததும் அந்தக் குதிரை பறக்க ஆரம்பித்தது.

அதில் ''லொங் லொங்'' என்று குலுங்கிக் கொண்டே போனான் அந்தக் கற்பூர வணிகன்.

தத்தனும் வல்லபனும் பேச்சில்லாமல் அப்படியே நின்றார்கள்.

தத்தனின் தாழங்குடை மட்டும் சுழன்று கொண்டே இருந்தது.

வல்லபனின் கையில் நறுக்கும், கண்டிகையும் அப்படியே கனத்துக் கிடந்தன.

சிறிது நேரம் அவரவர் சிந்தனைகளில் இருந்த பிறகு, ''வா! மேலெல்லாம் ஒரே வியர்வை! குளித்து விடலாம்!'' என்றான் தத்தன்.

இருவரும் சிற்றாறுப் பக்கம் மீண்டும் போனார்கள்

வல்லபனின் மனம் அதற்குள் கனத்து விட்டது.

கண்டிகையின் நீள மகர வடிவத்திலே அந்த இளம் பெண்ணின் நீண்ட நெடுங்கண் அவன் முன்னால் தெரிந்தது.

ஓலையின் வரியில்லாத எழுத்துக்களிலே அவனது இதயமே எழுதப்பட்டது போலிருந்தது.

''இளைஞர்களுக்கு என்று போட்டிருக்கிறாளே· அது எனக்குத்தானே! எனக்குத்தானே!'' என்று நினைத்தான் அவன்.

—தொடரும்.



# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

இரு இளைஞர்களும் பிறகு நீரில் இறங்கி மீண்டும் குளித்தார்கள். கரை ஏறியதும் தத்தன் அந்த மகரகண்டிகையைக் கையில் எடுத்துப் பார்த்தான். ''வல்லபா! இது நம் வசம் இருக்கட்டும். ஆனால் இதற்காக நாம் நம் வழியை விட்டுப் பிறழ வேண்டாம்'' என்று கூறினான்.

வல்லபன் மறுமொழி கூறவில்லை. அவன் ஏதோ யோசனையில் இருப்பது தெரிந்தது.

''நமக்கு இரு நாட்களில் நேர்ந்த அனுபவங்கள் யாவற்றையும் கெட்ட கனவுபோல் மறந்து விடுவோம்'' என்றான் தத்தன்.

வல்லபன் அதற்கும் மறுமொழி கூறவில்லை. ''அப்படியா சொல்கிறாய்?'' என்பது போல் ஒரு பார்வை பார்த்தான்.

''ஆமாம்! நமது லட்சியம் வேறானது. அதற்கு இடையே வந்த இந்தச் சம்பவங்களை மறந்துவிடுவோம். நாட்டில் யார் யாருக்கோ எவ்வளவோ துன்பங்கள், துயரங்கள் ஏற்படுகின்றன. அவைகள் எல்லாவற்றையும் துடைக்க முற்படுவது என்பது நம்மால் இயலாத காரியம்! கேள் வல்லபா! உன் தாயார் உன்னை இவ்வளவு தைரியமாக வெளியே அனுப்பியிருக்கிறார் என்றால் அதன் காரணம் என்ன?'' என்று கேட்டான்.

''அவருக்கு அவரது கனவு பலிக்க வேண்டும்!'' என்றான் வல்லபன்.

''ஆமாம்! அவர்கள் வாழ்க்கையிலே ஒரு குறிக்கோள் வைத்துக் கொண்டார்கள். அதற்காக அவர்கள் உன்னை அரும் பாடுபட்டு வளர்த்தார்கள். உனக்குக் கல்வி பயில்வித்ததும் அன்றி, கொங்கு தேச வீரர்களிடம் அனுப்பி மல், வில், இரண்டிலுமே உன்னைப் பழக்கினார்கள். இவ்வளவையெல்லாம் ஒரு அபலை போன்ற உன் தாயார் செய்திருக்கிறார்கள் என்றால் அதன் காரணம் என்ன? அந்த ஆறாத லட்சியம்! அழியாத கனவு! அரங்கனை எப்படியும் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். வாழ் நாளுக்குள்ளேயே அவரை அரங்கத்தில் மீண்டும் எழுந்தருள வைத்துக் கண்ணாரக் காண வேண்டும். இதுதான் அவரது அழியாத வாஞ்சை! இதற்காகத்தானே நம்மை இந்த இள வயதில் வெளியுலகிற்கு அனுப்பி வைத்திருக்கிறார்கள்! கேள் வல்லபா! இப்போது நாடு சீர்குலைந்திருக்கும் நிலையிலும் உன் தாயார் உன்னைத் தைரியமோடு புற உலகில் அனுப்பி வைக்கிறார் என்றால் அவரது லட்சியம் எப்படிப்பட்ட லட்சியமாக இருக்க வேண்டும்! அதைக் கவனித்துக் கொள்!'' என்றான்.

வல்லபன் மறு மொழி கூறவில்லை. தத்தன் கூறுவது எல்லாமே அவனுக்குச் சரியாகப் பட்டது. ஒரு கணத்தில் அவன் மனத்தில் ஒரு உத்வேகம் கொழித்தது. தத்தன் கூறியதைப் போல் இடையில் நடந்ததையெல்லாம் மறந்துவிட வேண்டுமென்று எண்ணினான்.

இருவரும் மௌனமாக நடக்கத் தொடங்கினார்கள். 'இனி நமக்கு அரங்கனைப் பற்றிய விசாரணை தான் ஒரே விசாரணை!'' என்று இருவரும் கூறிக் கொண்டார்கள்.

''சுவாமி. முப்பத்தேழு ஆண்டுகளுக்கு முன் நடந்த சமாசாரம் அது! ஸ்ரீரங்கம் என்னும் திருவரங்க க்ஷேத்திரத்தை டில்லி சுல்தானியர் சூழ்ந்து கொண்டார்கள். அவர்கள் ஆக்கிரமிப்புக்குப் பயந்து நம் அரங்கனின் உற்சவ மூர்த்தியை எடுத்துக் கொண்டு ஒரு கோஷ்டியார் தென்திசை நோக்கிப் பயணம் செய்தார்கள். அவர்கள் கேரள தேசம் வழியாகப் பயணம் செய்து கன்னட தேசத்திலுள்ள மேல் கோட்டையைப் போய் அடைந்தார்கள். அதன் பிறகு அவர்கள் எங்கு சென்றார்கள் என்பது தெரியவில்லை. அது பற்றியே தங்களை விசாரித்து விட்டுப் போக வந்தோம்'' என்று வல்லபன் தனக்கு முன்னால் அமர்ந்திருக்கும் ஒரு பெரியவரைப் பார்த்து மிக வினயத்துடன் கேட்டான்.

பெரியவருக்கு எழுபது வயது இருக்கும். தலை தும்பட்டையாய் நரைத்திருந்தது. நாசியிலும், செவியிலும் உரோமங்கள் பிறிட்டுக் கொண்டிருந்தன. கண்கள் இடுங்கி நுங்கு போல் மங்கலாகத் தெரிந்தன. பிரம்ம முடிச்சைத் தொட்டுக் கொண்டு அவர் ஏதோ ஜபித்துக் கொண்டிருந்தார். புற உலகைவிட அக உலகில் அவர் அதிகம் சஞ்சரிப்பார் போல் தோன்றியது.

வல்லபன் சொல்வதை அவர் மீண்டும் ஒருமுறை கேட்டுக் காதில் வாங்கிக் கொண்டார். அப்போது அவர் கண்களில் நீர் கசிந்து விட்டது.

''அப்பா! பிள்ளாய் அந்தத் துர்ப்பாக்கியசம்பவங்கள் எல்லாம் எனக்குத் தெரியும். ஸ்ரீரங்கம் முற்றுகை ஆவதற்கு முன் ஊரை விட்டு அப்பால் போன குடும்பங்களில் எங்கள் குடும்பமும் ஒன்று. காவிரி ஓரம்

மேற்திசையாகப் பிரயாணம் செய்து ஒரு வாரத்தில் நாங்கள் சத்தியமங்கலத்தை அடைந்து விட்டோம். வழியில் நான் என் தாயாரை இழந்துவிட்டேன். அதெல்லாம் பழைய கதை! பிறகு ஜீவனத்திற்காகக் கன்னட தேசம் எல்லாம் சுற்றிக் கடைசியில் மேல்கோட்டையில் தங்கி வெகுகாலம் நாட்களைக் கழித்துக் கொண்டிருந்தோம். அப்போது அரங்க விக்கிரகத்தை ஒரு கோஷ்டியார் மேல்கோட்டைக்குக் கொணர்ந்ததும் தெரியும். என் தந்தையார் அரங்கனைக் கண்டு அப்படியே மூர்ச்சித்து விழுந்து கிடந்ததும் தெரியும். 'தொல் கானகஞ் சுல் இராமன் சுற்றிய கதி உமக்கும் நேர்ந்ததே!' என்று அரங்கனைப் பார்த்துப் பலவாருகப் புலம்பிக் கேட்டதும் எனக்குத் தெரியும். அதற்குப் பிறகு கண்ணனூரில் நடந்த போரில் என் தந்தையார் நம் பக்கம் ஜெயிக்கும் என்று நம்பிக்கை வைத்ததும் தெரியும்! அந்தப் போர் எப்போது நடந்தது அப்பா?'' என்றார் பெரியவர் ஈனமான குரலில்.

''அது நிகழ்ந்து கிட்டத்தட்டப் பத்தொன்பது ஆண்டுகள் ஆகிவிட்டனவே!'' என்றான் வல்லபன்.

''ஆமாம், ஆமாம்!'' என்று இடுங்கிய கண்களில் சிறிதளவு தாபம் கொந்தளிக்கப் பேசினார் அவர்.

''எனக்கு அதுவும் ஞாபகம் இருக்கிறது. ஏனென்றால் என் தந்தையார் அந்தப் போரின் முடிவைப்பற்றிக் கேட்ட பிறகுதான் இறந்தார். ஒய்சள ராஜா வீர வல்லாளருக்கும் சுல்தானியருக்கும் நடந்த போர் அது. வெற்றி வல்லாளருக்கே என்று இருந்த தருவாயில் துரதிருஷ்ட வசமாக வல்லாளர் சூழ்ச்சியில் கொல்லப்பட்டு விட்டார். நம் பக்கம் சைனியம் எல்லாம் சின்னாபின்னம் அடைந்து விட்டது. அந்தப் போரின் முடிவு தெரிந்ததுதான் தாமதம், என் தந்தையாரால் உயிர் தரிக்க முடியவில்லை. 'இன்னும் உம்மால் உமது ஊருக்குப் போய்ச் சேர முடியவில்லையே! அரங்கநாதரே! உமக்கே இப்படி ஒரு கதியோ!' என்று சொல்லி அரங்கன் விக்கிரகம் முன்னால் விழுந்தவர்தான். பிறகு அவர் எழுந்திருக்கவேயில்லை. பரமபதம் அடைந்து விட்டார்'' என்றார் பெரியவர்.



''கேட்பதற்குக் கஷ்டமாயிருக்கிறது, பெரிய வரே!'' என்றான் வல்லபன்.

''ஆமாம்! என் தந்தையாருக்குப் பெரிய அதிர்ச்சி அது! போரில் நிச்சயம் வெற்றி கிடைக்கும், இனி அரங்கரைத் திருவரங்கத்திற்கு அழைத்துப் 'போக வேண்டியதுதான் என்று எல்லோரும் நினைத்தார்கள். இதற்காக அரங்கனை மேல்கோட்டையிலிருந்து சத்தியமங்கலம் வரை கூட அழைத்து வந்து விட்டார்கள். ஆனால் தோல்வியைப் பற்றிக் கேள்விப்பட்டதுமே அரங்கனை மீண்டும் பரிவாரத்தார் மேல்கோட்டைக்குத் திரும்ப அழைத்துப் போய்விட்டார்கள். அந்தத் துர்கதியைப் பார்க்க ஒண்ணாது எனது தந்தையார் இறந்துவிட்டார்'' என்றார் பெரியவர், நாத் தழுதழுக்க.

''சுவாமி! தாங்கள் யாவற்றையும் நன்றாக நினைவு வைத்துக் கூறிவிட்டீர்கள்! எங்களுக்கு இப்போது வேண்டுவது என்னவென்றால் மேல்கோட்டைக்குப் போன பிறகு அரங்கருக்கு என்ன நடந்தது என்பதுதான்!'' என்று கேட்டான் தத்தன்.

''அது தெரியாதா, உனக்கு? கண்ணனூர்ப் போரில் வெற்றி பெற்ற பின் மதுரை சுல்தானியர் எங்கும் புகுந்து நமது வழிபாட்டுத் தலங்களை எல்லாம் சூறையாட ஆரம்பித்தார்களே! மேல்கோட்டைக்கும் அவர்கள் வந்து விடுவார்கள் என்று ஒரு பயம் இருந்தது. எனவே ஊர்வலத்தில் பலர் அரங்கனைத் திருப்பதி மலைக்குக் கொண்டு போக எண்ணினார்கள்! அங்கே கொண்டு போனார்களோ, வேறு என்ன செய்தார்களோ! அது நடந்து பத்தொன்பது வருடங்களுக்கு மேல் ஆகி விட்டதே அப்பா! இப்போது அந்த அரங்கனையா தேடி வந்திருக்கிறீர்கள்?'' என்றார் பெரியவர்.

''ஆமாம் சுவாமி. அவரைத் தேடித்தான் வந்திருக்கிறோம். மேல்கோட்டையிலிருந்து திருப்பதி மலைக்கு அவர் புறப்பட்டது தெரியும். அப்பால் எங்கே போனார் என்று இதுவரை தெரியவில்லை. திருப்பதி மலைக்குப் போய்ச் சேர்ந்ததாகத் தெரியவில்லை. ஆகவே இடையில் அவருக்கு என்ன நேர்ந்திருக்கும், அவரை எங்கே கண்டு பிடிக்கலாம் என்ற உத்வேகத்துடன்தான் நாங்கள் புறப்பட்டிருக்கிறோம்'' என்றான் ராஜ வல்லபன்.

''அப்பா, பிள்ளைகாள்! உங்கள் உத்தேசம் நல்ல உத்தேசமாயிருக்கிறது! உங்களுக்கு என் ஆசீர்வாதம். என் உடம்பு அசக்தியாய்ப் போய் விட்டமையால் நான் அந்த நாளில் என் மாமனார் ஊரான இந்தச் சிற்றூருக்கு வந்து விட்டேன். என் உடம்பு மட்டும் சரியாக இருந்திருந்தால் நான் அரங்கரை விட்டிருக்க மாட்டேன்'' என்றார் அந்தப் பெரியவர்.

அவரிடம் விடை பெற்றுக் கொண்டு அந்த குக்கிராமத்திலிருந்து புறப்பட்டார்கள் அந்த இரு இளைஞர்களும்.

நான்கு நாட்களாக வெவ்வேறு சிற்றூர்களுக்குச் சென்று அரங்கனைப் பற்றி விசாரித்துக் கொண்டே போயிருந்தார்கள் அவர்கள்.

எங்கும் அரங்கனைப் பற்றி எந்தவிதச் செய்தியும் கிடைக்காது இருந்த நேரத்தில், இந்த ஊரிலே ஒரு பெரியவர் இவ்வளவு விஷயத்தைத் தெரிந்து வைத்திருப்பது அவர்களுக்கு மன ஆறுதலாக இருந்தது.

இரவு அவர்கள் அந்தக் குக்கிராமத்தில் தங்கிவிட நினைத்தார்கள். அந்த நாளில் எங்கும் சத்திரங்கள் அபரிமிதமாக இருந்தன. சத்திரம் வைப்பது, அந்த நாட்களில், தலையாய தர்மமாகக் கருதப்பட்டது. ஆகவே யாத்திரிகர்கள் நிச்சிந்தையாக அநேக இடங்களுக்குப் போய்வர முடிந்தது.

இரவில் சத்திரத்துப் பரிசாரகர் கொடுத்த உணவை அருந்திவிட்டு இருவரும் படுத்தார்கள். வல்லபனுக்குக் கண் துயிலவில்லை. மனம் பலவிதங்களில் போராடியது. அடிக்கடி அவன் முன்னால் ஒரு மீன் நீந்திச் சென்றது. அந்த மீன் சிறிது நேரத்தில் ஒரு மகர கண்டிகையாக மாறி, பிறகு அது அந்த இளம்பெண்ணாக மாறிவிட்டது. ''சத்திரத்தில் பார்த்த இளைஞரே'' என்று அவள் அவனை அழைப்பது போலிருந்தது. அவளுக்குத்தான் என்ன இனிமையான குரல்! கன்னலும் தேனும் கலந்தாற் போல் வாயெல்லாம், மனமெல்லாம் நினைத்த நினைவெல்லாம் இனித்தது.

•

திருவரங்கன் உலாவில் கடைசி அத்தியாயத்தை எழுதி முடிக்கும் போது, ஒய்சள வல்லளாரின் படைகள் சின்னாபின்னம் அடைந்ததையும், அந்

அரசர் சித்திரவதை செய்யப்பட்டுக் கொல்லப்பட்டதையும் எழுதியிருந்தேன்.

அரங்கன் பரிவாரத்தாருக்கு அதனல் பெரிய ஏமாற்றம் ஏற்பட்டதையும் அவர்கள பழையபடி சத்தியமங்கலத்திலிருந்து மேல்கோட்டைக்குத் திரும்பியதையும் கூறியிருந்தேன்.

கி.பி. 1342-ல் கண்ணனூரில் நடந்த அந்தப் போர் தமிழ் பேசும் நாடுகளின் கடைசி நம்பிக்கையாக இருந்தது. அந்த நம்பிக்கை சிதைந்து விழுந்ததும் எங்கும் ஒரு பரிதவிப்பான சூழ்நிலையே ஏற்பட்டது என்றும் எழுதியிருந்தேன். ஆனல் அப்படி ஒரு அவநம்பிக்கை எங்கும் சூழ்வதற்கு முன்னேயே மற்ருெரு இடத்தில் தமிழ் பேசும் நாடுகளுக்கு வெகு தூரத்திற்கு அப்பால், துங்கபத்திரா என்னும் புனித நதிக்கரையில் புதிய நம்பிக்கை உதயம் ஒன்று கி.பி.1336ஆம் ஆண்டிலேயே துவங்கி விட்டது. அதாவது கண்ணனூர்ப் போர் நிகழ்வதற்கு ஆறு ஆண்டுகளுக்கு முன்னமேயே மற்ருேர் இடத்தில் ஒரு புதிய உதயம் ஏற்பட்டு விட்டது.

அந்த உதயம்தான் பின்னர் விஜயநகர சாம்ராஜ்யம் என்னும் பெயருடன் சரித்திரத்தில் பிரசித்தி பெறப் போகிற மாபெரும் எழுச்சி!

இந்த சாம்ராஜ்யத்தின் ஆரம்ப காலத்தில்தான் இப்போது இருக்கிருேம் நாம்.

ஹரிஹரரும், புக்கரும் தோற்றுவித்த அந்தத் துங்கபத்திரை நதிக்கரை ராஜ்யத்தில் நம் கதை ஆரம்பிக்கும்போது புக்கராயர் என்பவர்தான் அரசராக இருந்து வருகிருர்.

இந்த ராஜ்யத்தின் தெற்கே •முள்வாய்ப் பட்டணம் என்னும் மண்டலத்தில் உள்ள ராஜப்பிரதானியின் அந்தப்புரத்திற்குள் நாம் இப்போது நுழைகிருேம்.

---

• முள்வாய்ப்பட்டணம்—இப்போதைய முல்பாகல்.

அதன் சித்திர விசித்திர உப்பரிகைகளுக்கு அப்பால் பச்சைப் பசேல் என்று விரிந்திருக்கும் பூங்காவனத்தினுள் ஓர் ஓரத்தில் சலசல என்று நீரோடைகள் ஓடிக் கொண்டிருக்கின்றன.

ஒருபுறத்தில் மயில்கள் நீண்ட தோகைகளுடன் ஒய்யாரமாக நடை பயிலுகின்றன.

இந்த உய்யாவனத்தின் ஒரு பகுதியில் ஒரு அசோக மரத்தின் கீழே ஒரு சித்திரக் கல்லின் மீது அமர்ந்து கொண்டு ஒரு முப்பது வயது மதிக்கத்தக்க அரச குலப் பெண்மணி கையில் எழுதுகோலும், ஏடும் கொண்டு எதையோ யோசித்துக் கொண்டிருக்கிருள்.

அவளது சந்திரப்பிரபை போன்ற முக மண்டலத்தில் அவ்வப்போது சிந்தனைகளுக்கு இடையே பளிச்சென்று மின்னல்கள் போல் சில கற்பனைகள் உதயமாகின்றன. அந்தப் பெண்மணி உடனே அதை ஏட்டினில் எழுதத் தொடங்கி விடுகிருள்.

இவ்வாறு வெகு நேரம் அவள் யோசிப்பதும் எழுதுவதுமாக இருக்கிருள்.

இந்த தெய்வ சோபையுள்ள பெண்மணியின் பெயர் கங்கா தேவியாகும். அதி தீவிரமாகச் சிந்தித்து வடமொழியில் கவிதை எழுதிக் கொண்டிருக்கிருள் அவள்.

வெகு நேரம் அவள் இவ்விதம் செய்து கொண்டிருக்கும் போது, அவள் அருகில் மற்ருெரு அரச குலப் பெண் புன்முறுவலுடன் வந்து நிற்கிருள்.

மெல்லிய அவளது அசைவுகளைக் கண்டதும் நிமிர்ந்து பார்க்கிருள் கங்கா தேவி.

''உங்கள் கற்பனு சக்தியைக் கலைத்து விட்டேனே, கங்கா?'' என்று சொல்லிக் கொண்டே அவள் அருகில் மெல்ல அமர்ந்தாள் அந்த ராஜகுலப் பெண்.

''இல்லை, குந்தளா! ஒரு அருமையான கற்பனைக் காட்சியை எழுதிக் கொண்டிருக்கிறேன். இதைப் பார்க்கிறீர்களா?'' என்ருள் கங்கா தேவி! —தொடரும்

---



## சுமித்ரா தப்பித்தார்

இது ஒரு சிக்கல் இல்லாத கதை மாறுபட்ட கதை. பத்திரிகையில் வெளியான, ஒரு கிராமியப் பெண்ணின் இயல்பான மன உணர்வுகளை உணர்ச்சி பூர்வமாகச் சித்திரித்த மென்மையான கதை. தமிழ்ப் படத்தின் சம்பிரதாயமான கட்டாயமான-தவிர்க்க முடியாது என்று கருதப்படும் மசாலாக்கள் இல்லை. ஆரவாரம் இல்லை. வீணை-விரசமான நகைச்சுவை இல்லை. கைகலப்பு- குத்துச்சண்டை இல்லை. இசையை மட்டும் சேர்த்திருக்கிருர்கள் ஆனல் அது இருந்தும் இல்லை.

அடக்கமான வசனம்- அளவோடு பேசுகிருர்கள்.

ஃபடாபட் பிரமாதம்- ஓர் அலுவலக அதிகாரியின் அலட்சியமும் அதிகாரப் போக்கும் அவரிடம் இயல்பாகத் தெறித்து விழுகின்றன.

சோகத்துக்கு சுமித்ரா- நல்ல வேளை, இந்தப் படத்தில் இவருக்கு க.க இல்லை. அந்த வேதனையை ஃபடாபட் ஏற்றுக் கொள்கிருர்.

விஜயகுமார் விசனகுமாராக வருகிருர்-அவருடைய இரட்டை வேடம் பிற்பகுதியில் குழப்புகிறதே!

கடைசிப் பகுதியில் சம்பவத் தொகுப்பைச் சங்கிலிக் கோவையாக இல்லாமல் சுருக்கிச் சிதைத்து விட்டார்கள்.

**நந்தா என் நிலா - பட விமரிசனம்**

# "ஆந்திர பிரபா" புயல் நிவாரண நிதி

ஆந்திர மாநிலத்தில் பெருநாசம் விளைவித்த பயங்கரப் புயலால், ஆயிரக்கணக்கான நமது சகோதரர்கள் தங்கள் குடும்பங்களையும் வீடுகளையும் தொழில்களையும் இழந்து விட்டார்கள். லட்சக்கணக்கானோருக்குப் பிழைப்புப் போய் விட்டது. அவர்களுடைய துன்பத்தைத் துடைக்கவும், நாசமானவைகளைப் பழுது பார்த்துச் செப்பனிடவும் அதிகாரத்துறை அமைப்புகளும், தனியார்துறை அமைப்புகளும் எவ்வளவு உதவி திரட்டிக் கொடுத்தாலும் வேண்டியிருக்கும்.

இந்தக் கோரப்புயலால் பாதிக்கப்பட்டவர்களுக்கு உதவ எக்ஸ்பிரஸ் குரூப்பைச் சேர்ந்த "ஆந்திர பிரபா" ஒரு நிதி துவக்கியுள்ளது. நாடெங்கும் உள்ள எமது வாசகர்கள் தங்களால் இயன்றதை அந்நிதிக்கு வழங்குமாறு வேண்டிக் கொள்கிறோம். "இந்தியன் எக்ஸ்பிரஸ்" பிரசுரமாகும் எல்லா சென்டர்களிலும் நன்கொடைகள் ஏற்கப்படும். செக்குகளும், டிராப்டுகளும் "ஆந்திர பிரபா புயல் நிவாரண நிதி" பெயருக்கு அனுப்ப வேண்டும்.

ரூ. 100-ம் அதற்கு மேலும் நன்கொடை வழங்கும் நபர்கள், ஸ்தாபனங்களின் பெயர் "இந்தியன் எக்ஸ்பிரஸி"ன் எல்லாப் பதிப்புகளிலும் பிரசுரமாகும். இந்த நிதியை துவக்க எக்ஸ்பிரஸ் குரூப் தனது நன்கொடையாக ரூ. 50,000 வழங்குகிறது.

இந்த நிதிக்கு வழங்கும் நன்கொடைகள் வருமான வரியிலிருந்து விலக்குப் பெறும்.

---

## கதிர் போஸ்ட்

சாதி, மத, இன, மொழி, பொருளாதார வேற்றுமைகளுக்கு அப்பாற்பட்டது உலகில் ஒன்று உண்டு என்றால், அது தாய்ப் பாசம் தான் என்னும் கருத்தினை மிக அழகாக நிரூபித்துக் காட்டினாள் 'பஸ்ஸில் வந்தவள்.' பாராட்டுக்குரிய கதை.

வேப்பங்களேரி — கே. ஜெகந்நாதன்

●

எளிய நடை என்னும் தண்டவாளத்தின்மீது, உணர்ச்சி என்னும் புகையைக் கக்கிக்கொண்டு வைகை எக்ஸ்பிரஸ் வேகத்தில் செல்லுகிறது கவிஞர் கண்ணதாசனின் தொடர் கதை.

ஒழுவெட்டி — சொல்லழகன்

●

'ஆட்டுக்கார அலமேலு' விமரிசனத்தில் ஸ்ரீபிரியா கொண்டை ஊசியால்தான் கடிதம் எழுதுகிறாரே தவிர, கை நகத்தால் அல்ல.

சாலவாக்கம் — சுந்தர்



மனிதாபிமானச் செயல்களின் வரிகளைக் கதிரின் முதல் பக்கத்தில் படித்தபோது கண்களில் நீர் திரையிட்டது.

போத்தனூர் — ரம்யா சுகுமாரன்

அட, அட்டையில் ஜெயசுதாவா? பார்த்துக்கொண்டே இருக்கலாம் போலிருக்கிறதே!

இராணிப்பேட்டை — ராதாமணி

●

ஒரு நல்ல சாக்குக் கிடைத்து விட்டது! இனி கற்கால நாகரிகத் தொடர்கதைக்கு வாரா வாரம் கதிரில் 'ஏ' படங்களை எதிர்பார்க்கலாம்!

சென்னை-35 — வி. பூபால் சிங்

●

"கைக்கு எட்டியும்" சிறுகதை என் கண்களையும் எட்டி, கழுத்தையும் எட்டி, நெஞ்சையும் எட்டி நெடுந்தூரம் சென்று ஆழமாகப் பதிந்துவிட்டது.

திசையன்விளை — ஆர். ஜி. பாலன்

●

பரவாயில்லையே! 'பம்பாய் ஸ்டார்' கூட கள்ளிச் சப்பாத்தியின் மகிமையைத் தெரிந்து வைத்திருக்கிறாரே!

கவிஞரின் தெள்ளு தமிழ் நடை, 'கடல் கொண்ட தென்னாடு' மூலம் பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் நிகழ்ந்ததை என்ன மாய்க் குளோசப்பில் படம் பிடித்துக் காட்டுகிறது!

விளாங்குறிச்சி — பொன். ஜெயசிங்

# 'ஒளிரும்' வெண் சலவைக்கே






## சுப்ரீம் டெட் டிடர்ஜெண்ட் சலவைக் கட்டி

தரத்தில் முன்னேற்றம் பெற்ற புதிய டெட் கட்டியே
மார்க்கெட்டில் விற்பனையாகும் சுப்ரீம் டிடர்ஜெண்ட் கட்டி.
தூய்மையாக்கும் ஆற்றலுக்கு. நுரை வளத்திற்கு. நறுமணத்
திற்கு. வேறு எந்த சலவைக் கட்டியும் இதற்கு ஈடாகாது!
பயோகித்துப் பாருங்கள். அதன் வேறுபாட்டைக்
ண்கூடாகக் காணுங்கள். ஆம் அதுதான் சுப்ரீம் டெட்
ட்டி—'ஒளிரும்' வெண்மைக்கே!

**பளிச்சிடும் வெண்மை,**
**டெட் தரும் வெண்மை**

Shilpi-DM 7A/76 Tam

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

முளிவாய் ராஜ்யத்தின் அதிபதியான கம்பணன் தலை நகரில் அப்போது இல்லை. திருநாராயண புரத்திற்குப் போயிருக்கிறார் என்று தெரிந்ததும் கிரியா சக்தி பண்டிதர் யோசனையில் ஆழ்ந்தார்.

அவர் அப்படி ஆழ்ந்திருப்பதைப் பார்த்ததும், அரசியர் இருவரும் வியாகூலப்பட்டு, ''சுவாமி! விஷயம் மிகவும் முக்கியமோ? நாராயணபுரத்திற்கு நாங்கள் ஆட்கள் அனுப்பவோ?'' என்று கேட்டார்கள்.

''வேண்டாம், வேண்டாம்!'' என்று சொன்ன பண்டிதர், ''சோமப்பர் ஊரில் இருக்கிறாரோ?'' என்று கேட்டார்.

சோமப்பர் என்பவர் கம்பணனின் மகாப் பிரதானி (மந்திரி). கல்வி கேள்விகளில் சிறந்தவர். வட மொழியில் சிறந்த புலமை பெற்றவர்.

''அவர் தமது கிராமத்திற்குப் போயிருக்கிறார்'' என்றாள் குந்தளா தேவி.

''சாளுவ மங்கு?''

''அவர் மன்னரோடு போயிருக்கிறார்.''

''மாராய நாயகர்?''

''அவர் தமது மகனுக்குப் பெண் கேட்க வெளியூர் போயிருக்கிறார்.''

''ராமய்யா?''

''அவர் குதிரை வாங்கப் போயிருக்கிறார்!''

''என்ன இது? யாருமே நகரத்தில் இல்லையா? ராஜ்யத்தை உங்களிடம் ஒப்படைத்து விட்டு எல்லோரும் அவரவர் போக்கில் போய் விட்டார்கள் போலிருக்கிறதே!'' என்றார் கிரியா சக்தி பண்டிதர்.

சாளுவ மங்குவும், மாராய நாயகரும் அந்த ராஜ்யத்தின் * தண்ட நாயகர்கள்! ராமய்யா என்பவர் அரண்மனையின் நிர்வாகஸ்தர்.

''இல்லை சுவாமி! கோபணா நகரத்தில்தான் இருக்கிறார். ஆனால் அவருக்கு என்னவோ சரியில்லை என்று நினைக்கிறோம். அவர் இங்கே வரவில்லை. அது எங்களுக்குக் கவலையை அளிக்கிறது.''

கோபணா என்பவர் ராஜ்யத்தில் * சர்வ சைனியாதிபதி.

''அப்படியா? அவரை நானே போய்ப் பார்க்கிறேன்'' என்றார் கிரியா சக்தி பண்டிதர்.

* தண்ட நாயகர் — படைத்தளபதி

* சர்வ சைனியாதிபதி - படைத்தளபதிகளுக்கு மேலானவர்

அடுத்த அரை நாழிகையில் சர்வ சைனியாதிபதி கோபணாவின் மாளிகைக்குள் கிரியா சக்தி பண்டிதர் நுழைந்து கொண்டிருந்தார்.

அவரைப் பார்த்த கோபணா, ''வரவேண்டும் வரவேண்டும்'' என்று கூறி நெடுஞ்சாண் கிடையாக விழுந்து வணங்கி, பண்டிதருக்கு ஆதனம் சமர்ப்பித்தார்.

''என்ன கோபணா? உடல் நலம் சரியில்லையா?'' என்று சொல்லி விட்டு அமர்ந்தார் பண்டிதர்.

''உடல்நிலை என்று சொல்வதற்கு இல்லை. மனம் தான் சரியில்லை'' என்றார் கோபணா.

''ஏன், என்ன விஷயம்?'' என்றார் பண்டிதர்.

''நான் இந்த ராஜரீக வாழ்க்கையைத் துறந்து விடலாம் என்று பார்க்கிறேன்'' என்றார் கோபணா.

பண்டிதர் திடுக்கிட்டு அவரைப் பார்த்தார். அப்போதுதான் கோபணாவின் மாறுதல்களை அவரால் கவனிக்க முடிந்தது. ஒரு சர்வ சைனியாபதிக்கு உண்டான அணிகளை அவர் உடம்பில் அணியவில்லை. தூய வஸ்திரங்களை மட்டும் தரித்துக் கொண்டு வேறு எந்த ஆடம்பரமும் இல்லாமல் இருந்தார். அவர் முகத்திலேயே ஒரு அதிசயமான அடக்கம் தெரிந்தது.

''கோபணா, இது என்ன? உம்மிடம் ஏன் இந்தத் திடீர் மாறுதல்?'' என்றார் பண்டிதர்.

கோபணா சிறிது நேரம் தயங்கினார்.

பிறகு பேச ஆரம்பித்தார்.

''சுவாமி! நமது ராஜ்யத்தின் தெற்கு ஓரமாக *கொள்ளைக்களம் அருகாமையிலே நான் பயணங்கள் செய்ய நேர்ந்தது. அங்கே அநேகக் கிராமங்களைப் பார்த்தேன். அவைகள் எல்லாம் * அஞ்சினான் புகலிடங்களாக இருக்கின்றன. அங்கு வாழும் மக்களைப் பார்த்தேன். அவர்கள் எல்லோரும் தமிழ் பேசும் நாடுகளிலிருந்து ஓடி வந்தவர்கள். இங்கே புகலிடமாக வந்திருக்கிறார்கள். வந்தவர்களில் சமீப காலத்தில் வந்திருப்பவர்களையும் பார்த்தேன். பல ஆண்டுகளுக்கு முன் வந்து தங்கிவிட்டவர்களையும் பார்த்தேன். இருபது வருடங்களாக இந்த மக்கள் புகலிடம் தேடி வந்துகொண்டே இருக்கிறார்கள். நிறையப்பேர் மலையாள தேசத்திற்குப் போய்விட்டார்களாம். இது அநியாயமாய் இருக்கிறது சுவாமி. இந்த ஜனங்கள் என்னைப் பார்த்ததும் கண்ணீர் வடித்தார்கள்.

* தற்காலத்திய கொள்ளேகாளம்

* அஞ்சினான் புகலிடம் - அகதிகள் முகாமிற்கு அந்நாளையப் பெயர்

'எங்கள் மாடு, மனை, நிலம், நீச்சு எல்லாம் விட்டு வந்து இங்கே பொருள் இல்லாமல் பரிதவிக்கிறோம். நீங்கள் தமிழ் ராஜ்யங்களை எப்போது ஜெயித்து எங்களை அங்கே போக வழி செய்யப்போகிறீர்கள்?' என்கிறார்கள்'' என்று முடித்தார் சைனியாதிபதி கோபணா.

பண்டிதர் முகத்தில் வருத்தம் தோன்றியது.

''நீங்கள் சொல்வது சரிதான் கோபணா. எனக்குத் தெரிந்தவரை உருத்ரோத்காரி வருஷத்தில்தான் மதுரையில் சுல்தானியர்கள் ராஜ்யம் பண்ண ஆரம்பித்தார்கள். இன்றைவரை முப்பத்தேழு ஆண்டுகள் ஆகிவிட்டன. ராஜ்யம் நெக்கு விடவில்லை. பழைய சோழ ராஜா, பாண்டிய ராஜா யாருமே சுல்தானியரை விரட்ட முடியவில்லை. பழைய பராக்கிரமசாலிகள் எல்லோரும் மறைந்து விட்டார்கள். தவிர, நம் ராஜாக்களிடையே ஒற்றுமை வேறு இல்லையே! என்ன செய்ய! இதற்காக நீங்கள் நொந்து போவதில் பயன் என்ன? ராஜரீக வாழ்க்கையைத் துறந்து விடுவதில் லாபம் என்ன?'' என்று கேட்டார் அவர்.

''இல்லை சுவாமி! எனக்கு வாழ்க்கைமீதே சஞ்சலம் தோன்றிவிட்டது. நிலையான ஒன்றைப் பிடிப்பதை விட்டு நிலையில்லாதவற்றைத் தேடிப் போகிறேனோ என்று நினைக்கிறேன். எனக்கு இப்போது சமய வாழ்க்கைதான் சரியான வழியாகத் தோன்றுகிறது. மற்ற யாவற்றையும் துறக்க விரும்புகிறேன்'' என்றார் கோபணா.

பண்டிதர் அவரை ஆழ்ந்து பார்த்தார்.

''கோபணா! நீங்கள் இப்படிச் சொல்வதற்குக் காரணம் ஏதோ ஒன்று உங்கள் வாழ்க்கையில் நடந்திருக்க வேண்டுமே! அது என்ன? அதைச் சொல்லுங்கள்!'' என்றார் பண்டிதர்.

''சுவாமி!'' என்றார் கோபணா. ''அஞ்சினான் புகலிடங்களில் புதிதாய் வந்துள்ள ஜனங்களுக்கு மான்யங்கள் வழங்கிவிட்டுத் திருநாராயணபுரம் போனேன். அந்த ஊருக்குப் போய்ப் பல வருடங்கள் ஆகிவிட்டன. அந்த ஊரின் ரம்யமான சூழ்நிலை எனக்கு எப்போதுமே பிடிக்கும். கோவிலில் தரிசனம் செய்தேன். அங்குள்ள வைணவர்கள் பலரும் தமிழ்நாடுகளில் இருந்து ஓடி வந்தவர்கள். அவர்கள் ஒன்றுகூடி என்னிடம் பல முறையீடுகள் செய்தார்கள். எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டேன். அவர்கள் எல்லோரும் போன பின் ஒரு வயோதிகர் என்னைப் பார்க்க வந்தார். எண்பது வயது இருக்கும். அவர் என்னிடம் ஒரு செய்தி சொன்னார். சுல்தானியர் தாக்கியபோது திருவரங்கத்திலிருந்து புறப்பட்ட அரங்க விக்கிரகத்துடன் அவர் கோஷ்டியாகப்பிரயாணம் செய்தவராம். பாண்டியம், கேரளம் எல்லாம் சுற்றி கன்னட தேசத்திற்கு வந்தாராம். நாராயணபுரத்திலேயே தங்கி விட்டாராம். அவர் சொன்ன இன்னொரு விஷயம் இது! நாராயணபுரத்திலிருந்து அரங்க விக்கிரகத்தை எடுத்துக்கொண்டு ஐந்து பேர் திருப்பதியை நோக்கிப் புறப்பட்டார்களாம். அவர்கள் போய்ப் பதினெட்டு ஆண்டுகள் ஆகிவிட்டனவாம். ஆனால் அரங்கன் திருப்பதியைப் போய்ச் சேர்ந்ததாக இதுவரை தெரியவில்லையாம். அரங்கனுக்கு என்ன நேர்ந்தது என்பதைப் பற்றி அவருக்குக் கவலையாக இருக்கிறதாம். 'நீங்கள் ராஜகாரியக்காரர் ஆயிற்றே. அரங்கனைத் தேடிக் கண்டுபிடிக்க ஏற்பாடு செய்யக் கூடாதோ? அவரைக் கண்டுபிடித்து அவருக்குப் பூஜைகள் நடக்க ஏற்பாடு செய்தால் நாட்டில் சுபிட்சம் பெருகும். பிற்காலத்திலே தமிழ் பூமியில் நல்ல காலம் பிறந்து நம்மவர்கள் ராஜாவாக வந்தால் அரங்கனைப் பழையபடி திருவரங்கத்தில் சேர்த்து விடலாமே! இதனால் உங்களுக்கெல்லாம் புண்ணியம் பெருகுமே!' என்று கூறினார். எனக்கு அவர் நம்பிக்கையைப் பார்த்தால் சிரிப்புத்தான் வந்தது!'' என்றார் கோபணா.

''சிரிப்பு வரக்கூடிய சந்தர்ப்பம் இல்லையே அது! சிரிப்பு வரக் கூடாதே!'' என்றார் பண்டிதர்.

''வரக் கூடாததுதான் சுவாமி! ஆனால் வந்தது. அதற்குக் காரணம் இருந்தது. அரங்கன் திருவரங்கத்தைவிட்டுப் புறப்பட்டு எத்தனை ஆண்டுகள் ஆகிவிட்டன! கிட்டத்தட்ட நாற்பதாண்டுகள் ஓடியிருக்குமே! அவரை இப்போது எங்கே போய்த் தேடுவது? ஒரு உலோக விக்கிரகத்துக்காக யாராவது நாடெல்லாம் போய்த் தேடுவார்களோ? அது நடக்கக்கூடிய காரியமா? அதுவும் என்னிடம் வந்து முறையிடுகிறாரே! எனக்கு இருக்கும் ராஜரீக வேலையிலே, விக்கிரகத்தைத் தேடி அலைய முடியுமா? அல்லது சேவகர்களைத்தான் அனுப்ப முடியுமா? இதையெல்லாம் நினைத்துத்தான் அந்தப் பெரியவரைப் பார்த்து உள்ளூரச் சிரித்தேன். அதன் பயனை அன்று இரவே அனுபவித்தேன்'' என்றார் கோபணா.

''ஏன்? என்ன நடந்தது?''

''இரவில் பின்ஜாம வேளையில் ஒரு விஷ ஜந்து என்னைத் தீண்டி விட்டது. பெரிய ராஜதேள்.''

''அடாடா! வலி கொடுமையாக இருக்குமே!''

''ஆமாம், துடித்துப் போனேன். வலி தாங்காமல் உடம்பு ஆடியது. அந்த ஜாமத்திலும் என் ஆட்களை எழுப்பினேன். அவர்கள் வைத்தியரைத் தேடி ஓடினார்கள்.

அக்கம் பக்கத்தில் விசாரித்து வைத்தியரைக் கண்டு பிடிப்பதற்குள் என் பாடு உன் பாடு ஆகிவிட்டது. வைத்தியர் வந்தார். சூரணத்தைக் குழைத்துப் போட்டார். கேட்கவில்லை. பச்சிலை பறித்துச் சாறு பிழிய வேண்டுமென்றார். பச்சிலையைத் தேடிப் போனார்கள். அந்த இலை ஒரு அபூர்வ இலையாம். கையில் தீவர்த்தி எரிய, பக்கத்து மலைச் சாரலில் அந்த இரவு வேளையிலே தேடிப் போனார்கள். இலேசில் கிடைத்தால்தானே! புதரையும் பதுக்கலையும் ஊடுருவித் தேடி இரவிலேயே அதைக் கண்டு பிடித்தார்கள். சாறுபிழிந்து கையில் பரப்



பினார்கள். ஒரு நாழிகையில் வலி பட்டென்று விட்டு விட்டது'' என்றார் கோபனார்.

''இந்தக் கதையை ஏன் சொல்கிறீர்கள்?'' என்றார் பண்டிதர்.

''சொல்கிறேன் சுவாமி! மறுநாள் காலை. நான் புறப்படும் நேரம். ஆயத்தப்படும்போது அந்த வயோதிக வைணவர் மீண்டும் வந்தார். 'போன நாள் ராத்திரியிலே தேவரீரை ஏதோ தீண்டிவிட்டது என்று கேள்விப் பட்டேன். ரொம்ப வருத்தம்' என்றார். 'ஆமாம், சுவாமி! ஒரே வலி!' என்றேன். உடனே அவர், 'சேனாதிபதி அவர்களே! தேவரீரைத் தீண்டியது போல் நாட்டையே ஏதோ தீண்டி விட்டது என்று நினையுங்கள். மூலிகையைத் தேடி அலைந்ததுபோல் அரங்கனைத் தேடிக்



கண்டு பிடியுங்கள்' என்று கூறி அதிகம் நிற்காமலே விடை பெற்றுப் போய்விட்டார். அவர் போனதும் பித்துப் பிடித்தது போல் இருந்தேன். ஏனெனில் அவர் வார்த்தையே என்னைக் கொட்டி விட்டது போல் தோன்றியது. ஆமாம். தமிழ் பேசும் நாட்டை விஷ ஜந்து தீண்டி விட்டது. அஞ்சினான் புகலிடத்தில் கண்ணீர் பெருக நின்ற மக்களின் துயரந்தான் அந்தக் கொட்டலினால் ஏற்பட்ட வலி! என்ன உருவகத்துடன் கூறி விட்டார் அவர்!''

பண்டிதருக்கு அவர் சொல்வது அதிசயம் தருவது போலிருந்தது.

''உருவகம் சொன்னது மட்டுமல்ல! பரிகாரமும் கூறிவிட்டார். பரிகாரம் அந்தஅரங்கன் விக்கிரகந்தான். அந்த விக்கிரகம் ஒரு தெய்வ மூலிகை! அதைத் தேடிக் கொணர்ந்தால் ஜனங்களின் துயரத்தைத் துடைத்து எடுக்கலாம். அவர்களது கஷ்டங்களைப் போக்கிவிடலாம் ஒரு சேனாதிபதியின் வலியைப் போக்குவதற்காக இரவில் தீவர்த்தியோடு காடுகளில் மூலிகையைத் தேடும் போது, ஒரு நாட்டின் வலியைப் போக்குவதற்கு, அதன் நம்பிக்கையின் சின்னமான அரங்க விக்கிரகத்தைத் தேடுவது சாலப் பொருத்தமாகும் என்று நினைத்தேன். அவரவர் மனங்களில் புகுந்து பார்த்தால்தான் அவரவர் ஆசை சரியானது என்று புலனாகும். அந்த வயோதிகரின் அவாவை மதியாமல் மன்றத்தில் சிரித்து விட்டேனே என்று வருத்தப்பட்டேன். மனத்தில் அதை நினைத்து வெகுவாக வருத்தப்பட்டேன்!''

''சரி, இந்தச் சம்பவம்தான் உங்களை மாற்றிவிட்டதா?'' என்று கேட்டார் பண்டிதர்.

''இது ஒரு தொடக்கம், சுவாமி. மேலே இன்னும் செய்தி இருக்கிறது. அந்த வயோதிகர் போன பிறகு நான் சிந்தித்து அமர்ந்து விட்டேன். என் பிரயாணத்தை நிறுத்தினேன். அன்று முழுவதும் அங்கேயே தங்குவதாக உத்தேசித்தேன். அது நல்லதாகப் போயிற்று. அன்று மாலையில் அருகில் மலை மேலே தவ நிலையிலே இருந்த வைணவ ஆசிரியரான வேதாந்த தேசிகர் ஊருக்கு வருவதாகக் கேள்விப்பட்டேன். தேசிகரைப் பற்றி எவ்வளவோ கேள்விப் பட்டிருக்கிறேன். அவர் ஒரு கல்விக் கடல். தர்க்கத்தில் சிம்மம். கவி எழுதுவதில் பேராற்றல்காரர். எல்லாவற்றையும் விட அவர் ஒரு மாபெரும் பக்தர்.''

''வித்யாரண்யர் அவரைப் பற்றி என்னிடம் நிறையக் கூறியிருக்கிறார்.'' என்றார் பண்டிதர்.

''அந்த மகானைப் போய்ப் பார்க்க விரும்பினேன். போனேன். சிறு குடிலில் இருந்தார். வயது தொண்ணூறு இருக்கும். மெலிந்த திருமேனி. திருக்கண்களில் பக்திப் பிரகாசம். தெய்வம் போல் எனக்குத் தோன்றினார். அவர் பாதங்களில் விழுந்து விட்டேன். கண்களில் நீர் ஆறாக ஓடியது. இதுவரை எனக்கு அத்தகைய உணர்ச்சி ஏற்பட்டதில்லை. உடம்பு நடுங்க, உள்ளம் ஆர்ப்பரிக்க கை கட்டி வாய் பொத்தி நின்றேன். அவர் என்னைச் சில நேரம் குளிரப் பார்த்துக் கொண்டிருந்தார். பிறகு குனிந்துகொண்டு, 'உனக்குக் கனிந்து விட்டது' என்று கூறினார். நான் ஏதும் தெரியாமல் விழித்தேன். 'நான் சொல்வதைச் சொல்!' என்று கூறி அஷ்டாக்ஷர மந்திரத்தை எனக்கு உபதேசித்தார். அதைச் சொல்லி முடித்ததும் உணர்ச்சிப் பெருக்கால் விழுந்து விட்டேன். அவர் தமது திருக்கையால் என்னை முடிபிடித்து எழுப்பினார். 'பிள்ளாய் எல்லாம் சரியாகும்!' என்றார். நான் பக்தியோடு அவரை வணங்கிவிட்டு வெளியே வந்தேன். அப்போதே என் மனதில் பெரிய மாறுதல் விழுந்து விட்டது. அதன் தொடர்ந்த வளர்ச்சிதான் இப்போது என்னை இந்த மனப்பான்மைக்கு ஆளாக்கி விட்டிருக்கிறது சுவாமி! எனக்கு பதவி வேண்டாம், அதிகாரம் வேண்டாம். நான் ஒரு தூய வைணவன் ஆகப் போகிறேன்'' என்று ஆவேசத்துடன் கூறினார் கோபணா.

—தொடரும்

45

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

**வி**ஜயநகர நாட்டின் ஒரு அங்கமான முள்வாய் ராஜ்யத்திலே சர்வ சைனியாதிபதியாக விளங்கியவர் கோபணு. ஆற்றலும் மதிநுட்பமும் மிகுந்தவர். கல்வி கேள்விகளில் சிறந்தவர். வடமொழியை நன்கு கற்றுத் தேறியவர். அவர் அந்தண குலத்தைச் சேர்ந்தவர். தத்துவம், வேதாந்தம், தர்க்கம், மீமாம்சம், புராணம் யாவும் கற்றறிந்தவர். இப்படிப்பட்டவர் போர் முறைகளைக் கற்று, சைனியாதிபதி ஆகவேண்டுமானல் அந்த நாட்களில் தோன்றியிருந்த சூழ்நிலைகள்தான் காரணம்!

வடக்கிலிருந்து துருக்கியர்களின் படைகள் அடுக்கடுக்காக வந்து ஒரு சமுதாயத்தின் சமய நம்பிக்கைக்கும், நெறிகளுக்குமே அபாயம் விளைவிக்க முனைந்தபோது, சமூகத்திலுள்ள எல்லா வகுப்பினருமே சேர்ந்து ஒரு பலம் பொருந்திய பொதுவான எதிரியை எதிர்க்க நேர்ந்தது. இதில் அந்நாளில் எல்லோருமே, சமய வேறுபாடின்றி கலந்து கொள்ள அவசியம் ஏற்பட்டது.

இது காரணம் பற்றியே அந்தணர் பலரும் தம் தத்துவ வேதாந்தங்களை எல்லாம் கட்டி வைத்து விட்டு போர்த் தொழிலைக் கற்பதற்கு முனைந்தார்கள்.

இப்படி முனைந்தவர்களில் பலர் போர்முனைகளில் பெரும் வெற்றிகளைப் பெற்றுப் படை அதிபதிகளாகவும் சர்வ சைனியாதிபதிகளாகவும் மாறினுர்கள்.

அவ்வாறு ஆனவர்களில் ஒருவர்தான் கோபணு.

விஜயநகர அரசர் புக்கராயருக்காகப் பல போர்கள் செய்து வெற்றி மாலை சூடியவர். இப்போது தெற்கே கம்பணனுக்கு (புக்கரின் மகன்) உதவியாக வந்து அவருடைய சேனைகளுக்கு அதிபதியாக இருந்து வந்தார்.

இத்தகைய ஆற்றலும், வலிமையும் மிக்க கோபணு இன்று, ''ராஜரீக வாழ்க்கையைத் துறந்துவிட விரும்புகிறேன்'' என்று சொன்னபோது கிரியா சக்திப் பண்டிதர் திடுக்கிட்டார்.

ஒரு அதிர்ச்சி தரும் செய்தியை அவர், கோபணுவிடமிருந்து எதிர்பார்க்கவில்லை.

''கோபணு!'' என்ருர் பண்டிதர் மெதுவாக. அவர் குரல் தழதழத்திருந்தது. ''நீங்கள் சொல்வது எனக்கு அதிர்ச்சியைத் தருகிறது. தங்களைப் போன்றவர்களின் பேராற்றலால்தான் இன்று இந்த விஜயநகர நாடு சிறிது சிறிதாக வளர்ந்து வந்திருக்கிறது. இந்த வளர்ச்சியால்தான் ஜனங்கள் தங்கள் சமய நெறிகளைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்திருக்கிறது. தங்கள் நம்பிக்கைகளையும் பழக்க வழக்கங்களையும் காப்பாற்றிக் கொள்ள முடிந்திருக்கிறது. இந்த நாட்டை ஒரு பெரிய சாம்ராஜ்யமாக மாற்றி, டில்லி அரசுக்கு நிகரான ஒரு ஆட்சியைத் தென்னுடுகள் முழுவதிலும் ஏற்படுத்த லட்சியம் கொண்டுள்ளார் நம் மன்னர்.✳ இந்த நிலையில் பாருங்கள். நமது ஆபத்துகள் இன்னும் பூரணமாகத் தீர்ந்தபாடில்லை. வடக்கே டில்லி சுல்தானியர்களின் பலம் குறைந்து விட்டது என்று நினைக்கும் போது நம் நாட்டிற்கு அடுத்தாற் போல் வட பகுதியில் உள்ள குல்பர்க்காவில் பாமினி வமிசத்தினரான துருக்கியர்கள் ஒரு புதிய ராஜ்யத்தைத் தோற்றுவித்துள்ளார்கள். அவர்களால் நமக்கு எந்தக் கணமும் ஆபத்து என்று தாங்கள் உணர்ந்தில்லையா?'' என்று நிறுத்தினுர் பண்டிதர்.

''அதை நான் உணர்ந்திருக்கிறேன். சுவாமி!'' என்ருர் கோபணு.

''தெற்கே பாருங்கள். மதுரையில் ஒரு சுல்தானிய அரசு அப்படியே நீடித்து வருகிறது. அதை நாம் இன்னும் ஜயிக்க முடியவில்லை. அந்த நாட்டின்மீது படையெடுக்கக் கூடப் பயப்படுகிருேம். ஏனெனில், அப்படிச் செய்தால் அந்த சுல்தானியரும், பாமினிக்காரர்களும் தங்கள் சமய இணக்கத்தால் ஒன்று சேர்ந்து இடை நாடாகிய நம் நாட்டை நசுக்கி விடுவார்களோ என்று பயப்படுகிருேம்.''

''இந்தப் பயம் பல வருடங்களாக நம்மிடையே இருந்து வருகிறது, சுவாமி!'' என்ருர் கோபணு.

''ஆமாம்! இந்த இரு துருக்கிய ராஜ்யங்களுக்கும் இடையே ஒருத்தர் மீது ஒருத்தர்க்கு உள்ள பொருமை உணர்ச்சியை அப்படியே நீடிக்கச் செய்வதன் மூலம் தான் நாம் நம்நாட்டைநிலையாகக்காப்பாற்றிக்கொள்ள முடியும். இதை விட்டு ஏதாவது செய்யப்போய், இந்த இரு துருக்கிய அரசுகளும் ஒன்று சேர்ந்து விட்டால் நம்மால் எதிர்க்க முடியாது. அழிந்து போவோம்'' என்ருர் பண்டிதர்.

''ஆமாம். சுவாமி! அப்படி ஒரு இக்கட்டான நிலையில் நாம் இருப்பதையும் நான் உணர்கிறேன்'' என்ருர் கோபணு.

---

✳ இந்தக் கதை நடக்கும்போது விஜயநகர மன்னர்கள் தங்களை மன்னர்கள் என்று அழைத்துக் கொள்வதில்லை. மண்டலேசுவரர்கள் என்றே அழைத்துக் கொண்டனர். தங்கள் ராஜ்யம் பெரிதாக இல்லை என்பதனுல் ஏற்பட்ட அடக்கமே இதற்குக் காரணம்.

''இதனால்தான் சொல்கிறேன். தமிழ் பேசும் நாடுகள் கஷ்டப்படுகின்றன என்ற காரணத்திற்காக நாம் உடனே ஏதும் செய்துவிட முடியாது. தருணம் பார்த்துக் காரியங்களைச் சாதிக்க வேண்டும். அந்தத் தருணம் வரும் வரை நீங்களும் பொறுக்க வேண்டியதுதான். உங்கள் அரங்கநாதரும் பொறுக்க வேண்டியதுதான்!'' என்றார் பண்டிதர்.

பிறகு அவர் நாட்டு நடப்புகளை மேலும் விவரமாக எடுத்து உரைத்தார். கோபணு தம் கடமையிலிருந்து வழுவிச் செல்லக் கூடாது என்று கேட்டுக் கொண்டார்.

அவர் கூறுவதை எல்லாம் கேட்ட கோபணு தீவிரமான யோசனையில் ஆழ்ந்தார். வெகுநேரம் பேசவில்லை. அவர் அப்படி யோசிப்பதுதான் நல்லது என்று நினைத்த பண்டிதர், ''நல்லது! நானே உங்களை மீண்டும் சந்திக்க வருகிறேன். நீங்கள் யோசியுங்கள்'' என்று கூறிவிட்டு விடை பெற்றுச் சென்றார்.

விடாத மழைக்கும் தூறல்களுக்கும் இடையே அந்த இளைஞர்கள் இருவரும் கிழக்குமுகமாகப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள். சாலைகள் யாவும் சகதிப் பாங்காக இருந்தன. பார்க்கும் பிரதேசம் எல்லாம் நீர் நிறைந்து ஒரே தண்ணீர் தளங்களாகக் காட்சி அளித்தன.

அவ்வப்போது சிறு குடிசைகளில் ஒதுங்கியும், பாழடைந்த மண்டபங்களில் படுத்துக் கொண்டும் அந்த இரு இளைஞர்களும் பிரயாணம் செய்து கொண்டிருந்தார்கள்.

போகும் வழியில் எந்த ஊர் தென்பட்டாலும் அங்கு நுழைந்து வயோதிகர் யாராவது தென்பட்டால் அவரிடம் சென்று அரங்கனைப் பற்றி வினவினார்கள்.

அனேகமாக எல்லா இடங்களிலும் அவர்களுக்கு, 'எனக்கு தெரியாது' என்ற மறுமொழியே கிடைத்தது. தெரிந்ததாகச் சொன்ன ஓரிருவர் ஹேஷ்யமாக ஏதோ கூறினார்களே தவிர, உபயோகமானதாய் ஏதும் சொல்லவில்லை.

அரங்கனைப் பற்றியும், பொதுவான இதர விஷயங்களைப் பற்றியும் இரு இளைஞர்களும் வழி நடையில் பேசிக் கொண்டே போனாலும், இடையிடையே அவர்கள் மீது ஒரு மௌனம் வீழ்ந்து கொண்டிருந்தது.

அப்படிப்பட்ட நேரங்களில் ராஜ வல்லபனின் இளம் மனம் மெள்ள மெள்ள வானவீதியில் பறந்து கொண்டிருந்தது.

வன, வனாந்திரங்களை எல்லாம் கடந்து அது, எங்கேயோ ஒரு பாட்டையிலே சலங் சலங் என்று குலுங்கிச் சென்று கொண்டிருக்கும் ஒரு கூண்டு வண்டியைக் கற்பனை செய்து கொண்டிருந்தது.

அந்த வண்டியின் பின்முகப்பில் இருக்கும் அந்த இளம் பெண்ணின் சிருங்கார மிகு புன்னகை மெள்ள மெள்ளப் பிரயாணம் செய்து, வெகு தூரத்திற்கு அப்பால் இருக்கும் அவனை வந்து மிருதுவாய் அணைந்து கொண்டது.

அவனது அந்த அழகான கற்பனையில் அவனை அப்படியே குளிர நீராட்டி விட்டுச் சென்றது.

அவனை நினைக்கும் போதெல்லாம் அவனது கை அவனை அறியாமல் பைக்குள் கிடக்கும் அந்த மகர கண்டிகையை நெருடிக் கொண்டிருந்தது.

மகர விழியாள் என்று அவன் மானசீகமாக அவளுக்குப் பெயர் கொடுத்திருந்தான்.

''மகர விழியாளே! நீ எங்கே எவ்வளவு கஷ்டப்படுகிறாயோ? துயர்ப் படுகிறாயோ? அந்தக் கிராதகர்கள் உன்னை எவ்வளவு வாட்டுகிறார்களோ!'' என்று பொருமலாக [illegible] கொண்டான்.

[illegible] ஒதுங்கும் போது, ''மகர [illegible] இந்த பூந்தூறல் விழுகிறதோ? உன் [illegible] மேனி அதனால் துவள்கிறதோ, நைகிறதோ, வாடு

கிறதோ? உன்னை அவர்கள் பத்திரமாகக் காப்பாற்றுகிறார்களோ?'' என்று கூறிக் கொண்டான்.

சமயங்களில் அவள் கஷ்டப்படுவது போல் கற்பனை பண்ணிக் கொண்டு, அதையே மனத்துள் நினைத்து உருகி உணர்ச்சிப் பெருக்கால் இரகசியமாகக் கண்ணீர் விட்டான்.

அவனுக்கு அவளை ஒரு ராஜகுமாரியாகக் கற்பனை செய்வதிலேயே மனம் சென்றது. அவ்வளவு ரூபலாவண்ய முள்ளவள் சாதாரணப் பெண்ணாக இருக்கமாட்டாள். காலதத்தனும் அவளிடம் ராஜ வம்சத்திற்குரிய லட்சணங்கள் எல்லாம் அமைந்துள்ளன என்று கூறியுள்ளான். எனவே அவனது மனம் அந்தப் பெண்ணை மாட மாளிகையின் சித்திரக் கூடத்திலே வைத்து, தாதியர்கள் ஆலவட்டம் வீச, தோழியர் யாழ்களை வாசிக்க ஆடலழகிகள் வரிசையாய் நின்று ஆட, அந்த அரச போகமான அலங்காரச் சூழ்நிலையிலேதான் அந்த இளம் பெண் வசித்துக்கொண்டு இன்பம் துய்ப்பதாகக் கற்பனை செய்து கொண்டான்.

''அப்படிப்பட்ட நீயா இப்போது துன்பப்படுகிறாய்?'' என்று அவனே அவளுக்கு அனுதாபப்பட்டுக் கொண்டு உணர்ச்சி மிகுதியினால் கண்ணீர் உகுத்தான்.

இது போன்ற பிரமைகள் ராஜ வல்லபனிடம் அதிகமாகிக் கொண்டு வர, நண்பனுக்குத் தெரியாமல் ஒரு நேரத்தில் சிரிக்கவும் ஒரு நேரத்தில் கண்ணீர் சிந்துவதுமாக இருந்தான்.

''கடவுளே! எந்த விதத்திலாவது, எப்படியாவது நாங்கள் அவள் இருக்குமிடத்தை அடைந்து விடும்படி அருள் செய்வாயா?'' என்று கெஞ்சிப் பிரார்த்தித்துக் கொண்டும் இருந்தான்.

ஒரு நாள் பகலிலே நல்ல மழை பெய்ய இளைஞர்கள் இருவரும் பூங்குளத்துநல்லூர் என்னும் ஒரு பேருரை அடைந்தார்கள்.

அங்கே ஒரு சத்திரத்தைக் கண்டுபிடித்து, ஈரம் களைந்து, சிரமப் பரிகாரம் செய்து கொண்டு, மழை அடங்கும் வேளையிலே, சத்திரமணியக்காரரைக் கண்டு,

''ஐயா! இந்த ஊரிலே ஏதாவது விசேஷம் உண்டோ?'' என்று கேட்டார்கள்.

அதற்கு மணியக்காரர், ''இந்த ஊரில் எந்த விசேஷமும் நடப்பதில்லை. எல்லாம் மறைந்து போய் இருபது ஆண்டுகள் ஆகிவிட்டன'' என்று கூறினார்.

உடனே தத்தன், ''சமீபத்திலே இந்த ஊருக்கு யாரேனும் வந்தார்களோ?'' என்று கேட்டான்.

மணியக்காரனும் கொட்டாவி விட்டு ஒருகையால் முகவாயை மழுப்பிவிட்டு, ''ஆட்கள் வருவதே குறைந்து விட்டதே! இந்தச் சத்திரம் நித்தினவல்லி என்பவளின் உபயம்! தினம் ராத்திரியும் பகலும் இருபது பேருக்கு உணவு போட வேண்டும் என்று மான்யம். சோறு வடிக்கிறோமே ஒழிய, யாத்திரிகர்களைக் காணவில்லை. கடைசியாய் ஒரு வீரர் படை வந்து போயிற்று. ஏழெட்டுப் பேர் வந்து உணவு அருந்தினார்கள். சமீபத்திலே நிறையப்பேர் உணவு அருந்தியது அதுதான்!'' என்றார்.

''யார் அந்த வீரர்கள்?'' என்றான் வல்லபன் துள்ளிக் கொண்டு.

''சம்புவராயர் ஆட்களாக இருக்கலாம். இரண்டு பெண்களோடு வந்தார்கள்'' என்றார் மணியக்காரர்.

''அப்படியா? இங்கே அவர்கள் தங்கிய போது ஏதாவது நடந்ததா? நீங்கள் அவர்களிடம் ஏதாவது பேசினீர்களா?'' என்று கேட்டான் வல்லபன்.

''அதிகம் பேசவில்லை. அவர்களும் பேச்சுக் கொடுக்கவில்லை. ஒரு பெண்ணுக்கு உடம்பு சரியில்லாமல் இருந்தது. வைத்தியம் செய்ய வேண்டும் என்றார்கள். எங்கே போனார்களோ, என்ன செய்தார்களோ! சத்திரத்தை விட்டு ஒருநாள் காலையில் போய்விட்டார்கள்!'' என்றார் மணியக்காரர்.

வல்லபன் மனம் அந்தச் சேதி கேட்டு வெகுவாகப் பொங்கிப் பின்னர் அமிழ்ந்தது.

''மகரவிழியாய்! உனக்கு உடல் நிலை சரி இல்லையா? உனக்கு ஜுரம் வந்ததோ? கொடிய நோய் வந்ததோ? நீ அதில் துவண்டு போயிருப்பாயே! இப்போது நீ எப்படி இருக்கிறாய்? எனக்கு எதுவும் ஓடவில்லையே!'' என்று அவன் மனம் பலவிதமாய்ப் புலம்பியது.

பிறகு அவர்கள் ஊரில் வயோதிக வைணவர்கள் யாராவது இருக்கிறார்களோ என்று விசாரித்து ஒரே ஒருத்தர் இருக்கிறார் என்று தெரிந்து அவரது இருப்பிடத்தைத் தேடிக் கொண்டு புறப்பட்டார்கள்.

வீதியிலே சகதிகளைத் தாண்டித் தாண்டிச் சென்று வைணவரின் கிருகத்தைப் போய் அடைய, வாசலில் குட்டையாக நீர் தேங்கி இருக்கவே, இருவரும் அதில் மெதுவாகக் கால் வைத்து நடந்து சென்றார்கள்.

வல்லபன் அதி லாகவமாய் முன்னே சென்று வீட்டின் முகப்பிலே ஏற, பின்னே வந்த தத்தன் எங்கேயோ இசைவுப் பிசகாய்க் கால் வைத்துத் திடீரென்று கீழே வழுக்கி விழ,

தடால் என்று எங்கும் கலங்கிய நீர் தெறித்து விட்டது.

அப்போது, அங்கே கிளுக்கென்று ஒரு மதுரமான குரல் கேட்டது.

திரும்பிப் பார்த்தால் வைணவர் வீட்டு முகப்பில் ஒரு இளமையான பெண் முல்லைச்சரம் போல் பற்களைக் காட்டிச் சிரித்து விட்டு, மறுகணமே அது தவறுபோல் உணர்ந்து சிரிப்பை அடக்கி, விரால் போல் துள்ளி அந்த நீரில் கால் வைத்து, கீழே எழ முயற்சி செய்து கொண்டிருந்த காலதத்தனுக்குத் தன் தளிரான கையை நீட்டிக் கொடுத்தாள்.

—தொடரும்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்



பதினாறு பிராயமுள்ள அந்த இளம் பெண் விரால் போல் தன் கணுக்கால்களைத் துள்ள விட்டு, தண்ணீரில் வட்ட வடிவமான தாமரை அலைகளை எழுப்பியவாறு கண நேரத்திலே காலதத்தன் அருகில் போய் அவனைக் கைதூக்கி விடுவதைப் பார்த்ததும் ராஜ வல்லபன் திகைத்து நின்றான்.

தானே அப்படிச் செய்ய முற்படுமுன் அவள் முந்தி விட்டாளே என்று தோன்றியது.

அந்தப் பெண்ணோ, "பாழாய்ப் போன மழை ஒரு வாரமாய்ப் பெய்கிறதே! கீழே ஒரே வழுக்கல்! பார்த்து வர வேண்டாமா?" என்று முகத்தைச் சுளித்துக் கொண்டே கூற,

தத்தன் சொட்டச் சொட்ட எழுந்து குப்பாயம் எல்லாம் சேறு வழிய, முகத்தில் அசடுவழியப் பல கணங்கள் திகைத்து நின்ற பிறகு, வயோதிகரின் வீட்டை நோக்கி மெள்ள நடந்தான்.

"பார்த்து! பார்த்து!" என்று அந்தப் பெண் எச்சரிக்கவே, ஒரு கணம் தத்தன் வெறுப்போடு திரும்பி அவளைப் பார்த்தான்.

"ஹூம்! ரோஷம் வேணும்! வழுக்கல் யாருடைய ரோஷத்தையும் பொருட்படுத்தாது....பார்த்து! பார்த்து" என்று கூறியவள், உடனே பரபரத்து," படியிலே வழுக்கல்!" என்று இரைந்து கூவினாள்.

அதே நேரத்தில் படியில் காலை வைத்த தத்தனும் வழுக்கிக் கொண்டு தொபுகடீரென்று தண்ணீரில் சம்மணமாக விழுந்தான்.

அந்தப் பெண் தன்னை மீறி வரும் சிரிப்பைத் தனது இளம் சிறு விரல்களால் பொத்த முயன்றாள்.

நல்ல வேளையாக, மீண்டும் அந்தப் பெண் வருமுன் வல்லபனே தத்தனைத் தூக்கி விட்டான். தாழ்வாரத்தில் ஏறிய தத்தனும் அந்தப் பெண்ணை வெறுப்போடு பார்த்தான். அவளோ முகத்தைத் திருப்பிக் கொண்டு உள்ளே போய் விட்டாள். தத்தன் ஈரத்தைக் களைந்து, பிழிந்து உடுத்தி முகத்தையும் உடம்பையும் சீர் செய்து கொண்டான்.

பிறகு இருவரும், "ஐயா ஐயா!" என்று அழைத்தவாறு, அந்த மாளிகையின் நடைக்குள்ளே நுழைந்தார்கள்.

அந்த நேரத்தில் ஒரு பெரியவர் மழமழப்பான தடியை ஊன்றிக் கொண்டு, அவர்கள் முன்னே வந்து, "நீங்கள் யார்? என்ன வேண்டும்?" என்று விசாரித்தார்.

அவர் கேள்வியிலேயே பொறுமை இல்லை.

இருப்பினும் வல்லபனும் தத்தனும் தங்களைப் பற்றிக் கூறிவிட்டு முடிவாக அரங்கனைப் பற்றி விசாரிக்கப் போக, வந்ததே கோபம் அந்த வயோதிகருக்கு!

"அரங்கனா? அவரைப் பற்றி நீங்கள் ஏன் கேட்கிறீர்கள்? அரங்கனைப் பற்றி நினைக்க வேண்டியவர்களே நினைக்கவில்லை. நீங்கள், சிறுவர்கள், நினைக்க வந்து விட்டீர்களே! உங்களுக்கு ஏன் அவ்வளவு அக்கறை?" என்று சினத்துடன் கேட்டார்.

அப்போது, உள்ளே இருந்து சின்னதாக ஒரு கிளுக்கென்ற சிரிப்புக் கேட்டது.

இரு இளைஞர்களும் அசந்து விட்டார்கள்.

உடனே வல்லபன் தன்னிடம் ஒரு தைரியத்தை வரவழைத்துக் கொண்டு,

"ஐயா! அரங்கனைப் பற்றி யார் நினைக்கிறார்களோ இல்லையோ, நாங்கள் நினைக்கிறோம். எங்களைச் சேர்ந்த பலரும் நினைக்கிறார்கள். எங்களைப் போன்ற இளையவர்களை எங்கள் குடும்பத்தார் சத்தியமங்கலத்திலிருந்து இவ்வளவு தூரம் அனுப்பி இருக்கிறார்கள் என்றால் அவர்களது அரங்க பக்தி எவ்வளவு இருக்க வேண்டும் என்று பாருங்கள்! ஆகவே, ஐயா, தங்களால் முடிந்தால், தங்களுக்கு ஏதாவது தெரிந்தால் சொல்லுங்கள்! இல்லாவிட்டால் வருகிறோம்" என்று கூறினான்.

பெரியவர் தமது நரைத்த புருவத்தைச் சுருக்கியவாறு அவர்களைப் பார்த்து, ''எனக்கு ஒன்றும் தெரியாது. நானும் திருவரங்கத்தைச் சேர்ந்தவன்தான். ஒரு வைத்தியன். ஊரைப் பகைவர்கள் தாக்கும்போது நான் குடும்பத்தோடு புறப்பட்டு விட்டேன். புறப்படும் வேளையில் ஒரு நாழிகை தாமதம் ஏற்பட்டுவிட்டது. இல்லாவிட்டால் அதிக நஷ்டமில்லாமல் வந்திருப்பேன்'' என்றார் தடுமாற்றமான குரலில்.

''ஏன் அப்படித் தாமதம் ஏற்பட்டது?'' என்றான் வல்லபன்.

''அந்த வயிற்றெரிச்சலை ஏன் கேட்கிறாய்? ஊரிலே பீதி ஏற்பட்டு விட்டது. அவரவர் தங்கள் தங்கள் குடும்பத்தோடு ஓடுவதில்தான் அக்கறையாக இருந்தார்கள். நான் புறப்படும் வேளையில் ஒரு இளைஞன் எங்கள் விட்டுக்குள் வந்தான். கையில் கத்தியைக் காட்டி மிரட்டி, ''என் தாயார் நோயில் பிரக்ஞை இழந்திருக்கிறாள். நீங்கள் வந்தால்தான் ஆயிற்று'' என்று மிரட்டினான். போக வேண்டிய நிர்ப்பந்தம். போனேன். வைத்தியம் பார்த்துவிட்டுத் திரும்பினேன். அந்த நேரத்தில் எங்களுக்குத் துணை வருவதாக இருந்த குடும்பங்கள் எல்லாம் எங்களை விட்டு விட்டுப் போய் விட்டன. அதனால் நேர்ந்த கதிதான் இந்த கதி! வழியில் தனியாகப் போன எங்கள் குடும்பத்தைக் கள்வர்கள் மடக்கினார்கள். எல்லாவற்றையும் இழந்தோம்'' என்று கூறியவர் திடீரென்று எதையோ நினைத்து விட்டது போல், அவசரப்பட்டு, ''அதெல்லாம் பழைய கதை. அதை மறந்து விட்டேன். எனக்கு அரங்கனைப் பற்றி எதுவும் தெரியாது. நீங்கள் போகலாம்!'' என்று சட்டென்று முடித்து விட்டார்.

அவர் அவ்வளவு அவசரமாகக் கூறுவதற்கு ஏதோ காரணம் இருக்கிறது என்று தத்தன் நினைத்தான். இருந்தும் விடாமல், ''ஐயா!'' என்று ஆரம்பிக்கவே,

அந்தப் பெரியவர் அதே அவசரத்துடன், ''எனக்கு அரங்கனைப் பற்றி எதுவும் தெரியாது என்று சொன்னேன் அல்லவா! சொன்னது சொன்னதுதான். நீங்கள் போகலாம்!'' என்று படபடப்புடன் கூறினார்.

இளைஞர்கள் இருவரும் எழுந்து ஒருவரை ஒருவர் பரிதாபமாகப் பார்த்துக்கொண்டு, ஒரு சேரப் புறப்பட, மீண்டும் உள்ளுக்குள்ளிருந்து 'கிளுக்' என்ற சிரிப்பின் சப்தம் உருண்டு வந்தது.

சத்திரத்திற்குத் திரும்பியதும் வல்லபனின் கண்களில் நீர் தளும்பி வந்தது. தத்தன், ''என்ன வல்லபா?'' என்று ஆதுரத்துடன் கேட்டான்.

சிறிது விசித்த வல்லபன், ''தத்தா! அந்த வயோதிகர் தம்மை யாரோ ஒரு இளைஞர் கத்தி எடுத்து மிரட்டியதாகக் கூறினாரே! அந்த இளைஞர் என் தந்தை குலசேகரர்தான்! இது பற்றி எனது தாயார் பல முறை கூறியிருக்கிறார்! வயோதிகர் சொன்னதுமே என் தந்தையின் நினைவு எனக்கு வந்துவிட்டது. நான் பிறப்பதற்கு முன்பே என் தந்தை இறந்து விட்டார். அவர் எப்படி இருப்பார் என்று அந்த வயாதிகரிடமிருந்து கேட்க விரும்பினேன். அதற்கு இடம் கொடுக்காமல் அவர் நம்மை விரட்டி விட்டாரே!'' என்று தாபத்தோடு கூறினான்.

மறுநாள் காலையில் எழுந்தபோது, தத்தனுக்கு ஜுரம் கண்டிருந்தது. சத்திரத்தில் கஷாயம் வைத்துக் கொடுத்து, அன்றைய தினம் முழுதும் பட்டினி கிடக்கச் சொன்னார்கள்.

இரவு வரும் வேளையில், தத்தனுக்கு ஜன்னி பிறந்து அவன் பிதற்றத் தொடங்கினான். வல்லபன் திகைத்துப் போய் சத்திரத்தில் உள்ளோரை உதவிக்கு அழைத்தான்.

அவர்களும் ஒன்று கூடி, ''இவனை *ஆதுர சாலைக்கு அனுப்புவதுதான் ஒரே வழி!'' என்று தீர்மானித்தார்கள்.

ஒரு ஒற்றைக் காளை வண்டியை அமர்த்தி, அதில் தத்தனையும் வல்லபனையும் அனுப்பினார்கள்.

ஆதுர சாலை முன் வண்டி நின்றதும் அதிலிருந்து இறங்கிய வல்லபன், அந்த வயோதிக வைத்தியரின் மாளிகைக்கு அடுத்தாற்போலவே அந்த ஆதுர சாலை இருப்பதைப் புரிந்து கொண்டான்.



---

* ஆதுரசாலை - வைத்தியசாலை

உள்ளே இருந்த வைத்தியரும் அதே வயோதிக வைத்தியர் தான்!

நோயாளியையும் வல்லபனையும் மாறி மாறிப் பார்த்து, இனம் கண்டு கொண்ட அந்த வைத்தியர் கனைத்துக் கொண்டே, ''வயசுக் கோளாறு! உடம்பைப் பார்க்காமல் மழையிலே நனையலாமா?'' என்று முனகிக்கொண்டே, தத்தனின் கையிலே பட்டுத் துணியைப் போர்த்தி நாடி பார்த்துச் சிகிச்சையைத் தொடங்கினார்.

அந்த ஆதுர சாலையில் மொத்தம் முப்பதுபேர் படுத்திருப்பதையும், எங்கும் மருந்தின் நெடி கமழ்வதையும் பார்த்த வல்லபன், வைத்தியர் போனபின் தத்தனது உடலை நன்றாகப் போர்த்திவிட்டு,



அவனது கை, கால, உடம்புகளைச் சிறிது நேரம் பிடித்து விட்டு, பிறகு உறவினர்க்கு என்று ஏற்படுத்தப்பட்ட தனிக் கூடத்திற்குச் சென்று அங்கே போய் இளைப்பாற அமர்ந்து கொண்டான்.

அந்த வேளையிலே, இருள் கவிந்ததால் ஆதுர சாலையின் மாடங்களில் உள்ள விளக்குகளை ஏற்றி வைப்பதற்கு இரு பெண்கள் வந்தார்கள்.

அவர்களில் ஒருத்தியைப் பார்த்ததும் வல்லபன் சிறிது திகைத்து நின்றான்.

தத்தன் தண்ணீரில் விழுந்தபோது, அவனுக்கு உதவப் போன பெண்தான் அவள்.

கலை தோய்ந்த முகத்துடன் கண்களில் புறுபுறு வென்று ஒரு சுறுசுறுப்புப் பொங்க ஒவ்வொரு மாடமாகச் சென்று, ஒவ்வொன்றிலும் ஒரு தங்கத் துண்டு ஒன்றை விட்டுச் செல்வது போல் பொன் மயமான விளக்கை ஏற்றியவாறு சென்றாள்.

ஆதுர சாலையின் கடைசி ஓரத்தில் அவள் விளக்கைப் பொருத்தும்போது, அங்கே கட்டிலில் ஒரு காட்சி வல்லபனைத் திடுக்கிட வைத்தது.

காலில் கட்டுகளுடன் அங்கே படுத்திருந்தது யார்? அவனது கால்மாட்டில் முதுகுப்புறம் காட்டிக்கொண்டு நிற்பது யார்?

எங்கேயோ பார்த்திருக்கிறோமே!

நினைவுகளைக் கிளர்த்துப் பார்த்தபோது, சுரீர் என்று ஒரு அதிர்ச்சி அவனைத் தாக்கியது.

'இவர்கள் அந்த மகர விழியாளுடன் சென்ற சேவகர்கள் அன்றோ? எப்படி இங்கே வந்தார்கள்?' என்று யோசித்தான்.

உடம்பெல்லாம் பரபரத்தது. இரத்தம் சிவ்வென்று கொதித்துக் கொண்டு ஓடியது.

இவர்கள் தன்னைப் பார்த்திருப்பார்களோ?

பார்த்தால் ஆபத்தாயிற்றே!

இவர்கள் மட்டும் இங்கே இருக்கிறார்களா? இவர்களது கூட்டாளிகளும் இங்கே தங்கியிருக்கிறார்களா?

அப்படியானால் அந்த ராஜகுமாரி?

"மகர விழியாளே! உன்னை மீண்டும் இங்கே சந்திப்பேனா?"

இவ்வாறு நினைத்த வல்லபன், நொடியில் எழுந்து, ஏதோ யோசனை பண்ணி, தாழ்வாரம் ஓரமாகச் செல்லும் அந்தக் குறும்புக்காரப் பெண்ணைப் பின்பற்றி ஓடினான்.

இரண்டு எட்டிலே அவளை அடைந்து, அவள் முன்னே சென்று குறுக்கே நின்று நிறுத்தவே, அவள் தன் சிறிய மீன் விழிகளை விரித்துப் பார்த்து, உதட்டில் குறும்பாகப் புன்னகை செய்தாள்.

அவளது பெயர் தெரியாமல் திகைத்துக்கொண்டு, "ஒரு உதவி வேண்டும்! அவசரம்!" என்று அவன் பரபரத்துக் கூறினான்.

"ஓ" என்று சொன்ன அவள், "என்ன உதவி? உங்கள் நண்பர் மீண்டும் வழுக்கி விழுந்தாரா?" என்று கேட்டுச் சிரித்தாள்.

"இல்லை. ஜுரத்துடன் அவன் அங்கே படுத்திருக்கிறான்" என்றான் அவன்.

"அப்படியா?" என்று திடுக்கிட்டுக் கூறிய அவள், மறுகணம் உணர்ச்சியைக் குறுக்கிக் கொண்டு, "எங்கே இருக்கிறார்?" என்று கேட்டாள்.

தூரத்திலிருந்து கட்டிலைக் காட்டிய அவன், அதைத் தொடர்ந்து அந்தச் சேவகனின் கட்டிலையும் காட்டி, அந்தச் சேவகன் தத்தனைப் பார்த்தால் அவனால் தத்த

# ஒரு நிமிடத்தில்...

34 திருமணங்கள் நடக்கின்றன.

3 மணமக்கள் மணவிலக்குச் செய்கிறார்கள்.

38 புயல்கள் உருவாகின்றன.

68 கார்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன.

100 பேர் இறக்கிறார்கள்.

114 குழந்தைகள் பிறக்கின்றன.

700 டன் இரும்பு வெட்டி எடுக்கப்படுகிறது.

950 மைல் தூரம் பூமி தன்னைத் தானே சுற்றிக் கொள்வதில் கடக்கிறது.

3000 டன் நிலக்கரி எடுக்கப்படுகிறது.

6000 விண்கற்கள் நிலம் நோக்கிப் பாய்கின்றன.

4600 பாத அணிகள் தைக்கப்படுகின்றன.

14,000 கன அடி மழை பெய்கிறது.

14,000 டன் உணவுப்பொருள் உண்ணப்படுகிறது.

35,000 டன் தண்ணீரும் வண்டலும் கடலில் சேருகின்றன.

1,10,000 செய்தித்தாள்கள் விற்பனையாகின்றன.

2,800,00 தொலைபேசி மணிகள் ஒலிக்கின்றன.

60,00,00 சிகரெட் புகைக்கப்படுகிறது.

6,380,00 காலன் மது செலவாகிறது.

''ஹெல்த்'' திலிருந்து: பருக்.

---

னுக்கு ஆபத்து வரும் என்று விளக்கமாக எடுத்துரைத்தான்.

''அதனால்தான் உங்களிடம் வேண்டிக் கொள்ளுகிறேன். அவனுக்கு எந்த ஆபத்தும் இல்லாமல் காப்பது உங்கள் பொறுப்பு. எங்களுக்காக இதைச் செய்யுங்கள். நான் இங்கே இருந்தாலும் ஆபத்து! அதோ பக்கத்தில் இருப்பவன் திரும்பிப் பார்க்கிறான்! நான் போய் வருகிறேன். கவனிப்பீர்களா?'' என்று கேட்டுக் கொண்டே வாயிலை நோக்கி ஓடினான்.

அவள் பிடி கொடுத்து மறுமொழி கூறாமல் இருப்பதைப் பார்த்த வல்லபன், வாயிலில் நின்றவாறே மீண்டும், ''கவனிப்பீர்களா? கவனிப்பீர்களா?'' என்று கெஞ்சிக் கேட்க,

அவள் எதுவும் சொல்லாமல் அவன் செய்கையைப் பார்த்துக் குபீர் என்று குலுங்கிச் சிரித்தாள்.

அதற்குள் மற்றவன் நகர்வதைக் கண்ணுற்ற வல்லபன், விருட்டென்று இருட்டுக்குள்ளே மறைந்து வெளியே ஓடினான்.

வாயிலில் உள்ள நீர்த் தேக்கத்தில் ''சலப் சலப்'' என்று அவன் காலடி வைத்துக் கொண்டே போகும் ஓசை உள்ளே கேட்டது.

அவன் போனபின் அந்தப் பெண் சிறிது நேரம் முறுவலோடு யோசனை செய்வாள் ஆயினள். அடுத்த கணம் அவள் கை விளக்கை அங்கே ஒரு பரையில் வைத்து விட்டு, மெள்ள அடி எடுத்து வைத்து அந்த ஆதுர சாலைக்குள் நுழைந்தாள்.

அங்கே தத்தனது கட்டிற்புறமாகச் சென்று அங்குமிங்கும் ஒரு பார்வை பார்த்தாள்.

சேவகன் அருகில் இருந்த மற்றவன் தலை நிமிர்ந்து அவளைப் பார்த்தான்.

அதைக் கவனித்ததும் அவள், ஏதோ இயல்பாகவே போவது போல் கட்டிலை மேலும் நெருங்கிக் கனிவும், இரக்கமும் பொங்கக் கீழே தரைமீது மண்டியிட்டு அமர்ந்து கொண்டாள்.

''ஐயா, ஐயா!'' என்று மெதுவாக அழைத்தாள்.

தத்தனின் முகத்திலிருந்து ஜ்வர ஜ்வாலை வீசியது.

அவன் ஏதும் பேசவில்லை. கண்கள் மூடியே இருந்தன.

மிரண்டு போன அந்தப் பெண் தன் அழகிய கையை அவன் நெற்றியில் வைத்தாள்.

உடன், ''உஷ்'' என்று உதறி எடுத்துக் கொண்டாள். அவன் உடம்பு அவ்வளவு சுட்டது.

அவளுக்கு ஏனோ ஒரு கலவரம் ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

அங்கும் இங்குமாகத் தன் பார்வையைத் திருப்பினாள் அவள்.

அவள் செய்வதைத் தூரத்திலிருந்து கவனித்துக் கொண்டிருந்தான் அந்த 'மற்றவன்'.

பிறகு அவன் அங்கிருந்து புறப்பட்டு அவள் இருக்கும் இடத்தையே குறியாக வைத்துக் கொண்டு வந்தான்.

சில நொடிகள் வரை அவள் அவனைக் கவனிக்கவில்லை. பிறகு திடீரென்று அவனைப் பார்த்து விட்ட அவள், தன் பரபரப்பைச் சிறிதும் காட்டாமல் யோசனை செய்து கொண்டு, அதே நேரத்தில் வருகிற ஆளின் பக்கம் திரும்பித் தனது இயல்பான குறும்புப் பார்வையுடன் சிரித்தாள்.

—தொடரும்



இளம் அழகிப் போட்டியில் கலந்து கொள்ள ஜெர்மனிக்குச் சென்று இருந்தபோது பங்கு கொண்ட அழகிகளுக்குக் கிராம வீடொன்றில் விருந்து கொடுக்கப் பட்டது. விருந்து முடிந்ததும் பரிசாகக் கொடுத்த பொருள் ஒரு பன்றிக் குட்டி!

போட்டியில் கலந்து கொண்ட வேறு ஒருவரிடம் அந்தப் பரிசைக் கொடுத்து விட்டேன்.

இந்திய நடிகைகளில் வைஜயந்தியையும் ஹேமமாலினியையும் அவர்களுக்குத் தெரிந்திருக்கிறது.

குமாரி வாணி கணபதி சொல்லக் கேட்டவர்: பாவை.




தமிழ் வளர்ச்சித் துறையில் பணியாற்றும் 'சிலம்பொலி' செல்லப்பன் அவர்கள் சமீபத்தில் ஒரு நிகழ்ச்சியில் கலந்து கொண்டு பேசியபோது தன்னுடைய கணித ஆசிரிய அனுபவ காலத்தை நினைவு படுத்திக்கொண்டார்.

''ஒன்பதாம் வகுப்புக்கான கணித பாட புத்தகத்தில் விகிதத்தைப் பற்றிப் போதிக்க ஓர் அத்தியாயம் உண்டு. பொதுவாக உதாரணக் கணக்குகளில் ஒரு பால்காரர் மூன்று படி பாலுடன் முக்கால் படி தண்ணீர் கலந்து விற்ருல் அதில் பால், தண்ணீர் விகிதம் எவ்வளவு சதம் என்ருே அல்லது நல்லெண்ணெய் படி மூன்று ரூபாய் வீதம் (அந்தக் கால விலை) எட்டுப் படி வாங்கி அத்துடன் படி ஒன்றே கால் ரூபாய் வீதம் வாங்கிய நாலு படி கடலை எண்ணெயைக் கலந்து படி மூன்றரை ரூபாய்க்கு விற்ருல் எவ்வளவு லாபம் கிடைக்கும் என்ருே புத்தகம் எழுதும் ஆசிரியர்கள் தயார் செய்வார்கள்.

''எனக்கும் கணக்குப் பாட புத்தகம் எழுதும் வாய்ப்புக் கிடைத்தது. பிஞ்சு உள்ளங்களில் விகிதத்தை விளக்குவதற்காக இந்தக் கலப்பட வியாபாரத்தைப் புகுத்த வேண்டாம் என்ற நல்லெண்ணத்துடன் எட்டு ஆழாக்குப் பாலில் இரண்டு ஆழாக்குத் தேனைக் கலந்தால் விகிதத்தின் சதம் எவ்வளவு என்று அதில் இனிமை சேர்த்து எழுதினேன்!''.

அந்த மாதிரிக் கணக்குகளை 'டெக்ஸ்ட் புக் கமிட்டி' அங்கீகரிக்கவில்லையாம்! அதெல்லாம் நடைமுறைக்கு ஒத்து வராத உதாரணங்களாம்!

1976-ம் ஆண்டு இறுதியில் பம்பாய் சாந்தா குரூஸ் விமான நிலையத்தில் புறப்பட்ட உடனேயே கீழே விழுந்து நொறுங்கிய காரவில் விமான விபத்தைப் போல இந்தப் புத்தாண்டு தினத்தன்று இரவில் அதே இடத்தில் ஆனல் கடல் பரப்பிற்குள் ஜம்போ ஜெட் விபத்து நடந்திருக்கிறது.

அந்தக் காரவில் விமான விபத்திலிருந்து உயிர் பிழைத்தவர் என்னுடைய நண்பர் ஒருவர். அவர் அந்த துரதிர்ஷ்ட காரவில் விமானத்தில் சென்னைக்குக் கிளம்ப பம்பாய் விமான நிலையத்திற்கு வந்து விட்டார். அவருக்கு அறிமுகமான ஒரு குடும்பமே அவருடன் பிரயாணம் செய்ய இருந்தார்கள். ஆகவே பிரயாணம் கலகலப்பாக இருக்குமென்று நம்பினுர்.

ஆனல் விமானம் கிளம்ப சற்று நேரத்திற்கு முன் அவருக்கு வயிற்றுப் போக்கு ஏற்பட்டது. சமாளிக்க முடியவில்லை. ஆகவே பிரயாணத்தை ஒத்திப் போட்டுவிட்டு ஓட்டல் அறைக்குப் போய் மருந்து வரவழைத்துச் சாப்பிட்டார்.

அந்த வயிற்றுப் போக்கு அவர் உயிரையே காப்பாற்றியது என்று காலையில் தான் தெரிந்துகொண்டார். அறிமுகமான குடும்பத்தினரின் சடலங்களை அடையாளம் கண்டு பிடிக்கும் பணி அவரை வந்து அடைந்தது.



சில நாட்களுக்கு முன் தமிழ் நாட்டில் ஏற்பட்டிருந்த வறட்சி நிலையைப் போக்கவும், செயற்கை மழை பெய்யச் செய்யவும் பெரும்செலவில் ஏற்பாடுகள் நடந்தன. மேகங்களின் மீது ரசாயனப் பொருட்களைத் தூவி மழை வரவழைக்க முயன்ருர்கள்.

அது மாதிரி சென்னை பாரதி சாலை (முன்னுள் பைக்ராஃப்ட்ஸ் சாலை) வழியாகக் கடற்கரைக்கு இனிமையான கற்பனைகளுடன் போகிறவர்களைச் சோதிக்கவே பக்கிங்காம் கால்வாய் குறுக்கே ஓடுகிறது! கால்வாய் வறண்டாலும் வற்ருத நறுமணம் அங்கே உண்டு. கைகுட்டையை மறந்து விட்டு வருபவர்கள் பாடு ஆபத்து!

அங்கே நிரந்தரமாக ஏதாவது வாசனை அத்தர் கலந்த பொடிகளையோ, நீரையோ தூவித் தெளித்து அந்த இடத்தைக் கடப்பவர்களின் நாசிகளைக் காப்பாற்ற அரசாங்கம் முன்வரக்கூடாதோ?

- கோமதி சுவாமிநாதன்

தெலுங்கில் அறிமுகமாகி, இன்று தமிழில் புகழ் பெற்று விட்ட சங்கீதா முதன் முதலாக ஒரியா மொழியிலும் ஒரு படத்தில் நடித்துவிட்டார்.

ஆனந்த்.

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணு கோபாலன்



கட்டிலை நோக்கிச் சேவகன் வந்தபோது, அந்த இளம் பெண் அவனைப் பார்த்துப் புன்னகை புரிந்து கொண்டிருந்தாள்.

''மஞ்சரி! உன் தாத்தாதான் நோயாளி என்று நினைத்தேன். இது யார் புது நோயாளி?'' என்று கேட்டான் அவன்.

''இவரா?'' என்று சொல்லி எழுந்தாள் மஞ்சரி. ''வைத்தியரின் உறவுக்காரர். ஜன்னி கண்டிருக்கிறது. இவரைக் கவனிக்கும்படி வைத்தியர் கட்டளை இட்டிருந்தார். பார்த்துக் கொண்டிருந்தேன். நினைவு போய் விட்டது. இன்றைக்கு ராத்திரிக்கு மேல்......'' என்று கூறியவள், சேவகனது ஊகத்திற்கு அதை விட்டுவிட்டவள் போல் நிறுத்தினாள்.

மேலும் அவள் அவனை நோக்கி முன்னால் நடந்து கொண்டே போனாள். முன்னேறாமல் தடுத்து அவனைத் திரும்பும்படிச் செய்து கொண்டு, ''அப்புறம் உங்கள் நண்பரின் கால் எப்படி இருக்கிறது?......'' என்று கேட்டவாறே கூடத்திற்குள் அவனை அழைத்துப் போனாள்.

ஆனால் கூடத்திற்குப் போன சேவகன் அதற்கு மேல் அவளுடன் போக விருப்பப்படாமல் அங்கேயே நின்று விட்டான். அது அவளுக்குச் சந்தேகத்தைக் கொடுத்தது.

மேலும் அவனது சந்தேகத்தை அதிகமாக்கி விடாமல், ''நான் வருகிறேன்....'' என்று கூறிய மஞ்சரி அங்கிருந்து வைத்தியர் வீட்டுக்குப் போய்விட்டாள்.

சிறிது நேரத்திற்குப் பிறகு இரு வேலைக்காரப் பெண்மணிகள் தத்தன் கட்டில் அருகில் வந்து அவனைத் தூக்கிக் கொண்டு போனார்கள்.

திடுக்கிட்ட சேவகன் விசாரித்தபோது நோயாளி இறந்து விட்டான் என்று தெரிய வந்தது.

அன்று இரவு சத்திரத்திற்கு வந்த ராஜவல்லபனுக்குத் தூக்கம் வரவில்லை. நடந்தவைகளை எல்லாம் எண்ணிப் பார்த்தான். ஊரிலிருந்து புறப்பட்டதிலிருந்து அடுக்கடுக்காக ஏதோ நேர்ந்து கொண்டே இருந்தன.

முதலில் அந்தக் கூண்டு வண்டியைப் பார்த்தது. அதில் அந்தப் பெண்ணைப் பார்த்தது, சேவகத் தலைவனிடம் அகப்பட்டது, அவனிடம் வாக்குவாதம் பண்ணியது, தூக்குக் கயிற்றிலிருந்து மயிரிழையில் தப்பியது எல்லாமே வரிசையாய் நினைவில் வந்தன.

''அரங்கனைத் தேடிக்கொண்டு புறப்பட்டோம். அதற்கு எத்தனை இடையூறுகள்?'' என்று நினைத்தான் அவன்.

ஆதுரசாலையில் அந்தச் சேவகன் அவனைக் கவனித்திருப்பானோ? கவனித்தால் என்ன? ஒடுமானூரில் இருந்தபோது எல்லோரும் சமாதானமாகப் போயாகி விட்டதே! இனிமேல் அவர்களுக்கு அவன்மீது பகை இருக்க முடியாதே! அப்படியிருக்கும்போது என்ன பயம்?

அப்படியும் சொல்ல முடியாது! ஏனெனில் அந்தச் சமாதானத்தை உண்டு பண்ணியது கற்பூர வியாபாரிதான்! அதை அந்தச் சேவகத் தலைவன் பூரணமாக ஏற்றுக் கொள்ளவில்லை. அவன் முகமே அதை எடுத்துக் காட்டியது. தவிரவும், ''அந்தப் பெண்ணிடம் நேரில் கேட்கலாம்! அவளைக் காட்டுங்கள்'' என்று வல்லபன் சொன்னபோது, தலைவன் கண்களில் எவ்வளவு குரோதம் எழுந்தது. ஏதோ வேண்டாததைச் செய்ய வற்புறுத்தப்பட்டது போல் தோன்றினானே! தான் இரகசியமாகத் திரையிட்டு அழைத்துக் கொண்டு போகிற ஒரு பெண்ணை இப்படிப் பலர் முன்னால் காண்பிக்க வைத்து விட்டானே என்ற கோபம் அவன் மனசிலே நிச்சயமாக இருக்கும். சந்தர்ப்பம் கிடைத்தால் அந்த வஞ்சத்தைத் தீர்த்துக் கொள்ளப் பார்ப்பான். விட மாட்டான்.

நினைவுகள் குழப்பிக் கொண்டிருந்தன. வல்லபனுக்கு உறக்கம் வரவில்லை. இரவில் ஏதாவது நடக்குமோ என்று ஒரு கலக்கம் தோன்றியது. பலவிதமாய் யோசனை பண்ணியவன், விருட்டென்று எழுந்து, கமைகளை எடுத்துக் கொண்டான். சத்திரத்து அதிகாரியிடம் விடைபெற்று வெளியே இருட்டுள் இறங்கினான்.

அந்தப் பேரூரில் நான்கு பெரிய வீதிகளும், இரண்டு சிறிய வீதிகளும் இருந்தன.

எங்கேயாவது, யாருடைய வீட்டிலாவது இடம் பிடிக்க வேண்டும் என்று நினைத்தான்.




நண்பன் நமது இதய அரண்மனையின் இளவரசனாக வும், நம்மைப் பற்றி அவன் என்றுமே நல்லதையே நினைக்கக் கூடியவனாகவும் இருக்க வேண்டும்.

அழகானவர்களோடு நட்புக் கொண்டிருக்க ஆசைப் படுபவன் மேக்அப் இல்லாமல் இருக்கும் நடிகையைப் பார்க்கத் தயாராய் இருக்க வேண்டும்.

பஸ், ரயில், விமானப் பிரயாணங்களில் சந்தித்துப் பேசுகின்றவர்கள் நண்பர்கள் அல்ல. அவர்கள் திடீர் சந்திப்பாளர்கள். அவ்வளவுதான்!

நாம் நமது நண்பர்களை நம்ப வேண்டும். அப்படி இருந்தால்தான் அவர்கள் நம்மை நம்புவார்கள்.

நண்பர்களிடையே 'காதல், கன்னிப் பெண்' என்ற வார்த்தைகள் வரும்போதெல்லாம் நாம் சற்றுப் பொறுமையுடன் நடந்து கொள்ள வேண்டும். இதனால் எத்தனையோ உண்மையான நண்பர்கள் விரோதிகளாக மாறியிருக்கிறார்கள்.

பருக்.

அந்த வீதி திரும்பு முன்னால் திடீரென்று குரல்கள் கேட்டு, ஓரத்தில் ஒதுங்கி ஒரு திண்ணையில் ஏறிக்கொண்டான்.

''சத்திரத்தில்தான் இருப்பான்'' என்றது ஒரு குரல்.

''நீ பார்த்தது அதே பையன்தான் என்று என்ன நிச்சயம்?'' என்றது வேறொரு குரல்.

''அவனைப் போலத்தான் இருந்தான்.

''உனக்குப் பார்வை பற்றாது!''

''நீதான் குருடன்.''

இதைத் அடுத்து ஒரு சர்ச்சை தொடரவே, அந்த நான்கு பேர் குழு அங்கேயே நின்றது. பிறகு ஒருத்தருக்கு ஒருத்தர் ஒருவாறு சமாதானம் ஆகி மேலே நகர்ந்தார்கள்.

அவர்கள் போன பிறகு வல்லபன் மெள்ளத் திண்ணையை விட்டு எழுந்தான். நல்ல வேளை, தப்பித்தோம் என்று நினைத்தான். வெளியே இறங்கி விடுவிடு என்று நடந்தான். ஊரின் சிறிய வீதி ஒன்றை அடைந்து அதன் வீடுகளில் ஒன்றின் திண்ணையைத் தேர்ந்தெடுத்தான். அதில் ஏறியதும் தன் மீதே அவனுக்குப் பரிதாபம் ஏற்பட்டது. தனது கற்பனையில் அந்தப் பெண்ணை நினைத்தான். ''மகர விழியாளே! எனக்கு சோதனைக்கு மேல் சோதனைகளாய் வருகின்றன. நீ அறிந்து கொள்கிறாயா?'' என்று கேட்டான். பிறகு பலவித கனவுகளுக்கு இடையே உறங்க ஆரம்பித்தான்.

இரவு போலவும் இருந்தது. பகல் போலவும் இருந்தது. சத்தங்கள் கேட்பது போலவும் இருந்தன. கேட்காதது போலும் இருந்தன. கேட்ட சத்தங்கள் விசித்திரமாகத் தோன்றின.

கண்களை விழித்துப் பார்த்தால் எல்லாம் விசித்திரமாகத் தோன்றியது. எங்கே இருக்கிறோம்?

ஒருவேளை இறந்து விட்டோமோ?

தன் நினைவுகளை தத்தன் அழுத்தமாக இழுத்துப் பார்த்தான்.

நினைவுகள் கூட அவனுக்குப் பஞ்சு பறப்பதுபோல் தெரிந்தன.

இழுக்க, இழுக்கப் பிடிபடாமல் கலந்து போயின.

ஒருவேளை எல்லாமே கனவில் நடக்கின்றனவோ?

ஒரு குரல் மட்டும் பழகிய குரல் போல் கேட்டது. அது யாருடைய குரல்? அந்தப் பெண்தான்! ஆமாம்! அவளேதான்! வைத்தியர் வீட்டுக்கு முன்னால் தண்ணீரில் விழுந்த போது அவனைப் பிடித்து எடுத்த பெண்ணின் குரல்.

கண்ணைத் திறந்து பார்த்தால் அவளது உருவம் கூடத் தெரிகிறது. அவள்தானா? அவள் எங்கே வந்து சேர்ந்தாள்?

நினைவுக்கும், கனவுக்கும் இடையே இவ்விதம் இரண்டு நாட்கள் போராடினான் தத்தன்.

மூன்றாம் நாள் காலையில் கண்களை விழித்த போது உலகம் அதன் எல்லா இயல்புகளோடு புதிதாய் ஜனித்திருந்தது.

கட்டிலிலிருந்து திரும்பிப் பார்த்தான்.

எட்டத்தில் அந்தப் பெண் ஒரு கலுவத்தில் எதையோ குழைத்துக் கொண்டிருந்தாள்.

''இந்தா!'' என்று கூப்பிட்டான் அவன்.

அவள் ஆச்சரியத்துடன் திரும்பிப் பார்த்தாள்! அவள் முகம் பிரகாசம் ஆகியது.



மனைவி: ஆகா! பாகவதர் ரேடியோவில் கல்லும் கரையும்படி பாடுகிறார், கேட்கிறீர்களா?

கணவன்: 'ரேடியோ'வை சமையலறையில் வைக்காதே. சாதத்தில் நிறையக் கல்!



மனைவி: அடுத்த வீட்டுக் குழந்தையைத் தூக்கிக் கொஞ்சணுமா நம்ம வீட்டிலே குழந்தைகளா இல்லே?

கணவன்: கன்னத்தைக் கிள்ளி, ரெண்டு அடி போட்டு அனுபவிக்கணும்னா, அடுத்த வீட்டுக் குழந்தையைத்தான் கொஞ்சணும்!




சிரித்துக் கொண்டே அவனை நோக்கி வந்தாள்.

"ஓ! உங்களுக்கு நினைவு திரும்பிடுத்தா?" என்று கேட்டாள்.

புருவத்தின் எடுப்பும், கண்களில் மிளிர்ந்த ஆர்வமும் அவனைச் கவர்ந்து இழுத்தன. பருவமான பெண்ணை முதன்முதலாக அவ்வளவு நெருக்கத்தில் பார்க்கிருன். அவளது ஈர உதடுகளும், அவள் உடலின் சுகந்தமும் அவனைத் திணற வைத்தன.

இருந்தாலும் பழைய மிடுக்கு அவனிடம் வந்து விட்டது.

"யார் நீ?" என்றான் தைரியமாக.

அவளுக்கும் ரோஷம் வந்துவிட்டது.

"ஆமாம்! தெரியாதாக்கும்! நேரிலே என்னைக் கண்ணாலே பார்த்தவர்தானே! அதுக்கு மேலே தெரியாதது போலக் கேள்வி என்ன? யார் நீ? யார் நீ?" என்று அந்த 'யார் நீ?'யை அவனைப்போல் தொனித்துக் காட்டினாள்.

உடனே தத்தன், "இது எந்த இடம்? [illegible]னை ஏன் இங்கே வைத்திருக்கிறீர்? என் த[illegible]பன எங்கே?" என்று சரமாரியாகக் கேட்டான். அவனிடம் அந்த மிடுக்கு இன்னும் குறையவில்லை.

அதற்கு அவளும், "இது பூலோகம்! வைகுண்டத்துக்குப் போகாமல் உங்களை இங்கே இழுத்து வைத்திருக்கிறோம். [illegible]கும் குறைவில்லை. தோரணைக்கும் [illegible]ல. 'என்னடா இது? ஜுரத்திலே கிடந்[illegible]ரோ காப்பாற்றினீங்களே! யாரோ குண[illegible]களே! அவங்களுக்கு நம்முடைய சந்தே[illegible] சொல்வோம்' என்கிறதில்லை. எழுந்தவுடனே [illegible]தோரணைதான்!" என்று பொல பொலவென்று [illegible]பொழிந்தாள்.

தத்தன் திகைப்பில் மூழ்கி விட்டான்.

"இதுக்குத்தான் தாத்தா அடிக்கடி சொல்வார்! மஞ்சரி! எல்லோரிடமும் வெகுளியாகப் பேசாதே! அவசியம் இல்லாமல் உதவி செய்யாதே! உனக்குத்தான் அது நஷ்டமாக முடியும் என்று எச்சரிப்பார். நான் கேட்டுக்கிறதில்லை. அப்புறம் இப்படி அவஸ்தைப் படுகிறேன்" என்று எட்டத்தில் போய்க் கொண்டே கூறினாள்.

பிறகு இருமுறை திரும்பி அவனை ஓரக்கண்ணால் பார்த்தாள்.

கலுவத்தை மீண்டும் எடுத்துக் குழைக்கத் தொடங்கினாள். மருந்தில் தேன் குழையும் நெடி அந்த அறையிலே எழுந்தது.

தத்தன் யோசனையிலேயே ஆழ்ந்தான். உடம்பு பலவீனமாகியிருப்பது தெரிந்தது. பல நாட்கள் நினைவில்லாமல் இருந்தோமோ! கையும் காலும் சுர்க்குச்சியாகிக் கிடக்கின்றனவே! எழுந்திருப்பதற்குக் கூடத் திறன் இல்லையே!

"ம்! இதைக் குடியுங்கள்!" என்றாள் அந்தப் பெண்.

அவள் முகத்தில் இப்போது விரக்தி ஓடியிருந்தது. அவனிடமிருந்து எந்தவித இதமான மொழியையும் கேட்க விரும்பாதவள் போல நின்றாள். அவளுக்குத் தோன்றிய கோபமே அழகாயிருந்தது. சின்ன வயதுக்கேற்ற சின்னக் கோபம்.

பாத்திரத்தை தத்தன் கையில் வாங்கிக் கொண்டான்.

அவள் அவனைப் பார்த்தாள். அப்பா! அந்தப் பார்வைக்குள் நெடுந்தூரக் கடலின் ஆழமும் குளுமையும் எவ்வளவு எழுச்சியாகத் தெரிகின்றன!

அப்போது, "மஞ்சரி!" என்று ஒரு குரல் கேட்கவே, "இதோ வருகிறேன்" என்று சொல்லி ஓடினாள் அவள்.

புக்கராயரின் குலத்திற்கு குருவாக இருந்த அந்த கிரியா சக்தி பண்டிதர் மேலும் சில தினங்கள் முள்வாய் நகரத்தில் தங்கி விட்டார்.

தெற்கு அண்டை நாட்டிலுள்ள க்ஷேத்திரங்களைத் தரிசித்து வருவதற்காக விஜயநகரத்திலிருந்து புறப்பட்டவர் அவர்.

முள்வாய் நகரத்தில் கம்பணர் இல்லாதது கண்டு, அவர் சில தினங்களில் வரக் கூடும் என்று நினைத்து அங்கே தங்கி விட்டார்.

ஐப்பசி மாலை நாள்! எங்கும் மழை மேகங்கள் திரண்டிருந்த சமயம். பண்டிதர் தங்கியிருந்த மாளிகைக்குள் கம்பணரின் மனைவியான கங்கா தேவி நுழைந்தாள்.

கையில் பட்டுத் துணி போர்த்திய ஏடுகள் பல வைத்திருந்தாள்.

மாலை வழிபாட்டை முடித்து விட்டு, நிச்சிந்தையாக இருந்த பண்டிதர் அவளை முறையாக வரவேற்றார்.

ஆதனத்தில் அமர்ந்து கொண்ட கங்கா தேவி தான் கொண்டு வந்திருந்த ஏட்டை அவிழ்த்தாள். வடமொழிப் புலவரான பாணரின் காதம்பரியைத் தான் அவள் கொண்டு வந்திருந்தாள்.

பாணரின் திறனைப் பற்றி கங்கா தேவி புகழ்ந்து பேசி விட்டு, மருத்துவம், பூமி சாத்திரம், வான சாத்தி



புராணப் படமாக இருக்கட்டும், சமூகப் படமாக இருக்கட்டும், ஸ்ரீதேவி-கமல் ஜோடி என்றால் இது போன்ற நெருக்கமான காட்சி இல்லாமல் இராது!

படம்: சத்யவான்-சாவித்திரி (மலையாளம்)



மாரியம்மன் திருவிழா' படப்பிடிப்பில் நடிகர் எஸ்.வி.சுப்பையாவுடன் பேசிக் கொண்டிருந்தார் டில்லி கணேசன்.

''நீங்கள் சைவமா? அசைவமா?'' என்று கேட்டார் டில்லி.

''இப்போது சுத்த சைவம். ஆனால் அது ஒரு கதை. முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் நானும் சைவம்தான் என்று என் மாமனார் வீட்டில் பொய் சொல்லித் திருமணம் செய்து கொண்டேன். அப்போது என் மாமனார் போலீஸ் ஆபீசர். என் மனைவிக்கும் எனக்கும் பத்து வயது வித்தியாசம். கலியாணம் நடந்தவுடன் அவ்வப்போது ஓட்டலில் புலால் சாப்பிட்டேன். கொஞ்ச நாள் ஆனதும் வீட்டிற்கே மாமிசம் கொண்டு வந்து சாப்பிட்டேன். என் மனைவிக்குப் பொறுக்கவில்லை.

''திருமலைக் கோயிலில் 'வல்ல நாட்டு சுவாமிகள்' என்ற பெரியவர் இருக்கிறார். அவருக்குக் குடும்பம் உண்டு. இடுப்பு வரை ஒரு துண்டு கட்டியிருப்பார். பொதுவாக சுவாமிகளைப் பார்வையாளர்கள் கும்பிடுவதைத்தான் நாம் பார்த்திருக்கிறோம். அவர் அப்படியல்ல, எந்த வீட்டுக்குப் போனாலும் அந்த வீட்டிலிருப்பவர்களையும், நாய், கோழி, ஆட்டைக்கூட விழுந்து விழுந்து கும்பிடுவார்.

''அவர் ஒரு சமயம் என் வீட்டுக்கு வந்திருந்தபோது என் மனைவி அவரிடம், ''புலால் உண்ணுவது நல்லதா?'' என்று கேட்டாள்.

அதற்கு சுவாமிகள், ''தாயார் கொடுக்கிற பாலைச் சாப்பிடலாம்-தாயைச் சாப்பிடலாமா?'' என்றார்.

''அந்த நிமிடம் முதல் நான் சைவமானேன்!''

பேட்டி: மன்னை சௌரிராஜன்

---

ரம், புராணம், ராஜாங்க சாத்திரம், மக்களின் பழக்க வழக்கங்கள், நம்பிக்கைகள் எல்லாவற்றிலும் பாணருக்கு இருந்த ஆழ்ந்த அறிவை உயர்வாகப் பேசினாள்.

''சுவாமி! அறுநூறு ஆண்டுக்கு முன் ஜனங்கள் எப்படி வாழ்ந்தார்கள், என்னென்ன செய்தார்கள், என்னென்ன நம்பிக்கைகள் கொண்டிருந்தார்கள் என்பதை அவரது காதம்பரியிலிருந்தே கண்டு பிடித்து விட முடிகிறது. ஹர்ஷ மகாராஜா வாழ்ந்த காலத்தை என்ன அழகாகக் கூர்ந்து கவனித்து எழுதியிருக்கிறார்! அதைப் படிக்கும் போது அக்காலத்தில் வாழ்ந்த ஜனங்களிடையே நானும் வாழ்வது போல் ஒரு பிரமை ஏற்பட்டு விடுகிறது. பாணர் என்னைப் பெரிதும் கவர்ந்த புலவர்!'' என்று பரவசம் பொங்கக் கூறினாள் கங்கா.

மெள்ளச் சிரித்த பண்டிதர், ''குழந்தாய்! உன் வயதுக்கும், அறிவுக்கும், காதம்பரி உனக்குப் பிடித்திருப்பதில் ஆச்சரியமில்லை. அது ஒரு சிருங்காரம் நிறைந்த காதல் காவியம். உடலுக்குப் போதை தருவது சாதாரண மது. ஆனால் காதம்பரி நமது அறிவுக்குப் போதை தரும் உன்னதமான மது!'' என்று கூறினார்.

''ஆனால் சுவாமி! அவா வாக்கியங்கள் பல இடங்களில் நீளமாக ஓடுகின்றன. அவரது கூட்டு வார்த்தைகளும் சங்கிலித் தொடர்போல் நீண்டு போகின்றன!'' என்று கூறினாள் கங்கா!

அதற்குப் புன்னகை புரிந்த பண்டிதர், ''நீளமான வாக்கியங்களுக்கு இடையே, சிறு சிறு வாக்கியங்களை என்ன லளிதமாக எழுதியிருக்கிறார் பார்! இதனாலேயே அவரது நடையில் நமக்கு ஒரு மயக்கமே ஏற்படுகிறது'' என்று கூறினார்.

''அது உண்மை சுவாமி! அந்த மயக்கந்தான் பலமுறை காதம்பரியைப் படிக்க வைக்கிறது. இது வரை இருபது முறை படித்திருக்கிறேன்'' என்றாள் கங்கா.

''ஓகோ! அப்படியா! இதனால் வடமொழி வார்த்தைகளில் உனக்குள்ள வளம் அதிகமாகப் பெருகும்'' என்றார் பண்டிதர்.

''முடிந்தால்..'' என்று இழுத்தாள் கங்கா.

''என்ன?'' என்று ஆவலுடன் கேட்டார் பண்டிதர்.

''முடிந்தால் அவரைப் போல் ஒரு சரிதம் கூட எழுதலாம் என்று....''

பண்டிதர் உடன் அவளைக் கூர்ந்து பார்த்தார்.

''சரிதமா?''

''ஆமாம்!''

''குழந்தாய்! பாணர் சரிதம் எழுதினார் என்றால் அவருக்கு அனுபவம் நிறைய இருந்தது.''

''என்ன அனுபவம்?''

''பாணர் சிறுவராய் இருக்கும்போதே அவரது தாய் இறந்து விட்டாள்.''

''ஆமாம்! அது தெரியும்!''

''அவரது பதினான்காவது வயதில் தந்தையும் இறந்து விட்டார். இருவரும் போனதும் இவர் தனது குடும்பத்தை விட்டு வெளியேறினார். கெட்ட சகவாசங்களில் ஈடுபட்டார். ஊரெல்லாம் அலைந்தார். நாட்டியக்காரிகள், தாதிகள், அந்தப்புரப் பெண்கள், பிட்சுணிகள், பாம்பாட்டிகள், மல்யுத்தக்காரர்கள், செப்பிடு வித்தைக்காரர்கள், இன்னும் எத்தனை எத்தனையோ பேர் அவருக்குச் சிநேகம். இது அவருக்கு விஸ்தாரமான ஒரு அறிவைக் கொடுத்தது. பல வருடங்கள் இப்படி அலைந்த பின்னால் திருந்தி, தனது பந்துக்களை அடைந்தார். ஹர்ஷரின் சரிதத்தை எழுதிய போதும் சரி, காதம்பரி என்ற காவியத்தை எழுதிய போதும் சரி, இந்த அவரது பரந்த அனுபவங்கள்தான் அவருக்குத் துணை செய்தன. அவரைப் போன்ற அனுபவம் உனக்கு ஏற்பட வேண்டாமா கங்கா?'' என்று கேட்டார் பண்டிதர்.

''சுவாமி!'' என்று திகைப்புடன் அவரைப் பார்த்தாள் கங்கா. ''சொந்த அனுபவம் இல்லாவிட்டாலும் கேள்வி ஞானம் போதாதா சுவாமி! மற்றவர் அனுபவத்தைச் செவியால் கேட்டு வாங்கிக் கொள்வது கூடச் சிறந்த அனுபவம்தானே! அது தவிர சுவாமி! எனது கணவர் என்னை அரண்மனைக்குள்ளாகவே வைத்திருக்கவில்லையே! யாத்திரைகளில் எல்லாம் என்னை அழைத்துச் செல்கிறாரே!''

''நல்லது கங்கா! உலக அனுபவம் வேண்டும் என்றால் பாணரைப் போல் திரிய வேண்டும் என்பது இல்லை. கேள்வி ஞானம் கூட அனுபவத்தை நிகர்த்தது. உன் ஆசை நல்ல ஆசை! அது நிறைவேறுமாக!'' என்று கூறினார்.

பின்னர் கங்கா தனது ஏட்டைத் திறந்து கடின பதங்களுக்கு எல்லாம் அர்த்தம் கேட்க பண்டிதா விளக்கி விடலானார்.

- தொடரும்



# ஒரு டாக்டருக்கு டானிக்!



அவசர அவசரமாகச் சிறிது முகப் பவுடரைப் பூசிக் கொள்கிறார். புருவம் தீட்டும் பென்சிலினால் முகத்தில் சில கோடுகளைத் தீட்டிக் கொள்கிறார். தேவையான தலை முடியைப் பொருத்திக் கொண்டு, பொருத்தமான உடைகளை அணிந்து கொண்டு நமக்கு மிக அறிமுகமான அரசியல் தலைவராகவோ பிரமுகராகவோ மாறிவிடுகிறார்!



இப்படிக் கண்மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் வங்கக் கவிஞர் தாகூராகவும், அரசியல் தலைவர் அப்துல் கலாம் ஆசாத்தாகவும் தோற்றமளித்து ஆச்சரியப்பட வைத்து விட்டார் டாக்டர் சந்திர சேகரம்.

''இந்த வகையான தனி மனித நடிப்பை - 'மோனோ ஆக்டிங்'கை 1929-ஆம் ஆண்டிலிருந்து வெற்றிகரமாக செய்து வருகிறேன். நாடு முழுவதும் சென்று இந்த மிகக் கஷ்டமான கலையைப் பரப்பிப் பாராட்டுதல்களைப் பெற்று வருகிறேன்'' என்கிறார் இவர்.

''இன்றைய நிகழ்ச்சியை இந்தியாவின் மிகக் கௌரவமான பதவி வகித்து வரும் உதவிக் குடியரசுத் தலைவர் கனம் ஜாட்டி அவர்கள் துவக்கி வைக்கிறார்'' என்று ஒலிபெருக்கியில் ஒருவர் அறிவித்த பொழுது, அதே நாள் சென்னையில் திரு ஜாட்டி அவர்கள் இருந்து வரவே அவர் விழாவைத்தொடங்கி வைக்க ஒப்புதல் தந்திருக்கிறார் என்றே நினைக்கும்படி இருந்தது.

ஆனால் டாக்டர் சந்திரசேகரம் கனம் ஜாட்டி போலவே மேடையில் தோன்றி மீசையை மெல்ல அசைத்துக் காட்டி, ''இந்த நிகழ்ச்சியை ஆரம்பித்து வைக்கிறேன்'' என்று அறிவித்து அனைவரையும் வியப்பில் ஆழ்த்தினார்!

டாக்டர் சந்திரசேகரம் ஒரு சிலரைப் போல தோற்றம் மட்டும் தரவில்லை. அவர்களைப் போலவே பேசுகிறார்; நடந்து காட்டுகிறார்.

தாடி முகம் கொண்ட தாகூராக வந்தவர் இரண்டு, மூன்று நிமிடங்களுக்குள் பண்டித ஜவாகர்லால் நேருவாக நம்முன் தோன்றும் பொழுது என்ன விரைவான வேட மாற்றம் என்று வியப்படைகிறோம்.

வயது அறுபதிற்கு மேல் ஆகி விட்டது. ஆனால் மேடையில் ஒரு கல்லூரி மாணவி போலப் பேசி, நடந்து, குதிபோட்டு இறங்கி ஓடி மேலும் ஆச்சரியப்பட வைக்கிறார்.

''முப்பதாண்டுகளுக்கு முன் சென்னை வி.பி. ஹாலுக்கு வந்திருந்த உலகப் புகழ் பெற்ற மோனோ ஆக்டர் ஒருவர் எப்படி மேக் அப் போட்டுக் கொள்கிறார் என்று அறிந்து கொள்ள ஆவலோடு அவரைச் சந்தித்துப் பேசினேன். பெருந்தன்மையோடு தமது மேக்கப் அறைக்குள் என்னை அனுமதித்தார். அப்போது கற்றுக் கொண்ட கலை இது. ''உங்கள் முன் நான் விதவிதமாகத் தோற்றம் அளித்துப் பேசி நடிக்கும் பொழுது அதை நீங்கள் ரசிக்க வேண்டுமென்று விரும்புகிறேன். உம்மென்று உட்கார்ந்து கொண்டிருந்தால் என் உழைப்பெல்லாம் வீணாகி விட்டதோ என்று வேதனைப்படுவேன்'' என்கிறார் இந்த வினோத நடிகர்.

நம்மைச் சிரிக்க வைக்கும் டாக்டருக்கு நாம் தரும் டானிக் வாய் விட்டுச் சிரிப்பது தான்!

— நவீனன்

---

**எதற்காக**

கதவு: நாம் செய்யும் காரியங்களை மற்றவர்கள் பார்க்காமல் இருக்க!

சுவர்: நாம் பேசும் பேச்சு வெளியில் விழாமல் இருக்க!

சன்னல்: நாம் மறைந்துகொண்டு மற்றவர்களைக் கண்காணிக்க!

நாற்காலி: குழந்தைகள் உட்கார்ந்து கொண்டு நாம் நிற்பதற்காக!

இ. ரா. ஜெயபாலன்

ராஜஸ்தான் அரசாங்க ஐந்தாவது வகுப்புப் பாடப் புத்தகத்தில், திரைப் பட நட்சத்திரங்கள் தர்மேந்திரா, வீனாசந்தர் வர்க்கர் இவர்களின் படங்களைப் போட்டு அவர்களின் வாழ்க்கைச் சரித்திரத்தையும் எழுதியிருக்கிறார்கள்.

காரவனிலிருந்து - பாபுக்

Printed & Published on behalf of Indian Express (Madurai) Ltd. by R. RAMAKRISHNAN at the DINAMANI PRESS Express Estate Madras-600002. Acting Editor: K. R. VASUDEVAN.



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

கிரியா சக்திப் பண்டிதரும், கங்கா தேவியும் வட மொழி மாகவி பாணரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

வாசலில் அப்போது நிழலாடியது.

இருவரும் நிமிர்ந்து பார்க்க, முன்வாய் ராஜ்யத்தின் சைனியாதிபதி கோபணு மெதுவாக வந்து கொண்டிருந்தார். அவர் மேனிமெலிந்திருந்தது. முகத்தில் வாட்டம் கண்டிருந்தது. தமது வலது கையில் அவர் பட்டுத் துணி வைத்து மூடிய ஏதோ ஒன்றை எடுத்து வந்திருந்தார்.

''வாருங்கள், வாருங்கள்!'' என்று சொல்லி அவருக்குப் பண்டிதர் ஆதனம் அளித்தார்.

வயதில் மூத்தவரும், தனக்குக் கிடைத்த பல குருக்களில் ஒருவருமாக இருந்ததால் கங்காதேவி கோபணுவுக்குத் தாழ்ந்து நமஸ்காரம் அளித்தாள். வடமொழியில் கோபணுவும் வல்லுநர்.

''கோபணு! என்ன யோசித்தீர்?'' என்று கேட்டார் பண்டிதர்.

கோபணு மெள்ள நிமிர்ந்து பார்த்தார்.

''ஒரே முடிவுதான்! ராஜரீகத்தைத் துறக்க விரும்புகிறேன்'' என்று கூறிய அவர், தமது கையில் கொண்டு வந்திருந்த பட்டுத் துணியை மெள்ள அவிழ்த்தார். உள்ளே இரண்டு தங்கக் கங்கணங்கள் கண்களைப் பறித்தன.

பண்டிதர் திடுக்கிட்டார்.

கங்கணங்கள் இரண்டும் வீரக் கங்கணங்கள்! வீரர்களுக்காக மன்னரே உகந்து பூட்டுபவை! கிழக்கில் நடந்த போர்களில் திறமை காட்டியதற்காக புக்கராயரே அவருக்கு அணிவித்தவை.

கங்காவும் திடுக்கிட்டாள்.

''கோபணு!'' என்றார் பண்டிதர். ''தற்சமயம் மன்னர் ஊரில் இல்லை. அவரிடம் தாங்கள் நேரிலே பேசுவதுதான் உகந்தது.''

''இல்லை, சுவாமி! மனதுக்குள் ஒரு அவா புகுந்து விட்டால் மற்ற பந்தங்கள் எல்லாமே போய் விடும். மன்னர் இல்லாவிடில் என்ன? அதற்கு அடுத்தாற் போல் தாங்கள் இருக்கிறீர்களே!'' என்றார் கோபணு.

பண்டிதர் அவரை ஆழ்ந்து பார்த்தார். பிறகு, ''கோபணு!'' என்றார் தழுதழுக்க

''நாட்டின் தர்மங்கள் அழிக்கப்பட்டிருக்கும் போது நம் சொந்த தர்மங்களை மட்டும் காக்க விரும்புவது அவ்வளவு உத்தமம் அல்ல. இந்த விஜய நகர மண்டலேசுவரம் தோன்றியிருப்பது ஏதோ புது வம்சம் ஆரம்பிப்பதற்கோ அல்லது புதிய ராஜா பட்டத்திற்கு வருவதற்காகவோ அல்ல! தொன்றுதொட்டு நிலவி வரும் நம் தர்மங்களையும் ஒழுக்க வழக்கங்களையும் காப்பதற்காகவேதான் இந்த மண்டலம் தோன்றியிருக்கிறது. இந்த மண்டலம் தென் நாடுகள் முழுவதையும் அடக்கிக் கொண்டு ஒரு சாம்ராஜ்யமாக மாறும் வரை நாம் எல்லோரும் ஓயக் கூடாது. நமது சொந்த விருப்பங்களை நிறைவேற்றுவதற்காக சமயத் துறவையோ, பற்றற்ற வாழ்க்கையையோ மேற்கொள்ளக் கூடாது. தற்போதைய நிலையில் தர்மம் இதுதான்!''

அவர் சொல்வதைப் பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்தார் கோபணு.

பிறகு தலை நிமிர்ந்தார். ''சமய வாழ்வுதான் சுவாமி எனக்குப் பிடிக்கிறது'' என்று கூறினார்.

எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த கங்கா மெதுவாக, ''சுவாமி!'' என்று குரல் கொடுத்து கோபணுவைப் பார்த்தாள்.

''இந்தச் சிறியவள் குருக்கே பேசுவதற்காகப் பொறுத்தருள வேண்டும். தங்களிடம் நான் ஒரே ஒரு வேண்டுகோள் விடுக்கலாமா?'' என்று கேட்டாள்.

''சொல்லுங்கள் ராணி!'' என்றார் கோபணு.

''சுவாமி! தாங்களும் என் குருக்களில் ஒருவர். இப்போது ராஜரீகத்தைத் துறக்க வேண்டும் என்று நினைக்கிறீர்களே! அது தாங்களாகத் தீர்மானம் பண்ணியதா? அல்லது ஏதோ தங்களுக்கு தெய்வ ஆக்ஞை பிறந்ததா?'' என்று கேட்டாள்.

''சொல்கிறேன், கங்கா! எனக்கு ஒரு விதத்தில் தெய்வ ஆக்ஞைதான் பிறந்திருக்கிறது!'' என்றார் கோபணு.

''அப்படியா?''

''ஆமாம்! கொள்ளைக்களம் போய் வந்ததிலிருந்து அடிக்கடி ஒரு கனவு வந்து கொண்டிருக்கிறது.

''என்ன கனவு? சொல்லலாமா?''

''சொல்கிறேன். ஒரு கனத்த அந்தகாரம்! எதுவுமே தெரியவில்லை. துழாவுகிறேன். அப்போது திடீரென்று ஒரு தெய்வ விக்கிரகம் தென்படுகிறது. அது போன்ற பிரசன்னமான வதனத்தை நான் இதுவரை கண்டதில்லை. அவ்வளவு அழகான முகம். கையில் சங்குச் சக்கரம், கதை இவைகளைப் பார்த்தால் விஷ்ணுவின் விக்கிரகமாக அது இருக்க வேண்டும்!''

"அந்த விக்கிரகத்தை ஏதாவது கோவிலில் பார்த்திருக்கிறீர்களா?"

"இல்லை. எங்கேயுமே பார்த்ததில்லை. நான் திருவரங்கமும் போனதில்லை. அரங்கனையும் பார்த்ததில்லை. ஆனால் என் அந்தரங்கத்தில் அந்த விக்கிரகம் அரங்க விக்கிரகத்தான் என்ற நம்பிக்கை இருந்து வருகிறது. அடிக்கடி அந்த விக்கிரகம் என் கனவில் வருகிறது. வஸ்திரம், ஆபரணம், அங்கி ஏதும் இல்லாமல் வெறுமையாக அது இருப்பதைப் பார்த்தால் என்னை அறியாமல் அந்த விக்கிரகத்தின் மீது ஒரு இரக்கமான ஈடுபாடு ஏற்படுகிறது. நான் கனவுக்குள்ளே கண்ணீர் விடுகிறேன். எழுந்த பிறகு வெகு நேரம் என்னால் எதுவும் செய்ய முடிவதில்லை. பித்துப் பிடித்தது போல் அமர்ந்திருக்கிறேன்."

"கனவில் வேறு ஏதும் தோன்றுவதில்லையா?"

"தோன்றுகின்றன. அந்த விக்கிரகம் தோன்றுவதற்கு முன்னும் பின்னும் அந்தகாரமான காடு ஒன்று தெரிகிறது."

"சரி! இவைகளிலிருந்து நீங்கள் என்ன அனுமானிக்கிறீர்கள்!" என்று கேட்டார் பண்டிதர்.

"எங்கேயோ அரங்கன் இருந்து கொண்டு என்னை அழைக்கிறான்" என்றார் கோபண்ணா.

உடன் கங்கா ஆரம்பித்தாள்.

"ஒரு வேண்டுகோள் விடுக்கிறேன் சுவாமி! காடும் மலையும் தெய்வமும் ஒன்று சேர்ந்த இடம் என்றால் அது திருப்பதி க்ஷேத்திரமாகத்



தான் இருக்க வேண்டும். ஏதாவது தீர்மானத்திற்கு வருமுன் தாங்கள் ஏன் திருப்பதி வரை சென்று தரிசனம் செய்து விட்டு வரக் கூடாது? அது தங்களுக்கு மனசில் பெரிதான தெளிவை ஏற்படுத்துமே?'' என்று கூறினாள்.

அதைக் கேட்டதும் பண்டிதரின் முகத்தில் பளிச் சென்று ஒரு பிரகாசம் தோன்றியது.

''கங்கா! நீ சொன்னது சரியான யோசனை!'' என்று சொன்ன அவர் கோபணாபக்கம்திரும்பினார். ''கோபணா! தாங்கள் இதை அவசியம் அங்கீகரிக்க வேண்டும்'' என்று கூறினார்.

கோபணா திகைத்தார்.

''ஆமாம், சுவாமி! தாங்கள் ஒரு புனித யாத்திரை மேற்கொண்டால் நல்லது. தங்கள் கனவுக்கு இதில் ஒரு வேளை விடை கிடைத்தாலும் கிடைக்கலாம். தவிரவும், தாற்காலிகமாகத் தாங்கள் ராஜரீகத்தைத் துறந்தவராகவும் ஆவீர்கள். மனத்தில் நிச்சிந்தையாய் யாத்திரை போய் வாருங்கள்! மன்னர் இங்கே இருந்தால், இந்த யோசனையை அவரும் அங்கீகரித்திருப்பார்'' என்று கூறினாள் கங்கா.

பண்டிதரும், ''அந்த யாத்திரைதான் சிறந்த வழி! அதுதான் மன்னருக்கும் உகப்பாக இருக்கும். தங்களுக்கும் உகப்பாக இருக்கும்'' என்று கூறினார்.

கோபணா முடிவில் எழுந்து, ''கடவுள் சித்தம் இதுவானால், நடக்கட்டும்'' என்று கூறினார்.

அவர் தயங்கி நிற்பதைப் பார்த்து, பண்டிதர், ''அப்படியானால் எப்போது யாத்திரை மேற்கொள்ளப் போகிறீர்கள்?'' என்று தயக்கத்துடன் கேட்டார்.

''நாளைக்கே!'' என்றார் கோபணா.

''அதுவே நல்லது'' என்றார் பண்டிதர்.

மஞ்சரி போனபிறகு, தத்தன் மீண்டும் யோசிக்க ஆரம்பித்தான்.

அவன் கிடந்த இடம் இருட்டான குச்சிலாகஇருந்தது. உள்ளே பானைகளும் குதிர்களும் பழங்காற்றைச் சுவாசித்தன. மேலே இருந்து உறிகள் தொங்கிக் கொண்டிருந்தன. அவற்றின் ஊடே நூலாம் படை



அடுத்த இதழில்

கோவி. மணிசேகரன்
எழுதும்

# "சூரியன் மேற்கே உதிக்கிறான்..."

ஆரம்பம்...



கள் நிறையத் தொங்கிக் கொண்டிருந்தன. கூரையில் அவ்வப்போது எலிகள் குடுகுடுவென்று உருண்டு கொண்டிருந்தன.

குச்சிலில் வெளிச்சம் தரும் ஒரே ஒரு உபாயம், மேலே முகட்டை ஒட்டியிருந்த ஓட்டைதான்.

இவ்வளவு மோசமான ஒரு இடத்தில் இதுவரை படுத்திருந்ததில்லை.

'வல்லபன் எங்கே?

என்னை ஏன் இங்கே கொண்டு விட்டுப் போய் விட்டான்?

எங்கே போனான்'

நினைவுகள் பின்னிக் கொண்டு வர மெதுவாக எழுந்தான். அடுத்த கணமே பொதக்கென்று கட்டிலில் விழுந்தான்.

அவ்வளவு பலஹீனமா?

சரிதான்! இரண்டு மூன்று நாள் காய்ச்சலில் வாடி இருப்போம் போல இருக்கிறது.

இரண்டாம் முறை ஜாக்கிரதையாக எழுந்தான். மெள்ளச் சுவரைப் பிடித்துக் கொண்டு நடந்து போனான்.

குச்சிலுக்கு இரண்டு கதவுகள் இருந்தன.

ஒன்று புழக்கடை பக்கம் திறப்பது. இரண்டாவது உட்புறம்.

புழைக்கடைக் கதவுப் பக்கம் வந்தான். தாழ்ப்பாளை நெம்பினான். கதவு 'ஙொய்' என்றது. பின்புறத்தில் பளிச்சென்று வெளிச்சம். அங்குள்ள சோலை பச்சைப் பசேல் என்று தெரிந்தது. அவன் கண் கூசியது.

வெளியே ஒரு அடி வைத்தான். உள்ளே ஓர் அரவம் கேட்டது. ''பார்த்தீங்களா? பார்த்தீங்களா?'' என்று சொல்லிக் கொண்டே மஞ்சரி ஓடிவந்தாள்.

''ஐயையோ! இப்படிப் போறீங்களே! ஆபத்து! ஆபத்து!'' என்று சொல்லிக் கொண்டு, அவன் கையைப் பிடித்தாள்.

''கையை விடு!'' என்று கோபத்துடன் கூறி அவன் உதறினான்.

மஞ்சரிக்கு முகம் சிவந்தது. அவனை ஒரு முறை முறைத்தாள்.

''போங்க! போங்க! யாருக்கு என்ன நஷ்டம்! உங்கள் நண்பர்தான் ஆபத்து என்று எச்சரித்தார். அவர் சொல்லித்தான் உங்களைக் கண்காணிக்கிறேன். எங்க தாத்தா அடிக்கடி சொல்வார். 'மற்றவங்க விஷயத்தில் தலையிடாதே!' என்று. நான் கேட்கிறதில்லை. இப்போது அவமானப் படுகிறது நான்தானே! எனக்கு இதுவும் வேண்டும். இன்னமும் வேண்டும்!'' என்றாள் அவள்.

பிறகு விருட்டென்று சென்று புழைக்கடைக் கதவைச் சாத்திக் கொண்டு உள்ளே போனாள்.

''இந்தா, இந்தா! இந்தா!'' என்று அவன் கூப்பிடுவதைப் பொருட்படுத்தவில்லை.

தத்தன் நடையைத் திருப்பி, உள்ளே வந்தான்.

மூலையில் ஒரு வெண்கலப் பாத்திரத்தில் அவள் சூடான பாலை ஊற்றிக் கொண்டிருந்தாள்.

''இந்தா!'' என்றான் அவன், கட்டிலில் அமர்ந்து கொண்டே.

''என் பெயர் ஒன்றும் 'இந்தா' இல்லை! மஞ்சரி!'' என்றாள் அவள் வெடுக்கென்று

''சரி, இருக்கட்டும். பெயரைச் சொன்னால்தான் பேசுவாயா என்ன? அப்படியில்லையே இப்போது சொல்லு இது எந்த இடம்? என் நண்பன் எங்கே? எல்லாவற்றையும் விவரமாகச் சொல்!'' என்றான் தத்தன்.

''ஹூம்!'' என்றாள் அவள் திரும்பிப் பாராமலே. அதற்கு அனுசரணையாகப் பாத்திரத்தை 'டங்'கென்று கீழே வைத்தாள். ''நான் அப்பவே சொன்னபோது.

பராக்குப் பார்த்துக்கிட்டிருந்தாராம். இப்போ மட்டும் கரிசனமாகக் கேட்கிறாராம். எனக்கு என்ன இப்போது ஆத்திரமாம்?'' என்று ஒடித்துக் கொண்டு எழுந்தாள். பிறகு உள்ளே போக முற்பட்டாள்.

''இந்தா!''

''இந்தா, இல்லை. என் பெயர் மஞ்சரி!''

''விஷயத்தைச் சொல்லி விட்டுப் போ! நான் என் நண்பனுக்காகத் துடித்துக் கொண்டிருக்கிறேன்!''

அவள் மெள்ளத் திரும்பினாள். அவளது உதட்டில் அந்தக் குறும்பான புன்னகை தவழ்ந்தது.

''ஓ! இப்போதுதான் விஷயத்தைக் கேட்டுக்க வேண்டும் என்று அக்கறை தோன்றியதோ?'' என்று சொல்லி விட்டு அருகில் வந்தாள் அவள்.

பிறகு, கீழே கவிழ்த்து வைத்திருந்த பானை மீது அமர்ந்து கொண்டு நடந்தவைகளை எல்லாம் விவரமாகக் கூறி முடித்தாள்.

கடைசியில் அவள், ''நீங்கள் இன்னும் ஆபத்தில் இருக்கிறீர்கள்!'' என்று சொன்ன போது தத்தன் திடுக்கிட்டான்.

''இங்கிருந்து தப்பித்துப் போய் விடவா?'' என்று கேட்டான்.

''உங்களுக்கு வலு இருந்தால் அப்போதே செய்யச் சொல்லியிருப்பேனே! இப்போது இருக்கும் நிலையில் நீங்கள் வெளியில் நடந்தால் உங்களுக்கு மீண்டும் ஜன்னி கண்டுவிடும். இன்னும் ஒரு வாரம் வெளியே போக முடியாது!''

''ஒரு வாரமா?''

''ஆமாம் அவ்வளவு ஓய்வாக இருந்தால்தான் உங்களுக்கு வலு ஏற்படும்.''

''நான் என் நண்பனைப் பார்க்க வேண்டுமே!''

''இப்போது கூடாது.''

''ஏன்? இரவில் போய்ப் பார்க்கிறேனே! சத்திரத்தில் பார்த்தால் என்ன?''

''ஐயோ, நீங்கள் வெளியே போனால் ஆபத்து!''

''ஏன்? இன்னும் அந்தச் சேவகர் குழு இங்கேதான் இருக்கிறதா?''

''ஆமாம்!''

''இங்கே அடிக்கடி வருகிறார்களா?''

''ஆமாம்.''

''ஏன் வருகிறார்கள்?''

''ஒரு சேவகருக்குக் காலில் காயம் பட்டுவிட்டது. அவர் இங்கே படுத்திருக்கிறார்.''

தத்தன் யோசித்தான்.

''அப்போது நீ எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டுமே?''

''சொல்லுங்கள்!''

''வல்லபனை நீ நேரில் போய்ப் பார்க்கவேண்டும்!''

அவள் யோசித்தாள்.

''எங்கே இருப்பார்?'' என்று கேட்டாள்.

''சத்திரத்தில்தான்!''

''சரி, பார்க்கிறேன்!''

அடுத்த நாழிகையில் வைத்தியர் வீட்டை விட்டு அவள் வெளியே வந்தாள்.

அங்குமிங்கும் வீதியைப் பார்த்துக் கொண்டு, நடக்க ஆரம்பித்தாள்.

சிறிது தூரம் போன போது திடீரென்று நின்றாள்.

அவளது பிடரி குறுகுறுத்தது. —தொடரும்.



போலீஸ்: நீ ஒரு பழைய கேடியாக இருந்தும் ரோட்டில் கிடந்த பர்ஸை எடுத்து வந்து ஒப்படைத்திருக்கிறயே, வெரி குட்.

கேடி: என்னங்க செய்வது? பர்ஸில் இருந்தது பூராவும் ஆயிரம் ரூபாய் நோட்டுகள் தானே?



பெண் பேய் தன் கணவனிடம் சொன்னது: "அடுத்த வீட்டுப் பையன்கிட்டே எச்சரிக்கை பண்ணுங்க! பேய் பிடிச்சமாதிரி நம்ம பொண்ணு பின்னடியே சுத்திக்கிட்டிருக்கானும்!"



"உனக்கு ஏதாவது இந்தப் பேய் லைஃப்லே ஆசை இருக்கா?" - நண்பரிடம் கேட்டது ஒரு பேய்.

"ஏன் இல்லாமல்! தமிழ் நாட்டிலேயே சிறந்த பேய் என்ற பட்டத்தை அடைய னும். அதுதான் என் ஆசை!" என்றது இரண்டாவது பேய்.

ஸ்ரீகாந்தின் மனைவி லீலாவதி சொல்கிறார்

# என் விருப்பம் என்ன?

"இ[illegible] களுடன் நடிக்கும் [illegible] என்ன எண்ணுகிறீர்கள்?"

"கொடுத்து வைத்தவர்! உண்மையைத்தான் நான் சொல்லுகிறேன். வேறு எந்தத் தொழிலில் உள்ளவர்களும் தன்னுடைய மனைவியையும் இந்த அளவுக்கு நெருங்கிப் பழக அனுமதிக்க முடியாது. மனதில் எந்த உணர்வுக்கும் இடம் இல்லாமலிருந்தாலும் பார்ப்பவர்கள் மனம் போனபடி கதை கதையாகப் பேசுவார்கள்.





ஆனால் என் கணவர் மற்ற பெண்களுடன் எந்த மாதிரிக் காட்சியில் நடித்தாலும் மக்கள் பாராட்டுகிறார்கள்!"

"நீங்கள் வெளியே தனியாகப் போவீர்களா? அல்லது கணவருடன் தான் செல்லுவீர்களா?"

"நான் எங்கும் தனியாகவே செல்வேன். குடும்பத்துக்கும் என் கணவருக்கும் என்ன வேண்டும் என்பதையும் நான்தான் பார்த்து வாங்கவேண்டும். எப்போதாவது அவருடன் செல்லும் வாய்ப்புக் கிடைத்தால் மகிழ்ச்சிதான். அப்போது அவரை ரசிகர்கள் சூழ்ந்து கொள்ளத் தான் செய்வார்கள். அதற்காக என் தனிமை வீணுகி விட்டதே என்று நான் வருந்துவது இல்லை."

"கணவருடன் அவுட்டோர் சென்ற அனுபவம் உண்டா?"

"பல இடங்களுக்குச் சென்று இருக்கிறேன். எனக்கு அங்கு சுவையான அனுபவம் ஏற்பட்டதுஇல்லை. ஆனால் மனதுக்கு மாபெரும் நிம்மதி. சென்னையில் இருக்கும்போது படப்பிடிப்புக்குச் சென்று விட்டு சில நேரம் இரவு லேட்டாக வருவார். மனம் விட்டுப் பேசுவதற்கு நேரம் கிடைப்பதும் கஷ்டம். அவுட்டோர் வந்து விட்டால் அவருடன் அதிக நேரம் தனியாக

இருக்கவும் மனம் [illegible]
வாய்ப்பு [illegible]

"தங்கள் கண[illegible]
லுக்கு எந்த வகை[illegible]
இருக்கிறீர்கள்?"

"ஷூட்டிங் செ[illegible]
ருக்கு வேண்டிய[illegible]
கிறேன். பிறகு [illegible]
குழந்தைகளைக் க[illegible]
கிறேன். பிறகுதான்[illegible]
குப் போகிறேன்."

"வேறு எந்த [illegible]
விஷயமாவது ச[illegible]
இருக்கிறீர்களா?"

"ஓ! மேஜர் அ[illegible]
நம்பியார் அ[illegible]
ஆகியவர்கள் [illegible]
இருக்கிறேன். அவ[illegible]
அன்புடன் நடந்[illegible]
கிறார்கள். ஒரு [illegible]
வியை அவர்கள் [illegible]
என்பது உங்கள்[illegible]
அவர்கள் மிகவும்[illegible]
இருந்து வருகிறார்[illegible]

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

சத்திரத்தை நோக்கி நடந்து கொண்டிருந்த மஞ்சரிக்குப் பிடரியில் குறுகுறுக்கவே திரும்பிப் பார்த்தாள். யாரும் தெரியவில்லை. ஆனால் மனத்தில் ஏதோ உதைத்தது. சிறிது நேரம் சுற்றிவரப் பார்த்து விட்டுச் சந்துகள் வழியாக நடந்து சத்திரத்தை அடைந்தாள்.

கூடத்தில் நுழைந்ததும் அவள் கையை யாரோ பற்றினார்கள். "சீ விடு!" என்று சொல்லித் திரும்பினாள். அருகில் நின்றது அவளுக்கு அறிமுகமான சேவகன். அவன் பலமாகச் சிரித்தான்.

மஞ்சரி பதைத்துப் போனாள். ஆனால் நொடியில் தன் நிலைக்கு வந்து, "எச்சரிக்கை, என்னைத் தொடாதே, என்று சீறினாள்.

"என்ன செய்வாயாம்?" என்றான் அவன்.

"சம்புவராயரிடம் சொல்லுவோம்."

சேவகன் ஒரு கணம் திகைத்தான்.

சம்புவராயரின் பெயர் அவனை என்னவோ செய்தது,

பிறகு நிலைக்கு வந்தவனாய், "ஓகோ! அவரை உனக்குத் தெரியுமாக்கும்!" என்றான் பாதி நையாண்டியாக.

"நன்றாகத் தெரியும்! என் தாத்தாவும் நானும் அவரைப் பார்க்கத்தான் போய்க் கொண்டிருக்கிறோம்" என்றாள் அவள்.

சேவகன் மீண்டும் திகைப்பில் ஆழ்ந்தான்.

பிறகு, "யாரைத் தேடுகிறாய்?" என்றான் அவன்.

"சத்திரத்திலே ஒரு பாட்டி இருப்பார்களே! அவரைத் தேடுகிறேன்" என்றாள் அவள்.

"சத்திரத்திலே ஒரு பாட்டி உண்டா?" என்றான் அவன்.

"உனக்குத் தெரியுமாக்கும்?" என்று அவன் கேள்வியையே அவனிடம் தூக்கிப் போட்டாள் அவள்.

பிறகு அவள் சுற்றும் பார்த்து விட்டு, அவள் தேடியவரைக் காணாததுபோல் ஒரு பாவனையை உண்டு பண்ணிக் கொண்டு, சற்றும் நிற்காமல் வாசலுக்குப் போய் வீதியில் இறங்கி நடக்கலானாள்.

ஆதுர சாலைக்கு மஞ்சரி திரும்புவதற்குச் சற்று நேரம் ஆகியது. வரும் வழியில் அவளுக்கு நிறைய யோசனைகள்.

"தாத்தா சொல்வது சரிதானே! 'அனாவசியமாய் மற்றவர்களுக்கு உதவி செய்யப் போய் உனக்கே கஷ்டம் உண்டாக்கிக் கொள்கிறாய்' என்பாரே! இப்போது அப்படித்தானே ஆகிவிட்டது!" என்று நினைத்தாள்.

"ஆமாம்! இந்த நண்பர் என்ற ஆள் சத்திரத்தில் இல்லையா? எங்கே போயிருப்பார்?" ஒரு கேள்வி வேறு மனத்தில் அடிக்கடி உதித்துக் கொண்டிருந்தது.

மெதுவாக நடந்து ஆதுர சாலையை அடைந்தாள்.

படி ஏறியதுதான் தாமதம், ஐந்து குதிரைக் காரர்கள் தமதம என்று வந்து இறங்கினார்கள்.

"ஏம்மா! சம்புவராயரிடம் சொல்வாயா? ஓகோ! அவ்வளவு தைரியமா?" என்று கூறியவாறு அந்தப் பழைய சேவகன் கீழே குதித்தான்.

மஞ்சரிக்கு ஆத்திரம் வெகுண்டு வந்தது. விருட்டென்று திரும்பினாள்.

"சொல்ல மாட்டேன் என்று நினைத்தாயா? நிச்சயம் சொல்லுவேன்" என்று படபடத்து நின்றாள்.

"சொல்லு! சொல்லு! நிறையச் சொல்லு! நாங்கள் அதற்குள் அந்த செத்த பிள்ளை பிழைத்திருக்கிறானா என்று பார்க்கிறோம்" என்று கூறிக் கொண்டு மற்ற சகாக்கள் பின் தொடர வைத்தியர் வீட்டுக்குள் நுழைந்தான் அவன்.

மஞ்சரிக்குச் சுரீர் என்றது.

"இவர்கள் ஏன் இந்த இளைஞர்களைத் தீவிரமாகத் தேடுகிறார்கள்? எல்லாம் மூடுமந்திரமாக இருக்கிறதே!" என்று நினைத்த அவள், "பகவானே! அந்த இளைஞரைக் காப்பாற்று! அரங்கநாதா, காப்பாற்று" என்று பிரார்த்தனை செய்தாள்.

உள்ளே ஒவ்வொரு இடமாக அவர்கள் தேடும் அரவம் கேட்டது. அடிக்கடி பலத்த சிரிப்புகளும் கேட்டன.

உக்கிராண அறையிலிருந்து சேவகர்கள் வெளியே வந்தபோது, மஞ்சரி கூடத்திற்குள் போனாள்.

"ஐயா, சேவகர்களே!" என்று கூவி அழைத்தாள். எல்லோருமே திரும்பினார்கள்.

"உத்தரவு இல்லாமல் உள்ளே போகிறீர்களே! உள்ளே, அருக்கன், அலகம், ஆதிபலம், கச்சோலம், கோலகுண்டம், பூமப்பாசம், வேரிதகம் ஆகிய

பாஷாணங்கள் எல்லாம் இருக்கின்றனவே! ஒன்றை ஒன்று தொட்டு வைத்தால் விஷமாயிற்றே! தவிர, துர்தேவதைகளை மண் குடங்களில் அடைத்து வைத்திருக்கிறார்களே! குடம் திறந்து ஏதாவது தேவதை உங்களைப் பிடித்துக் கொண்டாலும் ஆபத்தாயிற்றே!'' என்று சத்தம் போட்டுக் கூறினான்.

சேவகர்கள் தயங்கி நின்றார்கள். பிறகு எதையும் பொருட்படுத்தாது உள்ளே போக ஆரம்பித்தார்கள்.

மஞ்சரிக்கும் கதம் கதம் என்றிருந்தது.

அவர்கள் போய்விட்ட ஒவ்வொரு விநாடியும் யுகம் போல் நீடித்திருந்தது.

ஏதோ ஆபத்தை அவள் உள் மனம் எதிர்பார்த்துக்கொண்டிருந்தது.

நீண்ட நேரம் எதுவுமே நடக்கவில்லை. பிறகு சேவகர்கள் திரும்பி வரும் சப்தம் கேட்டது.

கூடத்திற்கு அவர்கள் திரும்பி வரும் வரை அவள் உயிர் அவள் கையிலில்லை.

வந்த சேவகர்கள் அவளை ஏமாற்றத்தோடும் வெறுப்போடும் பார்த்து விட்டுத் தலை குனிந்து கொண்டே வெளியே போனார்கள்.

வீதியில் அவர்கள் மறைந்து விட்டதும் மஞ்சரி துள்ளிக் கொண்டு குச்சிலுக்குள் போனாள்.

குச்சில் திறந்திருந்தது. உள்ளே யாரையும் காணவில்லை.

எங்கே போனார் அவர்?

குதிர்களைப் பார்த்தாள். பானைகளைப் பார்த்தாள். பரண்களில் எம்பிப் பார்த்தாள். காணவில்லை.

புழைக்கடைப் பக்கம் சென்று நெடுந்தூரம் வரை கண்ணோட்டம் இட்டாள்.

பிறகு சோர்ந்து கீழே அமர்ந்தாள். துக்கம் அவளைக் கவ்வியது.



சித்திரசாலையிலிருந்து மணங்கள் கழிந்து எங்கும் பரவிக் கொண்டிருந்தன. குறுகலான படிகளில் ஏறி மேல் மாடம் முழுவதும் அவை பரவி நிறைந்தன.

கூடவே இனிய கீதம் மெல்லிதாய் மேலே ஏறி வந்தது.

ஐந்து தினங்களாய் இந்த இசையும் மணமும் அவனை ஏதோ சுவர்க்க உலகத்தில் உலாவ விடுவது போலிருந்தது.

எனினும் அவை மீது நாட்டமே அவனுக்கு இல்லை. தனது நண்பன் தத்தனின் கதி ஏதாயிருக்குமோ என்பதே கவலையாக இருந்தது. நோயாளியாகக் கட்டிலில் படுத்திருந்தானே! அவனை அந்தச் சேவகர்கள் கண்டு விட்டிருப்பார்களோ ? அவர்கள் விட்டிருந்தாலும், நோய் அவனை எந்த நிலையில் வைத்திருக்குமோ தெரியவில்லையே!

பிரயாணம் போகப் போகச் சோதனைகள் சூழ்ந்து கொண்டிருக்கின்றனவே! இந்தச் சேவகர் கூட்டத்தைப் பார்த்தாலும் பார்த்தோம்! சனி தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறது.

அப்படியும் சொல்வதற்கில்லை. இந்தக் கூட்டத்தைப் பார்த்ததால்தானே அவளையும் பார்க்க நேர்ந்தது. அவளைப் பார்த்தது பெரிய அதிர்ஷ்டம் அல்லவோ! அவளது பார்வைக்குத்தான் என்ன சுகம்!

இவ்விதமாகச் சிந்தனைகள் செய்து கொண்டிருக்கும் போது மச்சில் படிகளில் யாரோ ஏறி வரும் சப்தம் கேட்டது.

வல்லபன் நிமிர்ந்து பார்த்தான்.

உள்ளே வந்தவள் சுகிர்த ரத்னா என்னும் பெண் மணி. அறுபது வயது மதிக்கத் தக்க அவள் அந்த ஊரில் உள்ள ● எம்பெருமானடியார் கூட்டத்தைச் சேர்ந்தவள். சங்கீதம், நிருத்தியம், சித்திரம், ஆருடம் இவைகளில் புலமை பெற்றவள். வயதின் வளர்ச்சியினாலும், அறிவின் வளர்ச்சியினாலும் அவளுக்கு மனதில் பகவானைப் பற்றியே பிரேமை கூடியிருந்தது. பார்க்கும் யாரையும் 'கண்ணா' என்றே அழைத்தாள்.

மேலடுக்குக்கு வந்தவள் வல்லபனைப் பார்த்து, "காலையிலிருந்து உணவே எடுத்துக் கொள்ளவில்லையாமே! எனக்குக் கவலையாக இருக்கிறதே! நானே வந்தேன்!" என்று சொல்லி மிகுந்த பரிவான உணர்ச்சிகளுடன் வெள்ளித் தட்டுக்கள் இரண்டையும் அவன் முன்னே வைத்தாள்.

வாழ்க்கையில் எல்லா வித உணர்ச்சிகளையும் முகத்தில் காட்டி அபிநயத்துப் பழக்கமானதால், இப்போது அவளிடம் தோன்றியிருந்த பரிவு உணர்ச்சி கூட இயல்பாகவே ஒரு அபிநயத்திற்கு உட்பட்டு ஒரு கலைவடிவமாகப் பரிணமித்திருந்தது.

பலமுறை, "கண்ணா!" என்று அழைத்து அவனுக்குத் தட்டில் உணவு படைத்து விட்டுக் கீழே போனாள் அவள்.

இங்கே வந்து தங்கிய ஐந்து தினங்களிலும் அவன் அவளைக் கவனித்து வருகிறான். ஒரு தாயைக்காட்டிலும் பரிவு உடையவளாக இருந்தாள் அவள். அந்த உபசாரத்திற்கும், உபசரணைக்கும் ஈடு கிடையாது. அன்பு எத்தனை இடைவெளிகள் வழியாகப் பாய்வதற்கு வசதி இருக்கிறது என்பது அவள் உபசரிப்பின் மூலம்தான் தெரிய வந்தது.

நல்ல வேளை! சத்திரத்தை விட்ட இரவில் எங்கேயோ புறந்திண்ணையில் தூங்கிவிட்டு, மறுநாள் காலையில் பொழுது புலரும் முன்பே எழுந்து, ஒரு புகலிடம் தேடித் திரிந்த போது, இந்தப் பெண்மணியைப் பார்க்க நேர்ந்தது. விஷயத்தைத் தெரிவித்தபோது தனக்கு ஒரு விருந்தாளி கிடைத்து விட்டான் என்று எவ்வளவு மகிழ்ச்சி அடைந்தாள் அவள்! அன்றிலிருந்து இந்த

---

● எம்பெருமானடிகள்—தேவதாசிகள்

நான்கு தினங்களாக அவனது உபசரணைகளைப் பார்த் தால்...

தட்டில் வந்த உணவை வல்லபன் உண்டு முடித் திருப்பான். ஓசை அரவம் கேட்டது. அவன் காதுகள் எச்சரிக்கையாகி விட்டன.

முதலில் ஒரு தோரணைக் குரல கேட்டது. அந்தக் குரலை எங்கேயோ கேட்டது போலிருந்தது. அந்தச் சேவகர்களில் ஒருவன் குரல் அல்லவோ!

''வீட்டில் யார் யார் இருக்கிறார்கள்?''

''சொந்தக்காரர்கள்தான் இருக்கிறோம்'' என்று கூறிக் கொண்டிருந்தாள் சுகிர்த ரத்னா.

''வீட்டை நாங்கள் சோதனை இட வேண்டும்.''

''சோதனையா? அதற்கு நான் அனுமதிக்க முடி யாது?''

''ஏன் அனுமதி இல்லை?''

''என் வீடு புனிதமானது. அதில் வெளியாரை அனுமதிக்க வழியில்லை.''

''எல்லார் வீட்டிலுந்தான் சோதனை போட்டு வருகிறோம். வழி விடுங்கள்...''

அவர்கள் உள்ளே நுழைய முற்படும் சப்தம் கேட்டது. வல்லபனுக்கு மனம் பரபரத்தது.

''நில்லுங்கள்!''

உரத்த குரலில் கத்தினாள் சுகிர்த ரத்னா.

''எங்களைத் தடுக்காதே அம்மா!''

''உள்ளே போகாதே!'' மீண்டும் இரைந்தாள் அவள். ''நீங்கள் சம்புவராயர் நாட்டைச் சேர்ந்தவர் கள்தானே?''

''ஆமாம்!''

''நாங்கள் இருப்பது * சரத்தான் நாடு! இங்கே உங்களுக்கு எந்தவித அதிகாரமும் கிடையாது. ஒரு காத வழிக்கு அப்பால்தான் உங்கள் சம்புவராயர் சீமை துவங்குகிறது. அதற்குள் உங்கள் அதிகாரங்களை இங்கே காட்டி விடாதே! ஆமாம். சரத்தானுக்கு ஆயிரம் பேர் படை * கொடுப்பவள் நான்! ஏதாவது அமளி பண்ணினால் நான் சரத்தானுக்குச் செய்தி அனுப்பு வேன். ஜாக்கிரதை'' என்றாள் சுகிர்த ரத்னா.

சேவகர்கள் அயர்ந்து பேசப் பேசாமல் நின்றார் கள்.

''ம்...இங்கே நிற்காதீர்கள். வெளியே போங்கள். இல்லாவிடில் செய்தி அனுப்புவேன்!'' என்று கத்தினாள் ரத்னா.

சிறிது நேரம் நிசப்தம்.

பிறகு காலடி ஓசைகள் தேய்ந்து மறைவதைப் பார்த்தால் அவர்கள் வெளியே போயிருக்க வேண்டும் என்று தோன்றியது.

வல்லபன் உடனே திட்டிவாசலுக்கு ஓடினான். அந்த வாசல் வழியாகத் தட்டோடிக்குச் செல்ல லாம். அங்கே சென்று வாசல் புறமாக உள்ள கைப்பிடிச் சுவர் பக்கம் போனான். வெளியே ஆவலோடு பார்த்தான்.

அந்த உயரத்திலிருந்து ஓசை ஆட்களின் தலைகள் தான் தெரிந்தன.

ஆவலோடு அவன் கவனித்தபோது மூன்று சேவகர்களும் வெளியே போவதை அவன் பார்த்தான்.

* சரத்தான் — சுல்தானியர்.

* அரசருக்குத் தாங்கள் கொடுக்க வேண்டிய வரிகளுக்குப் பதிலாக தேவதாசிகள் தங்கள் செலவில் ஆயிரம் பேர் படை ஒன்றை வைத்துக் கொள்ள வேண்டி வந்தது. யுத்த காலத்தில் இந்தப் படையை அவர்கள் அரசருக்குக் கொடுத்து உதவ வேண்டும்.



கல்யாணம் பண்ணிப் பார்! வீட்டைக் கட்டிப் பார்! இந்த இரண்டும் ஆயிற்று. இப்பொழுது கழுத்தைக் கட்டிப் பார்க் கிறீரோ, மஞ்சுளா?

படம்: சங்கர்-சலீம்-சைமன்
திரைஞானி

உவகையுடன் திரும்புகையில் எதிர் வீட்டின் மச்சில் சாளரத்தின் மீது பார்வை விழுந்தது.

விழுந்த கணத்திலேயே உறைந்து விட்டது.

அங்கே அந்த இளம் பெண் — அவனது மகர விழியாள்—நின்று கொண்டு ஓசை பார்த்துக் கொண் டிருந்தாள்.

''இங்கே இருக்கிறேன்! இதோ! இதோ!'' என்று அவன் மனம் துள்ளிக் கூவியது.

அந்தப் பெண் தன் கண்ணைத் திருப்பிப் பல இடங்களில் பார்த்தாள். அவனது பக்கம் வரை கூட அவளது பார்வை வந்துவிட்டது.

''பார்த்து விடுவாள்!'' என்று அவன் நினைக்கும் போது அவள் பார்வை திரும்பி விட்டது.

மனம் பக்கென்று இருட்டாகியது. நினைவுகள் வீழ்ந்தன.

கண்களில் மள மள என்று நீர் வழிந்தது.

—தொடரும்



# துளி துளி

ஒவ்வொரு வருடமும் ஜனவரி 26-ந்தேதி குடியரசு கொண்டாட்ட தினத்தன்று, புதிதாக ஏதாவது கண்டுபிடிக்கும் சிலருக்கு விருதுகள் அளிக்கப்படுகின்றன. இந்த வருடம் துணி ஆலை இயந்திரப் பகுதி ஒன்றைக் கண்டுபிடித்தவர் கௌரவிக்கப்பட்டார். இதே போன்று வீடுகளில் உபயோகப்படக் கூடிய சாதனங்களைக் கண்டுபிடிப்பவர்களுக்கும் விருதுகள் அளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். உதாரணமாக,

1. குழம்பில் உப்பு அதிகமாகி விட்டால் அதைக் குறைத்துச் சரிப்படுத்தும் பௌடர்.

2. சமையலில் புளி குறைவாயிருந்தால் அதைச் சரி செய்யும் பௌடர்.

3. பால் நன்றாக தயிராகும்படிச் செய்யக் கூடிய பௌடர்.

4. நாகரிகமானவர்கள் வாசலில் தெளிக்க உபயோகிக்கச் செயற்கை வாசனை சாணம் போன்ற கண்டுபிடிப்புகளுக்கு அளிக்கலாம்.

கடவுள் 'காலம்' என்பதைச் சிருஷ்டித்திருப்பதற்குக் காரணம், இருபத்து நான்கு மணி நேரமும் ஓயாமல் குழந்தைகளைச் சிருஷ்டித்துக் கொண்டிராதிருப்பதற்காகத் தான்.

'முத்தம்' என்றால் 'உதடுகளால் அன்போடு தொடுவது'' பில்லியர்ட் விளையாட்டுப் பந்துகள் ஒன்றையொன்று தொடுவது' என்றெல்லாம் ஆங்கில அகராதிகளில் விளக்கங்கள் தரப்பட்டிருக்கின்றன. ஆனால் திரைப் படங்களில் தடை செய்யப்படும் முத்தம் ''ஓர் ஆணின் உதடுகளும், ஒரு பெண்ணின் உதடுகளும் உரசிக் கொள்வதாகும்'' என்று கூறலாம்.

திரைப்படக் காட்சிகளில் முத்தம் கொடுப்பதில் உலகப் புகழ் பெற்றவர் நடால்ப் வாலென்டினோ என்ற பழைய கால அமெரிக்க நட்சத்திரம் ஆவார். அவரது முத்தங்கள் குறைந்தது மூன்று நிமிட நேரம் நீடித்திருக்கும்!

அவரைப் போன்றே முத்தமிடச் செய்யும் காட்சி ஒன்றை ஒரு வட இந்தியப் படத்தில் புகுத்த முயன்றார்கள். கதாநாயகி கொஞ்சம் 'திமிர்' பிடித்தவள். அவளுக்கும் கதாநாயகனுக்கும், டைரக்டருக்கும் இடையே சிறிது மனத்தாங்கல் ஏற்பட்டிருந்தது.

முத்தக் காட்சி படம் பிடிக்கப்பட்டு வந்தது. டைரக்டர் வேண்டுமென்று அந்தக் காட்சியைப் பதினைந்து தடவைக்கு மேல் 'ரிடேக்'குகள் எடுத்தார். கதாநாயகனும் முரட்டுத்தனமாய் முத்தமிட்டதில், நடிகையின் உதடுகளும், கன்னங்களும் 'புண்ணாய்'ப் போய் விட்டதாம்! இது நடந்தது பல ஆண்டுகளுக்கு முன்னர்.

அதி நீளப் பின்னல் அழகி என்று ஜெயசுதாவுக்குப் பட்டம் கொடுக்கலாம் போலிருக்கிறதே!

படம்- பிறந்த வீடு- திரைஞானி

சமீபத்தில் நடைபெற்ற திரைப் படத் திருவிழாவில் ஓ காட் (அட கடவுளே!) என்ற தலைப்புள்ள திரைப்படம் காண்பிக்கப்பட்டது. இதில் கடவுளே ஒரு ஸ்டோர் கடைக்கு விஜயம் செய்கிறார். அங்கு சாமான் விற்பவரிடம் ஒரு பிரபல பாதிரியைப் பற்றி இழிவாகக் கூறுகிறார். அந்தப் பாதிரி, தன் பெயரைச் சொல்லிப் பணம் சம்பாதிக்கிறார் என்கிறார் கடவுள். பாதிரி நீதி ஸ்தலத்தில் வழக்குத் தொடுக்கிறார். கடவுளே கோர்ட்டில் ஆஜராகி வாதமிடுகிறார்.

கடவுளே, உண்மையில் நேரில் நம்மிடையே வந்து பழகுவதைப் பக்தர்கள் விரும்ப மாட்டார்கள் என்பதை எடுத்துக் கூறும் நகைச்சுவைக் கதை இது.

இந்தத் 'தத்துவத்தை' எடுத்துக் கூறும் கதை ஒன்றை பின்னி பிரெட் ஹால்ட்பி என்ற மா... பல ஆண்டுகள் முன்னரே எழுதியிருக்கிறார்.

'ஆண்டவனின் குரல்' என்ற தலைப்புள்ள அந்தக் கதையில் வரும் ஒரு விஞ்ஞானி ஒரு புது வித ரேடியோவைக் கண்டுபிடிக்கிறார். அந்த ரேடியோவைத் திருகினால் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் பேசப்பட்ட விஷயங்கள் ஒலிபரப்பப்படுகின்றன. இயேசுநாதரின் போதனைகள் எல்லாம் அதில் அவரது சொந்தக் குரலிலேயே கேட்கின்றன. அவர் தமது 'பத்து கட்டளை'களைப் போதிப்பது காதில் விழுகிறது. இதைக் கேட்கும் சாதாரண மக்கள் பரவசமடைகிறார்கள். ஆனால், ஒரு நாளிரவு சில கோடீசுவரர்களும், அரசியல்வாதிகளும், பெரிய பாதிரிகளும் இந்த தெய்விக ரேடியோ பெட்டி வைக்கப்பட்டிருந்த அறைக்குள் புகுகிறார்கள்.

''எங்களுக்கு இந்தப் பிரசாரம் இன்று தேவையில்லை. இயேசுநாதர் வாழ்க!'' என்று கூறிக் கொண்டே தம் கைகளில் வைத்திருந்த சம்மட்டிகளால், அந்த ரேடியோப் பெட்டியைச் சுக்கு நூறாக உடைத்து விடுகிறார்கள்!

—பாலாஜி

Printed & Published on behalf of Indian Express (Madurai) Ltd. by R. RAMAKRISHNAN at the DINAMANI PRESS Express Estate Madras-600002. Acting Editor: K. R. VASUDEVAN.



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

அந்தப் பெண்- அவனது மகர விழியாள்- அவளைப் பாராதது வல்லபனுக்கும் பெரிய வருத்தத்தை அளித்தது. நினைவிலேயும் ஒரு புது வேதனை நிரம்பியது. இதுவரை அவன் கண்டறியாத வேதனை.

அன்றைய நாள் முழுவதும் துக்கமாகவே இருந்தான்.

வெயிலுக்காக அவன் மச்சிலுக்குள் நுழைந்த போதெல்லாம் அந்த எம்பெருமானடியார் சுகிர்த ரத்னு அவனை வந்து பார்த்துக் கொண்டிருந்தான்.

சேவகர்கள் ஒவ்வொரு வீட்டிலும் சோதனை போடுவதையும், ஊரில் அட்டகாசம் செய்வதையும் எடுத்துக் கூறினான்.

"தடியை எடுப்பவர்கள் இப்படித் தண்டல் நாயகர்களாக ஆகிறார்களே! நாடு இப்படிச் சீரழிந்து விட்டதே! இது என்று உருப்படப் போகிறதோ?" என்று கூறினான்.

உண்மையில் அந்த ஊரிலேயே ஒரு பயம் குடிகொண்டு விட்டது. அந்தச் சேவகர்கள் அவ்வளவு தூரம் பயமுறுத்திக் கொண்டிருந்தார்கள்.

ஆனால் எவருக்குமே அது இன்ன காரணம் என்று சரியாகப் புலப்படவில்லை.

சிலர் அவர்களைக் கொள்ளைக்காரர்கள், சம்புவராயரின் சேவகர்கள் அல்ல என்றார்கள்.

சிலர் அவர்களை வெறும் கடத்தல்காரர்கள், யாரையோ கடத்திக் கொண்டு போகிறார்கள் என்றார்கள்.

இது காரணம் பற்றியே பூங்குளத்து நல்லூர் என்னும் அந்தப் பேரூரில் எங்கும் பீதி நிரம்பியிருந்தது.

ஆனால் அந்தப் பீதி கடைசியாக அன்றிரவு வரை தான் நீடித்திருந்தது. மறு நாள் 'சேவகர்கள் ஊரை விட்டுப் போய் விட்டார்கள் என்ற செய்தி எங்கும் பரவியதும், ஊரில் பெரிய நிம்மதி ஏற்பட்டது.

மழை நாட்கள் விட்ட பாடில்லை. இடையில் இரண்டு நாட்கள்-வெறித்திருந்ததால்மூன்றும் நாள் மழை அடித்தது.

பெரிதாகத் தெரிந்த அந்த ஏரி முழுதும் நீரால் நிரம்பியிருந்தது.

வடிகால்கள் வழியே நீர் பாய்த்து ஓடிக்கொண்டிருந்தது.

அவை எழுபபும் ஓசை தென்னு தெனு என்று வண்டு முரல்வது போலிருந்தது.

ஏரிக்கரைக்குச் சற்று அப்பால் மேடான பூமியில் அந்த மண்டபம் இருந்தது.

பதினாறு கால் மண்டபம் அது. தூணில் கற்றுக் குட்டிச் சிற்பங்கள் அரைகுறையான வடிவங்களில் இருந்தன.

அந்த வழியாகப் போகும் பிரயாணிகளுக்கு அது ஒரு தங்கு மண்டபமாக இருந்தது. யாத்திரிகர்கள் தங்கி அந்த நீண்ட நெடும் ஏரியின் தண்ணீர்க் காட்சியையும், சுற்றி வரப் பரந்து கிடக்கும் பச்சை வயல்களின் காட்சியையும் கண்டு களித்துச் செல்வார்கள்.

இரவு நேரம். மழை ஓய்ந்திருந்தாலும் பிசுபிசுப்பு விடவில்லை. ஈர வாடையுடன் ஊதலாக ஒரு காற்று அந்த மண்டபத்தைக் கோதி எடுத்துக் கொண்டிருந்தது.

வெளியே எழும் முனகலுக்குப் போட்டி போடுவது போல் மண்டபத்துக்குள்ளும் ஒரு முனகல் எழுந்து கொண்டிருந்தது.

அது ஒரு மெலிந்த வயோதிகரின் முனகல்!

ஓமே கோரப் பாயை விரித்து அதன் மேல் துணிகளைப் பரப்பி அதற்கு மேலாகப் படுத்திருந்தார் அவர்.

அவர் அருகில் ஒரு இளம் பெண் கவலையே உருவாக அமர்ந்து அவருக்குப் பணிவிடைகள் செய்து கொண்டிருந்தாள்.

அந்த மண்டபத்தின் இரு பகுதிகளை மண் வைத்துச் சுவர் எழுப்பி இரண்டு அறைகள் போல் தடுத்திருந்தார்கள்.

அத்தகைய தாற்காலிக அறை ஒன்றில்தான் அவர் படுத்திருந்தார்.

அவர் தலைமாட்டிற்குச் சற்று அப்பால் ஒரு திரி விளக்கு காற்றில் முனுக்கிட்டுக் கொண்டிருந்தது.

பெண் உள்ளே பணிவிடை செய்து கொண்டிருக்கும் அதே நேரத்தில், மண்டபத்தில் மற்றொரு ஓரத்தில் இரண்டு யாளிச் சிற்பங்கள் மீது சாய்ந்து கொண்டு இரு இளைஞர்கள் காரசாரமாக விவாதித்துக் கொண்டிருந்தார்கள். அவர்கள் இருவரும் வல்லபனும் தத்தனும் ஆவார்கள்.

''நீ இவர்களை அழைத்து வந்தது தப்பிதம்!'' என்றான் தத்தன்.

''நீயும்தான் அதற்குச் சம்மதித்தாய்!'' என்றான் வல்லபன்.

''நான் சம்மதித்த காரணம் வேறு! அரங்கன் கோஷ்டியுடன் புறப்பட்ட ஐந்துபேரில் அந்தப்பெண்ணுடைய மாமன் ஒருவர் என்று சொன்னார்கள். இப்போது அந்த மாமன் காஞ்சியில்இருக்கலாம் என்றும் சொன்னார்கள். தாம் காரியத்திற்கு உதவியாக இருக்குமே என்றுதான் அவர்களை அழைத்து வருவதற்குச் சம்மதித்தேன்'' என்றான் தத்தன்.

''நானும் அதே காரணத்திற்குத்தான் ஒத்துக் கொண்டேன். தவிர இதில் ஒரு தார்மீக நினைவும் இருக்கிறது'' என்றான் வல்லபன்.

''என்ன நினைவு?'' என்றான் தத்தன்.

''நாம் இருவரும் உயிரோடு தப்புவதற்கு அவள் பெரிதும் உதவி இருக்கிறாள்! அதை மறந்து விடாதே!''

''ஆமாம்: இவள் இல்லாவிட்டால் தப்பித்திருக்க முடியாதாக்கும்! வைத்தியர் வீட்டைச் சேவகர்கள் சோதனை போட்ட போது நானாகத்தான் தப்பினேன். சேவகர்களின் குரல் கேட்டதும் ஓடிப் போய், புழைக் கடைக் கிணற்றுக்குள் இறங்கிக் கொண்டேன். அந்த ஆழமான கிணற்றில் கடைசி உறையில் நின்று கொண்டிருப்பது எவ்வளவு கஷ்டமாக இருந்தது தெரியுமா? மயக்கம் மயக்கமாக வந்தது'' என்றான் தத்தன்.

''ஓகோ! பெரிதாக அதைச் சொல்ல வந்து விட்டாய்! அதற்கு முன்னால் ஜன்னி கண்டு நினைவு இல்லாமல் படுத்திருந்தாயே! அப்போது என்ன நடந்தது என்று மறந்து விட்டாயோ?''

''என்ன நடந்தது?''

''உன்னை ஒரு சேவகன் அடையாளம் கண்டுபிடித்திருப்பான். அவள் அப்போது சாமர்த்தியமாக நடந்து கொண்டாள். 'நீ இறந்து விட்டாய்!' என்று பொய் சொல்லி நடித்தாள். உன்னை ரகசியமாகக் குச்சிலுள் படுக்க வைத்தாள். உனக்கு இரவும் பகலும், இடையறாது பணிவிடை புரிந்தாள்.''

''ஹூம்! இது ஒரு பெருதவியா?''

''ஆமாம்! பெருதவிதான்! அது மட்டுமல்ல, பெரிய அதிர்ஷ்டம் கூட!''

''அதிர்ஷ்டமா?''

''ஆமாம்! ஒரு பெண் உனக்குப் பணிவிடை செய்யக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே?''

''நான் அதை அதிர்ஷ்டமாகக் கருதவில்லை!'' என்றான் தத்தன் தீவிரமாக.

''நீ உயிர் தப்பியதைக் கூடவா?''

''ஆமாம்! விதி இருந்தது. பிழைத்தேன். அவ்வளவுதான்!''

எந்த விதத் தாட்சணியமும் இல்லாமல் தத்தன் அப்படிச் சொல்வது வல்லபனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அவன் சிறிது நேரம் மௌனமானான்.

சிறிது நாழிகைக்குப் பிறகு தத்தன் தலை நிமிர்ந்தான். வல்லபன் பேசாமல் இருப்பது அவனுக்கு ஏதோ போல் இருந்தது. மெதுவாக அவனைப் பேச்சுக்கு இழுக்க நினைத்து—

''என் குறிக்கோள் அரங்கனைத் தேடிக் காண்பது!'' என்றான்.

வல்லபன் சடக்கெனத் திரும்பினான்.

''என் குறிக்கோளும் அதுதான்!'' என்றான் அவன்.

''அதை நான் அறிவேன்!'' என்றான் தத்தன்.

''அதனால்தான் அந்தப் பெண் நம்மோடு கூட வரச் சம்மதித்தேன்'' என்றான் வல்லபன்.

''அவள் வருவதால் அரங்கனைக் கண்டு பிடித்து விட முடியுமா?'' என்றான் தத்தன்.

''நிச்சயமாக முடியும் என்று சொல்லவில்லை. ஒரு வேளை அவளது மாமனைப் பார்க்க நேர்ந்தால்......''

''நேர்ந்தால்தானே! நேராவிட்டால்?''

''நேராவிட்டால் என்ன?'' என்று சொல்லி வல்லபன் நிறுத்தினான். பிறகு தொடர்ந்து 'இதை ஒரு இரக்கத்திற்குரிய காரியமாக நினைத்துக் கொள்கிறேன்.'' என்றான்.

''எப்படி?''

''இந்தப் பெண்ணை அவள் பெற்றோர்களிடம் ஒப்படைக்கவேண்டும் என்று அவர் பாட்டனார்தீர்மானித்துக் கொண்டிருக்கிறார். அதை நிறைவேற்றி வைத்தால் பெரும் புண்ணியம்தானே!''



ஒரு பெண்: புருஷனோடு ஹனிமூன் டூர் போனயே, என்ன பார்த்துத் தொலேத்தாய்?

அடுத்தவள்: திருச்சியில் பேனவைத் தொலேத்தேன். சென்னையில் ஹாண்ட் பேக்கைத் தொலேத்தேன். பெங்களூரில் சூட்கேசைத் தொலேத்தேன்.



சிறை வார்டர்: மணி பதினொண்ணு ஆவப் போவுது... தூங்கலே...?

கைதி: ஒரு ராத்திரிக்கு ஒரு பூட்டையாச்சும் உடைக்கல்லேன்னு எனக்குத் தூக்கம் வராதுங்க!

அப்போது திடீரென்று மஞ்சரி மண் அறையி லிருந்து எட்டிப் பார்த்து, ''ஐயா! ஐயா! வாருங்கள்! வாருங்கள்! தாத்தா எப்படியோ பார்க்கிறார்'' என்று இரைந்து கூவினாள்.

இருவரும் ஓடினார்கள்.

அறைக்குள் பாட்டனார் வெட வெடத்துக்கொண் டிருந்தார். அவர் கண்கள் செருகிக் கொண்டிருந்தன. தத்தன் அவர் பக்கத்தில் போய் அமர்ந்து கொண்டான்.

சிறிது நேரம் கழித்த பிறகுதான் அவர் விழித்தார். அருகில் இரு இளைஞர்கள் இருப்பதைப் பார்த்துக் கண்ணீர் விட்டார். அவர்களில் தத்தனைத்தான் அவரால் அடையாளம் கண்டு பிடிக்க முடிந்தது. அவன் கைகளைப் பற்றிக்கொண்டார்.

பிறகு அந்தப் பாட்டனார் மஞ்சரி பக்கம் மெது வாகத் திரும்பி, ''எனக்கு வெந்நீர் வேண்டுமே!'' என்றார்.

மஞ்சரியும், அவளுக்கு உதவியாக வல்லபனும் உடனே எழுந்து போனார்கள்.

பாட்டனார் தத்தனது கைகளைப் பற்றிக் கொண் டார். ''அப்பா! நான் வடக்கே காஞ்சியை நோக்கிப் போகிறேன். இந்தப் பெண் என்னுடைய பேத்தி! இவளுடன் தான் போகிறேன். போகிற வழியில் எனக்கு கடும் ஜுரம் கண்டது. அதனால் தான் பூங்குளத்து வைத்தியர் வீட்டில் தங்கினேன். வைத்தியர் எனக்கு நன்றாக சிகிச்சை அளித்தார். எனினும் எனக்குத் தள் ளாமை கூடிவிட்டது. இதை என் அந்திம வேளை என்று நினைக்கிறேன். அதனால் தான் உன்னிடம் ஒன்று கூற வேண்டும். கடவுளாகப் பார்த்துத் தான் வைத்தியர் வீட்டில் உன் பரிச்சயத்தை ஏற்படுத்தினார் என்று நம்பு கிறேன். இப்படி அருகில் வாப்பா!'' என்றார் பெரு மூச்சுகளுடன்.

தத்தன் அவர் பக்கம் நகர்ந்தான்.

''ஆமாம்; இந்தப் பெண் என் பேத்தி! இவளது பெற்றோர்களுக்கு இவள் ஒரே குழந்தை. இந்தக் குழந்தை பிறந்தால் அவர்கள் திருப்பதி யாத்திரை போகிறேன் என்று பிரார்த்தனை செய்துகொண்டார் கள். குழந்தை பிறந்து விட்டது. ஆனால் அதற்கு நோய் அடிக்கடி வந்ததால் அதை அவர்கள் திருப்பதிக்கு எடுத்துச் செல்லவில்லை. புருஷனும் மனை வியுமாகவே திருப்பதிக்குப் புறப்பட்டார்கள். அவர் கள் போன வேளையில்தான் கண்ணனூர்ப் போர் நிகழ்ந் தது. இதில் வெற்றி பெற்ற துருக்கியர்கள் எல்லா ஊர் களுக்கும் சென்று சூறையாடினார்கள். போகிற வழியில் அவர்கள் கையில் மாட்டிக் கொண்டு அந்தத் தம்பதியர் இறந்துவிட்டார்கள். அவர்கள் ஊருக்குத் திரும்பவே இல்லை'' என்றார் அவர்.

''அது அந்தப் பெண்ணுக்குத் தெரியாதா?''

''தெரியாது. பத்து வயது வளர்ந்த பிறகுதான் பெற்றோர்களைப் பற்றி அவள் கேட்க ஆரம்பித்தாள். ஒவ்வொரு முறையும் ஒவ்வொரு காரணம் கூறிக் கொண்டு வந்தேன். காஞ்சீபுரம் மாமன் வீட்டில் அவர் கள் இருப்பதாகவும், நாட்டில் கல்தான் ஆட்சி நடப்ப தால்தான் அவர்கள் ஊருக்குத் திரும்பவில்லை என்றும் கூறி நாட்களைக் கடத்தினேன். கடைசியில் அந்தப் பெண்ணின் வற்புறுத்தலின் பேரில்தான் இந்த யாத்திரையை மேற்கொண்டிருக்கிறேன்!'' என்றார் அவர்.

தத்தன் அதிர்ச்சியடைந்தான்.

வயோதிகரை உடனே பெரிய இருமல் ஆட் கொண்டது. அதற்கு மேல் அவரால் பேச முடிய வில்லை. நெஞ்சை இறுகப் பிடித்துக் கொண்டார்.

நடு ஜாமம் வரை இருமல் நீடித்தது. பிறகு எல் லாம் நின்றுவிட்டது. பெரியவர் இறந்துவிட்டார்.

ஒரு காலைப் பொழுது பொன்னிறமாகத் திகழ்ந்து எங்கும் ரம்யமான பட்சிக் கீதங்கள் எழுந்து கொண்டிருந்தபோது, திருநாராயணபுரத்தில் உள்ள வேதாந்த தேசிகரின் குடிலுக்கு கோபணு விஜயம் செய்தார்.

அவருக்கு முறைப்படி நமஸ்காரங்கள் செய்த பின், ''சுவாமி! அடியேன் திருப்பதி வரை யாத் திரை போய் வரவிருக்கிறேன். ஆசீர்வதியுங்கள்!'' என்றார்.

''வேங்கடவனது அருள் எப்போதும் இருக்கும்!'' என்றார் தேசிகர்.

'''சுவாமி! அடியேனுடைய அபிலாஷை மற்றொன் றும் உள்ளது!'' என்றார் கோபணு.

''என்ன அபிலாஷை?'' என்றார் தேசிகர்.

''அடியேன் அரங்கனைத் தேட விரும்புகிறேன். அதற்கும் தங்களது அனுக்கிரகம் வேண்டும்'' என்றார் கோபணு.

''தேசிகரின் திருக்கண்களில் ஒளிக் கூடிற்று. முகத்தில் மந்தகாசத்தின் சுடர் வீசியது.

கோபணு! இந்த அடியவனுடைய அனுக் கிரகம் எதற்கு? சர்வகல்யாண குணங்கள் உடைய பக வானின் தயை இருந்தால் போதுமே? அந்த தயையின் சொரூபம் யார்? வேங்கடவனது திருமார்பில் வீற்றிருக் கும் லட்சுமிதானே! அந்த தயையிடமே தயைக் கேட்டுப் பிரார்த்திக்கலாமே!'' என்று கூறினார் அவர்.

அவர் திருக்கண்கள் அப்போது மூடின.

அவற்றினின்று ஆனந்த பாஷ்பங்கள் உதிர ஆரம் பித்தன.

—தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

திருக் கண்களிலிருந்து ஆனந்த பாஷ்பங்கள் உதிர வேதாந்த தேசிகர் என்றும் அந்த வைணவப் பெரியவர் மெய்மறந்து விதிர் விதிர்க்க உரோமாஞ்சனம் இட்டுப் பாட ஆரம்பித்தார்.

*அநுசர சக்த்யாதி குணம்*
*அக்ரேஸர போத விரசிதாலோகாம்!*
*ஸ்வாதீன வ்ருஷ கிரீசாம்*
*ஸ்வயம் ப்ரபூதாம் ப்ரமாணயாமி தயாம்!!*

[ 'தயை' என்னும் தேவி சக்தி, வீரியம், பலம் போன்ற குணங்கள் தன்னைத் தொடர்ந்து வருகிற வேலைக்காரர்களாகக் கொண்டிருக்கிறாள். ஞானம் என்னும் குணம் அவளுக்கு வெளிச்சம் காட்டி முன்னே செல்கிறது. வேங்கடமலையில் உள்ள வேங்கடவனைத் தனது வசமாக வைத்துள்ளாள். தானே ஆளுகின்ற அரசியாகவும் இருக்கிறாள். இத்தகைய தயை என்னும் தேவியே (தயா தேவி) சரணம் அடையத் தகுந்தவள் என்று நான் அறுதி இடுகிறேன். ]

தம் வாழ்நாளில் தேசிகர் நூற்றுக்கும் அதிகமான நூல்களை இயற்றி அருளி உள்ளவர்.

அவற்றுள் 'தயாசதகம்' என்னும் நூலில் வரும் ஒரு பாடல் இது.

தமது இளம் பிராயத்தில் திருப்பதி சென்றிருந்த போது தேசிகர் மனம் உருகிப் பாடிய நூற்றெட்டுப் பாடல்கள்தான் 'தயாசதகம்' என்னும் பெயர் பெற்றவை.

★ த்வய மந்திரத்தின் விளக்கந்தான் இந்த 'சதகம்' என்று பல வைணவர்கள் கருதுவார்கள்.

அப்படிப்பட்ட சதகத்தின் ஒரு பாடலைத் தேசிகர் கோபணுவுக்குப் பாடிக் காட்டி விட்டு, 'தயை'யின் உருவாக இருக்கும் லட்சுமி தேவியையே பிரார்த்திக்கும்படி அவரைப் பணித்தார்.

"தன்னைக் கொண்டே தன்னைப் பாடுவித்துக் கொள்ளும் பெருமான், தன்னைக் கொண்டே தன்னைத் தேடுவித்துக் கொள்வான். ஆகையால் கோபணு! உம் நெஞ்சில் உறையும் பெருமான் உம்மையே தூண்டி விட்டுத் தம்மைத் தேடிக் கொள்ளச் சொல்கிறார். எது எது எப்போது நடக்க வேண்டுமோ, அது அது அப்போது நடக்கிறது. உமக்கு தெய்வ ஆக்ஞை பிறந்து விட்டது. நீர் பகவானைத் தேடிக் கொண்டு போகலாம்" என்று பல பொருள்படும்படிக் கூறி கோபணுவுக்குத் 'தயா சதகத்தின்' ஒரு ஏட்டுப் படியையும் கொடுத்து வாழ்த்தி வழி அனுப்பினார்.

வெளியே வந்த கோபணு தமது அந்தரங்க ஆட்கள் மூவருடன் குதிரை ஏறிக் கொண்டு கிழக்கு திசை நோக்கிப் பிரயாணப்படலானார்.

இவ்வாறு அரங்கனைத் தேடி இரண்டாவது கோஷ்டியும் கிழக்கு நோக்கிப் புறப்பட்டது.

வல்லபனும் தத்தனும் கடைசியாகத் தங்கு மண்டபத்தை விட்டதிலிருந்து வேறு தடைகள் ஏதுமின்றிப் பிரயாணம் செய்து காஞ்சிபுரத்தை அடைந்தார்கள்.

காஞ்சிபுரம் அப்போது சம்புவராயர் ஆட்சியில் இருந்தது. ராஜகம்பீரம் என்பது அந்த ராஜ்யத்தின் பெயர். இந்த ராஜ்யத்தின் எல்லைக்குள் நுழைய இளைஞர்கள் தயங்கினாலும், தங்கள் மேல் மஞ்சரி என்னும் இளம் பெண்ணின் உருவில் ஒரு சுமை ஏற்றப்பட்டிருந்த காரணத்தால், அந்த ராஜ்யத்துள் எச்சரிக்கையோடு நுழைந்து சுற்று வழி மார்க்கங்கள் மூலம் பிரயாணித்துக் காஞ்சிபுரத்தை அடைந்தார்கள்.

அந்த நகரைக் காலை வேளையிலே அடைந்த ராஜ வல்லபன் அங்குள்ள வீதிக் காட்சிகளைப் பார்த்துப் பிரமித்து நின்றான்.

ஒரு யானை மீது திருமஞ்சனக் குடம் வைத்து மேளதாளங்கள் தொடர, கவரிகள் சிலுசிலுப்ப, திருச்சின்னங்கள் சப்தமிட, பெரிய குடைகள் நிழல் வீச ஊர்வலம் ஒன்று போய்க் கொண்டிருந்தது.

அது போன்ற ஊர்வலத்தை வல்லபன் இது வரை பார்த்ததில்லை.

தவிர, நகரத்தின் வீதிகளில் கலகலவெனக் கூட்டமும், போவோர் வருவோரின் நெரிசல்களும், வண்டிகளின் ஓசைகளும், பல்லக்குகளின் எச்சரிக்கைகளும், சாதாரண மக்களின் நிச்சிந்தையான முகங்களும் வல்லபனுக்குப் பெரும் ஆச்சரியத்தைத் தந்தன,

ஊரில் ஏதோ திருவிழா நடந்ததால், எங்கும் மாவிலைத் தோரணங்களும், கமுகு, வாழை, பச்சிலைகள் கட்டிய நிழற் பந்தல்களும், அவற்றின் விதானத்தில் வெண் துணிகளால் அலங்கரிக்கப்பட்ட வித

★ ஓம் நாராயணாய நம:



வித சித்திர உருவங்களும், கீழே அகலமான வீதியில சுத்தமாகவும் பெரியதாகவும் போடப்பட்டிருந்த மாக்கோலங்களும் ஏதோ ஒரு புது உலகத்திற்குள் நுழைந்தாற் போல் மயக்கத்தை உண்டு பண்ணின.

ஆங்காங்கே திண்ணைகளிலும், மாளிகைக் கூடங்களிலும் திவ்யமான பிரபந்தங்கள் அழகாக சேவிக்கப்படும் சந்தத் தமிழ் ஓசைகளும், அவற்றுக்கு இணையானாற் போல் கோஷ்டியாகப் பாடப்படும் வேதங்களின் இனிய வடமொழி ராகங்களும் அவனைப் பெரிதும் கவர்ந்தன.

''இப்படித்தானே தத்தா, தமிழ் பேசும் நாடுகள் யாவுமே அந்நாளில் இருந்திருக்க வேண்டும். இவ்வளவு கோலாகலமாகத்தானே ஜனங்களும் வாழ்ந்திருக்க வேண்டும். இன்று சுல்தான் ஆட்சியிலே யாவும் மறைந்து மண்மூடிப் போயினவே!'' என்று அங்கலாய்த்தான் வல்லபன்.

மஞ்சரியும் இதுவரை சுல்தான் ஆளும் நாட்டிலே வாழ்ந்ததால் (கொங்கு நாடு ஒய்சளர் வீழ்ச்சிக்குப் பிறகு மதுரை சுல்தான் கைக்கு வந்திருந்தது) அவளுக்கும் காஞ்சியின் காட்சிகள் அதிக பிரமிப்பையும் ஆச்சரியத்தையும் உண்டு பண்ணின.

மூவரும் ஒரு சத்திரத்தில் சென்று தங்கிக் கொள்ள, அந்தப் பெண்ணின் மாமனை எப்படியாவது தேடி அவரிடம் அவளை ஒப்படைத்து விட வேண்டும் என்ற கவலையால், மேலே செய்வது என்ன என்று இரு இளைஞர்களும் தனியே ஆலோசித்தார்கள்

பெண்ணைச் சத்திரத்தில் இருக்கச் சொல்லிவிட்டுப் பகல் முழுதும் நகரில் இருவரும் தேடித் திரிந்து சிங்கழகர் என்னும் அந்த மாமனைக் காண முடியாமல் திரும்பினார்கள்.

இதனால் மேலும் விசனப்பட்டு, என்ன செய்வோம் என்று நினைக்கும் வேளையில் மாலைப் பொழுது ஏறிவர, தத்தன் வல்லபனை நோக்கி,

''வல்லபா! எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. ஊரில் எவ்வளவோ வைணவ மடங்கள் இருக்கின்றன. அவற்றில ஒவ்வொன்றிலும் சென்று இரவே விசாரித்து வருகிறேன். பகல் பொழுது போய்விட்டதால் நீ அவளுக்குக் காவல் இரு!'' என்று கூறினான்.

பிறகு அவன் அவசரமாகவே வெளியே புறப்பட்டுப் போனான்.

இரவு விரிந்து வானம் எங்கும் நட்சத்திரப் பரல்களாகப் பரந்திருந்தன.

கீழே, நகரில் அந்த வானம் பிரதிபலிக்கிறதோ என்னும் வகையில் சுடர் விளக்குகள் எங்கும் மோகனமாக மினுமினுக்கிக் கொண்டிருந்தன.

சத்திரத்தின் பெரிய முற்றத்தில் இருந்த துளசி மாடத்தின் முன்னிலையில், இரவின் குளிர்ச்சி மெதுவாகக் கீழே படர்ந்து வரும் வேளையில், வெகு நாட்களுக்குப் பிறகு ஓய்வு கிடைப்பதற்குச் சந்தர்ப்பம் கிடைத்தது போல் வல்லபன் ஒரு மேடை மீது அமர்ந்திருக்க,

உள்ளே சத்திரத்து அறையிலிருந்து வெளிவந்த மஞ்சரி, அவனுக்கு எதிராக உள்ள மற்றொரு கல் மேடையில் தயங்கியவாறு அமர்ந்து கொண்டாள்.

அமர்ந்தவள், ''அவர் தனியாகப் போயிருக்கிறாரே. ஏதாவது ஆபத்து விளையாதோ?'' என்று மெள்ளக் கேட்க,

அவளை ஏறிட்டுப் பார்த்த வல்லபனும், ''அவன் ஒரு நல்ல சூரன்! எப்படியும் வந்துவிடுவான்!'' என்று சமாதானம் கூறினான்.

தத்தன் மீது அந்தப் பெண்ணுக்கு அப்போது ஏற்பட்டிருக்கும் கரிசனம் அவன் மனத்தை ஏதோ செய்தது.

வரும் வழியெல்லாம் அவளை அவன் கவனித்து வந்திருக்கிறான். தத்தனை உபசரிப்பதிலோ, அவனுக்குத் தேவைப்படுவதை நுணுக்கமாக உணர்ந்து நிறைவேற்றுவதிலோ அவள் காட்டிய சிரத்தை அவனை ஆச்சரியப்பட வைத்திருக்கிறது.

அருந்துவதற்கு நீர் எடுத்துக் கொடுப்பதிலிருந்து உலர்த்திய துணிகளை அவனுக்குக் கொடுக்கும்வரை எத்தனை வித இங்கிதங்கள்! பாங்குகள்! அனுசரணைகள்! நளினங்கள்! லளிதங்கள்!

இவைகளைக் காணும் போதெல்லாம் ஒரு பெண் செய்யும் அன்பு நிறைந்த சேவைகள் எவ்வளவு இனிமையானவை என்பது அவனுக்கு முதன்முதலாகத் தெரிந்தாலும், கூடவே அவை அவன் மனத்தில் விவரமறியா வேதனைகளையும் எழுப்பி விட்டன.

தத்தனின் இடத்தில் தன்னையும், மஞ்சரியின் இடத்தில் மகரவிழியாளையும் வைத்துப் பார்த்து, ''நமக்கு அந்த ராஜகுமாரி சேவை செய்தாலும் இப்படித்தானே செய்வாள்!'' என்று அடிக்கடி எண்ணிப் பார்த்துக் கொண்டான்.

''ஆனால் நான் நினைப்பது எல்லாம் கற்பனைதான்! நிஜத்தில் நடக்காது!'' என்ற எண்ணம் மேலே எழுந்து ஒரு வேதனையும் அவனை நிறைத்துக் கொண்டிருந்தது.

அப்படி நினைக்கும் போதெல்லாம் மஞ்சரியின் உபசரணைகளுக்கு தத்தன் ஆளாவது கூட அவன் மனத்தில் சொல்லொணாத் தாபத்தை எழுப்பிக் கொண்டிருந்தது.

இப்போது இந்தச் சத்திரத்து முற்றத்தில் அவன் எதிரே மஞ்சரி அமர்ந்து கொண்டு தத்தனைப் பற்றிக் கரிசனத்தோடு கேட்ட போது, வல்லபனுக்கு மீண்டும் அந்தத் தழல்தான் எழுந்து கொண்டது.

''என் மகரவிழியாளுக்கு என்மீது இந்தக் கரிசனம் இருக்குமா?'' என்று நினைத்தான் அவன்.

மகரவிழியின் நினைவு வந்ததும் உடன் அவன் நினைவு பரபரத்தது. ''அவளைப் பற்றி இந்தப் பெண்ணிடம் கேட்கலாமே! இப்போது தத்தன் இங்கு இல்லையே! இது நல்ல தருணம் அன்றோ!'' என்று நினைத்தான்.

உடனே அவன் மஞ்சரியைப் பார்த்து, ''ஆமாம், உன்னிடம் ஒன்ற கேட்க வேண்டுமே! நல்லூரில் இருந்த போது சேவகர்கள் வந்தார்களே! அவர்கள் ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு வந்திருக்க வேண்டுமே! நீ பார்த்தாயா?'' என்று கேட்டான்.

''பார்த்தேனு? இரண்டு நாட்கள் அவள் பக்கத்திலேயே இருந்தேன். அவளுக்கு உடம்பு சரியில்லை. அதனுல்தான் அந்த ஊரில் சேவகர்கள் தங்கி விட்டார்கள்'' என்ருள் மஞ்சரி.

''அப்படியா? என்ன உடம்பு?'' என்ருன் வல்லபன் பதைத்துக் கொண்டு.

''நல்ல ஜுரம்! வயிற்றில் ஒரு வலி! பிரக்ஞை இல்லாமல் கிடந்தாள்!'' என்ருள் மஞ்சரி.

''எங்கே கிடந்தாள்?''

''முதலில் ஆதுர சாலையில் கிடந்தாள். பிறகு அங்கே ஆட்கள் நிறைய வருகிருர்கள் என்று சொல்லி அன்று இரவே வேறு வீட்டுககுக் கொண்டு போய்விட்டார்கள். யாரையும் அந்தப் பெண்ணிடம் நெருங்க விடவில்லை. பார்க்க விடவுமில்லை. ரகசியமாக வைத்திருந்தார்கள்.''

''உன்னை மட்டும் நெருங்க விட்டார்களா?''

''என்னையும் வைத்தியரையும் மாத்திரம் நெருங்க விட்டார்கள். வீட்டுக்கு அவளை எடுத்துச்சென்ற பிறகு என்னைக் கூட நெருங்க விடவில்லை. எங்கள் இருவரையும் அவர்கள் பலமாக எச்சரித்து விட்டுச் சென்ருர்கள். அவளைப் பற்றி வெளியே மூச்சுவிடக் கூடாது என்று! ஆதுர சாலைக்கு வருகிறவர்களைக் கண்காணிப்பதற்காக ஒரு நாடகம் கூட நடத்திஞர்கள்!''

''என்ன நாடகம்?''

''சேவகன் ஒருவனைக் காலில் அடிபட்டுக் கிடப்பது போல் அங்கே படுக்க வைத்திருந்தார்கள். அது பொய் என்பது எனக்கு அப்புறந்தான் தெரிந்தது.''

பிறகு அவள் அந்த இளம் பெண்ணைப்பற்றி விவரித்தாள். அவள் நிரம்ப அழகாக இருந்தாள் என்றும், ஒரு ராஜகுமாரியாக அவள் இருக்கலாம் என்றும் கூறினுள். சேவகர்கள் அவளை ஒரு பிரபுவின் மகள் என்ருர்களாம். ஆனுல் அந்தப் பெண் பேசவே இல்லை. எப்போதும் ஒரு மயக்கத்திலேயே இருந்தாள். அதுதான் மஞ்சரிக்கும் அந்த வைத்தியருக்கும் ஆச்சரியமாக இருந்தது. அவள் ஒரு கடத்தப்பட்ட பெண் என்று அவளும் அவரும் ஊகித்துக் கொண்டார்கள்.

அவள் சொல்லச் சொல்ல, வல்லபன் மேலும் விசாரித்துக் கொண்டே போனுன். மகரவிழி எப்படிப் பேசினுள், எப்படி விழித்தாள், எப்படி நடந்தாள், எப்படிப் படுக்கையில் படுத்திருந்தாள் என்றெல்லாம் நுணுக்கமாக விவரம் கேட்டுத் தெரிந்து கொண்டான்.

''உங்களுக்கு அவள் தெரிந்தவளா?'' என்று கேட்டாள் மஞ்சரி கடைசியில் சிரித்துக் கொண்டே.

''தெரியாது! வெறுமனே கேட்டேன்! அவள் மீது ஒரு அனுதாபந்தான்!'' என்ருன் வல்லபன்.

இரவில் வெகுநேரம் கழித்துத்தான் தத்தன் சத்திரத்திற்குத் திரும்பினுன்.

அதற்குள் வல்லபன் படுத்திருந்தாலும், மஞ்சரி விழித்துக் கொண்டே அவனுக்காகக் காத்திருந்தாள்.

அவன் வந்ததும் கால் தண்டை சிணுங் என்று சப்திக்கத் துள்ளி எழுந்து, ''உணவுக்கு நாழியாகவில்லையாக்கும்!'' என்று உரிமையோடு பொய்யாகவும் செல்லமாகவும் கடிந்து கொள்வது வல்லபனின் காதுகளில் விழுந்தது.

தத்தன் அவளுக்கு ஏதாவது மறுமொழி சொல்வானு என்று வல்லபன் ஆவலோடு கவனித்தான். எதுவும் சொல்லவில்லை.

உடன், ''என் மாமனைக் கண்டீர்களா?'' என்று மஞ்சரி ஆவலோடு கேட்பது கேட்டது.

''காணவில்லை'' என்று சிறிது நாழிகைக்குப் பிறகே தத்தன் மறுமொழி சொன்னுன்.

''அவர் எங்கிருப்பார் என்ருவது தெரிந்ததா?''

''இல்லை.''



படம் ரிலீஸாகும் முன்பே பிரபலமாகிவிடும் ராசி சிலருக்கு உண்டு. சீமா அதில் ஒருவர்.
கருமாரனுடு 'அவளோட ராவுகள்' மலையாளப் படத்தில்.
—எல்லார்.

''நான் துரதிர்ஷ்டக்காரி! காஞ்சிக்கு வந்தும் என் பெற்றோர்களை நான் இன்னும் அடையவில்லை?'' அவள் குரல் சோகத்துடன் கேட்டது.

பிறகு தத்தன் வல்லபன் இருக்கும் இடத்திற்கு வந்து அமர்ந்தான். இரவு வெகு நேரம் இருவரும் ஆலோசனை பண்ணிக் கொண்டிருந்தார்கள்.

பொழுது புலர்ந்து ஒரு நாழிகை ஆனபோது தத்தன் மஞ்சரியைத் தேடி வந்தான்.

எளிமையான முறையில் சிங்காரித்துக் கொண்டிருந்த மஞ்சரி காலையின் இள வெய்யிலில் பொன் போல் விகசித்துக் கொண்டிருந்தாள்.

''மஞ்சரி'' என்றான் தத்தன்.

முதன் முறை தத்தன் தன்னைப் பெயர் சொல்லி அழைப்பதைக் கண்டு புளகிதம் அடைந்த அந்தப் பேதை ஆனந்தமுடன் திரும்பி அவனைப் பார்த்தாள்.

''உன்னிடம் ஒன்று சொல்ல வேண்டுமே!'' என்று கூறித் துளசி மாடத்தின் அருகில் அமர்ந்தான் தத்தன். அவளும் அமர்ந்தாள்.

அதன் பின் ஒரு நாழிகை நேரத்தில் தத்தன் சிறிது சிறிதாகப் பல விஷயங்களைக் கூறிக் கடைசியில் அவளது பெற்றோர்கள் உயிரோடு இல்லை என்பதை மெள்ள மெள்ளக் கூறினான்.

ஒரு பொன்னிற மலர் அப்போது மெள்ள வாடியது. அதன் தூய சிவப்பு நிறம் மாறி வெளிறியது. அதன் மடல்கள் வெம்மைப் பெருக்கால் சோர்ந்து போய் சரிந்து விழுந்தன.

கண்ணீர் வழிவதைப் பார்த்துத்தான் அவள் உயிருள்ளவள் என்று கூற முடியும். மற்றபடி அவள் ஒரு சிலையாக இருந்தாள்.

துக்கத்தின் முதல் ஆர்ப்பரிப்புகள் வடிவதற்குப் போதிய அவகாசம் கொடுத்த பின்னர் தத்தன் மெதுவாக, ''மஞ்சரி!'' என்று அழைத்தான்.

அவள் நிமிரவில்லை.

''மஞ்சரி'' என்றான் மீண்டும்.

அவள் நிமிரவில்லை.

''மஞ்சரி! இதோ பார்! என்னைப் பார்!'' என்றான்.

அவள் உடல் மெள்ள உலைந்தது. சோகம் பிழியும் வதனத்தை நிமிர்த்தி மழை பொழியும் கண்களுடன் அவனைப் பார்த்தாள்.

அவன் முகத்தில் அபரிமிதமாய் ஒரு இரக்கம் தேங்கி இருந்தது. மிகுந்த தாபத்துடன் அவளை அவன் பார்த்தான். கண்களிலே ஈரம் கசிந்தது.

''மஞ்சரி! நாட்டில் நடந்த படை எடுப்புகளில் எத்தனை பெற்றோர்கள் மடிந்தார்கள்! எத்தனை பெரியவர்கள் உயிர் இழந்தார்கள்! இவர்கள் யாவரும் சுவர்க்கத்தில் வாழக் கடமைப்பட்டவர்கள். பெற்றோர்களைப் பற்றி அதிகம் துக்கியாதே!'' என்றான் தத்தன்.

அவள் கண்களைத் துடைத்தாள். முகம் தேம்பியது.

''ஐயா!... இந்தக் காஞ்சியில் மிதித்ததும் என் பெற்றோர்களைப் பெற்றேன் என்று நினைத்தேன். இப்போது தாங்கள் கூறிய செய்தியிலிருந்து இழந்தேன் என்று நினைக்கிறேன். ஆக நினைப்பிலேயே என் பெற்றோர்களைப் பெற்றேன். நினைப்பிலேயே அவர்களை இழக்கிறேன்! ஒரு நினைப்பை உண்டு பண்ணினேன். அந்த நினைப்பையே அழிக்கிறேன். என்னைப் பொருத்தவரையில் எல்லாம் நினைவிலேயே நடந்துவிட்டது'' என்றாள் விம்மலுடன்.

அவள் ஆழமான அறிவுடையவள் என்பதை அவளது பேச்சிலிருந்து தெரிந்து கொண்ட தத்தன் வெகு ஆச்சரியப்பட்டான்.

வயது இளசானாலும் நினைவு முதிர்வுதான் என்று நினைத்தான்.

அவளை அவன் பலவாறாகச் சமாதானப்படுத்த முயன்றான். வெகுநேரம் அதில் ஈடுபட்டிருந்தான்.

- தொடரும்





# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

பின்னர் தத்தன், ''இவள் தனக்குள்ளேயே ஆறட்டும்! அப்போதுதான் சரியாவாள்!'' என்று எண்ணி மஞ்சரியை அங்கேயே விட்டுவிட்டு உள்ளே போனான்.

உள்ளே நுழையுமுன் இரக்க மிகுதியால் அவளை ஒருமுறை பார்த்தான். எப்படிக் கலகலவென்று இருப்பாள் இவள்? இப்போது ஒரு நிழல்போல் வற்றிவிட்டாளே, என்று அவனுள் ஒரு நினைவு ஓடியது.

பிறகு ஒரு நாழிகையில் வல்லபனுடன் அவன் திரும்பி வந்து, ''வா! போகலாம்!'' என்று கூறினான்.

மஞ்சரி நிமிர்ந்து பார்த்தாள்.

''எங்கே?'' என்றாள் மெதுவாக.

''உங்கள் . மாமனின் வீட்டுக்கு!'' என்றான் தத்தன்.

அவள் கண்கள் நிலைத்து நின்றன.

''மாமனின் வீடா?'' என்று கேட்டாள் ஆச்சரியமாக.

''ஆமாம்'' என்றான் தத்தன்.

''கண்டு விட்டீர்களா?'' என்றாள் சிறிது பரபரப்புடன்.

''நேற்றைக்கே கண்டு விட்டேன்.''

''என்னிடம் இல்லை என்றீர்களே!''

''பொய் சொன்னதற்குப் பொறுத்தருள்! உன் பெற்றோர் விஷயத்தை உன்னிடம் சொன்ன பிறகுதான் உன்னை அழைத்துப்போக விரும்பினேன்!'' என்றான் தத்தன் வருத்தத்துடன்.

அவள் பார்வை மீண்டும் நிலை குத்தி நின்றது. உள்ளே எழும் பொறுமல் அவள் உதடுகளை நடுக்கியது. தன் கண்ணீரை மறைப்பதற்காகத் தலை குனிந்தாள். பிறகு கண்களை மூடிக் குபுக்கென்று அழுதாள்.

''என் பாட்டனார் எனக்கு இதமானதைத்தான் செய்வார். என் பெற்றோர்களைப் பற்றி என்னிடம் சொல்லாமலிருந்ததுகூட என் நன்மையைக் கருதித்தான் என்று நினைக்கிறேன். ஆனால் தீமையும் அதனால் நேர்ந்துவிட்டது. நான் யௌவனம் அடைந்த இதுநாள் பரியந்தம் என் பெற்றோர்களை நினைத்து நினைத்துப் பெரிய கனவுகளை வளர்த்துவிட்டேன். இப்போது அவர்கள் இல்லை என்பது எனக்குப் பெரிய சூனியத்தைத் தருகிறதே! என் பாட்டனார் என் சிறு வயதிலேயே சொல்லியிருக்கக் கூடாதா?'' என்று நொந்து கொண்டாள் அவள்.

சிறிது நேரம் அவள் விழித்தாள்.

''புறப்படுகிறாயா?'' என்றான் தத்தன் மெதுவாக

அவள் மறுமொழி கூறவில்லை. அந்த இடத்தை விட்டு அகன்று உள்ளே போனாள். தனது துணிமணிகள் அடங்கிய சுருக்குப் பையை எடுத்து வந்தாள். மூவரும் புறப்பட்டார்கள்.

சிங்கழகர் என்ற அவளது மாமன் ஒரு நந்தவனத்தை அடுத்த மண் வீட்டில் வசித்து வந்தார். விஷக்கடி பாதித்ததால் அவருக்கு அதிகமாக நடமாட முடியாது. வயது அறுபது இருக்கும்.

வல்லபன், தத்தன், மஞ்சரி மூவரும் வந்தபோது அவர் அதிசயப்பட்டு அவர்களுக்கு ஆதனம் அளித்து உபசரித்து, ''அடியேனால் ஏதாவது ஆகவேண்டுமா?'' என்று வினயமாகக் கேட்டார்.

தத்தன் அவரிடம் மஞ்சரியைக் காட்டி அவள் யார் என்பதை விளக்கினான். அவ்வளவுதான்! சிங்கழகர் அதிசயமும், சோகமும் ஒருங்கே அடைந்தார். கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகியது. மஞ்சரி அருகே சென்று அவள் தலையை வருடிக் கண்ணீர் உகுத்தார். இளைஞர்களைப் பார்த்து, ''கடைசி காலத்தில் பற்றில்லாமல் வாழ நினைத்தேன். கடவுள் இப்படி ஒரு சுமையைக் கொடுத்து விட்டாரே! எனினும் இது

MADHURA VIJAYAM.

எனக்குப் பாந்தமான சுமை! சொந்தமான சுமை; இவனை வைத்துக் காப்பாற்றுவேன்'' என்று கூறினார்.

இனைனார் இருவரும் சிறிது நேரம் பேசியிருந்து விட்டு, மறுநாள் மீண்டும் வருவதாகக் கூறிவிட்டுப் புறப்பட்டார்கள். நந்தவனத்தை அவர்கள் தாண்டு வதற்குள், ''ஐயா!'' என்று குரல் கேட்டுத் திரும் பினார்கள்.

மஞ்சரிகூப்பிடுவதைப் பார்த்துவல்லபன், ''தத்தா நீ போ!'' என்றான்.

தத்தன் மஞ்சரி அருகிலே வந்தான்.

மஞ்சரி நிமிர்ந்து பார்த்ததும் குபுக்கென்று கண் ணீர் வடித்தாள். அவளது நெஞ்சம் தேம்பியது.

''என்ன மஞ்சரி?'' என்றான் அவன்.

''இல்லை'' என்றாள் அவள் விசும்பலுடன்; ''வந் தீர்கள்! உடனே புறப்பட்டுவிட்டீர்களே! என் மனம் படும் பாட்டைச் சிறிதாவது அறிந்தீர்களா?'' என்று கேட்டாள்.

''நாங்கள்தான் நாளைக்கு வரப் போகிறோமே, மஞ் சரி!'' என்றான் தத்தன்.

அவள் மேலும் தேம்பினாள்.

''இந்தப் புதிய இடம் எனக்கு என்னவோ போல் இருக்கிறது. என் மாமன் இங்கே இருக்கிறார்! வாஸ்த வமே. ஆனால் உங்களைவிட அவர் அந்நியமாகத் தோன் றுகிறாரே! அவரைவிட உங்களிடம் அதிகம் பழகிவிட் டேன். ஆதலால் அவரைக் காட்டிலும் நீங்கள்தான் எனக்கு ஏதோ உறவுபோலத் தோன்றுகிறது! அப்படி இருக்க, உங்களை எல்லாம் விட்டுச் சீக்கிரம் பிரியவே கஷ்டமாக இருக்கிறது. நிரந்தரமாகப் பிரியவேண்டும் என்று நினைக்கும்போது அது அதிக சோகமாக இருக் கிறது'' என்று கூறினாள்.

தத்தன் அவளைச்சமாதானப்படுத்தித்தேறுதல்வார்த் தைகள் பல சொல்லி அவளது வருத்தத்தைச் சிறிதளவு மட்டுப்படுத்தினான். காஞ்சியில் இருக்கும்வரை தினம் வந்து பார்ப்பதாகக் கூறிவிட்டு விடை பெற்றுப் போனான்.

சத்திரத்திற்குத் திரும்பியதும் மஞ்சரியின் தேம் பிய முகம் அடிக்கடி நினைவில் வந்தது. அது அவனுக்கு அதிசயமாக இருந்தது.

பாவம்! அந்தப் பெண்ணிடம் எவ்வளவு கொடு மையாக நடந்து கொண்டிருந்தோம். அதை நினைத் தால் எவ்வளவு வருத்தமாக இருக்கிறது!



மறுநாள் காலையில் இளைஞர்கள் சிங்கழகர் வீட்டிற்குச் சென்றார்கள். மஞ்சரி அவர்களைக் கண்டதும் மிகுதியாகச் சந்தோஷப்பட்டாள். மனை போட்டு அமர வைத்து விசிறி கொண்டு கொடுத்து, குளிர்நீர் கொணர்ந்து வைத்து; சடக்கென உள்ளே சென்று காய்ச்சிய பாலையும் கொண்டுவந்து அளித்தாள்.

ஆசுவாசமாக அமர்ந்து கொண்டு சம்பிரமப் பேச்சுக்களில் சிறிது நேரம் ஈடுபட்ட பிறகு, இளைஞர்களும் அரங்கனைப் பற்றி அறிய ஆவல் மிகுந்தவர்களாய், ''சுவாமி'' என்று தொடங்கி.தாங்கள் காஞ்சி வந்திருக்கும் காரியத்தையும், தாங்கள் யார் என்பதையும் விஸ்தாரமாகக் கூறினார்கள்.

அவ்வளவில் ஆதனம் விட்டெழுந்த சிங்கழகர், இளைஞர்களை நோக்கிப் பாய்ந்து வந்து அவர்களை ஆறத் தழுவிக் கொண்டு, ''என்ன சொன்னீர்! என்ன சொன்னீர்! அரங்கனைத் தேடிவந்தேன் என்றுதானே சொன்



வீர்கள்! அரங்கனைத் தேடுவோரும் உண்டோ!'' என்று கூறித் தழுதழுத்தார்.

பின்பு வல்லபனை இன்னார் என்று இன்னும் ஒரு முறை கேட்டுத் தெரிந்து கொண்டு முன்னிலும் பல மடங்காய் ஆனந்தம் பெருக, அவனைத் தழுவிக் கொண்டு.

''அப்பா, குழந்தாய்! உன் தகப்பனாரை அப்படியே உரித்தாற்போல் பிறந்திருக்கிறாயே! அதேதேஜஸ், அதே வீரியம், அதே கம்பீரம்! எல்லாம் உன்னிடம் சோபிக்கிறதே! அரங்க நகரையும், மக்களையும், அரங்க நாதரையுமே ரட்சிக்க என்ன பாடுபட்டார் அவர்? உன் தாயார் வாசந்திகா எத்தனை சீலமும், ஞானமும் உள்ளவளாகத் திகழ்ந்தாள்! எல்லோரையும் விட்டுப் பிரிந்து எத்தனை நாட்களாகி விட்டன!'' என்று கண்ணிலே நீர் சொரியக் கூறினார் அவர்

பின்னர் அவர், ''அரங்கனைத் தேடுவாரும் இனி உண்டோ! நாடுகள் அழிந்து சமயங்கள் சீர்குலைந்து விட்டனவே!'' என்று வெதும்பிப் பெரிதாக அரற்றினார்.

வல்லபன் உடனே அவரை நோக்கி, ''சுவாமி! கடைசியாக மேல் கோட்டையிலிருந்து அரங்கப் பெருமானை எடுத்துப் புறப்பட்ட ஐவர்களில் தாங்களும் ஒருவர். தங்களுக்கு நேர்ந்ததை எல்லாம் அறிய ஆவல் உள்ளவராக இருக்கிறோம். அன்றியும் அரங்கன் இப்போது எங்கிருக்கிறார், அவரை நாங்கள் காண முடியுமா என்று அறிய வேட்கை உடையவர்களாக இருக்கிறோம். தாங்கள் எல்லாவற்றையும் விவரமாகக் கூறவேண்டும்'' என்று வினயத்தோடு கேட்டுக் கொண்டான்.




சிங்கழகரும் நல்லதென்று யோசித்து, நடந்த விவரங்களை எல்லாம் ஒன்று விடாமல் கூற ஆரம்பித்தார்.

''பதினெட்டு ஆண்டுகளுக்கு முன்னர் அரங்கரின் விக்கிரகத்தை மேல்கோட்டை என்னும் திருநாராயணபுரத்தில் எழுந்தருள வைத்துக் கொண்டு அந்த ஊரிலேயே தங்கிவிட்ட பக்த கோடிகளில் அடியேனும் ஒருவன்!

நாங்கள் ஸ்ரீரங்க நகரிலிருந்து அரங்க விக்கிரகத்தோடு கோஷ்டியாகப் புறப்பட்டவர்கள்.

மொத்தம் அறுபது பேர் புறப்பட்டோம்.

யாத்திரையில் நடந்த கடினமான சோதனைகளில் பலர் எங்கள் கோஷ்டியைவிட்டுப்பிரிந்து விட்டார்கள்.

நோய்வாய்ப்பட்டுச் சிலர் அங்கங்கே தங்கி விட்டார்கள். அசக்தியும் களைப்பும் அதிகமாகியதால் சிலர் அரங்கனை விட்டுப் பிரிந்தார்கள்.

இப்படிப் பலரும் பிரிந்து போன பிறகு, எஞ்சிய சில பேர்களுடன் கன்னட நாட்டிலுள்ள மேல் கோட்டையில் தங்கி இருந்தோம்.

பல்லாண்டுகள் தங்கிய பின்னர் ஒய்சள அரசர் மதுரை சுல்தானுடன் சண்டை இடுகிறார் என்று கேள்விப்பட்டு, மேல்கோட்டையை விட்டுப் புறப்பட்டு கொங்கு நாட்டிலுள்ள சத்தியமங்கலத்திற்குள் நுழைந்தோம்.

ஆனால் யுத்தத்தில் ஒய்சள அரசர் கொல்லப்பட்டார் என்ற செய்தி கிட்டியதும், மிகவும் விசனப்பட்டு மேல்கோட்டைக்கே திரும்பி விட்டோம்.

இந்தச் சமயத்திலே, சுல்தானியர்கள் முன்னிலும் அதிகமாகக் கோபங் கொண்டு, ஒய்சள அரசருக்கு உட்பட்ட நாடுகளையும் கோவில்களையும் சூறையாடத் தொடங்கினார்கள். அந்தச் செய்தி எங்கும் பரவியது. குறிப்பாக அரங்க விக்கிரகத்தைத் தேடி மேல்கோட்டைக்கு வருவார்கள் என்றும் செய்தி பரவியது.

பீதி அடைந்த நாங்கள் அரங்க விக்கிரகத்தை எழுந்தருளவிட்டுக் கொண்டு வேறு எங்கேயாவது தூர தேசம் போய்விட எண்ணினோம்.

ஆனால் வட நாட்டிலே எங்கும் துருக்கியர் ராஜ்யம் ஆகிவிட்ட படியினால் அங்கே போக விரும்பாதவராய் கிழக்கே, திருப்பதி நோக்கிப் போய் அங்கே தங்கி விடத் தீர்மானித்தோம்.

இப்படித் தீர்மானம் பண்ணிய பேர்கள் மொத்தம் ஐந்து பேர்தான். திருவரங்கத்திலிருந்து புறப்பட்ட அறுபது பேர்களில் மிஞ்சியவர்கள் இந்த ஐந்து பேர்கள் தான்.

இவர்களில் அடியேன் சிங்கழகர், ஒருவர் மாலழகர், மற்ற மூவரும் ஒருவருக்கொருவர் பந்துக்களான கொடவர்கள்!

நாங்கள் ஐந்து பேரும் அரங்கனை எம்முடன் சேர்த்து அணைத்துக்கொண்டு புறப்பட்டோம்.

அரங்கனுக்குச் சொந்தமான பொன் நகைகள், அணிமணிகள் யாவற்றையும் ஒரு சுமையில் கட்டி எடுத்துக் கொண்டோம்.

அரங்க விக்கிரகம் நல்ல கனமாக இருந்ததால், ஒருவர் மாற்றி ஒருவர் சுமந்துகொண்டு சென்றோம்.

வழியில் நாடெல்லாம் தக்க அரசரின்றிக் கொந்தளித்துக் கொண்டிருந்ததால், ஜாக்கிரதையாக யாருக்கும் தெரியாமல் நடந்து, அங்கங்கே வைணவர்கள் உதவியைப் பெற்று இரகசியமாகத் தங்கிவிட்டு, கடைசியில் நாற்பது நாட்கள் கழிந்த பின்னர் கிழக்கே சந்திரகிரி ராஜ்யத்தை அடைந்தோம்.

அப்போது சந்திரகிரி கோட்டையை சுல்தானியரின் ஆட்கள் சூறையாடுகிறார்கள் என்று கேள்விப்பட்டு, ''கடைசியில் இந்த இடத்திற்கா வந்து சேர்ந்தோம்?'' என்று பிரலாபித்துக் கொண்டு, கோட்டையைத்

விர்த்து விட்டுக் காட்டு மார்க்கத்தில் இறங்கி விரைவாய்ப் பிரயாணப்படலானோம்.

ஆனால், தனிப்பாதையில் யாராவது கிடைப்பார்கள் என்று நம்பி நின்றிருந்த மூன்று துருக்கிய வீரர்கள், எங்களைப் பார்த்து விட்டார்கள். அவர்கள் விரைந்து ஓடிவர, மாலழகர் என்பவர், தாம் தைரியசாலி என்பதாலும், மல்யுத்தம் எல்லாம் பழகினவர் என்பதாலும், எங்களைப் பார்த்து, ''நான் அவர்களைத் தடுத்து நிறுத்துகிறேன். நீங்கள் எல்லோரும் தப்பித்து ஓடுங்கள்!'' என்று கூறிவிட்டு, காட்டுப் புதர்களில் காய்ந்து போய்க் கிடந்த விருகம் கம்பு ஒன்றைக் கையில் எடுத்துக் கொண்டு, துருக்கியர்களை எதிர்பார்த்து நின்றார்,

வந்த வீரர்கள்,கோபாவேசமாய் அவரைத் தாக்க, அவரும் சிலம்பம் கற்றவர் ஆதலால், விருகம் கம்பைச் சுழற்றிச் சுழற்றி மிக லாகவமாக அவர்கள் மூவரையும் எதிர்த்துச் சண்டையிட,

அரங்களை எடுத்துச் சென்ற நாங்கள் இதுதான் தருணமென்று விரைந்து காட்டுக்குள் புகுந்து மறைந்து போனோம்.

வீரர்களுக்கும் மாலழகருக்கும் சண்டை உக்கிரமாக நடக்க, துருக்கிய வீரர்களும் முன்னை விட உக்கிரமாகப் போரிட்டு மாலழகரைத் தாக்கி முடிவில் அவரைக் குற்றுயிராய்க் கீழே தள்ளினார்கள்.

பிறகு அவரை அவர்கள். ''நீ யார்?எங்கே போய்க் கொண்டிருக்கிறாய்?'' என்றெல்லாம் கேட்டுச் சித்திரவதை செய்ய அவரும் உபாதை பொறுக்காமல், ''அரங்கா, அரங்கா'' என்று சொல்லிப் புலம்புவாராயினர்.

உடனே வீரர்கள், ''ஆகா! இவர்கள் கொண்டு போவது அரங்க விக்கிரகமோ? இவர்கள் கையில் கொண்டு போன மூட்டையில் ரத்தினங்களும், வைர, வைடூரியங்களும் இருக்க வேண்டுமே!'' என்று பேசிக்கொண்டு, ''வாருங்கள்! கோட்டைக்குள் போய் படையாட்களை அழைத்து வருவோம். காட்டில் வேட்டையாடினால் மற்றவர்கள் கிடைத்து விடுவார்கள்'' என்று சொல்லி மாலழகரை நரியும் கழுகும் தின்னும்படியாய் கால்களை வெட்டிப் போட்டு விட்டுப் போனார்கள்.

இதற்குள் அரங்கனோடு போன நாங்கள் வெகு தூரம் போய்விட, நான் மற்றவர்களைப் பார்த்து, ''நீங்கள் அரங்கனோடு இந்தப் புதரின் அடியில் பதுங்கி இருங்கள். நான் போய் மாலழகர் கதி என்ன ஆயிற்று என்று பார்த்து வருகிறேன்'' என்று கூறி, கொடிகளையும், செடிகளையும் விலக்கிக்கொண்டு விரைவாக வந்து மாலழகர் கீழே கிடக்கும் இடத்திற்கு வந்து சேர்ந்தேன்.

அங்கே மாலழகர் கால்கள் பின்னப்படுத்தப்பட்டு கிடப்பதையும், அவருக்குக் கடைசி நாடியில் உயிர் ஒட்டிக்கொண்டிருப்பதையும் பார்த்து,கண்ணீர் பெருக்கி, அவரது தலையை எடுத்து என் மடிமீது வைத்துக் கொண்டு ''மாலழகரே! மாலழகரே!'' என்று இரைந்து கூப்பிட்டேன்.

மாலழகரும் மெல்லக் கண் திறந்து பார்த்து என்னைக் கண்டு, ''அவசரம்! அவசரம்! அவர்கள் அரங்கனைக் கண்டு கொண்டார்கள். உடன் போய்ப் பெருமானைக் காப்பாற்றுங்கள்!'' என்று சொல்லி, நடந்த எல்லா விவரங்களையும் கூறி, சில வினாடிகளில் உயிரைத் துறந்தார்.

அவரது திருமேனியை ஒரு பள்ளத்தில் கிடத்தி, தழை, கொடி, கொம்புகளால் மூடிவிட்டு, விரைவாக இதர சகாக்களைத் தேடி ஓடினேன்.

சகாக்களைக் கண்டு, ''அவசரம்! படையாட்கள் நம்மைத் தேடி வரப் போகிறார்கள்! விரைவாகப் போவோம்!'' என்று சொல்லி, அவர்களை அழைத்துக் கொண்டு காடாந்தகாரமாக இருக்கும் அந்த வனத்துள் தலைதெறிக்க ஓடினோம்.

பல நாழிகை ஓடும் வேளையில், திருப்பதி க்ஷேத்திரத்தின் அஞ்சனாத்ரி மலையைக் கண்டு புளகிதம் அடைந்து, இந்த மலை மேல் ஏறி, மேலே போய் விட்டால், பகைவர்கள் நம்மைத் தேடி வருவது துர்லபம் என்று நினைக்கவே,

மூன்று கொடவர்களும் என்னை நோக்கி, ''நாங்கள் பெருமானை மேலே அழைத்துச் செல்கிறோம். நீங்கள் கீழே ஒளிந்திருந்து படையாட்கள் வருகிறார்களா என்று பார்த்துக் கொண்டு இருங்கள்! மூன்று நாட்கள்வரை அவர்கள் வரவில்லை என்றால் நீர் மேலே வந்து எம்மிடம் சேர்ந்து கொள்ளும். நிச்சிந்தையாக இருப்போம்!'' என்று கூறினார்கள்.

நானும், ''சரி'' என்று சொல்லிக் கீழே பாறையும் புதர்களும் அடர்ந்த ஒரு பாதுகாப்பான இடத்தில் தங்கிவிட்டேன்.

நான் அங்கே தங்கி இரண்டு நாழிகைகூட ஆகியிராது. பலத்த ஆரவாரத்துடனும் இரைச்சலுடனும் துருக்கியர் படையாட்கள் காட்டுக்குள் புகுந்து அஞ்சனாத்ரி மலையை நோக்கி வருவதை நான் காண நேர்ந்தது.

''ஆகா! காரியம் கெட்டுப்போயிற்றே!'' என்று சொல்லி, ''அரங்கா! அரங்கா!'' என்று பிரலாபித்தேன்.

-தொடரும்.



''மதுரை மணி அய்யர் மாதிரியே பாடறாரே!''
''காபி-ராகமாச்சே!''
எம்.ஆர். ராஜன்

# பாட்டுப் பறவைகள்

அவிநசி முருகேசன்

தன்னிச்சையாக மணலில் விரலால் எழுதிய எழுத்துக்களை நீரலைகள் வந்து சுவிகரித்து விட்டுப் போனதைக்கூட அவள் கவனிக்கவில்லை. திரும்பத் திரும்ப 'அவரு'டைய பெயரையே அந்த விரல்கள் கோடு கிழித்துக்கொண்டிருக்கின்றன. இதை அவள் ஞாபகப்படுத்தாமலே கூடச் செய்யமுடியும். இந்தப் புதுவைக் கடற்கரையில் விஜயக்குடன் சேர்ந்து அமர்ந்துகொண்டு எதிர்கால வாழ்க்கைக் கனவுகளில் பீடுநடை போட்ட போது எவ்வளவு நாட்கள்- எவ்வளவு தடவைகள்- இந்த மணலில் 'விஜயக்'கின் பெயரை எழுதியிருக்கிறாள்?

விஜயக்கின் பிரிவு மிகுந்த சோதனைக்குப் பின்னும், எப்போதாவது இங்கு வரும்போதும் அவள் அந்த தவத்தைத்தான் செய்கிறாள். 'விஜயக், உங்களை நினைப்பதே ஒரு தவம்' என்று அவனிடம் நேருக்கு நேராகச் .சொல்லி, அதை அவன் மறுதலிக்கிற அழகைப் பார்க்க வேண்டுமே.....?

அந்தத் தவத்துக்குரிய மூர்த்தம் அவளுடைய கர்ப்பக்கிருஹத்திலிருந்து பெயர்ந்து விட்டதா....?

தனக்குப் பின்புறம் நெடிய உயரமான காந்தி சிலையும், அதைச் சுற்றி செஞ்சி ராஜா டூப்ளேக்கு அன்பளித்த உயர்நெடும் கல்தூண்களையும் அவள் பார்த்தாள். இந்த இடத்தில்தான்...... அவனோடு அவள் கைகளைக் கோத்தபடிச் சென்றது, நின்றது....

சங்குமணி மாலைகள் விற்றபடி வந்தவனிடமிருந்து ஒரு மாலையை வாங்கி அவளது கழுத்தில் அவன் சூட்டியபோது, மாங்கல்ய தாரணம் நடப்பதைப்போல நடுச் சாலையிலேயே அவர்களது பாணிக்கிரகணம் நடந்ததே....

அதெல்லாம் அவளுக்குச் சம்பவித்தவைகள்தாமா? நிஜங்கள் தானா? உண்மையில் நம்ப முடியவில்லை.

இப்படித்தான் ஒருநாள் மணக்குள விநாயகரைத் தரிசித்துவிட்டு இதே கடற்கரைச் சாலையில் இருவரும் நடந்துகொண்டிருந்தபோது, 'கிரீச்'சிட்டு வந்து மோதிய காரின் சக்கரங்களின் அடியே.... ஓ......! ஒரு காதலின் அனுராகமான, சுந்தரமிக்க சௌபாக்கியக் கனவுகளைப் பாதியிலேயே அறுத்துவிட்டு, அபஸ்வரங்கள் தொனிப்பதைப் போல அந்த நாள் வந்தது! இனிமேல் அந்த ஒருநாள் யாருக்குமே வரவேண்டாம்.....

'விஜயக் அழகாக வீணை வாசிப்பார். 'நினுவினா ஸுகமுகான'ம் அவரது விரல்களின் மீட்டலுக்காகவே தோடி ராகம் பிறந்தது போல இருக்குமே.... பீத்தோவனின் ராண்டல் கீதங்களைக் கூட அவரால் வாசிக்க முடிந்தது. இன்னொரு சிட்டிபாபு கிடைத்துவிட்டார் என்று நினைத்தபோது....ஓ!'

—கண்ணில் தங்கிய நீரை விலக்கி விட்டுக் கொண்டு அவள் எழுந்த போது எதிரே பரணி வந்துகொண்டிருந்தாள்.

தனக்குத் தெரிந்த எவரையுமே கொஞ்ச காலத்துக்குப் பார்க்கக் கூடாது என்ற விரதத்தை நியமமாகக் கொண்டு வர முடியாது போல இருந்தது. எல்லாரையும் எல்லாவற்றையும் துறந்து இந்தக் கடலில் விழுந்துவிட வேண்டும். அப்புறம் துக்கங்கள் தன்னளவில் மறைந்து விடலாம்.- அவள் தீர்க்கமாக நினைத்தாள்: சாவதின் மூலமாகவே ஒரு காதலின் புனிதத்துவத்தைக் காப்பாற்றிக் கொண்டு விட முடியுமா? வாழ்ந்து அந்த மகத்தான ஞாபகங்களுக்கு ஓர் அஞ்சலி செய்வதன் மூலமாக ஒரு அர்த்தத்தைத் தர முடிந்தால், எவ்வளவு சிலாக்கியமாகஇருக்கும்!

''மாதங்கி..... உன்னோட துக்கம் எனக்குப் புரிகிறதடி.....விஜயக்கும் நீயுமாய் ஒரு அபூர்வஜோடிகளாய் பிறர் கண்கள் எரிச்சல் படும்படியாகச் சேர்ந்திருந்தீர்கள் ...கடவுளுக்கே பொறுக்கவில்லை. நல்லவேளை விவாகத்தில் போய் முடியாமல், வெறும் காதலுடன் கதை முடிந்தது.... அந்த விதத்தில் யு ஆர் எ லக்கி கேர்ல்.....''

காதலின் முத்திரை கல்யாணம் மட்டும்தானா? அன்பே நிறைந்து உணர்ந்து உணர்ந்து நெகிழ்ந்த பேருண்மைக்கு முத்திரைகள் எதற்காக? அவளும் அவனும் அதிகபட்சம் நெருங்கியிருந்த நேரங்கள்கூட மிகவும் குறைவானவைதாமே? ஆனாலும் பல நூற்றாண்டுகள்- பல பிறவிகளாகச் சேர்ந்து தொடர்ந்தவர்கள் போலல்லவா இணைந்தார்கள்...!

....அது ஒரு சுவாரஸ்யமான சந்திப்பு. மனதுக்குப் பிடித்தமான ஒரு ஆணை ஒரு பெண் சந்திக்கிற எல்லாச் சந்தர்ப்பங்களுமே பிரியமானவையும் அபூர்வமானவையும்தான்.....

நகராட்சிக் கம்பன் கலையரங்கக் கட்டிடத்தில் அன்று நடந்த விஜயக்கின் வீணைக் கச்சேரியில்தான் முதன் முதலாக அவனைப் பார்த்தாள்.

காடு கொள்ளாத அளவுக்கு நீண்ட முடியும், வெள்ளை ஜிப்பாவும், பைஜாமாவும், கல்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

சிங்கழகர் என்னும் அந்தப் பெரியவர் தமக்கு நேர்ந்த அனுபவங்களைச் சிலிர்ப்பும், அதிசயமும் பொங்கும் வண்ணம் கூறிக் கொண்டிருந்தார்.

அவர் முன்னால் ஆச்சரியத்தால் விரித்த கண்களுடன் அமர்ந்திருந்த இரு இளைஞர்களும் அதிக சிரத்தையுடனே அதைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

இதில் ராஜ வல்லபனுக்கு அடிக்கடி உணர்ச்சி ஒரு குப்பலாய்ப் பிரவகித்துக் கொண்டிருந்தது.

அரங்க நகரிலிருந்து புறப்பட்ட அறுபது* திருநாமங்களுக்கு நேர்ந்த கதிகளை நினைத்துப் பார்த்தான். சிலர் பிரிந்தார்கள். சிலர் இறந்தார்கள். சிலர் காணாமல் மறைந்தார்கள்.

அப்படியும் நம்பிக்கை அவர்களை விடவில்லை. அரங்கனைக் கட்டிக் காப்பதன் மூலம் ஒரு சமுதாயத்தின் நம்பிக்கையையே அவர்கள் காப்பதாக நினைத்தார்கள்.

ஆமாம், அரங்கன் ஒரு சமுதாய நம்பிக்கையின் சின்னம்!

அவரைக் காப்பதன் மூலம் ஒரு நம்பிக்கைதான் காக்கப்படுகிறது.

அந்தப் பணியில் ஈடுபட்டு, அஞ்சனாத்ரி மலை அருகிலே அந்த ஐந்து பேரும் பட்ட கஷ்டத்தை நினைத்ததும் வல்லபனுக்குக் கண்களில் நீர் கசிந்து விட்டது.

''சுவாமி! தாங்கள் சொல்வதைக் கேட்கக் கேட்கத் துயரம் குமுறுகிறதே!'' என்றான் அவன் சிங்கழகரை நோக்கி.

அதற்குச் சிங்கழகர், ''அப்பா, குழந்தாய்! இது உன் நல்ல உள்ளத்தையே காட்டுகிறது. எதையாவது மனத்துள் நினைந்து, அதற்காகக் கசிந்து கண்ணீர் விடுபவன் ஒரு சுத்த ஆத்மா! எனக்கு உங்கள் இருவரையும் பார்க்கும் போது மனத்தில் புளகாங்கிதம் ஏற்படுகிறது. அரங்கனைத் தேடுவாரில்லையே என்று நினைத்து தர்மோ நஷ்ட:* என்று இத்தனை ஆண்டுகளாக வருத்தப்பட்டுக் கொண்டிருந்தேன். இப்போது உங்களைப் பார்த்ததும் மனம் பொங்கி எழுகிறது. ஆனந்தம் உற்பவிக்கிறது'' என்று சொல்லிக் கதையை மேலே கூறலானார்.

அஞ்சனாதரி மலைக்கு அடிவாரத்தில் உள்ள காடாந்தகாரமான காட்டில் பதுக்கலான ஒரு புதர் அருகிலே சிங்கழகர் நின்று கொண்டு சுற்றுப் புறங்களைக் கவனித்துப் பரிதவித்துக் கொண்டிருந்தார்.

துருக்கியப் படைகளானால் சமுத்திரம் போலே காட்டை ஊடுருவிக் கொண்டு வந்து கொண்டிருக்கின்றன.

அதைப் பார்த்து, பட்சிகளும், மிருகங்களும் அலறிப் புடைத்துக் கொண்டு நாலா பக்கங்களிலும் ஓடிக் கொண்டிருக்கின்றன.

இன்னும் அரை நாழிகையிலே படையாட்கள் மலை அடிவாரத்தை அடைந்து விடுவார்கள்.

இந்த இக்கட்டான நிலையில் என்ன செய்வதென்று தெரியாமல் அவர் தவித்துக் கொண்டிருந்தார்.

அவர் கண்களில் மாலை மாலையாய் நீர் சுரந்து கொண்டிருந்தது.

எதுவும் தோன்றாது போகவே, 'நடப்பது நடக்கட்டும்' என்று நினைத்துச் சோகத்துடன் அமர்ந்து விட்டார்.

அவ்வளவில் படையாட்கள் அடிவாரத்தை அடைந்து விட்டார்கள். சுற்று முற்றும் அவர்கள் கழுகுப் பார்வையாய்ப் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

மலை மேலே ஏறிக் கொண்டிருக்கும் மூன்று கொடவர்களுக்கும் இந்த விஷயம் தெரியாது. ''முகட்டிலே ஏறுகிறோம். இனி ஆபத்து என்ன வரப் போகிறது?'' என்று நினைத்து நிச்சிந்தையாகவும், ஆனால் அதி வேகமாகவும் ஏறிக் கொண்டிருந்தார்கள்.

அவர்கள் போகும் வழியெல்லாம் புதரும் மரங்களும் அடைத்துக் கொண்டிருந்தாலும், மேலே போகப் போகச் சிற்சில இடங்களிலே செடி கொடி என்ற பேச்சே இல்லாமல், வெறும் பரலைக் கற்களும் பாறைகளும் நிறைந்து வெட்டவெளிகளாக இருந்தன.

அப்படிப்பட்ட வெட்டவெளி ஒன்றிலே அவர்கள் போன போது, படையாட்கள் அவர்களைப் பார்த்து விட்டார்கள். உடனே ஆகாகாரம் அவர்களிடமிருந்து எழுந்து விட்டது. கொடவர்களும் அதே சமயம் எதேச்சையாகத் திரும்பிப் படையாட்கள் அடிவாரத்தை ஆரம் போல் சுற்றிக் கொண்டு நிற்பதைப் பார்த்து விட்டார்கள்.

---

* அறுபது திருநாமங்கள்—அறுபது பேர்கள்.
* தர்மம் அழிந்து விட்டது.

'ஆகா மோசம் போனேமே!' என்று இலேசித்து, வெகு விரைவாகத்தானே அந்தப் பரல் வெளியைக் கடந்து, மீண்டும் தழைகள் மூடிய புதர்க் கூட்டத்திலே அவர்கள் மறைந்த பிறகு,

'இனி திருப்பதி மலை மேலே போய் வேங்கடவர் கோவிலுக்குப் போனால் படையாட்களால் கோவிலுக்குத் தீங்கு ஏற்படும்' என்று ஆலோசனை பண்ணி, அருகிலே உள்ள முகடு மேல் ஏறுவதுதான் சாவச் சிறந்த வழி என்று தீர்மானித்து அதிலே போய் ஏறிக் கொண்டார்கள்.

பின்னர் அவர்கள் இமை கவனிக்கும் வேளையில் படையாட்கள் அவர்களைத் தேடி மலை மேலே ஆட்களை ஏவுவதைக் கண்டார்கள். ஆபத்து தங்களைச் சூழ்கிறது என்று நினைத்து, ''இனி அரங்கனைக் காப்பாற்றுவது எப்படி?'' என்று சிந்தித்து விசனத்தில் மூழ்கினார்கள்.

இந்தக் கொடவர்களின் பெயர்கள் திருக்குருகூர் தாசர், திருவில்லிபுத்தூர் தாசர், சீராமதாசர் என்பது ஆகும். திருவரங்கம் கோவிலில் பணி செய்யும் பத்துக் கொத்துப் பரிசனங்களில் இரண்டாவது கொத்தைச் சேர்ந்தவர்கள்! இவர்களுக்குத்தான் 'கொடவர்கள்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருந்தது. இந்தக் கொடவர்களில் குருகூர்தாசர்தான் மூத்தவர். அவருக்கு மைத்துனர்தான் வில்லிபுத்தூர் தாசர், மகன்தான் சீராமதாசர். முறையே அறுபத்திரண்டு, ஐம்பது, நாற்பத்திரண்டு வயதுகளில் அவர்கள் திருவரங்கத்தை விட்டு அரங்கனுடன் புறப்பட்டவர்கள். இப்போது எண்பத்திரண்டு, எழுபது, அறுபத்திரண்டு பிராயங்கள் அவர்களுக்கு ஆகியிருந்தன.

இந்த தாசர்களில் மூத்தவர், மற்ற இரு தாசர்களையும் அழைத்து, ''நம்மைக் கண்டுபிடிக்க படையாட்கள் வந்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே, தப்புவதற்கு வழி தேடுவோம்!'' என்று கூறி, சுற்றிவரப் பார்க்கும் காலையில்,

அந்த மலை முகடானது மூன்று புறங்களிலே சரிவாகவும், நான்காவது புறத்திலே பாம்பு படம் எடுத்தாற்போல் செங்குத்தாகவும் இருப்பதைக் கண்டார்கள். அந்த விசேஷ இயல்பைப் புரிந்து கொண்டு துருக்கியர்கள் தங்கள் படையாட்களைச் சரிவான மூன்று புறங்களிலும் நிற்க வைத்து, நான்காவது செங்குத்தான புறத்திலே யாரும் இறங்கத் துணிய மாட்டார்கள் என்று எண்ணி யாரையும் நிறுத்தாமல் வைத்திருப்பதையும் கண்டார்கள்.

இதைப் புரிந்து கொண்ட மூத்த கொடவரான குருகூர்தாசர் கணத்திலே ஆலோசித்து மற்றவர்களை அழைத்து, ''தாசர்களே! இமை செங்குத்தான பகுதியிலே படையாட்கள் யாரும் இல்லை, ஆகவே நீங்கள் ஒன்று செய்யுங்கள்! காட்டுக் கொடிகளை கொண்டு

* கோவில் ஊழியங்களைச் சீர்படுத்தி இவ்விதம் பிரித்தவர் ஸ்ரீராமானுஜர்.





வந்து அரங்க விக்கிரகத்தை என் உடம்போடு கட்டுங்கள். பிறகு கொடிகளால் ஒரு கயிறு கட்டி அந்தக் கயிற்றில் என்னைக் கட்டிக் கீழே இறக்கி விடுங்கள். செங்குத்தான பள்ளம் இங்கிருந்து பார்த்தால் பதினைந்து ஆள் * பிருதம் இருக்கிறது. அதற்கு அப்பால் இறக்கம் இடுகிடுவென்று சரிவாகப் போகிறது. அந்த இடத்திலே யாரும் நிற்க முடியாது. ஆனால் உருண்டு போகலாம். அந்தச் சரிவில் நான் தட்டிக் கொண்டதும், நீங்கள் பிடித்திருக்கும் கொடிக் கயிறுகளை நழுவ விடுங்கள். அரங்கன் விக்கிரகத்துடன் சரிவில் உருண்டு போய் அடிவாரத்தை அடைந்து விடுகிறேன்'' என்று கூறினார்.

உடனே மற்ற இருவரும் திடுக்கிட்டுத் திகைத்துப் போய், ''இது ஆபத்தான காரியம் அன்றோ?'' என்று கூறினார்கள்.

''அரங்கனைக் காப்பாற்ற வேண்டுமானால் இப்படிச் செய்துதான் ஆக வேண்டும்'' என்று மூத்த தாசர் கூறினார்.

அதற்கு அந்த இரு தாசர்களும் இணங்காமல் இருக்க, மூத்த தாசர் அவர்களுக்குச் சமாதானம் பல சொல்லி, அப்போது இருக்கும் நிலையில் அது ஒன்று தான் சிறந்த வழி என்றும், இல்லாவிடில் அரங்கன் படையாட்கள் கைகளிலே சிக்கி விடுவார் என்றும் கூறினார்.

கடைசியில் வேறு வழி இல்லாமையால் இரு தாசர்களும் மூத்தவரின் ஆலோசனைக்கு இணங்கி விட, உடனே பச்சைக் கொடிகளைக்கொணர்ந்து கயிறு திரிக்கும் வேலை துரிதமாக ஆரம்பித்தது.

கொடிக் கயிறு திரித்தானதும் மூத்த கொடவரை மற்ற இருவர்களும் மல்லாந்து படுக்க வைத்து அவர் வயிற்றின் மீது அரங்கன்விக்கிரகத்தைக் குப்புறக் கிடக்கவைத்து, மூலிகைக் கொடிகளால் உடலையும் விக்கிரகத்தையும் பிணைத்துக் கட்டி விட்டார்கள்.

பிறகு விக்கிரகத்தையும், மூத்த கொடவரையும் தொட்டுத் தொட்டுச் சேவித்துக் கொண்டு, கொடிக் கயிற்றின் ஒரு முனையைப் பிடித்திழுத்து வந்து மூத்தவரின் இடுப்பில் சுற்றிப் பிணைத்துக்கட்டி, விட்டு, மறு முனையைப் பிடித்திழுத்து அங்குள்ள பருமனை ஆலம் விழுது ஒன்றிலே கட்டி வைத்தார்கள்.

அப்பால் அவர்கள் அரங்கனைப் பிரார்த்தனைசெய்து கொண்டு, மூத்த கொடவரைப் பக்திப் பூர்வமாக அஞ்சலி செய்து அவரிடம் பிரியா விடை பெற்றுக் கொண்டு, அவரது திருமேனியை முகட்டின் நுனிக்கு எடுத்துச் சென்று அவரையும் அரங்கரையும் மெதுவாகப் பதப்புற நிதானமாகக் கீழே இறக்கிவிட்டார்

* பிருதம்—ஆழத்தைக் குறிக்கக் கூடிய சொல்.

கள். மூத்தவரும் கயிற்றில் தொங்கியபடியே அந்த கெடு பாதாளத்தின் அந்தரத்திலே ஊசலாடிக் கொண்டு கீழ் நோக்கிப் போகலானார்.

அந்த மலை முகடு பாம்புப் படம் எடுத்தாற்போல் மேல் உச்சியில் வளைந்திருந்தபடியால் கீழே எதையும் வசதியாய்ப் பார்க்க ஒண்ணாதபடி இருந்தது.

மேலே இரு கொடவர்களும் கொடிக் கயிற்றை மெள்ள மெள்ள நழுவ விட்டு, பின்னர் முன்பே கயிற்றில் கணித்துள்ள இடம் வந்ததும் முழுக்கொடியையும் நழுவ விட்டார்கள்.

அதே நேரத்தில் சரிவு தட்டிய மூத்த கொடவரும் அந்தக் கிடு கிடுச் சரிவில் அரங்கனோடு உருண்டு வெகு வேகமாகப் போகலானார். சரேல் என்று இறங்கி ஓடும் அந்தச் சரிவு கீழே நெடுந்தூரம் சென்று தான் அடிவாரத்தைத் தொட்டது. அந்தப் பயங்கரச் சரிவில் பரல் கல்லிலும் பாறைத் துண்டுகளிலும் முட்டி மோதிக் கொண்டு அவர் உருண்டு கொண்டிருந்தார்.

அவர் அப்படி உருண்டு போவதை உச்சியில் ஓடி வந்த கொடவர் ஒரு கணமே பார்த்தார்.

பின்னர் இரு கொடவர்களும் பரபரத்து, உடனே அடிவாரத்திற்குப் போக எண்ணினார்கள்.

அதன்படியே காரியத்தில் இறங்கி இரண்டு நாழிகை அவகாசத்தில் அடிவாரத்தை அடைந்து, மூத்த கொடவரை உடனே தேடலானார்கள்.

ஒரு முகூர்த்த அளவில் தேடுங்காலையில், "இதோ!" என்று திடீரென்று, பயங்கரமான ஒலியில் வில்லிப்புத்தூர் தாசர் என்னும் கொடவர் கூச்சல் இட, சீராமதாசர் என்பார் உடனே ஓடிச் சென்று பார்த்தார்.

அங்கே சங்கு மலர்கள் புஷ்பித்திருந்த செடிக் கூட்டத்தின் ஓரத்திலே காலும், கையும் இரு தோள்களும் ஒடிந்து கிடக்க, முகத்திலே கண், வாய், மூக்கு இருந்த இடத்தில் இரத்தம் தோய்ந்த சதைகள் மட்டுமே பிய்ந்து கொண்டு தெரிய, மூத்த கொடவரின் உடல் மல்லாந்து வானை நோக்கிக் கிடந்தது.

உடனே சீராமதாசர் (மூத்த கொடவரின் மகன்) "அப்பா!" என்று கூவி அவர் உடலையும் கையையும் தொட்டுப் பார்க்க அவரது உயிர் எப்போதோ பிரிந்து விட்டிருப்பது தெரிய வந்தது.

வயிற்றின் அடியிலிருந்து ஒரு துக்கம் சமுத்திரம் போல் எழும்பி மேலே வர, அடியற்ற மரம் போல் சீராமதாசர் அந்த மூத்த கொடவரின் இரத்தம் தோய்ந்த உடல் மீது விழுந்தார். கண்களில் அழுகை குபீரிட்டு வெளி வர, "என் அப்பா!" என்று பல முறை அரற்றி அரற்றி அழுதார்.

நெடு நேரம் அழுது சிந்திய பிறகு ஒருவாறு தேறித் தனது மாமனை வில்லிப்புத்தூர் தாசர் நிலைகுத்திய பார்வையுடன் அமர்ந்திருப்பதைக் கண்டு அவர் அருகே சென்றார்.

அவர் முன்னால் குனிந்து, "மாமா! மாமா! இது என்ன அநியாயம்? அப்பா இறந்து விட்டாரே!" என்று கூற, அந்த மாமனை வில்லிப்புத்தூர் தாசர் பேச்சு ஏதும் இல்லாமல் இருந்தார்.

அவர் அப்படி இருப்பதைப் பார்த்து, சீராமதாசர் அவரது தோள் மேல் கைவைத்து, "மாமா!" என்று கூப்பிட,

அவ்வளவில் அந்த மாமனின் உடல் சடக்கெனச் சரிந்து கீழே விழுந்து விட்டது.

பதைத்துப் போய் சீராமதாசர் தம் மாமனைக் கையில் ஏந்தி வைத்துக் கொண்டு அவர் நாசியையும் நாடியையும் பார்க்க, அவை எல்லை இல்லா மௌனத்தில் கிடப்பதைக் கண்டார்.

உடன், "மாமா!" என்று ஒரு அலறல் அவரது அடிவயிற்றிலிருந்து புறப்பட்டது.

மூத்த கொடவர் இறந்து கிடப்பதைப் பார்த்தவுடனேயே இரண்டாவது கொடவர் அதிர்ச்சியில் உயிர் துறந்திருந்தார்.

அதை உணர்ந்த சீராமதாசர் வாயிலும் வயிற்றிலும் அடித்துக்கொண்டு, "எல்லாம் இழந்தேனே!" என்று பிலாக்கணமாய்ப் புலம்பி, தரையிலே தலையை அடித்துப் புரட்டி அழுது, ஒரு பெரும் சோகக் கடலில் மூழ்கிக் கிடக்கலானார்.

உணர்ச்சி பூர்வமாக அதுவரை யாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த வல்லபனும், தத்தனும் அப்படியே கண்ணீர் உகுக்கலானார்கள்.

கண்களைத் துடைத்துக் கொண்டு நாசியை வழித்து விட்டு சிங்கழகர் மேலே பேசாமல், "இருங்கள், சொல்கிறேன்! என் நெஞ்சு துக்கத்தில் நிரம்பியிருக்கிறது" என்று சொன்னார்.

பின்னர் அவர் அந்த இரு இளைஞர்களின் முன்னிலையில் ஓசைப்படாமல் கண்ணீர் விடத் தொடங்கினார்.

கூடத்தில் அமர்ந்து யாவற்றையும் கேட்டுக் கொண்டிருந்த மஞ்சரி கூட அப்படியே துக்கத்தில் தோய்ந்து சமைந்து விட்டாள்.

அந்த எளிமையான மண் வீட்டிலே சோக உணர்ச்சி ஒரு பனிபோல் நிரம்பிக் கிடந்தது.

சிறிது நேரம் கழித்து, தம்முள் தாமே தேறிய சிங்கழகர், மஞ்சரியைப் பார்த்து, "அம்மா மஞ்சரி! பருகுவதற்குத் தீர்த்தம் கொண்டு வா!" என்றார்.

அரங்கனைப் பற்றி அவர் என்ன சொல்லப் போகிறாரோ என்ற கவலையில் இரு இளைஞர்களும் அவரையே உற்றுப் பார்த்திருந்தார்கள்.

பிற்கு நீரைக் குடித்த அவர், "அரங்கனின் கதையைச் சொல்கிறேன்" என்று ஆரம்பித்தார்.

—தொடரும்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

சிங்கழகர் வீட்டு மண் குடிலிலே, ராஜவல்லபனும் காலதத்தனும் ஆவலோடு அமர்ந்து, அழகரின் முகத்தையே உற்று நோக்கிய வண்ணம் இருந்தார்கள்.

அந்த இருவர்களின் மனமும் கனத்து வழிந்தது. எதிரே இருந்த அழகரோ, நினைக்க ஒண்ணாத எதையோ நினைத்து விட்டது போல் பழமையை நினைத்து உள்முகமாக மனத்துள் நைந்து கொண்டிருந்தார்.

மஞ்சரியும் மண் தரையில் சிற்றாடை பரந்து கிடக்க, கன்னங் கரிய விழிகளும் பவழ வாயும் ஆச்சரியத்தால் விரிந்து இருக்க சிங்கழகரையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

தீர்த்தம் பருகிய சிங்கழகர், ஆசுவாசமாக மூச்சு விட்டு, உள் வெப்பம் தணிந்தாற்போல் 'அப்பாடா' என்று கூறி, தனது ஆழமான கண்களை முன் உத்திரியத்தால் துடைத்துக் கொண்டு,

''அரங்கனைப் பற்றித்தானே தெரிய வேண்டும்! இதோ சொல்கிறேன்'' என்று ஆரம்பித்தார்.

அவர் தமது உத்கண்டமான குரலில் சோகம் பளபளக்க மேலே சொல்லிக் கொண்டே போக, இளைஞர்களின் கண்கள் முன்னே காட்சிகள் மீண்டும் விரிய ஆரம்பித்தன.

அஞ்சனாத்திரி மலையின் அடிவாரத்திலுள்ள அகோரமான காட்டிலே குருகூர் தாசரும் அவரது மைத்துனரான வில்லிபுத்தூர் தாசரும் உயிர் பிரிந்து கிடப்பதைக் கண்டு மிகுந்த வியாகூலத்துக்கு ஆட்பட்ட சிராம தாசர், அப்படியே உன்மத்தம் ஆனாற் போல் உறைந்து கிடந்தார்.

நாழிகை ஏறியதும், மனத்தில் தேறிக் கொண்டு அரங்கனின் நினைவு கொண்டவராய், திடீரென்று எழுந்து சுற்றிவரப் பார்க்குங்காலையில்,

சங்கு மலர்ப் புதரிலே அடர்த்தியாகக் தொடிகள் சிக்கிக் கொண்டிருப்பதைப் பார்த்து, 'இது நாம் இழுத்துக் கயிறு பண்ணிய கொடி அல்லவோ!' என்று எண்ணி அந்தக் கொடிகள் சிக்கியிருக்கும் பகுதியை நோக்கிப் பாய்ந்து சென்றார்.

போகப் போகக் கொடிகளின் சிக்கலானது அவரையும் சேர்த்து சிடுக்கில் மாட்டி வைக்க,

பொறியில் அகப்பட்ட பிராணி போல் பல நிமிஷ நேரங்கள் தடுமாறித் தத்தளித்து,

பின்னர் இடுப்பிலிருந்த கத்தியை எடுத்து அவற்றைச் சீவிக் கொண்டு உள்ளே செல்லலாயினார்.

செல்லச் செல்ல எங்கும் கொடிகள் தென்பட்டனவே ஒழிய அரங்க விக்கிரகம் தென்படவே இல்லை.

'இதென்ன விநோதமாயிருக்கிறதே' என்று எண்ணிக் களைப்பும் துக்கமும் மேலிட அப்படியே இற்றுப் போய் அமர்ந்து,

''அரங்கா! சோதனை போதும், அப்பா! இனியும் பொறுக்கில்லேன். இருக்கும் இடத்தைக் காட்டுவாய்!'' என்று பிரார்த்தனை செய்து கண்மூடி அமர்ந்து விட்டார்.

அப்பால் சிறிது நேரத்தில் கண்திறந்து பார்க்கும் போது, சூரியன் கீழே இறங்கி விட்டமையால், அவனது கிரணங்கள் புதர்களை எல்லாம் கோதி எடுத்துக் கொண்டு வீசிட,

சங்கு மலர்ச் செடிக் கூட்டத்தின் மறு பகுதியிலே பளபளவென்று ஏதோ ஒளி வீசி அடிப்பது தெரிந்தது.

கண் திறந்த சிராமதாசர் அதைக் கண்டதும் துள்ளி எழுந்து, புதர்களை எல்லாம் விலக்கிக் கொண்டு போய், ஆவலோடு உற்றுப் பார்க்க,

அங்கே பசுந்தழைகளும், கொடிகளும், செடிகளும் பின்னியிருந்த படுகை ஒன்றிலே அரங்கனது விக்கிரகம் அதுங்கலோ பிதுங்கலோ இன்றி, மல்லாந்த குழந்தை கிடப்பது போல் கிடந்து முறுவலிடுவதைக் கண்டு,

''என் * குட்டனைக் கண்டேனே!'' என்று விம்மிக் கொண்டு போய், அரங்கனை எடுத்து மடிமீது அமர்த்திக் கொண்டார்.

பிறகு சிறிது நேரம் விக்கிரகத்தை வெறித்துப் பார்த்து, ''உமக்கு ஒரு குறையும் இல்லை. ஆனால் என்னைக் குறையுள்ளவன் ஆக்கினீரே!'' என்று துக்கித்து அழுதார்.

நெடுநேரம் வரை அவர் அப்படியே மூச்சுப் பேச்சின்றிப் பிரமையிட்டது போல் அமர்ந்திருந்தார்.

இதற்கிடையிலே, தனிமையாய்க் கிடந்து தவித்த சிங்கழகரோ, அஞ்சனாத்திரியில் துருக்கியப் படையாட்களால் அரங்கனுக்கும் கொடவ

---

* குட்டன்: குழந்தையை விளிக்கும் அன்புச் சொல்



ருக்கும் என்ன நேர்ந்ததோ என்று எண்ணி வெகு நேரம் சோகித்திருந்தார்.

மாலை ஏற ஏற அவருக்கு மனத்திலே பெரிய தவிப்பு கூடிக் கொண்டிருந்தது. இருப்பினும் துருக்கிய படை ஆட்கள் மலையைச் சூழ்ந்திருக்கும் வரை தாம் நகரலாகாது என்று நினைத்திருந்தார்.

வெகுநேரம் வரை அவர் அப்படியே அமர்ந்திருக்க மாலையின் நிழல்கள் நீண்டு கொண்டே சென்றன.

மெள்ள மெள்ள அந்தி நிழல் அந்தக் காட்டை மூடி வருங்கால், முன்னிலும் அதிகமாய் அவர் கிலேசித்திருக்க, தூரத்தில் எங்கேயோ மிகச்சன்னமாய், ''அழகர் சுவாமி! அழகர் சுவாமி!'' என்று ஒரு குரல் இடைவிட்டுக் கேட்க ஆரம்பித்தது.

அவ்வளவில் புளகிதம் அடைந்து, குரல் நன்றாகச் செவியில் விழும் வரை பொறுத்திருந்து, பின் சப்தம் வருகிற திக்கைக் கணித்துக் கொண்டு, அங்கு நோக்கி நடக்கலானார் சிங்கழகர்.

அவர் நடந்து செல்லச் செல்ல, குரலும் அருகருகப் பெரிதாகிக் கொண்டே வந்தது.

பின்னர் சிங்கழகர் தொலைவிலே சீராமதாசரைக் கண்டுவிட,

ஆனந்தமேலீட்டால், கை தூக்கி ஆட்டிய வண்ணம், "சீராமரே! சீராமரே!" என்று கத்திக்கொண்டு ஓடினர்.

இழைக்கும் மூச்சுகளுடன் இருவரும் சந்தித்துக் கொள்ள, ஒருவரை ஒருவர் இறுகத் தழுவி, முகம் புதைத்து, தெளிவில்லாத ஆனந்த வார்த்தைகளைக் கொட்டி, இன்பப் பரவசத்தில் ஆழ்ந்தார்கள்.

சிங்கழகரும் உடனே அரங்கனுக்குத் தெண்டனிட்டு எழுந்திருந்து, சீராமதாசரை நோக்கி, "நடந்ததெல்லாம் என்ன?" என்று கேட்க,

தாசரும் ஏதும் கூறாது தாரை தாரையாய்க் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தார்.

பின்னர் படிப்படியாகத் தேறிய அவர், நடந்தவைகளை எல்லாம் விக்கிக் கொண்டே சொல்லி முடித்தார்.

துக்கத்துடன் யாவற்றையும் கேட்ட சிங்கழகர் வெகுநேரம் வரை ஏதும் பேசாமல் கண்ணீரைச் சிந்தினர்.

பிறகு இரவு வந்ததால் இருவரும் அங்கேயே கழித்தார்கள். நிசி முழுதும் தாசர் என்னவெல்லமோ புலம்பிக் கொண்டிருந்தார்.

காலையில் எழுந்ததும் சிங்கழகர், இறந்து போன இரு தாசர்களின் திருமேனிகளையும் தேடி, அவற்றுக்கான கடைசிக் கிரியைகளைச் செய்துவிட விரும்பினர்.

தமது விருப்பத்தை சீராமதாசரிடம் கூறிவிட்டுப் புறப்படும் வேளையில், சிங்கழகர் ஒன்று கவனித்தார்.

தாம் எது கூறினும், அந்த தாசர் 'உம்' கொட்டிக் கொண்டிருந்தாரே ஒழிய வேறு ஏதும் பேசவில்லை. தாசரின்கண்களும் வெறித்தபார்வையாகவே இருந்தன. இது பற்றி அவருக்குப் பலவித சந்தேகங்கள் ஏற்பட்டன. எனினும் தாசர்களின் கடைசிக்கிரியைகளை நடத்த விரும்பியமையால் சீராமரை அப்படியே விட்டு விட்டுப் போக நினைத்தார். 'இவர் அதீத துக்கத்தில் இருக்கிறார். போகப் போகச் சரியாகி விடுவார்!' என்று நினைத்து சீராமரை உலுக்கி, "நான் போய் வருகிறேன். ஜாக்கிரதையாக இருங்கள்!" என்று கூறிவிட்டு அவரிடம் மறு உத்தரவு ஏதும் பெருமல் அவரை அப்படியே விட்டு விட்டுப் போய் விட்டார்.

வெகு நேரம் அலைந்து, நடுப் பகல் வரும் வேளையில் இறந்து போன தாசர்களின் திருமேனிகளைச் சிங்கழகர் கண்டுகொண்டார்.

அவர் மனத்தில் துக்கம் பொங்கி வழிந்தது. "அரங்கனே! அறுபதாகப் புறப்பட்டது இப்போது வெறும் இரண்டாக அருகி நிற்கிறதே!" என்று வருத்தப்பட்டார்.

அப்பால் அந்த இரு திருமேனிகளையும் எட்டத்திலிருந்த ஒரு ஓடையின் படுகைக்கு எடுத்துச் சென்ருர்.

அதன் மணலில் தமது கைகளால் குழி பறித்து, திருமேனிகளை அவற்றுள் பள்ளிப் படுத்தி விழி சோரப் பிரார்த்தனைகள் செய்து பின்னர் மேனிகளை மண் அடர்த்தியால் மூடி வைத்தார்.

பின்னர் பழைய இடம் நோக்கித் திரும்பலானர்.

அங்கு சென்று பார்த்தபோது சீராமதாசரையும் காணவில்லை. அரங்கனையும் காணவில்லை. திடுக்கிட்டுச் சுற்றுமுற்றிலும் புகுந்து பார்த்தார். "சீராமா! சீராமா!" என்று குரல் கொடுத்தார்.

மாலை நேரம் வரை தேடியும் சீராமரைக் காணவே இல்லை.

அப்போது எங்கும் கருகரு என்று இருட்டிக் கொண்டுவர, "கடைசியில் இப்படியும் ஒரு கதி வந்ததே!" என்று நினைத்து, அன்று இராப் பொழுதை அங்கேயே கழிக்க எண்ணிச் சோர்ந்து படுத்துவிட்டார்.

மறுநாள் காலையில் எழுந்திருந்து பார்க்க இரு கால்களும் இயங்கவில்லை என்று தெரிந்து ஆச்சரியத்துடன் கால்களை நோக்கினர்.

முட்டுப் பிரதேசம் வரை நீலம் பாரித்திருந்தது.

அப்போதுதான் ஒன்று புலனாயிற்று. கடைசிக் கிரியைகளுக்காகப் புதர்களை ஊடுருவிக் கொண்டு போன போது அங்கங்கே ஊசி குத்தினாற்போல் காலில் ஏதோ வலி தோன்றுவதை அறிந்திருந்தார். 'முள் செடிகள்தான் குத்துகின்றன' என்று நினைத்திருந்தவருக்கு இப்போது கால்களைப் பார்க்கும்போது ஒரு பெரிய அதிர்ச்சியே ஏற்பட்டது.

ஏதோ விஷப் பூச்சிகளோ, ஜந்துக்களோ கால்களைத் தீண்டியிருக்க வேண்டும். அதனால்தான் கால்கள் நீலம் பாரித்துக் கட்டையாகி விட்டன என்று எண்ணினர்.

இந்த நிலையில் எழுந்து முறையாக நடக்க முடியாது என்று தெரிந்தபோது அவரது அதிர்ச்சி பெருமடங்காகியது.

உதவி இல்லாமல் இனிப் போவது கஷ்டம் என்று தெரிந்ததால் சீராமதாசர் வருகிறாரா பார்ப்போம் என்று நினைத்து மற்றொரு பகல் பொழுதையும் இராப் பொழுதையும் அங்கேயே கழித்தார்.

இரண்டாம் நாள் பொழுது புலர்ந்ததும் இனி சீராமருக்குக் காத்திருப்பது சரியில்லை என்று தோன்றியது.

காட்டை விட்டு உடனே வெளியேற வேண்டும், இல்லாவிடில் கொடிய விலங்குகளால் ஆபத்து ஏற்படும் என்று எண்ணிய அவர் தரையில் ஒரு பிராணி



நிருபர்: உங்கள் கூந்தல் பளபளப்பின் ரகசியம்என்ன?

நடிகை: நாம் வைக்கிற முறையில்தான் இருக்கு. ஷாம்பூ போட்டுத்தான் வாஷ் பண்ணுவேன்.

நிருபர்: அப்படியா?

நடிகை: அத்துடன் இரவு நேரங்களில் கூந்தலை பீரோவில் வைத்துப் பத்திரப்படுத்துவேன்.

- பஞை



வந்த ஆசா": என்னப்பா ஆளு நீ? ரேகை பார்த்துப் பலன் சொல்லச் சொன்னல் மீசையை முறுக்கிக்கிட்டு என்னேடை சண்டைக்கு வர்றியே....?

மரத்தடி ஜோசியர்: ரேகை பார்த்துப் பலன் தெரிஞ்சுக்கிட்டு, காசு கொடுக்காமல் அப்படியே கம்பி நீட்டணும்னு மனசுக்குள்ளே திட்டம் போட்டிருக்கியே-எனக்குத் தெரியாதுன்னு நினைச்சே!

-கலா

போல் தவழ்ந்துகொண்டே அந்த காட்டில் ஊடுருவி நடக்கலானார்.

பசியும்சோர்வும்மேலிட மூன்று நாட்கள் தவழ்ந்த பின் காடு முடிவடையாமல் போகவே வழி தவறிவிட்டோமே என்று பரிதவிக்கலானார்.

நான்காம் நாள் காலையில் பசியும் தாகமும் வாட்டி விட, இனி ஒரு அங்குலமும் நகர்வது கடினம் என்ற நிலை ஏற்படும்போது செஞ்சு இனத்தைச் சேர்ந்த மலைவேடவர்கள் அவரைக் கண்டெடுக்க நேர்ந்தது.

அவர்கள் அவருக்கு நீரும் தேனும் பழங்களும் கொடுத்துப் போஷித்து மெள்ள மெள்ள அவர் விருத்தாந்தங்களைக் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள்.

பின்னர் அவரைத் தோலால் செய்த ஒரு டோலாவில் ஏற்றி வைத்து, காட்டைக் கடக்கப் பண்ணி நாட்டுப்புறத்திற்கு அழைத்துப் போய் அங்கே ராஜபாட்டை அருகில் அவரை இறக்கிவிட்டார்கள்.

வேடவர்களிடம் நன்றி பிரதிபலிக்க விடைபெற்ற சிங்கழகரும் பின்னர் போக்குவண்டிகள் பலவற்றில் ஏறிக் கடைசியாக காஞ்சிபுர க்ஷேத்திரத்தைச் சென்று அடைந்தார்.

பூரணமாக மரத்துப்போன இரு கால்களுக்கும் அங்கே ராஜ வைத்தியம் செய்து கொண்டு ஓரளவு கால்களில் உணர்வுகளைப் பெற்றவராய் அந்த காஞ்சிபுர நகரத்திலேயே வசித்து வரலானார்.

"அவர் பதினெட்டு ஆண்டுகள் இந்த காஞ்சி நகரத்தில் வாழ்ந்து விட்டாரப்பா! அவரது ஆசைகளும், எண்ணங்களும் மனோரதங்களும் இந்தப் பதினெட்டு ஆண்டுகளில் சிறிது சிறிதாக நைந்து மறைந்துவிட்டன அப்பா! கேவலம் ஒரு நடைப் பிணம் போல் வாழுகிறாரப்பா!" என்று சொல்லி முட்ட முட்டக் கண்ணீர் பெருக்கித் தம் கதை முழுவதையும் சொல்லி முடித்தார் சிங்கழகர்.

இளைஞர்கள் இருவரும் கற்சிலைகள் போல் சமைந்து கிடந்தார்கள்.

ஏதோ ஒரு பெரும் இதிகாசம் முழுவதையும் கேட்டது போலவும், கடைசியில் அதன் சோகமுடிவைக் கேட்டுத் துக்கித்துக் கிடப்பவர்கள் போலவும் இருவரும் கிடந்தார்கள்.

மஞ்சரியும் தனது குனிந்த தலையை நிமிர்த்தாமலே இருந்தாள்.

இறுகிப் போன ஒரு துக்கம் அங்கே கனமாகச் சூழ்ந்திருந்தது.

அப்பால் கால் நாழிகை யாவரும் மௌனமாய் இருந்த பிறகு சிங்கழகர் தம்மை ஓரளவு தேற்றிக் கொண்டு இளைஞர்களை நிமிர்ந்து பார்த்து, "பிள்ளைகாள்!" என்று அழைத்தார்.

இளைஞர்கள் இருவரும் திடுக்கிட்டு நினைவு வந்தவர்களாய் அவரை ஏறிட்டுப் பார்த்தார்கள்.

"பிள்ளைகாள்! ஒரு சோக காவியத்தை இது வரை கேட்டிருக்கிறீர்கள்; உங்கள் நெஞ்சங்கள் எல்லாம் வெகுவாகக் கனக்குமே! நீங்கள் ஆசுவாசப்பட்டு இங்கே இந்த அடியவனின் குடிலில் இன்று முழுதும் தங்கி இருக்க வேண்டும். கனம் சிறிதளவு குறைந்தவுடன்அடியேனுடன் மேலும் உரையாடிவிட்டுச் செல்லவேண்டும்" என்று கை கூப்பிக் கூறினார்.

இரு இளைஞர்களும் அவர் சொல்வதற்கு மறுப்புச் சொல்லாமல் மௌனமாக இருந்துவிட்டார்கள்.

அவ்வளவில் சிங்கழகர் மெள்ள எழுந்து நொண்டி நொண்டி நடந்துகொண்டு புழைக்கடை நந்தவனத்திற்குச் சென்றுவிட்டார்.

இளைஞர் இருவரும் அந்தக் கூடத்திலேயே அமர்ந்திருக்க, அவர்கள் செவிகளில் திடீரென்று ஒரு விசும்பல் ஒலி கேட்டது.

மஞ்சரிதான் விசும்பிக் கொண்டிருந்தாள்.

- தொடரும்

---

புஷ்பா தங்கதுரை

எழுதும்

# மரிலின் மன்றோவும் நானும் சாந்த சக்குபாயும்

நெடுங் கதை

அடுத்த இதழில்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

மஞ்சரியிடமிருந்து விசும்பல் சப்தம் கேட்டுத் திடுக்கிட்ட இளைஞர்கள் அவளைத் திரும்பிப் பார்த்தார்கள்.

''மஞ்சரி! உனக்கு என்ன நேர்ந்தது? ஏன் விசும்புகிறாய்?'' என்று ஆதுரத்துடன் காலதத்தன் வினவ,

மூக்கு உறிஞ்சி, கண் கசக்கி, வாய் பொத்திய மஞ்சரி சிறிது நேரம் ஆற்றாமையுடன் இருந்து விட்டுப் பின்னர் தத்தனை நோக்கிப் பேசத் துவங்கினாள்.

''ஐயா! நாட்டிலே எத்தகைய அமளிதுமளிகள் நடந்தேறி விட்டன! அகிலத்து அரசர்கள் எல்லாம் வந்து பள்ளிக்கட்டின் கீழ் தவமிருக்கும்படியான சம்பத்தைப் பெற்ற நம் அரங்கனுக்குக் கூட எத்தகைய துக்கங்கள் நேர்ந்து விட்டன! அவருக்கே அவை நேர்ந்த தென்றால் சாமானிய ஜனங்களுக்கு நேர்ந்ததைச் சொல்ல முடியாதே! ஒரு நாட்டின் வாழ்க்கையையே சிறைசெய்து விட்டார்களே சுல்தானியர்கள்! இப்படி நடந்ததால் அன்றோ என் தாய் தந்தையரை ஒருங்கே நான் இழக்க நேர்ந்தது. நான் இழந்தது மட்டுமல்ல; ஒவ்வொரு குடும்பமும் ஆள், வீடு, பூமி என்று எதையாவது இழந்துவிட்டு நிற்கிறதே! அரங்கனும் தம் திருவரங்கத் திருவை * இழந்து நிற்கிறாரே! ஒரு நாடே இப்படி அனாதையாகி விட்டதே! இதைக் கேட்பாரில்லையே! கண்டிப்பார் இல்லையே! ஒரு கால தோஷத்தில் நாட்டில் எல்லோரும் பெண்களாகி விட்டார்களே! வீரமும், தைரியமும், மனோதிடமும் ஏட்டிலே வெறும் எழுத்துக்களாகி விட்டனவே! அதை நினைத்தால்தான் துக்கம் பொங்கி வருகிறது. வேதனை தகைந்து வருகிறது!'' என்று படபடப்புடன் கூறினாள்.

அவள் பேசியதைக் கேட்டு, தத்தன் வாய் அடைத்து நின்றான்.

ஆனால் அதே நேரத்தில் ராஜவல்லபன் உள்ளத்தில் ஒரு எரிமலை கொழுந்து விட ஆரம்பித்தது. அவன் கண்கள் உணர்ச்சி வசமாகின. உதடுகள் பிது பிது என்று துடித்தன.

''மஞ்சரி!'' என்றான் அவன். ''நீ சொல்வதெல்லாம் என் மனத்தில் அம்புபோல் தைக்கிறது. அவை என்னை வாட்டி வதைக்கின்றன. என்னைப் போல் இளைஞர்கள் வாளாவிருந்தது ஒரு பெரும் தப்பிதம். மற்றவர்கள் எப்படியோ எனக்குத் தெரியாது. நாங்கள் இப்போது பெரும் லட்சியத்தை மனத்தில் கொண்டு புறப்பட்டிருக்கிறோம். அதை நிறைவேற்றி வைக்கும் வரை நாங்கள் உறங்க மாட்டோம். இது சத்தியம்!'' என்று ஆவேசம் வந்தவன் போல் கூற, சுவரில் இருந்த பல்லி ஒன்று பல முறை கொட்டியது.

பிறகு அவன் இடுப்பிலிருந்து பளபளக்கும் குறுக்கத்தி ஒன்றை நறுக்கென்று எடுத்து, அதை மஞ்சரி முன்னே வைத்து, ''மஞ்சரி! இந்தக் கத்தியை உன் கையால் தொட்டுக் கொடு! அப்படிக் கொடுத்தால் இது என் இடுப்பிலே உறங்கிக் கொண்டிருந்தாலும், நெஞ்சிலே குத்திக் கொண்டே இருக்கும். உன் வெதும்பிய வார்த்தைகள் என் உள்ளத்தில் ஒலித்துக் கொண்டே இருக்கும்! அவை எனக்குப் பெரும் தூண்டுகோலாகவும் இருக்கும். உறங்கும் என் நினைவுகளை ஒச்சிவிட்டதாகவும் இருக்கும்'' என்று ஒரே தீவிரமாய்க் கூறினான்.

அவன் கூறிய வார்த்தைகளின் வேகத்தையும், அழுத்தத்தையும் கண்டு மஞ்சரியின் கண்கள் ஆனந்த பாஷ்பங்களைச் சொரிந்தன.

முகத்தில் அழுகை கவிழ்ந்திருந்தாலும், உதட்டில் முறுவல் முகிழ்த்து வர, வல்லபனை நோக்கி, அவள் நடந்து வந்து, அவன் கையிலே அந்தக் குறுக்கத்தியை எடுத்துக் கொடுத்து,

---

* திருவரங்க நகரம் என்னும் செல்வம்



யாரைப் பார்த்து இப்படிப் பாய்கிறார் ஸ்ரீப்ரியா? ''ஆட்டுக்கார அலமேலு'வுக்குப் பிறகு இது போன்ற போக்கிரித்தனமான கதாபாத்திரம் என்றால் ஊதித் தள்ளி விடுவார் போல இருக்கிறதே!

படம்: 'போக்கிரி பொன்னம்மா' -ஜகநீஸ்வரி



''ஆகா! இப்போது என் மனம் பரவசமாகிறதே! எனக்குள் புதிய உற்சாகம் பிரவேசிக்கிறதே!'' என்று ஆவேசத்துடன் கூறினான்.

அதே நேரத்தில் அங்கு நடந்ததை எல்லாம் கேட்டவாறு வெகுவேகமாக நொண்டிக் கொண்டு உள்ளே வந்த சிங்கழகர், ''ஆகா! ஆகா! பதினெட்டு ஆண்டுகளாய்க் கேளாத வார்த்தைகளை இன்று கேட்டுவிட்டேன்! செய்கையில் காட்டா விட்டாலும் வேண்டாம். சொல்லிலாவது தைரியம் காட்டினீர்களே, அது போதும் தம்பி! அது போதும்!'' என்று சொல்லி வல்லபனை ஆரத் தழுவிக் கொண்டார்.

அன்று இரவு அங்கே உறங்கிவிட்டு, காலையில் எழுந்து இரு இளைஞர்களும் தங்கள் சத்திரத்திற்கு மீளவும் சென்றார்கள்.

வெளியே சென்றால் என்ன ஆபத்து எதிர்ப்படுமோ என்று எண்ணி இருவரும் சத்திரத்துக்குள்ளேயே காலை முழுவதும் இருந்து விட்டு, மதியத்திற்குமேல் சிங்கழகரின் குடிலுக்கு மீளவும் சென்றார்கள்.

அவர்கள் போன சமயம் ராஜசேவகர்கள் மூவர் நின்று கொண்டு சிங்கழகருடன் கோபமாக வார்த்தை சொல்லிக் கொண்டிருந்தார்கள்.

இதைக் கண்டு இளைஞர்கள் இருவரும் புறம்பே ஒதுங்கி நிற்க,

சிறிது நேரத்தில் அந்தச் சேவகர்கள் மூவரும் குடிலை விட்டு வெளியே வந்து வேகமாகப் போய் விட்டார்கள்.

அப்பால் இளைஞர்கள் உள்ளே போனதும், சிங்கழகர் அவர்களை வரவேற்று உபசரித்து, ''பிள்ளை

காள்! உங்களைத்தான் எதிர் பார்த்து இருக்கிறேன்'' என்று கூறினார்.

இளைஞர்கள் இருவரும் தரையில் அமர்ந்து கொள்ள, வல்லபன் சிங்கழகரை நோக்கி, ''இந்தச் சேவகர்கள் யார், சுவாமி? எதற்கு வந்தார்கள்?'' என்று கேட்டான்.

''இவர்கள் சம்புவராயரின் ராஜ படர்கள்; இறை வாங்க வந்திருக்கிறார்கள். இப்போது ஊரிலே எதை எடுத்தாலும் இறை விதித்து விடுகிறார்கள். ராஜரீகம் மிகவும் மோசமாக நடக்கிறதே! உங்களுக்குத் தெரியாதோ!'' என்று கேட்டார் சிங்கழகர்.

''எதுவும், தெரியாது, சுவாமி'' என்றான் வல்லபன்.

''இந்தச் சம்புவராயர் ராஜ்யம் காலம் காலமாய தர்மத்தில் நின்று வந்திருக்கிறது. ஆனால் இப்போது வரவர ராஜ்யத்திலே அநீதிகள் நிறையத் தலை காட்டத் தொடங்கி விட்டன. அவைகளைப் பார்த்தும் அரசர் வாளா விருக்கிறார். அவருக்கு ஏன் இப்படிப் புத்தி மாறிப் போனது என்று தெரியவில்லை. குடிஜனங்கள் இதைக் கண்டு ஆச்சரியப் படுகிறார்கள்'' என்றார் சிங்கழகர்.

''சுவாமி!'' என்றான் வல்லபன். ''மதுரை சுல்தானுக்கு இந்தச் சம்புவராயர் கப்பம் கட்டுபவர் தானே!'' என்று கேட்டான்.

''நன்றாகக் கேட்டாய் கேள்வி! கப்பம் கட்டுவதனாலேதானே அவர் தம் ராஜ்யத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடிந்தது! இல்லாவிடில் ஏனைய சோழ, பாண்டியர்களுக்கு நேர்ந்த கதி இவர்களுக்கும் நடந்திருக்குமே! சம்புவராயர்கள் தந்திரசாலிகள், முதன் முதல் சுல்தானியர்கள் தெற்கே படையெடுத்து வந்த போது, அவர்களுக்கு அடி பணிந்து வழி விட்டார்கள். சிற்றரசர்களாக இருந்து கப்பம் கட்டுவதாக வாக்களித்தார்கள். இதனால்தான் அவர்கள் ராஜ்யம் பிழைத்தது. அவர்கள் ஆட்சி இன்னமும் நடந்து வருகிறது'' என்றார் சிங்கழகர்.

அப்போது தத்தன் இடைமறித்து, ''சுவாமி! இந்த சம்புவராயர்கள் நமது வேதாந்த சமயங்களைச் சேர்ந்தவர்கள் ஆயிற்றே! இவர்கள் மதுரை சுல்தானை எதிர்த்துப் போரிட்டு இந்த நாடுகளை மீட்கக் கூடாதோ?'' என்று கேட்டான்.

''அப்பா, காலதத்தா! நல்ல கேள்வி கேட்டாயே! இந்த சுல்தானியர்களை விரட்டுவதற்கான தைரியம் இவர்களிடம் ஏது? போதிய படைகளும் ஏது? இப்போது கூட இந்த சம்புவராயர்கள் ஆட்சி நடத்துகிறார்களே, எப்படி நடத்துகிறார்கள் என்று நினைக்கிறாய்? சுல்தானியருக்குப் பயந்து நடுங்கிக் கொண்டு ஆட்சியை நடத்தி வருகிறார்கள். இது உனக்குத் தெரியாதா?'' என்றார் சிங்கழகர்.

''தெரியாது சுவாமி! நாங்கள் முதன் முதல் காஞ்சீபுரத்தில் நுழைந்த போது ஜனங்கள் நிச்சிந்தையாய்ப் போய் வருவதைப் பார்த்தோம். கோவிலுக்குத் திருமஞ்சனக் குடம் போவதைப் பார்த்தோம். இவை யெல்லாம் பார்த்தால் இங்கே இந்தச் சம்புவராயர்கள் பூரணமான சுதந்திரமுடன் தர்மராஜ்யம் நடத்தி வருகிறார்கள் என்று நினைத்தோம்'' என்றான் வல்லபன்.

''நல்லது பிள்ளாய்! நீ பார்த்தது எல்லாம் மேல் பூச்சு! உள்ளே தோண்டிப் பார்த்தால் அவ்வளவும் அனர்த்தங்கள்! சுல்தானியர்கள் இவர்களை அவ்வப்போது பணம் கேட்டுக் கொண்டே இருக்கிறார்கள். இவர்களும் ஜனங்களை இறை கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள். இதனால் ஜனங்கள் நைந்து வருந்துகிறார்கள். இங்கே கோவிலில் பூஜை நடப்பதெல்லாம் காலையில் ஒரு நாழிகை! மாலையில் ஒரு நாழிகை! மற்ற நேரம் எல்லாம் அவை அடைத்தே கிடக்க வேண்டும். இந்த பூஜைகள் கூட சுல்தானியருக்குத் தெரியாமல் நடந்து வருகிறது. தெரிந்தால் விபரீதங்கள் நேர்ந்து விடும்! இவ்வளவு லட்சணத்தில்தான் சம்புவராயரின் ஆட்சி இங்கு நடந்து வருகிறது. இவர்களால் மதுரையை எதிர்த்து என்றுமே போராட முடியாது என்பது என் துணிவு! இங்கே இந்தராஜ்யத்தில் ஒரேஒரு நன்மை! எங்களைப் போன்ற திக்கற்றவர்களுக்கு இது ஒரு 'அஞ்சினான் புகலிடமாக' இருந்து வருகிறது. அவ்வளவேதான்!'' என்று கூறினார்.

பின்னர் அவர் சம்புவராயர் ஆட்சி எப்படிப் படிப்படியாக இப்போது க்ஷீணித்து வருகிறது என்பதையும், நாட்டில் எப்படி அக்கிரமங்கள் பெருகி வருகின்றன என்பதையும் விரிவாகக் கூறினார். நாடு போகிற நிலையைப் பார்த்தால் கடவுள்தான் ஏதாவது கண் திறந்து செய்ய வேண்டும் என்பதையும் கூறினார்.

அவர் சொல்வதை எல்லாம் மிக உன்னிப்புடன் இரு இளைஞர்களும் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

அவர்களுக்கு எதிலும் அப்போது ஒரு சூன்யமே தோன்றிக் கொண்டிருந்தது.

அதை அறிந்து கொண்ட சிங்கழகர், ''பிள்ளைகாள்! கலங்க வேண்டாம்! அது நடக்க வேண்டிய வேளைகளில் தானாகவே நடக்கும். நாம் கவலைப்பட வேண்டுவதில்லை. இப்போது பாருங்கள்! நீங்கள் இருவரும் அரங்கனைத் தேடி இங்கே வந்திருக்கிறீர்கள் என்பதே ஒரு நல்ல துவக்கத்தின் அறிகுறி! இதுவே ஒரு பெரும் போராட்டத்திற்கு வழி வகுத்தாலும் வகுக்கும். நான் சொல்வதை நம்புங்கள்! நம்பிக்கை வையுங்கள்! நீங்கள் இருவரும் இங்கே வந்திருப்பதே ஒரு சுப சகுனம்'' என்றார் சிங்கழகர்.

★ செங்கல்பட்டு, வட ஆர்க்காடு, தென் ஆர்க்காடு (சிதம்பரம், கடலூர் தாலூகா நீங்கலாக) ஆகியவற்றை உள் அடக்கிய பூமியே சம்புவராய ராஜ்யம்!

அவர் சொல்வது கேட்டு, தெய்வ வாக்கு என மனத்தில் தெளிவு பெற்ற வல்லபன் அவரை நோக்கி, ''சுவாமி! தாங்கள் கூறும் மொழிகளால் எங்களது தவிப்புகளும் சந்தேகங்களும் நீங்கி வருகின்றன. தாங்கள் கூறுவது போல் அரங்கனைத் தேடிக் கண்டுபிடித்தால் அதுவே பின்னர் ஒரு போராட்டத்திற்கு வழி வகுத்தாலும் வகுக்கலாம்! பதினெட்டு ஆண்டுகளுக்குப் பின் உங்களைத் தேடி நாங்கள் கண்டு பிடித்ததே அதற்கான சுப சூசகமாகவும் இருக்கலாம்! இப்போது சொல்லுங்கள், சுவாமி! அரங்கன் அதன் பிறகு என்ன ஆனார்? அவரை நீங்கள் எங்கேயாவது காணநேர்ந்ததா? அரங்கனை எடுத்துச் சென்ற சீராமதாசர் என்ன ஆனார்? அவரையும் நீங்கள் பார்த்தீர்களா?'' என்று சரமாரியாகக் கேட்டான் வல்லபன்.

அதற்கு, சிங்கழகர், ''அப்பா வல்லபா! நான் உனக்குச் சொல்லி நிறுத்தினேனே, அதை விட்டு ஒரு அங்குலம் கூட எனக்குக் கதை தெரியாது. சந்திரகிரிக் காட்டிலிருந்து பல்லாண்டுகளுக்கு முன் தப்பித்து வந்தவன் நான்! அதற்குப் பிறகு எவ்வளவோ முயற்சி செய்தும் சீராமதாசரையும் கண்டு பிடிக்க முடியவில்லை. திருவரங்கனையும் கண்டு பிடிக்க முடியவில்லை. எத்தனையோ பேர்களிடம் விசாரித்து அனுப்பி விட்டேன். யாரும்சீராமதாசரைப் பற்றியாவது, அரங்கனைப் பற்றியாவது ஒரு செய்தியையும் கொணரவில்லை. இருக்கும் ஆத்திரத்தில் நானே சென்று சந்திரகிரிக் காட்டில் தேட வேண்டும் என்று நினைத்ததுண்டு. ஆனால் என் கால்கள் சரியில்லாத நிலைமையில் எப்படிச் சென்று தேடுவேன்? ஆகவே கூண்டுக்குள் அடைபட்டவன் போல் சிக்குண்டு ஏதும் செய்ய முடியாமல் இத்தனை நாள் இருந்து விட்டேன். இப்போது பல வருஷங்களாய் ஒரு அசக்தி என்மீது ஆவிர்பவித்து வருகிறது. என் ஆசைகளும், லட்சியங்களும் மெள்ள மெள்ள நைந்து வரத் தொடங்கி விட்டன. 'இத்தனை ஆண்டுகளுக்குப் பிறகு அரங்கன் இனிக் கிடைக்கவா போகிறான்?' என்ற எண்ணமும் மனத்திலே வளரத் தொடங்கி விட்டது. இந்த நிலையில் நீங்கள் வந்ததால்தான் என் பழைய உணர்ச்சிகள் மீளவும் கொப்பளித்து எழுந்துள்ளன. பிள்ளைகாள்! நீங்கள் இருவரும் என் ஆசை லட்சியங்களின் வெளியுலகப் பிரத்யட்சங்கள். அரங்கனைப் பற்றிய எனது தாங்கொணு வேட்கை தான் இளம் பருவப் பயிர்களாய் உங்கள் உருவில்ஜனித்திருக்கிறது என்று நினைக்கிறேன். என் உள் ஆசைகளின் வெளி வடிவங்கள் நீங்கள்! ஆகவே நீங்கள் எனக்காகச் செய்ய வேண்டுவது இதுதான்! நீங்கள் என்ன செய்வீர்களோ? ஏது செய்வீர்களோ? சந்திரகிரிக்காட்டைக் குடைந்து எடுத்து அரங்கனைத் தேடிப் பாருங்கள்! அங்குலம் அங்குலமாக பூமி முழுவதையும் தேடுங்கள்! அரங்கன் நிச்சயம் அகப்படுவார் என்பது என் நம்பிக்கை! ஒருவேளை அரங்கனே திருவுள்ளம் பற்றினால் அவரே தம்மைத் தாமே காட்டிக் கொண்டாலும் கொள்ளுவார். ஆகவே, முயற்சியில் இன்று முதலே ஈடுபடுங்கள்! முயற்சி திருவினையாக்கும்'' என்று கூறினார்.

பின்னர் இளைஞர்கள் இர்வரும் அவரிடம் சந்திரகிரிக் காட்டின் இயல்புகளையும், அதன் நீள அகல விஸ்தீரணங்களையும் பற்றிக் கேட்டுத் தெரிந்துகொண்டார்கள்.

காட்டுக்குள் பொதுவாக எதிர்ப்படும் கொடிய விலங்குகளையும், விஷ ஜந்துக்களையும் பற்றி அவரிடமிருந்து அறிந்து கொண்டார்கள்!

காட்டில் வேடுவ ஜனங்கள் எந்த எந்தப் பகுதிகளில் இருக்கிறார்கள், அவர்களிடம் என்னென்ன உதவிகள் பெறலாம் என்பதையும் கேட்டுத் தெரிந்து கொண்டார்கள்.

சிங்கழகரிடமிருந்து ஒரு பூரணமான அறிவைப் பெற்ற பிறகு இளைஞர்கள் இருவரும் மறுநாளே சந்திரகிரியை நோக்கிப் புறப்படச் சித்தமானார்கள்.

—தொடரும்.



புறப்படும் வேளை நெருங்கிக் கொண்டிருந்தது. இரு இளைஞர்களும் மீசை தாடி அணிந்து சந்நியாசிகள் போல் வெளியே வந்தார்கள். அவர்களைத் தொடர்ந்து சிங்கழகரும் வந்தார்.

''வேடம் சரியாக இருக்கிறது'' என்றார் சிங்கழகர்.

சம்புவராய ராஜ்யத்தில் இளைஞர்களுக்கு ஏதாவது ஆபத்து வரக் கூடாது என்பதற்காகச் செய்த ஏற்பாடு இது.

சிங்கழகர் வீதியில் போய்த் தம் நிழலைத் தாமே அளந்து, மனத்தில் கணக்குப் போட்டுப் பார்த்தார். பிறகு இளைஞர்களைப் பார்த்துத் திரும்பி, ''இன்னும் அரை நாழி போக வேண்டும்!'', என்று சொல்ல,

இளைஞர்கள் திண்ணையிலே அமர்ந்தார்கள்.

அப்போது ராஜ வல்லபன் சிங்கழகரைப் பார்த்து, ''சுவாமி! ஒரு சந்தேகம்!'' என்று கூறினான்.

''என்ன?'' என்றார் சிங்கழகர்.

''தாங்கள் சந்திரகிரிக் காட்டிலிருந்து வந்து பதினெட்டு ஆண்டுகள் ஆகி விட்டன அல்லவா?'' என்றான் வல்லபன்.

''ஆமாம், பிள்ளாய்'' என்றார் சிங்கழகர்.

''இத்தனை ஆண்டுகள் சென்ற பின்பும் அரங்கன் அந்தக் காட்டிலே இன்னமும் இருந்து வருவார் என்று நம்புகிறீர்களா?'' என்று கேட்டான் வல்லபன்.

''ஆமாம், பிள்ளாய்! அப்படித்தான் நினைக்கிறேன். அரங்கனைத் தூக்கிச் சென்ற கொடவர் மாத்திரம் காட்டை விட்டு வெளி வந்திருந்தால் அந்தச் செய்தி எப்படியாவது என் காதுகளுக்கு எட்டியிருக்கும்'' என்றார் சிங்கழகர்.

''அப்படியானால் அந்தக் கொடவர் பதினெட்டு ஆண்டுகளாக அந்தக் காட்டுக்குள்ளேயே இருந்து வருகிறார் என்று நம்புகிறீர்களா?''

''ஆமாம், அப்படித்தான் நம்ப வேண்டியிருக்கிறது. ஆனால் அந்தக் கொடவர் எது காரணம் பற்றியோ காட்டை விட்டு வெளி வராதிருக்க வேண்டும். அலலது அவருக்கு ஏதாவது நேர்ந்திருக்க வேண்டும். எப்படி இருப்பினும் அரங்கன் காட்டுக்குள்தான் இருப்பார் என்பது எனக்கு நிச்சயமாகத் தோன்றுகிறது.''

வல்லபன் சிறிது நேரம் மௌனமானான்.

பிறகு அவன் சிங்கழகரை நோக்கி, ''சுவாமி! அரங்கனது அணிமணிகள் அடங்கிய பொதி ஒன்றைக் கொடவர்கள் மலைக்கு மேல் எடுத்துச் சென்றார்களே. அது என்ன ஆயிற்று?'' என்று கேட்டான்.

''அதை மேலே முகட்டில் புதைத்து விட்டார்கள். அதனால்தான் இரண்டு கொடவர்களும் மலை மீதிருந்து கீழே கை வீசிக் கொண்டு இறங்க முடிந்தது. அடிவாரத்தில் சூழ்ந்திருந்த துருக்கிய வீரர்களுக்கு ஊடே தந்திரமாகவும் ஊடுருவிப் போக முடிந்தது'' என்றார் சிங்கழகர்.

இதற்குள் சிங்கழகர் மீண்டும் நிழலை அளந்து பார்த்து விட்டு வந்து, ''வேளை கூடி விட்டது'' என்றார்.

அவ்வளவில் வல்லபனும் தத்தனும் தங்களது சுமைகளைத் தோளில் தூக்கிக் கொண்டார்கள்.

வீட்டுள்ளிருந்து மஞ்சரி அப்போது ஓடி வந்தாள். பொன் போன்ற தகதகத்த பித்தளைத் தட்டில் செக்கச் செவேலென்று குங்கும அம்பாரங்களை ஏற்றி வந்தாள். வல்லபனின் நெற்றியிலும், தத்தனின் நெற்றியிலும் தன் தளிர் விரல்களால். வட்டமான திலகங்களை அணிவித்தாள். தத்தனை நெருங்கியபோது அவள் இளம் விரல்கள் சிறிது நடுங்கின. கடைக்கண்ணால் அவனைப் பார்த்தவாறே திலகத்தை வைத்தாள்.

பிறகு இரண்டடி பின் நகர்ந்து, ''ஜய விஜயீ பவ!'' என்று கூறினாள். கீழே தலை குனிந்தவாறே, ''ஐயா! திரும்பிப் போகும்போது இந்த அடியவளைக் காண இருவரும் அவசியம் வரவேண்டும்!'' என்று கூறினாள்.

சிங்கழகர் மல்கும் கண்ணீருடன் நின்றார்.

''பிள்ளைகாள்! அரங்கனைக் காண்பதற்கோர் உபாயம் கூறுகிறேன். அவன் திருநெற்றியில் கஸ்தூரி கமழும்! திரு மார்பில் குடகுச் சந்தனம் வாசம் இடும்.

திரு அங்கமெல்லாம் சிந்தூரம் மணந்து ஊறும்! எங்கே தெய்வீகமான பரிமள கந்தங்கள் காற்றில் வீச கிறதோ அங்கே அரங்கன் நிச்சயம் இருப்பான். காலம் காலமாய்த் தம் திருமேனியிலே இந்தப் பரிமள வஸ்துக் களைத் தரித்திருந்த அரங்கன் அந்தப்பரிமளங்களாகவே தமழ்வான்!'' என்று கூறினர்.

பின்னர் அவர் அந்த இரு இளைஞர்களையும் ஆரத் தழுவி, உச்சி தொட்டு ஆசீர்வதித்து, கண்களில் பெருவ போல என்று நீர் வடிய விடை கூறி அனுப்பினர்.

மஞ்சரி நிலையைப் பிடித்து நின்று, இட்ட கையும் இட்ட காலும் இட்ட சிந்தனையும் இட்டபடியாகவே உறைந்து கிடக்க, இளைஞர்கள் இருவரும் வீதியில் நடை நடந்து போவதை அப்படியே இமையா விழிகளுடன் பார்த்து நின்றாள்.

இளைஞர்கள் அப்பால் கோபுர தரிசனம் செய்து நேராக வைணவ மடம் ஒன்றை அணுகி, ''மேற்கே போவோர் உண்டோ?'' என்றுகேட்க, ''அடியேன் போக இருக்கிறேன்'' என்று ஒரு வைணவர் கூற, அவ ரிடம், சத்திய மங்கலம் வாசந்திகாவுக்கு (வல்லபனின் தாயார்) ஒரு முறி எழுதிக் கொடுத்துவிட்டு, விறுவிறு என்று இருவரும் நகரத்தை விட்டு அப்பால் செல்ல லாயினர்.

பத்து நாட்களாக நடந்து சந்திரிகிரி ஊரை அடைந் தார்கள். ஊருக்குள் செல்லாமல் அருகிலுள்ள மலை மீது ஏறிக் காட்டை நோக்குங்கால், அந்தக் காடு காதம் காதமாய்ப் பரந்து கிடப்பதைக் கண்டு மலைத்துப் போனார்கள்.

இந்தக் காட்டிலே அரங்கனைத் தேடுவது என்பது சமுத்திர மணலிலே எள்ளைத் தேடுவது போல இருக் கும் என்று அவர்கள் எண்ணி மனம் வெதும்பினர்கள். இருந்தும் தளராமல் அரங்கன் மீது பாரத்தைப் போட்டு விட்டு அந்த மகா அரண்யத்தின் தென் திசையிலிருந்து உள்ளே அவர்கள் நுழையத் தொடங் கினார்கள்.

முதல் தினத்தில் விறகு வெட்டிகளின் உதவி பெற்று காட்டுக்குள் போகும் பற்பல வழிகளைத் தெரிந்து கொண்டு அவைகளில் தடம் பிடித்து அவர்கள் நடந்து போனார்கள்.

போகப்போக மனித நடமாட்டம் படிப்படியாகக் குறைந்து காட்டின் நெருக்கம் அதிகமாகிக் கொண்டே வந்தது.

எனினும் தளராமல் அவர்கள் இடைவெளிகளைக் கண்டுபிடித்து மேலே மேலே போய்க் கொண்டிருந்தார் கள்.

மூன்று நாட்கள் பயணத்திற்குப் பிறகு அவர்கள் மிகுதியாகச்சோர்ந்து விட்டார்கள். அப்போது வல்ல பன் தத்தனைப் பார்த்து, ''தத்தா! இவ்வளவு தூரம் தனியாக வந்து விட்டோமே! இனியும் நாம் தனியே போக முடியுமோ?'' என்று கேட்டான்.

''நானும் அதைத்தான் பார்க்கிறேன். காட்டில் பல காத தூரம் போனால் காட்டுவாசிகளின் குடியிருப்பு கள் வரும் என்றார்களே. ஏதும் இப்போது தென் படவில்லையே!'' என்று கூறினன் தத்தன்.

இருவரும் மலைத்துப் போய் 'இனி என்ன செய்ய லாம்?' என்று யோசித்திருக்கும் வேளையில் ''தூக்கா! தூக்கா! தூக்கா!'' என்ற குரல் எங்கிருந்தோ கேட்டது.

அந்தக் குரல் வந்த திசையைப் பிடித்துக் கொண்டு இருவரும் போய்ப் பார்க்க, அங்கே ஒரு பெரியசுனையில் எருகுல இனத்தைச் சேர்ந்த ஒரு பெண் குளித்துக் கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

ஆடவர்கள் இருவர் வருவதைக் கண்டு ஆச்சரியத் துடன் எழுந்த அந்தப் பெண் கரையேறி ஒரே ஒரு மும் முழத் துணியால் சடேரென்று தன் மானத்தை மூடி அவர்களைப் பார்த்துப் புன்னகையோடு வந்தாள்.

மலை முகடுகளில் தவழும் காற்றும், நீரும், அந்தக் காட்டு இனப் பெண்ணை வஞ்சனை இல்லாமல் வளர்த் திருந்தன. மேலே வெறுமையாக இருந்த உடலில் செழுமைகள் இரண்டும் களங்கமில்லாமல் பூத்திருக்க, அவள் கன்னங்களிலும், கண் விழிகளிலும், கழித்த செவி களிலும் ஒரு தறிகெட்டுப் போன யௌவனம் காட் டோடை போல் துள்ளிக் குதித்து உல்லாசமாய் ஓடிக் கொண்டிருந்தது.

முதன் முறையாக ஒரு காட்டு இனப் பெண்ணைப் பார்த்த இளைஞர்கள் அதிசயத்துடன் நின்றார்கள்.

அப்போது தத்தன் அவளைப் பார்த்து,''இங்கே குடியிருப்பு ஏதேனும் இருக்கிறதோ?'' என்று கேட்க, பாஷையைப் புரிந்து கொள்ளாத அந்தப் பெண்ணும் வெறும் தலையை மட்டும் புன்னகையோடு அசைத்துக் காட்டினாள்.

பிறகு அவள் அவர்களைப் புரிந்து கொண்டது போல் அழைத்துக்கொண்டு முன்னே செல்ல, இருவரும் அவள் பின்னே நடந்து மௌனமாகச் சென்றார்கள்.

கால் நாழிகை நடந்த பிறகு ஒரு வேடக் குடியிருப்பு அவர்கள் கண்ணுக்குத் தென்பட்டது. இளைஞர்கள் இருவரும் அதை நோக்கிப் போனதும் குடியிருப்புகளின் ஜனங்கள் யாவரும் ஒருங்கு திரண்டு அவனைச் சூழ்ந்து கொண்டார்கள்.

அவர்களது திடகாத்திர வெற்று உடம்புகளைக் கண்டு இளைஞர்கள் அதிசயிக்க, இரு எருகுல ஆண்கள் முன்னே வந்து அவர்களை அழைத்துக்கொண்டு தங்கள் தலைவரிடம் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

● ஏகலைவ ராஜா என்ற அந்தத் தலைவர் வயதான வராயிருந்தார். தமது ஒக ஸ்தலத்தில்● அவர் அமர்ந்து கொண்டு இளைஞர்களை வரவேற்றார். காட்டுக் கனிகளை

● ஏகலைவனின் வமிசத்தார்கள் தாங்கள் என்று இந்த இனத்த வர் கருதினர்கள்.

● ஒக ஸ்தலம் - பஞ்சாயத்து வழங்கும் இடம்.

அவர்களுக்கு வழங்கிய பின் தமது எருகலபாஷையில், ''ஐயா! தாங்கள் இந்த மகா அரண்யத்துக்குள் வந்த காரணம் தெரியலாமோ?'' என்று கேட்டார்.

அந்தத் தலைவரின் இனிதான உபசரிப்பையும், ஆதரவான மொழிகளையும்கேட்ட இளைஞர்கள் பரவசம் அடைந்தார்கள். இத்தனை நாள் நடந்து வந்த களைப்பும், பட்ட சிரமங்களும் நொடியில் ஆறிப் போனது போல் நினைத்தார்கள். அவர்களும் அந்தத் தலைவரைப்பார்த்து, ''ஐயா! நாங்கள் அரங்கனைத் தேடி வந்தோம்!'' என்று சொல்லி ஆதியோடு அந்தமாய் அரங்கன் அந்தக் காட்டுக்குள் வந்த கதையை விவரமாகச் சொல்லிமுடித்தார்கள்.

அதைக் கேட்ட அந்த ஏகலைவர் கை கூட்டி வாய் பொத்தி அப்படியே வெகு நேரம் அமர்ந்திருந்தார்.

அவர் கண்களிலே ஈரம் மெதுவாக இலங்கியது.

மெதுவாகத் தன் நிலைக்கு வந்த அந்தத் தலைவர், ''ஐயன்மீர்! அந்தத் துருக்கியப் படைகள் அஞ்சனாத்ரி மலையைச் சுற்றி நின்றதுவரைதானே உங்களுக்குககதை தெரியும். அதற்கு மேலும் உங்களுக்குக் கதை தெரியுமோ?'' என்று கேட்க,

''தெரியாதே!''என்று சொன்னார்கள் இளைஞர்கள்.

''கேளுங்கள்!'' என்று சொன்ன ஏகலைவர் மேலே தொடர்ந்து,

''ஐயன்களே! மலைமேலே அரங்கனைத் தேடி துருக்கியர்கள் வீரர்களை அனுப்பினார்கள். அவர்கள் எல்லோரும் வெறும் கையோடு திரும்பினார்கள். இது கண்டதும் துருக்கியர்களுக்கு ஆத்திரம் மூண்டது. காட்டுக்குள் புகுந்து எங்கள் இனத்துக் குடியிருப்புகளில் எல்லாம் சென்று, ''அரங்கனையும், அவரை எடுத்துச் சென்ற மூன்று ஆட்களையும் பார்த்தீர்களோ?'' என்று கேட்டார்கள். 'இல்லையே!' என்று அவர்கள் சொன்னார்கள். அதைத் துருக்கியர்கள் நம்பவில்லை. பொய்தான் இவர்கள் சொல்கிறார்கள் என்று எண்ணிஇரவோடு இரவாகக் காட்டுப் பகுதிகளின் பல இடங்களில் தீயை வைத்து விட்டு சந்திரகிரி நோக்கி ஓடி விட்டார்கள்.

புதரிலும், மூங்கில் மரத்திலும் தீ பரவி சீக்கிரமே ஒரு மலை போல் வளர்ந்து விட்டது. காடு முழுதும் ஜகஜ்ஜோதியாய்ப் போய்விட்டது. பறவைகளும், பிராணிகளும் திக்கு முக்காடிப் போயின. இதில் எழுந்த புகை ஒரு மேகக்கூட்டம் போலக் காட்டை அடைந்து விட்டது. எங்கள் ஆயுளில் அது போன்ற நெருப்பைப் பார்த்ததில்லை.

ஒரு மாதம் தீ எரிந்தது. அது முழுதுமாக அணைய இரண்டு வாரமாகியது! நெருப்பு ஆறி பூமி குளிர இரண்டு வாரம் பிடித்தது.

எல்லாம் முடிந்த பிறகு உள்ளே நுழைந்து பார்த்தால் எங்கள் குடியிருப்புகள் பலவற்றைக் காணோம். எல்லோரும் எரிந்து சாம்பலாகி விட்டார்கள். அப்படிப் பட்ட கோரக் காட்சியை இதுவரை நான் பார்த்ததில்லை'' என்று கூறினார்.

இளைஞர்கள் இருவரும் நடந்ததை எல்லாம் கேட்டுப் பிரமித்து இருந்தார்கள்.

உடனே தத்தனானவன் ஏகலைவரை நோக்கி, ''ஐயா, அப்படியானால் எங்கள் அரங்கனும் அந்தக் கொடவரும் தீயில் அகப்பட்டிருப்பார்களா?'' என்று சோகத்தோடு கேட்க,

''ஐயன்களே! உங்கள் கடவுள்தான் எத்தனையோ ஆபத்துக்களிலிருந்து தப்பி இருக்கிறாரே! இதிலிருந்தும் நிச்சயம் தப்பி யிருப்பார். யோசனை பண்ணினால் எனக்கு ஒன்று தோன்றுகிறது. அந்தத் தீ எனக்கு இன்னும் நினைவு இருக்கிறது. அது தெற்கேயிருந்து வடக்காகப் பரவிச் சென்றது. அப்படிச் சென்றதால் உங்கள் கொடவர் வடக்கு நோக்கி ஓடியிருக்கலாம். அங்கே போகப் போகப் பயங்கரமானகாட்டுப்பகுதிகள் இருக்கின்றன. அந்தக்காடுகளில்செஞ்சுஇனத்தவர்வாழ்கிறார்கள். நீங்கள் அங்கே சென்று பார்த்தால் உங்களுக்குத் தடயம்கிடைத்தாலும் கிடைக்கலாம். அவர்கள் உங்களுக்கு நிறைய உதவி செய்யலாம். இன்று இங்கு தங்கியிருந்து நாளைக் காலை நீங்கள் புறப்பட்டுச் செல்லுங்கள்! உங்களுக்குத் துணையாக சுகலிகளை அனுப்புகிறேன்.'' என்று கூறினார் அவர்.

இரவு சுட்ட கிழங்குகளை அருந்தி விட்டு இளைஞர்கள் இருவரும் படுக்கும் போது கிளுக்கென்று ஒரு இனிதான சிரிப்புக் கேட்க, அங்கே அவர்கள் முன்னிலையில் அந்தச் சுனையில் கண்ட பெண் கையில் சுழுந்தித் தீயுடன் நின்று கொண்டிருந்தாள்.

இவள் இங்கே எதற்கு வந்திருப்பாள் என்று இருவரும் நினைக்கும்போது, அந்தப் பெண், சுழுந்தியைத் தூரத்தில் வைத்துவிட்டு, வெகு சுபாவமாக அந்த இருவரின் நடுவே வந்து அமர்ந்து கொண்டாள்...

பிறகு இருவரையும் மாறி மாறிப் பார்த்துச் சிரித்தாள்.

- தொடரும்

● தெலுங்கு, தமிழ், கன்னடம் கலந்த மொழி.

# ஹை பவர் ஸர்ஃப் சலவை
# ஒப்பற்ற வெள்ளைவெளேர் சலவை

அவனுடைய தாயின் கவனிப்பு அதில் வெட்டவெளிச்சம்

**ஒப்பற்ற பொருட்கள் ஒருங்கிணைந்தது ஹை பவர் ஸர்ஃப்**

அதிலுள்ள விறுவிறுப்பான பொருட்களின் செயல்: நீடித்துநிற்கும் நுரை வளம்—அழுக்கு, பிசுக்கு, விடாப்பிடியான கறைகள் எதுவும் கரைந்தோடிவிடும்.

குடும்பத்தின் எல்லாத் துணிகளுக்கும் உபயோகிப்பீர் ஹை பவர் ஸர்ஃப். சேலை, சட்டை, வேட்டி, பள்ளி உடைகள்—எதற்கும் வெண்மை மயமான தூய்மை: நீங்கள் பார்த்தறியாத வெள்ளைவெளேர் சலவை. அதிசயமென்ன, வேறெந்த சலவைப் பவுடர்களையும் விட ஹை பவர் ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்—சற்றே அதிக விலை கொடுக்கவும் தயங்குவதில்லை அவர்கள்.

இந்துஸ்தான் லீவரின் தரமான தயாரிப்பு ஹை பவர் ஸர்ஃப். அட்டைப் பெட்டிகளிலும், ஸீலிட்ட சஞ்சிப் பைகளிலும் மட்டுமே விற்பவை, உதிரியாகவோ பிளாஸ்டிக் பைகளிலோ அல்ல.






**வேறெந்த சலவைப் பவுடரையும் விட ஹை பவர் ஸர்ஃப் உபயோகிக்கும் தாய்மார்களே அதிகம்.**

லின்டாஸ்–SU. 210-2317 TM

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

இராவேளையில் அந்த எருகுலப் பெண் இளைஞர்களின் இருக்கைக்கு வந்து சிரிப்பதைப் பார்த்ததும் அவர்கள் திடுக்கிட்டார்கள்.

இவள் எதற்கு இங்கு வந்தாள் என்று அவர்கள் யோசிக்குமுன் அந்தப் பெண்ணே தன் பின்புறம் தொங்கிக் கொண்டிருந்த மூங்கிற் குடுவையை எடுத்து அவர்கள் கைகளில் அருமையான மலைத்தேனை வார்த்து விட்டாள்.

இருவரும் அதை ருசித்த போது அமிர்தம் போல் இனித்தது.

அப்பால் அவள் இளைஞர்களின் மூட்டையிலிருந்து தொங்கிக் கொண்டிருந்த தாடி, மீசைகளை வெளியே எடுத்துக் கையில் வைத்துப் பார்த்தாள். (காட்டுக்குள் நுழைந்த பிறகு இளைஞர்கள் தங்கள் சந்நியாச வேடத்தைக் கலைத்திருந்தார்கள்.) அவைகளைத் தன் முகத்தில் வைத்துக் கொண்டு கிளுக் கிளுக் என்று நீர்க்குமிழிகளைப் போல் சிரித்துச் சிதறினாள்.

'இவள் என்ன, ★பிச்சியோ?' என்று இளைஞர்கள் ஐயத்தோடு நினைத்தார்கள்.

அப்போது அவள் எருகுல பாஷையில் கடகட வெனப் பேச ஆரம்பித்தாள்.

''ஐயா, நீங்கள் எங்கள் காட்டுக்கு வந்தது ரொம்ப சந்தோஷம். உங்களைப் பார்த்தாலே என்னைப் போல் உள்ள எருகுலப் பெண்களுக்கு மிக்க ஆனந்தம்! ஏனெனில் நாங்கள் நாட்டைப் பார்த்ததே இல்லை. காடு தான் எங்கள் ஒரே வாசம். உங்களைப் போன்றோரைப் பார்ப்பதற்கே எங்களுக்குப் புதுமையாக இருக்கிறது. உங்களை ஒரு கேள்வி கேட்க விரும்புகிறேன். உத்தரம் சொல்லுங்கள். நீங்கள் வேட்டையாடவா வந்தீர்கள்?'' என்று கேட்டாள்.

அதற்கு வல்லபன், ''இல்லை'' என்று கூறினான்.

உடனே அந்தப் பெண், ''நல்லது! அதை உங்கள் முகத்திலிருந்தே கண்டு கொண்டேன். கேளுங்கள்! சுனை அருகிலே உங்களைப் பார்த்ததும், என் மனசில் குறிச் சொல் நீர் ஊற்றுப் போல் சுரந்தது. நான் குறி சொல்பவள்! ஆனால் இது போன்று ஒரு அருவியாய் என் மனசில் குறிகள் ஊறியதை இதுவரை கண்டதில்லை. உங்களைச் சீக்கிரமே பார்த்துக் குறி சொல்ல நினைத்தேன். அதற்கு இப்போதுதான் சந்தர்ப்பம் கிடைத்தது'' என்று கூறி, வல்லபனின் வலது கையை இழுத்து அதன் மீது தனது குறி சொல்லும் கோலை வைத்துக்கொண்டாள்.

கோலை வைத்ததுமே அவள் விழிகளில் நீர் விரவி வந்தது.

''ஐயா! காட்டிலே உடம்பிருக்கு! ஆனால் நாட்டிலே மனசிருக்கு!

''கெண்டை விழியாள் ஒருத்தியைக் கண்டு கொண்ட நாள் முதலாய், பாதி மனசினை நீ அந்தப் பாவைக்கு விற்று விட்டாய்!

''பாதி மனசினைத்தான், பாங்காக வாங்கிக் கொண்ட அந்த நீல விழியாள்தான், உன்னை, நினையாத நாள் இல்லை.

''மஞ்சத்தில் படுத்தாலும், மெய்மறந்து கிடந்தாலும், ஊரைக் கடந்தாலும், காதங்கள் போனாலும், கொஞ்சு மொழியாளின் கோமள நினைவெல்லாம், செஞ்சுடர் சூரியனாய் பிஞ்சு முகம் ஒளி வீசும், உன்னிடந்தான் இருக்குதையா! உண்மையேதான் சொன்னேனையா!'' என்று கூறி முடித்தாள்.

பிறகு தத்தனின் கையை எடுத்துச் சிறிது நேரம் உற்றுப் பார்த்து, ''கரி வண்டுக் கண் ஒன்று, உன்னைப் பார்த்த நாள் முதலாய் மருவுற்றுக் கிடக்குதையா! மனசெல்லாம் வாடுதையா! சொல்லத் துடிக்குதையா, சொல்லாமல் வேகுதையா! எல்லை கடந்தே நீ, எங்கேதான் போனாலும் முல்லை மலராளின் மோகன மனமெல்லாம் துள்ளி வருகுதையா, துடித்தோடி வருகுதையா!

''வேறு குறியோடு நீ வேறு பல நினைத்தாலும் பாவையை மறவாதே! ஒரு பாவம் பழி ஏற்காதே!'' என்று கூறினாள்.

பின்னர் அவள் காட்டு தேவதைகளை எல்லாம் அவர்களுக்கு அனுகூலங்களைக் கொடுக்க வேண்டும் என்று பிரார்த்தித்து விட்டு, பலமுறை அவர்களை வணங்கி விட்டு விடை பெற்றுப் போய் விட்டாள்.

அவள் போன பிறகு அவள் விட்டுச் சென்ற சுழுந்தி வெகு நேரம் எரிந்து கொண்டிருந்தது.

பின்னர் இளைஞர்கள் இருவரும் மௌனமாய்ப் படுத்துக் கொண்டார்கள்.

கண்ணை மூடியதும் வல்லபன் மனத்தில் திடீரென்று அந்த மகரவிழியின் நினைவு துள்ளி வந்தது.

இவ்வளவு நாட்களும் அந்த நினைவு சற்று ஒதுங்கியே இருந்து வந்தது.

இன்று அந்தக் காட்டுப் பெண் குறி சொல்லி விட்டதும், அந்த மகர விழியின் நினைவு தன்னைப் பிணைத்திருந்த சங்கிலிகளை யெல்லாம் உடைத்து எறிந்து கொண்டு அவன் முன்னே முன்னிலும்விடக் கவர்ச்சியாக வந்து குதித்தது.

''மகர விழி! மகர விழி! நீ எங்கே இருக்கிறாய்? உன்னை மீண்டும் சந்திப்பேனா? இந்தக் காட்டுப் பெண் என்னிடம் உன்னைப் பற்றிக் குறி சொல்லிவிட்டாளே! அவள் சொல்வது உண்மையானால் நீ என்னைப் பற்றித்தான் நினைக்கிறாயா? இது நிஜந்தானா? அல்லது மனத்துக்கு இதமானதையே சொல்ல விரும்பும் இந்தக் குறிகாரி வேண்டுமென்றே இப்படிக் கூறுகிறாளா? எதுவும் புரியவில்லையே!'' என்று மனத்துள் புலம்பினான்.

தத்தன் எதுவும் நினைக்கவில்லை. எதையும் நினைக்க விரும்பவுமில்லை. ஆனால், 'மீண்டும் ஒருமுறை திரும்பி வாருங்கள்!' என்ற ஒரு கனிவு மிகுந்த சொல் மாத்திரம் தூரத்திலிருந்து வந்து அவனது இரும்பான மனத்தை உடைத்துக் கொண்டு அடிக்கடி தேட்டது.

மறுநாள் காலையில் இருவரும் எழுந்து சுனையில் நீராடிப் புறப்படச் சித்தமானார்கள்.

அப்போது அந்த எருகுலத் தலைவர் தனது சுற்றம் சூழ அவர்கள் இருப்பிடம் வந்தார்.

அவர்களுக்கு வெகுமதியாக நல்ல கனிவர்க்கங்களைக் கொடுத்து விட்டு,

''ஐயன்மீர்! தாங்கள் இருவரும் இங்கு வந்ததால் எங்கள் ஸ்தலமே புனிதமாயிற்று. நீங்கள் மேற்கொண்டுள்ள காரியம் எல்லாம் வெற்றி பெற வேண்டும்'' என்று கூறினார்.

பின்னர் இரு ஆணும் இரு பெண்ணுமான சகவிக் கூட்டம் ஒன்றை அழைத்து,

---

★ பிச்சி - பைத்தியம்.

''ஐயன்களே! செஞ்சு வேடர் வாழும் பூமிவரை இவர்கள் உங்களுக்குத் துணையாக வருவார்கள். உங்களுக்கு எந்தக் கவலையும் வேண்டாம்! நல்லபடியாய்ச் சென்று வாருங்கள்'' என்று கூறினார்.

சுகலிகள் என்பவர்கள் ராஜஸ்தான் நாட்டைச் சேர்ந்த நாடோடிகள் ஆவார்கள். எந்த இடத்திலும் தங்காமல் அலைபவர்கள். முதன் முதலாகத் தென்நாடுகள் மீது டில்லி சுல்தானியர்கள் படையெடுத்த போது, தங்கள் சுமைகளைத் தூக்கி வருவதற்காக இந்த நாடோடிகளில் நூற்றுக் கணக்கானவரை தெற்கே அழைத்து வந்தார்கள். சுல்தானியர்கள் பின்னர் திரும்பிப் போனபோது, அந்த நாடோடிகளின் ஒரு பகுதியினர் சந்திரகிரிக் காட்டில் தங்கிவிட்டார்கள். இந்த நாடோடிகள் சுகலிகள் என அழைக்கப்பட்டார்கள்.

அந்த சுகலிகளை அறிமுகப்படுத்திக்கொண்ட வல்லபனும் தத்தனும் பின்னர் எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு புறப்பட்டார்கள்.

சுகலிப் பெண்கள் இருவரின் பெரிதான பாவாடைகளில் கட்டியிருந்த மணி ஓசைகள் சிணுசிணுங்கிக் கொண்டே போக,

இரு இளைஞர்களும் தங்கள் புதிய அனுபவங்களை எண்ணியவாறு நடந்து கொண்டிருந்தார்கள்.

அவர்கள் சிறிது தூரம் போனதும், '' தூக்கா'' என்று ஒரு குரல் கேட்கத் திரும்பிப் பார்த்தார்கள்.

அந்தச் சுனைப் பெண் புன்முறுவல் இட்டுக் கொண்டு அவர்கள் முன்னால் வந்தாள்.

அவள் கையில் சுவஸ்திகா வடிவில் கட்டப்பட்ட காட்டு வேர் பிம்பம் இரண்டு இருந்தது.



''இவை உங்களுக்கு ரட்சைகள்'' என்று அந்தப் பெண் அந்தப் பிம்பங்களை அவர்கள் கையில் கட்டிவிட்டு மாருத முறுவலுடன் விடை கொடுத்தாள்.

அன்று முழுதும் அந்த சுகலிக் கூட்டத்தின் பின்னல் சென்ற இளைஞர்கள் நெருங்கிப் படர்ந்த அகோரமான காட்டில் பல பகுதிகளைக் கடந்து இரவு வேளையானதும் ஒரு வசதியான பாறை அடர்வில் தங்கிக் கொள்ள,

அப்பாறையில் சுகலிப் பெண்கள் இருவரும் தெரியாத மொழியில் நாட்டுப் பாடல்களைப் பாடிக்கொண்டே காட்டுக் கிழங்குகளை நெருப்பில் சுட்டு வந்து எல்லோருக்கும் அளித்தார்கள்.

இரவு படுத்ததும் மீண்டும் வல்லபனுக்கு மகர விழியாளின் நினைவு வந்தது.



அவளது நினைவு அன்று ஒரு பெரும் தாபத்துடனேயே அவன் மனதில் உதித்தது.

''மகர விழி!'' என்று மனத்தில் புலம்பிக் கொண்டே கண்ணீர் வடித்தான்.

அப்படி நினைத்துக் கண்ணீர் விடுவது கூட அவனுக்கு ஏதோ ஒரு விதத்தில் இதத்தைத் தருவதாகத் தோன்றியது.

இரண்டாம் நாள் பிரயாணம் கடினமாக இருந்தது. காட்டின் மரங்கள் நெருக்கி அடித்துக் கொண்டு இருந்தமையால் போகும் வழிகளை சுகலிகள் வெட்டிக்கொண்டே போக வேண்டி வந்தது. ''போன மாதந்தான் இந்த வழியில் போனேம். ஒரு மாதத்திற்குள் பாதை தூர்ந்துவிட்டது. மரங்கள் அப்படி வளருகின்றன'' என்ருர்கள் சுகலிகள்.

வெளிச்சம் இல்லாத பாதைகளையும் ஆழமான ஓடைகளையும், சுனைகளையும் சதுப்பு நிலங்களையும், வழுக்கலான பாறைகளையும் கவனமாகக் கடந்துகொண்டு,

மாலை சோரும் வேளையில் செஞ்சு இனத்தாரின் எல்லையை அடைந்தார்கள்.

அவ்வளவில் சுகலிகள் இளைஞர்களை நோக்கி, ''ஐயாக்களே! நாங்கள் இத்துடனே நின்று கொள்கிறேம். விடைபெறுகிறேம்'' என்று கூறி விடைபெற்றுத் திரும்பினுர்கள்.

இருட்டுவதற்குள் செஞ்சு இனத்தாரின் குடியிருப்பை அடைந்து விட எண்ணி, இளைஞர்கள் இருவரும் சுகலிகள் காட்டிய திசை நோக்கி விரைவாக நடந்தார்கள்.

நினைத்ததை விட வெகு சீக்கிரமே அவர்கள் அந்தக் குடியிருப்பை அடைந்துவிட,

குடியிருப்பின் ஜனங்கள் எல்லோரும் அவர்களைச் சூழ்ந்து கொண்டு, ஏதோ அதிசயமாய்ப் பார்த்துவிட்டு, அவர்களைத் தங்கள் தலைவரின் முன்னுல் கொண்டு போய் விட்டார்கள்.

தலைவரும் மிகவும் பிரீதியுடன் அவர்களை வரவேற்று, உபசரிப்பின் சின்னமாகத் தேன் கொடுத்து, நீர் கொடுத்து, பின்னர் ஆதுரத்துடன் அவர்கள் வந்த காரியம் வினவ,

இளைஞர்கள் இருவரும் நடந்ததை யெல்லாம் சுருக்கமாகக் கூறி, ''அரங்களைக் கண்டு பிடிக்க வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டார்கள்.

தலைவர் அவர்களை நோக்கி, ''ஐயன்மீர்! தாங்கள் சொல்வதிலிருந்து பார்த்தால் உங்கள் கொடவர்கள் முதலில் சந்திரகிரியிலிருந்து அஞ்சனுத்ரி மலையை நோக்கிப் பிரயாணம் செய்திருக்கிறுர்கள். நீங்களும் அந்த வழி சென்று அல்லவோ அரங்களைத் தேட வேண்டும். இங்கே வந்து இருக்கிறீர்களே!'' என்ன,

வல்லபனும் செஞ்சத் தலைவரை நோக்கி,

''தாங்கள் சொல்வது முறைதான், ஐயா! நாங்கள் அந்த வழிதான் சென்று கொண்டிருந்தோம். ஆனுல் எருகுல இனத்தார் தீ விபத்து பற்றி எங்களிடம் கூறி, நாங்கள் தேட இருந்த இடங்கள் எல்லாம் அந்தத் தீயில் மூழ்கிய இடங்கள்தான் என்று கூறினுர்கள். அதனுல்தான் எங்கள் கொடவர் உங்கள் பிரதேசத்திற்கு வந்திருப்பார் என்றும் அவாவினுல் இங்கே வந்துள்ளோம்'' என்று கூறினுர்கள்.

அவ்வளவில் அந்தத் தலைவனும் அவர்கள் தேடும் முறை சரிதான் என உணர்ந்து கொண்டான்.

உடன் அவன் அந்த இளைஞர்களை நோக்கி, ''ஐயன்மீர்! இந்த அடியவன் அகோபிலத்திலிருந்து * வந்து

* செஞ்சு இனத்தவர் அகோபிலம் என்னும் தலத்திலும் நிறைந்து வாழ்பவர்கள்.

* அகோபிலத்துப் பெருமாள் தமது நரசிம்ம அவதாரத்தில் செஞ்சு இனத்தைச் சேர்ந்த செஞ்சுலட்சுமியைத் திருமணம் செய்து கொண்டார் என்று ஒரு ஐதிகம்.



''ஹலோ! டெலிபோன் டைரக்டர் சார்! எங்க வீட்டுக்காரர் போர்ஷனைக் காலி பண்ணச் சொல்லிட்டார். உங்கள் பூத்தை டெம்பரரியா ரெண்டுக்கு விடுகிறீர்களா?''

சுதர்ஸன்.

பத்து ஆண்டுகள்தான் ஆகின்றன. ஆகவே இங்கே பஞ்சாயம் நடத்தும் பெரியவர்களை அழைவிப்பிக்கிறேன்'' என்று கூறிப் பஞ்சாயம் பண்ணும் பெரியவர்களுக்கு ஆட்களை அனுப்பினான்.

பஞ்சாயக்காரர்களில் இருவர் வயோதிகராய் இருந்தபடியால் பதினெட்டு ஆண்டுகளுக்கு முன் நடந்த காட்டுத் தீயைப் பற்றி நன்கு அறிந்திருந்தார்கள்.

''அந்தத் தீ தெற்கே எருகுலக் காட்டில் எழுந்தது. வடக்கே வேகமாகப் பரவி வந்தது.

''நாங்கள் எல்லோரும் பயந்து விட்டோம். எங்கள் நரசிங்க சுவாமியை வேண்டிக் கொண்டோம். அவருக்குப் படையல் போட்டோம். எங்கள் கன்னி லட்சுமிகள் எல்லோரும் விரதம் இருந்து கூத்து ஆடினார்கள். நல்லவேளை! நரசிங்க சுவாமி எங்கள் மருமகப்பிள்ளை* ஆயிற்றே! உக்கிரமாக வந்த தீயை, எங்கள் சிலும்போடைத் தென் கரையிலே நிறுத்திவிட்டார். தீ அதற்கு மேல் வரவில்லை! ஆனால் தீ விபத்தில் எங்களுக்கு மற்ற விளைவுகள் ஏற்படாமல் இல்லை. துஷ்ட மிருகங்கள் எல்லாம் இந்தப் பக்கம் வந்து விட்டன. பெருச்சாளிகள், பாம்புகள் எல்லாம் எங்கள் பக்கம் படை எடுத்துவிட்டன. எங்களுக்கு இதனால் ஏகப்பட்ட தொல்லைகள். எங்களுக்கு நிம்மதி ஏற்பட ஒரு வருஷம் ஆகிவிட்டது.

''இந்தத் தீயில் யார் அகப்பட்டாலும் உயிர் இழந்திருப்பார்கள். எருகுலக் குடியிருப்புகள் பல சாம்பலாகி விட்டன. பல இடங்களில தீ சுற்று வளையமாகச் சூழ்ந்து கொண்டது. இதில் அகப்பட்டிருந்தால் உங்கள் கொடவர் கட்டாயம் இறந்திருப்பார்.

''ஒருவேளை, தீயிலிருந்து தப்பித்து இந்தப் பக்கம் வந்திருந்தார் என்று வைத்துக் கொள்ளுங்கள்! துஷ்ட மிருகங்கள் அவரை விட்டிருக்குமா என்பது சந்தேகமே! இத்தனை நாள் எங்களுக்குத் தெரியாமல் இருப்பதுவும் அபூர்வமே!'' என்று அவர்கள் கூறினார்கள்.

உடனே ராஜவல்லபன் அவர்களை நோக்கி,

''ஐயன்மீர்! தாங்கள் கூறுவதை எல்லாம் ஒப்புக் கொள்கிறேன். எனினும் எங்கள் அரங்கர் எங்கேயோ நித்தியமாக இருந்து வருகிறார் என்ற உணர்வு எங்களிடம் இருந்து வருகிறது. இது ஒரு உறுதியான உணர்வு! இதை மாற்ற வழியில்லை. தவிரவும் எங்கள் விசாரணைகளில் அரங்கன் நிச்சயம் இந்தக் காட்டுக்குள் இருக்க வேண்டும் எனத் தெரிகிறது. ஆகவே அங்குல அங்குலமாகவேனும் இந்தக் காட்டைச் சோதித்தால் ஒழிய, நாங்கள் நிச்சயப்பட மாட்டோம்! இந்தச் சோதனையில் எங்கள் வாழ்நாளை ஒழிக்க நேர்ந்தாலும் தயங்க மாட்டோம்'' என்று கூறினான்.

இளைஞர்களின் தீவிரத்தைப் பார்த்த பெரியவர்கள் தங்களுக்குள் ஆலோசனை நடத்தினார்கள்.

கீழே மண் தரையில் சோழியைக் கொண்டு கோடுகள் வரைந்து சந்தரகிரியிலிருந்து அஞ்சனத்ரி மலைக்குப் போகும் வழியை விளக்கினார்கள். அஞ்சனத்ரி மலையில் அந்தப் பாம்புப்பட முகடு எங்கிருக்கிறது என்பதையும் அங்கிருந்து ஒருவர் கீழே உருண்டால் எந்த இடத்தில் வந்து சேருவார் என்பதையும் ஆராய்ந்தார்கள்.

''பெரியவர்களே! இந்த இடத்தில்தான் கொடவர் விழுந்திருக்க வேண்டும். இங்கேதான் மற்ற இரு கொடவர்கள் இறந்தவரைப் பார்த்திருக்க வேண்டும். இதே இடத்தில்தான் எஞ்சிய ஒரே கொடவரும் அரங்கன் விக்கிரகத்துடன் காணமல் மறைந்திருக்க வேண்டும். அவர் போயிருந்தால் எங்கே போயிருப்பார்? தீ பரவியபோது எங்கே இருந்திருப்பார்? இதைத்தான் நாம் ஆராய வேண்டும்'' என்று கூறினார் ஒருவர்.

அதை மற்றவர் எல்லோரும் ஆமோதிக்கவே, அந்தக் கொடவர் தீ பரவியபோது எங்கே போயிருப்பார் என்பதை ஆலோசிக்கலானார்கள்.

பல இடங்களைப் பற்றிப் பேசிய அவர்கள் கடைசியில் ஒரு முடிவுக்கு வந்து ஐந்து இடங்களைத் தேர்ந்தெடுத்தார்கள்.

ஒரு இடம் அந்த செஞ்சு குலத்தார் வாழும் காட்டுப் பரப்பு மீதி நான்கு இடங்கள் மலைச் சரிவுகள் ஆகும்!

''இந்த ஐந்து இடங்களுக்குள்தான் அந்தக் கொடவர் போயிருக்க முடியும்! இந்த ஐந்து இடங்களையும் தேடுவோம்'' என்று கூறினார்கள்.

உடனே செஞ்சுத் தலைவன் அரங்கனைத் தேடுவதற்காகக் குழுக்களை நியமிக்க ஆரம்பித்தான்.

—தொடரும்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

செஞ்சு இனத்தவர்கள் தனித்தனிக் கூட்டங்களாக வாழ்பவர்கள். அவர்களது *பெண்டாக்களுக்கு ஆட்களை அனுப்பி விஷயத்தைச் சொல்லிவிட்டார் செஞ்சுத் தலைவர்.

முதல் நாட்களில் செஞ்சுக்கள் தாங்கள் வாழும் பிரதேசம் முழுவதையும் தேடினார்கள். உயரமான காட்டு மரங்கள்மீதும், செங்குத்தான பாறைகள் மீதும் ஏறி எல்லாப்புறங்களையும் ஆய்ந்து பார்த்தார்கள். பொதுவாக செஞ்சுக்கள் உயரமான இடங்களில் ஏறுவதில் மிக வல்லவர்கள். காட்டுத் தேனை அடைவதற்காக அவ்விதம் உயரங்களில் ஏறிப் பழக்கப்பட்டவர்கள். நெடிதுயர்ந்த மரங்களின் உச்சாணிகளில் ஏறிச் சுற்றியுள்ள பிரதேசங்களை அங்குல அங்குலமாக அவர்கள் ஆராய்ந்தார்கள்.

அரங்கனும் கிடைக்கவில்லை, கொடவரும் கிடைக்கவில்லை.

மேலும் மூன்று நாட்கள் அந்தப் பிரதேசத்தைக் கோதி எடுத்தார்கள். அரங்கனைப் பற்றிய எந்தப் புலனும் கிடைக்கவில்லை!

இனிச் சரிவுகளுக்குச் சென்று தேடுவதுதான் ஒரே வழி என்று நினைத்தார்கள்.

சரிவுகளுக்குப் போவது என்பது கடினமாக இருந்தது. அந்தப் பகுதிகளில் மரங்களின் அடர்த்தி மிகையாக இருந்தது. எந்நேரமும் காட்டுக்குள் இருள் உறைந்து கொண்டிருந்தது. தவிரவும், துஷ்ட மிருகங்கள் கூட்டம் கூட்டங்களாக ஆங்காங்கே சஞ்சரித்துக் கொண்டிருந்தன. இவ்விதம் பயங்கரமாக இருந்த அந்தப் பகுதிகளுக்குச் செஞ்சு இனத்தவர் சென்றதே இல்லை. எனினும், தெய்வ காரியம் என்பதால் ஒரே முனைப்போடு அவர்கள் இதில் இறங்கினார்கள்.

ஒரே வாரத்தில் மூன்று சரிவுகளை முடித்துவிட்டார்கள். பலன் ஏதும் இல்லை.

நான்காவது சரிவை நோக்கிச் சென்ற குழுவில் வல்லபனும் தத்தனும் சேர்ந்தார்கள்.

காடுகளின் கொடுமைகளையும், ஆபத்துக்களையும் கடந்துகொண்டு அவர்கள் அந்தக் குழுவோடு சென்றார்கள்.

ராஜவல்லபனின் மனம் அப்போது வெகுவாய் அடித்துக் கொண்டது.

''அரங்கனே! உன்னை நான் எப்படியும் கண்டுவிட வேண்டுமே!'' என்று நெக்குருக வேண்டிக்கொண்டான். ''அப்போதுதான் என் தாயாரின் ஆசை நிறைவேறும். அதன் மூலம் என் தந்தையாரின் லட்சியமும் பாதி அளவில் பூரணம் அடையும்! அரங்கனே! நீ இருக்கும் இடத்தைக் காண்பிப்பாய்!'' என்று பிரார்த்தனை செய்தான்.

அடிக்கடி, ''ஓம் நமோ நாராயணாய!'' என்று அஷ்டாட்சர. மந்திரத்தை ஜபித்துக் கொண்டான்.

புறப்பட்ட நான் மாலை வேளையில், அலர்மேல் மங்கைச் சரிவு எனப்படும் சரிவை அவர்கள் நெருங்கினார்கள்.

பொழுது சாயும் வேளை ஆதலால், செஞ்சுக்கள், ''இனிக் காலையில்தான் சரிவுக்குப் போக வேண்டும்'' என்று தீர்மானித்து, பாறை வெளியில் தீ மூட்டிப் படுத்துக் கொண்டார்கள்.

மறுநாள் காலையானதும் எழுந்து, இரு நாழிகைக்குள் சரிவுப் பகுதியை அடைந்தார்கள்.

காடாந்தகாரம் என்று சொன்னால் அந்தப் பகுதிக்குத்தான் பொருந்தும். அப்படி ஒரு இருட்டான காடு. எங்கேயோ அபூர்வமாக வெளியோ, வெளிச்சமோ தெரிந்தால்தான் உண்டு. மரங்களும் கொடிகளும் அவ்வளவு நெருங்கி அடித்துப் பின்னி இருந்தன.

உள்ளே போகப்போக வனத்து இருளின் திண்மை தெரிந்தது. கனத்து ஒரு கட்டிபோல் அந்தக் காட்டுக்குள் அது உறைந்து கிடந்தது. காலம் காலமாய் இறுகிய இருள்! சூரிய வெளிச்சம் பட்டால்கூட உடைந்து விடாத இருள்!

உள்ளே சூழ்ந்திகளைக் கொளுத்திக்கொண்டு செஞ்சுக்கள் நுழைந்தார்கள்.

சில்லென்று குளிர்ச்சியுடன், சப்தமே இறந்து போய்க் கிடந்த அந்தக் காட்டுக்குள் அவர்கள் குனிந்தும், தாவியும், விழுதுகளைப் பிடித்து ஊஞ்சல் ஆடியும் சென்றார்கள்.

அந்தச் செஞ்சுக்களை நிழல்போல் தொடர்ந்தன அவர்களது வேட்டை நாய்கள்.

அவைகளும் மனிதர்க்கு இணையாக அங்கங்கே தாவி முன்னால் ஓடின.

'இந்தக் கன இருள் தோய்ந்து கிடக்கும் கானகத்தில் அரங்கன் இருப்பாரா? அந்தக் கொடவர் இருப்பாரா?' என்ற கேள்விகள் அடிக்கடி வல்லபனின் மனத்தில் தோன்றின.

இங்கே நுழைந்து தேடுவது எல்லாம் வெறும் வியர்த்தத்தில் முடியுமோ என்று ஒரு சந்தேகம் அவன் மனத்தில் எழுந்தது.

எனினும் நம்பிக்கையை விடாமல் அந்தச் செஞ்சுக்களுடன் அவன் சென்று கொண்டிருந்தான்.

போகும்போது அவன் கண்கள் அங்கும் இங்கும் பார்த்துக்கொண்டே சென்றன.

திடீரென்று ஏதாவது ஒரு இடத்தில் அரங்கன் தனது பொன்மேனியுடன் பளிச்சிடுவார் என்று அவன் உள் மனம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தது.

மதிய வேளை ஆகும்போது அவர்கள் ஒரு வெட்ட வெளியை அடைந்தார்கள்.

அந்த வெளியைப் பார்த்த உடனேயே அவர்களுக்கு ஆனந்தமும் நிம்மதியும் ஏற்பட்டன.

பாறைகள் நிறைந்த அந்த இடத்தை மரங்கள் ஆக்கிரமிக்க முடியாமல் தவிர்த்திருந்தன.

* பெண்டா-செஞ்சுக்களின் குடியிருப்பின் பெயர்.

அந்தப் பகுதியில் அமர்ந்து களைப்பாறித் தாங்கள் கொண்டு வந்திருந்த உணவுகளை எல்லோரும் வயிறார உண்டார்கள்.

அப்பால் செஞ்சுக்களில் வயதான ஒருவர் எழுந்து செங்குத்தாக நெடு உயரம் வளர்ந்திருந்த பாறை ஒன்றைச் சுட்டிக் காட்டினார்.

''மருமகன்களே! மைத்துனர்களே!● இந்தப் பாறை ஒரு சரியான இடத்தில்தான் நிற்கிறது. இதன் உச்சியில் ஏறிக் கண்ணோட்டம் விட்டால், இந்தப் பிரதேசம் முழுதும் ஒரு தாம்பாளத்தில் வைத்த பொருள் போல் தெரிந்து விடும். அது நமது நடையை மிச்சப்படுத்தும். ஆகவே இதில் ஏறுவதற்கு வழி காணுங்கள்!'' என்று கூறினார்.

அவ்வளவில் அவரது மைத்துனர்களும், மருமகன்களும் பாறையின் பக்கம் சென்று கண்ணோட்டம் விட்டு, பக்கவாட்டங்களையும் ஆராய்ந்து வந்து,

''மாமா! பாறை செங்குத்தாக இருக்கிறது. பிடிமானமே இல்லை. ஏறுவது முடியாது''என்று கூறினார்கள்.

உடனே அந்தத் தலைவனும் பாறை அருகில் சென்று நோட்டங்கள் விட்டு வெகுநேரம் யோசித்தார்.

பிறகு திரும்பி வந்து,

''மருமகன்களே! ஒரு யுக்தி இருக்கிறது. அதோ ஒரு நீலவாகை இருக்கிறதே! அதன் கிளையில் ஒரு ஊஞ்சல் கட்டுவோம். அதை வேகமாக ஆட்டி விட்டால் அதன் முனை அந்தப் பாறையின் பாதியில் தெரியும் விளிம்பு வரை எட்டிக் கொள்ளும். ஊஞ்சலிலிருந்து அந்த விளிம்புக்கு யாராவது தாண்டி விட்டால், பின்னால் அங்கிருந்து பாறையின் உச்சிக்குப் போக எளிதாக முடியும். அந்த உயரத்துக்கு மேல் பிடிமானங்கள் இருக்கின்றன'' என்று கூறினார்.

மற்றவர்களும் அவர் சொல்வதை ஆமோதிக்க, எல்லோரும் ஒன்றுகூடிக் காரியத்தில் இறங்கினார்கள்.

நீளநீளமான கொடிகளை நறுக்கி வந்து, ஒன்றோடு ஒன்றை முடைந்து நீளக் கயிறு போல் செய்து கொண்டார்கள். அதில் ஒரு முனையில் ஒரு ஆள் நிற்கும் அளவுக்கு வளையம் ஒன்றைச் செய்து கொண்டார்கள்.

கொடியின் மறுமுனையை மரத்தின் மீது ஏறி உயரமான கிளையில் இறுக்கமாகக் கட்டி வைத்தார்கள்.

எல்லாம் முடிந்த பிறகு ஒருவன் அந்த வளையத்தில் நின்று கொண்டு ஊஞ்சல் ஆட ஆரம்பித்தான்.

மெது மெதுவாக ஆடி, பின்னர் வீசிப் பாயும் அளவுக்கு வேகத்தைப் பெருக்கினான்.

ஊஞ்சலின் வீச்சல் பாறையின் விளிம்பைத் தொடும்படியாக வந்து விட்டது.

எல்லோரும் ஊஞ்சல் ஆடுபவனைத் திகிலோடு கவனித்தார்கள்.

ஆடுபவன் பலமுறை ஊஞ்சலிலிருந்து பாறை விளிம்புக்குத் தாவ முயன்றான். பிறகு நிச்சயம் தோன்றாமல் தவித்தான்.

கடைசியில் விருட்டென்று அவன் பாய, ஊஞ்சல் அவனை விட்டு விட்டுத் துவண்டு கீழே இறங்கியது.

தாவிய அவனோ, பாறை விளிம்பில் கையை வைத்துப் பிடிக்க, பிடித்த இடம் வழுவ, 'ஆ' என்று சொல்லிப் பாறையின் கீழே உருண்டான்.

மறுகணம் பொத்தென்று கீழே கனமான ஒரு உடல் விழுந்தது.

உடன் மற்ற செஞ்சுக்கள் ஓடிப்போய் அவனைப் பார்த்தார்கள். விழுந்தவன் கால்களில் அடிகள் பட்டு இரத்தம் ஆறாய்ப் பெருகுவதைக் கண்டார்கள். சிறிது நேரத்திற்கு அப்பால்தான் அவன் சுயநினைவுக்கு வந்தான். ''இவ்வளவு உயரத்திலிருந்து விழுந்தாலும், இவனுக்கு நினைவு இருக்கிறதே? அந்த அளவுக்குத் தேகம் திடகாத்திரமாக இருக்கிறதே?'' என்று நினைத்தான் வல்லபன்.

விழுந்தவனை மற்றவர்கள் அப்புறப்படுத்தி அவன் கால்களுக்குச் சிகிச்சை அளிக்கும்போது வல்லபன் தைரியத்தோடு ஊஞ்சலில் ஏறிக்கொண்டான். தத்தன் திகிலோடு அவனைப் பார்த்தான்.

●ஒரு செஞ்சு இறந்தால் அவனது மனைவியை அவனது தம்பி திருமணம் செய்து கொள்ளுவான். இதனால் செஞ்சுக்கள் ஆபத்தான காரியங்களைச் செய்யும் பொழுது தங்கள் தம்பிகளை அழைத்துச் செல்வதில்லை. தங்களை அவர்கள் விபத்துக்கு உள்ளாக்கி இறக்கச் செய்து விடுவார்கள் என்று நம்பினார்கள். ஆகவே, செஞ்சுக்கள் தம் மைத்துனர், மருமகன்மார்களைத் தான் வேட்டைக்கு அழைத்துச் செல்வதுண்டு.



சீக்கிரமே ஊஞ்சலை வீசி வீசி ஆட்டிக் கடைசியில் ஒரே எவ்வலில் பாறை விளிம்பைப் போய்க் கனமாய்ப் பிடித்துக் கொண்டான். அவ்வளவில் மற்ற செஞ்சுக்கள் ஆரவாரம் செய்தார்கள்.

உடனே அவன் பாறையின்மீது ஏறிப் போனான்.

மேலே ஏறிய வல்லபன், வெகு நேரம் வெவ்வேறு திசைகளைப் பார்த்தான். பிறகு கீழே இறங்கிப் பாறை விளிம்புக்கு வந்தான்.

அப்போது செஞ்சு ஒருவன் ஊஞ்சலில் ஏறி ஆடிப் பாறை விளிம்புவரை எம்பி வந்தான்.

ஒரு எம்பலில் அவன் ஒரு கொடிக் கயிற்றைக் தூக்கி எறிய, அதை வல்லபனும் சடக்கெனப் பிடித்துக் கொண்டு, விளிம்பை விட்டு எவ்விக் குதித்து ஊஞ்சலில் பிணைத்திருந்த கயிற்றுடன் ஆட ஆரம்பித்தான்.

இருவரும் ஆடி ஆடி அமிழ்ந்த பிறகு மரத்திலி ருந்து கீழே இறங்கி வந்தார்கள்.

''நண்பர்களே! தெற்கிலும், கிழக்கிலும் ஒரே காடு கள்தான். வடக்கேதான் பல இடைவெளிகளைப் பார்த் தேன். கொடவரைத் தேடுவதாக இருந்தால் இந்த இடைவெளிகளில் தேடினால் போதும். இந்த வெ களில்தான் மனிதனை வாழ முடியும். காட்டுக்குள் வாழ முடியாது'' என்று கூறினான் வல்லபன்.



இதற்குள் பொழுது சாய்ந்து விட்டது. இனி மறுநாள் வட திசைக்குப் போக வேண்டும் என்று அவர்கள் தீர்மானம் செய்தார்கள்.

இரவு அந்த வெட்டவெளியில் படுத்து இருந்து விட்டு மறுநாள் காலையில் எழுந்ததும் வடக்கு நோக்கிப் பிரயாணப் படலானார்கள்.

வல்லபன் கூறியதுபோல் காடுகளின் நெருக்கங்களில் ஆங்காங்கே இடைவெளிகளும் தென்பட்டுக் கொண்டிருந்தன.

அந்தப் பகுதிகளில் எல்லாம் அவர்கள் விஸ்தாரமாகத் தேடி அலைந்து, எதையும் காணாதவர்களாய் மாலை வீழ்கிற வேளையில் ஒரு பெரிய சுனை ஒன்றை அடைந்தார்கள்.

அந்தச் சுனையின் ஓரத்தில் ஒரு சிற்றோடை நீர் வந்து விழுந்துகொண்டே இருந்ததால், சன, சன, சன என்று ஒரு இரைச்சல் கேட்டுக் கொண்டேயிருந்தது.

இந்த இடத்தில் எல்லோரும் களைத்துப் போய் அமர்ந்து கொண்டார்கள்.

அப்போது அந்த செஞ்சு கோஷ்டியின் தலைவன் வல்லபனை நோக்கி,

"சுவாமி, இரண்டு நாட்கள் நடந்து இந்தப் பகுதியெல்லாம் தேடிவிட்டோமே! இனியும் அரங்கன் இங்கே கிடைப்பார் என்று நீங்கள் நினைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

அந்தக் கேள்வியே வல்லபனைக் கலக்கியது. அவன் மனத்திலும் ஒரு ஐயம் தோன்றியிருந்தது. எனினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல்,

"வேடப் பெருமக்களே! நம்பிக்கையை இழக்க வேண்டாம். எங்கேயாவது, எந்த வழியிலாவது நிச்சயம் அரங்கன் நமக்குக் கிடைத்து விடுவார். இதை நச்சயமாக நம்புங்கள்! நாம் ஒய்ந்துவிட வேண்டாம்" என்று கூறினான்.

எனினும் அவர்களுக்கு நம்பிக்கை ஏற்பட்டதாகத் தெரியவில்லை. பாறையிலிருந்து விழுந்தவன் அடிக்கடி உபாதையால் ஏதாவது முணுமுணுத்துக் கொண்டே இருந்தான். அவன் எங்கே நகர வேண்டியிருந்தாலும் யாரின் முதுகிலாவது ஏறித்தான் போகவேண்டி வந்தது. அவனும் மற்றவர்களும் இருக்கும் நிலையைப் பார்த்தால், மறுநாள் அவர்கள் எங்கும் நகரமாட்டார்கள் போல் தோன்றியது. அவ்வளவுக்கு எல்லோரும் ஏதாவது ஒருவிதத்தில் சோர்ந்திருந்தார்கள்.

இதனால் மனம் வெதும்பிய இரு இளைஞர்களும் மிகுந்த வியாகூலத்துடனே அப்பால் சென்று யோசித்திருந்து விட்டு, பிறகு மனம் பொறுக்காமல், கால் போனபடி நடந்து போனார்கள்.

அந்தச் சோகமே அவர்களை யோசிக்க வைக்காமல் மேலே மேலே நடக்க வைக்க, சிறிது நேரத்தில் ஓடை ஒன்றின் பசுமையான கரைக்கு இருவரும் வந்து சேர்ந்தார்கள்.

தாக மேலீட்டால் தத்தன் அங்கே ஓடையின் நீரைக் குடிக்கப் போக,

வல்லபனின் பார்வை திடீரென்று மறு கரையில் தூரத்தில் தெரிந்த ஏதோ ஒன்றின் மேல் விழுந்தது.

"தத்தா! அது என்ன?" என்று அவன் வினவ,

பாதி நீர் குடித்துக்கொண்டிருந்த தத்தனும் ஆச்சரியத்தால் அவன் காட்டிய திசையைப் பார்த்தான்.

அங்கே தூரத்தில் காட்டுப் பகுதி தொடங்கும் இடத்தின் முன்னால் கறுப்பாக ஏதோ தெரிந்தது.

முதலில் அது ஒரு கரடி போல் தெரிந்தது. ஏனெனில் அது காலையோ கையையோ அசைப்பது தெரிந்தது.

அது நிற்கிறதா, அமர்ந்திருக்கிறதா, போகிறதா என்று முதலில் எதுவும் தெளிவாகத் தெரியவில்லை.

"கரடிதான் அது" என்றான் தத்தன்.



கிராமங்களைப் பட்டிக்காடு என்கிறோம். Paddy (நெல்) விளைகிற காடுகளாய் அவை இருப்பதால் கிராமங்கள் பட்டிக்காடு ஆயின போலும்!

-உ.ராஜாஜி

"இல்லை; இப்போது பார்! அது நடக்கிறது" என்றான் வல்லபன்.

"ஓநாயாக இருக்கும்" என்றான் தத்தன்.

"இல்லை" என்று சொன்னவன், திடீரென்று குதித்து, "பார், பார்! அது நடந்து போகிறது" என்று கூறினான்.

"அது ஒரு காட்டுக் குரங்காக இருக்க வேண்டும். அல்லது மனிதனாக இருக்க வேண்டும்" என்றான் வல்லபன்.

"மனிதன் இங்கே ஏது? குரங்காகத்தான் இருக்க வேண்டும்" என்றான் தத்தன்.

பிறகு இருவரும் சர்ச்சை செய்து, அது என்னதான் என்பதைக் காண விரும்பி, அது நடக்கிற திசைப்பக்கம் ஆவலோடு போனார்கள்.

போகப்போக அவர்களுக்கே ஆச்சர்யமாக இருந்தது. இதுவரை அவர்கள் காணாத ஜந்துபோல் அது தோன்றியது. அது நடந்துகொண்டே காட்டுப்பகுதியுள் நுழைய ஆரம்பித்தது.

இரண்டு பின்னங் கால்களை மட்டும் பூமியில் வைத்து அது நடப்பதைப் பார்த்துத்தான் அவர்களுக்குச் சந்தேகம் அதிகமாகியது.

அவர்கள் ஒரே வேகமாக அந்த ஜந்து நடந்து போகும் திசையை நோக்கி விரைய ஆரம்பித்தார்கள்.

விரையும் போது ஒரு சமயம் "ஓ" என்று கூச்சல் இட, ஜந்து திக்பிரமையுடன் திரும்பிப் பார்த்தது.

அதன் முகத்தில் படர்ந்திருந்த உரோமக் குவியலைப் பார்த்து, "ஒருவிதக் கரடியா இது?" என்று அவர்கள் நினைக்க,

அந்த ஜந்து அவர்களைப் பார்த்த வேகத்தில் திரும்பி வேகமாக ஓட ஆரம்பித்தது.

அது இரண்டு கால்களிலேயே ஓடுவதைப் பார்த்ததும், வல்லபன், "தத்தா! அது மனிதன்தான்! மனிதனேதான்! கரடி இரண்டு கால்களில் ஓடாது!" என்று கூவினான்.

உடன் இருவரும் அந்த உருவம் ஓடின திசை நோக்கி விரைவாக ஓடினார்கள்.

காட்டுக்குள் உருவம் அவசரமாக ஓடியது. அதைக் குறி வைத்துக் கொண்டே இளைஞர்களும் விரைவாக ஓடினார்கள்.

ஓடஓட அவர்கள் இடையே உள்ள இடைவெளி குறுகிக் கொண்டே வந்தது.

உருவத்தால் அதிவேகமாக ஓட முடியவில்லை என்பது அவர்களுக்குச் சீக்கிரம் புலனாகியது.

விரைந்து அவர்கள் தாவித்தாவி ஓட, முன்னால் ஓடும் உருவம் ஒரு மனித உருவம்தான் என்று தோன்ற ஆரம்பித்தது.

ஆனால் என்ன மனிதன்?

காட்டு மனிதனா?

ஆதிகால மனிதனா?

அந்த மனிதன் நின்றான், திரும்பிப் பார்த்தான்.

இளைஞர்களுக்கு மயிர்க் கூச்செறிந்தது.

—தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

அந்தக் காட்டு மனிதனைப் பார்த்தால் பயங்கரமாக இருந்தது. மூஞ்சியில் சிங்கம் போல் உரோமங்கள் அடர்ந்திருந்தன. கண், மூக்கு, இருந்த இடங்களைத் தேட வேண்டி இருந்தது. உடம்பைப் பார்த்தால் செதிள் செதிள்களாகத் தெரிந்தன. இது என்ன மனிதனா? புருஷா மிருகமா?

இளைஞர்கள் இருவரும் சிறிது அச்சத்துடன் நிற்க, வல்லபன் தைரியம் அடைந்து கையை உயர்த்தி ''ஹோ'' என்று இரைந்தான்.

அந்தச் சப்தம் கேட்டதுதான் தாமதம், அந்த உருவம் மீண்டும் ஓட ஆரம்பித்தது.

அதைத் தொடர்ந்து இளைஞர்களும் ஓட, மீண்டும் ஒரு ஓட்டப் பந்தயம் தொடங்கியது.

ஆனால் இந்தத் தடவை உருவம் திடீரென்று காட்டில் மறைந்து விட்டது. எந்த இடத்தில் மறைந்தது என்று தெரியவில்லை.

இளைஞர்கள் நின்றார்கள்.

''இதென்ன, பேயா, மாயையா?'' என்று கேட்டான் தத்தன்.

''வா, திரும்பலாம்! காட்டுக்குள் எங்கேயோ வந்து விட்டோம். செஞ்சுக்கள் தேடுவார்கள்!'' என்றான் தத்தன்.

''இல்லை, இந்த ஆளை நாம் விடக்கூடாது. தேடிப் போக வேண்டும்'' என்றான் வல்லபன்.

''அதனால் ஏதேனும் பலன் இருக்குமா?'' என்றான் தத்தன்.

''ஏன் இருக்காது? இவனே நமது கொடவராக இருக்கக் கூடாதா?'' என்றான் வல்லபன்.

''எனக்கு நம்பிக்கை இல்லை!'' என்றான் தத்தன்.

பிறகு இருவரும் சர்ச்சை செய்து, அரை நாழிகையாவது அந்த உருவத்தைத் தேடுவது என்று முடிவு செய்தார்கள்.

இருவரும் பிரிந்து சென்று ''தத்தா!'' ''வல்லபா'' என்று மாறி மாறிக் குரல்களை எழுப்பிக் கொண்டு வெவ்வேறு திசைகளில் தேடினார்கள்.

அரை நாழிகை தேடிய பிறகு, தத்தன் களைப்பு மேலிட்டால், ''வல்லபா, போதும் திரும்பு'' என்று கத்தினான்.

மறு குரல் வரவில்லை.

இதனால் குழப்பம் அடைந்த தத்தன் பரபரப்போடு வல்லபன் போன திசையில் நடக்க ஆரம்பித்தான்.

அடிக்கடி அவன் கூவிக்கொண்டே போக, திடீரென்று, ''தத்தா!'' என்று ஒரு சன்னமான மறு குரல் தொலைவிலிருந்து கேட்டது.

கால் நாழிகை நடந்து, செடி, புதர்களை விலக்கிக் கொண்டு தத்தன் அந்தக் குரல் வந்த திசையைப் போய்ப் பார்க்க,

அங்கே வல்லபன் ஏதோ பிரமை பிடித்தவன் போல் அதிசயமாக நின்று கொண்டிருந்தான்.

அவனுக்கு என்ன நேர்ந்தது?

கலவரத்துடன் அவன் அருகில் செல்ல, வல்லபன் சைகை காட்டி தத்தனைப் பேசாமல் இருக்கச் சொன்னான்.

தத்தனும் வியப்புடன் சுற்றுமுற்றும் பார்த்தான்.

வல்லபன் அவனிடம், மெதுவாக, ''முகர்ந்து பார்! இங்கே வாசம் வீசுகிறது!'' என்று கூறினான்.

''என்ன வாசம்?''

''பரிமளமான கஸ்தூரி''.

தத்தனுக்கு எதுவும் தெரியவில்லை.

''அது மட்டுமல்ல, சந்தனம், கர்ப்பூரம், சிந்தூரம் எல்லாம் பரிமளித்து வீசுகின்றன பார்!'' என்றான் வல்லபன்.

தத்தன் காற்றை முகர்ந்து பார்த்தான். அவனுக்கு எதுவும் புலனாகவில்லை.

''கூர்ந்து நுகர்ந்தால் காற்றின் ஏதாவது ஒரு இழையில் இந்த சுகந்தங்கள் வருவது தெரியும். இதை முகர்ந்து கொண்டு இவ்வளவு தூரம் வந்து விட்டேன்'' என்றான் வல்லபன்.

தத்தன் முயன்று பார்க்க, பளிச்சென்று ஒரு கணம் அந்த வாசம் அவன் நாசியைத் தொட்டுவிட்டு மறைந்தது.

''ஆமாம், எதையோ நுகர முடிகிறது. இது என்ன என்று சொல்கிறாய்?'' என்று கேட்டான் தத்தன்.

''அரங்கனது திருமேனியில் இந்தப் பரிமளமான வாசம் வீசும் என்று சிங்கழகர் சொன்னாரே, மறந்து விட்டாயா?'' என்று கேட்டான் வல்லபன்.

''சொன்னார்! ஆனால் இது அரங்கன் மீதிருந்து வரும் வாசம் என்று எப்படிச் சொல்வாய்! காட்டில் தான் மூலிகை வாசங்கள் பல கமழுமே!'' என்றான் தத்தன்.

''அப்படியல்ல! இது போன்று வாசங்கள் சேர்ந்து வீசுகிறதே! அது அபூர்வம்! ஆகவே, அது அரங்கன் மீதிருந்துதான் எழுந்திருந்திருக்க வேண்டும்'' என்றான் வல்லபன்.

''வல்லபா!'' என்றான் தத்தன். ''நீ கூறிய அனுமானத்தை ஒத்துக் கொள்கிறேன். ஆனால் அதை நிச்சயமாகவும் கூறிவிட முடியாது. இப்போது நேரமாகிவிட்டது. செஞ்சுக்கள் காத்திருப்பார்கள். நாளை ஆராச்சியை வைத்துக் கொள்வோம்.''

வல்லபன் அதற்கு ஒத்துக் கொள்ளவில்லை. மறுநாள் காற்றின் திசை மாறிவிடும் என்றும், அன்றைக்கே அந்த வாசம் வரும் இடத்தைத் தேடினால்தான் ஆயிற்று என்றும் கூறினான்.

தத்தனும், ''சரி விரைவாகத் தேடுவோம்'' என்று சொல்ல,

[illegible] பிடித்துக் கொண்டே [illegible] சென்றார்கள்.

[illegible] இருக்கும் கொடிகளை விலக்கிக் கொண்டு போகும் போது, ஆங்காங்கே நடமாட்டத்தினால் ஏற்பட்ட தடங்கள் சில பதிந்திருப்பதையும் அவர்கள் பார்க்க நேர்ந்தது.

நம்பிக்கை அதிகமாகிவிட அவர்கள் முனைந்து முன்னே சென்றார்கள்.

திடீரென்று ஒரு இடத்தில் வெளிச்சம் விழுந்திருப்பது தெரிந்தது.

அங்கே [illegible] வெளி ஒன்று இருப்பதைப் பார்த்து அதனுள் அவசரமாக நுழைய,

சுற்றிவரப் பார்த்த வல்லபன், ''அதோ'' என்று துள்ளிக் கொண்டே கூவினான்.

அவன் காட்டிய திசையில் கொடிகளால் ஆன ஒரு பந்தலின் நுழைவாயில் தெரிந்தது. அது ஒரு கூண்டு போன்றும் தெரிந்தது.

அதன் உள்ளே இருந்து கண்ணைப் பறிக்கும்படியான ஒரு ஒளி பளிச்சிட்டுக் கொண்டிருந்தது.

அதிசயத்தோடு அந்தக் கொடிக்குடிலை நோக்கி அவர்கள் சென்றார்கள்.



கீழே குனிந்து அதன் இருட்டுக்குள் உற்றுப் பார்த்த வல்லபன், ''கண்டேன், தத்தா!'' என்று துள்ளினான்.

பரபரப்பு அடைந்த தத்தன் அவன் என்ன சொல்கிறான் என்பதை அறியுமுன்,

வல்லபன் அந்தக் குடிலுக்குள் பார்க்கிறதுமாய் தத்தனைப் பார்க்கிறதுமாய் இருந்துவிட்டு,

கடைசியில் ஒரே பாய்ச்சலில் தத்தனைக் கட்டிக் கொண்டு,

''தத்தா! பார்! இவர் நமது பெருமானா பார்! அரங்கனா பார்!'' என்று கூவி அழைத்தான்.



தத்தன் குனிந்து குடிலுக்குள் பார்க்க, அங்கே அந்தத் தழைக் கூடத்திற்குள் நாயகமாக ஒரு விக்கிரகம் மிகக் கம்பீரமாக நின்று கொண்டிருந்தது.

தழை இடுக்குகள் வழியாக அதன் மீது மாத்திரம் சூரிய வெளிச்சம் விழுந்திருந்ததால், அது பளீரென துலங்கிக் கொண்டிருந்தது.

கையில் கதையும் சக்கரமும் இலங்கிட, முறுவல் முகத்துடன் நிற்கும் அந்த விக்கிரகத்தைக் கண்டதும், ''அரங்கா! இது நீதானே! நீதானே!'' என்று சொல்லி இருவரும் தடால் என்று பூமியில் விழுந்து மண்ணைப் பிடித்துக் கொண்டு அரற்றினார்கள்.

பிறகு இருவரும் எழுந்து ஆசை கொள்ளுமட்டும் விழுந்து விழுந்து சேவித்தார்கள், மேலே மண் தூள்கள் எல்லாம் சாயம் போல் ஒட்டிக் கொள்ள, ஒருவாறு அடங்கி, நிமிர்ந்து பார்த்த போது,

அங்கே அந்த வெட்ட வெளியில் மறு புறத்தில் அந்தக் காட்டு மனிதன் திடீரென்று தோன்றி நிற்பதைப் பார்த்தார்கள்.

பயமும், ஆச்சரியமும் அடைந்தவாறு அவன் நின்று கொண்டிருந்தான்.

கண்களில் ஆனந்தமாகக் கண்ணீர் பெருக இளைஞர்கள் ''ஐயா! ஐயா!'' என்று அந்த மனிதனை அழைத்தார்கள்.

மனித உருவத்திற்குப் பயம் தெளியவில்லை. இப்போது அதற்கு ஆத்திரமும் கோபமும் வந்து கொண்டிருப்பது தெரிந்தது.

திடீரென்று அது ஓடப் பார்க்க, உடனே ஒரே பாய்ச்சலில் தத்தன் ஓடிப் போய் அதனது கால்களைப் பற்றிக் கொண்டான்.

அந்த உருவம், ''பே, பே!'' என்று கத்திக் கொண்டு, ஓட முடியாமல் தொபுகடீரென்று கீழே விழுந்தது.

விழுந்தவரது அருகில் சென்று வல்லபன் பார்த்தான். முகத்தில் பெருந்தாடியும், வெளிறிய கண்களும், வயோதிகத்தால் விழுந்த சுருக்கங்களும் இருப்பதைக் கண்டான்.

இடுப்பில் அந்த மனிதர் ஒரு காட்டுக் கொடியைக் கட்டியிருந்தார். அதில் கமுகம் பட்டையால் கௌபீனம் தரித்திருந்தார். தேக்கு மடல்களால் ஆச்சாதநம்* தரித்திருந்தார். கொத்தான் கொடியை உடம்பில் பூணுலாகப் போட்டிருந்தார்.

எண்பது அளவு வய்தாகிய அவர் கண்களில் இன்னும் ஒரு பீதி உறைந்து கொண்டிருந்தது.

இளைஞர்கள் இருவரையும் அவர் பயத்தோடு பார்த்தார்.

அவர் நடுங்குவதைப் பார்த்த வல்லபன், ''சுவாமி தாங்கள் யார்! கொடவர்தானே? சீராமதாசர்தானே! சொல்லுங்கள்! சொல்லுங்கள்!'' என்று கத்தினான்.

அவர் மறு மொழி கூறவில்லை. பயப்பிராந்தியோடு அங்குமிங்கும் பார்த்தார். வல்லபன் கேட்டதைப் பொருட்படுத்தவுமில்லை அவருக்குச் சித்தப் பிரமை உள்ளது என்பதை வல்லபன் உடனே புரிந்து கொண்டான்.

சிங்கழகர் கூறினாரே, கடைசி நாள் அந்தக் கொடவரைப் பார்த்தபோது, அவர், ஏதும் பேசாது அதிசயமாய் இருந்தார் என்று. அதன் காரணம் இப்போது வல்லபனுக்கு நன்கு புரிந்தது. இந்தக் கொடவருக்கு அன்றிலிருந்து சித்தப் பிரமை தோன்றியிருக்க வேண்டும். தம் கண்ணால் நேரில் கண்ட கொடுமைகள் அவரது நிலையான மனத்தைக் கலைத்திருக்க வேண்டும். உன்மத்தமாய் ஆக்கியிருக்க வேண்டும்.

அவரிடம் பேசுவதில் பயனில்லை என்பதைக் கண்டு கொண்ட வல்லபன், அவரை மெதுவாகப்

---

* மறைக்கும் துணி

பிடித்து எழுப்பி, பயப்பட வேண்டாம் என்பதுபோல் சமிஞ்ஞை செய்து,

பின்னர் அவரை மெள்ள அழைத்துக் கொண்டு, அந்தத் தழைக்குடிலை நோக்கி நடையிட்டுச் சென்றான்.

அங்கே அவரை நிறுத்தி, உள்ளே இருக்கும் விக்கிரகத்தைக் காட்டி.

''இவர் அரங்கர்தானா? அரங்கரா? அரங்கரா?'' என்று பலமுறை கூவிக் கேட்க,

வயோதிகரும் அவன் கேட்டதைக் காதில் வாங்கிக் கொள்ளாதது போல் இருந்து விட்டு, முடிவில் தாமாகவே, ''ரங்கா! ரங்கா!'' என்று மழலைக் குழந்தை கூறுவது போல் நாவிழிந்து கூறினார்.

அவ்வளவில் இருந்த சிறிது சந்தேகத்தையும் தவிர்த்துக் கொண்ட இரு இளைஞர்களும், உடனே, ''கொடவர் சுவாமி! உம்மைக் கண்டதில் புண்ணியம் பெற்றோமே!'' என்று வேரற்ற மரம் போல அவர் பாதங்களில் விழுந்தார்கள்.

பிறகு தெளிந்து எழுந்து, ஊற்று ஊற்றாக வியர்வை விட்டுக் கொண்டு இருந்த கொடவரை மெள்ளக் கீழே அமர்த்தி,

அவர் படுத்துக் கொள்ளும் வண்ணம் தங்கள் மேல் உத்திரியத்தைக் கீழே விரித்து, அதில் அவரைப் படுக்க வைத்து,

''இந்தப் பெரியவருக்கு இந்தத் துயரங்கள் எல்லாம் நேர்ந்ததே! அப்படியும் அவர் விடாமல் அரங்கனைக் காப்பாற்றி வந்துள்ளாரே!'' என்று நினைத்து,

''ஒரு நம்பிக்கையின் சின்னத்தை இவ்வளவு கஷ்டங்களுக்கு இடையே பதினெட்டு ஆண்டுகளாகக் காத்து வந்திருப்பவர் இவரைப் போல் யாரும் இருந்திருக்க மாட்டார்கள்'' என்று உறுதியாக நினைத்து,

அந்தப் பெருமகனார் இப்போது எண்பது பிராயமாகி வயோதிகத்தால் உடல் தளர்ந்து அங்கே அவர்கள் முன்னால் கிடப்பதைப் பார்த்து,

கண் உருகி, மனது உருகி, நெஞ்சுருகி, சுருண்டு, விழும்கண்ணீர்த் திவலைகளுடன், ஒருவர் மாற்றி ஒருவர் தங்களது நெகிழ்த்திய ஆடைகளைக் கொண்டு, விடாமல் விசிறி விட்டார்கள்.

அந்த வயோதிகரின் வியர்வையையும், களைப்பையும் ஒருவாறு போக்கிய பின்தான் இருவரும் சிறிது ஆசுவாசப் படலானார்கள்.

தன் துயரமான வாழ்க்கையில் திடீரென்று இந்த உபசாரங்களுக்கு ஆளான அந்த வயோதிகக் கொடவரும் பயம் சிறிது சிறிதாக நீங்கினவராய், இளைஞர்கள் மீது நம்பிக்கை கொள்வாராயினர்.

அப்பொழுது பொழுது கிறுகிறுவென்று இறங்கிக் கொண்டிருந்ததால், இரு இளைஞர்களும், உடனே மேலே என்ன செய்வதென்று யோசனை பண்ணி,

கொடவப் பெரியவருடன் பாதுகாப்பாக வல்லபன் தங்குவது என்றும்,

தத்தன் போய் செஞ்சு கோஷ்டியாரை அழைத்து வருவது என்றும் முடிவு பண்ணினார்கள்.

அப்பால் தத்தன் விடை பெற்றுப் போக, வல்லபன் அந்தக் கொடவப் பெரியவருடன் அங்கே தங்கிவிட்டான்.

அன்று மாலை மறையும் வரை தத்தன் திரும்பி வரவில்லை. வல்லபனுக்கு இது கவலையைத் தந்தது.

மறுநாள் விடிந்து பல நாழிகை ஆகியும் தத்தனும் வரவில்லை. செஞ்சுக்களும் வரவில்லை.

பொழுது ஏற ஏறப் புதுக் கவலைகள் அவனை ஆட்கொண்டன.

தத்தன் செஞ்சுக்கள் இருக்கும் இடத்துக்குப் பத்திரமாகப் போய்ச் சேர்ந்திருப்பானா,

அல்லது வழியில் அவனுக்கு ஏதாவது நடந்திருக்குமா, அல்லது அவன் வழி தவறி வேறு எங்கேயாவது போய் விட்டானா,

என்று பல ஐயங்கள் அவன் மனத்தை வெகுவாகக் கலக்க ஆரம்பித்தன.

எது எவ்வாறாயினும், விஷயம் ஏதாவது தெரியும் வரை அந்த இடத்தை விட்டு நகரக் கூடாது என்று நினைத்தான்.

இந்த எதிர்பார்த்தலில் மேலும் ஒரு நாள் ஓடியது.

இதற்குள் அவனுக்கும், அந்தக் கொடவப் பெரியவருக்கும் ஒரு பிணைப்பு ஏற்பட்டிருந்தது.

அங்கு தங்கிய நாளில் அந்தப் பெரியவர், ஒரு யந்திரம் போல் வாழ்வதை அவன் கண்டு கொண்டான்.

எழுந்திருப்பது, குளிப்பது, உணவு தேடிப் போவது, உணவு உண்பது எல்லாமே நியதி பிசகாமல் ஒரே கதியில் அவர் செய்து கொண்டிருந்தார்.

எல்லாவற்றிலும் மேலாக அரங்க விக்கிரத்திற்கு அவர் தினமும் வெறும் கைகளாலேயே மானசீகமாகப் பூஜையும், காட்டுக் கனிகளைக் கொண்டு நைவேத்தியமும், இதர உபசாரங்களும் ஒன்று விடாமல் செய்து கொண்டிருந்தார்.

ஆக இந்தப் பதினெட்டு ஆண்டுகளில் அரங்கன் எந்தவித உபசாரக் குறைவும் இன்றி இருந்து வந்திருக்கிறார் என்பதை அவன் புரிந்து கொண்டான்.

இனி சீக்கிரம், அவரையும், அரங்கனையும் நாட்டுக்கு அழைத்துப் போக வேண்டுமே என்று அவன் துடிக்கும்போது, தத்தன் இப்படி வராமல் இருக்கிறானே என்று தோன்றியது.

மூன்று நாட்களும் ஓடி விட்டன. வல்லபனுக்குப் பயம் ஏற்பட ஆரம்பித்தது.

தொடரும்

# மதுராவிஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

அதன் பிறகு மூன்று நாட்கள் மழை அடித்தது. பிரளயம் போல் நீர் தறிகெட்டு எங்கும் ஓடியது. ஓடைகளும் அருவிகளும் மலைச் சரிவில் மாலைகளாகி விழுந்தடித்து ஓடின.

ஒரு ஆச்சா மரத்தின் மேலே கட்டைகளை வைத்து தாற்காலிகப் பரண் உண்டாக்கி வல்லபனும், கொடவப் பெரியவரும் தங்கி இருந்தார்கள். கீழே தழைப்பந்தல் எல்லாம் அடித்துக் கொண்டு போய் விட்டபடியினாலே அரங்கனை மேலே ஏற்றி மரத்தோடு ஏகாந்தக் கயிறு கட்டிப் பாங்காக அமர்த்தி வைத்திருந்தார்கள்.

இலைகள் எல்லாம் சொட்டுச் சொட்டாக அபிஷேக நீர் போல் வர்ஷிக்க, அவ்வளவு நெருக்கத்தில் பெருமானைப் பார்க்கும்படியான பேறுபெற்ற வல்லபனின் மனக் கண்ணில் பல காட்சிகள் வந்து ஓடின.

அவனது தந்தை குலசேகரன் அரங்கனைத் தோள் மேல் போட்டுக் கொண்டு டில்லி வீரர்களிடமிருந்து குதிரையில் தப்பிய காட்சி,

அவனது தாயார் அரங்கனைத் தம் தோளில் அணைத்துக் கொண்டு குலசேகரன் முன்னால் நிறுத்திய அந்த அந்திமக் காட்சி யாவும் சரம் அவிழ்ந்தாற்போல் அவன் மனக் கண் முன்னால் வந்து ஓடின.

பழைய கதையை எத்தனையோ முறை அவனது தாயார் வாசந்திகா வாய் வலிக்காமல் கூறி இருக்கிறாள். அவனும் செவி அலுக்காமல் கேட்டிருக்கிறான்.

இப்போது அவை யெல்லாம் நினைவுக்கு வர, அந்த வரலாற்றுக்கு எல்லாம் அடிப்படையாக இருக்கும் அரங்கன், அவன் முன்னே, இப்படி ஒரு ஆச்சா மரத்தின் பரண் மேல், மிக மிக நெருக்கமாக அமர்ந்து சமமான ஆதனத்தில் வீற்றிருப்பதைக் கண்டு மனத்தில் துக்கமும் ஆனந்தமும் ஒரே நேரத்தில் கொண்டான் அவன்.

அரங்கனது திருமேனியை அடிக்கொரு தரம் பார்த்து,

அவரது அனைத்து அழகுகளையும், கண்ணால் பருகி மனத்திலே நினைத்தறியா அமைதி கண்டான் அவன்.

அவ்வளவில் நான்காம் நாளில் வானம் சுத்தமாகி எங்கும் புதிய வெளிச்சம் பரவி நிறைந்துவிட, பட்சி ஜாலங்கள் எல்லாம் கீச்சிட்டும் வீறிட்டும் எங்கும் பறந்து ஆனந்தமாய் உலாவ ஆரம்பித்தன.

செஞ்சுக்களை அழைத்து வருகிறேன் என்று போன தத்தன் ஆறு நாள் ஆகியும் வரவில்லையே, என்று எண்ணி வல்லபன் வருத்தம் மிக்கக் கொண்டிருக்க,

திடீரென்று கிழக்குப் புறமாக ஏதோ சத்தங்கள் எழக் கண்டு திரும்பிப் பார்த்தான்.

அங்கு இரண்டு இருளர்கள் சடக்கெனத் தோன்றிக் கூச்சல் போட்டுக் கொண்டு வருவதையும், அவர்கள் முன்னால் ஒரு கருங்குரங்கு காலுடன் தப்பித்து ஓடுவதையும் அவன் நோக்க நேர்ந்தது.

உடனே மரத்திலிருந்து, வல்லபன் கீழே குதித்து நிற்க,

இருளர்கள் இருவரும் அவனைப் பார்த்து வியந்து போய் நின்றார்கள்.

இரு இனத்தாரும் ஒருவரைப் பற்றி ஒருவர் பரஸ்பரம் விசாரிக்க,

''நாங்கள் இருளர்கள்! எங்களுக்குக் கருங்குரங்கின் இறைச்சி வெகுவாகப் பிடிக்கும். ஆகவே வேட்டையாட இங்கு வந்தோம்'' என்று அந்த வேடர்கள் கூறினார்கள்.

அவர்களை அமரவைத்து, ''ஐயா, தெய்வம் போல வந்தீர்களே! காட்டிலே தவித்துப்போய் விட்டோம்!'' என்று கூறிய வல்லபன்,

தான் அங்கு வந்த காரணத்தை எல்லாம் விவரமாகக் கூறி,

''இப்படி நான் என் நண்பனையும் செஞ்சுக் கூட்டத்தாரையும் பிரிந்து நிற்கிறேன். அவர்கள் இருக்கும் இடம் தேடி அழைப்பித்து வரவேண்டும் என்று சொன்னான்.

அதற்கு அந்த இருளரானவர்கள், ''ஐயா, செஞ்சுவாழும் காட்டுக்குள் கூட்டமாகப் போனால்தான் துஷ்ட மிருகங்களிடமிருந்து தப்ப முடியும். இருவரும் தனியாகப் போக முடியாது!'' என்ற கூற,

வல்லபனும், ''அப்படியானால் இனி என்ன செய்ய?'' என்று கூறிச் சோகித்திருந்தான்.

உடனே இருளர்கள், ''ஐயா! மூன்று நாள் மழை அடித்து, ஓய்ந்திருக்கிறது. சிறுத்தைகளும் புலிகளும் இரையில்லாமல் திண்டாடி இருக்கும். ஓநாய்களும் கருங்கரடிகளும் கூடக் கூட்டம் கூட்டமாக உணவு தேடி அலையும். ஆகையால் இந்த செஞ்சுக் கூட்டத்தார் நிச்சயம் தங்கள் பெண்டாக்களுக்குத் திரும்பி இருப்பார்கள். இந்த வேளையில் நீங்கள் குறிப்பிடும் இடத்திற்குப் போவதே ஆபத்து! ஆனாலும் உங்களுக்கு ஏதாவது உதவி செய்ய எண்ணுகிறோம். இந்த மலைச் சரிவின் குறுக்காகப் பள்ளத்தாக்கில் புகுந்து நாட்டுப்புறம் போக எங்களுக்கு வழி தெரியும். நாட்டுப்புறத்தாரின் உதவி உங்களுக்குத் தேவையானால், சொல்லுங்கள். செய்து முடிக்கிறோம்!'' என்று கூறினார்கள்.

உடனே வல்லபனும் பனிச் சென்று யோசனை பண்ணி, ''ஐயாக்களே! அருகில் பட்டணம் என்ன இருக்கிறது?'' என்று கேட்க,

''சந்திரகிரி இருக்கிறதே, தங்களுக்குத் தெரியாதோ?'' என்று இருளர்கள் கேட்க:

''நன்றாகத் தெரியும். இப்போது அந்தப் பட்டணத்தை யார் ஆளுகிறார்கள்?'' என்று கேட்க,

''ஸ்ரீரங்கநாத யாதவராய ராஜா ஆளுகிறார்'' என்று இருளர்கள் உத்தரம் சொல்ல,

''நல்லது! அவர் பெயரே ஸ்ரீரங்கநாதனாக இருக்கிறது. அவர் நிச்சயம் உதவி செய்வார். அவரிடம் போய்ச் சொல்லுங்கள். தெற்கே ஸ்ரீரங்க க்ஷேத்திரத்தின் ரங்கநாத சுவாமி இருக்கிறாரே, அவர் பதினெட்டு ஆண்டுகளாய் இந்தக் காட்டில் மறைந்து இருந்தார்: இப்போது அகப்பட்டு விட்டார், அவரைச் சகல மரியாதைகளோடு நாட்டுப்புறத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று விஞ்ஞாபித்துக் கொள்ளுங்கள்'' என்று கூறினான்.

''அவ்விதமே செய்கிறோம்!'' என்று இருளர்கள் கூற, வல்லபன் உடனே தனது முடிந்திருந்த மடியைத் திறந்து வீரசம்பா குளிகை ஒன்றை அவர்களுக்கு வெகுமானமாக எடுத்துக் கொடுத்தான்.

இருளர்களும் அளவற்ற ஆனந்தம் அடைந்து விடை பெற்றுச் சென்றார்கள்.



கிழக்குத்தொடர் மலை ஒன்றின் சரிவிலும், சுவர்ணமுகி ஆற்றின் கரையிலும், திருப்பதி க்ஷேத்திரத்திற்கு மேற்கே சற்று தூரத்திலும் (ஏழு மைல்) இருந்தது இந்த சந்திரகிரிப் பட்டணம். (இப்போது மலைச்சரிவில் கோட்டையும் கொத்தளமுமாகத் தெரிவதுதான் இந்தப் பட்டணம். இப்போது இது பாழடைந்து கிடக்கிறது. இதன் பெயரைத் தாங்கிய சிறு கிராமம்தான் மீதம் உள்ளது. உள்ளே இருந்த அரண்மனைகளும், மாளிகைகளும் இன்று வயல்களாக மாறிவிட்டன.)

இந்தச் சந்திரகிரிப் பட்டணத்தை, கதை நிகழும் காலத்தில், 'யாதவராயர்' என்னும் வம்சத்தினர் ஆண்டு வந்தார்கள். கதை நிகழும் காலத்திற்கு முந்நூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன், (கி.பி. 999-ல்) யாதவராய வம்சத்தின் பூர்விகரான இம்மடி நரசிங்க யாதவராயர் என்பவர் நாராயணவனம் என்னும் சீமையை ஆண்டு வந்தார். இவர் திருமலையில் உள்ள திருவேங்கடவரின் பக்தர். ஆகவே திருமலைப் பர்வதத்தின் தரிசனத்திலேயே எப்போதும் குடியிருக்க வேண்டும் என்று நினைத்து, அந்த மலைக்கு இணையாக உள்ள சந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்து அதில் கோட்டையும் அரண்மனைகளும் கட்டிக் கொண்டார். இவ்வாறு உருவானதுதான் இந்தச் சந்திரகிரிப் பட்டணம்.

இம்மடி நரசிங்க யாதவராயர் வம்சத்தில் பதினோராவது மன்னராகப் பட்டத்திற்கு வந்தவர்தான் ஸ்ரீரங்கநாத யாதவராயர் (கி.பி. 1336).

இந்த வம்சத்தார்கள் பெரும்பாலும் சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாத யாதவராயர் என்பவர் ஒய்சளத்தின் அரசரான வல்லாள தேவரிடம் சிற்றரசராக இருந்து வந்தார்.

இந்த வல்லாள தேவர் போரில் (மதுரை சுல்தானுடன் நிகழ்த்தியது) இறந்த பிறகு ஸ்ரீரங்கநாத யாதவராயர் சிறிதுகாலம் தன்னிச்சையாக இருந்து வந்தார்.

பிறகு விஜயநகர மண்டலம் தோன்றி ஹரிஹர, புக்கர்களின் ஆட்சி தெற்கே பரவி வரவே, ஸ்ரீரங்கநாத யாதவராயர் அந்த விஜயநகர ராஜ்யத்தின் சிற்றரசராக மாறிக் கொண்டார்.

இந்த யாதவராயர் சந்திரகிரிச் சீமையை நன்கு பாலித்து வரும் நாளையில்,

இருளர்கள் இருவரும் அந்தச் சந்திரகிரிக் கோட்டைக்குள் சென்று மன்னரைத் தரிசிக்க விரும்பினார்கள்.

ஆனால் அதற்குச் சில சிரமங்கள் ஏற்படவே, நேராக அவர்கள் கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்றார்கள்.

இந்த மண்டபம் திருமலை பர்வதத்தை நோக்கி நின்று கொண்டிருந்த ஒரு மண்டபமாகும்*.

இந்த மண்டபத்தில் பெரியதொரு வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

திருமலை மீதுள்ள திருவேங்கடவர்க்கு நைவேத்தியம் ஆன பிறகு, அங்கே மலைமேல் இருக்கும் ஒரு கண்ட மண்டபத்தின் * மணி உடன் ஒலிக்கப்படும்.

அந்த ஒலியைக் கேட்டு, சந்திரகிரி மலையில் உள்ள கண்ட மண்டபத்தின் மணி உடனே ஒலிக்கப்படும்.

இந்த மணியின் ஒலி கேட்ட பிறகுதான், அரசர் யாதவராயர், திருவேங்கடமுடையான் அமுது உண்டு விட்டார் என்று அறிந்து, தாம் உணவு அருந்தச் செல்வார்.

இப்படியொரு வழக்கத்தைத் தமக்கு ஏற்படுத்தியிருந்தார் ஸ்ரீரங்கநாத யாதவராயர்.

இருளர்கள் இருவரும் நேராக இந்த கண்ட மண்டபம் சென்று, அங்கே சேவகன் இல்லா வேளையில், அந்தப் பெரிய மணியை அடித்துவிட,

''இதென்ன? வேளை கெட்ட வேளையில் மணி ஒலிக்கிறதே!'' என்று அரசரும் திடுக்கிட, சேவகர்கள் உடனே விரைந்துபோய், இருளர்களைப் பிடித்து வந்து அரசர் முன்னிலையில் நிறுத்தி வைத்தார்கள்.

அரசரும் அவர்களிடம் காரணத்தை வினவ,

'பிரபுவே! ஸ்ரீரங்கத்துப் பெருமாள் பதினெட்டு ஆண்டுகள் காணமல் இருந்தாராமே! அவர் இப்போது நம்காட்டிலே கிடைத்து விட்டார், பெருமாளைக் கண்டு

---

* இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது.

திருமலைக்கு நடந்து செல்லும் போது எதிர்ப்படும் முழங்கால் முறிப்பான், முக்குபாவி (கிணறு) ஆகியவைகளுக்கு அப்பால் நடைபாதைக்குப் புறம்பாக இந்த மண்டபம் இப்போதும் இருக்கிறது.



கிழக்குத்தொடர் மலை ஒன்றின் சரிவிலும், சுவர்ணமுகி ஆற்றின் கரையிலும், திருப்பதி க்ஷேத்திரத்திற்கு மேற்கே சற்று தூரத்திலும் (ஏழு மைல்) இருந்தது இந்த சந்திரகிரிப் பட்டணம். (இப்போது மலைச்சரிவில் கோட்டையும் கொத்தளமுமாகத் தெரிவதுதான் இந்தப் பட்டணம். இப்போது இது பாழடைந்து கிடக்கிறது. இதன் பெயரைத் தாங்கிய சிறு கிராமம்தான் மீதம் உள்ளது. உள்ளே இருந்த அரண்மனைகளும், மாளிகைகளும் இன்று வயல்களாக மாறிவிட்டன.)

இந்தச் சந்திரகிரிப் பட்டணத்தை, கதை நிகழும் காலத்தில், 'யாதவராயர்' என்னும் வம்சத்தினர் ஆண்டு வந்தார்கள். கதை நிகழும் காலத்திற்கு முந்நூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன், (கி.பி. 999-ல்) யாதவராய வம்சத்தின் பூர்விகரான இம்மடி நரசிங்க யாதவராயர் என்பவர் நாராயணவனம் என்னும் சீமையை ஆண்டு வந்தார். இவர் திருமலையில் உள்ள திருவேங்கடவரின் பக்தர். ஆகவே திருமலைப் பர்வதத்தின் தரிசனத்திலேயே எப்போதும் குடியிருக்க வேண்டும் என்று நினைத்து, அந்த மலைக்கு இணையாக உள்ள சந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்து அதில் கோட்டையும் அரண்மனைகளும் கட்டிக் கொண்டார். இவ்வாறு உருவானதுதான் இந்தச் சந்திரகிரிப் பட்டணம்.

இம்மடி நரசிங்க யாதவராயர் வம்சத்தில் பதினேராவது மன்னராகப் பட்டத்திற்கு வந்தவர்தான் ஸ்ரீ ரங்கநாத யாதவராயர் (கி.பி. 1336).

இந்த வம்சத்தார்கள் பெரும்பாலும் சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாத யாதவராயர் என்பவர் ஒய்சளத்தின் அரசரான வல்லாள தேவரிடம் சிற்றரசராக இருந்து வந்தார்.

இந்த வல்லாள தேவர் போரில் (மதுரை சுல்தானுடன் நிகழ்த்தியது) இறந்த பிறகு ஸ்ரீரங்கநாத யாதவராயர் சிறிதுகாலம் தன்னிச்சையாக இருந்து வந்தார்.

பிறகு விஜயநகர மண்டலம் தோன்றி ஹரிஹர, புக்கர்களின் ஆட்சி தெற்கே பரவி வரவே, ஸ்ரீரங்கநாத யாதவராயர் அந்த விஜயநகர ராஜ்யத்தின் சிற்றரசராக மாறிக் கொண்டார்.

இந்த யாதவராயர் சந்திரகிரிச் சீமையை நன்கு பாலித்து வரும் நாளையில்,

இருளர்கள் இருவரும் அந்தச் சந்திரகிரிக் கோட்டைக்குள் சென்று மன்னரைத் தரிசிக்க விரும்பினார்கள்.

ஆனால் அதற்குச் சில சிரமங்கள் ஏற்படவே, நேராக அவர்கள் கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்றார்கள்.

இந்த மண்டபம் திருமலை பர்வதத்தை நோக்கி: நின்று கொண்டிருந்த ஒரு மண்டபமாகும்*.

இந்த மண்டபத்தில் பெரியதொரு வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

திருமலை மீதுள்ள திருவேங்கடவர்க்கு நைவேத்தியம் ஆன பிறகு, அங்கே மலைமேல் இருக்கும் ஒரு கண்ட மண்டபத்தின் * மணி உடன் ஒலிக்கப்படும்.

அந்த ஒலியைக் கேட்டு, சந்திரகிரி மலையில் உள்ள கண்ட மண்டபத்தின் மணி உடனே ஒலிக்கப்படும்.

இந்த மணியின் ஒலி கேட்ட பிறகுதான், அரசர் யாதவராயர், திருவேங்கடமுடையான் அமுது உண்டு விட்டார் என்று அறிந்து, தாம் உணவு அருந்தச் செல்வார்.

இப்படியொரு வழக்கத்தைத் தமக்கு ஏற்படுத்தியிருந்தார் ஸ்ரீரங்கநாத யாதவராயர்.

இருளர்கள் இருவரும் நேராக இந்த கண்ட மண்டபம் சென்று, அங்கே சேவகன் இல்லா வேளையில், அந்தப் பெரிய மணியை அடித்துவிட,

''இதென்ன? வேளைகெட்ட வேளையில் மணி ஒலிக்கிறதே!'' என்று அரசரும் திடுக்கிட, சேவகர்கள் உடனே விரைந்துபோய், இருளர்களைப் பிடித்து வந்து அரசர் முன்னிலையில் நிறுத்தி வைத்தார்கள்.

அரசரும் அவர்களிடம் காரணத்தை வினவ.

'பிரபுவே! ஸ்ரீரங்கத்துப் பெருமாள் பதினெட்டு ஆண்டுகள் காணாமல் இருந்தாராமே! அவர் இப்போது நம்நாட்டிலே கிடைத்து விட்டார், பெருமானைக் கண்டு

---

* இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது.

திருமலைக்கு நடந்து செல்லும் போது எதிர்ப்படும் முழங்கால் முறிப்பான், முக்குபாவி (கிணறு) ஆகியவைகளுக்கு அப்பால் நடைபாதைக்குப் புறம்பாக இந்த மண்டபம் இப்போதும் இருக்கிறது.



கிழக்குத்தொடர் மலை ஒன்றின் சரிவிலும், சுவர்ணமுகி ஆற்றின் கரையிலும், திருப்பதி க்ஷேத்திரத்திற்கு மேற்கே சற்று தூரத்திலும் (ஏழு மைல்) இருந்தது இந்த சந்திரகிரிப் பட்டணம். (இப்போது மலைச்சரிவில் கோட்டையும் கொத்தளமுமாகத் தெரிவதுதான் இந்தப் பட்டணம். இப்போது இது பாழடைந்து கிடக்கிறது. இதன் பெயரைத் தாங்கிய சிறு கிராமம்தான் மீதம் உள்ளது. உள்ளே இருந்த அரண்மனைகளும், மாளிகைகளும் இன்று வயல்களாக மாறிவிட்டன.)

இந்தச் சந்திரகிரிப் பட்டணத்தை, கதை நிகழும் காலத்தில், 'யாதவராயர்' என்னும் வம்சத்தினர் ஆண்டு வந்தார்கள். கதை ,நிகழும் காலத்திற்கு முந்நூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன், (கி.பி. 999-ல்) யாதவராய வம்சத்தின் பூர்வீகரான இம்மடி நரசிங்க யாதவராயர் என்பவர் நாராயணவனம் என்னும் சீமையை ஆண்டு வந்தார். இவர் திருமலையில் உள்ள திருவேங்கடவரின் பக்தர். ஆகவே திருமலைப் பர்வதத்தின் தரிசனத்திலேயே எப்போதும் குடியிருக்க வேண்டும் என்று நினைத்து, அந்த மலைக்கு இணையாக உள்ள சந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்து அதில் கோட்டையும் அரண்மனைகளும் கட்டிக் கொண்டார். இவ்வாறு உருவானதுதான் இந்தச் சந்திரகிரிப் பட்டணம்.

இம்மடி நரசிங்க யாதவராயர் வம்சத்தில் பதினோராவது மன்னராகப் பட்டத்திற்கு வந்தவர்தான் ஸ்ரீ ரங்கநாத யாதவராயர் (கி.பி. 1336).

இந்த வம்சத்தார்கள் பெரும்பாலும் சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாத யாதவராயர் என்பவர் ஒய்சளத்தின் அரசரான வல்லாள தேவரிடம் சிற்றரசராக இருந்து வந்தார்.

இந்த வல்லாள தேவர் போரில் 'மதுரை சுல்தானுடன் நிகழ்த்தியது) இறந்த பிறகு ஸ்ரீரங்கநாத யாதவராயர் சிறிதுகாலம் தன்னிச்சையாக இருந்து வந்தார்.

பிறகு விஜயநகர மண்டலம் தோன்றி ஹரிஹர, புக்கர்களின் ஆட்சி தெற்கே பரவி வரவே, ஸ்ரீரங்கநாத யாதவராயர் அந்த விஜயநகர ராஜ்யத்தின் சிற்றரசராக மாறிக் கொண்டார்.

இந்த யாதவராயர் சந்திரகிரிச் சீமையை நன்கு பாலித்து வரும் நாளையில்,

இருளர்கள் இருவரும் அந்தச் சந்திரகிரிக் கோட்டைக்குள் சென்று மன்னரைத் தரிசிக்க விரும்பினார்கள்.

ஆனால் அதற்குச் சில சிரமங்கள் ஏற்படவே, நேராக அவர்கள் கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்றார்கள்.

இந்த மண்டபம் திருமலை பர்வதத்தை நோக்கி நின்று கொண்டிருந்த ஒரு மண்டபமாகும்*.

இந்த மண்டபத்தில் பெரியதொரு வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

திருமலை மீதுள்ள திருவேங்கடவர்க்கு நைவேத்தியம் ஆன பிறகு, அங்கே மலைமேல் இருக்கும் ஒரு கண்ட மண்டபத்தின் * மணி உடன் ஒலிக்கப்படும்.

அந்த ஒலியைக் கேட்டு, சந்திரகிரி மலையில் உள்ள கண்ட மண்டபத்தின் மணி உடனே ஒலிக்கப்படும்.

இந்த மணியின் ஒலி கேட்ட பிறகுதான், அரசர் யாதவராயர், திருவேங்கடமுடையான் அமுது உண்டு விட்டார் என்று அறிந்து, தாம் உணவு அருந்தச் செல்வார்.

இப்படியொரு வழக்கத்தைத் தமக்கு ஏற்படுத்தியிருந்தார் ஸ்ரீரங்கநாத யாதவராயர்.

இருளர்கள் இருவரும் நேராக இந்த கண்ட மண்டபம் சென்று, அங்கே சேவகன் இல்லா வேளையில், அந்தப் பெரிய மணியை அடித்துவிட,

''இதென்ன? வேளை கெட்ட வேளையில் மணி ஒலிக்கிறதே!'' என்று அரசரும் திடுக்கிட, சேவகர்கள் உடனே விரைந்துபோய், இருளர்களைப் பிடித்து வந்து அரசர் முன்னிலையில் நிறுத்தி வைத்தார்கள்.

அரசரும் அவர்களிடம் காரணத்தை வினவ,

'பிரபுவே! ஸ்ரீரங்கத்துப் பெருமாள் பதினெட்டு ஆண்டுகள் காணாமல் இருந்தாராமே! அவர் இப்போது நம்நாட்டிலே கிடைத்து விட்டார், பெருமாளைக் கண்டு

---

* இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது.

திருமலைக்கு நடந்து செல்லும் போது எதிர்ப்படும் முழங்கால் முறிப்பான், முக்குபாவி (கிணறு) ஆகியவைகளுக்கு அப்பால் நடைபாதைக்குப் புறம்பாக இந்த மண்டபம் இப்போதும் இருக்கிறது.



கிழக்குத்தொடர் மலை ஒன்றின் சரிவிலும், சுவர்ணமுகி ஆற்றின் கரையிலும், திருப்பதி க்ஷேத்திரத்திற்கு மேற்கே சற்று தூரத்திலும் (ஏழு மைல்) இருந்தது இந்த சந்திரகிரிப் பட்டணம். (இப்போது மலைச்சரிவில் கோட்டையும் கொத்தளமுமாகத் தெரிவதுதான் இந்தப் பட்டணம். இப்போது இது பாழடைந்து கிடக்கிறது. இதன் பெயரைத் தாங்கிய சிறு கிராமம்தான் மீதம் உள்ளது. உள்ளே இருந்த அரண்மனைகளும், மாளிகைகளும் இன்று வயல்களாக மாறிவிட்டன.)

இந்தச் சந்திரகிரிப் பட்டணத்தை, கதை நிகழும் காலத்தில், 'யாதவராயர்' என்னும் வம்சத்தினர் ஆண்டு வந்தார்கள். கதை நிகழும் காலத்திற்கு முந்நூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன், (கி.பி. 999-ல்) யாதவராய வம்சத்தின் பூர்வீகரான இம்மடி நரசிங்க யாதவராயர் என்பவர் நாராயணவனம் என்னும் சீமையை ஆண்டு வந்தார். இவர் திருமலையில் உள்ள திருவேங்கடவரின் பக்தர். ஆகவே திருமலைப் பர்வதத்தின் தரிசனத்திலேயே எப்போதும் குடியிருக்க வேண்டும் என்று நினைத்து, அந்த மலைக்கு இணையாக உள்ள சந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்து அதில் கோட்டையும் அரண்மனைகளும் கட்டிக் கொண்டார். இவ்வாறு உருவானதுதான் இந்தச் சந்திரகிரிப் பட்டணம்.

இம்மடி நரசிங்க யாதவராயர் வம்சத்தில் பதினோராவது மன்னராகப் பட்டத்திற்கு வந்தவர்தான் ஸ்ரீரங்கநாத யாதவராயர் (கி.பி. 1336).

இந்த வம்சத்தார்கள் பெரும்பாலும் சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாத யாதவராயர் என்பவர் ஒய்சளத்தின் அரசரான வல்லாள தேவரிடம் சிற்றரசராக இருந்து வந்தார்.

இந்த வல்லாள தேவர் போரில் (மதுரை சுல்தானுடன் நிகழ்த்தியது) இறந்த பிறகு ஸ்ரீரங்கநாத யாதவராயர் சிறிதுகாலம் தன்னிச்சையாக இருந்து வந்தார்.

பிறகு விஜயநகர மண்டலம் தோன்றி ஹரிஹர, புக்கர்களின் ஆட்சி தெற்கே பரவி வரவே, ஸ்ரீரங்கநாத யாதவராயர் அந்த விஜயநகர ராஜ்யத்தின் சிற்றரசராக மாறிக் கொண்டார்.

இந்த யாதவராயர் சந்திரகிரிச் சீமையை நன்கு பாலித்து வரும் நாளையில்,

இருளர்கள் இருவரும் அந்தச் சந்திரகிரிக் கோட்டைக்குள் சென்று மன்னரைத் தரிசிக்க விரும்பினார்கள்.

ஆனால் அதற்குச் சில சிரமங்கள் ஏற்படவே, நேராக அவர்கள் கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்றார்கள்.

இந்த மண்டபம் திருமலை பர்வதத்தை நோக்கி நின்று கொண்டிருந்த ஒரு மண்டபமாகும்*.

இந்த மண்டபத்தில் பெரியதொரு வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

திருமலை மீதுள்ள திருவேங்கடவர்க்கு நைவேத்தியம் ஆன பிறகு, அங்கே மலைமேல் இருக்கும் ஒரு கண்ட மண்டபத்தின் * மணி உடன் ஒலிக்கப்படும்.

அந்த ஒலியைக் கேட்டு, சந்திரகிரி மலையில் உள்ள கண்ட மண்டபத்தின் மணி உடனே ஒலிக்கப்படும்.

இந்த மணியின் ஒலி கேட்ட பிறகுதான், அரசர் யாதவராயர், திருவேங்கடமுடையான் அமுது உண்டு விட்டார் என்று அறிந்து, தாம் உணவு அருந்தச் செல்வார்.

இப்படியொரு வழக்கத்தைத் தமக்கு ஏற்படுத்தியிருந்தார் ஸ்ரீரங்கநாத யாதவராயர்.

இருளர்கள் இருவரும் நேராக இந்த கண்ட மண்டபம் சென்று, அங்கே சேவகன் இல்லா வேளையில், அந்தப் பெரிய மணியை அடித்துவிட,

''இதென்ன? வேளை கெட்ட வேளையில் மணி ஒலிக்கிறதே!'' என்று அரசரும் திடுக்கிட, சேவகர்கள் உடனே விரைந்துபோய், இருளர்களைப் பிடித்து வந்து அரசர் முன்னிலையில் நிறுத்தி வைத்தார்கள்.

அரசரும் அவர்களிடம் காரணத்தை வினவ.

'பிரபுவே! ஸ்ரீரங்கத்துப் பெருமாள் பதினெட்டு ஆண்டுகள் காணாமல் இருந்தாராமே! அவர் இப்போது நம்காட்டிலே கிடைத்து விட்டார், பெருமாளைக் கண்டு

---

* இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது.

திருமலைக்கு நடந்து செல்லும் போது எதிர்ப்படும் முழங்கால் முறிப்பான், முக்குபாவி (கிணறு) ஆகியவைகளுக்கு அப்பால் நடைபாதைக்குப் புறம்பாக இந்த மண்டபம் இப்போதும் இருக்கிறது.



கிழக்குத்தொடர் மலை ஒன்றின் சரிவிலும், சுவர்ண முகி ஆற்றின் கரையிலும், திருப்பதி க்ஷேத்திரத்திற்கு மேற்கே சற்று தூரத்திலும் (ஏழு மைல்) இருந்தது இந்த சந்திரகிரிப் பட்டணம். (இப்போது மலைச்சரிவில் கோட்டையும் கொத்தளமுமாகத் தெரிவதுதான் இந்தப் பட்டணம். இப்போது இது பாழடைந்து கிடக்கிறது. இதன் பெயரைத் தாங்கிய சிறு கிராமம்தான் மீதம் உள்ளது. உள்ளே இருந்த அரண்மனைகளும், மாளிகைகளும் இன்று வயல்களாக மாறிவிட்டன.)

இந்தச் சந்திரகிரிப் பட்டணத்தை, கதை நிகழும் காலத்தில், 'யாதவராயர்' என்னும் வம்சத்தினர் ஆண்டு வந்தார்கள். கதை நிகழும் காலத்திற்கு முந்நூற்று அறுபது ஆண்டுகளுக்கு முன், (கி.பி. 999-ல்) யாதவராய வம்சத்தின் பூர்வீகரான இம்மடி நரசிங்க யாதவராயர் என்பவர் நாராயணவனம் என்னும் சீமையை ஆண்டு வந்தார். இவர் திருமலையில் உள்ள திருவேங்கடவரின் பக்தர். ஆகவே திருமலைப் பர்வதத்தின் தரிசனத்திலேயே எப்போதும் குடியிருக்க வேண்டும் என்று நினைத்து, அந்த மலைக்கு இணையாக உள்ள சந்திரகிரி மலையைத் தேர்ந்தெடுத்து அதில் கோட்டையும் அரண்மனைகளும் கட்டிக் கொண்டார். இவ்வாறு உருவானதுதான் இந்தச் சந்திரகிரிப் பட்டணம்.

இம்மடி நரசிங்க யாதவராயர் வம்சத்தில் பதினோராவது மன்னராகப் பட்டத்திற்கு வந்தவர்தான் ஸ்ரீரங்கநாத யாதவராயர் (கி.பி. 1336).

இந்த வம்சத்தார்கள் பெரும்பாலும் சிற்றரசர்களாகவே வாழ்ந்து வந்தார்கள்.

ஸ்ரீரங்கநாத யாதவராயர் என்பவர் ஒய்சளத்தின் அரசரான வல்லாள தேவரிடம் சிற்றரசராக இருந்து வந்தார்.

இந்த வல்லாள தேவர் போரில் (மதுரை சுல்தானுடன் நிகழ்த்தியது) இறந்த பிறகு ஸ்ரீரங்கநாத யாதவராயர் சிறிதுகாலம் தன்னிச்சையாக இருந்து வந்தார்.

பிறகு விஜயநகர மண்டலம் தோன்றி ஹரிஹர, புக்கர்களின் ஆட்சி தெற்கே பரவி வரவே, ஸ்ரீரங்கநாத யாதவராயர் அந்த விஜயநகர ராஜ்யத்தின் சிற்றரசராக மாறிக் கொண்டார்.

இந்த யாதவராயர் சந்திரகிரிச் சீமையை நன்கு பாலித்து வரும் நாளையில்,

இருளர்கள் இருவரும் அந்தச் சந்திரகிரிக் கோட்டைக்குள் சென்று மன்னரைத் தரிசிக்க விரும்பினார்கள்.

ஆனால் அதற்குச் சில சிரமங்கள் ஏற்படவே, நேராக அவர்கள் கோட்டைக்குக் கீழ்ப்புறத்திலுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்றார்கள்.

இந்த மண்டபம் திருமலை பர்வதத்தை நோக்கி நின்று கொண்டிருந்த ஒரு மண்டபமாகும்*.

இந்த மண்டபத்தில் பெரியதொரு வெண்கல மணி தொங்கிக் கொண்டிருந்தது.

திருமலை மீதுள்ள திருவேங்கடவர்க்கு நைவேத்தியம் ஆன பிறகு, அங்கே மலைமேல் இருக்கும் ஒரு கண்ட மண்டபத்தின் * மணி உடன் ஒலிக்கப்படும்.

அந்த ஒலியைக் கேட்டு, சந்திரகிரி மலையில் உள்ள கண்ட மண்டபத்தின் மணி உடனே ஒலிக்கப்படும்.

இந்த மணியின் ஒலி கேட்ட பிறகுதான், அரசர் யாதவராயர், திருவேங்கடமுடையான் அமுது உண்டு விட்டார் என்று அறிந்து, தாம் உணவு அருந்தச் செல்வார்.

இப்படியொரு வழக்கத்தைத் தமக்கு ஏற்படுத்தியிருந்தார் ஸ்ரீரங்கநாத யாதவராயர்.

இருளர்கள் இருவரும் நேராக இந்த கண்ட மண்டபம் சென்று, அங்கே சேவகன் இல்லா வேளையில், அந்தப் பெரிய மணியை அடித்துவிட,

''இதென்ன? வேளை கெட்ட வேளையில் மணி ஒலிக்கிறதே!'' என்று அரசரும் திடுக்கிட, சேவகர்கள் உடனே விரைந்துபோய், இருளர்களைப் பிடித்து வந்து அரசர் முன்னிலையில் நிறுத்தி வைத்தார்கள்.

அரசரும் அவர்களிடம் காரணத்தை வினவ.

'பிரபுவே! ஸ்ரீரங்கத்துப் பெருமாள் பதினெட்டு ஆண்டுகள் காணாமல் இருந்தாராமே! அவர் இப்போது நம்காட்டிலே கிடைத்து விட்டார், பெருமாளைக் கண்டு

---

* இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது.

திருமலைக்கு நடந்து செல்லும் போது எதிர்ப்படும் முழங்கால் முறிப்பான், முக்குபாவி (கிணறு) ஆகியவைகளுக்கு அப்பால் நடைபாதைக்குப் புறம்பாக இந்த மண்டபம் இப்போதும் இருக்கிறது.



கொண்ட பிள்ளை, தங்களை உடனே வந்து சகல மரியாதைகளுடன் அவரை அழைத்துப்போக விண்ணப்பித்துக்கொண்டார்'' என்று கூறினார்கள்.

அவ்வளவில் யாதவராயரும் ஏதோ பூர்வ ஜன்ம வாசனை தட்டியதுபோல், ஒய்சள அரசர் வல்லாளரையும் அவர் ஸ்ரீரங்கத்தை மீட்பதற்காகச் செய்த கடைசி யுத்தத்தையும் நினைவு கூர்ந்து,

''அடே, நம் பெருமாள் அகப்பட்டாரோ? நமது காட்டிலே வாசம் செய்தாரா?'' என்று ஆச்சரியத்துடன் கூறி, உடன் பிரதானியை அழைத்துப் பிரயாணத்திற்குச்சித்தம் செய்யச்சொல்லி, ''காலை புறப்பட வேண்டும்'' என்று கட்டளை இட்டார்.

காலையில் இருளர்கள் வழிகாட்டிக்கொண்டு போக, பரிவாரத்துடன் யாதவராயர் பின்தொடர, பள்ளத் தாக்குகள் வழியாகப் புகுந்து, மாலை நேரத்திற்குள் அரங்கன் இருக்கும் இடத்தை எல்லோரும் அடைந்தார்கள்.

வெட்டவெளிக்கு நடுவே, செம்பொன் ஒளிர்வது போல் ஒளி விட்டுக்கொண்டிருந்த அரங்கனைக் கண்டு, அப்படியே அடியற்ற மரம்போல் விழுந்து வணங்கி,

''சுவாமி! என்ன அபசாரம் செய்தோம்! இத்தனை ஆண்டுகள் நம் காட்டில் வாசம் செய்ததை அறியாது இருந்து விட்டோமே. அபசாரம், அபசாரம்!'' என்றுகண்ணீரை ஆறுகப்பெருக்கி; தொண்டை அடைத்துக் கொள்ள நெக்குருகப் பிரார்த்தித்து,

அந்தக் கணமே தமது பீதாம்பரத்தைக் களைத்து அரங்கனுக்கு விதானமாக இருக்க வைத்து, கொடிக் கம்பங்கள் நட்டு,



தூப, தீப, நைவேத்தியங்கள் சமர்ப்பித்து, கிடைக்கப் பெருத பெரும் பேற்றைப் பெற்றவர் போல மனத்தில் மிக்க சந்தோஷம் கொள்வாராயினர்.

பின்னர் அவர் வல்லபனை அழைத்து, ''பிள்ளாய்! நீ யார்? இங்கே எப்படி வந்தனை? அரங்கனை எப்படிக் கண்டு பிடித்தனை?'' என்று கேட்க,

வல்லபனும் அவர் முன்னால் மிகக் கம்பீரமாக அமர்ந்து கொண்டு, ஆதியோடு அந்தமாய், பெருமாள் திருவரங்கத்திலிருந்து புறப்பட்டது முதல் சந்திரகிரிக் காட்டில் புகுந்தது வரை விவரமாய்க் கூறி முடித்தான்.

அதைக் கேட்டு அதிசயமும், அதிர்ச்சியும் ஒருங்கு அடைந்த அந்த மன்னர், உடனே கொடவர் பக்கம் எழுந்து நின்று, அவர் பாதங்களில் விழுந்து வணங்கி, அவருக்கு எல்லா உபசாரங்களையும் செய்து, அந்த மகான் இப்போது வெறும் சித்தப் பிரமையில் இருக்கிறாரே என்று மனத்துள் துக்கிக்கலானார்.

பிறகு அவர் வல்லபனை அழைத்து, ''பிள்ளாய்! உனது முயற்சிகளைக் குறித்து மிகவும் சந்தோஷப்படுகிறேன். உன்னை ஊக்கி வைத்த தாயாரையும் மனதார வணங்குகிறேன்'' என்று அந்தப் பிள்ளையை வெகுவாகப் புகழ்ந்து பாராட்டி விட்டு நித்திரை போனார்.

காலையில் எழுந்ததும், சேவகர்களை அனுப்பி செஞ்சுக் காட்டில் காலதத்தனைத் தேடச் சொன்னதின்பேரில் அவர்கள் உள்ளேபுகுந்து எல்லா இடங்களையும் தேடி,

பின்னர் ஒரு தீவாந்தரம் போல் இருந்த பாறை மேல் குத்துயிரும், குலை உயிருமாக இருந்த தத்தனைக் கண்டுபிடித்து, அவனிடம் செய்திகளை வினவ,

அவனும் தான் புறப்பட்டுப் போகும் வேளையில் யானைக் கூட்டம் ஒன்று அவனைத் துரத்திக் கொண்டு வந்ததையும், இந்தப் பாறைமீது அவன் சரண் புகுந்ததையும், இதன் மேலேயே அன்ன ஆகாரம் ஏதும்இன்றி ஒரு வாரம் தங்கி விட்டதையும், யானைகள் ஆறு நாள் வரை பழியாக அந்தப் பாறைப் பக்கமே சுற்றி அவனுக்குப் பயம் விளைவித்ததையும் விவரமாகக் கூறினான்.

அப்பால் சேவர்கள் அவனுக்கு உணவுகளைக் கொடுத்துத் தெம்பு ஏற்றி அழைத்து, வல்லபன் இருக்கும் இடத்திற்குக் கொண்டு போய் விட,

இருவரும் ஒருவரை ஒருவர் தழுவிக் கொண்டு மிகவும் பரவசப்படலானார்கள்.

நண்பர்கள் கூடிய பின், யாதவராயர் அவர்களை அழைத்து, ''பிள்ளைகாள்! நல்லவேளை எல்லாம் இனிதே நடந்திருக்கிறது. இனி மற்ற விஷயங்களில் ஈடுபடுவோம். இப்போது நாம் அரங்கரைக் கண்டு பிடித்திருக்கிறோமே! அவரை எங்கே நாம் எழுந்தருளச் செய்வது?'' என்று கேட்டார்.

''ஏன், மன்னர்பெரும! அவரை மீளவும் திருவரங்கத்தில் எழுந்தருளச் செய்வதுதான் முறை!'' என்று கூறினான் வல்லபன்.

அவனை ஆழ்ந்து பார்த்தார் யாதவராயர். பிறகு புன்னகையோடு, ''பிள்ளாய் வாப்பா! உனக்கு இவ்வளவு துடிப்பு இருப்பதை மிகவும் பாராட்டுகிறேன். ஆனால் என்னால் செய்ய முடியாததை நீ கூறுகிறாயே!'' என்று கூறினார்.

''எது, மன்னவ, தங்களால் முடியாது?'' என்று கேட்டான் வல்லபன்.

''அரங்கனைத் திருவரங்கம் அழைத்துச் செல்வதுதான், பிள்ளாய்! திருவரங்கம் இப்போது யார் கையில் இருக்கிறது? சுல்தானியர்களின் கையில் அல்லவா இருக்கிறது! அவர்களை என்னால் வெல்ல முடியுமா? நான் ஒரு குறுநில மன்னன்தான்!'' என்று கூறினார் அவர்.

அவர் சொல்வதைக் கேட்ட வல்லபன் யோசனையில் ஆழ்ந்தான்.

—தொடரும்

இந்த மன்னர் நினைத்தால் பகைவர் மீது படையெடுத்து அவர்களைத் தவிடு பொடியாக்கி விடலாம், இவர் வீரம் காட்டாது இருக்கிறார் என்று மனத்திலே சிறு தாபம் கொண்டான் வல்லபன்.

எனினும் அவன் அதை வெளியே காட்டிக் கொள்ளவில்லை.

பின்னர் எல்லோருமாகச் சேர்ந்து அரங்கனை இனி எங்கே எழுந்தருளச் செய்வது என்று யோசனை செய்தார்கள்.

''சந்திரகிரிக்கு எழுந்தருள வைக்கலாமே!'' என்று தத்தன் கூற,

''பிள்ளாய்! அந்த இடம் சரியான இடம் அல்ல! திடீரென்று துருக்கியர்கள் படை எடுத்து வந்தால் அது எளிதில் சிக்கக் கூடிய இடம். நானே அங்கே இருப்பதைத் தவிர்த்து விட்டுப் பெரும்பாலும் திருப்பதி மலை மீது தான் இருந்து வருகிறேன். எனக்காக அங்கே ஒரு அரண்மனையும் கட்டி வைத்துள்ளேன். ஆகவே அரங்கனையும் மலைமேல் எழுந்தருள வைப்பதுதான் முறை!'' என்று கூறினார் யாதவராயர்.

அவர் சொல்வது சரி என்று யாவரும் ஆமோதிக்க, மறுநாள் காலையில் பரிவாரங்களுடன் எல்லாரும் திருமலை நோக்கிப் பிரயாணப்படலானார்கள்.

திருவரங்கத்துப் பெருமாள் தம்முடன் வருகிறபடியினாலே, குறுக்கு வழியில் போக எண்ணாமல் திருப்பதி வழியாகவே திருமலை மீது ஏறுவதற்கு எண்ணினார் யாதவராயர்.



ஆறு நாழிகைகள் பிரயாணம் செய்து மாலை சாயும் வேளையில் திருப்பதி க்ஷேத்திரத்தை எல்லோரும் அடைந்தார்கள்.

ஊரை அடைந்தவுடன், யாதவராயர் இளைஞர்களிடம் பேசுவது போலவும், அதே நேரத்தில் அரங்களிடம் விண்ணப்பிப்பது போலவும் பேசி, ''இந்த ஊர் புனிதம் வாய்ந்தது! ஸ்ரீராமானுஜரே இந்த ஊரைத் தோற்றுவித்தார். ● மேலே திருமலைக்குப் போகிறவர்களுக்கு வசதியாக இதைத் தோற்றுவித்தார். தவிர, சிதம்பரத்திலிருந்து கோவிந்தராஜப் பெருமாளையும், இங்கே எழுந்தருள வைத்துக் கோவிலில் பிரதிஷ்டை பண்ணி வைத்தார், கோவிலில் பார்த்தசாரதியும் கோவிந்தராஜனும் சேவை சாதிப்பது கண்கொள்ளாக் காட்சி!'' என்று கூறினார்.

இரவு திருப்பதியில் தங்கி விட்டுக் காலை புலரும் முன்பு மீண்டும் புறப்பட்டார்கள்.

அரங்கனுக்குப் பாங்காக ஒரு டோலா அமைத்து, அவருக்கு உபசாரங்கள் செய்வதற்காக அர்ச்சகர்களையும் நியமித்து, எல்லா வசதிகளையும் உன்னிப்பாகக் கவனித்து, கடைசியில் மன்னர் தாமும் ஒரு டோலாவில் ஏறிக் கொண்டார்.

அதே போல் கொடவருக்கும் இளைஞர்களுக்கும் தனித்தனியாக டோலா அமைத்துக் கொடுத்து அவரவர் விருப்பங்களை எல்லாம் கவனமாக நிறைவேற்றி வைத்தார் மன்னர்.

பரிவாரம் மலை அடிவாரம் சென்று அடிப்படியை (இப்போது அலிபிரி என்று மருவியிருக்கிறது.) மிதித்துப் பிரயாணம் செய்து ஆழ்வார் தீர்த்தம்வரை சென்று, ● பின்னர் காலி கோபுரம் (காற்றுக் கோபுரம்) அடைந்து, அவாசாரிகோண வழியே போய் முழங்கால் முறிப் பாறைக் கடந்தது.

அங்கே ஸ்ரீராமானுஜர் மண்டபத்தை அடைந்ததும் மன்னவர் டோலாவிலிருந்து முன்போல் இறங்கி இளைஞர்களையும், அரங்கனையும் ஒருங்கே பார்த்து, ''இங்கேதான் முதன் முதலில் ஸ்ரீராமானுஜர் வந்த போது அவரைத் திருமலை நம்பி எதிர்கொண்டு வரவேற்றார். இந்த மண்டபம் நிற்கும் இடத்தில்தான் நம்பிகள் அவருக்கு இராமாயணத்தின் தத்துவார்த்தங்களையும் உபதேசித்தார்'' என்று கூற,

இளைஞர்களும் மிக்க விநயத்துடனே அந்த மண்டபத்தையும், ராமானுஜரின் சந்நிதியையும் தரிசித்தார்கள்.

பிறகு ஆங்காங்கே அரங்கனை நிறுத்தி தீப நைவேத்தியங்களை எல்லாம் சமர்ப்பித்து, பரிவாரங்கள் மேலே ஏறி ஏறிப் போக,

மதியத்திற்கு மேல் ஒரு நாழிகை ஆகும் வேளையில் திருமலைக் கோவிலை யாவரும் சௌக்கியமாகப் போய்ச் சேர்ந்தார்கள்.

அரங்கன் வருகிறார் என்கிற செய்தியை முன்னரே அனுப்பி வைத்தபடியால்,

கோவில் ஸ்தானத்தாரும், பரிசனங்களும் அவருக்காகக் காத்திருந்து,

அரங்கன் வந்தவுடன் அவரை மேளதாள வாத்ய விருத்தங்களுடனும், வேத பாராயணங்களுடனும் எதிர்கொண்டு, ஜயகோஷம் செய்து, ஆனந்தமாய் ஆர்ப்பரித்து வரவேற்று,

முறையே அவரை உள்ளே எழுந்தருள வைத்துப் போய் சந்நிதியில் மலைகுனிய நின்ற பெருமாளுடன்

---

● கி. பி. 1130-ல், நான்கு ராஜ வீதியும், ஒரு வடக்கு மாட வீதியும், ஒரு சந்நிதித் தெருவும் உண்டான திருப்பதி நகரத்தை உருவாக்க ஸ்ரீ ராமானுஜரே திட்டம் இட்டார். இந்த ஊருக்கு ராமானுஜபுரம் என்றும் பெயர் உண்டு.

● காலி கோபுரத்திற்கு இப்போது நேராய் வழி இருக்கிறது. அந்நாளில் ஆழ்வார் தீர்த்தம் போய்ப் போவார்கள்.

(திருமலைக் கோவிலில் உள்ள உற்சவ மூர்த்திக்குப் பெயர். மலையப்பர் என்றும் வழங்கப்படுகிறார்) ஸ்தாபிதம் செய்தார்கள்.

மனித வாழ்க்கையைப் போலவே திருமலையிலுள்ள வேங்கடவன் வாழ்க்கையிலும் ஏற்றத் தாழ்வுகள் அவ்வப்போது இருந்து வந்துள்ளன.

ஸ்ரீராமானுஜர் காலத்திற்குப் பிறகு, திருவேங்கடம் மகோன்னதமான திசையை நோக்கிப் போய்க் கொண்டிருந்தது. கோவிலுக்கு விடப்பட்ட மான்யங்களும், யாத்திரிகர்களின் கூட்டமும் அதிகமாகிக் கொண்டு வந்தன.

பின்னால் வந்த யாதவராய அரசர்கள் கோவில் நிர்வாகத்தை வெகு திறமையோடு சீர்செய்து வைத்தார்கள்.

ஆனால் கி.பி. 1310 லிருந்து தெற்கே டில்லிப்படை எடுப்புகள் நிகழ்ந்த பிறகு, தென்னாடுகள் யாவும் ஒரு கொந்தளிப்பில் ஆழ்ந்து விட்டன.

இந்தக் கொந்தளிப்பின் காரணமாக ஜனங்களின் நிம்மதியான வாழ்க்கை முறை பாதிக்கப்பட்டு விட்டது.

ஜனங்கள் நெடுந்தூரம் யாத்திரை சென்று தலங்களைத் தரிசிக்கும் பழக்கங்களை மெள்ள மெள்ள நிறுத்திக் கொள்ள வேண்டி வந்தது.

இதனால் திருமலைக்கு வருவோரின் தொகையும் குறைந்து வந்தது. அதன் வருவாயும் குறைந்து வந்தது.

கதை நிகழும் காலத்தில் கோவிலுக்கு யாத்திரிகரால் ஏற்படும் வருவாய் மிகவும் குறைந்து விட்டது. பழைய மான்யங்களின் வருவாயினால் கோவிலின் நிர்வாகம் அதிகம் தங்கு தடை இல்லாமல் நடந்து வந்தது எனினும், ஜனத்திரள்களால் நிரம்பிய பழைய விமரிசைகள் குறைந்து இருந்தன.

இவ்விதம் ஓரளவு பாதிக்கப்பட்டிருந்த கோவிலில் ஆதரவற்ற ஒரு அந்நியர் போல் அரங்கர் இருக்கிறாரே என்ற ஒரு எண்ணம் திருமலைக்குப் போன அன்று இரவிலேயே இரு இளைஞர்களுக்கும் ஏற்பட்டது.

இரவில் ஒருவர்க்கொருவர் தங்கள் வேதனைகளைப் பரிமாறிக் கொண்டு உறக்கம் கொள்ளாமல் பொழுதைக் கழித்தார்கள்.

காலையில் எழுந்ததும், இருவரும் யாதவராயர் முன்னால் சென்று தயக்கத்தோடு நின்றார்கள். ராயரும் அவர்களைப் பார்த்து, "வாருங்கள் பிள்ளைகாள்! உங்கள் முகத்தில் விசனக் குறி காணப்படுகிறதே! ஏன்?" என்று வினவ,

"மன்னவா! அதைச் சொல்வதற்காகத்தான் விரைந்தோம்" என்று சொல்லி ஒருவர்க்கொருவர் முகத்தைப் பார்த்து நிற்க,

மன்னரும் புன்னகையிட்டு, "பிள்ளைகாள்! தைரியமாகக் கூறுங்கள்!" என்று கூறினார்.

அவ்வளவில் வல்லபனும், "மன்னர்பெரும! எங்கள் அரங்கர் திருவரங்கத்தில் ராஜபோகமாய் வாழ்ந்தவர். மாட்சிமையோடு ஆட்சி செலுத்தியவர். அரசர்கள் எல்லாரும் அவர் வாசல்கடைப் பக்கம் வந்து நிற்பார்கள். அப்படிப்பட்ட மகிமை வாய்ந்தவர் இங்கே ஒரே சந்நிதியில் மலைகுனிய நின்ற பெருமாளுடன் இருந்து வருகிறாரே என்பதை நினைத்தோம். வேதனைப்பட்டோம்!" என்று கூற, யாதவராய மன்னரும் சற்று நேரம் யோசித்திருந்தார்.

பின்னர் அவர் இளைஞர்களைப் பார்த்து, "பிள்ளைகாள்! உங்கள் தயக்கக் குறிப்பை உணர்ந்து கொண்டேன். அரங்கர் மலைகுனிய நின்ற பெருமாளுடன் சந்நிதியைப் பகிர்ந்து கொண்டு இருப்பதும் தெரிகிறது. நீங்கள் நினைக்கு முன்பே எனக்கு இந்த நினைவு வந்து விட்டது" என்று கூறினார் அவர்.

"அப்படியா?" என்று இளைஞர்கள் ஆச்சரியத்தோடு கேட்க,

"ஆமாம் பிள்ளைகாள்! எனக்கு அந்த நினைவு வந்ததற்கு வேறு ஒரு காரணமும் உண்டு. திருவேங்கடமுடையானின் வழிபாட்டு முறை வைகானஸ ஆகம வழியில் நடந்து வருகிறது. திருவரங்கத்திலோ பாஞ்சாராத்ர ஆகம வழியில் வழிபாட்டு முறை நடந்து வருகிறது. எனவே அரங்கனுக்கு அவருக்கு உகந்த வழியில் வழிபாடு நடப்பதுதான் நல்லது. இதற்காக, இரவு யோசித்து அரங்கன் இங்கே தங்குவதற்கென ஒரு ரங்க மண்டபமும் சந்நிதியும் கட்டத் தீர்மானித்துள்ளேன். அரங்கன் தனியாக இருந்தே ராஜ்ய பரிபாலனம் செய்வார்! நீங்கள் அஞ்ச வேண்டாம்!" என்று கூறினார்.

உடனே இரு இளைஞர்களும் அவர் காலடியில் விழுந்து வணங்கித் தங்கள் நன்றிக் கடனைத் தெரிவித்தார்கள்.

அதனால் புளகித்த அரசனும், "பிள்ளைகாள்! உங்களைக் கண்டு என் நெஞ்சு சிலிர்க்கிறது. நாட்டில் தர்மம் அழிந்து விட்டதோ என்று நினைக்கும் வேளையில் இரு சிங்கங்கள் புறப்பட்டாற்போல் புறப்பட்டு வந்துள்ளீர்கள். உங்கள் அனுபவங்கள், சாகசங்கள், போராட்டங்கள், எல்லாமே என் மனத்தை வெகுவாகக் கவர்ந்து விட்டன. அரங்கப் பெருமாளைக் காப்பதற்காக அரும்பெரும் தியாகங்கள் செய்த மூன்று கொடவப் பெரியவர்களும் என் மனத்தில் நீங்காது நின்று விட்டார்கள். இப்படிப் பட்ட தியாக புருஷர்களால்தான் நாடு சிறக்கிறது. நேற்றைக்கு இரவிலிருந்து

# சுதந்திரம்

இந்தப் பாரத நாட்டின் மண்ணோடு மண்ணாகச் சுதந்திரம் கலந்திருக்கின்றது. பதினாயிரக்கணக்கான ஆண்டுகளாக, மனிதன் இந்த நாட்டில் 'சுதந்திரம்', 'விடுதலை' என்று கதறி வந்திருக்கிறான். அன்னியர்கள் பூட்டிய விலங்கு என்ன, அவனது புலன்கள் பூட்டிய விலங்கையே உடைத்தெறிந்து விடுதலை பெறுவது அவனது வாழ்க்கையின் லட்சியம். அந்தச் சுதந்திரத்துக்காக அவன் துன்பப்படவும், துயரங்களை வலிந்து ஏற்கவும் அஞ்சவில்லை.

அத்துடன் சிந்தனைச் சுதந்திரத்துக்குப் பேர் போன நாடு இது. நாஸ்திகனான சாரவாகன், கோயில்களின் வாசலில் நின்று கொண்டு தனது கருத்துக்களை வெளியிட, இந்த நாடு அனுமதித்தது. நமது மக்கள் அக்கருத்துக்களை ஏற்காமல் போனாலும், அக்கருத்துக்களை வெளியிடும் சுதந்திரத்தை அது போற்றிப் பாதுகாத்தது. கருத்து வேறுபாடுகளை இந்த நாட்டின் பண்பாடு சகித்துக் கொள்வதோடு மட்டும் நின்று விடவில்லை. ஒவ்வொருவரும் தத்தம் கருத்துக்களை எடுத்துக் கூறுவதன்மூலம், 'தத்துவ போதம்' அதாவது மெய்ப்பொருள் விளக்கம் ஏற்படும் என்பது இந்நாட்டின் மரபு. சுதந்திரமும், ஜன நாயகமும் இந்நாட்டில் வெறும் கோஷங்களல்ல. அவை நமது வாழ்க்கை முறையாகும்.

(திரு இராம கோபாலன் தொகுத்துள்ள "நெருக்கடி நிலைமை எதிர்த்துப் போராட்டம்" என்ற நூலிலிருந்து: கிடைக்குமிடம்: "சக்தி", 2, எம்.வி, நாயுடு தெரு, பஞ்சவடி, சேத்துப்பட்டு, சென்னை-31)

அலமாரி

# மலைநாட்டின் மீதினிலே

"டிராவல் ஏஜன்சி" ஒன்று சென்னை சிந்தாதிரிப்பேட்டையில் துவக்கப்பட்டுள்ளது இதுநாள் காறும்தெரியாமல்போய்விட்டதே! சிக்கனமான செலவில் எக்கணமும் புறப்பட்டுச் செல்லலாம். போவதற்குக் கப்பல்; வருவதற்கு விமானம். மலேசியா, சிங்கப்பூர் மகிழ்வோடு காணலாம். கட்டணம் எவ்வளவு தெரியுமா? கேட்டதும் மயக்கம் கொள்ளாதீர்கள்: இருபது ரூபாய்!

புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் போல் நிமிர்ந்த தோற்றம், நாவலர் சோமசுந்தர பாரதியார்போல் அடர்ந்த மீசை. கிருபானந்த வாரியார் போல் நிறைந்த சொல்லோட்டம்.

"உருவத்தால் மட்டுமின்றி, உள்ளத்தாலும் பெருங்கவிக்கோதான். ஆழ்ந்த புலமையும், அடங்கிய பண்பும், ஓங்கிய தமிழ்ப் பற்றும், ஒப்பற்ற காவியத்தை யாத்திடும் வல்லமையும் உடையவர் சேது!" என்று டாக்டர் கலைஞர் அவர்களாலும், "போக்கிரி மீசைப் புலவராம் பெருங்கவி ஆக்கிய பாடல்கள் அறிவுக்கு விருந்தாம்!" என்று கவிஞர் சுரதா அவர்களாலும் பாராட்டப்பெற்றவர் வா.மு. சேதுராமன்.

இன்றைய நிலையில் 400, 500 பக்கங்கள் கவிதை நூல்களைத் தொடர்ந்து வெளியிடுந் தென்பும், திராணியும் கொண்ட துணிச்சல் கவிஞர் இவர். "மலைநாட்டின் மீதினிலே" என்ற காப்பியம் அண்மையில் வெளிவந்த இவரது அருந்தமிழ்ப் பெரும் பனுவலாகும்.

அழைப்பின் பேரிலும், தன் ஆசான் மணிவிழாவில் பங்கேற்கும் பொருட்டும் மலேசியாவுக்கும் சிங்கப்பூருக்கும் கடந்த ஆண்டிற் சென்று வந்தார் செந்தமிழ்க் கவிமணியார். யான் பெற்ற இன்பம் பெறுக இவ் வையகம் எனும் பரந்த நோக்கால், தான் கண்டு துய்த்த அருங்காட்சிகளையும் விருந்தோம்பிப் பழகிய பெரும் நண்பர்களையும் மறவாமல் நமக்குத் தரும் நறும் பணியினைத் திறம்பட முடித்துள்ளார் கவிஞர் சேதுராமன். பயணக் கட்டுரை போல் அயர்வைத் தந்திடுமோ என அஞ்சி, இரண்டொரு கற்பனை மாந்தரையும் உருவாக்கி, அற்புதமான காப்பிய வடிவுந் தந்துவிட்டார்!

எண்சீர் விருத்தமும், அறுசீர் விருத்தமும் ஆங்காங்கு பொருத்தமாய் அமைந்துள்ளன. தகவுடைய இடங்களில் அகவற்பா நடைபோடுகின்றது. வெண்பா எனும் விளக்கமிகும் ஒண்பா வெற்றியுடன் விாவிக் கிடக்கின்றது. எனவே இனிமையும் தமிழின் தனிமையும், வளமையும் புரிந்திடும் எளிமையும், செழுமையும் கமழும் எழில்களும்- பொழில் நிறை பூக்காடாய்ப் பெருகி மணம் சொறிகின்றன.

நாம் எல்லாரும் கீழ்த்திசை நாடுகளுக்குச் செல்வதும், அங்கு வாழும் அல்லது வாடும் நம்மனோரைக் கண்டு குலவி மகிழ்தலும் எளிதில் இயலக்கூடிய ஒன்றா? இந்நிலையில் இவ்வளவு சிறு செலவில் இன்பம் தரும் இச்சுற்றுலாக் காவியத்தை வாங்கிப் படித்தால், போய்த் திரும்பிய நிறைவும் பயனும் கிட்டுமே!

கவியரசன் பதிப்பக வெளியீடான இந் நூல், கிடைக்குமிடம் : தமிழ்மணி புத்தகப் பண்ணை, சென்னை-5. விலை ரூ. 20 மட்டுமே. பக்கங்களோ 350.

-எஸ். கருணானந்தம்

## வரப்பெற்றோம்

ஒரு முள் மலராகிறது- ஆசிரியர்: முத்து வேந்தன். வெளியீடு: புன்னகைப் பிரசுரம், செல்லியம்பாளையம், மின்னும்பள்ளி அஞ்சல், சேலம்-14. பக்கங்கள்: 114; விலை ரூ. 3.

பொது அறிவுச் சுடர்- முதல் பாகம். 92 பக்கங்கள். விலை: ரூ. 2-00. இரண்டாம் பாகம். 152 பக்கங்கள். விலை: ரூ. 3-00. வெளியீடு: என். எஸ். ஓ. பப்ளிகேஷன்ஸ் டிவிஷன், 4, சாயி முருகன் தெரு, சென்னை-600049.

எனக்கு ஒரு அவா தோன்றி விட்டது. இந்தத் தியாக புருஷர்கள் தியாகங்கள் நடத்திய மகத்தான புண்ணியத் தலங்களை நான் நேரில் கண்ணாலே காண வேண்டும். அந்த இடங்களுக்கு எல்லாம் நம் கொடவர் வழி காட்டுவாரோ?" என்று கேட்க,

உடனே இரு இளைஞர்களும், "மன்னவ! எங்களுக்கும் அந்த ஆசைதான்! முயன்று பார்ப்போம்!" என்று கூறினார்கள்.

மாலையில் கொடவரை அழைத்து வல்லபன் பல கேள்விகள் கேட்க, அவர் சரியாக உத்தரம் கூற முடியாமல், "பே பே!" என்றே மறுமொழி கொடுத்தார்

எனினும் வல்லபன் அவரை விடாமல் சைகைகள் செய்து, தன் கேள்விகளை அவருக்கு உணர்த்த முயன்றான்.

கொடவரும் ஐந்தாறு நாட்களாய் மனிதர்களுடன் பழக நேர்ந்ததால் தம்மைச் சூழ இயங்கும் மனித நடவடிக்கைகளை ஒரு விதமாய்ப் புரியத் தொடங்கியிருந்தார். இதில் கூட ஓரளவு வரைதான் அவரால் போக முடியும் என்றும், இனி அவர் தமது பூரண அறிவையும், பேச்சையும் ஒரு நாளும் திரும்பப் பெறப் போவதில்லை என்பதையும் வல்லபன் நன்றாக உணர்ந்திருந்தான்.

ஆகவே அவன் ஒரு யுக்தி செய்து கொடவரை ஒரு நாள் காலையில் ஒரு பல்லக்கில் வைத்து திருமலையின் வடக்கே உள்ள மலைமுகடுகளை நோக்கிச் சென்றான்.

பல்லக்கைத் தொடர்ந்து யாதவராயரும் பரிவாரங்களும் வந்தார்கள்.

வடக்கே உள்ள அந்த முகடுகளின் விளிம்புகளில் ஒவ்வொரு பகுதியாகச் சென்று, கொடவரைக் கீழே இறக்கி, அவர் என்ன செய்கிறார் என்பதை உற்றுக் கவனித்தான் வல்லபன்.

பல பகுதிகளைக் காட்டியும் கொடவப் பெரியவர் எந்த வித உணர்ச்சியும் கொள்ளாமல் இருந்தார்.

கடைசியாக உள்ள பகுதியில் சென்று கொடவரைப் பல்லக்கிலிருந்து கீழே இறக்கி, சுற்றிவரப் பார்க்கும்படி வைத்ததில் அங்கும் அவர் எந்தவிதச் சலனமும் இல்லாமல் இருந்தார்.

அதைக் கண்டு ஏமாற்றமடைந்த வல்லபன் இனித் திரும்ப வேண்டியதுதான் என்று நினைத்தான்

அப்போது அவன் கொடவரைப் பார்க்க, அவர் முகம் மாறி இருந்ததைப் பார்த்துத் திடுக்கிட்டான்.

கொடவர் இரண்டு திசைகளை வெறியோடு பார்த்துக் கொண்டிருந்தார். அவர் முகத்தில் ஒரு பெரிய மாறுதல் ஏற்பட்டுக் கொண்டிருந்தது. கண்கள் பெரிதாகி உடம்பு தடதட வென்று வீசி அடித்தது. மார்பில் வியர்வை பொங்கி வந்தது.

திடீரென்று ஒரு ஆவேசம் அவரைத் தாக்கவே, கைகளை மேலே ஆகாயத்தில் தூக்கி, "ஹோ" என்று இரைந்தார்.

வல்லபன், தத்தன், யாதவராயர், பரிவாரங்கள் யாவருமே திடுக்கிட்டு நின்றார்கள்.

-தொடரும்

# இலக்கியச் சிந்தனை

பல்வேறு சிக்கல்களும், நிர்ப்பந்தங்களும் அதிகமாகிவிட்ட இன்றைய நாகரீக உலகில், மக்கள் தங்களுடைய வாழ்வில் தக்க அளவுக்கு அக்கறை கொள்ள முடியாது போயிருக்கிற நிலையைக் காண்கிறோம். சிந்திக்கும் ஆற்றல் கொண்டவர்கள் கூட பெரும்பாலும் இந்தச் சூழ்நிலையில்தான் இருக்க வேண்டியிருக்கிறது. இன்றைய மனித வர்க்கத்திற்கு ஏற்பட்டுள்ள சிதைவுகளுக்கும், பிநிகளுக்கும் முக்கிய காரணம் மக்களின் சிந்தனை, செயல்களிலிருந்து இலக்கியத்தின் தொடர்பு துண்டிக்கப்பட்டதுதான் என்று கூற வேண்டும். அரசியலும் பொருளாதாரமுமே ஆதிக்கம் பெற்று, இலக்கிய உணர்வை வற்ற அடிக்கும் அளவுக்குச் சென்று விட்டது இன்றைய சமூகம்.

இந்நிலையிலும் சிந்தனைக்கு உறுதுணையாய் நின்று, அதை வளப்படுத்தி மனிதனை சீரான வழியில் நடத்திச் செல்ல உதவும் இலக்கிய வகையைச் சேர்ந்த சில நூல்களும், பத்திரிகைகளும் இன்று இருக்கத்தான் செய்கின்றன. இம்மாதிரியே சிந்தனையை வளம் பெறச் செய்யும் சில மன்றங்களும் நல்ல தொரு பணியாற்றி வருவதும் சமூக மேம்பாட்டைப் பற்றிக் கவலைப்படுவோர்க்கு ஆறுதலையும், நம்பிக்கையையும் அளிக்கின்றன. இந்த வகையில் சென்னையில் ''இலக்கிய சிந்தனை'' என்ற பெயர் தாங்கி, அண்மையில் தமிழ்ப் புத்தாண்டு நாளன்று 8-வது ஆண்டு விழாவைக் கொண்டாடிய நிறுவனத்தின் சிறந்த தொண்டினைப் பாராட்டத்தான் வேண்டும். இந்தச் சீரிய தொண்டுக்குக் காரண புருடர்களாகிய திருவாளர்கள் பாரதி, ப. லெட்சுமணன், ப. சிதம்பரம் ஆகிய மூவருக்கும் இலக்கிய உலகம் கடமைப்பட்டுள்ளது.

1970-ம் ஆண்டு பிப்ரவரி 28-ம் நாளன்று துவக்கப்பட்ட ''இலக்கிய சிந்தனை'' மாதந்தோறும் பத்திரிகைகளில் வெளிவரும் சிறுகதைகளிலிருந்து அம்மாதத்தின் சிறந்த கதையை, தேர்ந்த வாசக ரசிகர்களைக் கொண்டு ஆய்வு செய்து சிறந்த சிறுகதைக்கு ரூ 50 பரிசும், பாராட்டு இதழும் அளித்துவருகிறது. ஆய்வு செய்யும் அன்பருக்கும் சன்மானம் அளிக்கப்படுகிறது. இப்படி ஓர் ஆண்டில் பரிசு பெற்ற 12 சிறுகதைகளையும் மீண்டும் ஆய்வு செய்து அக்குறிப்புடன் அவற்றைத் தொகுப்பாக வெளியிடுவதுடன் ஆண்டின் சிறப்புக்



திரு பி. பத்மராஜுவிடம் பரிசுகள் பெறும்

பாரதி, கவிஞர் எஸ். டி. சுந்தரம், பி. பத்மராஜு, ப. லெட்சுமணன்



ஸ்ரீரங்கநாத யாதவராயர் மனம் விட்டுத் தன் நிலையை அந்த இளைஞர்களிடம் கூறினார்.

இளைஞர்கள் மௌனமாக நின்றார்கள். யாதவராயரிடம் ஆர்வம் இருக்கிறது. ஆனால் திரம் இல்லையே என்று நினைத்தார்கள்.

வல்லபன் உடனே அரசரை நோக்கி, ''மன்னவ! தாங்கள் கூறுவதெல்லாம் சரி. அரங்கனுக்குத் தனி மண்டபம் கட்டி அவருக்கு எல்லா விமரிசைகள் அளிப்பது எனக்கும் மகிழ்ச்சியாயிருக்கிறது. ஆனால் இன்னொரு குறை எம் மனங்களில் உள்ளது. சொல்லலாமோ?'' என்று கேட்டான்.

''சொல்லுங்கள்,'' என்றார் மன்னவர்.

''எம் அரங்கனைப்பற்றி நாங்கள் நிறையக்கேள்விப் பட்டிருக்கிறோம். அரங்கத்தில் அவர் ராஜரீதியாகவும், சமய ரீதியாக்வும் அரசு செலுத்தியவர்; அவரது சன்னிதியிலே தீந்தமிழ்ப் பிரபந்தங்கள் எப்போதும் கேட்டுக் கொண்டிருக்கும் என்று சொல்லியிருக்கிறார்கள். அந்தத் தமிழ்ப் பிரபந்தங்களை அரங்கன் பெரிதும் உகப்பர் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். இங்கேயும் அவர் வாசலிலே பிரபந்தங்களைச் சேவிப்பதற்கு வழி செய்ய வேண்டும்'' என்று சொன்னான் வல்லபன்.

யாதவராயர் மெள்ளப் புன்னகையிட்டு,''அப்பா, பிள்ளாய்! இதுதானா உன் வேண்டுகோள்? அவசியம் இதனை நிறைவேற்றுவோம். கவலைப்பட வேண்டாம்'' என்று கூறினார்.

மறுநாள் காலையில் தமிழ்ப் பிரபந்தங்களைக் கோவிலில் பாடுவதற்கான ஏற்பாடுகள் முறையாகச் செய்து வைக்கப்பட்டன.

இதற்காகப் பிரபந்தம் தெரிந்த வைணவர்களைத் திருப்பதியிலிருந்தும் மற்ற ஊர்களிலிருந்தும் தேடிக் கொணர வேண்டி வந்ததால், பிரபந்தங்களைப் பாடும் ஏற்பாடு நடைபெறுவதற்கு மூன்று நாட்கள் ஆயின.

ஆனால் முதல் நாளில் வைணவர்கள் பிரபந்தங்களைப் பாட வரும்போது, கோவிலில் உள்ள பரிசனங்களில் பலர் அதற்கு ஆட்சேபனை தெரிவிக்கவே, பிரபந்தங்களின் சேவிப்பு உடனே நிறுத்தப் பட்டது.

இதைக் கேட்ட இரு இளைஞர்களும் ஆத்திரம் அடைந்தார்கள்.

இந்த நிகழ்ச்சியைச் சரியாக அறிந்து கொள்ளுவதற்கு நாம் அந்நாளில் (பதினான்காம் நூற்றாண்டில்) கோவில்களில் இருநத நிலவரங்களைப் பற்றிச் சற்று அறிய வேண்டும்.

ஆழ்வார்கள் பதினிருவரும் அருளிச் செய்த தீஞ்சுவைப் பாடல்களான திவ்யப் பிரபந்தம் வடமொழியில் உள்ள வேதங்களுக்கு ஒப்பானது என்று எட்டு, ஒன்பதாம் நூற்றாண்டுகளிலேயே அறிஞர்களும் பக்தர்களும் நினைக்க ஆரம்பித்து விட்டார்கள்.

இதன் காரணமாய் கோவில் வழிபாட்டில் தமிழ்ப் பிரபந்தத்தை ஈடுபடுத்த வேண்டும் என்று பலரும் நினைத்து அந்த முயற்சியில் வெற்றியும் பெற்றிருந்தார்கள்.

பதினான்காம் நூற்றாண்டு தொடக்கங்களில் திருவரங்கத்திலேயே இதற்கான எதிர்ப்புக்கள் நிறைய இருந்தன.

பிரபந்தங்களை கோவிலில் பாடலாமா, கூடாதா என்ற விஷயம் தர்க்க ரீதியாக வெகு மும்முரமாக வாதிடப்பட்டது.

அப்போது வேதாந்த தேசிகர் என்னும் வைணவ ஆசிரியர் திருவரங்கத்துக்கு வரவழைக்கப் பட்டார். அவர் வடமொழி, தென் மொழி இரண்டிலும் விற்பன்னர். சகலவிதக் கலைகளையும் சாஸ்திரங்களையும் அறிந்திருந்தார் தமிழ்ப்பிரபந்தங்களை எதிர்ப்பவருடன் அவர் வாதங்களுக்குப் போனார்.



# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

தமது திறமையினாலும், அறிவினாலும், எதிர்ப்புக்காரர்கள் யாவரையும் வாதத்தில் வென்று வாகை சூடினார்.

அதனால் திருவரங்கன் கோவிலில் தமிழ்ப் பிரபந்தங்கள் பாடப்படுவது ஒரு அங்கமாகவே ஆகியது.

திருவரங்கத்தில் கிடைத்த இந்த வெற்றி மற்ற கோவில்களில் மெள்ள மெள்ளத் தொடர்ந்தாலும்

பிரபந்தத்தை வழிபாட்டில் அறவே சேர்த்துக் கொள்ளாத பல கோவில்களும் அந்நாளில் இருந்து வந்தன.

இவற்றுள் திருமலையில் உள்ள திருவேங்கடவர் கோவிலும் ஒன்று.

இந்தக் கோவிலில் வைகானஸ வழிபாட்டு முறைகளைக் கடை பிடித்து வந்தார்கள்.

புராதனமான வடமொழி மட்டுமே வழிபாடுகளில் உபயோகிக்கப்பட்டு வந்தது. தமிழ், தெலுங்கு, கன்னடம் பேசும் அரசர்கள் இந்த கோவிலின் நிர்வாகங்களில் பங்கு கொண்டாலும் கோவிலின் புராதன வழிபாட்டு முறைகளுக்குப் பங்கம் ஏதும் இல்லாமல் பாதுகாத்து வந்தார்கள்.

இவ்வித மரபுகள் வளர்க்கப்பட்ட கோவிலில் அரங்கனுக்காக தமிழ்ப் பிரபந்தம் பாடுவதற்கான ஏற்பாடுகளைச் செய்தபோது அதை கோவிலாரும், பரிசனங்களும் கண்டிப்பான முறையில் ஆட்சேபித்தார்கள்.

இந்த நிகழ்ச்சிகளை அறிந்த போது இரு இளைஞர்களுக்கும் ஆத்திரம் பொங்கி வந்தது.

''இதென்ன? அரங்கனுக்காகத் தமிழ் மறையைப் பாடுவதில் இவர்களுக்கு என்ன வருத்தம்? அவருக்கு தமிழ்ப் பிரபந்தம் உகந்தது என்றால் அதைப் பாட வைப்பதுதானே முறை!'' என்று விவாதித்தார்கள்.

கோவில் பரிசனங்களோ அவர்கள் சொல்லை ஏற்றுக்கொள்ளச் சித்தமாகவே இல்லை.

இதனை அறிந்த வல்லபன் தத்தனைப் பார்த்து, ''தத்தா! அரங்கனுக்கு தமிழ்ப் பிரபந்தம்தான் அமுது என்றால், அந்த அமுதத்தை அவருக்கு வழங்காமல் இருப்பது அவரைப் பட்டினி போடுவதற்கு சமானம் ஆகும்! அரங்கர் உண்ணாதிருந்தால் நமக்கு அழகாகுமோ! ஆகவே நானும் இந்தக் கோவிலடியிலே உபவாசம் இருப்பேன்!'' என்று கூறி

சுவாமி புஷ்கரணிக்குச் சென்று கை கால்களை சுத்தம் செய்து அங்கே மண்டபத்துள் அமர்ந்து ஆனந்த நிலைய விமானத்தை நோக்கி உபவாசம் இருக்க ஆரம்பித்தான்!

ஏழு நாட்கள் ஓடியும், பரிசனங்கள் மனம் இறங்காமல் இருக்கவே, பதைத்துப் போன தத்தன் யோசனை பண்ணினான்.

கீழே சந்திரகிரிக்குப் போயுள்ள யாதவராயரை உடனே மேலே வரவழைக்க எண்ணி, துணிச்சலுடன் மலை மீதுள்ள கண்ட மண்டபத்திற்குச் சென்று, வேளையில்லா வேளையில் அந்த மணியை பலத்தோடு அசைத்து விட்டான்.

அவன் எதிர்பார்த்தது நடந்து விட்டது. மணி யோசயைக் கேட்ட யாதவராயர் என்னவோ ஏதோ



என்று நினைத்து டோலாவில் ஏறி, மாலை நேரத்துக்குள் திருமலை வந்து சேர்ந்தார்.

நடந்தவைகளை எல்லாம் கேள்விப் பட்டதும், பரிசனங்களை அழைத்து,

''பெரியீர்காள்! இதென்ன? யாதவகுலத்தார் சொல்லுக்கும் மறு சொல் உண்டோ? இந்தத் திருமலை கோயிலை யாதவகுலந்தானே மீளவும் உன்னதமாக்கிக் கொண்டு வந்திருக்கிறது. அன்றாட வழிப்பாட்டுக்குக் கூட வழியில்லாமல் இருந்த சமயம் என் முன்னோர்கள் தானே இந்தக் கோவிலை மீண்டும் சீரமைப்புச் செய்ய ஆரம்பித்தார்கள். அப்படிப்பட்ட யாதவகுல அரசரின் கட்டளையை நீங்கள் நிறைவேற்ற வேண்டாமோ? நம் கிருகத்திற்கு ஒரு விருந்தாளி வந்தால் அவருக்குகந்த வழியில் அவரை வரவேற்பது தானே நம் கடமை! இது நமது தர்மமும் அன்றோ! ஆகவே இந்தச் சீமையை ஆளும் மன்னன் என்றதால் உங்களிடம் கேட்டுக் கொள்கிறேன். கோவிலிலே தமிழ்ப் பிரபந்தம் சேவிப்பதற்கு தடங்கல் செய்ய வேண்டாம்'' என்று கூறினார்.

அதைத் தொடர்ந்து பரிசனங்களிடையே ஒரு விவாதம் எழவே, சிறிது நேரம் வரை முணு முணுப்புகளே காதில் கேட்டன.

உடனே மன்னர், ''பெரியீர்காள்! உங்களிடம் மிகவும் நயந்து கேட்டுக் கொண்டேன். நீங்கள் சீக்கிரம் முடிவு காண்பதாய் இல்லை. இனி நான் இடுவது கட்டளைதான். இதை நீங்கள் நிறைவேற்றித்தான் ஆக வேண்டும்'' என்று சினந்து கூறினார்.

அவ்வளவில் பரிசனங்கள் அவர் காலடியில் வீழ்ந்து க்ஷமை கேட்க, பொறுமையுடைய மன்னரும், ''பொறுத்தோம்!'' என்று சொல்லிவிட்டு, நேரே புஷ்கரணி அருகிலுள்ள மண்டபத்திற்கு உடனே சென்றார்.

அங்கே நலிந்தும் மெலிந்தும் கல் தரையின் வெறுமையிலே கிடக்கும் வல்லபனைப் பார்த்து, நாவும் நெஞ்சும் தழதழக்க,

''பிள்ளாய்! என் அருமைப் பிள்ளாய்! நான் பிள்ளை இல்லாதவன். உன்னைப் பார்த்தால் என் பிள்ளை என்று தான் நினைக்கிறேன். என் அன்பான பிள்ளாய்! நீ இப்படி உபவாசம் இருக்கலாமோ? இந்த யாதவச் சீமையில் நியாயத்தை வேண்டி ஒருவர் உபவாசம் இருந்தார் என்றால் அது எமக்கு அவமானமன்றோ! எனக்குச் சொல்லிவிட்டால் வந்திருப்பேனே! உபவாசம் இல்லாமலேயே உன் எண்ணங்களைப் பூர்த்தி செய்திருப்பேனே! பிள்ளாய், உன் மனோரதம் எல்லாம் நான் நிறைவேற்றிவிட்டேன். இந்தா என் கையாலேயே இந்தத் தேனை அருந்துவாய்! உனக்கு மங்களம் உண்டாகட்டும்!'' என்று கூறினார்.

அவர் கூறுவதைக் கேட்ட வல்லவன் ஈனமான குரலில்,

''மன்னவ! இந்த எளியவனின் எண்ணங்களைப் பூர்த்தி செய்ததில மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ஆனால் ஒன்று தங்களிடம் சொல்லவேண்டும்'' என்று கூறினான்.

''சொல்வாய், அப்பா!'' என்றார் யாதவராயர்.

''மன்னவ! தமிழ்ப் பிரபந்தங்களை கோவிலில் சேவிக்க வழி வகுக்க வேண்டும் என்பதற்காகத் தான் உபவாசம் இருந்தேன்! ஆனால் யோசிக்க யோசிக்க இன்னுமோர் எண்ணமும் தோன்றிவிட்டது. எங்கள் அரங்கன் இப்படி ஒரு அனாதைப் போல் திரிவதால் தானே அவருக்கு இந்த அவமானங்கள் எல்லாம் ஏற்படுகின்றன? எங்கள் அரங்கன் திருவரங்கத்திற்கே போய்விட்டால் இந்த அவமானங்கள் எதுவும் ஏற்படாது அல்லவோ! அவர் அங்கே போவதற்கு தடையாக இருப்பது எது? அரசர்களின் ஒற்றுமையின்மை தானே! சம்புவராயர், யாதவராயர், கன்னடர்கள், தெலுங்கர்கள், விஜயநகர மண்டலத்தார் எல்லோரும் ஒன்று சேர்ந்தால் மதுரையிலே சுல்தானை அழித்து விடலாம் அன்றோ! அது செய்யாது எல்லோரும் வாளா

விருப்பது தர்மமோ? முறையோ? எல்லோரும் கூடி முயற்சி எடுக்க வேண்டாவோ?

ஆகவே, யோசித்து நான் ஒரு முடிவு செய்தேன். இம்மன்னர்கள் எல்லோரும் கூட வேண்டும். மதுரை மீது படை எடுக்க வேண்டும். இந்தக் காரியத்திற்காக இங்குள்ள மன்னர்களில் யாராவது ஒருவர் உறுதி எடுத்துச் சபதம் எடுத்தால்தான் என் உபவாசத்தை நிறுத்துவேன். இல்லாவிடில் நான் இறந்துவிடுவதே மேல்! அரங்கனுக்கு மேலும் மேலும் துன்பங்களும் கஷ்டங்களும் ஏற்பட என் மனம் சகியாது மன்னவ! இது உறுதி!'' என்று கூறினன்.

அவனது குரலில் கேட்ட ஆவேசத்தைக் கண்டு மன்னர் திடுக்கிட்டார்!

உடனே அவர், ''பொறு, பொறு பிள்ளாய்! அவசரப்பட்டு முடிவு எடுக்காதே! நான் சொல்வதைக் கேள்! நீ இப்போது மன்னர்களை வரிசையாக அடுக்கிக்கொண்டு போனுயே, அவர்களில் சம்புவராயரைத் தவிர, ஏனைய பேரெல்லாம் விஜயநகர மண்டலத்தாருக்கு அடக்கம்! மதுரையைக் கைப்பற்றவேண்டும் என்று ஒருவர் முடிவெடுக்க வேண்டுமானல் அது விஜயநகர மண்டலத்தார்தான்! மீதி பேராகிய நாங்கள் முடிவெடுக்க அருகதை அற்றவர்கள்! ஆகவே பிள்ளாய் நன்கு யோசனை செய்! அவசரப்படாதே!'' என்று கூறினர்.

அதற்கு வல்லபன், ''மன்னவ, நான் ஏற்கனவே முடிவு செய்து விட்டேன். இதை இனி மாற்ற ஒண்ணுது!'' என்று துணிந்து கூறினன்.

திடுக்கிட்ட அரசர், ''பிள்ளாய்! யாது காரியம் செய்தாய்! இப்படி நீ உறுதி எடுக்கலாமோ! விஜயநகரக்காரர்களுக்கு உன் உபவாசத்தைப் பற்றி அறிவிக்க வேண்டாமோ? அறிவித்தாலும் அவர்கள் யோசனை பண்ண அவகாசம் தர வேண்டாமோ! இப்படித் திடும்பிரவேசக் காரியமாய் நீ உபவாசம் இருக்கலாமோ?'' என்று கேட்டார்.

உடன் வல்லபன், ''மன்னவ! நானும் யோசனை பண்ணித்தான் உபவாசம் தொடங்கினேன். எண்ணம் ஈடேறும் என்று நம்பிக்கையில் தொடங்கவில்லை. அரங்கர் இப்படி நிர்கதியாக இருக்கிருரே, அனுதையாக இருக்கிருரே என்ற ஆற்ருமை தான் என்னை இந்த உறுதியை எடுக்க வைத்தது. இதில் என் உயிருக்கே முடிவு வந்தாலும் பாதகமில்லை. ஒரு எண்ணத்தை காற்றிலே தூவி விதைத்தால் அது எங்கேயாவது முளைத்து எழுகிறதா பார்ப்போம், இந்த ஆசையால் தான் இப்படி ஒரு தீர்மானத்திற்கு வந்தேன். நான் தவறு செய்திருந்தாலும் இதை மாற்றுவதற்கு வழியில்லை பிரபோ'' என்று கூறினன்.

உடனே மன்னர், ''பிள்ளாய் விஜயநகரம் வரை ஒருவர் போய்வருவது என்ருல் பதினைந்து நாட்கள் ஆகுமே! போய் வரக் கூட அவகாசம் தர வேண்டாமா?'' என்று கேட்டார் மன்னவர்.

உடன் வல்லபனும், ''மன்னவ! எனக்கு என்ன மறுமொழி கொடுப்பதென்றே தெரியவில்லை. முடிவு எடுத்து விட்டேன். அதை நிறைவேற்ற முடிந்தால் நிறைவேற்றுவது உம் போன்ற மன்னர்களின் முடிவு!'' என்று கூறிக் கண்களை மூடினன்.

அன்றிரவே யாதவராயர் நான்கு தூதர்களை அழைப்பித்து உயர்ந்த ஜாதிக் குதிரைகளை அவர்களிடம் கொடுத்து தக்கபடியான ஒரு ஓலையும் எழுதி விஜயநகர அரசரான புக்கராயருக்கு அனுப்பிவைத்தார்.

மறுநாள் என்ன நடந்ததோ என்று தவித்துப்போய் அரசர் புஷ்கரணிக்கு வந்து மண்டபத்தைப் பார்க்க,

அங்கே, கண்கள் தாமாக மூடியிருக்க, கைகள் குச்சிகளாய் கீழே துவண்டிருக்க, மேலே எலும்புகள் கூடுகளாய் பரிணமித்திருக்க, உடுத்திய ஆடை பிடிப்பில்லாமல் நெகிழ்ந்திருக்க, உதடுகள் உலர்ந்து போய் வெடித்திருக்க, கண்டத்தில் மெல்லிதான மூச்சுகளோடு வல்லபன் கீழே கிடப்பதையும் —

அவனருகிலே கைகளை நெஞ்சில் கோர்த்து, கண்களில் நீராய்ச் சொரிந்து துக்கம் பொங்கியவனுய் தத்தன் நிற்பதையும் காண நேர்ந்தது.

''பிள்ளாய்! பிள்ளாய்!'' என்று அவர் பல முறை அழைக்க வல்லபனிடமிருந்து மறுமொழி வரவில்லை.

''மன்னவ, நினைவு பிசகி விட்டதே!'' என்று பொறுமலுடன் தத்தன் சொல்ல,

புடைத்து எழுந்த மன்னவர் ஸ்தம்பித்து நின்று, கண்களில் தாரைகள் வழிய மெள்ள முன்னுல் குனிந்து,

''அப்பா! பிள்ளாய்! யாது செய்தாய் நீ! யாது செய்தாய்?'' என்று கேட்டு,

மெள்ள தம் இரு கைகளாலும் ஆதரவாக, அணைவாக வல்லபனை அள்ளி எடுத்து,

அவனைத் தன் ஈரம் வழியும் கண்களால் சோகத்தோடு நோக்கி,

''பிள்ளாய், பிள்ளாய்! நீ இப்படிச் செய்யலாமோ! எம்மை இப்படித் தவிக்க விடலாமோ?'' என்று கூறி தம் மார்போடு அவனை அணைத்துக் கொண்டு விழி நீர் தெறித்து ஒழுக மெள்ள மெள்ள நடக்கத் தொடங்கினர்.

—தொடரும்

---

# பே... பே... பேட்டி?



''உங்கள் வயது?''

''114.''

''என்ன 114-லா?''

''ஆமாம். உண்மையான வயசுதான். நம்புங்கள்.''

''இதுவரை எத்தனை படங்களில் நடித்திருக்கிறீர்கள்?''

''சுமார் முன்னூறு இருக்கும்.''

''உங்களுக்கு மிகவும் பிடித்த படம் எது?''

''சமீபத்தில் நான் நடித்து வெளியான '116 வயதினிலே'!''

''எப்படி நடிகையானீர்கள்?''

''காட்டில் அலைந்து கொண்டிருந்த என்னைப் பிரபல படத் தயாரிப்பாளர் பூதசிங் கண்டார். அழைத்து வந்து நடிகையாக்கினர்.''

''படவுலகில் நீங்கள் என்ன சாதிக்க விரும்புகிறீர்கள்?''

''இன்னும் ஆயிரம் ஆண்டுகள் நானே ரசிகர்களின் கனவுக் கன்னியாக இருக்க விரும்புகிறேன்.''

''உங்களுக்குப் பிடித்தமான பொழுது போக்கு என்ன?''

''ஓய்வு நாட்களில் நகருக்கு வெளியே யாருமில்லாத மாளிகையில் தங்கியிருப்பது.''

''உங்கள் ஆசை என்ன?''

''தமிழ்நாட்டின் சிறந்த 'பேய் நடிகை' என்ற பட்டத்தைப் பெறுவதுதான் என் ஆசை. அதற்காகவே நள்ளிரவு வரை ஒவ்வொரு நாளும் உழைக்கத் தயார்!''

(ஒரு பேய் தந்த பேட்டி)

- பொன். அருணசலம்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

திருமலைக் கோவிலில் இருந்து புறப்பட்டு வடக்கு முகமாகச் சென்று, அனந்தமான காடுகளையும், சிற்றாறுகளையும் சுனைகளையும் கடந்து, ஏற்றம் இறக்கங்களில் ஏறி இறங்கி, இரண்டு நாழிகை பிரயாணம் செய்து அந்த மலை விளிம்பிற்கு வல்லபனும், தத்தனும் யாதவராயரும், கொடவரும் ஏனையவர்களும் வந்திருந்தார்கள்.

அந்த இடத்திலே நின்ற கொடவப் பெரியவர் அரண்ய விஸ்தீரணம் முழுவதையும் ஒரு வீசலாய்ப் பார்த்து, ''ஹோ'' என்று இரைந்ததும் வல்லபனுக்கும் மற்றவர்களுக்கும் தூக்கிவாரிப் போட்டது.

இங்கேதான் ஏதோ விசேஷம் இருக்க வேண்டும் என்று நினைத்து, வல்லபன், கொடவப் பெரியவரின் அருகில் வந்து, ''என்ன விஷயம்?'' என்று கேட்பது போல் பலமுறை சமிக்ஞை செய்தான்.

கொடவரும் பாதி சிரிப்பதும் பாதி அழுவதுமாய் இருந்து விட்டு வல்லபனது இழுப்புக்கு இணைந்து கொண்டு முன்னால் சென்றார்.

சிறிது தூரம் சென்றதும் ஆவேசம் வந்தவர் போல் ஒரு இடத்தைக் குறித்து, ''இதுதான் இதுதான்'' என்பது போல் அபிநயித்தார்.

அந்த இடத்தைத் தோண்டிப் பார்க்க அங்கே இரண்டடி ஆழம் போன பின், மண்ணில் மட்கிய தங்கக் கிரீடமும், பொன் நகைகளும், பொற் காசுகளும் கிடப்பதைக் கண்டு அதிசயித்தார்கள்.

வல்லபனும் மன்னரை நோக்கி, ''மன்னவ இவை அந்தக் கொடவர்கள் புதைத்து வைத்தவை! இவற்றைப் புதைத்த பிறகுதான், மூத்த கொடவர் தம்மைக் கொடிகளால் பிணைத்துக் கொண்டு அரங்கனோடு சரிவில் உருண்டார்'' என்று கூறினான்.

அச்சமயம் அந்தக் கொடவப் பெரியவர் முகட்டிலிருந்து விறுவிறு என்று கீழ்நோக்கி இறங்கலானார்.

மற்றவர்களும் சிரமப்பட்டுக் கொண்டு அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

சரிவில் இறங்க இறங்க கண்ணுக்கினிய காட்சிகள் விரிந்து கொண்டே போயின.

மரகதப் பச்சை நிறத்தில், மனிதர்கள் படாத காடுகள் செழுமையாய் அடர்ந்து பசேர் என இலைகளையும் தழைகளையும் ஒளிர்வித்துக் காட்டிக் கொண்டு இருந்தன.

பலாசம், புன்னை, சுரபுன்னை, குங்குலியம், தேக்கு, செஞ்சந்தனம், வாகை, மருது, ஆச்சா, வாழை, மா, பின்னைமருது, மஞ்சள்நாறி என்ற பல வகை மரங்கள் தறி கெட்டு எங்கும் அடர்ந்து வளர்ந்திருந்தன.

மலர்களின் வாடை குளிர்ச்சியாகவும் திரள் திரளாகவும் எங்கும் வீசியது.

அப்படிப்பட்ட ரம்மியமான சூழலில் கீழே சரிவாக இறங்கி அதல பாதாளத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார் கொடவப் பெரியவர்.

எண்பது பிராயத்தில் அவர் அப்படி விரைவாக இறங்குவதைப் பார்க்கப் பார்க்க மற்றவர்களுக்கு ஆச்சரியமாக இருந்தது.

ஒரு *நாழிகை நேரமாக இறங்கிக் கடைசியில் அடிவாரத்தை அடைந்தார் அந்தப் பெரியவர்.

மற்றவர்களும் அவரைப் பின்பற்றிக் கீழே வந்து சேர்ந்தார்கள்.

இறங்கி இருந்த இடம் குறுகலான ஒரு பள்ளத்தாக்காக இருந்தது. அதன் இரு புறங்களிலும் பெரிய அரண்போல் மலைத் தொடர்கள் எழுந்து வானைத் தொட்டுக் கொண்டு நின்றன.

அந்த இடத்தில் நின்று கொண்டு கொடவர் சுற்றி வர ஊன்றிக் கவனித்துப் பார்த்தார். பிறகு சமிக்ஞை செய்து அவர்களை மேலே வரும்படி அழைத்தார்.

மிகக் குறுகலானதும், இரு பக்கமும் மரங்கள் செழித்து வளர்ந்ததுமான தடத்தில் எல்லோரும் கஷ்டப்பட்டுச் சென்றார்கள்.

போகப்போக ஒரு நீர்வீழ்ச்சியின் சத்தம் தோன்றிப் பெரிதாகிக் கொண்டே வந்தது. அந்த இடத்தை அடைந்தபோது ஒரு பரந்த காட்சி அவர்கள் கண்களில் இனிமையாக விழுந்தது.

நீர் வீழ்ச்சி ஒன்று அலை அலையாக நீரை உயரத்திலிருந்து வர்ஷித்துக் கொண்டிருந்தது.




திருமலை கோவிலின் அமைப்பை விளக்கும் வரை படம்.

கீழே வீழ்ந்த நீர் பாறைகளில் ஆழமான மடுக்களை ஏற்படுத்திக் கொண்டு சலசலத்து ஸ்படிக நிறத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

மடுக்களில் ஏராளமான மீன் வகைகள் துள்ளி விளையாடிக் கொண்டிருந்தன.

ஒரு புறம் பார்த்தால் அங்கே ஒரு குகையின் வாயில் தெரிந்து கொண்டிருந்தது.

(இந்த நீரோட்டப் பகுதி இப்போது தும்புரு கோனு என்று வழங்கப்படுகிறது)

நீரோட்டத்தோடு ஓரமாகச் சென்று ஒரு புறத்தை அடைந்ததும், கொடவர் திடீரென்று நின்றார்.

அங்கே கூழாங்கற்களால் சச் சதுரமாகப் பரவப் பட்டிருந்த ஒரு இடத்தைத் திடீரென்று அவர் இனம் கண்டு கொண்டு, வல்லபன் கைகளைப் பிடித்தவராய், ''இதுதான்! இதுதான்!'' என்பது போல அடையாளம் காட்டினார்.

அந்த இடந்தான் மூத்த கொடவரும் அரங்கனும் உருண்டு விழுந்த இடம் என்றும், அதனை நினைவூட்டுவதற்காக கொடவர் அந்த வெள்ளைக் கற்களை அங்கு பரப்பி யிருந்தார் என்றும் வல்லபன் அறிந்து கொண்டான்.

அதை எல்லோரிடமும்அறிவித்தபோது திடுக்கிட்டு அந்த பூமியைப் பார்த்தார்கள்.

எல்லோர் மனங்களிலும் அந்தப் பரிதாபமான காட்சி உதித்து, கண்களில் தாரையாக நீரை வர வழைத்தது.

கண்களில் விநயமும், பக்தியும் கனக்க, கீழே மெள்ளக் குனிந்து அந்தப் புண்ணியத் தலத்தினின்றும் மண்ணை எடுத்து தம் சிரம் மேல் சிரத்தையுடன் வைத்துக் கொண்டார் யாதவராயர்.

பிறகு பிரதானியை அழைத்து, ''இந்த இடம் மிகப் புனிதமானது. கொடவரின் தியாகத்தை நினைவூட்டுவதற்காக இங்கே ஒரு மண்டபம் கட்டுவோம். அதற்கு ஆவன செய்யுங்கள்'' என்று கூறினார்.

''உத்தரவு பிரபோ!'' என்றார் பிரதானி.

வல்லபன் மேலே மலை உச்சிகளை அண்ணாந்து பார்த்து, ''பாருங்கள், மன்னவ!'' என்று கூறினான்.

''அந்த மலை உச்சி பாம்பு படம் எடுத்தாற் போல் இருக்கிறதே! அதிலிருந்துதான் மூத்த கொடவர் கீழே உருண்டார்'' என்று கூறினான்.

மன்னவர் மேலே உற்றுப் பார்க்க உயரத்திலே அந்த மலை முகடு பாம்பு படம் எடுத்தாற் போல் ஒரு தோற்றத்தைக் காண்பித்தது.

இருவர் கண்களிலும் நீர்ஊறியது. ''ஆகா! என்ன துணிச்சல்! என்ன தைரியம்? என்ன தியாகம்? இந்தச் சரிவிலே ஒருவர் உருண்டால் பிழைக்க முடியுமா'அப்படியும் அந்த சாகசத்தைச் செய்தாரே மூத்த கொடவர்!'' என்று பிரலாபித்தான் வல்லபன்.

''இதில் இன்னொரு விசேஷம் பார்! அந்தக் கொடவர் வேண்டுமென்றே திருமலைக் கோவில் இருக்கும் இடத்தை விட்டு இந்தப் பக்க மலையைத் தேர்ந்தெடுத்தார். இதன் மூலம் துருக்கியப் படைகளுக்குத்திருமலைக் கோவிலைக் காட்டிக் கொடுக்காமல் இருந்திருக்கிறார். என்னே அவரது கூரிய புத்தி!'' என்று கூறினார் யாதவராயர்.

பிறகு எல்லோரும் அந்த தீர்த்தக் கரையில் தங்கி, சிரமப் பரிகாரம் செய்து கொண்ட பின்னர் திருமலைக்கு மீண்டும் புறப்பட்டார்கள்.

---

யாதவராயர் கட்டிய இந்த மண்டபம் இன்னும் இருந்து வருகிறது. தும்புரு கோனுவின் நீர் இநத மண்டபத்தின் இரு மருங்கிலுமே இப்போது சலசலத்து ஓடுகிறது.



திருவேங்கட முடையான் இருக்கும் திருமலை அந்நாளில் ஒரு சிற்றூராகத்தான் இருந்தது. மிகச் சில பரிசனங்களும் பக்தர்களுமே அங்கே நிரந்தரமாகத் தங்கி இருந்தார்கள். மிகச் சில வீடுகள்தான் மலை மீதும் இருந்தன.

அந்நாட்களில் திருமலை மீது வசதிக் குறைவு மாத்திரமல்ல. விஷ நோய்கள் மனிதரை அவ்வப்போது துன்புறுத்திக் கொண்டிருந்தன. இதன் காரணமாக அர்ச்சகர்களில் பலர் கூடக் கீழே அடிவாரத்தில் தங்கினார்கள். இவர்களும் மற்ற பரிசனங்களும் தங்குவதற்கு என்றே இராமானுஜர் அடிவாரத்தில் திருப்பதி

என்னும் தலத்தைத் தோற்றுவித்திருந்தார். (திருப்பதி என்னும் பெயரைச் சூட்டியவரும் அவர்தான்).

மலைமீது வசதிக் குறைவுகளைப் பொருட்படுத்தாமல் கடவுளுக்குச் சேவை செய்வதே குறியாகக் கொண்ட தொண்டர்கள் பலர், அந்நாட்களில் திருமலைக்கோவிலைச் சுற்றித் திருநந்தவனங்கள் அமைத்து அவற்றைச் செவ்வையாகத் திருத்திப் பாடுபட்டு, திருவேங்கடமுடையானுக்கு அன்றாடம் புஷ்பங்களையும், கனி வர்க்கங்களையும் சமர்ப்பித்து வந்தார்கள்.

இவர்களது திருநந்தவனங்கள் அந்நாளில் கோவிலைச் சுற்றித்தான் நிறைய இருந்தன.

இந்த நந்தவனங்களில் யாத்ரிகர்கள் தங்குவதற்கு என்று சில மண்டபங்களும், மடங்களும் இருந்து வந்தன.

கோவிலின் மேற்கே உள்ள வண்சடகோப திருநந்தவனத்திலே ஒரு மடத்தினுள் வல்லபனும், தத்தனும் தங்கிக் கொண்டார்கள். (இந்த நந்தவனம் இருந்த இடத்தில் தற்போது அகோபில மடம் இருக்கிறது).

பல மாதங்களாக ஓய்வில்லாமல் சுற்றிய அவர்கள் அந்தத் திருமலை பர்வதத்தின் மேலே சில நாட்கள் நிம்மதியாகத் தங்கித் தங்கள் களைப்பை எல்லாம் ஆற்றிக் கொள்ளத் தலைப்பட்டார்கள்.

அவர்கள் அப்படித் தங்கியதற்கு மற்றொரு காரணமும் இருந்தது.

இரு இளைஞர்களும் தங்கள் ஆயுளில் அரங்கனைப் பார்த்ததில்லை. இப்போதுதான் முதன் முறையாகப் பார்க்கிறார்கள். தினமும் மூவேளைகளிலும் அவரைக் காணக் கொடுத்து வைத்ததே அவர்களுக்குப் பெரும் பேறாகத் தோன்றியது.

தவிர, அது நாள் வரை ஒரு கோவிலில் முறையாகப் பூஜை நடப்பதைப் பார்த்ததே இல்லை.





நள்ளிரவில் ஆறு வயது அம்பி விழித்துக்கொண்டு, "அம்மா! எனக்குக் கொஞ்சம் தண்ணி கொண்டு வா" என்றான்.

"பேசாமல் தூங்கு. தொந்திரவு செய்தால் பிரம்பை எடுத்துவந்து அடிப்பேன்" என்று அவன் தாய் மிரட்டினாள்.

"அம்மா! பிரம்பு கொண்டுவரும் போதாவது கையோடு தண்ணீரும் கொண்டு வந்து விடு அம்மா!" என்றான் பயல்.

-பாரூக்

கோவிலில் தூப தீபங்கள் சமர்ப்பிப்பது, அமுது படைப்பது, மந்திரம் ஓதுவது, மணி அடிப்பது, திருமஞ்சனம் செய்வது ஆகிய எல்லாக் காரியங்களையுமே அவர்கள் பார்த்ததில்லை.

ஆகவே திருமலைக் கோவிலில் அனைத்தையும் முதன் முறையாகப் பார்ப்பதில் அவர்களுக்கு மிகுந்த சந்தோஷம் எழுந்துகொண்டு இருந்தது.

மேலும் திருமலையில் பழங் காலத்திலே குடியிருந்து, வேங்கடவருக்குச் சேவை செய்த பழைய ஆசிரிய புருடர்களின் திருமாளிகைகளைக் காணவும் அவர்களுக்குக் கொடுத்து வைத்தது.

கோவிலின் தென் புறத்திலே (தற்போதைய தெற்கு மாட வீதி) உள்ள மண்டபத்தில் மண்ணால் சுவர் தடுத்து திருமலை நம்பி என்னும் பெரியவர் வாழ்ந்த திருமாளிகையை அவர்கள் கண்டார்கள். (இராமானுஜருக்கு மாமன்தாம் திருமலை நம்பி. பத்தாம் நூற்றாண்டு இறுதியில் வாழ்ந்தவர். இராமானுஜருக்கு இராமாயணத்தின் தத்வார்த்தங்களைக் கற்பித்தவர்)

அது போலவே தெற்கே சற்றுத் தள்ளி, (தற்போது தெற்கு மாட வீதி, மேற்கு மாட வீதியைச் சந்திக்கும் இடத்தில்) திரு அனந்தாழ்வாரின் திருமாளிகையையும் அவர்கள்கண்டார்கள். (இராமானுஜரின் பிரசித்தி பெற்ற சீடரான அனந்தாழ்வார் பதினோராம் நூற்றாண்டின்இறுதியில் வாழ்ந்தவர்)

இன்னும் திருச்சுகனூரைச் (இந்நாளில் திருச்சானூர் என்று பெயர்)சேர்ந்த ஆசாரியர்கள் பலருடைய மாளிகைகளும் மலை மீது இருந்தன.

இவைகளை எல்லாம் தரிசித்து, தங்கள் சமயத்தின் பழம்பெருமைகளை நினைத்து சந்தோஷப்படும் நேரத்தில், அந்த இளைஞர்களின் மனத்தில் ஒரு துக்கமும் இழையூடி ஓடிக் கொண்டிருந்தது.

திருமலையைப் போன்று பிரசித்தமாகத்தானே திருவரங்கமும் இருந்திருக்க வேண்டும்! திருமலையை விடக் கூட மகத்தான பெருமைகளைப் பெற்ற ஊராயிற்றே! ஆழ்வார்களும், ஆசிரியர்களும் உகந்ததோர் இடம் அல்லவா அது! அந்தத் திருவரங்கத்தை இன்னும் கண்ணால் பார்க்கக் கொடுக்கவில்லையே! அந்நியர் ஆட்சியில் அது பாழடைந்து வருகிறதே! அதை மீட்டித் தருவார் யாரும் இல்லையே!

இப்படி நினைக்குங்காலையில் அரங்கனது தற்போதைய கதி கூட அவர்களுக்குத் தாங்கொணாத துக்கத்தைத் கொடுத்தது.

ஒரு அகதி போல் இந்தத் திருமலையில் அவர் குடி வந்திருக்கிறார்.

யாருடைய நிழலிலோதானே அவர் தங்கி இருக்கிறார்.

திருவரங்கத்தை விட்டு முப்பத்து மூன்று வருடங்களாக இந்த கதி தானே அரங்கருக்கு இடையறாது இருந்து வந்திருக்கிறது?

இதைக் கவனிப்பார் யாருமில்லையா?

இப்படிப் பல எண்ணங்கள் தோன்றத் தோன்ற இரு இளைஞர்களுக்கும் யாதவராயர் மீதுதான் ஆத்திரம் பொங்கி வந்தது.

இவரும் ஒரு மன்னரா? பல பேரரசர்களிடம் சிற்றரசராக இருந்து போர்களில் வெற்றி வாங்கிக் கொடுத்தேன் என்கிறாரே?

இவர் ஏன் மதுரை மீது படையெடுக்கக் கூடாது?

மனம் வைத்தால் இவரால் நிச்சயமாக முடியும்.

மனம் வைக்கவில்லை. அவ்வளவுதான்!

இது போன்று அவர்கள் இரு வாரமாக நினைத்து மனத்தில் குமுறி ஒரு நாள் காலையில் அவர்கள் நேராக யாதவராயரைச் சந்தித்து தங்கள் உள்ளக் குமுறல்களைக் கூறினார்கள்.

அதைக் கேட்ட யாதவராயர் ஆச்சரியப்பட்டார். பிள்ளைகள் இருவரையும் அழைத்துக்கொண்டு திருமலைக் கோவிலுக்குள் போனார். அங்கே முன் பகுதியில் அரங்கருக்காகக் கட்டப்பட்டு வரும் மண்டபத்தின் ஆரம்ப வேலைகள் நடப்பதைக் காட்டினார்.

பின்னால் அவர்களை உள்ளே அழைத்துச் சென்று வரதராஜர் சந்நிதியையும், நரசிம்மர் சந்நிதியையும் காண்பித்தார்.

"இதை எதற்கு எங்களுக்குக் காட்டுகிறீர்!" என்று இளைஞர்கள் வினவ,

"தென்னாடுகள் மீது டில்லித் துருக்கியர்கள் படை எடுத்து வந்தபோது, காஞ்சி வரதராஜரும், அகோபிலம் நரசிம்மரும் இங்கே வருவார்கள் என்று நினைத்தேன். அதற்கு முன்னேற்பாடாக இந்த சந்நிதிகளைக் கட்டி வைத்தேன். ஆனால் அவர்கள் வரவில்லை. திருவரங்கத்து அரங்கருக்கு நான் முன்னேற்பாடு எதுவும்செய்யவில்லை. ஆனால் அவர் வந்துவிட்டார். அவருக்காக இதோ உடனே மண்டபம் கட்ட ஏற்பாடு செய்து விட்டேன். என்னால் செய்யக் கூடியதெல்லாம் இவ்வளவுதானே! பிள்ளைகாள்! இதற்கு மேலே எதுவும் செய்வதற்கு நான் அசக்தன் அன்றோ, எனக்கு வயதும் ஆகிவிட்டதே!" என்றார் யாதவராயர்.

இளைஞர்கள் இதைச் கேட்டு மௌனமாக நின்றார்கள்.

"பிள்ளைகாள்! நான் உள்ளூற நோய் வாய்ப்பட்டிருக்கிறேன் என்பது உங்களுக்குத் தெரியாதோ? நீண்ட பயணம் செய்வதற்கு நான் அசக்தன்! வேங்கடவன் மலையிலேயே இறக்க எண்ணித்தான் இங்கேயே எனக்கு ஒரு அரண்மனைக் கட்டிக் கொண்டு விட்டேன். இதுவும் தெரியாதோ?" என்று கேட்டார். —தொடரும்.

கடந்த மாதம் புதுடில்லியில் 25வது தேசிய திரைப்பட விழாப் பரிசுகளை ஜனாதிபதி திரு என். சஞ்சீவ ரெட்டி வழங்கினார். அந்த விழாவின் போது இந்தியத் திரைப்படங்களின் வளர்ச்சிக்கு மிகச் சிறந்த முறையில் பணியாற்றியுள்ள திரு நிதின் போஸுக்கு தாதா சாகேப் பால்கே விருது வழங்கப்பட்டது. படத்தில்: பாரத ஜனாதிபதி, திரு நிதின் போஸ்.

# அழகே, உன் விலை என்ன?



## சகுந்தலா பாலு

எழுதும்

புதிய தொடர்கதை
2·6·78
இதழில் ஆரம்பம்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

குறுநில மன்னவரான ஸ்ரீ ரங்கநாத யாதவராயர் வல்லபனைத் தம் கைகளில் குழந்தை போல்அள்ளி எடுத்துக்கொண்டு தம் அரண்மனையை நோக்கி நடந்தார்.

அவர் கண்கள் நீர்க் குளமாக இருந்தன.

அரண்மனைக்குச் சென்று வல்லபனைத் தமது அம்ச தூளிகா மஞ்சத்திலே படுக்க வைத்து, ராஜ வைத்திய ருக்கு ஆளை அனுப்பினார்.

பிறகு தத்தனை நோக்கி, "பிள்ளாய்! நீ அவனது நண்பன்தானே! அவனை இப்படி உபவாசம் காண விடலாமா?" என்று கேட்டார்.

தத்தனும், "பிரபோ! வல்லபன் என்னிடம் சொல்லிவிட்டு எதையும் செய்யவில்லை. தானாகவே தீர்மானம் பண்ணி இதைச் செய்துவிட்டான்! நான் சொல்லியும் கேட்கவில்லை. அத்தனை தூரம் அவனுக்கு அரங்கன்மீது பற்று! இப்போது இவன் இருக்கும் நிலை கண்டால் எனக்குப் பயமாக இருக்கிறதே! இவனுக்கு ஏதாவது நேர்ந்தால் இவனது தாயாரை எப்படி நான் எதிர் கொள்வேன்? மன்னவரே! தாங்கள்தான் அவனுக்கு வாக்குறுதி கொடுத்து அவன் உயிரைக் காப்பாற்றலாகாதா?" என்று கேட்டான்.

அதற்கு மன்னவர், "பிள்ளாய்! எங்கள் குலமும் வைணவ குலமாயிற்றே! நாங்கள் அரங்கனிடமே பொய் சொல்லலாமா?" என்று கேட்டார்.

"தாங்கள் எவ்விதம் பொய் சொல்ல வேண்டியிருக்கும்?" என்று அவன் கேட்க,

"பிள்ளாய்! வாக்குறுதி ஒரு புனிதமான பந்தம்! பெருமாள் விஷயத்தில் அதைக் கொடுத்துவிட்டு வெறுமனே இருக்க முடியுமா? ஏதாவது நிச்சயம் செய்தாக வேண்டும்! நான் என்ன செய்ய முடியும்? வெறும் குறுநில மன்னன்தானே நான்! நாலு நாழிகை சேர்ந்து நடப்பதற்கே என் ராஜ்யம் நீளம் பற்றாதே! அப்படியிருக்க படைபலம் இல்லாத நான் என்ன செய்ய முடியும்?" என்று கேட்டார்.

பின்னர் ராஜ வைத்தியர் அங்கு வந்து சேர, அவரிடம் யாதவராயர் விஷயமெல்லாம் கூறி ஆலோசனை கேட்டார்.

அவரும் வல்லபனைச் சோதனை செய்து, நாடி பிடித்துப் பார்த்து, "பிரபோ, திடீர்ப் பட்டினியால் மூர்ச்சையாகி இருக்கிறான். இரவுக்குள் நினைவு தெளிந்துவிடுவான். இனி நாலைந்து நாள் வரைதான் உபவாசத்தை இவன் உடல் தாங்கும்" என்று கூறினார்.

மன்னர் பின்னர் கவலையோடு பிரதானியரோடு ஆலோசனை செய்யலானார்.

அதே நாள் காலையில் மூன்று யாத்திரிகர்கள் திருப்பதி க்ஷேத்திரத்தில் வந்திறங்கி, குதிரைகளை மடாலயங்களில் விட்டு வைத்து, கோவிலுக்குள் சென்று, கோவிந்தராஜப் பெருமாளையும் பார்த்தசாரதிப் பெருமாளையும் தரிசித்து நேராக மலை அடிவாரத்திற்குச் சென்று அடிப்படியை (அடிப்படி என்பதுதான் அலிபிரி என்று இப்போது மருவி இருக்கிறது) மிதித்து மேலே ஏற ஆரம்பித்தார்கள்.

ஆழ்வார் தீர்த்தம், காலி கோபுரம், பாஷ்யக்காரர் சந்நிதி ஆகிய இடங்களில் சிறிது சிறிதே தங்கி இளைப்பாறி விட்டு,

மதியத்திற்கு இரண்டு நாழிகைக்கு மேல் திருமலையைப் போய் அடைந்தார்கள்.

அங்கே, புஷ்கரிணி சென்று நீராடி, தூய உடை உடுத்து,

திருவேங்கடமுடையானின் கோவிலைப் பயபக்தியுடன் அணுகி உள்ளே சென்று,

துவஜஸ்தம்பத்தைக் குளிரக் கண்டு, கருடாழ்வாரை வணங்கி,

அப்பால் வரதர் சந்நிதிக்குச் சென்று அவரை வணங்கி, இராமானுஜர் சந்நிதியிலும், நரசிங்கர் சந்நிதியிலும் தாழ வீழ்ந்து வணங்கி,

உள்ளே திருவிளங் கோவிலில் நுழைந்து, கருவறை நோக்கிச் சென்றார்கள்.

அங்கே சங்கும் சக்கரமும் பொற் கிரீடமும் பல் கலன்களும் அணிந்து காண்பவர்க்கு எல்லாம் குளிர் மழை போல் கடாட்சம் அருளும் வேங்கடத்துப் பெருமானைத் தரிசித்து,

உடலெல்லாம் மயிர்க் கூச்செறிய, கண்களில் பக்தியால் நீர் மல்க, அஞ்சலிசெய்த கையராய்அவர்கள்வெகு நேரம் பரவசராய் நின்றார்கள்.

பின்னர் அர்ச்சனை செய்யும் அர்ச்சகர், கூட்டத் தலைவரின் பெயர் கேட்க,

அவர்களில் ஒருவன், "ஸ்ரீ ஸ்ரீ ஆபஸ்தம்ப சூத்திரம், பரத்வாஜ கோத்ரம் கோபணார்ய சுவாமி" என்று கூற,

அவ்வளவில் அர்ச்சகர்களும் வெலவெலத்து, "சுவாமி!" என்று நன்றிப் பெருக்கோடு அஞ்சலி செய்துவிட்டு, அர்ச்சனையைத் தொடரலானார்.

விஜயநகர மண்டலத்தின் ஒரு அங்கமான முள்வாய் ராஜ்யத்தின் சர்வ சைனியாபதியான கோபணா மிகுந்த பக்திப் பெருக்குடன், திருவேங்கடமுடையானைத் தலை தாழ்த்தி வணங்கினார்.

பின்னர் அர்ச்சகர் கற்பூரத் தட்டைச் சுழற்றி உற்சவ மூர்த்தியான மலை குனிய நின்றபெருமாளையும் தரிசிக்கப் பண்ணினார்.

அந்த மூர்த்தியையும் அவரது இரு நாச்சிமார்களையும் கோபணா கண்குளிரத் தரிசிக்கும்போது,

திடீரென்று தலையை நிமிர்த்தி, "சுவாமி! மலைகுனிய நின்ற பெருமான் அருகிலே மற்றொரு பெருமாள் எழுந்தருளி இருக்கிறாரே, அவர் யாவர்?" என்று கேட்டார்.

அர்ச்சகரும் திரும்பி, "அவர்தாம் திருவரங்கத்து ஸ்ரீரங்கநாதர்" என்று கூறினார்.

'அரங்கன்' என்ற சொல் கேட்டதுதான் தாமதம், அப்படியேவிதிர் விதிர்த்தவராய்மெய் மறந்து கோபணா சாஷ்டாங்கமாகக் கீழே விழுந்தார்.

பிறகு மீண்டும் மீண்டும் தெண்டனிட்டு எழுந்து,

## சிங்கள நாட்டுத் தெனாலிராமன்

தெனாலிராமனைப் போல் சிறந்த ஒரு கோமாளி இலங்கையில் சிங்கள மன்னரிடம் இருந்தான். அவன் பெயர் அந்தரே. சிரிக்க வைப்பதில் அந்தரே கெட்டிக்காரன். அதே சமயத்தில் தந்திரக்காரனும் கூட.

ஒரு தடவை அரசருடைய மாளிகையின் முன்னால் வெள்ளைச் சர்க்கரையை (இலங்கையில் அதைச் சீனி யென்று சொல்வார்கள்) ஒரு பெரிய பாயில் காயப் போட்டிருந்தார்கள். அரசரைப் பார்க்க மாளிகைக்குப் போன அந்தரே, மன்னரிடம், "வாசலில் என்ன காயப் போட்டிருக்கிறீர்கள்?" என்று கேட்டான். அரசன் இவன் எங்கே அள்ளிச் சாப்பிட்டு விடுவானோ என்ற பயத்தில், "ஆற்றில் இருந்து எடுத்து வந்த புது வகையான மணல். காயப் போட்டிருக்கிறேன்" என்றார்.

அந்தரேக்கு அரசர் சொல்வது பொய்யென்று புரிந்தது. தன் வீட்டிற்குப் போய் தன் மகனைக் கூப்பிட்டான். அவனிடம், "நான் இன்னும் கொஞ்ச நேரத்தில் அரசரின் மாளிகையின் முன்னால் நிற்பேன். நீ அந்த நேரத்தில் அம்மா செத்துவிட்டார்கள் என்று சொல்லி அழு!" என்று சொன்னான்.



அந்தரே மாளிகையின் வாசலுக்குப் போனான். அரசர் சர்க்கரை காயப் போட்டிருக்கும் இடத்தைச் சுற்றிக் காவல் போட்டிருந்தார். இதையெல்லாம் கவனித்த அந்தரே அரசரோடு பேசிக்கொண்டிருந்தான்.

அந்தரேயின் மகன் ஓடிவந்தான். "அப்பா, அம்மா திடீர்னு செத்துப் போயிட்டாங்களே!" என்று அவன் சத்தம் போட்டு அழுதான். அவ்வளவுதான். அந்தரே தலையில் அடித்துக்கொண்டு விட்டு சர்க்கரையின்மீது உருண்டான். "இனி எப்படி வாழ்வேன்? அடக் கடவுளே! இப்படி திடீர் என்று போய் விட்டாளே! வாயில் மண், வாயில் மண்" என்று சொல்லியவாறு வெள்ளைச் சர்க்கரையை அள்ளி அள்ளி வாயில் போட்டான்.

அந்தரேயின் தந்திரம் அரசருக்குப் புரிந்துவிட்டது. ஆனால் அவரால் ஒன்றும் செய்ய முடியவில்லை. அவர் வெள்ளைச் சர்க்கரையை மணல் என்று அல்லவா சொல்லி விட்டார்? அரசர் தன் மந்திரியை அழைத்து அந்தரேக்கு ஒரு மூட்டை வெள்ளைச் சர்க்கரை கொடுக்கச் சொன்னார்.

- மாத்தளை சோமு

"சுவாமி! சுவாமி! என்ன சொன்னீர்கள்? இவர் அரங்கன் என்றுதானே சொன்னீர்கள்? என் காதுகள் சரியாகத்தானே கேட்கின்றன? நான் கனவு ஏதும்காண வில்லையே!" என்று அர்ச்சகரை நோக்கிக் கேட்டார்.

கோபண்ணாவின் செய்கைகளைக் கண்டு அதிசயித்த அர்ச்சகரும்,

"பிரபோ! தாங்கள் கேள்வியுற்றது உண்மைதான்! இவர் திருவரங்கத்து அரங்கன்தான்! இவர் இங்கே வந்து சேர்ந்து மூன்று வாரங்கள்தான் ஆகின்றன" என்று கூறினார்.

ஒரே உணர்ச்சிப் பெருக்கில் இருந்த கோபண்ணாவும், ஏதும் சொல்ல முடியாமல் பரபரத்து, மீண்டும் பலமுறை அரங்கன் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து எழுந்திருந்து,

"அரங்கா! நான் தேடி வருவதற்கு முன்னாலேயே எனக்குச் சேவை தந்தாயோ? என்னே உனது அருள்!" என்று பலவாறாக அரங்கனைத் துதித்தார்.

பின்னர் கண்களில் ஆனந்த பாஷ்பங்கள் பெருக, உள்ளே அர்ச்சகப் பரிசனங்களை நோக்கி,

"ஐயன்மீர்! நம் பெருமாள் இங்கே எழுந்தருளிய விதம் என்ன? அவரைத் தேடி அல்லவா நான் வந்திருக்கிறேன்!" என்று கூற,

அர்ச்சகர்களும், இரு இளைஞர்கள் சந்திரகிரிக் காட்டில் அரங்கனைக் கண்டெடுத்த விவரத்தைக் கூறி,

"பிரபோ! அந்த இரு இளைஞர்களும் இப்போது திருமலையில்தான் இருக்கிறார்கள்!" என்று சொன்னார்கள்.

"எங்கே இருக்கிறார்கள்?" என்று பரபரப்புடன் கேட்டார் கோபண்ணா.

"நமது யாதவராயர் அரண்மனையில்" என்று சொல்லவும், கோபண்ணா உடன் தமது சகாக்களை அழைத்துக்கொண்டு புறப்பட்டார்.

யாதவராயரின் இருக்கைக்கு கோபண்ணா போய்ச் சேர, அவரை இன்னார் என்று அறிந்துகொண்ட மன்னர் தகுந்த மரியாதைகளுடன் அவரை வரவேற்றார்.

உடன் கோபண்ணாவும்; "மன்னர் பெரும! நான் இங்கே வந்த காரணம் இரு இளைஞர்களைப் பார்க்கத்தான்!" என்று கூறியதும்,

யாதவராயர் உடனே அவரை அழைத்துக் கொண்டு தமது சயனக் கிருகத்திற்குப் போய்ச் சேர்ந்தார்.

அங்கே, அம்சதூளிகா மஞ்சத்தில் மெலிந்த உடலுடன் வல்லபன் படுத்திருக்க, ராஜவைத்தியர் அவன் அருகே கவனத்தோடு அமர்ந்திருப்பதையும், தாதிமார்கள், மெல்ல ஆலவட்டம் வீசிக்கொண்டு நிற்பதையும், கண்ட கோபண்ணா மெள்ள நடையிட்டுஅந்தத் தூளிகையின் அருகிலே சென்றார்.

அங்குள்ளவர்களை அதிசயத்துடன் பார்த்த அவர், "இந்தக் குமாரனுக்கு என்ன?" என்று ராஜ வைத்தியரை நோக்கிக் கேட்டார்.

"இந்தப் பிள்ளையாண்டான் உபவாசம் இருக்கிறான்" என்றார் வைத்தியர்.

"ஏன்? எதற்கு இந்த உபவாசம்?" என்று கேட்டார் கோபண்ணா.

உடன் யாதவராயர் கோபண்ணாவின் முன் வந்து சந்திரகிரிக் காட்டிலிருந்து தொடங்கி, திருமலைக்கு அரங்கன் எழுந்தருளியது வரை நடந்த விஷயங்களை எல்லாம் விவரமாகக் கூறி,

"சைனியாதிபதிகளே! அரங்கத்தை நோக்கிப் படை எடுக்கிறோம் என்று வாக்குறுதி கொடுத்தால்தான் உபவாசத்தைத் தவிர்ப்பேன் என்று கூறுகிறான். நாங்கள் என்ன சொல்லியும் பயனில்லாது போய்விட்டது" என்று கூறினார்.

அவ்வளவில் மிகவும் மனம் உருகிய கோபண்ணா, மெள்ள வல்லபனது மஞ்சத்தின் அருகிலே சென்று




மெலிந்து போன அவன் பார்வையைத் தம் பக்கம் திருப்பி, நெஞ்சம் தழதழத்து வர,

"அப்பா! அருமைப் பிள்ளாய்! அரசர்கள் செய்ய மறந்ததை நீயும் உன் நண்பனுமாகத் துணிந்து செய்தீர்கள். பெரிய பெரிய வீரர்களோ, தனவந்தர்களோ செய்யாததை நீயும் நண்பனுமாக முனைந்து செய்துவைத்திருக்கிறீர்கள். உங்களுக்கன்றோ நாடு கடமைப்பட்டிருக்க வேண்டும்? உங்கள் சேவையை அன்றோ மாந்தர் எல்லாம் பாராட்ட வேண்டும்! இப்படி ஒரு அரும் பெரும் செயலைச் செய்து விட்டு பெருமையாகவும், சந்தோஷாகவும் இருக்க வேண்டிய நீ இவ்விதம் உபவாசமிருந்து உடம்பைக் குறைத்துக் கொள்ளலாமா! அப்படிச் செய்வதற்கு நாங்கள் அனுமதித்தால் நாங்கள் பதிதர்கள் ஆக மாட்டோமா?

''பிள்ளாய், பிள்ளாய். நல்ல சரியான நேரத்தில் தான் என்னை அரங்கன் இங்கே அனுப்பி உள்ளார். என்னைப் பார் பிள்ளாய்! நான் இங்கு வந்த காரணமே அரங்கனைத் தேடுவதற்குத்தான். அந்தத் தேடலை நீயே செய்து முடித்து விட்டாய்! அதுபோதும் எனக்கு. மெத்த மகிழ்ச்சி! இனியும் உள்ளதை நான் செய்கிறேன், நானே செய்கிறேன்'' என்று கூற,

வல்லபன் ஆச்சரியத்துடன் முகம் திரும்பி அவரைப் பார்த்தான்.

மேலும் தழுதழுத்த கோபணு, கண்ணில் ஆனந்த நீர் பொங்க,

''ஆமாம் பிள்ளாய்! புறப்படும் போதே அந்த எண்ணத்துடன்தான் புறப்பட்டேன். இங்கே உன்னையும் அரங்கனையும் கண்டபின் என் உறுதி பன்மடங்காகி விட்டது. இதோ உன் முன்னாலேயே சபதம் உரைக்கிறேன். கேள். முள்வாய் ராஜ்யத்தில் சர்வ சைனியாதிபதியாக இருக்கும் கோபணுவான நான், அரங்கனைத் திருவரங்கத்தில் மீண்டும் எழுந்தருளச் செய்து விடுவேன் என்று சபதம் எடுக்கிறேன். இனி இந்தச் சபதம் ஒன்றைத்தான் லட்சியமாகக் கொள்வேன். இதுவும் உறுதி'' என்று கூறியதும்,

கூடியிருந்தவர்கள் எல்லோரும், ''ஜய விஜயீ பவ! . கோபணுர்யர் வாழ்க!'' என்று கோஷம்எழுப்பினர்கள்.

வல்லபன் கண்களில் ஆனந்தம் பொங்க சைனியாதிபதியைப் பார்த்தான்!

அவ்வளவில் அவனது மஞ்சத்தின் மேலே, தாயைப் போன்ற வாத்சல்யம் முகத்தில் பொங்க, மண்டியிட்டு அமர்ந்த கோபணு,


கதிர் 23 ஒளி 22
2-6-78
வெள்ளிக்கிழமை
அட்டையில்: ராதாசலுஜா, ரமாவிஜ்
வண்ணப்படம்: ரமேஷ்ஜேத்வா

வல்லபனின் மெலிந்த கை ஒன்றை மெதுவாகப் பற்றி,

''பிள்ளாய்! என் உறுதி போதுமா? சபதம் போதுமா? சில மாதங்களுக்கு முன் என் ராஜரீகப் பதவியைத் துறந்து, துறவறம் பூண வேண்டும் என்று நினைத்தேன். ஆனால் இங்கே வந்து உன்னையும், உன் உபவாசத்தையும் அரங்கனையும் கண்ட பிறகு நான் ராஜரீகத்தை விடுவது சரியல்ல என்று நினைக்கிறேன்.

''ஏனெனில் நான் ராஜரீகத்தில் இருந்தால்தானே உனக்குக் கொடுத்த உறுதிமொழியை நிறைவேற்றி வைக்க முடியும். தவிர என் ராஜரீகந்தானே மதுரையை ஜயிக்க எனக்கு உதவியாக இருக்கப் போகிறது. அதைத் துறந்தால் நான் என்ன செய்ய முடியும்?

''ஆகவே ராஜரீகத்தை வைத்துக் கொள்கிறேன். அது ஒரு சிறப்பான தெய்வ காரியத்திற்கு உதவப் போவதால் அதை மனமுவந்தே வைத்துக் கொள்ளப் போகிறேன்.

''பிள்ளாய்! நான் சொன்ன உறுதி மொழிகள் போறுமோ! நான் சொல்வதெல்லாம் உனக்கு ஒரு ஆறுதலைக் கொடுத்திருக்குமே! போதும் பிள்ளாய். போதும் பிள்ளாய், போதும் உன் உபவாசம்! உன் எண்ணம் வெற்றி அடைந்து விட்டது. நீ போட்ட ஆணை நிறைவேறி விட்டது. இனியும் தயக்கம் காட்டாதே! என் கையால் ஏதாவது அருந்து, பிள்ளாய், பிள்ளாய்!'' என்று நெஞ்சுருகக் கூறினர்.

வல்லபன் கண்களில் நீர் வழிந்தது.

— [illegible]ரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

முள்வாய் ராஜ்யத்தின் சர்வசைனியாதிபதி கோபணுவின் சபதத்தைக் கேட்டு வல்லபன் அவரை அதிசயத்துடன் திரும்பிப் பார்த்தான்.

''ஐயா! தாங்கள் கூறுவது என்னைத் தேற்றுவதற்கு அல்லவே! மெய்யாகத்தானே கூறுகிறீர்கள்?'' என்று ஆர்வமுடன் கேட்டான்.

அவன் சொல்வதைக் கேட்டு கோபணு மெள்ளச் சிரித்தார்.

அதே சமயத்தில், ''புத்தி, புத்தி!'' என்பது போல் யாதவராயர் தன் வாயில் போட்டுக் கொண்டார்.

''பையன் இது போல் கேட்டு விட்டானே!'' என்று ஒரு ஆதங்கம் அவருக்கு.

''பிள்ளாய்!'' என்றார் கோபணு. ''நன்றுகேட்டனை! நாட்டில் எவ்வளவோ ஆண்டுகளாய் நல்லது நடக்காமல் இருந்து விட்டதால் உனக்கு எதிலும் அவநம்பிக்கை வந்துவிட்டது! உனக்கு நான் உறுதிமொழி கூறுகிறேன்! நான் சொன்னதை நிறைவேற்றுவேன். அதற்காகவே இனி வாழ்வேன். இது சபதம்! நீ கலங்க வேண்டாம்.'' மீண்டும் உரத்துக் கூறினார்.

அவ்வளவில் வல்லபன் அவர் கைகளைப் பற்றிக் கண்களில் ஒத்திக் கொண்டு, ''தன்யன் ஆனேன், தன்யன் ஆனேன்!'' என்று மெய்சிலிர்க்கக் கூறினான்.

அவன் கண்களில் நீர் பெருகிட, கோபணுவின் கண்களும் நிறைந்து விட்டது.

அப்படியே அவர் வல்லபனை ஆரத் தழுவிக் கொண்டார்.

பின்னர் எலுமிச்சையும் தேனும் கலந்த நீரை அவர் கொணரச் செய்து,

அதை ஆதுரத்துடன் வல்லபனிடம் கொடுக்கவே, அவனும் அதை நுனி நாவால் மெள்ள ருசித்துப் பருகித் தனது உபவாசத்தை முடித்துக் கொண்டான்.

அதைக் கண்ட எல்லோரது முகங்களிலும் மகிழ்ச்சி ததும்பியது.

வல்லபன் உடல் தேறுவதற்கு இருவாரங்கள் ஆகின.

தேறியதும் அவன், தத்தனை அழைத்துக்கொண்டு நேராக யாதவராயரிடம் சென்று, ''மன்னவ! விடை கொடுங்கள். நாங்கள் வருகிறோம்!'' என்று கூறினான்.

மன்னவரும் ஆச்சரியத்துடன் அவர்களைப் பார்த்து, ''பிள்ளைகளே, அவ்வளவு அவசரமா? அரங்கனுக்கு சந்நிதி கட்டிக் கொண்டிருக்கிறோம். அவரை அங்கே எழுந்தருளச் செய்யும்வரை காத்திருக்கக் கூடாதா?'' என்று கேட்டார்.

''இல்லை மன்னவ! எங்கள் உறவினர்கள் கவலையோடு காத்திருப்பார்கள். நாங்கள் ஊரை விட்டுப் புறப்பட்டு ஆறுமாத காலம் ஆகிவிட்டது. நாங்கள் அவசியம் போகவேண்டும் பின்னர் திரும்பி வருவோம்!'' என்று கூறினான்.

பின்னர் மன்னரும் அவ்விருவரை வெகுவாகப் பாராட்டி, பொன், வஸ்திரம், தானியம் ஆகிய வெகுமானங்களைக் கொடுத்து அன்போடு வழி அனுப்பி வைத்தார்.

அவர்கள் பிறகு திருவேங்கடமுடையான் கோவிலுக்குள் சென்றார்கள்.

அங்கே வேங்கடவரைத் தொழுது, பின்னர் அரங்கனைத் தரிசித்து அவர் முன்னே வெகுநேரம் மெய்மறந்து நின்று முடிவில் பிரியாமனத்துடன் விடைபெற்று வெளியே வந்தார்கள்.

கோபுரவாயிலில் அவர்கள் வந்த நேரம் வைணவர்கள் அங்கே நின்று கொண்டு அரங்கனுக்காகத் தமிழ் பிரபந்தங்களைப் பாடும் நேரமாக இருந்தது. ●

தமிழின் இனிய ஓசை மிருதுவான அலைகளாய் மெள்ள மெள்ளத் துவள,

ஆழ்வார்களின் உருகும் எண்ணங்கள் அதன் இனிய சொல் திவலைகளாய் மிதந்து வெளி வந்தன.

அதனைச் செவியார இரு இளைஞர்களும் கேட்டு நின்றார்கள்.

அதே நேரத்தில் அவர்கள் இருவரது கண்களும் அங்கே வாயிலருகே பெரியதாய் எழுந்துகொண்டிருக்கும் மண்டபத்தின் மீதும், அதன் முன்னால் வேலைசெய்து கொண்டிருக்கும் ஸ்தபதிகள் மீதும், கல் கலைஞர்கள் மீதும் விழுந்தன.

உடன் வல்லபன் பெருமிதம் பொங்க தத்தனை நோக்கி, ''தத்தா! இங்கே அரங்கனுக்குச் சொல்லால் ஒரு மாளிகை எழுகிறது. அங்கே கல்லால் எழுகிறது!'' என்று கூறினான்.

உடன் தத்தனும், ''இவ்விரண்டுக்குமே நாம் ஓரளவாவது காரணமாக இருந்தோம் என்பது பெருமையாக இருக்கிறது'' என்று கூறினான்.

இருவரும் மனத்தில் நிறைவோடு வெளியே வந்து கடைசியாய் கோபுரத்தையும் வணங்கிவிட்டு வண் சடகோப நந்தவனத்தை நோக்கி விறுவிறு என்று நடந்தார்கள்.

அந்த வனத்துள் நுழைந்து, நடுவே உள்ள மண்டபத்திற்குச் சென்று, அதன் வலதுபுறத் தாழ்வறையில் மெள்ள எட்டிப் பார்க்க,

அங்கே, கோபணு சுகாசனம் இட்டு அமர்ந்து கண்களை மூடி ஜபம் செய்து கொண்டிருந்தார்.

அவர்கள் போன நேரத்தில் அவர் ஜபம் முடிந்து கண் விழிக்க,

இரு இளைஞர்களும் அவருக்கு விநயத்தோடு அஞ்சலி செய்து,

---

● இவ்விதம் தமிழ்ப் பிரபந்தங்களைப் பாடும் வழக்கத்தை யாதவராயர் கி.. பி. 1360-ல் தொடங்கி வைக்க, பின்னால் அது திருமலைக் கோவில் வழிபாட்டில் ஒரு அங்கமாகவே ஆகி விட்டது.




"பிரபோ! நாங்கள் வருகிறோம்! எங்கள் ஊர் செல்கிறோம்!" என்று கூறினார்கள்.

"அப்படியா? ஆச்சரியமாயிருக்கிறதே! அரங்கனோடு இருந்துவிடுவீர்கள் என்றல்லவா நினைத்தேன்!" என்றார் கோபணு.

"இருக்கத்தான் விரும்புகிறோம். ஆனால் எம் பந்துக்களைப் பிரிந்து வெகுநாட்கள் ஆகிவிட்டன. ஆகவே புறப்பட்டுச் செல்கிறோம். மீண்டும் சீக்கிரம் வருவோம். ஆனால் எங்களை விட ஆயிரம் மடங்கு வல்லமை உள்ளவரிடம் அரங்கனை ஒப்படைத்தாகி விட்டதே! இனி என்ன கவலை?" என்று கூறினார்கள்.

அதன் உட்பொருளை அறிந்த கோபணு மெள்ளச் சிரித்து,

"நன்று சொன்னீர்கள், பிள்ளைகாள்! விஜயநகருக்கு எம் தூதர்களை அனுப்பிவிட்டேன். அங்கிருந்து மறுமொழி வந்ததும் காரியத்தில் இறங்குவேன்! அவர்களுக்காகவே இங்கே காத்திருக்கிறேன்" என்று கூறினார்.

பின்னர் அவரும் அந்த இளைஞர்களை நல் வார்த்தைகளால் புகழ்ந்து பேசி, தம் வெகுமானமாய் இரு துளசி மாலைகளைக் கொடுத்து வழி அனுப்பி வைத்தார்.

பின்னர் இளைஞர்களும் திருமலைக்குப் போன ஞாபகார்த்தமாய் சந்தனக்கல்லையும், செஞ்சந்தனப் பொம்மைகளையும் வாங்கிக் கொண்டு, மலையை விட்டு எட்டு நாழிகையில் கீழே இறங்கி திருப்பதியை அடைந்தார்கள்.

அங்கே கோவிந்தராஜப் பெருமாளையும், பார்த்தசாரதிப் பெருமாளையும் தரிசித்து இரவு மடம் ஒன்றில் தங்கிவிட்டு, மறுநாள் காலை திருச்சுகனூருக்கு (இந்த ஊர் இப்போது திருச்சானூர் என்ற பெயராக மருவியிருக்கிறது) போய், அலர்மேல் மங்கைத் தாயாரையும் தரிசித்துவிட்டு,

மனத்தில் நிறைவு பெருக, தென் திசை நோக்கிப் பிரயாணப்படலானார்கள்.

மூன்று நாள் பிரயாணம் செய்து, சம்புவராய ராஜ்யத்தை அடைந்து, மீண்டும் சந்நியாசி போல் இருவரும் வேடம் தரித்து, காஞ்சிபுரத்தை நோக்கி விரைவாக நடந்தார்கள்.

கோபுர தரிசனம் தூரத்திலிருந்தே கிடைத்துவிட, இருவரும் மிகவும் சந்தோஷப்பட்டு, சிங்கழகர் எவ்விதம் தங்களை வரவேற்கப் போகிறார் என்பதையும், அரங்கனைப் பற்றிக் கேள்விப்பட்டதும் எவ்விதம் ஆனந்தம் கொள்ளப் போகிறார் என்பதையும் கற்பனை செய்து கொண்டு அதைப் பற்றியே ஒருவருக்கொருவர் விமரிசித்துக் கொண்டு,

மாலை ஆகுந் தறுவாயில் நகரின் எல்லைக்கு வந்து சேர்ந்தார்கள்.

கோட்டையை நெருங்கியதும் அவர்களுக்கு ஆச்சரியம் ஏற்பட்டது.

அதன் பிரம்மாண்டமான கதவுகள் மூடப்பட்டிருந்தன.

என்ன காரணமாயிருக்கும் என்று ஆலோசித்து, அதன் வாயில் அருகே சென்று நின்றார்கள்.

"யார் அங்கே?" என்று மதில் மீதிருந்து குரல் கேட்டது.

"யாத்திரிகர்கள்! வரதனைச் சேவிக்க வந்திருக்கிறோம்" என்றார்கள் இளைஞர்கள்.

மேலே இருந்த சேவகன் விடுவிடென்று கீழே இறங்கித் திட்டி வாயில் கதவைத் திறந்து அவர்களை உற்றுப் பார்த்தான்.

---

● பார்த்தசாரதியின் [illegible] சமீப காலம் வரை காரையால் மூடப்பட்டிருந்தது., இப்போது திறக்கப்பட்டு விட்டது.

பிறகு, ''உம் உம்! சுவாமி பெயரைச் சொல்லிவிட்டீர்கள். போங்கள், போங்கள்!'' என்று உள்ளே அனுப்பினான்.

ஊருக்குள் சந்தடி இல்லை.

முன்பிருந்த அரவமும் கலகலப்பும் இப்போது இல்லை.

இந்த நகருக்கு என்ன நேர்ந்தது என்று இருவரும் ஆச்சரியப்பட்டார்கள்.

வீதிகளில் சேவகர்கள் நடமாடிக் கொண்டிருந்ததால் ஓரமாகவே சென்றார்கள்.

அரை நாழிகையில் சிங்கழகரின் மண் குடிலை அணுகினார்கள்.

நெஞ்சங்கள் படபடக்க நந்தவனத்தின் நாதங்கியைத் திறந்து கொண்டு உள்ளே சென்றார்கள்.

குடிலை நெருங்க நெருங்க இருவருக்கும் இன்பமயமான துடிப்புகள் பெருகின.

குடிலின் வாயிலை அடைந்ததும் பாதக்குறடுகளைக் கழற்றி ஓரமாய் வைத்து விட்டு மெல்லிதான குரலில், ''சுவாமி!'' என்றார்கள்.

மறுமொழி எதுவும் வராததால் மீண்டும், ''சுவாமி'' என்றார்கள்.

அப்போது உள்ளே அரவம் கேட்டது. மெள்ளக் கதவும் திறந்தது.

கரிதான உள் நிழலிலிருந்து ஒரு உருவம் மெள்ளப் பிரிந்து முன்நோக்கி வந்தது.

இரு இளைஞர்களும் ஆச்சரியத்தோடு அந்த உருவத்தைப் பார்த்தார்கள்.

யார் இது?

அவர்கள் கண்களையே அவர்களால் நம்ப முடியவில்லை.

ஒடிசலான குச்சி போல் ஒரு உருவம் அவர்கள் எதிரே நின்றது.

முகமும் உடலும் சோகை பிடித்தாற் போல் வெளிறியிருந்தன.

துகில் கட்டியிருப்பதைப் பார்த்தால்தான் அவள் ஒரு பெண் என்று தெரிந்தது.

எனினும் அவளை அடையாளம் கண்டு கொண்ட வல்லபன் திடுக்கிட்டு, ''மஞ்சரி!'' என்றான்.

அந்த உருவம் துள்ளியது.

''நீங்களா?'' என்று அதன் வாயினின்றும் குரல் எழுந்தது.

''நாங்கள்தான் மஞ்சரி!'' என்றான் வல்லபன் முன்நோக்கி நடந்து கொண்டு.

மஞ்சரி இருவரையும் மாறி மாறிப் பார்த்தாள். கண்களில் நீர் பொங்கியது.

இளைஞர்கள் இருவரும் அவள் பின் தொடர உள்ளே நுழைந்தார்கள்.

உள்ளே போனதும் மூட்டைகளை இறக்கிக் கீழே வைத்துக் கொண்டு,

''சிங்கழகர் சுவாமி எங்கே? எங்கே?'' என்று பரபரப்புடன் கேட்டான் வல்லபன்.

''சுவாமி எங்கே? கூப்பிடு! அருமையான செய்தி கொண்டு வந்திருக்கிறோம்'' என்று கூறினான் தத்தன்.

இளைஞர்கள் இருவரும் கீழே அமர்ந்தார்கள்.

மஞ்சரி பேசாமல் இருப்பதைப் பார்த்து ஆச்சரியமாக இருந்தது.

''மஞ்சரி! அவசரம்! உடனே அவரைக் கூப்பிடு'' என்றான் வல்லபன் தன் மூட்டையை அவிழ்த்துக் கொண்டே.



இதற்குள் தத்தன் தன் மூட்டையிலிருந்து செஞ் சந்தன மரப் பொம்மைகளைக் கீழே வரிசையாக வைத்திருந்தான்.

'ஹக்' என்று ஒரு விம்மும் குரல் கேட்டது.

இருவரும் நிமிர்ந்து பார்த்தார்கள்.

மஞ்சரி தன் முகத்தை மறைத்துக் கொண்டு விம்மினள்.

''மஞ்சரி! என்ன விஷயம்? ஏன் அழுகிருய்?'' என்ருன் வல்லபன் கலவரத்துடன்.

மஞ்சரி தலை குனிந்தாள். விம்மல்கள் அடுக்கடுக்காக வெளிவந்தன.

கண்ணீரும் தாரையாக அவள் சிற்ருடைகளில் வழிந்தது.

''மஞ்சரி, என்ன விஷயம்?''

அந்தக் கேள்வியைக் கேட்கும் போதே வல்லபனின் அடிவயிற்றில் ஏதோ குமட்டியது.

''மஞ்சரி என்ன விஷயம்?''

''சொல்லு மஞ்சரி!''

''மஞ்சரி, மஞ்சரி!''

எதற்கும் அவள் பேசவில்லை. அவள் விம்மல்கள் தான் பெரிதாகிக் கொண்டு வந்தன.

திடுக்கிட்ட வல்லபன் சுற்றிவரப் பார்த்தான். மூலையைப் பார்த்ததும், அவனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

அங்கே சிங்கழகரின் கைததடி தனியாக நின்று கொண்டிருந்தது!

அந்தக் கைத்தடி என்றுமே, எப்போதுமே தனி வாக இருந்ததில்லை.

நடந்த போதெல்லாம் வேண்டி வந்ததால் அதை இணைபிரியாமல் தம் அருகிலேயே வைத்திருப்பார் சிங்கழகர்

தூங்கும் போது தம் அருகிலேயே படுக்கவிட்டிருப்பார்.

அவ்விதம் இணைபிரியாது அவருடன் எப்போதுமே ஒட்டியிருந்த கைத்தடி இப்போது ஏன் தன்னந்தனிமையில் ஒதுங்கி நிற்கிறது?

அதை விட்டுப் பிரிந்து சிங்கழகர் எங்கே சென்றிருப்பார்?

அந்த நினைப்பு மனத்தில் ஓட,

பகீர் என்று ஒரு எண்ணம் அவன் உணர்வுகளைத் தூக்கி அடித்தது.

அதை நினைக்கும் போதே உடலெல்லாம் பரபரத்தது.

சிங்கழகர் இவ்வுலகை விட்டுப் பரமபதத்திற்கு எழுந்தருளி விட்டாரோ!

படீரென்று பாய்ந்த இந்த நினைவு அவனையே ஒரு உலுக்கு உலுக்கியது.

''மஞ்சரி! சுவாமி எங்கே? எங்கள் சுவாமி எங்கே?'' என்று கத்தினன் அவன்.

அவன் கையிலிருந்து நழுவிய சந்தனக்கல் நாராசமான சத்தத்தோடு நீள உருண்டு ஓடியது.

மூலைவரை உருண்டு சென்ற அந்தக் கல், கைத்தடிக்குச் சில அங்குலத்திலேயே சப்பட்டையாக விழ,

அதன் அதிர்ச்சி தாளாதோ என்னவோ, கைத்தடியும் சடேரென்று ஆடி அதன் மீது விழுந்தது.

அந்த அதிசயமான காட்சியே அந்தக் குடிலில் நேர்ந்துள்ள ஒரு துக்க விஷயத்தை சங்கேத முறையில் அந்த இளைஞர்களுக்குக் கூறிவிட்டது போலிருந்தது.

மஞ்சரி அதைப் பார்த்ததும் குலுங்கி அழுதாள்.

திடுக்கிட்டு வல்லபன் எழுந்தான்.

மஞ்சரியின் அருகில் சென்ருன்.

தேம்பி நிற்கும் அந்தப் பேதையின் சிரம் மேல் மெள்ளக் கையை வைத்தான்.

அவனது துக்கத்தை விட அவளைப் பற்றிய துக்கந்தான் அவனுக்கு மிதமிஞ்சி வந்தது.

மெதுவாக அவளது சிரத்தைத் தடவினன்.

பொல பொலவெனக் கண்ணீர் ஒரே பெருக்காய் அவள் கன்னங்களில் வழிந்தது.

''மஞ்சரி'' என்ருன் துக்கம் கரகரக்கும் குரலில்.

அந்த வாத்சல்யமான தழுவலுக்கும், குரலுக்கும் மட்டும் மஞ்சரி காத்திருந்தாள் போல் தோன்றியது.

அது அவளது மனத்தில் மண்டிக் குமைந்து கொண்டிருக்கும் அளவிறந்த துக்கத்திற்கு ஒரு வடிகால் வைத்துக் கொடுத்தது போலிருந்தது.

'ஓ' என்று கத்தினள் அவள். பிறகு துக்கத்தின் அபரிமித சக்தி, அந்தப் பூஞ்சையான உடம்பில் ஆவிர்ப்பவிக்க,

கீழே தரையில் படீர் என்று உருண்ட அவள் கைகளையும் கால்களையும் உதைத்துக் கொண்டு, ''அம்மா! என் அப்பா! என் பெற்ருேர்களே! என்னை இப்படித் தனியாய் ஆக்கினீர்களே! என்னையும் கொண்டு செல்லுங்களேன்! என்னையும் சாக வையுங்களேன்! இனியும் நான் இருந்து பிரயோசனம் என்ன? என் அம்மா! என் அப்பா! நீங்கள் எங்கிருக்கிறீர்கள்?''

என்று பீறிட்டுப் புலம்பித் தரையில் வெகுவாக அடித்துக் கொண்டு அழுதாள்.

வல்லபன் அழுதான்.

தத்தனது கல் மனமும் கரைந்து கண்களில் இரு சொட்டுக்கள் உதிர்ந்து விட்டன. —தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

காஞ்சிபுரத்திலுள்ள அந்த மண் குடிலில் ஒரு அபரிமிதமான சோகம் விழுந்திருந்தது. அதன் பிரதித்துவனிகள் மஞ்சரியின் புலம்பல்களாக உள்ளே பரிணமித்தன.

வல்லபன் திகைத்துப் போய் நின்றான்.

அவன் காதுகளில் சில்லென்று ஓர் உணர்வு ஊடுருவி உடம்பெல்லாம் ஓடியது.

துக்கத்தினால் மஞ்சரி தரையில் புரளுவதை அப்படியே பார்த்துக் கொண்டு நின்றான். இறக்கை அடிக்கும் பறவை போல் அவள் கீழே தத்தளித்துக் கொண்டிருந்தாள்.

அவனுக்கே பிறகு தாளாமல் போகவே, "மஞ்சரி! மஞ்சரி!" என்று சொல்லி அவளருகில் தரையில் அமிழ்ந்தான்.

அந்த இளம் பெண்ணைத் தடுத்து அவளது தலையை ஆதரவாகப் பற்றிக் கொண்டான்.

பிழியும் கண்ணீருடன் கருணை தளும்ப அவளை நோக்கி, "அம்மா! மஞ்சரி! என்னாலேயே தாங்கமுடியவில்லையே! நீ எப்படித் தாங்குவாய்? உன் பிஞ்சு மனம் இதை எப்படிப் பொறுத்துக் கொண்டிருக்கும்? அம்மா, மஞ்சரி! அழாதே! அழாதே! உனக்கு நாங்கள் இருக்கிறோமே! புது பந்தமாக நாங்கள் கிடைத்து விட்டோமே! உன்னை நாங்கள் தவிக்க விடுவோமா? அழாதே! எழுந்திரு! எழுந்திரு!" என்று கூறினான்.

மஞ்சரியின் துக்கத்தை ஆற்ற முடியவில்லை. வெறி பிடித்தவள் போல் வல்லபனின் கையையும் மீறி துடித்து அழுதாள். "ஓ ஓ" என்று ஒரு அழுகையின் குரலே எங்கும் நீலமாய் எதிரொலித்தது.

அழுவதெல்லாம் அழுது தீரட்டும் என்று வல்லபனும் பொறுமையாக இருந்தான்.

இருளாகி வெகு நேரம் வரை மஞ்சரி அழுது கொண்டே இருந்தாள்.

பிறகு அழுகையை சிறிது சிறிதாய் விம்மல்களாக்கி, விசிப்புகளாக்கி கடைசியில் அதையும் நிறுத்தினாள்.

இரவில் யாரும் அதற்கு மேல் பேசவில்லை. மனத்தில் தாங்கல்களோடு அரைகுறையாய் உறங்கினார்கள்.

காலையில் எழுந்த போது எல்லோரது மனங்களிலும் ஒரு தெளிவு விழுந்திருந்தது. மஞ்சரி சுவரில் சாய்ந்து கொண்டு மெதுவாகப் பேசினாள்.

திருப்பதிக்கு இளைஞர்கள் புறப்பட்டுச் சென்ற பிறகு இரு வாரங்கள் வரை சிங்கழகர் நலமாக இருந்தார் என்றும் அதன் பின்னால் அவருக்கு உடலில் உபாதையும் நோயும் கூடியது என்றும் கூறினாள்.

"அது என்ன நோய் என்று தெரியவில்லை. மடத்திலிருந்து வைத்தியர் வந்து பார்த்தார். பஸ்மங்களையும் சூரணங்களையும் கொடுத்தார். குணம் ஏற்படவில்லை. உபாதை காலில் முற்றியது. உடம்பில் நீலநிறம் ஏறிக் கொண்டே வந்தது. அவருக்கே தமது அந்திம நாட்கள் என்று தெரிந்து விட்டது.

"கண்களில் மாலை மாலையாகக் கண்ணீர் பெருக என்னிடம் பேசினார். "உன்னை விட்டுப் போகிறேனே" என்று சொல்லித் தவித்தார். ஆனால், "உன்னை ஆண்டவன் கை விடமாட்டார். உனக்கு அவர் எந்த விதத்திலாவது துணைசெய்வாரம்மா!" என்று கூறினார். ஒரு மாதம் இழுத்து பறித்துக் கொண்டிருந்தார்.

"ஒரு நாள் பகலில் தூக்கத்திலிருந்து திடீரென எழுந்தார். "மஞ்சரி! மஞ்சரி! அரங்கன் கிடைத்து விட்டார்! அரங்கன் கிடைத்து விட்டார்!" என்று கத்தினார். ஓடோடிப் போய் பார்த்தேன். யாரையும் காணவில்லை. இவர் கனவு கண்டிருக்கிறார்.

"என்னைப் பார்த்ததும் அவர், "மஞ்சரி! அரங்கன் கிடைத்து விட்டாரம்மா!" என்று கத்தினார்.

"எங்கே?" என்று கேட்டேன்.

"இதோ பார்! அரங்கன்! பக்கத்திலே கொடவர்! அவர் பக்கத்திலே நம் வல்லபனும் தத்தனும்" என்றார் பரபரப்புடன்.

"இதைச் சொல்லிவிட்டு பரவசமாய்ச் சிரித்தார். இரவெல்லாம் அவருக்கு இந்தச் சிரிப்பும் சந்தோஷமும் ஓயவில்லை.

"காலையில் அதே பரவசத்துடனேயே இறந்து கிடந்தார். முகத்தில் அந்தச் சிரிப்பு மாறவே இல்லை" என்று கூறி முடித்தாள் மஞ்சரி.

இளைஞர்கள் இருவரும் வெகுவாகத் துக்கித்தார்கள்.

வல்லபன் மூக்குறிஞ்சிக் கொண்டு, "மஞ்சரி! நல்ல செய்தி கொண்டு வந்தோம் என்று நினைத்தோம். ஆனால் இங்கே ஒரு பொல்லாச் செய்தி எங்களை எதிர் கொண்டு மூழ்கடித்து விட்டதே! சிங்கழகரின் குளிர்ந்த கண்களை நாங்கள் என்று பார்ப்போம்? அவரது மதுரமான செஞ்சொற்களை இனி என்று கேட்போம்? இப்படி அதிர்ஷ்ட ஈனர்களாகிவிட்டோமே!" என்று வெகுவாகத் தவித்துப் பேசினான்.

தத்தனும் மனம் வெதும்பி, "மஞ்சரி! ஒரு நல்ல சேதி கொண்டு வந்தோம். அதைக் கேட்க வேண்டியவர்கள் கேட்டுக்கொள்ளாமல் மறைந்து விட்டாரே! இனி அந்தச் செய்தியை யாரிடம் சொல்லித்தான் என்ன பயன்?" என்று சொல்லி துக்கித்தான்.

பிறகு அன்று முழுவதும், அவர்கள் சிங்கழகரின் குணாதிசயங்களை மாறி மாறிப் பேசிக்கொண்டிருந்தார்கள்.

அங்கு ஏற்பட்ட துக்கத்தை தங்கள் இதமான வார்த்தைகளால் மிதமாக்கிக்கொண்டு, ஒருவர்க்கொருவர் ஊக்கமும் உற்சாகமும் அளித்துக் கொண்ட பின்னர், அரங்கனைத் தேடிய கதை முழுவதையும் வல்லபன் விவரமாகக் கூறி முடித்தான்.

அவ்வளவையும் கேட்டுமுடித்த மஞ்சரி கண்களில் ஆனந்தக் கண்ணீர் பொங்க,

"ஐயா! தாங்கள் கூறுவது என்னைச் சிலிர்க்க வைக்கிறதே! சிங்கழகர் மட்டும் இருந்தாரானால், இப்போது *குணலைக்கூத்து ஆடினாலும் ஆடுவாரே!" என்று கூறினாள்.

* குணலைக்கூத்து — பரவசத்தில் தலைகீழாக ஆடும் ஆட்டம்

அடுத்த இருநாட்களிலும் அங்கே தங்கி இளைஞர்கள், "இனி என்ன செய்வது?" என்று ஆலோசனை செய்தார்கள்.

அரங்கனோடு திருமலையிலேயே இருந்து விடலாம் என்று முதலில் நினைத்தவர்கள் அவர்கள்.

அப்படி நினைத்தபோது, அரங்கன் சீக்கிரமே அந்த மலையை விட்டுப் புறப்பட்டு விடுவார்; திருவரங்கத்திற்குச் சீக்கிரமே எழுந்தருளி விடுவார் என்று அவர்கள் எதிர்பார்த்தார்கள்.

ஆனால் அப்படி ஒரு நிகழ்ச்சி நடக்க வேண்டுமானால் அதற்கு ஒரு பெரும் படை எடுப்பே தேவையாகும் என்பதை அவர்கள் அறிந்தவர்களல்ல.

ஒரு அரசர் நினைத்தால் உடனே படையெடுத்து விடலாம் என்று நம்பினார்கள் அவர்கள்.

அப்படிப்பட்டவர்களுக்கு, எப்படியும் காரியம் நடக்கச் சிறிது காலம் பிடிக்கும் என்று தெரிய வந்தபோது, அந்த அவகாசத்திற்குள் ஊர் சென்று திரும்பி விடலாம் என்ற எண்ணம் உதயமாகியிருந்தது.

அரங்கனைப் பற்றிய செய்தியை ஊரில் கூறிவிட்டு உடன் திரும்பி விட வேண்டும் என்று இருவரும் தீர்மானித்திருந்தார்கள்.

இப்போது மஞ்சரி உருவில் மற்றொரு சுமையும் வேறு ஏறிவிட்டதால், அவளது பிற்காலத்தைப் பற்றி யோசிக்க வேண்டும் என்ற நிலையும் தோன்றியிருந்தது.

இவ்விதம் எல்லாம் பல நினைவுகள் அழுந்த மூன்றும் நாள் காலையில் புறப்பட்டு வெளியிலே போனபோது, அவர்களுக்கு ஒரு அதிர்ச்சியான செய்தி காத்துக் கிடந்தது.

நகரத்தின் கோட்டைக் கதவுகள் நிரந்தரமாக மூடப்பட்டு விட்டன என்றும், உள்ளே வருகிறவர்களுக்குத்தான் அனுமதி, என்றும் வெளியே போகிறவர்களுக்கு அனுமதி கிடையாதென்றும் தெரிய வந்தது.

இதை அறிந்ததும் இருவரும் திடுக்கிட்டார்கள்.

"மஞ்சரி! இதெல்லாம் என்ன? இந்த ஊரில் என்ன நடந்தது?" என்று வல்லபன் கேட்க,

"உங்களுக்குத் தெரியாதா? இந்த ஊர் ராஜவின் குமாரனுக்கு அடுத்த மாதம் திருமணம் நடப்பதாக இருந்தது. போன நான்காம் நாள் கோவிலுக்கு அந்த ராஜகுமாரன் போனபோது யாரோ அவர்மீது வாளை எறிந்து விட்டார்கள். பலத்த காயத்தோடு அவர் படுத்திருக்கிறார். வாளை எறிந்தவன் யார் என்று கண்டு பிடிக்க ஊரின் சேவகர்கள் மும்முரமாக இருக்கிறார்கள். யாரோ ஒரு கற்பூர வியாபாரியாம்! அவன்தான் இப்படி செய்தான் என்று கூறுகிறார்கள்! அவனைத் தேடி அலைகிறார்கள்" என்று கூறினாள்.

இப்படி விபரீதம் நேர்ந்ததே. என்று எண்ணிய இரு இளைஞர்களும், மஞ்சரியின் குடிலிலேயே மேலும் ஒரு வாரம் தங்கினார்கள்.

எட்டாம் நாள் அவர்களை மேலும் சோதனை செய்யும்படியாய்ச் செய்திகள் வந்தன.

யுத்தம் வரப்போகிறது என்றும், நகரத்தின் கோட்டை இப்போதைக்குத் திறக்கப்படாது என்றும் பரவலாக மக்கள் பேச ஆரம்பித்தார்கள்.

இளைஞர்களை இந்தச் செய்தி மேலும் கலவரப் படுத்தியது. இனி இங்கிருந்தால் பல உருவங்களில் ஆபத்து வரலாம். எனவே உடனே ஊரை விட்டுப் போவதுதான் நல்லது என்று நினைத்தார்கள்.

இதற்கு ஏதாவது வழி இருக்கிறதா என்று எண்ணி தினமும் ஊருக்குள் சென்று பல இடங்களில் உளவு அறிந்து பார்த்தார்கள்.

கோவில்களிலும், மடாலயங்களிலும் சென்று விஷயம் சேகரிக்க முயன்றபோது, ஒரு மடத்தின் வாயிலிலே ஒரு நாள் வைணவர் ஒருவர் திடீரென்று இளைஞர்களின் முன்னால் வந்து நின்று, "சுவாமிகளுக்கு எந்த ஊரோ?" என்று கேட்டார்.

உடனே வல்லபன் தன் பொய்த்தாடியை உருவிக்கொண்டு,

"அடியோங்களுக்கு திருநாராயணபுரம்! வேதாந்த தேசிக சுவாமிகளுக்குக் கைங்கர்யங்கள் செய்து கொண்டு இருக்கிறோம்" என்று கூறினான்.

"அப்படியா! தேசிக சுவாமிக்கு உங்களைப்போல் இளவயசு சீடர்கள் இருப்பார்கள் என்று அடியேனுக்குத் தெரியாதே! சந்தோஷம்! சுவாமிகள் இந்த ஊருக்கு வந்த காரணமோ?....." என்று கேட்டார்.

"காஞ்சிக்கு ஏன் சுவாமி வரப்போகிறோம்? வரதனை சேவிப்பதற்குத்தான் வந்தோம். திருப்பதியிலிருந்து வந்திருக்கிறோம்" என்று கூறினான் வல்லபன்.

"இப்போது எவ்விடத்திற்குப்போக வேண்டுமோ?" என்று கேட்டார் வைணவர்.

"திரும்பி திருநாராயணபுரம் போனால் சௌகரியமாயிருக்கும். மனைவி மக்கள் பரிதவிப்பார்கள்!" என்றான் வல்லபன்.

அப்பால் அந்த வைணவர் அந்த இளைஞர்களை மேலும் கீழும் பார்த்து, சுற்றி வரவும் ஒரு பார்வை பார்த்து,

மெலிதான குரலில், "அப்படியானால் அவ்விடத்தில் ஊரை விட்டுப் போகவேண்டும் என்று அபிப்பிராயம் இருக்குமோ?" என்று கேட்டார்.

"ஆமாம் சுவாமி! அவசியம் போகவேண்டும். வழியில்லாது திண்டாடுகிறோம்" என்றான் வல்லபன்.

அந்த வைணவர் அப்போது சொல்வதற்குத் தயக்கமாய் நிற்பதைப் பார்த்து,





வல்லபன், "சுவாமி! வெளியே போக ஏதாவது உபாயம் உண்டோ? அதைப்பற்றித் தெரிவித்தால் தன்யர்களாக இருப்போம்" என்று கூறினான்.

அந்த வைணவர் உடனே, "இல்லை....." என்று இழுத்து, "அடியோங்கள் போவதாக இருந்தால் ●தேவரீர்களும் எம்மோடு வரலாம், ஆனால் எங்கள் ஆசிரியா என்ன ● திருவுள்ளம் பற்றுகிறாரோ, தெரிந்து கொள்ள வேணும்" என்று கூறினார்.

வலுவிலே இப்படி ஒரு உபாயம் வந்து சேருகிறதே. இந்த வைணவர் உபகாரமாக இருக்கிறாரே என்று இளைஞர்கள் பலவிதமாய் நினைத்து. அந்த வைணவருடன் மேலும் நெருங்கி உரையாட ஆரம்பித்தார்கள்.

ஒரு பொன்னிறமான மாலை நேரம்.

காஞ்சிபுரத்துக் கோட்டையின் உட்புறத்தில் பிரம்மாண்டமான கதவுகளுக்கு முன்னால், ஆறு வைணவப் பெரியவர்கள் கைகளில் மஞ்சள் துணி கட்டிய செம்புகளோடு நின்றுகொண்டு, "கோவிந்தா, கோவிந்தா!" என்று கூறிக் கொண்டிருந்தார்கள்.

"இவர்கள் யார்? இந்த வேளையில் வந்தார்கள்?" என்று ஒரு வெறுப்பான பார்வை பார்த்து, மேலே இரண்டாம் நிலையிலிருந்த கோட்டை நாயகன், "யார் சுவாமி?" என்று கூவினான்.

"அப்பனே! திருப்பதிப் பிரார்த்தனைக்குப் போகிறோம். கதவைத் திறந்து விடுவாய். நாராயண, நாராயண!" என்று சொன்னார் ஒரு பெரியவர். ஆஜானுபாகுவாக வளர்ந்திருந்த அவர் உடலெல்லாம் பன்னிரு நாமங்களை விகசித்தன. இடுப்பைச் சுற்றி ஒரு பட்டு வஸ்திரத்தை இறுக்கிக் கட்டியிருந்தார். தேர் வடம் போலப் பருமனான பூணூலைத் தரித்திருந்தார்.

---

● தேவரீர்களும் - நீங்களும்

● திருவுள்ளம் பற்றுதல் - நினைத்தல்

"சுவாமி! விஷயம் தெரியாதா? கோட்டைக்கு வெளியே யாரையும் அனுப்பக்கூடாது என்று உத்தரவாகியிருக்கிறது" என்றான் கோட்டை நாயகன்.

"வைணவ தேசாந்திரிகளுக்கு ஏதப்பா ராஜ தடை! நாங்கள் எங்கு வேண்டுமானாலும் போகலாமே! இது உனக்குத் தெரியாதாப்பா?" என்று கேட்டார் பெரியவர்.

"தெரியும் சுவாமி! இருந்தாலும் ஒரு வாரமாய் ராஜ கட்டளை பிறந்துவிட்டது. ஊருக்குள் வரலாமே தவிர, வெளியே போக முடியாது. இதைக் கடுமையாய் அனுசரிக்கிறோம்" என்றான் சேவகன்.

"கோவிந்தா, கோவிந்தா!" என்று பெரியவர் கூற அந்த சீடர்கள் எல்லோரும், "கோவிந்தா கோவிந்தா!" என்று கூவினார்கள்.

"அப்பனே! எந்தக் காரணம் கொண்டும் என்னை விடமாட்டாயா?" என்று கேட்க,

"எதற்கும் விடமாட்டேன், சுவாமி! லச்சினை இருந்தால் வாங்கி வாருங்கள், விடுகிறோம்" என்றான் நாயகன்.

"லச்சினைதானே? நீ கேட்பாய் என்றே வாங்கி வந்துவிட்டோம். இப்படி வா, காட்டுகிறேன்!" என்றார் பெரியவர்.

நாயகன் கீழே இறங்கினான்.

பெரியவர் அவனிடம் லச்சினையை நீட்டினார். அதை வாங்கி அப்புறமும் இப்புறமுமாகப் பார்த்த நாயகன், "சரி, போங்கள்!" என்று சொல்லி பிரும்மாண்டமான கதவின் திட்டிவாயிலைத் திறந்துவிட்டான்.

அவ்வளவில், "கோவிந்தா, கோவிந்தா!" என்று சொல்லிக்கொண்டு ஆறு வைணவர்களும் வெளியே போனார்கள்.

சிறிது தூரமே போயிருப்பார்கள். வல்லபனுக்கு சுரீர் என்று ஒரு நினைவு உள்ளே பாய்ந்தது. விலவிலத்துப் போய்த் திரும்பிப் பார்த்தான். மனம் திடுக்கிட்டது.

— தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

ஏதோ ஒரு நினைவு வல்லபனிடம் தோன்றிச் சுரீர் என்று உணர்த்தவே, அவன் திரும்பி அந்த நான்கு வைணவர்களையும் திடுக்கிட்டுப் பார்த்தான்.

அப்போது மாலை மயங்கிக் கொண்டிருந்த நேரம்.

அந்த நான்கு வைணவர்களும் பரபர என்று நடந்து கொண்டிருந்தார்கள். அவர்களது நடையே அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

தத்தனைக் கிள்ளி, ''தத்தா இவர்கள் யார்? எங்கேயோ பார்த்தது போல் இருக்கிறதே!'' என்று கேட்டான் வல்லபன்.

''நானும் அதைத்தான் யோசிக்கிறேன்'' என்றான் தத்தன்.

அதற்குள் அவர்களது பின்புறத்தில் சத்தங்கள் எழவே, வைணவ குரு, ''வாருங்கள், சீக்கிரம்!'' என்று சொல்லி ஓட ஆரம்பித்தார்.

அவரைத் தொடர்ந்து எல்லோரும் ஓடத் தொடங்கினார்கள்.

சிறிது தூரம் சென்றதும் எல்லோரும் நின்று பார்க்க, பின்னால் எங்கேயோ தொலைவில் குதிரைக் குளம்புகள் வரும் ஓசை சன்னமாகக் கேட்கவே, ''ம், சீக்கிரம்!'' என்று குரு கூறினார். முன்னை விட அதிக வேகமாக எல்லோரும் ஓடினார்கள்.

சிறிது நேரம் ஓடிச் சடக்கென்று இடது பக்கம் திரும்பி ஒரு குங்குலியத் தோப்பில் நுழைந்தபோது, இருட்டத் தொடங்கியது.

தோப்பின் ஓரத்து இடைவெளியில் நான்கு குதிரைகளைச் சித்தமாக வைத்துக் கொண்டு இரண்டு பேர் நின்று கொண்டிருந்தார்கள்.

அவைகளின் மீது அந்த வைணவர்கள் பட்பட்டென்று தொத்தி ஏறிக் கொண்டார்கள்.

''ம், நீங்களும் ஏறுங்கள்!'' என்றார் குரு அந்த இளைஞர்களை நோக்கி.

நடப்பதெல்லாம் கண்கட்டு வித்தை போல் இருக்கிறதே என்று இரு இளைஞர்களும் மறுமொழி இல்லாது ஆளுக்கொரு குதிரை மீது தொத்திக்கொண்டார்கள். ஏற்கனவே அவற்றின் மீது இரு வைணவர்கள் ஏறி இருந்தார்கள்.

குதிரைகள் பறந்து சென்றன. அந்த குருவுக்குக் குறுக்கு வழிகள் எப்படித்தான் தெரியுமோ, தெரியாது, வலக்கையும், இடக்கையுமாகத் திரும்பி இடையே பல தோப்புகளுள் குறுக்குலாகப் பாய்ந்து சென்று கொண்டிருந்தார்.

அவர் குதிரையைச் செலுத்திய அநாயாசமும், மற்றவர்கள் செலுத்திய வேகமும் இளைஞர்களைத் திகைக்க வைத்தன.

''அவர்கள் யார்? நமக்கு வேண்டியவர்களா? வேண்டாதவர்களா? நம்மை ஆபத்தில் சிக்க வைப்பார்களா?'' என்ற எண்ணமே அவர்களைத் தொடர்ந்தது.

ஒரு நாழிகைப் பிரயாணம் செய்ததும் சிற்றோடை ஒன்று குறுக்கிட்டது. சிறிய நதி போல் அது மணற்பாங்காக இருந்தது.

சிரமப் பரிகாரம் செய்து கொள்ள அங்கே இறங்கினதுதான் தாமதம்; விடப்பட்டுப் போயிருந்த குளம்பொலிகள் திடீரென்று கீழ்த் திசையில் கேட்டன. விறுவிறு என்று அவை பெரிதாகி வந்தன.

இமைக்கும் நேரத்துள் எட்டு குதிரை வீரர்களின் கரி உருவங்கள் அந்த இருளில் தூரத்தில் தெரிந்தன. வேகமாக அவர்கள் சாடி வந்து கொண்டிருந்தார்கள்.

வைணவர்கள் பரபரத்தார்கள். சுமைகளை விரைவாக அவிழ்த்து அவற்றிலிருந்து வாட்களை எடுத்துக் கொண்டார்கள்.

''ஹோய், ஹோய்'' என்ற இரைச்சலுடன் குதிரை வீரர்கள் வேகமாக வந்தார்கள்.

மணற்கரையில் வந்து தொப் தொப்பென்று குதித்தார்கள். வாட்களை உருவிக் கொண்டு வைணவர்களோடு சண்டைக்குப் போனார்கள்.

அந்த இரு திறத்தாருக்கும் மணற்கரையில் ஒரு வாட்போர் நிகழ்ந்தது.

நான்கு வைணவர்களும் எட்டு வீரர்களை எதிர்ப்பது கடினமாக இருந்தது. இருந்தும் கட்டுக்கோப்புடன் அழகாகச் சண்டை யிட்டார்கள் அவர்கள்.

இளைஞர்கள் பக்கம் திரும்பி, ''அகோ! நீங்களும் கலந்து கொள்ளுங்கள்!'' என்று குரு இரைந்தார்.

இளைஞர்கள் தயங்கினாலும் உடன் சண்டையிடுவதுதான் சரி என்று உணர்ந்து, குதித்து எழுந்து, தம் சுமைகளில் மறைத்து வைத்திருந்த வாட்களை உருவி, கோஷம் செய்து கொண்டு மணற்கரைக்கு வந்தார்கள்.

அடுத்த நிமிடத்தில் முதலாவது எதிரி விழவே, அவனை அடுத்து இதர எதிரி வீரர்களும் ஒவ்வொருவராகக் கீழே விழுந்து மடிந்தார்கள்.

கடைசியில் சூறாவளி ஒன்று அமிழ்ந்தாற்போல் எங்கும் மீண்டும் அமைதி சூழ்ந்தது.

வைணவர்கள் களைத்துப்போய் ஓடைக் கரைக்குப் போய் நீர் அருந்தினார்கள்.

வல்லபனும், தத்தனும் வாட்களைக் கழுவும்போது, ஏராளமான மீன்கள் நிணத்திற்காக வாட்களைக் கொத்த வந்தன.

கரை ஏறியதும் வல்லபன் தத்தனை நோக்கி மெதுவாக, "தத்தா, இந்த வைணவர்கள் யார்? இவர்களுக்காக அநாவசியமாய்ப் போரில் இறங்கினோமே! பல உயிர்கள் பலியாவதற்கு நாம் காரணமாகஇருந்தோமே! என் மனசு கேட்கவில்லையே!" என்றான்.

உடன் தத்தனும், "வல்லபா! எனக்கு ஒரு சந்தேகம் இருக்கிறது. முன்பு நாம் ஒரு கற்பூர வியாபாரியைப் பார்த்தோமே, நினைவு இருக்கிறதா?" என்று கேட்டான்.

"ஆமாம்" என்றான் வல்லபன்.

"இந்த வைணவ குரு அவனைப் போலத்தான் இருக்கிறார். மற்றவர்கள் அவன் சகாக்கள். இவன் ஒரு கோர காரியம் செய்து விட்டுத் தப்பித்துக் கொண்டிருக்கிறான்" என்றான் தத்தன்.

"என்ன காரியம்?"

"சம்புவராய அரசரின் மகன் மீது வாள் வீசியிருக்கிறான். இவனைத்தான் அரச வீரர்கள் தேடி வந்திருக்கிறார்கள். இவனுடன் நாம் தப்பித்து ஓடிக் கொண்டிருக்கிறோமே!" என்றான்.

"ஐயோ, ஆபத்தாயிற்றே!" என்றான் வல்லபன்.

இருவரும் உடனே சேர்ந்து, ஓடைக்கரைப் பக்கத்தில் தனியாக அமர்ந்து கொண்டிருந்த வைணவகுருவை அணுகினார்கள்.

"ஐயா! நாங்கள் வருகிறோம்! இவ்வளவு தூரம் எங்களை அழைத்து வந்ததற்கு மகிழ்ச்சி அடைகிறோம். விடை கொடுங்கள்!" என்றார்கள்.

குரு அதற்கு மறுமொழி பேசவில்லை.

ஏதோ கைகாட்டி விட்டு, மும்மரமாக ஒரு காரியத்தில் ஈடுபட்டிருந்தார். அவர் ஏதோ ஒரு விதச் சடங்கு செய்வது போல் தெரிந்தது.

கடைசியில் அவர் நீரை வாரி இறைத்து விட்டுக் கரையேறி மெள்ள அவர்களை நோக்கினார்.

"பிள்ளைகளே! எங்களை விட்டுப் பிரிவதற்காகவா உங்களை அழைத்து வந்தோம்?" என்று மெதுவாகக் கேட்டார்.

இளைஞர்கள் திடுக்கிட்டார்கள்.

"ஏன் சுவாமி! வேறு எதற்காக அழைத்து வந்தீர்கள்?" என்று கேட்டான் வல்லபன்.

"ஏன் தம்பி, உனது லட்சியம் நிறைவேற வேண்டாமா?" என்று கேட்டார் குரு.

"எங்கள் லட்சியமா! அது உங்களுக்கு எப்படித் தெரியும்?" என்றான் வல்லபன்.

"நீங்கள் தாடி மீசை வைத்துக் கொண்டதால் உங்களை எனக்குத் தெரியாமல் போய் விடுமா?" என்றார் குரு.

இளைஞர்கள் மீண்டும் திடுக்கிட்டார்கள்.

உடன் தத்தன் அவரை நோக்கிக் குறும்பாக, "எங்களுக்கும் நீங்கள் யாரென்று தெரியும். மொட்டை அடித்து விட்டால் எங்களுக்குத் தெரியாது என்று நினைக்கிறீர்களா?" என்று கேட்டான்.

பலமாகச் சிரித்தார் குரு.

"தெரிந்தால் அது என் வேலையைச் சுலபமாக்கி விடுமே! என்னை யார் என்று நினைத்தீர்கள்? அதைச் சொல்லுங்கள்!" என்றார் குரு.

"அந்த ஆஷாடபூதி கற்பூர வியாபாரிதானே!" என்றான் தத்தன் தைரியமாக,

குரு உரக்கச் சிரித்தார்.

"ஆஷாடபூதி! நன்றாகச் சொன்னாய்! வேடம் போடுவது எனக்கு மற்றொரு தொழில்! அதை நான் மாற்ற முடியுமா? இந்த வேடம் போட்டதால்தானே உங்களை நான் காஞ்சிபுரத்திலிருந்து தப்பிக்கும்படி வைக்க முடிந்தது. நான் இதைச் செய்திரா விட்டால் உங்கள் கதி என்னவாகியிருக்கும்? நீங்கள் தப்பித்திருக்கவே முடியாது. உங்கள் அரங்கன் மீது ஆணை!" என்றார் குரு.



வல்லபன் வெகுண்டான்.

"ஐயா வியாபாரியே! உமக்கிருக்கும் சாமர்த்தியம் எமக்கிருக்காது என்று எண்ண வேண்டாம். நீங்கள் உதவி செய்திராவிட்டால் கூட எங்களால் தப்பித்திருக்க முடியும். அது மட்டுமல்ல! நீங்கள் எங்களைத் தப்பிக்க வைத்தது வீண் போகவில்லை. அதற்குப் பிரதியாக உங்களையும் நாங்கள் இங்கே காப்பாற்றி விட்டோமே! எங்களைச் சாதாரணமாக நினைத்து விடாதீர்கள்!" என்றான் வல்லபன்.

"பிள்ளைகளே! உங்களை நான் சாதாரணமாக நினைக்கவில்லையே! நினைத்திருந்தால் உங்களை வாள் ஏந்தச் சொல்லியிருப்பேனா? சண்டையிலே புகச்சொல்லியிருப்பேனா? கேளும் பிள்ளைகளே! உங்கள் உதவி என்றென்றும் எம் பக்கம் இருக்க வேண்டும் என்று நினைத்துத்தான் உங்களைக் காஞ்சிபுரத்தில் கண்டு பிடித்ததும் தப்பிக்க வைத்தேன். இதை நினைவில் வையுங்கள்!" என்றார் குரு வேடம் தரித்திருந்த கற்பூர வியாபாரி.

"ஓகோ! உங்கள் கூட்டாளிகளாக எங்களைச் சேர்க்கப் பார்க்கிறீர்களா? அதற்கு நாங்கள் ஒருபோதும் சம்மதியோம்! எங்களுக்கு லட்சியங்கள் வேறு! எங்கள் வழியே போகிறோம்!" என்று கூறினான் வல்லபன்.

பிறகு இளைஞர்கள் மணல் மேட்டில் கிடந்த சுமைகளை விருட்டென்று தூக்கி முதுகில் போட்டுக்கொண்டு புறப்பட்டார்கள்.

"பிள்ளைகளே!" என்று உரத்துக் கூவினார் கற்பூர வியாபாரி.

அவர்கள் திரும்பினார்கள்.

வியாபாரி கால்களை எட்ட நடந்து அவர்களை அணுகி, "பொறுங்கள் பிள்ளைகளே! உங்கள் லட்சியம் என்று இப்போது என்னவோ சொன்னீர்களே! அது நிறைவேற வேண்டாமா?" என்று கேட்டார் நயத்துடன்.

"எங்கள் லட்சியமா?" என்றான் வல்லபன் அலட்சியமாக. "அது தர்ம ரீதியானது. உங்களுக்கும் அதற்கும் எந்தச் சம்பந்தமும் இல்லை" என்றான் தாட்சண்யம் இன்றி!

"வல்லபா!" என்றார் வியாபாரி, முதல் முறை அவனைப் பெயர் சொல்லி அழைத்துக்கொண்டே. "உன் லட்சியத்தை ஏன் நாங்கள் எங்கள் லட்சியமாக எடுத்துக்கொள்ளக் கூடாது?" என்று கேட்டார் ஆர்வத்துடன்.

"ஹூம்!" என்று அலட்சிய மூச்செறிந்தான் வல்லபன். பிறகு, "எங்கள் லட்சியமெல்லாம் நிறைவேறி விட்டது அதை முடித்து விட்டுத்தான் ஊர் திரும்புகிறோம்" என்றான் உதாசீனத்துடன்.

"எங்கே நிறைவேறியது? உன் லட்சியத்தில் பாதிதானே நிறைவேறியிருக்கிறது! அரங்கன் உனக்குக் கிடைத்துவிட்டார்; அவ்வளவுதான்! அவர் இன்னும் அரங்கம் போய்ச் சேரவில்லையே!" என்றார் வியாபாரி.

வல்லபன் திடுக்கிட்டான்.

'இந்த மனிதனுக்கு எல்லாம் எப்படித் தெரிந்திருக்கிறது? அரங்கனைக் கண்டோம் என்பது கூட இவனுக்கு எப்படித் தெரியும்? இவனுக்கு இதை எல்லாம் யார் சொல்லி இருப்பார்கள்? மகா தந்திரனாக இருக்கிறானே!' என்று நினைத்தான் வல்லபன்.

அவன் விழிப்பதைக் கண்டதும் கற்பூர வியாபாரி மேலும் தொடர்ந்தார்.

"பிள்ளைகளே! அரங்கனைத் திருவரங்கத்திற்கு எடுத்துச் செல்வதில் உங்களோடு நான் கூட்டுச் சேருகிறேன். அதற்குப் பிரதியாக நீங்கள் என் விஷயத்திலும் அவசியம் கூட்டுச் சேர வேண்டும்" என்று கூறினார்.

வல்லபனும், தத்தனும் ஒருவரை ஒருவர் பார்த்தார்கள்

தத்தன் உடனே, "ஐயா, ஆஷாட பூதியே! நீங்கள் யார்? அதை முதலில் தெரிவியுங்கள்! கற்பூர வியாபாரி என்கிறீர்கள். இங்கே கத்தியையும், வாளையும் பிடிக்கிறீர்கள்! ஆட்களோடு சண்டை போடுகிறீர்கள்! வெறும் வேடிக்கைச் சண்டையல்ல! முறைப்படி வாள் வீசி வீரனைப் போல் சண்டை இடுகிறீர்கள். தந்திரங்கள் பல புரிகிறீர்கள்! இரக்கமில்லாமல் ஆட்களைக் கொல்கிறீர்கள்! சொல்லுங்கள், நீங்கள் யார்?" என்று கேட்டான்.

வியாபாரி மீண்டும் பலக்கச் சிரித்தார்.

"ஏன், பிள்ளைகளே! ஒரு வியாபாரி வாள் பிடிக்கக் கூடாதா? சண்டை செய்யக் கூடாதா?" என்று கேட்டார் நகைப்புக் குரலில்.

"செய்யலாம். ஆனால் ஒரு வியாபாரியிடம் இரக்கம் இருக்கும்! உங்களைப் போல் இரக்கம் இல்லாமல் இராது!" என்றான் வல்லபன்.

"ஏன், என்னிடம் கூட இரக்கந்தான் இருந்தது. நான் சற்று முன் ஓடைத் தண்ணீரில் சில சடங்குகள் செய்தேனே! அவை என்ன?" என்று கேட்டார் வியாபாரி.

"எங்களுக்குத் தெரியவில்லை. நீங்கள்தான் சொல்லுங்களேன்!" என்றான் தத்தன் இளக்காரமாக.

"தம்பி! என்னை எப்போதுமே தாழ்வாக நினையாதே! நான் சத்திரத்தில் ஒரு நாள் உங்கள் உயிர்களைக் காப்பாற்றியவன். நான் சொல்வதைச் செவி சாற்றிக் கொள்ள வேண்டும்" என்றார் வியாபாரி.

"சரி, சொல்லுங்கள்!" என்றான் வல்லபன்.

"நான் ஓடைக்கரையில் செய்தது தர்ப்பணம் அப்பா!" என்றார் வியாபாரி.

"என்ன?" என்று திடுக்கிட்டுக் கேட்டார்கள் இளைஞர்கள்.

"இப்போது இங்கே நாம் கொன்றோமே அந்த எட்டு ஆத்மாக்களும் கரை ஏறுவதற்காகத்தான் தர்ப்பணம் செய்தேன். பாவம்! அப்பாவிகள்! ஒரு ராஜகாரியத்தைச் செய்வதற்காக நமதுபின்னால் ஓடிவந்தார்கள். நாம் கொடுத்தது பொய் இலச்சினை என்று தெரிந்து உடனே இவர்களை யாரோ ஏவிவிட்டிருக்கிறார்கள். இவர்கள் நம்மைத் தொடர்ந்து ஓடி வந்து நம் வாட்களுக்குப் பலியாகி விட்டார்கள். எங்கள் வாளால் இறக்கும் எந்த உயிருக்கும் தர்ப்பணம் உடனே செய்வது எங்கள் குல மரபு! ஆகையால்தான் இதைச் செய்தேன்" என்றார் வியாபாரி.

அந்த வியாபாரி பேசிக் கொண்டு போன நயமும், சாதுர்யமும் இளைஞர்களைக் கவர்ந்தன. இந்த ஆள் யார்? என்னவெல்லாமோ பேசுகிறானே!

வல்லபன் உடனே அவரைப் பார்த்து, "ஐயா! நீங்கள் பேசுவதைப் பார்த்தால் நீங்கள் ஒரு வியாபாரிதானா என்று சந்தேகம் வருகிறது. நீங்கள் யார்? உண்மையில் வியாபாரிதானா? அதை முதலில் கூறுங்கள்!" என்று கேட்டான்.

வியாபாரி சிரித்தார்.

"நல்லது தம்பி! நீ கேட்டது சரிதான்! நான் அந்த அளவுக்குச் சந்தேகத்தை உன் மனத்தில் வளர்த்து வைத்து விட்டேன். தம்பி! நான் யார் என்று சொல்கிறேன். இந்த விஜயநகர மண்டலத்தின் தென் பிரதேசத்திலுள்ள பிரதான ஒற்றன் நான். இங்கே வந்திருப்பவர்கள் என் சகாக்கள்! நாங்கள் வியாபாரம் செய்வது எல்லாம் ஒற்று அறிவதற்குத்தான்" என்றார் வியாபாரி.

இளைஞர்கள் அதிசயித்து நின்றார்கள்.

"ஆமாம்! தம்பி! இதை நம்புங்கள்! நான் விஜயநகர மண்டலத்து ஒற்றன்" என்றார் வியாபாரி மீண்டும்.

"தங்கள் பெயர் என்ன?" என்றான் வல்லபன்.

"பெயர் எதற்குத் தம்பி? கற்பூர வியாபாரி என்று சொன்னாலே போதும்! என்னைக் கற்பூரகாந்தன் என்றே பலரும் அழைப்பார்கள்" என்றார் வியாபாரி, சிரித்துக் கொண்டே.

இரு இளைஞர்களும் அதிசயத்திலிருந்து மீளவில்லை. யோசனையிலேயே மூழ்கி இருந்தார்கள்.

—தொடரும்

## ஓர் எச்சரிக்கை!



"புயல் சின்னங்கள்
கொண்டுள்ள மையங்கள்
48 மணி நேரம்
கன மழை,
இத்யாதி, இத்யாதி"
வானிலை அறிவிப்பு,
வாசிப்பவர்
. . . . . . . . . .
குடை இல்லை
நல்ல வெள்ளை ஆடை
வெளியே புறப்பட்டேன்
ஏன் தெரியுமா?
கேட்டது வானிலை அறிவிப்பு!

ஏ. எஸ். என். மோகன்

க்கு ''ஷாப்பிங்'காம்.'' முக்கியமாக 'ஸ்லிம்-சூட்' வாங்கணும். 'ஸ்லிம் சூட்'டில் வருவதுதான் பம்பாய் போட்டியின் முக்கிய அம்சம். பம்பாய் பூரா அந்தக் காட்சியைக் காண திரண்டு வருகிறார்கள். நான் நல்ல உடை வாங்கித் தரணும் மெர்ஸிக்கு என்கிறார். அந்தப் பெண் தீபாவும் இந்தப் போட்டிக்குப் போவாள். இது நன்றாக இருக்கிறதா?'' என்று கேட்டார்.

''அருண், திங் இட் ஓவர். நான் பழைய காலம் இல்லை. புதிய தலைமுறைகள் செய்வது எனக்குத் தெரியும். ஆனால் குடும்பம் என்று வருகையில் 'லிமிட்ஸ்' வேண்டும். அதைத் தாண்டிவிட்டால், ஒன்றும் சுகப்படாது. உனக்கு இன்னும் தீபா வேண்டுமானால், போன் பண்ணு அவளுக்கு. இந்தப் பம்பாய் போட்டிக்குப் போகாதே. நமக்குக் கல்யாணம் ஆக வேண்டுமானால் அந்த மாதிரி 'பப்ளிக் எக்ஸிபிஷன்' எனக்குப் பிடிக்காது என்று சொல். அவள் கேட்கிறாளா என்று பார். அப்புறம் நீ முடிவு எடு'' என்று சொன்னார். 'பைப்'-புகையத் தொடங்கி விட்டது.

அருணுக்கு யோசித்து யோசித்து தலையை வலித்ததே தவிர, ஒரு விடையும் கிடைக்கவில்லை. தந்தை கொடுத்த 'அல்டிமேட'த்தை தீபாவிடம் சொல்லவும் துணிவில்லை. அவளுக்குக் கண்டிஷன்கள் போட தனக்கு என்ன 'ரைட்' இருக்கிறது? ஏதோ பறிகொடுத்தாற்போல ரூமிலேயே இருந்தான். எஸ்டேட் வேலையிலும் கவனம் செல்லவில்லை. அருண் இப்படிக் கடத்திய இரண்டு தினங்கள் பெற்றோருக்கு அச்சத்தை உண்டு பண்ணியது.

அன்றிரவு ஜகன் சொன்னார். ''அருண், நாளை எங்கள் கிளப்கு 'ஷிகார் ட்ரிப்' மான் வேட்டையாடக் கிளம்புகிறோம். மாதப்பா இல்லாததால் ஒரு ஸீட் ஜீப்பில் இருக்கு. நீ வருகிறாயா?'' என்றார்.

ஏதாவது மாற்றம் தேவை என்று தோன்றியதால், அருண் உடனே ஒப்புக்கொண்டான். ''கேமிரா, டெலிபோகஸ் லென்ஸ், மூவி கெமிரா முதலியஎல்லா போட்டோ சாதனங்களையும், நிறைய கறுப்பு, கலர் பிலிம் ரோல்களையும் புகைப்பட கேஸில் அடக்கம் செய்துகொண்டான். காட்டு மிருகங்களை 'ஷூட்' செய்வதும், இஷ்டம். அதைவிட காமிராவில் 'ஷூட்' செய்வதும் அவனுக்குப் பிரியம். இவற்றில் மனதைச் செலுத்தினாலாவது தீபாவை சற்று மறக்க முடிகிறதா என்று பார்க்கலாம் என்று இந்த ஒரு வார காட்டுப் பயணத்துக்கு அருண் தயாராகிவிட்டான்.

—தொடரும்

# துளி துளி

''இரும்தார் போட்ட ராயப்
பேட்டை சாலையிலே
பெரும் பி.டி.ஸி. பஸ்களின்
பேரரவம் கேட்டிலையோ
பிள்ளாய்! எழுந்திராய்
நோயாளிகாள்!''

என்பது போன்ற திருப்பள்ளி எழுச்சிப் பாடலைப் பாடி, சென்னை ராயப்பேட்டை நெடுஞ்சாலையிலுள்ள ராயப்பேட்டை அரசாங்க வைத்தியசாலையில் பணியாட்களை எழுப்பும்படி நேர்ந்திருக்கிறதாம்.

பணியாட்கள் நோயாளிகளுக்கென்று வைக்கப்பட்டிருக்கும் பல மெத்தைகள், தலையணைகளைப் போட்டுக்கொண்டு காலை 7,8 மணி வரை ஆனந்தமாகத் தூங்குகிறார்களென்று தமிழ் மாநில மருத்துவ மந்திரி திரு ஆர். சௌந்திரராஜன் தெரிவிக்கிறார். நைட் டியூட்டி நர்ஸ் அம்மாக்கள் சிலரும் தூங்குகிறார்களாம்.

● ●

அதென்னமோ இந்தக் காளயுக்தி ஆண்டில் வெயிலுக்குச் சென்னை நகரின்மீது மிகவும் ஆசை ஏற்பட்டிருக்கிறது. அது உஷ்ணத்தை 103 டிகிரி முதல் 108 டிகிரி ஃபாரன்ஹீட் வரை தாராளமாக வீசி வருகிறது. வெயிலின் கடுமையைக் குறைக்க ஒரே ஒருவழியிருக்கிறது. மறுநாள் காலையில் பத்திரிகையைப் பார்த்த பிறகுதான் முதல் நாள் 107 டிகிரி வெயில் அடித்ததென்று தெரிந்து கொள்கிறோம்! உஷ்ணத்தைப் பற்றி 30, 31 32 டிகிரி ஸெண்டிகிரேட் என்று ஸெண்டிகிரேட் முறையில் எண்ணிப் பார்த்துக் கொண்டால் உஷ்ணம் குறைவானதாகத் தோன்றும், மனப்பிரமையால்.

● ●

பாகிஸ்தானின் மாஜித் தலைவரின் மனைவி திருமதி பூட்டோ சிறைச்சாலை அதிகாரிகளை, ''நாய்கள்'', ''நாய்கள்'' என்று வைதாராம். கணவனைப் போல் மனைவியும்! அந்தப் பூட்டோ, சில ஆண்டுகள் முன்னர் ஐ.நா.வில் இந்தியாவைப் பற்றிப் பேசியபோது, 'இந்திய நாய்' என்று குறிப்பிட்டார் அம்மையார்?

ஆந்திரப்பிரதேசக் கல்வி மந்திரி ஜி. வெங்கடராம ரெட்டி, ஒரு விஞ்ஞான சங்கத்தைத் திறந்து வைக்கும்போது சொன்னார்: ''நான் இந்தக் கழகத்தைத் திறந்துவைக்க அருகதையற்றவன். ஏனென்றால், நான் பௌதிக சாஸ்திரப் (Physics) பரீட்சைகளில் தொடர்ந்து ஃபெயிலாகி வந்திருக்கிறேன்...''

ஆனால், உலகத்திலுள்ள எல்லா விஷயங்களையும் பற்றிப் பேச முன்வரும் நமது நூற்றுக்கணக்கான அரசியல் தலைவர்களும், டஜன் கணக்கான மந்திரிகளும் ஆந்திர மந்திரியைப் போன்று குறைப்பட்டுக்கொள்ளத் தெரியவில்லை. ஏனென்றால், அவர்களில் பலர் கல்லூரிக்குள் காலை வைத்திருந்தால் தானே பரீட்சை எழுதிப் பெயிலாவதற்கு?

● ●

ஒரு பிரபல ஓவியர் ஓர் அழகான பெண்ணின் உருவத்தை வரைந்தார். ஆனால் அது மிகவும் கோரமாகக் காணப்பட்டது. சில விமரிசகர்கள் அந்த ஓவியர், அந்தப் பெண்ணின் மனப்போக்கைச் சித்திரித்திருக்கிறார் என்று அபிப்பிராயப்பட்டார்கள்.

நமது பிரதமரின் லண்டன் விஜயத்தின்போது நடைபெற்ற சம்பவம் ஒன்று இந்தக் கதையை நினைவுபடுத்துகிறது. 16 வயதுச் சிறுவன் ஒருவன் பிரதமரின் உருவத்தை ஒரு காகிதத்தில் வரைந்து, ஆட்டோகிராப் செய்யும்படி கேட்டுக் கொண்டான்.

''என் முகத்தில் வருத்தம் தோய்ந்தது போன்றிருக்கிறதே, நான் இப்படிக் காணப்படவில்லை!'' என்று கூறி ஆட்டோகிராப் செய்ய மறுத்துவிட்டார் பிரதமர்.

அந்தச் சிறுவன் ஓர் ஓவிய மேதையாக இருந்து அவர் மனத்தைப் படம் பிடித்துக் காட்டியிருக்கலாம் அல்லவா?

அவர் வெளியூர்களில் புன்னகை புரிய முகத்தை வைத்துக்கொண்டிருந்தாலும், ''ராஜ்நாராயண்-சந்திரசேகர் லடாய், ஜயப்பிரகாஷ் நாராயணனின் புதிய 'முழுப் புரட்சி இயக்கப் பேச்சு'' முதலிய அம்சங்கள் அவர் மனத்தில் வருத்தத்தை உண்டு பண்ணாமலா இருக்கும்? அந்த வருத்த உணர்ச்சியை அந்தச் சிறுவன் சித்திரத்தில் காட்டியிருக்கிறான்!

-பாலாஜி

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

வியாபாரியின் பேச்சு தொடர்ந்து கொண்டிருந்த போதே, அவரது சகாக்கள் அந்த எட்டு வீரர்களின் உடல்களையும் குழி தோண்டிப் புதைத்து வைத்தார்கள். அவர்களது குதிரைகளைப் பிடித்து மேட்டில் ஏற்றி வட திசையாய் அடர்ந்த காட்டுக்குள் விரட்டி விட்டார்கள்.

எங்கும் கும்மிருட்டுக் கவியத் தொடங்கி இருந்தது.

இளைஞர்கள் இன்னும் அப்படியே நின்று கொண்டிருந்தார்கள்.

வியாபாரியும், அவரது சகாக்களும் தங்கள் குதிரைகளில் ஏறிக் கொண்டு, அந்த இளைஞர்கள் பக்கம் வந்தார்கள்.

வியாபாரி அந்த இளைஞர்களைப் பார்த்து, "ஏறிக் கொள்ளுங்கள் தம்பி" என்றார்.

வல்லபன் அவர்களை ஆழ்ந்து பார்த்தான்.

பிறகு தலையைக் குனிந்து கொண்டே, "இல்லை ஐயா, நாங்கள் வரவில்லை" என்றான்.

வியாபாரி சிரித்தார் மீண்டும்.

"தம்பி இவ்வளவு சொல்லியும் அவநம்பிக்கையா? ஒரு விஷயம் கேள் தம்பி, நீ இந்த ராஜ்யத்தைத் தாண்டுகிற வரை உங்களுக்கு எப்படியும் ஆபத்து உண்டு. எங்களுடன் சேர்ந்து சென்றால் அதை நிச்சயமாகத் தவிர்க்கலாம். அதற்காகவாவது எம்முடன் வாருங்கள்!" என்று கூறினார் அவர்.

வல்லபன் யோசனை செய்திருக்கும்போது, தத்தன் இடைமறித்து, "சரி, உங்களுடன் வருகிறோம்" என்றான் தீர்மானமுடன்.

ஆச்சரியத்துடன் வல்லபன் அவனைப் பார்த்தான்.

"கவலை வேண்டாம்!" என்பது போல் தத்தன் கண்ணைக் காட்டினான்.

பிறகு இருவரும் வணிகர்கள் ஏறியிருந்தகுதிரைகள் மீது தொத்திக்கொண்டார்கள்.

அவ்வளவில் குதிரைகள் இருட்டுக்குள் சிட்டாய்ப் பறந்தன.

இரவாகி வெகுநேரம் ஆனபடியால், எங்கும் ஒரு மினுமினுப்புக் கூடி, பார்க்கும் இடமெல்லாம் சொப்பனம் போல் தெரிந்தது.

இடையில் உள்ள சத்திரங்களைத் தவிர்த்து, சுற்று வழியாய் ஒரு யாமம் பிரயாணம் செய்ததும், குதிரைகள் எல்லாம் நுரை தள்ளிவிட்டன.

உடன் ஒரு வெட்டவெளியில் அமர்ந்து, தங்கள் உணவுகளைக் கூட்டாக அருந்தி, குதிரைகளையும் மணல் மீது அனுப்புத்திரப் புரள விட்டார்கள்.

எல்லோரும் சிரமப் பரிகாரம் செய்து கொண்ட பிறகு மீண்டும் பிரயாணத்தைத் தொடங்கினார்கள்.

அடுத்து நான்கு நாழிகைகள் அவர்கள் பிரயாணம் செய்ததும், விடியாமக் கோழியின் முதல் கூவல் தூரத்திலிருந்து கேட்டது.

அப்படியும் அந்தக் குரு தம் குதிரையைச் செலுத்திப் போவதைப் பார்த்து, வல்லபன் ஆச்சரியம் அடைந்தான். களைப்பில்லாதவர் போல் அவர் போய்க்கொண்டிருந்தார். எவ்வளவு தூரம் இன்னும் போவாரோ என்று நினைக்கும் வேளையில், ஒரு இடத்தில் சடக்கெனக் குதிரையை நிறுத்தினார்.

எல்லோரும் நின்றார்கள்.

கற்பூர வியாபாரிக்கு அந்த இடமெல்லாம் கரதலபாடமாய் தெரிந்திருந்தது. எல்லோரையும் அழைத்துக் கொண்டு, அங்குள்ள தோப்புக்குள் சென்றார். அதன் அருகாமையில் சலசலத்த ஓடையில் நீர் அருந்தி, களைப் போடு ஒரு மேட்டு வெளியிலே அமர்ந்தார்கள்.

அப்பால் அந்த ஒற்றர் தலைவன் இரு இளைஞர்களை சற்று தூரம் இட்டுச் சென்று,

"தம்பிகளே! உங்களைப் பிரியும் நேரம் வந்துவிட்டது. அதற்கு முன் ஒரு வார்த்தை! அதோ பாருங்கள்!" என்றார்.

பார்த்த இடத்திலே சிறு மலையும், மலைக்கு மேலே கோட்டையும், கோட்டைக்கு மேலே மாட மாளிகை ஒன்றும் தென்பட்டது.

"என்ன தெரிகிறது?" என்றார் கற்பூர வியாபாரி.

"மாளிகை, ஐயா!" என்றான் வல்லபன்.

"கோட்டை எப்படித் தெரிகிறது?"

"அழகிய நிழற் சித்திரமாய்த் தெரிகிறது."

"எனக்கு அப்படித் தெரியவில்லை. அந்த அரண் மேல் உள்ள பரிகங்களைப் பார்! அதைப் பார்த்தால் ஆகாயத்தை நோக்கி வாயைத் திறந்து தனதுபற்களை எல்லாம் காட்டிக்கொண்டிருக்கும் ஒரு அரக்கன் போல் தெரிகிறது."

வல்லபன் உற்றுப் பார்த்தான்.

"தாங்கள் சொல்வது போலவும் இப்போது தெரிகிறது."

"நன்றாகச் சொன்னாய் வல்லபா! அவரவர் நோக்கம் போல, காட்சி தெரியும்! குழந்தைக்கு அதன் பொம்மைதான் யானை! ஆனால் தச்சருக்கு அது வெறும் மரம்."

"தாங்கள் சொல்வது உண்மை ஐயா! நான் குழந்தைதான்!" என்றான் வல்லபன்.

கற்பூர வியாபாரி மெள்ள நகைத்தார்.

"நல்லது! குழந்தையைப் பெரியவனாக்கி விடலாம் அல்லவா? அதற்காகத்தான் உன்னை இப்போது அழைத்தேன். நீ குழந்தை அல்ல என்பது எனக்கு நிச்சயமாகத் தெரியும். கேள், வல்லபா! அந்தக் கோட்டையை அரக்கன் என்று சொன்னேன்! உண்மையில் அது அரக்கத்தனம் நிறைந்த கோட்டை!"

"ஏன்? அந்தக் கோட்டையில் யார் இருக்கிறார்கள்?" என்றான் வல்லபன்.

"சொன்னால் ஆச்சரியப்படுவாய்!"

"சொல்லுங்கள்!"

"அங்கே ஒரு உயிரைச் சிறைப்பிடித்து வைத்திருக்கிறார்கள்!"

"யாருடைய உயிர் அது? சிறைப்படுத்தியவர் யார்? இது யாருடைய கோட்டை? யாருடைய ராஜ்யம் இது?" என்று சரமாரியாகக் கேட்டான் வல்லபன்.

"வல்லபா!" என்று துவங்கினார் வியாபாரி. "நாம் இருப்பது ராஜகம்பீர ராஜ்யம்! தொண்டைமண்டலம் என்று பழம் நாளிலிருந்து சொல்வார்கள். இதை இப்போது சம்புவராயர்கள் ஆள்கிறார்கள். இதன் அரசர் ராஜநாராயண சம்புவராயர்! அவருக்கு ராஜகம்பீரன் என்றொரு பட்டம் உண்டு. அதனாலேயே இந்த ராஜ்யத்தை ராஜகம்பீரம் என்று அழைப்பார்கள்.

"அதோ அந்த மலை தெரிகிறதே, அதுதான் ராஜகம்பீர மலை! படைவீடு என்பது இதனது பழைய பெயர்! உண்மையில் இதைப் படை வீடாகவே உபயோகப் படுத்துகிறார்கள் சம்புவராயர்கள். யார் படை எடுத்து வந்தாலும், இந்தப் படை வீட்டுக்குள் புகுந்து விடுவார்கள். கோட்டைகளிலே மலைக்கோட்டையை வெல்வது கடினம். ஆகவே இந்த ராஜகம்பீர மலை இவர்களுக்குப் பெரிதும் பயன்படுகிறது! ஆனால், இப்போது வல்லபா, இந்த மலையை இவர்கள் பல அநியாய காரணங்களுக்காக உபயோகிக்கிறார்கள்."

"என்ன செய்கிறார்கள், ஐயா?" என்றான் வல்லபன்.

"இதில் ஒருவரைச் சிறை வைத்திருக்கிறார்கள், அநியாயமாக!"

"யாரை என்று கேட்டேனே!" என்றான் வல்லபன்

"உனக்குத் தெரிந்த ஒருவர்தான்!" என்றார் வியாபாரி.

வல்லபன் திடுக்கிட்டான்.

"எனக்குத் தெரிந்தவரா? யார் அது?" என்று பரபரப்புடன் கேட்டான்.

"ஒரு பெண்!"

"பெண்ணா?"

"ஆமாம்!"

"யார் அவள்? எனக்கு எப்படித் தெரிந்தவள்?"

வியாபாரி அவனை ஆழ்ந்து பார்த்தார்.

"நீகூட அவளைக் காப்பாற்ற நினைத்தாய்!"

வல்லபன் பரபரத்தான்.

"யார் அது, ஐயா? சொல்லுங்கள்! புதிர் போடாதீர்கள்!"

"வல்லபா! மகர கண்டிகை கொடுத்தாளே, அந்தப் பெண்!"

"யார்?" என்றான் வல்லபன் திடுக்கிட்டு.

"உன்னைச் சத்திரத்தில் பார்த்தாளே, அந்தப் பெண்!"

வல்லபன் மீண்டும் திடுக்கிட்டான்.

அவனது இதயத்தில், "மகரவிழியாளே!" என்ற ஒரு அழைப்பு இன்னிசை கீதமாய் ஒலித்தது.

"அவளா?" என்றான் பாதியான குரலில். "அவளை ஏன் அங்கே வைத்திருக்கிறார்கள், ஐயா?"

"அவள் ஒரு ராஜகுமாரி!"

அந்த வார்த்தைகள் விழுந்ததுதான் தாமதம்; வல்லபனின் மனம் பூப்பூவாய் மலர்ந்தது.

எங்கிருந்தோ மகிழம்பூவின் வாசம் வந்து அவனைத் தழுவியது.

அந்த சுகிர்தமான அனுபவத்தில் அவன் உடல் பரவசமாகித் தத்தளித்தது.

என்ன ஒற்றுமை! அவன் நினைத்ததற்கும் அவள் ராஜகுமாரியாக இருப்பதற்கும்!

வியாபாரி தன் வார்த்தையை நிறுத்திவிட்டு அவனைக் கவனிப்பதைப் பார்த்ததும், பரபரத்து, "எந்தத் தேசத்து ராஜகுமாரி ஐயா?" என்று குழறியவாறு கேட்டான் அவன்.

"அவளா? பாண்டியத்தின் ராஜகுமாரி!"

"பாண்டியர்களா?"

"ஆமாம் வல்லபா! மதுரை மண்டலத்தில் கடைசியாக ஆட்சி புரிந்தாரே, மன்னர்சடையவர்மபராக்கிரம பாண்டியர் - அவரது பேத்தி இவள்! மதுராங்கினி என்று பெயர்!"

அந்தப் பெயர் காதில் விழுந்ததும் மீண்டும் மனமெல்லாம் குளுமையாகியது. அவனது மகரவிழியாள் மதுரமான நயனங்களோடு அவனைக் குளிர விழிப்பது போல் இருந்தது. அவள் பெயரே மதுரமாக வழிகிறதே, என்று நினைத்தான்.

"ஐயா!" என்றான் வல்லபன். "தாங்கள் சொல்வதெல்லாம் ஆச்சரியமாயிருக்கிறதே! உங்களுக்கு இதெல்லாம் எப்படித் தெரியும்?" என்று கேட்டான்.

சிரித்தார் வியாபாரி. "வல்லபா! இதைக்கூடத் தெரிந்து கொள்ளாவிட்டால் நான் ஒற்றர் தலைவனாக எப்படி இருக்க முடியும்? ஒரே ஒரு தவறு! பாண்டியர் பூமியில் இப்படி ஒரு சதி நடக்கிறது என்பது எனக்குத் தெரியாமல் போய்விட்டது!"

"என்ன சதி ஐயா?" என்றான் வல்லபன்.

"சம்புவராயர்கள் அந்தச் சதியைச் செய்திருக்கிறார்கள். பாண்டிய வம்சத்தாரில் சிலர் அதற்கு உடந்தையாக இருக்கிறார்கள்."

"என்ன செய்தார்கள் என்று சொல்லுங்கள்!" என்று ஆவலுடன் கேட்டான் வல்லபன்.

"வல்லபா! ஒரு இரணம் என்றால் அதன் ஆணிவேரைத் தேடிச் செல்வார்கள் வைத்தியர்கள். அந்தச் சதியின் மூலக் கதையைச் சொன்னால்தான் உனக்குப் புரியும். வல்லபா! தமிழ் பேசும் பூமியில் ராஜ்யங்கள் இருக்கும் நிலையைக் கவனி. தெற்குக் கோடியின் சிறிய பகுதியில் பலவீனமான பாண்டியர்கள்! வடக்குக் கோடியில் சம்புவராயர்கள்! நடுவில் உள்ள பெரும் பகுதியில் சுல்தானியர்கள்! இதில் சம்பு

## தாய்லாந்தில் தலையைத் தொடக்கூடாது!

ஆசியாவின் அரிசிப் பெட்டகம், நடனமாடும் நங்கைகள், கோவில்கள்-குத்துச் சண்டை வீரர்கள் நிறைந்த பூமி தாய்லாந்த்.

தபால் நிலையங்கள் திங்கள் முதல் வெள்ளி வரை காலை ஏழரை மணி முதல் மாலை ஐந்தரை மணிவரையும், சனி-ஞாயிறுகளில் காலை ஒன்பது மணி முதல் பகல் பன்னிரண்டு மணி வரையும் இயங்கும். தொலைபேசி மூலம் பேச, தந்திகள் தந்திட 24 மணி நேரமும் தங்கும் ஓட்டலிலிருந்தவாறே ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

ஒருவர் தலையை இன்னொருவர் தொடுவது என்பது இழுக்கான செயலாக இங்கு கருதப்படுகிறது.

இங்கு வரும் பயணிகள் மதிப்பு மிக்க வைரக்கற்கள், தங்கம் மற்றும் விலையுயர்ந்த நகைகளைத் தங்கு தடையின்றி எடுத்துப் போகலாம்.

உலகிலேயே அதிக தித்திப்புச் சுவையுள்ள அன்னாசி, பாப்பையா பழங்கள் இங்கு கிடைக்கின்றன.

லுக் ஈஸ்ட்டிலிருந்து: த.மு.ரா.



வராயர்கள் பாண்டியர்களைத் தங்களோடு சேர்த்துக் கொண்டால் இடையில் உள்ள சுல்தானியர்களை ஏதாவது செய்துவிடலாம் என்று நினைத்தால்......''

''அப்படிச் செய்ய முடியுமா?''

''செய்ய முடியாதுதான்! சுல்தானியர்கள் மிகப் பலம் பொருந்தியவர்கள். அவர்களை இந்தச் சம்புவராயர்கள் எளிதில் தோற்கடித்துவிட முடியாது.''

''சுல்தானியர்களுக்கு அடிமைகள்தானே இந்தச் சம்புவராயர்கள்! தங்கள் எஜமானர்களையே இவர்கள் எதிர்க்கத் துணிவார்களா?'' என்றான் வல்லபன்.

''துணியலாம். இப்போது இருக்கும் ராஜரீக முறையில் தர்மம் என்ற பேச்சிற்கே இடமில்லை. சம்புவராயர்கள் சோழர் காலத்திலிருந்து குறுநில மன்னர்கள்தான்! இருந்தும், சோழ அரசன் பலவீனமானால், இவர்கள் உடனே தங்கள் அதிகார சுதந்திரத்தை நிலைநாட்டி விடுவார்கள். ஆகவே சம்புவராயர்களை நம்பி விட முடியாது. அதுவும் இப்போது அவர்களுக்குப் புது ஆசைகளும், புது பயங்களும் தோன்றியிருக்கின்றன.''

''அவை என்ன, ஐயா?''

''முதலில் பயங்களைச் சொல்கிறேன்; அது எங்கள் விஜய நகர மண்டலம் பெரிதாக வியாபித்துக்கொண்டே வருவதுதான். இப்போது எங்கள் மண்டலம் தெற்கில் சந்திரகிரி வரை வந்து இவர்களது எல்லையைத் தொட்டுக்கொண்டு நிற்கிறது. இதனுல்தான் இவர்களது பயங்கள்!''

''புரிகிறது, ஐயா!''

''நாங்கள் இப்படியே வியாபித்துக் கொண்டு, மெள்ள மெள்ள தெற்கு நாடுகள் எல்லாவற்றையும் கபளீகரம் செய்து விடுவோமோ என்று அஞ்சுகிருர்கள்!''

''அதையும் புரிந்து கொள்கிறேன்.''

''அப்படி ஏதாவது நாங்கள் செய்வதற்கு முன், இவர்களே தெற்கு நாடுகள் எல்லாவற்றையும் ஜெயித்துவிட்டு, பெரியதொரு சாம்ராஜ்யத்தை ஏற்படுத்த விரும்புகிருர்கள்!''

''அது முடியுமா?''

''முடியுமோ, முடியாதோ அது அவர்கள் ஆசை! ஆகவே மதுரை சுல்தானை ஒழிக்கும் எண்ணத் துடன் நாங்கள் ரகசியமாக சம்புவராயர்களின் உதவியைக் கோரும்போதெல்லாம் , அவர்கள் எங்களுக்கு எந்த விதப்பிடியும் கொடுக்காமலே இருந்து வந்திருக்கிருர்கள். இது நமது தர்மத்திற்கும், வாழ்க்கைக்கும் இவர்கள் செய்யும் துரோகம்! அநியாயத் துரோகம்!'' என்று வெகு அழுத்தமாக உறைத்துப் பேசினுர் வியாபாரி.

வியாபாரி கடைசியாகச் சொன்னது வல்லபனைச் சுள் என்று உறைத்து விட்டது.

ஒருகணம் நிமிர்ந்து அமர்ந்தான் அவன்.

''ஐயா, என்ன சொன்னீர்கள்? சுல்தானியர்களை ஒழிப்பதற்கு நீங்கள் இந்தச் சம்புவராயர்களின் உதவியை நாடினீர்களா? அவர்கள் உங்களுக்கு அதைத் தர மறுத்தார்களா?'' என்று படபடப்போடு கேட்டான் வல்லபன்.

''ஆமாம், தம்பி! நாங்கள் கேட்டோம். அவர்கள் தர மறுத்தார்கள். இது நியாயமா?'' என்று குரலை உயர்த்திக் கேட்டார் வியாபாரி.

''அநியாயம் அநியாயம்!'' என்று வெகுண்டு இரைந்தான் வல்லபன். அந்த விடியாமத்து வேளையின் நிசப்தத்தில் அது எங்கும் ரீங்கரித்தது.

''ஐயா! நமது ஜனங்கள் சென்ற முப்பத்தைந்து ஆண்டுகளாய் அந்நிய ஆட்சியில் நலிந்து விட்டார்கள். ஆயிரக் கணக்கான பேர்கள் கொடுமைகளுக்கு அஞ்சி, அண்டை ராஜ்யங்களில் 'அஞ்சினுன் புகலிட'ங்களில் சரண் புகுந்து விட்டார்கள். நமது கோவில்கள் எல்லாம் பாழடைந்து விட்டன. ஒரு விழா, ஒரு உற்சவம், ஒரு பண்டிகை, ஒரு நல்லநாள் எதையும் கொண்டாடாமல் இந்தத் தமிழ்பேசும் நாடுகள், எல்லாம் கைம்மை அடைந்தது போல் கிடக்கின்றன. மக்கள் எங்கும் பரிதவிக்கிருர்கள். அல்லாடுகிருர்கள். இவற்றுக்கெல்லாம் காரணமாக இருக்கும் ஒரு பொதுவான எதிரியை ஒழித்துவிடாமல், இந்தச் சம்புவராயர்கள் வெறும் சுயநலக்காரர்களாக இருக்கிருர்களே! இது நம் சமூகங்களுக்கே செய்யும் பெரும் துரோகம்!'' என்று உணர்ச்சி பொங்க இரைந்தான் வல்லபன்.

அவன் அப்படிப் பேசுவதைப் பார்க்கப் பார்க்கக் கற்பூர வியாபாரிக்கு மகிழ்ச்சி பொங்கியது.

அவன் உணர்ச்சிகள் மெள்ள அடங்கும் போது, ''தம்பி!'' என்ருர் அவர். ''இந்த நிலையில் இந்தச் சம்புவராயர்கள் மற்ருெரு துரோகத்தையும் செய்ய முன் வந்திருக்கிருர்கள்.''

''என்ன அது ஐயா?''

''தெற்கு ஓரப் பாண்டியர்களைத் தங்களோடு இணைத்துக் கொள்ள முன் வந்திருக்கிருர்கள்.''

''ஏன் ஐயா?'' என்ருன் வல்லபன்.




''தங்களுக்குத் துணைகளைச் சேர்த்து எங்களைப் பயமுறுத்துவதற்காகவோ, அல்லது சுல்தானியர்களை விரட்டித் தாங்களே தமிழ் பூமி முழுவதையும் கைப்பற்றுவதற்காகவோ! இதில் இரண்டாவது காரணம் நிறைவேறினுல் நாங்கள் மிகவும் சந்தோஷப் படுவோம்'' என்ருர் அவர்.

''அது நிறைவேறுமா?'' என்ருன் வல்லபன்.

''நிச்சயம் நிறைவேருது! இவர்கள் பலமில்லாதவர்கள். சுல்தானியர்களை விரட்டி விட முடியாது. இருந்தும் இந்தச் சம்புவராயர்கள் ஒரு சதியில் முனைந்தும் விட்டார்கள். அதுவும் கேவலமான ஒரு சதி!'' என்ருர் கற்பூரத்தார்.

''அதைச் சொல்லவில்லையே, ஐயா!'' என்ருன் வல்லபன்.

''சொல்கிறேன். பாண்டியத்திலிருந்து அரசகுமாரி மதுராங்கினியைக் கடத்தி வந்திருக்கிருர்கள். இவளைத் தங்கள் அரச குமாரனுடன் ராட்சஸ விவாகம் ● செய்வித்து பாண்டியர்களைத் தங்களுக்குப் பக்கபலமாக ஆக்கிக் கொள்ள முனைந்திருக்கிருர்கள். இது மிகவும் கேவலமான காரியம் அல்லவா?'' என்ருர் கற்பூரத்தார்.

வல்லபனின் நினைவுகளைப் பக்கென்று ஏதோ கவ்வியது.

அவன் கண்களும் அப்படியே ஸ்தம்பித்து நின்றன.

அவன் உணர்வுகளை ஊசலாட விடுவது போல் கற்பூரத்தார் சிறிது நேரம் மௌனமாக இருந்தார்.

பிறகு, ''அந்தப் பாண்டிய அரசகுமாரி மதுராங்கினிதான் அதோ அந்த ராஜகம்பீரக் கோட்டையில் ஒரு மாளிகையில் சிறை வைக்கப் பட்டிருக்கிருள் அங்கேதான் நீ இன்னும் சில நாழிகைக்குள் போகப்போகிருய்!'' என்று சொல்லி அவனை உற்றுப்பார்த்தார். கற்பூர வியாபாரி.

—தொடரும்.

● ராட்சஸ விவாகம் - பலாத்காரத் திருமணம்.



# ஜெனரல் சக்கரவர்த்தி

வீடே அதிரும்படியான அதட்டல், பேச்சிலே மிரட்டல், சிரித்தால் கூட அதில் அதிர்வேட்டொலி - இவர்தான் ஜெனரல் சக்கரவர்த்தி சிவாஜி.

பட ஆரம்பத்தில் ராணுவ அணிவகுப்பையும், வானவீதியில் விமான /வட்டமடிப்பையும், டாங்கிகளின் நடமாட்டத்தையும் செய்திப் படம் போல் நீண்ட நேரம் காட்டுகிருர்களே, ஏதோ ஒரு மாபெரும் ராணுவக்காரரின் தியாக வரலாறு போலிருக்கிறது என்று எதிர்பார்க்கிருேம்; நன்ருக ஏமாறுகிருேம்.

கொஞ்ச காலமாகத் தமிழ்ப் படவுலகில் வந்து புகுந்து கொண்டிருக்கிறதே கன்னிப் பெண் கெட்டுப் போகிற கதை, அதில் இதுவும் ஒன்று. அதற்கு சிவாஜியின்சப்பைக்கட்டு! ''முன் காலத்தில் கல்யாணம் ஆன பிறகு குழந்தை பிறக்கும். இப்பொழுது குழந்தை பிரந்த பிறகு கல்யாணம் ஆகிறது! இது 'நியூவேவ்' காலம்'' என்று விமரிசித்துத் தானே திருப்தி அடைகிருர்.

கண்டிப்புக்கும் கருருக்கும் பெயர் போன ஜெனரல் சக்கரவர்த்தியின்வாக்கா இது என்று நாம் விண்டு விரிந்து போகிருேம்.

அந்த ''நியூவேவ்' கன்னியான சிவாஜியின் மகள் கவிதா - கல்லூரி மாணவி - பிக்னிக் போன இடத்தில் கிரிக்கெட் ஆட்டக்காரரான மோகனைச் சந்திக்க, அவரது காதல் விளையாட்டுக்குப் பந்தாகித் தாய்மை அடைந்து விடுகிருள். அந்தச் செய்தியை தமக்கு அறிவிக்கிறது ஜெனரல் வீட்டு மாடிப் படிகள்.

சிவாஜி ஆப்பிரிக்க நாட்டிற்கு மாற்றலாகிப் போவதாகச் சொல்லும்பொழுது கவிதா மாடிப் படிகளில் இறங்கி ஓடிவர, மயங்கி விழும் மகளை ஓடிச் சென்று தூக்குகிற டாக்டர் கே. ஆர். விஜயா நாடியைப் பிடித்துப் பார்த்து விட்டு அதிர்ச்சியோடு, ''வழுக்கி விழுந்து விட்டாள்'' என்று கணவர் சிவாஜியிடம் கூறுகிருரே, இரு பொருள் கொண்ட நயமான சொற்கள்.

ஆப்பிரிக்காவிற்குப் போன சிவாஜி, அங்கே சந்தித்த மோகனின் கைவிரலில் தன் மகள் கவிதாவிற்குத் தான் பிறந்த நாள் பரிசாகக் கொடுத்த மோதிரம் காணப்படுவதைக் கண்டு திகைப்படைவது, மெல்ல அது பற்றிக் கண்ணியமாக விசாரிப்பது-ஆகியவை ஒரு ராணுவக்காரருக்குரிய கம்பீரத்தன்மையோடு கூடிய காட்சி. அது 'நவீன சாகுந்தலம்—1978' என்பதை சிவாஜி புரிந்து கொண்டு மோகனின் முதுகில் தட்டிக் கொடுப்பது அவருக்கே உரிய பாணி.

படம் முழுவதும் கே. ஆர். விஜயாவின் பல்வித உணர்ச்சிகளேயும், குமுறி அழும் தன்மையையும், சிரிப்புக்கு ஓர் அரசி என்ற பட்டத்தைப் பொருத்தமாகப் பெற்றிருக்கும் தகுதியையும் பார்க்க முடிகிறது.

சிவாஜிக்கு ஒரு கடிதம் எழுதி அதை கவிதாவிடம் விஜயா விட்டெறிந்து, ''இதில் 'நான்' கர்ப்பம் தரித்திருப்பதாக உன் தந்தைக்கு எழுதியிருகிறேன். இதை இப்பொழுதே அவருக்கு அனுப்பிவை' என்று சொல்லிவிட்டுப் பொங்கி வரும் அழுகையும் ஆத்திரமுமாக உள்ளே ஓடுகிருரே, நெஞ்சை உலுக்கி விடும் காட்சி.

சிவாஜி திரும்பி வந்ததும், வீடு போர்க்களமாகப் போகிறது என்று ஆவலோடும் பரபரப்போடும் காத்திருக்கிருேம். ஆர்ப்பாட்டம் செய்து விட்டுப் பிசுபிசுத்துப் போகும் புயலாகி விடுகிருர் அவர். ஏதோ மேஜை டிராயரை இழுத்து ரிவால்வரையும் குண்டு போடுவதையும் காட்டுகிருரே தவிர, முடிவு படு சப்!

மலையாள பட்லர் தேங்காய், மனோரமாவை மனைவியாக்கிக் கொள்ளப் படாத பாடு பட்டு இறுதியில் தெரியாத்தனமாகத் திருட்டுத் தாலியை மனோரமாவின் பாட்டி டி. பி. முத்துலட்சுமியின் கழுத்தில் கட்டி விடுவது கண்ணருவி!

வியட்நாம் வீட்டின் உயிரோட்டமுள்ள உரையாடல்கள். அவற்றிற்குத் தனி உருவம் தந்து பேசும் சிவாஜி - விஜயா. எல்லாம் சரிதான்.

வெத்துத் தோட்டாக்கள்.

Printed & Published on behalf of Indian Express (Madurai) Ltd by R. RAMAKRISHNAN at the DINAMANI PRESS Express Estate Madras-600 002. Acting Editor: K. R. VASUDEVAN.

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

"இன்னும் சில நாழிகைக்குள் கோட்டைக்குள் இருக்கப் போகிறாய், மதுராங்கனியைப் பார்க்கப் போகிறாய்'' என்று கற்பூர வியாபாரி சொன்னபோது வல்லபன் அதிசயித்தான்.

'இந்த வியாபாரி ஏன் இப்படிச் சொல்கிறார்? மேலும் சிக்கலில் நம்மைச் சிக்க வைத்து விடுவாரோ, அல்லது இவருக்கு வேறு ஏதாவது நோக்கங்கள் இருக்குமோ? இவர் சொல்வதெல்லாம் உண்மைதானோ?' என்று பலவாறாக சிந்தித்தான்.

அம்மா வாசந்திகா ஓலை நறுக்கில் எழுதிய நறுக்கான வாக்கியங்கள் கண்களில் விழுந்தன.

*விழியில் பிறழாதே!*

*வழியில் பிறழாதே!*

*மொழியில் பிறழாதே!*

தொடர்ந்து தாயாரின் கலங்கிய கண்களும் தெரிந்தன. "வல்லபா, நீ எங்கு இருக்கிறாய்? எங்கு இருக்கிறாய்?'' என்று அவள் புலம்புவது போல் இருந்தது.

மனத்தில் தாபம் எழுந்துவிட அவன் அந்த வியாபாரியைப் பார்த்து, "ஐயா! நாங்கள் ஒரு காரியத்திற்காக வந்தோம். அது முடிந்து விட்டது. புறப்படுகிறோம். இனிமேல் இங்கே தாமதிப்பதற்கு வழி இல்லை'' என்றான்.

வியாபாரியின் மறு பேச்சுக்குக் காத்திராமல், "தத்தா! ம்; புறப்படு'' என்று சொல்ல இருவரும் சுமைகளைத் தூக்கித் தோள்மீது வைத்துக் கொண்டார்கள்.

அந்த வியாபாரி, கண நேரமே சிந்தித்து உடனே ஓடிப்போய் அவர்கள் முன்னால் குறுக்காக விழுந்து,

"தம்பிகளே! உங்கள் அரங்கன் மீது ஆணை! என்னைத் தாண்டி நீங்கள் போகக் கூடாது!'' என்றான்.

இளைஞர்கள் விலவிலத்து நிற்க, வியாபாரி மிகுந்த தாபத்துடன் அவர்களை நோக்கி, "தம்பிகளே! இதென்ன இத்தனை நாழிகை இராமாயணம் கேட்டீர்கள்! பிறகு உங்கள் வழியே போகிறீர்கள்! இதற்காகவோ இவ்வளவு நேரம் பேசினேன்?'' என்று கேட்டான்.

அதற்கு வல்லபன், "ஐயா! நீங்கள் ஆயிரம் பேசுவீர்கள்! அதற்காக நாங்கள் இங்கேயே தங்கிவிட முடியுமா?'' என்று ஆத்திரமாகக் கேட்டான்.

"தம்பி!'' என்றார் வியாபாரி. "நான் ஒன்று கேட்கிறேன். மறுமொழி சொல்! உங்கள் அரங்கன் திருவரங்கத்திற்குப் போக வேண்டுமா, வேண்டாமா?'' என்று கேட்டார்.

"அவசியம் போக வேண்டும்.''

"அப்படியானால் நீ இந்தக் காரியத்தில் இறங்க வேண்டும்.''

வல்லபன் சிரித்தான். "நன்றாகச்சொன்னீர் ஐயா, வியாபாரியே! எதற்கும் எதற்குமோ சம்பந்தமில்லாமல் தொடர்பு காட்டுகிறீர்களே!'' என்று கூறிக் கடகடவென்று சிரித்தான்.

"இல்லை தம்பி! நான் சொல்வது முற்றிலும் உண்மை! கேள்! கவனத்தோடு கேள்! உங்கள் அரங்கனை திருவரங்கத்தில் கொண்டு போய்ச் சேர்க்கிறேன் என்று கோபணா வாக்கு அளித்திருக்கிறார் அல்லவா?'' என்று கேட்டார் வியாபாரி.

"ஆமாம்! உண்மைதான்!''

"அதைச் செய்ய வேண்டுமானால் முதலில் அவர் மதுரையை ஜெயிக்க வேண்டும்.''

"ஆமாம், அது உண்மை!''

"அந்த மதுரையைஜெயிப்பதற்குச்சாதாரண குறுநில மன்னரின் படைகள் போதாது. மிகப் பெரும் படை தேவை! அதைப் புரிந்து கொள்வாயா?''

"புரிந்து கொள்கிறேன்.''

"அப்படி ஒரு படையை சம்புவராயர்களோ, தென் பாண்டியர்களோ திரட்டிவிட முடியாது. எங்களைப் போன்ற பலம் வாய்ந்த சுதந்திரமான அரசர்கள்தான் திரட்ட முடியும்.''

"அதையும் ஒத்துக் கொள்கிறேன்.''

"அப்படி நாங்கள் திரட்டி வந்தாலும் தென் பாண்டியர்கள் உதவி கூட எங்களுக்குத் தேவை!''

"அப்படியா?''

"ஆமாம்! ஆகவே இந்த சம்புவராயர்கள் இந்தத் தென்பாண்டியர்களோடு எந்தவிதச் சம்பந்தத்தையும் வைத்துக் கொள்வதை நாங்கள் விரும்பவில்லை!''

"அதுவும் சரியெனப் படுகிறது.''

"இந்தச் சம்புவராயர்கள் எங்களுக்கும், நம் தர்மங்களுக்குமே விரோதமான காரியங்களைச் செய்து வருகிறார்கள். எனவே அவர்கள் எம் விரோதிகள்! அவர்களை நாங்கள் ஒழிக்க வேண்டும்.''

"அப்படியா?'' என்று அதிசயத்தோடு கேட்டான் வல்லபன்.

"ஆமாம்! அவர்களை ஒழித்தே தீர வேண்டும், அதற்குப் பூர்வாங்கமாகப் பல வேலைகளைச் செய்ய வேண்டியிருக்கிறது. அதில் இந்த வேலையும் ஒன்று!''

"எந்த வேலை?''

"மதுராங்கனியைக் காப்பாற்றும் வேலை! அதை நீதான் செய்ய வேண்டும். அவசியம் செய்ய வேண்டும். இப்போது இருக்கும் நிலையில் உன்னை விட்டால் ஆள் இல்லை! ஆகவே எனக்கு உதவ வேண்டும்'' என்று கூறி முடித்து, முகத்தைத் தம் உத்திரியத்தால் துடைத்தார் வியாபாரி.

அந்த வியாபாரியின் குரலில் ஒரு அதிசயமான கனிவும், மனித சமூகங்கள் மீது ஒரு அளவுகடந்த பிரியமும் தொனித்தது.

அவர்கள் கஷ்டங்களை விவரிக்கும் போது அவர் குரலே பல இடங்களில் கரகரத்துப் போய்த் துக்கமாய்ப் பரிணமித்தது.

அவர் கண்களிலேயே ஒரு தீவிரமும் லட்சியமும் தீபஸ்தம்ப ஒளிகள் போல் மினுமினுத்தன.

தமது நீண்ட பேச்சை அவர் நிறுத்திக் கொண்டதும் அங்கே ஒரு மௌனம் விழுந்தது.

அப்போது காலையின் முதல் கிரணம் வானத்தில் வீசி விழுந்து கொண்டிருந்தது.

வல்லபன் தத்தனைப் பார்த்தான்.

தத்தன் வியாபாரியின் பேச்சில் வசப்பட்டிருப்பது தெரிந்தது.

ஆகவே வல்லபன், "சரி! நீங்கள் என்னதான் செய்யச் சொல்கிறீர்கள்?" என்று கேட்டான்.

"அப்படி வா!" என்று சொல்லி வியாபாரி மகிழ்ச்சியுடன் எழுந்தார்.

"அந்தக் கோட்டையைப் பார்! அதில் உப்பரிகையுடன் நிற்கும் அந்த மாளிகையைப் பார்! அந்த மாளிகைக்குள்தான் மதுராங்கனி சிறை வைக்கப்பட்டிருக்கிறாள். சூழவரத் தாதியர்கள் இருக்கிறார்கள். வெளியே காவலாட்கள் இருக்கிறார்கள். அது சம்புவராயரின் மாளிகைதான்! அதன் அந்தப்புரத்தில்தான் அந்த இளம் பெண்ணை வைத்திருக்கிறார்கள்.....அந்தப் பெண்ணைத் தன் மகனுக்குப் பலாத்காரமாக மணம் செய்து வைக்க நினைத்திருக்கிறார், சம்புவராயர்!" என்றார் வியாபாரி.

"அந்த மகனது பெயர் என்ன?"

"வென்று மண் கொண்டான்."

"அழகான தமிழ்ப் பெயராக இருக்கிறதே!"

"ஆமாம், இந்தப் பெயர் அவனது பாட்டனாருக்குக் கிடைத்த பட்டப் பெயர். அதையே இப்போது பேரப்பிள்ளையும் வைத்துக் கொண்டிருக்கிறான். அடுத்த மாதம் திருமணத்தை நடத்த நிச்சயத்திருந்தார்கள். அதற்குள் அந்த அரசகுமாரன் வென்று மண் கொண்டான் மீது யாரோ வாள் எறிந்து அவனைப் படுத்த படுக்கையாக்கி விட்டார்கள்!"

வியாபாரி இப்படிச் சொன்னதும் வல்லபன் அவரை ஏறிட்டுப் பார்த்தான்.

"யாரோ என்று ஏன் சொல்கிறீர்கள்? நீங்கள்தான் அந்தத் திருக் காரியத்தைச் செய்திருக்கிறீர்கள்!"

சிரித்தார் வியாபாரி.

"ஒரு தவறு செய்துவிட்டேன். நாலு பேருக்குத் தெரியும்படியாய் நின்று கத்தியை வீசி விட்டேன்."

"அப்படி ஒரு அடாத செயலைச் செய்யலாமா?"

"இது ராஜரீகம், தம்பி! இங்கே தர்ம அதர்மங்களுக்கு இடையே எல்லை கிடையாது. நான் அப்படிச் செய்தால்தான் திருமணத்தை ஒத்திப் போட வழி ஏற்படும்! அதை உணர்ந்துதான் அப்படிச் செய்தேன்."

"திருமணத்தைத் தடுப்பதால் என்ன பயன் ஏற்படும்?"

"ஏன் தம்பி! பலத்காரத் திருமணங்கள் மூலம் நாடுகளை இணைத்துக் கொள்வது இக்கால வழக்கமாக இருக்கிறதே! சம்புவராயர்கள் தென்பாண்டிய நாட்



டை உறவால் இணைத்துக்கொள்வார்கள். அதை நிறுத்த விரும்புகிறோம்!''

''அதைத்தான் செய்து விட்டீர்களே!''

''இல்லை, வென்று மண் கொண்டான் இன்னும் இறந்துவிடவில்லை. ஆகவே இன்னமும் திருமண ஆப த்து இருக்கிறது!''

''அதற்கு என்ன செய்ய வேண்டும்?''

''இந்தப் பெண் மதுராங்கனியை நீ போய்ப் பார்க்க வேண்டும்.''

''நானா?''

''ஆமாம், நீயும், தத்தனும் இரத்தின வியாபாரி களாக இந்தக் கோட்டைக்குள் போக வேண்டும்.''

''உள்ளே விடுவார்களா?''

''அதற்கு வழி வகைகளை எல்லாம் நான் சொல் லிக் கொடுக்கிறேன். உள்ளே போய் நீங்கள் அந்தப் புரத்தில் சென்று இரத்தினங்களை விற்க வேண்டும்''

''எங்களிடம் ஏது இரத்தினம்?''

''அதையும் நான் தருகிறேன்.''

''இரத்தினங்களையா?'' என்று வாய்கொள்ளாமல் ஆச்சரியத்துடன் கேட்டான் தத்தன்.

''ஆமாம்.''

''நூறு இரத்தினங்கள், இன்னும் வைடூரியங்கள், கோமேதகங்கள், நீலங்கள், புஷ்பராகங்கள், பவழங் கள் எல்லாமே தருகிறேன். நீ அவைகளை அந்தபுரத்திற் குள் சென்று ராணிகளுக்கு விற்க முயல வேண்டும். அப் படி விற்கும்போது நிச்சயம் மதுராங்கனியைப் பார்க்க உனக்குத் தருணம் ஏற்படும். அச்சமயம் நீ ஒரு ஓலை நறுக்கை .அவளிடம் இரகசியமாகக் கொடுத்து விட வேண்டும்.''

வல்லபன் திகைத்து நின்றான்.

''என்ன, வியாபாரியே! இதெல்லாம் நடக்கக் கூடிய காரியமா?''

''நீ மனது வைத்தால் நிச்சயம் நடக்கும்.''

''எனக்குப் பயமாக இருக்கிறது. இதில் என் மனம் செல்லவில்லை.''

''தம்பி, தம்பி! உங்கள் இருவரின் பாராக்கிரமங் களை நேரில் கண்டவன் நான். முடியாது என்று சொல் லாதே! உங்களால் முடியும்! இதைச் சாதாரணக் காரிய மாக நினைக்காதே! இழந்த நாட்டை மீண்டும் பெற நாம் செய்யும் முயற்சி என்று நினை. அல்லது உன் அரங்கனைத் திருவரங்கத்தில் கொண்டு போய் விடும் முயற்சியில் இது ஒரு முக்கியமான பகுதி என்று நினை! இரண்டுமே ஒன்றுதான். ஆகவே இந்தப் புனித காரி யத்தில் நீ அவசியம் ஈடுபட வேண்டும். தட்டி ஏதும் பேசி விடாதே! என் மனம் புண்ணாகிவிடும். நாங்கள் இந்தநாட்டின் எல்லா சக்திகளையும் ஒன்று சேர்ப்பதில் முனைந்திருக்கிறோம். உங்கள் பலங்களும் எங்களுக்கு அவசியம் தேவை!'' என்று நயந்து கூறினார் வியாபாரி.

வல்லபன் யோசனையிலேயே இருந்தான். பிறகு,

''சரி, ஐயா! ஓலையில் என்ன எழுதியிருக்கிறீர்கள்?'' என்றான்.

''நீயே படித்துப் பார்! அந்தப் பெண்ணைப் பயப் படவேண்டாம் என்றும், அவளை மீட்பதற்காக முயற்சி கள் நடக்கின்றன என்றும் எழுதியிருக்கிறேன். அவள் அதை அவசியம் படிக்கவேண்டும். இல்லாவிடில் அவள் தற்கொலைசெய்து கொண்டாலும் கொண்டு விடுவாள். அதுதான் பயமாக இருக்கிறது.''

வல்லபன் யோசித்தான். பிறகு திரும்பி, ''ஐயா, இந்த ஆபத்தான காரியத்தை எங்களிடம் ஏன் கொடுக் கிறீர்கள்? நீங்களே ஏன் செய்யக் கூடாது?'' என்று கேட்டான்.

''தம்பி, என்னையும், என் சகாக்களையும், கோபணு வையும், கம்பண மகாராஜாவையும் வடக்கே புக்கராயர் உடனே வரச் சொல்லி ஓலை அனுப்பி இருக்கிறார். நாங்கள் அவசரமாகப் போக வேண்டும். ஆகவே நிதானமாக இங்கே இருந்து இந்தக் காரியத்தை நிறைவேற்றக் கூடியவன் நீதான் என்று நினைத்தேன். தவிரவும், உனக்கு அந்தப் பெண்ணை நன்றாகத் தெரியும். உனக்கு அவள் மீது இரக்கம் உண்டு. அவளை முன்பே ஒரு முறை நீ காப்பாற்ற நினைத்திருக்கிறாய்'' என்றார் வியாபாரி.

மதியமாகி ஒரு யாமத்திற்குப் பிறகு இரு இளம் இரத்தின வியாபாரிகள் ராஜகம்பீரன்மலை அரண் மனைக்குள் நுழைந்து கொண்டிருந்தார்கள்.

அரச சேவகர்கள் அவர்களைக் கண்காணித்து உள்ளே கொண்டு போய் விட்டார்கள்.

அங்கிருந்து வேறு ஏவலாளர்கள் அவர்களை உள்ளே கொண்டு போய் அடுத்த கட்டுக்குள் விட்டார்கள்.

அங்கே மெய்காப்பாளர்கள் அவர்களிடம் ஆயு தங்கள் இருக்கின்றனவா என்று சோதித்து மேலும் ஒரு கட்டுக்குள் அழைத்துப் போய்விட, அங்கே சேவகர்களாகப் பணிபுரிந்த அலிகள் அவர்களை அழைத் துச் சென்று ஒரு பெரிய கதவு அருகில் கொண்டு போய் விட்டார்கள்.

அலிகள், கதவைத் தட்டியதும், அது மெள்ளத் திறந்தது.

உள்ளே பால் வதனத்துடன் தாதியர்கள் சின்னதாகச் சிரித்து, இளைஞர்களை வரவேற்றார்கள்.

சித்திரங்களும், சிற்பங்களும் எங்கும் வியாபித்த ஒளிமயமான கூடம் இது.

நறுமணம் சுற்றிலும் கமழ்ந்து கொண்டிருந்தது.

அதன் நடு மத்தியில் அலங்கார ஆசனத்தில் தாதிகள் புடைசூழ பெரிய ராணியார் வீற்றிருந்தார்.

சம்புவராய மன்னர் ராஜநாராயணரின் பட்டத்து ராணியருள் அவள் ஒருத்தி!

அவளுக்கு நாற்பது வயதாகியிருக்கும்.

அந்த ராணியின் கம்பீர ஆகிருதியைப் பார்த்துக் கொண்டே மனத்தில் பயமும், விநயமும் கலந்து எழ அடிக் கொருதரம் தாழ வணங்கியவாறு இளைஞர்கள் அவளது முன்னிலைக்குச் சென்றார்கள்.

முன்னால் வந்ததும் பேச முடியாமல் வாய் குழறினார்கள்.

அந்த ராணி அவர்களைப் பார்த்து முறுவலிட்டு, ஆசனம் கொடுத்து அமரச் சொல்லி, அவர்களது பொருள்களைப் பார்க்கச் சித்தமாக இருப்பதாகக் கூறினாள்.

வல்லபன் மூட்டையை அவிழ்த்து அழகான தங்க நிறப் பேழை ஒன்றை வெளியே எடுத்தான்.

அதனை மெதுவாகத் திறந்து, உள்ளிருந்த நீல நிறப் பட்டு மெத்தைமீது தீ ஜுவாலை போல் திகழும் இரத்தினங்களை ராணி முன்னால் காட்டினான்.

இரத்தினங்களிலிருந்து நீல காந்தங்களாய் மிருதுவான ஒளிகள் படீலென்று எழுந்து, கூடத்தின் பல பாகங்களில் வெளிச்சங்களை அள்ளி வீசின.

ராணியும் பரவசம் கொண்டவளாய், ஒரே ஒரு பரலை மட்டும் வெளியே எடுத்தாள்!

"இது என்ன இரத்தினம்?"

"மகாராணி! தெலுங்கு தேசத்து மாணிக்க ரத்தினம் இது! தோஷங்கள் அற்றது! அணிந்தால் சௌபாக்கியங்களைத் தருவது. உடம்பிலே அழகையும் யௌவனத்தையும் ஊட்டுவது. வியாதிகளை ஓட்டுவது! துர்ப்பயங்களை ஒழிப்பது. அணிந்திருப்பவர்களுக்கு எப்போதும் வசீகரம் உண்டாக்குவது!" என்று கூறினான் வல்லபன்.

அவன் சொல்லச் சொல்ல ராணிக்கு மந்தகாசம் கூடிக் கொண்டே போயிற்று!

பிறகு அவள் மற்றொரு ரத்தினப் பரலை எடுக்க,

அதற்கும் பொருத்தமாய் வல்லபன், குணங்களைக் கூறிக் கொண்டே போனான்.

இப்படி ஒவ்வொரு பரலுக்காக வல்லபன் குணங்களைக் கூறிக் கொண்டே போக, நான்கு நாழிகை நேரம் அங்கே வியாபாரம் நடந்தது!

முடிவில் ராணி நான்கு இரத்தினங்களை எடுத்துக் கொண்டு, நூறு வீர சம்பா குளிகைகளை வல்லபனிடம் கொடுக்க, (சம்புவராயர்கள் வழங்கிய பொன் நாணயத்தின் பெயர்.)

அவனும் தாழ வணங்கி அடுத்த இரண்டாம் நாளில் மேலும் பல அழகிய கற்களைக் கொணர்வதாகக் கூறி விடைபெற்றுப் போனான்.

இதுவரை எல்லாம் வெற்றிகரமாக நடந்துவிட்டது என்று நினைத்தான் வல்லபன்.

ஆனால் அந்த மதுராங்கனியை மட்டும் காண முடியவில்லையே! அவள் எங்கிருக்கிறாள்? அவளை எந்த அறையிலே விட்டு வைத்திருக்கிறார்கள்?

அடுத்த இரண்டாம் நாள் மீண்டும் இளைஞர்கள் அரண்மனைக்குள் சென்றார்கள்.

அன்று புஷ்பராக, கோமேதகக் கற்களை ராணிக்கு விற்று விட்டு, அடுத்த முறை இந்திர நீலக் கற்களைக் கொணர்வதாகச் சொல்லி விட்டு இளைஞர்கள் மீண்டும் தங்கள் இருப்பிடம் வந்தார்கள்.

அன்றும் அவர்கள் மதுராங்கனியைப் பார்க்க முடியவில்லை.

மூன்றும் முறை, 'கூடாத மனத்தையும் கூட வைக்கும்' இந்திர நீலக் கற்களை எடுத்துச் சென்றபோது அவர்களையும் அழைத்துக்கொண்டு ராணி அடுத்த கட்டுக்குள் சென்றாள்.

அங்கே ஒரு பட்டு ஆதனத்தில் அமர்ந்திருக்கும் ஒரு பெண்ணைப் பார்த்து, 'மதுரா!' என்று அழைத்ததும் இளைஞர்கள் இருவரும் திடுக்கிட்டார்கள்.

மதுராங்கனி கண்களை விரித்தாள்.

பதுமை போல் எழுந்து நடந்து வந்தாள்.

ராணியையும், இரு தாடி வைத்த இளைஞர்களையும் மாறி மாறிப் பார்த்தாள்.

வல்லபனின் மனம் அலைபோல் புரண்டு அவிழ்ந்தது.

அவன் கண்கள் அந்த பெண் மீது நிலையாய் நின்றன.

கண்களில் நீர்கூடப் பொங்கி விட்டது. தன்னையும் மறந்து அவளை அழைக்க அவன் வாய் திறந்தான்.

—தொடரும்

## [illegible]

திலமறைவு: திடீரென்று பணக்காரன் ஆவதற்குச் செய்யும் கன்னி முயற்சி.

அட்டூழியங்கள்: நடத்துபவருக்கு இன்பம். அனுபவிக்கிறவர்களுக்குத் துன்பம். செய்தியாகப் படிக்கிறவர்களுக்குப் பொழுதுபோக்கு.

திருடன்: முதல் போட்டுத் தொழில் நடத்த முடியாமல் முதல் இருப்பவர்களைச் சோதிப்பவன்.

தீப்பி ஓடுதல்: கைதிகள் முன்னாலும், போலீஸ்காரர்கள் பின்தங்கியும் ஓடி விளையாடும் சட்டப் பிணைப்பு.

பேய்: சாமர்த்தியமான மருமகளுக்கு வாய்த்த அதி சாமர்த்தியமான மாமியார்.

சிறைச்சாலை: மணியடித்தால் சோறு, மயிர் முளைத்தால் மொட்டையடிக்கும் அரசாங்க சலூன் அண்ட் லாட்ஜிங்.

கைதி: கை சுத்தம் இல்லாதவன்.
திருட்டோடு சம்பந்தம் உள்ளவன்.

கர்ப்பத்தடை ஆலோசனைக்காக வயது முதிர்ந்த பெண்மணி லேடி டாக்டரிடம் யோசனை கேட்டார். மருந்து, மாத்திரை கேட்டாள்.

"உங்கள் வயது அதிகமாகிவிட்டது. உங்களுக்கு அந்தப் பயம் இல்லையே? கர்ப்பம் தரிக்க நியாயம் இல்லையே!"

"அதைச் சாப்பிட்ட பின்தான் எனக்குத் தூக்கம் வரும்."

"தூக்கம் உண்டாக்கும் சக்தி கர்ப்பத்தடை மாத்திரையில் இல்லையே!"

"அந்த மாத்திரையைக் கலியாணமாகாத என் மகளுக்குத் தினம் தினம் நான் கொடுத்துவிட்டால் நிம்மதியாகத் தூங்கலாம் அல்லவா?" என்றாள் வயதான பெண்மணி.

குமாரி குஷாலாதேவி ஓட்டலில் தனி அறையில் தங்கியிருந்தாள். இரவு மணி ஒன்று.

திடீரென்று டெலிபோன் ஒலித்தது.

"குமாரி குஷாலாதேவி! மன்னிக்கவும். ஓட்டல் அறையில் தங்கியிருந்த பிரமுகர் ஒருவரைக் காணவில்லை. இச்செதியை அவரது காரியதரிசி சொல்லுகிறார். ஒரு வேளை தங்கள் அறையில்......?"

"யாருமில்லை. எதற்கும் ஒரு நிமிஷம்! அவர் பிரமுகர்தானா என்று கேட்டுப் பதில் சொல்லுகிறேன்" என்றாள் குமாரி குஷாலாதேவி.

• அப்பாவு

மதுராங்கனியிடம் ஏதோ சொல்ல வாயெடுத்த வல்லபனை தத்தன் வழிமறித்து, ''ஜாக்கிரதை!'' என்று கண்களால் எச்சரித்தான். வல்லபனும் பக்கென அடங்கினான்.

அதன் பிறகு அங்கே வியாபாரம் நடந்தது.

இந்திர நீலக் கற்களை ஒவ்வொன்ருக எடுத்து செவியிலும், நெற்றியிலும், கழுத்திலும் வைத்து, அழகு பார்த்தாள் ராணியார்.

ஒரே ஒரு கல்லின் வெளிச்சம் அபூர்வ நீல காந்தியாய் வீசியது. அதை மதுராங்கனியின் நெற்றி மீது வைத்துப் பார்த்த ராணியார் பெரிதும் மகிழ்ச்சி அடைந்தாள்.

மதுராவின் கண்களே நீல காந்தியில் ஒளி வீசுபவை.

இந்திர நீலப் பரலே நெற்றியில் வைத்தபோது, அவள் மூன்று கண்களால் பார்ப்பது போலிருந்தது.

வல்லபன் அவளேக் கூர்ந்து பார்த்தான். எவ்விதமாவது திரும்பி, ஒரு முறையேனும் பார்வையைத் தன் மீது வீசி விடுவாளோ என்று நினைத்தான்.

அவள் நிமிரவேயில்லே.

அன்று வியாபாரத்தில் ஒரே ஒரு இந்திர நீலக்கல் தான் விலே போனது.

சத்திரத்திற்குத் திரும்பி வந்ததும், வல்லபன் உணவு அருந்தவில்லே. மனத்தில் ஏதோ பாரம் அழுத்தியிருந்தது. யோசனேயில் ஆழ்ந்து விட்டான்.

தத்தன் அவன் அருகில் வந்தான். ''வல்லபா! இன்னும் எத்தனே நாள் இந்த வியாபாரத்தை நடத்தப் போகிருய்!'' என்ருன்.

''ஏன்?'' என்று கேட்டான் வல்லபன்.

''இங்கு இருக்கும் ஒவ்வொரு கணமும் ஆபத்து கூடிக் கொண்டிருக்கிறது.''

''இன்னும் நாம் அந்த ஓலே நறுக்கை அவளிடம் சேர்க்கவில்லேயே!'' என்ருன் வல்லபன்.

''இப்போது இருக்கும் நிலேயைப் பார்த்தால் அதைச் சேர்க்கவே முடியாது போல இருக்கிறது. நாம் புறப்படுவதுதான் நல்லது.''

''இல்லே, தத்தா! கற்பூரத்தார் நம்மிடம் ஒரு வேலேயை ஒப்படைத்திருக்கிருர். அதை நிறைவேற்றுவதுதான் நல்லது.''

''அது அவ்வளவு அவசியமா?'' என்ருன் தத்தன்

வல்லபன் திரும்பிப் பார்த்தான்.

''தத்தா! நீ என்ன சொல்கிருய்?'' என்ருன் சிறிது அழுத்தத்துடன்.

''ஆமாம். இந்த வேலேயைச் செய்வதை நமக்கு அவசியமில்லே என்று கூறுவேன்!'' என்று தலேயைக் குனிந்து கொண்டே சொன்ஞன்.

வல்லபனுக்கு ஒரு கணம் ஏதோ போலிருந்தது.

''அதை அப்போதே சொல்வதுதானே!'' என்ருன். ஒரு ஆத்திரம் அதில் தொனித்தது.

தத்தன் நிதானம் இழக்கவில்லே.

''சொல்லியிருப்பேன். ஆனுல், அதற்கு எந்த பிரயோஜனமும் இருக்காது என்று நினேத்தேன்.''

அந்த வார்த்தைகள் வல்லபனே எங்கேயோ சென்று தைத்தன.

''ஏன் நினேத்தாய்?'' என்ருன் சிறிது ஆத்திரம் தொனிக்க.

''நான் சொல்ல வேண்டுமா?''

''அவசியம் சொல்லவேண்டும். ஏன் நினேத்தாய்?''

''அதெல்லாம் அவரவர் மனத்திற்கே தெரியும்'' என்ருன் மீண்டும் குனிந்து கொண்டே.

வல்லபன் உஷ்ணமாக மூச்செறிந்தான்.

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

''மூடமாகப் பேசாதே! வெளிப்படையாய் ஏன் நினேத்தாய்?'' என்று வெம்மையோடு கேட்டான்.

தத்தன் நிமிர்ந்தான்.

''சொல்கிறேன் வல்லபா! நீ அந்தப் பெண்ணே எப்படியும் காப்பாற்ற விரும்புவாய் என்று நினேத்தேன்.''

''ஏன்?''

''உனக்கு அவளிடம்.... இரக்கம் இருக்கிறது.''

''எல்லோரிடமும்தான் எனக்கு இரக்கம் இருக்கிறது.''

''அவளிடம் விசேஷமாக இருக்கிறது.''

''அது தவறு இல்லேயே!''

''வல்லபா, ஒன்று சொல்வேன்! விழியில் பிறழாதே!''

வல்லபனின் மனம் வெகுண்டது.

''தத்தா!'' என்று தன்னேயும் மீறி இரைந்தான். ''என்னே நீ கேவலமாக நினேத்தாய்! என்னேப் பார்த்து நீ அவதூறு சொன்ஞய்! நீ என் நண்பன் அல்ல! நண்பன் அல்ல!'' என்று ஓங்கிக் கத்தினுன்.

சத்திரத்தின் எல்லா சத்தத்தையும் அது ஒடுக்கியது.

காணியாளர் சுருக்குப் பையைக் கட்டிக் கொண்டு அவர்களேப் பார்த்தார்.

மடைப்பள்ளிக்காரர் அகப்பையுடன் ஓடி வந்து பார்த்தார்.

வாயில்புறம் போய் கொண்டிருந்த ஒருவர் நின்று திரும்பிப் பார்த்தார்.

தத்தன் விலவிலத்து நின்ருன்.

வல்லபன் இப்படியும் அப்படியுமாக முகத்தைத் திருப்பினுன்.

பிறகு, விருட்டென்று சத்திரத்துப் பின்புறம் நோக்கிப் போய் விட்டான்.

நேரம் ஓடி மெல்ல இருட்டியது. வானில் ஏழுரிஷி மண்டலம் மெதுவாக உருவாகிக் கொண்டிருந்தது.

வல்லபன் படிக்கல்லில் உறைந்தவாறு இருந்தான். அவன் கண்கள் வெறித்தவாறு பார்த்திருந்தன.

அங்கிருந்த குத்துக் கல் மீது ஒரு வெளுப்புப் பூனே மண்டியிட்டு அமர்ந்து கொண்டு அவனேயே பார்த்துக் கொண்டிருந்தது.



அப்போது சிறியதாய் அடிகள் விழும் ஓசை கேட்டது.

வல்லபனது முன்னால் தத்தன் நின்ருன்.

அவனது தோள் மீதுசுமை ஒன்று தொங்கிக் கொண்டிருந்தது.

ஒரு உலோகப் பேழையை வல்லபன் முன் வைத்து விட்டு அவன்,

''நான் வருகிறேன். இதுவரை உனது நட்பு எனக்குக் கிடைத்ததைப் பெரும் பாக்கியமாக நினைக்கிறேன். இனி அதை இழப்பதற்கும் வருந்துகிறேன். எனினும் அரசுக்கும் வேலை வந்து விட்டால் என்ன செய்வேன்? வருகிறேன். ஊர் போனுல் உன் தயாயாரிடம் உனது க்ஷேமத்தைக் கூறுகிறேன். வருகிறேன்'' என்ருன்.

திரும்பிப் போக ஆரம்பித்தான்.

முற்றம் முழுதும் நடந்து துளசி மாடத்தின் அருகில் போனதும், திரும்பிப் பார்த்தான்.

வல்லபன் இன்னும் அப்படியே அமர்ந்திருந்தான்.

தத்தன் பின் கட்டுக்குள் நுழைந்து, தாழ்வாரத்தைக் கடந்து பெரிய ரேழியையும் கடந்து நடைக்கு வந்தபோது கண்களில் நீர் மல்கியது.

இருட்டில் எதுவும் தெரியவில்லை. தெரிந்துகொள்ளவும் விருப்பமில்லை. நிலை மீது மோதிக் கொண்டபோது யாரோ, ''மெள்ள'' என்ருர்கள்.

பெரிய படிக்கட்டில் இறங்கி வாயிலில் வந்து நின்ருன்.

வீதியின் கல் விளக்குக் கம்பம் அருகில் சென்ருன். அதன் சொரசொரப்பான உடம்பில் கை வைத்து நின்ருன். கால் அப்படியே பூமியைப் பிடித்துக்கொண்டது. சிக்கென ஒரு ஆகர்ஷண சக்தி அவைகளைக் கவ்விக் கொண்டிருந்தது.

கண்ணீர் தளும்பி வர, அந்தத் தூணின் மீது, பெரும்பாரமாய்ச் சாய்ந்து கொண்டான்.

உடல் மீது நீர் வழிந்தோடி அவனது இடுப்பு வஸ்திரத்தைப் பெரும் அளவு நனைத்தது.

அதே நேரத்தில் பக்கத்து மடத்தில்,

''ஊரிலேன் காணியில்லை.

உறவு மற்றொருவரில்லை''

என்ற தொண்டரடிப் பொடிகளின் பாசுர அடிகளை, யாரோ உருக்கமாய்ப் பாடுவது கேட்டது.

தத்தன் பிறவியிலேயே தாயை இழந்தவன். ஒன்பதாவது வயதில் தந்தையையும் இழந்தவன். பிறகு சிற்றப்பன் வீட்டில் அவர்கள் தயவில் எண்ணற்றக் கொடுமைகளைஅனுபவித்துக் கொண்டு வாழ்ந்தவன். அவனுக்கு வல்லபனது நட்பு பெரிய துணையாக வாய்த்தது. அதுதான் வாழ்க்கையின் முதல் இன்பத்தையும் அவனுக்குக் கொடுத்தது. வல்லபனின் தாயாரின் உபசரிப்புக்களிலும், இதமான பேச்சுக்களிலும் அவனுக்கு அதுவரையில் கிடைக்காத தாய்ப்பாசம் கிடைப்பது போலிருந்தது. அவனது வஸ்திரங்களுக்கும் கல்விக்கும் அவளே பெரிதும் உதவி இருக்கிருள். இவ்விதம் பல விஷயங்களில்வல்லபனின்குடும்ப



த்துடன்ஒன்றிவிட்டதனால், இப்போது இந்தப் பிரயாணத்திலும், அவன் விருப்பத்துடன் பங்கு கொள்ளும் நிலை ஏற்பட்டது. அரண்யங்களைக் கடந்ததுவும், அரங்கனைத் தேடியதுவும் எல்லாம் அவனுக்கு வாழ்வில் பெரிய உற்சாகங்களைக் கொடுத்திருந்தன. அதனால் மனத்தில் பெரிய ஆனந்தம் ஏற்பட்டிருக்கிறது.

இந்த ஆனந்தமெல்லாம் இந்தக் கணமே மாய்ந்து போகின்றனவோ?

"ஊரிலேன் காணியில்லை,

உறவு மற்றொருவரில்லை"

அந்தப் பாசுர வார்த்தைகள் வெறும் வார்த்தைகளாக இல்லாமல், ஒரு துக்கத்தின் சுமையாகவே மனத்துள் பாய்ந்து அழுத்தியபோது. குபுக்கென்று விம்மலும் அழுகையும் குமிழிட்டு வெளி வந்தன. கற் கம்பத்தைப் பிடித்துக் கொண்டு தேம்பினான் அவன்.

விசித்து விசித்து சிறிது நேரம் வரை அழுதிருப்பான்.

அவன் தலைமீது வருடினாற் போல ஒரு கை விழுந்தது.

"தத்தா!" என்று ஆதரவான குரல் கேட்டது.

பிழியும் விழிகளுடன் அவன் திரும்பிப் பார்த்தான்.

அங்கே வல்லபன் நின்று கொண்டிருந்தான்.

தத்தனுக்கு அழுகை தாங்கவில்லை.

வல்லபன் அவனைச் சடக்கென்று அணைத்துக் கொள்ள, அவனது மார்பு மேல் முகம் புதைத்துக் குழந்தையைப் போல் தேம்பினான் தத்தன்.

இரவின் அடங்கி வரும் நிசப்தத்துள் அவனது விசிப்புகள் விசிறிக்கொண்டே அமிழ்ந்தன.

தத்தனை மெள்ள அணைத்து எடுத்து ஆரத்தழுவி, "அழாதே! தத்தா! அழாதே! என்னை பொறுத்தருளு" என்று காதோடு காதாக இரைந்து, மெள்ள அவனை நகர்த்தி உள்ளே அழைத்துப் போனான் வல்லபன்.

அங்கே தனிமையான அறை ஒன்றிலே, தத்தனை அமர்த்தி, இ[illegible]ன வார்த்தை[illegible] [illegible]லவிதமாகச் சொல்லி, அவனது ஆற்றாமையை மெள்ள மெள்ள ஆற்றி விட,

தத்தனும் ஒருவாறு விசிப்பு அடங்கி, முகத்தைத் துடைத்துக்கொண்டு பளிச் சென்று வல்லபனின் முகம் பார்த்தான்.

அவனும், "தத்தா! என் அருமை நண்பா! இதோ இந்தக் கணத்தில் என்னை நன்கு புரிந்து கொள்வாய்! என் மனம் திறந்து பேசுகிறேன். என் மீது எந்தவிதச் சந்தேகமும் கொள்ளாதே! உனக்குத் தெரியாமல் எதையும் செய்ய மாட்டேன். நினைக்கவும் மாட்டேன்! ஆனாலும் கேள்! இந்த இளவரசிப் பெண்ணைப்பற்றி நான் அதிக இரக்கம் கொண்டிருப்பதாகக் கூறினாய்! இதை நான் அவசியம் உனக்கு விளக்கிக் கூற வேண்டும். கூறுகிறேன் கேள்!

"தத்தா! நீயாவது சிறு வயதில் உன் தந்தையுடன் வெளியூர்களுக்குப் போயிருக்கிறாய். நான் போனதே இல்லை! போயிருந்தால் பல பெண்களைப் பார்த்திருப்பேன். என் தாயார் என்னை வெளியில் விட்டதே இல்லை. கல்வியும் சரி, சண்டைப் பயிற்சியும் சரி! எல்லாம் உள்ளூருக்குள்ளேயே நடந்தேறின. என் வாழ்க்கையில் இதுதான் முதல் முறை வெளி உலகுக்கு வந்திருக்கிறேன். அதுவும் என் தந்தை விட்டுச் சென்ற காரியம் என் தாயாருக்கு மிகப் புனிதமாக தோன்றியதால்தான் என்னை இந்தப் பணிக்கு ஆளாக்கி வெளி சஞ்சாரம் செய்ய அனுப்பியிருக்கிறார்.

"கேள், தத்தா! வித்தை கற்கும்போது பவபூதி, காளிதாசர், பாணர் எல்லாம் படித்துவிட்டு, அவர்கள் தந்த கனவு உலகங்களிலே மனதைச் செலுத்திவிட்டு கடைசியில் வெளி உலகில் முதன் முறையாக வந்து ஒரு பூரண அழகுள்ள பெண்ணைச் சந்திக்க நேர்ந்தால், என்னைப் போன்ற ஒருத்தனின் மனது என் சொல்லைக் கேளாமலேயே, என் அந்தரங்கம் அறியாமலேயே அவள்மீது சென்று விடுமல்லவோ!

"வான முகில்கள் கண்டால் மயில்கள் தாமாக தோகை விரிப்பது போலவும், ஆதவனைக் கண்டால் தாமரைகள் தாமாக மடல் அவிழ்வது போலவும், மாலை நேரம் வந்தால் மல்லிகைக் கூட்டங்கள் தாமாக மலர்வது போலவும், தன் செயலால், தன் சுபாவத்தால், தன் போக்காகவே நிகழும் ஒரு இயல்பான நிகழ்ச்சிதான் இது!

"இது இயற்கையின் நியதி.

"தானாகத் தன்னையறியாமல் நிகழும் இந்த மனப் போக்கின் பரிணாமங்களைத்தான் நம்மவர்கள் அன்பு, பிரேமை, காதல், களவொழுக்கம் என்றெல்லாம் கூறி விட்டார்கள்.

"இயற்கையின் நியதியால் தானாக நிகழும் இந்நிகழ்ச்சி தவறானது என்றால் நான் தவறு செய்தவன் தான்.

"அன்றி,

"செலுத்தப்பட்டால், செல்வதன்றி வேறு வழியில்லை,

"இழுக்கப்பட்டால், இழுபடுவதன்றி வேறு வழியில்லை.

"என்பது போல, என் சிறு மனதை ஆடாத ஆட்டம் ஆட்டுவிக்கும் இயற்கை என்னைவிடக்கோடிப் பங்கு

வலிமையுடையது. அதன் முன் என் சிறு மனத்து எதிர்ப்போ, வெறுப்போ, முறைப்போ எதுவும் செய்யாது. உலக நியதியைப் பூரணமாக ஒருவர் அறிந்திருந்தாரானால் அவர் கண்களுக்கு நான் நிச்சயம் தவறு செய்தவனாக இருக்க மாட்டேன்.

''தத்தா! இந்த இயல் அடிப்படையில் என் மனத்தில் ஒரு கூண்டு வண்டியில் போன பெண்ணின் சித்திரம் விழுந்தால், அது என் தவறு அல்ல! இயற்கை அதை விதைத்தது. இயற்கையால் அது விளைந்தது. அவ்வளவுதான்!

''இந்தச் சலனங்களுக்கு நான் ஆட்பட்டேன் என்பது முற்றிலும் உண்மை!

''தத்தா! அந்தச் சித்திரத்தை என் கண்ணில் விழவிட்டேன், ஆனால் கண்ணை மறைக்க விடவில்லை.

''இது முற்றிலும் உண்மை! தத்தா! இந்தக் கோட்டைக்குள் போக நினைத்தேன் என்பதோ, அங்கே இரத்தினம் விற்க நினைத்தேன் என்பதோ சத்தியமாக அந்தச் சித்திரத்தால் எழுந்த விருப்பம் அல்ல! இதை நிச்சயமாக அறிவாய்!

''அது என் அரங்கன்மீது விழுந்த ஆருதபாசத்தால் ஏற்பட்ட விருப்பம்!''

''நான் சத்தியம் இட்டுச் சொல்வேன்.

''பூஜைக்குப் போகிறேன், கும்பிடுவதற்காகப் போகிறேன். ஆனால் அங்கே பானகமும் எனக்குக் கிடைக்கப் போகிறது என்பது என் மனத்தில் ஓரமாய் எழும் இனிமையான உணர்ச்சி!

''அதுபோலத்தான் இந்த இரத்தினம் விற்கப் போய் நான் சித்திரம் பார்க்க விரும்புவதும்!

''இதைப் பூரணமாக அறிந்துகொள், தத்தா! என் மீது எள்ளளவும் சந்தேகம் கொள்ளாதே!

''என் உறுதி நிச்சயம் என்று தெரிய வேண்டுமானால் இதோ இன்னொன்றும் சொல்கிறேன்.

''இந்தக் கணமே, இந்தக் காரியத்தில் மேலும் இறங்காமல் கோட்டைக்கு வெளியே போய்விடச் சித்தமாக இருக்கிறேன். எனக்கு இதில் வலலேசமும் வருத்தம் கிடையாது.

''ஆகவே மனம் திறந்து சொல்!

''கற்பூரத்தார் எனக்கு நல்லவராகத் தோன்றினார். நம் உயிரையும் அவர் காப்பாற்றினார். அவர் இப்போது நம்மிடம் வேண்டிக் கொண்டுள்ளார். உள்ளம் நெகிழ மிக உருக்கமாகப் பிரார்த்தித்தார்.

''அவர் கொடுத்துள்ள இந்தக் காரியத்தை இனி நாம் தொடர்ந்து முடிக்கவோ, மறுக்கவோ? சொல், மனம் திறந்து!'' என்று கூறி நிறுத்தினான்.

அவன் பேசிக்கொண்டிருக்கும்போதே தத்தனின் கண்களில் கண்ணீர் பிழிந்தது.

உருகும் வண்ணம் அவன் கேள்வியைக் கேட்டு நிறுத்தியதுதான் தாமதம், தத்தன் உடனே அவனைத் தழுவிக் கொண்டான்.

''வல்லபா! வல்லபா! மனம் நோகாதே! நான் உன்னைப் புண் செய்துவிட்டேன். நீ அன்றும் எனக்கு நண்பன்! இன்றும் எனக்கு நண்பன்! நீ சொல்வதெல்லாம் சரியே! என் மனத்தில் இருந்த அற்ப சொற்ப சந்தேகமும் இந்தக் கணமே அடங்கிவிட்டது. வீரியத்துடன் காரியத்தில் இறங்கு!'' என்று கூறிப் புலம்பினான்.

மறுநாள் மதிய வேளைக்கு, அவர்கள் இருவரும் அரண்மனை அந்தப்புரத்திற்குள் இருந்தார்கள்.

நல் பவழங்களைக் காட்டும் பாவனையில் அவைகளைச் சிதறவிட, அவை நாலாபுறமும் ஓட, ராணியாரும் அவற்றில் சிலவற்றைப் பொறுக்குவதில் ஈடுபட,

வல்லபன் தைரியமாக மதுராங்கனியின் சமீபமாகச் சென்று மெதுவாக, ''இளவரசி!'' என்று கூற,

மதுரா திடுக்கட்டு நிமிர்ந்து அவனைப் பார்க்க,

அவனும் தன் கழுத்தில் தொங்கும் மகரகண்டிகையைக் கையில் ஏந்தி,

''நினைவு கொள்ளுங்கள் இளவரசி! சீக்கிரம்!'' என்று மெதுவாக இரைந்தான்.

அவன் ஏதோ பேசுவதை ராணியார் கவனித்துவிட்டார்.

''ஏய்!'' என்றாள் கோபத்துடன்.

—தொடரும்.

# கழுதை கதைக்கிறது



கழுதையெனில் இவ்வுலகில்
  கடைஜாதி என்றே தான்
தொழுகின்ற ஆண்டவனே
  தலையினிலே எழுதிட்டான்!

தாம் உண்டு வேலையுண்டு
  தாங்குசுமை உண்டென்ற
'காம்' ஆக வாழ்வதனால்
கழுதையெனில் இளக்காரம்!
சோம்பேறிப் பையன்கள்மேல்
  சொல்லம்பு வீசுதற்கு
வீம்பான தகப்பன்மார்
  'வேலையற்றக் கழுதை'யென்
    பார்!

வயதுமிக ஆவதனை
  வாய்க் கொழுப்பு மிக்கார்கள்
பயமேதும் இல்லாமல்
'பலகழுதை வயதெ'ன்பார்!
பயல்களெலாம் தீவாளிப்
  பட்டாசை எம்வாலில்
நயமாகக் கட்டிட்டே
  நகைத்துவிளை யாடிடுவார்!

ஆண்டவனின் படைப்பினிலே
  அனைத்துயிரும் சமமென்பார்!
சீண்டிவிட்டால் கோபத்தை
''சீ...கழுதை'' என்றுரைப்பார்!
இதுபோன்ற குறைபலவும்
  என்னெஞ்சில் உறுத்திடவே
புதுவாழ்வு விரைவினிலே
  பூத்திடநான் வேண்டியதால்

அக்ரஹாரத் திலேஎன்னை
  அற்புதமாய்ப் படமெடுக்க
ஆப்ரஹாம் அவர்களைத்தான்
  ஆண்டவனும் அனுப்பிவைத்
    தான்!

—புவனசந்திரன்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

ராணியார் ''ஏய்!'' என்று சொல்வதற்கும் வல்லபன் நடுங்கித் தன் கையில் வைத்திருந்த ஓலைச் சுருளை நழுவ விடுவதற்கும் சரியாக இருந்தது.

அரசி ஓடி வந்து சுருளை எடுத்தாள். படித்தாள், முகம் சிவந்து போயிற்று. ''பிடியுங்கள், இவர்களை'' என்று கத்தினள். அலிகள் வாளை உருவிக்கொண்டு ஓடி வந்தார்கள்.

''நில்லுங்கள்!'' என்று இரைந்தான் தத்தன். கத்தியை விருட்டென்று, உருவி ஒரே துள்ளில் ராணியார் பக்கத்தில் நின்றான்.

''யாராவது ஏதேனும் செய்தீர்களோ, உங்கள் ராணியாரைக் கொன்று விடுவேன்'' என்று சொல்லி ராணியின் கைகளைப் பிடித்தான்.

ராணி ''வீல்'' என்று அலறினள். தத்தன் அவள் வாயை மூடினன்.

இதற்குள் வல்லபன் நிலைமையைப் பூரணமாக உணர்ந்து விட்டான். அவனும் கத்தியை உருவினன். ''எல்லோரும் கீழே போடுங்கள், வாளை!'' என்று கத்தினன்.

அலிகள் வாட்களைக் கீழே போட்டார்கள்.

வல்லபன் ஓடிப்போய் அங்குள்ள தூமச் சட்டிகளில் வாசனைப் பொடியை வாரிப்போட்டான். குபீரென்று புகை எழுந்து மண்டலமாக நிரம்பிக் கூடத்தை இருட்டாக்கியது. வல்லபன் உடனே தத்தனை இழுத்துக்கொண்டு புகையுள் புதைந்து மறைந்து போனன்.

புகை தெளிவதற்கு நேரம் ஆகியது. எல்லோரும் அதுவரை ஏதும் செய்வதறியாது நின்றார்கள். புகை தெளிந்து ஒருவருக் கொருவர் பார்க்கும் நிலை வந்த போது ராணியார், ''ஓ'' என்று இரைந்து, ''பிடியுங்கள்! அவர்களைப் பிடியுங்கள்'' என்று கத்தினள்.

அலிகள் நாலாபுறமும் ஓடினர்கள். அந்தப்புரத்திற்கு இரண்டு கதவுகள்! அதன் வழியே கூக்குரலிட்டு வெளியே ஓடினர்கள்.

சீக்கிரத்தில் சர்வநாயகருக்கும் (அரண்மனை பரிவாரங்களுக்கெல்லாம் அதிகாரி) வாயில் காரியத்திற்கும் (அரண்மனைக்கு உள்ளேபோவோர் வருவோரைக்கட்டுப்படுத்தும் அதிகாரி) விஷயம் போகவே, அவர்கள் ஏவலாட்களை அனுப்பி எங்கும் தேட ஆரம்பித்தார்கள்.

''யாரையும் வெளியே விடாதே!'' என்று கோட்டைச் காவலுக்கும் செய்தி போயிற்று.

ராஜகம்பீர நகரம் இவ்விதம் அல்லோல கல்லோலப்படும் வேளையில், வல்லபனும் தத்தனும் அரண்மனை அந்தப்புரத்து அடிவாரத்தில் குத்தியிட்டு அமர்ந்து பரிதவித்துக் கொண்டிருந்தார்கள்.

அந்தப்புரம் நல்ல உயரத்தில் இருந்தது. அதன் சாளரம் வழியே அவர்கள் கீழே குதித்திருந்தார்கள். அரண்மனைப் பகுதியில் ஏதாவது ஒரு பகுதியாக இருக்கும், ஆதலால் யாராவது தென்பட்டால் எதையாவது சொல்லித் தப்பிவிடலாம். செய்தி தெரியும் முன் கோட்டையை விட்டு வெளியே போய்விடலாம்' என்று எண்ணியிருந்தார்கள்.

ஆனல் அவர்கள் விழுந்த இடம் ஒரு பாழான அரண்மனைப் பகுதி. அதன் முன்னல் பத்தடி தூரத்தில் உள் அகழி ஒன்றுஇருந்தது. அதற்குஅப்பால்கோட்டைச் சுவர்! பின்புறம் திரும்பினுல் அரண்மனைக்குள் போவதற்கான வாயில் ஒன்று இருந்தது. பல வருடங்களுக்கு முன் அகழியில் விழுந்து யாரோ தற்கொலை செய்து கொண்டதால் இந்த வாயிலைக் கல் எழுப்பி மூடி விட்டிருந்தார்கள்.

பக்கவாட்டில் போகலாம் என்று பார்த்தால், இரண்டு பெரிய கற்சுவர்கள் அகழிவரை நீட்டியிருந்தன.

அந்தச் சுவர்கள் வெகு தூரம் வரை அகழியை ஒட்டியே இரு புறங்களிலும் ஓடியிருந்தன.

ஆக, ஏதோ ஒரு குதிருக்குள் அகப்பட்டது போல் இரண்டு பேரும் அகப்பட்டு விட்டார்கள்.

தூய நீர் பாயும் துங்கபத்திரை நதியின் தென் கரையில் அந்தப் புதிய பட்டணம் மாலை வெயிலில் தகதகத்துக் கொண்டிருந்தது.

மாளிகைகளின் விதானங்களும், உப்பரிகைகளும், கோபுரக்கூர்மைகளும், வசந்த மண்டபங்களின் அடுக்குகளும், இன்னும் ஏராளமான வீடுகளின் மாடங்களும் வான வீதியை அங்கங்கே உராய்ந்து நின்று கொண்டிருந்தன.

நகரைச் சுற்றிவர வெவ்வேறு உயரங்களில் மலைகள் ஒன்றையொன்று தொடர்ந்தாற்போல் ஓடி இருந்தன.

இந்த மலையில் வெள்ளை நிறத்துப் பாறைகள் விதவிதமான வடிவங்களில் நிரம்பியிருந்தன.

அவை ஒன்றின் மீது ஒன்ருக வெகு விசித்திரமாக நின்று கொண்டிருந்தன.

தொடர்வான மலைகளில் இடுக்கு விழுந்த இடமெல்லாம் பெரும் கல் அரணைக் கட்டி, அந்தப் பட்டணம் பாதுகாக்கப்பட்டிருந்தது.

பட்டணம் இருந்த இடம் போக எஞ்சியுள்ள நிலப்பரப்பு முழுவதிலும் நெல், கரும்பு, வாழை முதலியவைகள் பயிரிடப்பட்டிருந்தன.

அங்கங்கே ஓடைகளும் குளம் ஏரி போன்ற பெரும் நீர்ப் பரப்புகளும் மின்னிக்கொண்டிருந்தன.

பட்டணத்திற்குள் நுழைந்தால் ஒரு அதிசயத்தைக் காண்கிறோம்.

வீதிகள் யாவும் அகலமாகவும், சீராகவும், இருக்கின்றன.

மக்கள் நிச்சிந்தையாக மகிழ்ச்சியுடன் உலாவுகிறார்கள்.

வண்டிகளும், குதிரைகளும், மாடுகளும் யாத்ரிகர்களும், வியாபாரிகளும், யவனர்களும் இந்த வீதிகளில் நிறைந்திருக்கிறார்கள்.

வீதிகளின் வீடுகள் யாவும் புத்தம் புதியவையாய்த் தெரிந்தன.

தமிழ் பேசும் நாடுகள் எல்லாம் ஒரு வேற்று ஆட்சியில் நலிந்து போய் சோம்பிக் கிடக்கும் வேளையில், வடக்கே இந்த நகரம் இப்படிக் கலகலப்பும், ஆனந்தமும் கொண்டு லட்சுமிகரமாக விளங்குவதைப் பார்க்கும் போது ஆச்சரியமாக இருக்கிறது.

இந்த அதிசயமான நகரந்தான் விஜயநகரம்..

இருபத்து நான்கு ஆண்டுகளுக்கு முன்னர் (கி.பி 1336) அஸ்திவாரம் இடப்பட்டு சொற்ப காலத்திற்குள் ஒரு குபேரப் பட்டணமாக மாறியிருந்தது இந்த நகரம்.

அந்த மாலை நேரத்தில், அந்த நகரத்தின் அழகான அரண்மனையின் விசாலமான மந்திராலோசனைக் கூடத்தில் விஜயநகர மண்டலத்தின் அரசர் புக்கராயர் கம்பீரமாக வீற்றிருந்தார்.

அவரை அடுத்தாற் போல் முள்வாய் ராஜ்யத்தின் (ராஜ்யம் என்பது மண்டலத்தின் ஒரு பகுதி தான்) அதிபதியான குமார கம்பணர்அமர்ந்திருந்தார்.

அவரை அடுத்து முறையாக முள்வாயின் சர்வ சைனியாதிபதி கோபண்ண அமர்ந்திருந்தார்.

அவரை அடுத்து பிரதானி (மந்திரி) சோமப்ப தண்டநாயகரும், பிரதானி கண்டாரகுளி மாரய்ய நாயகரும் வீற்றிருந்தார்கள்.

அவர்களை அடுத்து பண்டாரி (பொக்கிஷதாரர்) ஆனகுந்தி விட்டப்பர் அமர்ந்திருந்தார்.

எதிர்ப்புறத்தில் ஓலைநாயகம் (அரசரின் கட்டளைகளை நிறைவேற்றி வைப்பவர்) சாளுவமங்கு அமர்ந்திருக்க, அவரைத் தொடர்ந்து அடைப்பம் (அரசருக்குத் தாம்பூலம் தருகிறவர்கள். அந்த நாளில் அது ஒரு முக்கிய உத்தியோகம்) லக்கப்பரும், நாகப்பரும் அமர்ந்திருந்தார்கள்.

''பிரபோ!'' என்று சொல்லி எழுந்தார் சோமப்பர். ''இந்த நேரத்தைத் தருணமாக வைத்துக் கொண்டு சுல்தானியர்களை ஒழித்து விடுவதுதான் நல்லது. இவ்வளவு நாட்கள் வாளா விருந்து விட்டோம்'' என்று கூறினார்.

உடன் கோபண்ணவும், ''ஆமாம், மன்னவா! தெற்கே தமிழ்பேசும் நாடுகளில் ஜனங்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். அகதிகளாக நம் ராஜ்யங்களுக்குள் நிறையப் பேர் வந்திருக்கிறார்கள். இவை ஒருபுறம் இருக்கட்டும்! சோழ, பாண்டிய நாடுகளின் கோவில்களைப் பற்றித் தாங்கள் எவ்வளவோ கேள்விப்பட்டிருப்பீர்கள். அவை இப்போது பூஜைகளும் விழாக்களும் அற்று மூடியே கிடக்கின்றன. எத்தனையோ கோவில்கள் பாழடைந்து கிடக்கின்றன. மதுரையின் பிரசித்தி பெற்ற மீனாட்சி கோவில் பாழடைந்து விட்டது. பார் புகழும் திருவரங்கன் கோவிலுக்கும் அதே கதி தான் நேர்ந்துள்ளது. திருவரங்கன் இப்போது நமது எல்லைக்குள் திருப்பதி மலை மீது இருக்கிறார். தமது சொந்த நகரை விட்டு உருத்திரோத்காரி வருடத்தில் புறப்பட்டு விட்டவர், முப்பத்தேழு ஆண்டுகளாகியும் தமது இருப்பிடத்திற்கு இன்னும் போகவில்லை. எல்லாவற்றையும் விட இராமேசுவரத்திற்கு யாத்திரை செல்லும் வழி நிரந்தரமாக அடைபட்டு விட்டது. நம்மிடையே எழுந்துள்ள தற்போதைய தலைமுறையினர் இந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தை இதுவரை பார்த்ததே இல்லை'' என்று உணர்ச்சி ததும்பக் கூறினார்.

புக்கராயர் மனம் வெதும்பிக் கண்களில் துக்கம் பெருகுவது தெரிந்தது.

''குமாரா! நீ என்ன சொல்கிறாய்?'' என்றார் கம்பணரை நோக்கி. (புக்கராயரின் மைந்தான குமார கம்பணர்)

கம்பணர் எழுந்து, ''தந்தையே!'' என்று விநயத்துடன் கூறி, ''தமிழ் பேசும் மக்களை நான் நேரிலே பார்த்தேன் அங்குள்ள நிலைமை மிக மோசமாகத் தான் இருக்கிறது. நேரிலே மக்களின் கஷ்டங்களைப் பார்க்கும்போது என் இரத்தம் கொதித்து எழுகிறது. இவர்களுக்கு ஏதாவது உடனடியாகச் செய்யவேண்டுமே என்று மனம் துள்ளியெழுகிறது. எனினும், என் ஆத்திரத்தை என் அறிவுக்கு அடிமையாக்கி வைத்திருக்கிறேன். ஆத்திரம் சொன்னால் நடவடிக்கை எடுக்க மாட்டேன். அறிவு சொன்னால்தான் எடுப்பேன். இதற்கான நிதானத்தை என் தந்தையாகிய தங்களது உபதேசங்கள்தான் எனக்கு அளித்திருக்கின்றன. நானும் சுல்தானியர்களை ஒழிக்க விரும்புபவன்தான்! அவர்களை ஒழித்து நம் விஜயநகர மண்டலத்தின் எல்லையைத் தெற்கே கன்னியாகுமரி வரை பெரிதாக்க விரும்புபவன்தான். ஆனாலும் எனக்குப் பல தயக்கங்கள் இருக்கின்றன.'' என்று கூறினார்.

''என்ன தயக்கம்?'' என்றார் புக்கராயர்.

''எமது முள்வாய் ராஜ்யத்தின் படைகள் மட்டும் இதற்குப் போதாது. எனினும் நமது கோபண்ணவும் சாளுவ மங்குவும் என்ன கூறுகிறார்கள் என்று கேட்க விரும்புகிறேன்'' என்றார் கம்பணர்.

முதலில் சாளுவ மங்கு எழுந்திருந்தார்.

''பிரபோ! சம்புவராயர்களை உடனே ஒழித்துவிட முடியும். ஆனால் சுல்தானியர்களை எதிர்க்க எங்கள் தெற்கத்திய படை மட்டும் போதாது'' என்றார்.

''கோபண்ண என்ன கூற விரும்புகிறார்?'' என்று கேட்டார் புக்கராயர்.

கோபண்ண எழுந்திருந்தார்.

ஆழ்வார்ப்பேட்டையில் நான் குடியிருந்தபோது நடனம் கற்று வந்தேன். அப்போது ஒருநாள் அயல் நாட்டினர் சிலர் வந்து நான் நடனம் கற்றுக் கொள்வதைக் கண்டு ரசித்தனர். அதன் பின் வெள்ளூர் சென்றதால் தொடர்ந்து ஒரு வாரம் நடன வகுப்புக்குச் செல்ல வில்லை.

திடீர் என்று ஒரு நாள் நடன ஆசிரியர் அழைத்து வரும் படி சொன்னதாக ஒருவர் வரவே நான் போனபோது ஆச்சரியப் பட்டேன். முன்பு என் நடனம் காண வந்திருந்த அதே அந்நிய நாட்டினர் அங்கு இருந்தார்கள். அவர்கள் தயாரித்து வரும் டி.வி. நிகழ்ச்சியில் என் நடனத்தைச் சேர்க்க விருப்பம் கொண்டார்கள் என்றும், ஆனால் என் பெயர் தெரியாமல் தவித்தார்கள் என்றும் நடன ஆசிரியர் கூறினார்.

ஜெர்மனி டி.வி. நிகழ்ச்சிக்காக நான் நடனமாடியதை அவர்கள் படமாக்கிச் சென்றார்கள். அந்த நாட்டிலிருந்து என் டி.வி. நடன நிகழ்ச்சியைப் பாராட்டி ரசிகர்கள் கடிதம் எழுதியிருக்கிறார்கள்.

-லட்சுமிஸ்ரீ கூறக் கேட்டவர்:
ஆனந்த்



பள்ளிக்கூடத்துக்கு வந்த மாணவனின் தந்தையிடம் டீச்சர் சொன்னாள்: ''உங்கள் பையனைக் கண்டித்து வையுங்கள். மற்ற பையன்களிடமிருந்து பென்சில், பேப்பர் எல்லாம் திருடிவிடுகிறான்.''

அதற்குத் தந்தை வகுப்பறையிலேயே மகனை அடித்துக் கண்டித்தார். ''ஏன் பக்கத்துப் பையன்களிடமிருந்து திருடறே? வெட்கமாயில்லை? நான் தான் ஆபீஸிலேயிருந்து கொண்டு வரேன்னு சொல்லியிருந்தேனே?''

-வி. மைதிலி.

''மன்னவ! சுல்தானை அழிப்பதற்கு சாமானியப் படைகள் போதாது. வல்லாளதேவர் லட்சம் ஆட்களுடன் படையெடுத்தார். பல சிற்றரசர்களும் அவருக்கு உதவினார்கள். அப்படியும் போரில் அவர் தோல்வியுற்றார். ஆகவே, நாமும் பெரும் சைனியத்துடன் சென்றால்தான் எதிரியைத் தோற்கடிக்க முடியும். இல்லாவிடில் முடியாது. ஆனால், இந்த வேளையில் ஒரு விஷயத்தைக் கூற விரும்புகிறேன். தென் நாடுகளின் ஜனங்கள் எல்லோரும் நம்மைத்தான் எதிர்நோக்கியிருக்கிறார்கள். நாம் இத்தனை நாளும் வெறுமனே இருப்பதைப் பார்த்து வருத்தமுறுகிறார்கள். சிலர் நம்மைப் பழிக்கக்கூடச் செய்கிறார்கள். நானே இந்த ஜனங்களின் அவஸ்தைகளை நேரிலே பார்த்தேன். அதை என்னாலேயே சகித்துக்கொண்டிருக்க முடியவில்லை. உணர்ச்சி உள்ளவர்கள் யாரும் இந்த மக்கள் அல்லல் படுவதை விரும்ப மாட்டார்கள். ஏதாவது உடனடியாகச் செய்யத்தான் இஷ்டப்படுவார்கள். மன்னவ! எனக்கு இந்தக் காரியத்தில் உடனே ஏதாவது செய்தே ஆக வேண்டும்என்று தோன்றுகிறது. நம்மிடம் இதற்குப் படைகள் இருந்தாலும் சரி, இல்லாவிட்டாலும் சரி! வாழ்ந்தால் நம் ஜனங்களுடன் வாழ்வோம்! இல்லாவிடில் அவர்களுடனே வீழுவோம்! மன்னவ! நான் உணர்ச்சி வசமாய்ப் பேசுகிறேன் என்று நினைக்க வேண்டாம். தென் நாடுகளுக்கு நான் உதவுவதற்காகவே சபதம் எடுத்து வந்திருக்கிறேன், என் உயிருள்ளவரை அதை நிறைவேற்றித்தான் ஆகவேண்டும்'' என்றார் கோபணா அழுத்தமாக.

''சபதமா? என்ன சபதம்?'' என்றார் புக்கராயர்.

கோபணா மெதுவாக திருவரங்கன் கதை முழுவதையும் விரிவாகக் கூறினார். அவர் குரல் பல இடங்களில் துக்கத்தால் கம்மியது. அநேக இடங்களில் நாத் தழதழத்தது. அரங்கனைப் பற்றிச் சொல்லும் போதெல்லாம் பக்தி கொந்தளித்து விளையாடியது.

அரங்கன் கதை முழுவதையும் சொல்லி, தாம் சபதம் செய்த விவரத்தையும் கூறி முடித்ததுதான் தாமதம், அந்த மந்திராலோசனை சபையே அப்படியே ஒரு மாயத்தால் கட்டுண்டு கிடந்தது.

எங்கும் நிசப்தம் நிலவியது.

புக்கராயரே மிகவும் உணர்ச்சி வசப்பட்டிருந்தார். அவர் கண்களிலே கூட நீர் சுரந்திருந்தது.

சிறிதுநேரம் அவர் மௌனமாகவே இருந்தார்.

பிறகு, ''கோபணா!'' என்று அழைத்து, மெதுவாக ஆதனத்தை விட்டு எழுந்தார்.

''இப்போது என் குமாரன் கம்பணன் உணர்ச்சி வசப்படக் கூடாது என்று சொன்னான். ஆனால் இங்கே இப்போது உங்களது பேச்சைக் கேட்டபிறகு, உணர்ச்சி தான் மிகுந்து நிற்கிறது. உணர்ச்சி சில சமயம் வழி தவறச் செய்யும். ஆனால், அதே உணர்ச்சி நமக்கு நல்ல வழிகளைக் காட்டி மகோன்னதமான உயரங்களுக்கும் நம்மை அழைத்துச் சென்றுவிடும். இந்த விஜய நகரம் பிறந்ததே உணர்ச்சியினால்தான். நாங்கள் உணர்ச்சி வசப்பட்டோம். இந்த நாட்டை ஸ்தாபித்தோம். இப்போது உங்கள் பேச்சைக் கேட்டேனே, கோபணா, இது எத்தகைய உணர்ச்சியைத் தருகிறது என்கிறீர்கள்? அன்று விஜயநகர மண்டலம் எழும்புவதற்கு எங்களிடம் எத்தகைய உணர்ச்சி எழுந்ததோ, அதே உணர்ச்சியைத்தான் இது தருகிறது. நன்றாகச் சொன்னீர்கள், தென் நாடுகளின் ஒரே சின்னம் இந்தத் திருவரங்கர் என்று. அது முற்றிலும் உண்மையே! அந்த அரங்கரது கதியையும், அல்லல்களையும் வெகு அழகாக வர்ணித்தீர்கள். சொல்லப்போனால், தென் நாட்டு மக்களின் வருத்தம் முழுவதற்கும் ஒரு சின்னமாகவே திகழ்வதுதான் இந்தத் திருவரங்கரின் கதை. அதை எனக்கு நன்றாக உணர்த்திவிட்டீர்கள். மக்கள் பட்டதையெல்லாம் கடவுளே பட்டார்! அந்தக் கடவுள் பட்டதையெல்லாம் தெரிந்துகொண்டால் போதும், மக்கள் பட்டதெல்லாம் தெரிந்துவிடும்.

''கோபணா, நானே உணர்ச்சிக்கு ஆளாகிவிட்டேன். என் மனம் வேதனையில் குமுறுகிறது. என்ன செய்ய வேண்டுமோ சொல்லுங்கள்! செய்ய முடியுமா என்று பார்ப்போம்!'' என்று முடித்தார் மன்னர்.

''நேராக சுல்தான்மீது படையெடுக்க வேண்டியது தான் வழி!'' என்றார் கோபணா.

- தொடரும்.

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

"மதுரை சுல்தான் மீது படையெடுக்க வேண்டும்" என்று கோபணு ஆணித்தரமாகக் கூறினர்.

மற்ற அதிகாரிகளும் உடனே அதுதான் சரி என்று ஆமோதித்தார்கள்.

புக்கராயர் குமார கம்பணரைப் பார்த்து, "குமாரா! நீ என்ன சொல்கிருய்?" என்று கேட்டார்.

"படை சந்திக்கச் சித்தமாக இருக்கிறேன். தங்கள் உத்தரவுதான் கிடைக்கவில்லை" என்றுர் கம்பணர்.

புக்கராயர் எல்லோரையும் ஆழ்ந்து பார்த்தார்

"சரி! நீங்கள் சொல்வதெல்லாம் சரி! ஆனுல், பாமனிக்காரர்களை யார் எதிர்த்து நிறுத்துவது?" என்று கேட்டார்.

யாரும் பேசவில்லை. ஒரு மௌனம் அங்கே நிறைந்தது. மன்னர் கூறியதைப் பற்றி எல்லோரும் யோசித்தார்கள். வெகு நேரம் யாரும் பேசவில்லை.

பாமனி! அது ஒரு தொல்லைதான். அந்த ராஜ்யம் மட்டும் இல்லை யென்றுல், இதற்குள் புக்கராயர் மதுரை சுல்தானை அழித்திருப்பார். தென் நாடுகள் முழுவதையும் ஒன்றுக்கி விஜயநகர சாம்ராஜ்யம் என்று பெயர் சூட்டியிருப்பார். மண்டலாதிபதி என்ற தம் பெயரை ராஜாதி ராஜன் என்று மாற்றி இருப்பார்.

ஆனுல் அவைகளை யெல்லாம் நிகழ விடாமல் செய்துவிட்டதே, இந்த பாமனி ராஜ்யம்!

விஜய நகர மண்டலம் ஸ்தாபிதம் ஆன பதினேரு ஆண்டுகளில் (கி.பி. 1347) குல்பர்க்காவைத் தலை நகராக்கிக்கொண்டு அல்லாவுத்தீன் பாமன் என்பவர் ஆரம்பித்த புதிய துருக்கிய ராஜ்யம். விஜய நகர மண்டலத்தாருக்கு புதுத் தொல்லைகளைக் கொடுத்து வந்தது.

ஆரம்ப காலங்களில் இரு ராஜ்யங்களுக்கும் பல சண்டைகள் நடந்த பிறகு, இரண்டும் ஒன்றுக்கொன்றின் பலங்களை அறிந்துகொண்டு ஒருவித நடைமுறை சமாதானத்திற்கு வந்திருந்தாலும் இரண்டு ராஜ்யங்களுக்கும் உள்ளே ஒரு உட்பகை கனிந்துகொண்டேதான் இருந்தது. (விஜய நகர வட எல்லையில் இருந்தது பாமனி ராஜ்யம்!)

அப்படி வடக்கே ஒரு பகை தோன்றியிருக்கும் போது, தெற்கே மதுரை சுல்தான் மீது படையெடுக்க வேண்டும் என்று இப்போது கோபணு தைரியமாகக் கூறிவிட்டார்.

ஆனுல், "பாமனி அரசரை யார் எதிர்த்து நிற்பது?" என்று புக்கராயர் கேட்டதும், எல்லோரும் வாய் மூடி மௌனமாக இருந்தார்கள்.

பாமனி என்ற ஒரு சொல்லே அவர்களை யெல்லாம் கவலையில் ஆழ்த்திவிட்டது என்று அறிந்ததும், புக்கராயர் எழுந்தார்.

மெதுவாகப் புன்னகை புரிந்து, "அவையினர்களே! பாமனிக்காகக் கவலைப் படுவதை நிறுத்துங்கள்! நாமும் இனி நிறுத்துவோம்" என்றுர்.

எல்லோரும் ஆச்சரியத்துடன் புக்கராயரைப் பார்த்தார்கள்.

"ஆமாம், அவர்களைப் பற்றி எத்தனை நாள் கவலைபட்டுக் கொண்டே வேறு காரியங்களில் ஈடுபடாமல் இருப்பது? இப்போது நிச்சயமாகவே தீர்மானித்து விட்டேன். தெற்கு நாடுகள் முழுவதையும் நம் மண்டலத்தில் சேர்த்துத்தான் ஆக வேண்டும்" என்றுர் புக்கராயர்.

துள்ளி எழுந்தார் குமார கம்பணர்.

"தந்தையே! இந்த அருஞ்சொல்லுக்காகத்தான் காத்துக் கொண்டிருந்தேன். உத்தரவு போடுங்கள்!" என்றுர் மகிழ்ச்சி பீறிட.

"குமாரா! பொறு!" என்றுர் புக்கராயர். "இது நான் செய்த தீர்மானம் அல்ல! அரங்கன் செய்த தீர்மானம்" என்று தொடர்ந்தார்.

"மன்னவா, அரங்கன் தங்களுக்குக் கட்டளை யிட்டாரா?" என்றுர் கோபணு.

"கோபணு!" என்றுர் புக்கராயர். "அரங்கன் எமக்கு நேரில் கட்டளை யிட்டால் மிகவும் தன்யனுவேன். ஆனுல் அந்த பாக்கியத்திற்கு இன்னும் நான் ஆளாகவில்லை. ஆனுல் நமது அரசியார் தேவாயி இருபது வருடங்களாகவே இரு ஆசைகளை எம்மிடம் தெரிவித்து வந்திருக்கிறுள். இரண்டும் சாதாரண ஆசைகள். ஆனுல் நிறைவேற்றுவதுதான் மிகவும் கஷ்டம்" என்றுர் புக்கராயர்.

"மண்டலாதிபதிக்குமா கஷ்டம்?" என்று கேட்டார் சாளுவ மங்கு.

"ஆமாம் ராணியாரின் ஆசைகளைச் சொல்கிறேன் கேளுங்கள்! திருவரங்கத்தில் அரங்கனது தேர் விழா ஒன்றை நடத்த வேண்டும். தெற்கே தாமிர வருணியின் புண்ணிய நீரில் ஆழ்ந்து குளிக்க வேண்டும். இவ்வளவுதான் அந்த ஆசைகள்! ஒன்றல்ல, இரண்டல்ல, இருபது ஆண்டுகளாகக் கூறி வருகிறுள்! நானும் 'அதற்கென்ன, எல்லாம் ஒரு நாளில் நிறைவேறும்' என்று கேட்கும் போதெல்லாம் சொல்லிக் கொண்டு வருகிறேன். ஆனுல் சென்ற மாதம் அரசி என்னை அந்தப்புரத்தில் ஒரு தனி உள்ளுக்குள் அழைத்துப்போனுள். அங்கே அதன் கதவுகளைத் திறந்த போது அதிர்ந்து விட்டேன். ஒரே குவியலாகத் தங்கப் பணங்களும், கூறைகளும் (புடவைகள்) குவிந்திருந்தன. இவை எதற்கு என்று கேட்டேன்.

"பணங்கள் எல்லாம் அரங்கனுக்குச் சேர்த்தவை. கூறைகள் தாமிரவருணிக்கரையில் தானம் வழங்குவதற்காக" என்றுள். அப்போதுதான் எனக்கு ஒரு உண்மை புலப்பட்டது. அவளது ஆசைகள் ஒரு நாளில் நிறைவேறும் என்று அவநம்பிக்கையில் சொல்லி வந்திருக்கிறேன். ஆனுல் அவளோ நம்பிக்கையிலேயே வாழ்ந்திருக்கிறுள். இல்லாவிடில் இருபதுவருடங்களாக ஒவ்வொரு தங்கப் பணமாகப் பொறுமையுடன் இவ்வளவு சேர்த்திருப்பாளா?

"அன்று ராத்திரி முழுவதும் அது பற்றித்தான் நினைத்தேன். பத்து வருடங்களாக அவள் நம்பிக்கை வளர்ந்தது போலத்தானே தென் நாடுகளில் மக்களும் வளர்த்து வந்திருப்பார்கள்! சொல்லப் போனுல், பத்து ஆண்டுகள் அல்ல; இருபது ஆண்டுகளாக நம்பிக்கை வளர்த்திருப்பார்களே! வேத மார்க்கத்துச் சமயங்களை எல்லாம் ரட்சிப்பதற்கு இந்த விஜயநகர மண்டலம் தோன்றியிருக்கிறதே; அவர்கள் நம்மைக் காப்பாற்ற வருவார்கள்; நிச்சயம் வருவார்கள் என்று தானே அவர்கள் நினைத்து வந்திருப்பார்கள்! அவர்கள் எல்லோருக்குமே உத்தரமாக, 'ஒரு நாளில் எல்லாம் நடக்கும்!' என்று எத்தனை நாள் நான் சொல்லிக் கொண்டே இருப்பேன்.

"இப்படி நான் யோசிக்கும் வேளையில் தான் திருப்பதியிலிருந்து யாதவராயரும், கோபணுவும் அனுப்

பல தூதுவர்கள் இங்கே வந்தார்கள். அடுத்தடுத்து அவர்கள் வந்த போது. இதுவும் தெய்வச் செயல்தான் என்று நினைத்தேன். இதனால் என் நினைவுகள் பரபரத்தன. சீக்கிரமே இந்த முடிவுக்கு என்னை வரச் செய்தன. நாம் தெற்கே நமது மண்டலத்தை இனி விஸ்தரிக்கிறோம். இதற்குத் தடை இனி இல்லை. குமாரா, இதைத் தெரிவிப்பதற்குத்தான் உங்கள் எல்லோரையும் விஜயநகரத்துக்கு அழைத்தேன்.''

இவ்வாறு உணர்ச்சியுடன் சொல்லி புக்கராயர் அமர்ந்ததுதான் தாமதம், கோபணு எழுந்தார்.

''மன்னவா, நீங்கள் நீடூழி வாழ்க! என் சபதத்திற்கு ஒரு வழி செய்து விட்டீர்கள்!'' என்றார்.

கம்பணர் எழுந்து, ''மன்னவா! என் ஆசைகளும் நிறைவேறுவதற்கு வழி வகுத்து விட்டீர்கள். தென் கடல் வரை இந்த மண்டலம் வியாபிக்க வேண்டும் என்று நினைத்தேன். அது நிறைவேறப் போகிறது'' என்றார்.

பின்னர் விஜயநகரத்திலிருந்து படைகளைத் தெற்கே கொண்டு போவது பற்றிப் பேசினார்கள். தலைநகரிலிருந்து படைகளைக் கொண்டு போவதால் ஏற்படும் ஆபத்துகளையும் பற்றிப் பேசினார்கள். அதுவும் பாமனிக்காரர்கள் துங்கபத்திரையின் வடகரையில் இருக்கும் தருவாயில் அப்படிச் செய்யலாமா என்றும் ஆலோசித்தார்கள். (துங்கபத்திரை நதிதான் எல்லை. அதன் தெற்கே விஜய நகரம்! வடக்கே பாமனி ராஜ்யம்!)

எல்லா விஷயங்களையும் ஆற அமர அலசி முடிவுகளுக்கு வருவதற்குள் இரவு நேரமாகியது.

அவர்கள் முடிவுகளில் முதலாவது, சம்புவராயர்களைத் தாக்கி அவர்கள் ராஜ்யத்தை இணைத்துக் கொள்வது.

இப்படிச் செய்யும் போது மதுரை சுல்தானியர்களின் நடவடிக்கைகளைக் கவனிக்க வேண்டியது.

அதன் பிறகு சந்தர்ப்பங்கள் சரியாக இருந்தால் மதுரை சுல்தானியர் மீதும் உடனே படை எடுத்து விடுவது!

தீர்மானங்கள் செய்த பின்னர் புக்கராயர் தம் குமாரரான கம்பணரை அருகில் அழைத்து, உணர்ச்சிப் பெருக்குடன், அவரைத் தழுவி, தாம் அணிந்திருந்த விலையுயர்ந்த பொன், ரத்தின மாலைகளை அவருககு அணிவித்து, மறுநாளே நன்ருக இருப்பதால், படைகள் புறப்படலாம் என்று கூறி விட்டு, எல்லோரிடமும் விடை பெற்று அரண்மனைக்குள் சென்றார்.

மறுநாள் நடப்பதை 'மதுரா விஜயம்' எழுதிய கங்கா தேவியின் வர்ணனைக்கே விட்டுவிடுகிறேன்.

''மறுநாள் தாமரைகளை எல்லாம் உயிர்ப்பிக்கச் செய்யும் தெய்வீகக் கதிரவன் எழுந்த போது, அரசர் கம்பணன் எழுந்து காலை ஜபங்களை எல்லாம் முடித்த பிறகு தமது தளபதிகளை அழைத்துப் படைகளைச் சித்தமாக்கும்படிக் கூறினார்.

''பின்னர் மந்தார மலையைக் கொண்டு சமுத்திரத்தைக் கடைந்த போது ஓசை எழும்பியதே, அது போன்ற மாபெரும் ஓசைகளைத் துந்துபிகள் எழுப்ப ஆரம்பித்தன.



''முகப்படாம் தரித்த யானைகள், கவசம் தரித்த குதிரைகள், வீரர்கள், யாவரும் உடனே சித்தமானார்கள்.

''மதநீர் வழியும் நூற்றுக்கணக்கான போர் யானைகள் ஒன்றாக வந்து குவிந்தன.

''நாலு தேசங்களிலிருந்தும் (குறு நிலங்களிலிருந்தும்) வாள், ஈட்டி, வில், கத்தி தாங்கிய காலாட் படைகள் ஒருசேரக் குவிந்தார்கள்.

''பலம் பொருந்திய பல குறுநில அரசர்கள் கம்பணர் வருவதை எதிர்பார்த்து அரண்மனை வாயில் வெளியே காத்திருந்தார்கள்.

''அந்தப் பிரதேசம் முழுவதும், தூக்கிப் பிடித்த குடைகளால் நிரம்பி விட்டன. படைகள் என்னும் பெரும் நதியில் பூத்த தாமரைப் பூக்கள் போல அவை தோன்றின.

''நல்ல முகூர்த்தங்களைக் கணக்கிடும் முறையை கம்பணரே தெரிந்து கொண்டிருந்தார். எனினும் தமது புரோகிதர்கள் அந்த நல்ல நேரத்தைக் கணிப்பதற்காக அவர் காத்திருந்தார்.

''அந்தணர்கள் அதர்வ வேதத்தை ஓதி அரசரை ஆசீர்வதித்தார்கள்.

''அரண்மனையை விட்டுப், புறப்பட்ட கம்பணர் வாயிலில் சித்தமாக இருக்கும் தமது உயரமான குதிரையைத் ஏறிட்டுப் பார்த்தார்.

''குதிரை மீது ஏறிக்கொண்டு, பின்னால் எண்ணற்ற படைகள் புடை சூழ, வெளி வாயிலை மன்னர் கடந்தார்.

''ஒரு பெரிய படையை அழைத்துச்செல்லும்போது மன்னர், பெரும் மேகங்களை இழுத்துச் செல்லும் கீழ்த் திசைக் காற்றுபோல் தென்பட்டார்.''

கம்பணர் தமது சமுத்திரம் போன்ற சேனைகளுடன் தெற்கு நோக்கிச் சென்று கர்நாடக நாட்டில், ஆறுதினங்கள் பிரயாணம் செய்து, தமது ராஜ்யத்தின் தலை நகரான முள்வாய்ப் பட்டணத்தை அடைந்தார்.

முள்வாய் நகரம் அதிசயம் அடைந்தது. படைகள் எல்லாம் நகரத்திற்கு வெளியே தண்டு இறங்கியிருக்க, குமார கம்பணரும் ஏனைய படைத் தலைவர்களும் நகருக்குள் சென்றார்கள்.

படையெடுப்பின் செய்திகள் முன்னரே நகரத்திற்கு அறிவிக்கப் பட்டதால், நகரம் எங்குமே விழாக் கோலம் பூண்டிருந்தது.

கம்பணர் நேராகத் தமது அரண்மனைக்குச் சென்றார்.

கங்காதேவி மகிழ்ச்சி பொங்க ஓடி வந்து அவரை ஆரத் தழுவிக் கொண்டாள்.

திருநாராயணபுரம் போய் விட்டு ஒரு வாரத்தில் வருகிறேன் என்று சொன்ன கணவர். எத்தனை மாதங்கள் கழித்துத் திரும்பியிருக்கிறார்?

இவ்வளவு நாட்களும் வராமல் ஏமாற்றி விட்டாரே!

எங்கெல்லாமோ போய் விட்டு கடைசியில் விஜய நகரத்திலிருந்து ஒரு பெரும் படையோடு வந்து நிற்கிறாரே!

இவரை என்ன செய்தால்தான் என்ன என்று கங்கா மனத்தில் நினைத்து துக்கமும், மகிழ்ச்சியும் ஒருங்கே பொங்க, கம்பணரை மனதாரத் தழுவினாள்.

ஐந்து தினங்கள் கம்பணர் தலை நகரில் இருந்து பல ஆயத்தங்களைச் செய்து கொண்டார்.

ஆறும் நாள் படைகளோடு மீண்டும் புறப்பட்டார். ராணி கங்காதேவியும் அவரது பிராயணத்தில் சேர்ந்திருந்தாள்.

கிழக்கு முகமாக ஒரு வாரம் பிரயாணம் செய்து, பாலாற்றின் கரையிலுள்ள விரிஞ்சிபுரத்தை எல்லோரும் அடைந்தார்கள்

விரிஞ்சிபுரம் சம்புவராய ராஜ்யத்தைச் சேர்ந்தது.

விஜய நகரத்திலிருந்து பெரும் படை ஒன்று பாலாற்றில் தண்டு இறங்கி யிருக்கும் செய்தி சம்புவராய அரசர் ராஜநாராயணனுக்கு எட்டிவிட்டது.

அவர் அப்போது காஞ்சீபுரத்தில் வெட்டுக்காயத்திலிருந்து குணமாகி வந்த தமது குமாரன் வென்று மண் கொண்ட சம்புவராயனுடன் தங்கியிருந்தார்.

அவர் உடன் தமது படைகளைச் சித்தம் செய்து கொண்டு, காஞ்சீபுரம் கோட்டையைப் பலவிதங்களில் பலப்படுத்தத் தொடங்கி விட்டார்.

கம்பணரின் படைகள் விரிஞ்சிபுரத்தில் சில நாட்கள் தங்கி, தகுந்த தருணத்தை எதிர்பார்த்த வண்ணம் இருந்தன.

சூசகமான தருணம் கிடைத்தவுடன் கம்பணர் படைகளைப் புறப்படச் சொல்லி, வேகமாகச் காஞ்சீபுரத்தை நோக்கிப் பிரயாணப் பட்டார்.

காஞ்சீபுரம் பெரும் தாக்குதலுக்கு உட்பட்டது.

உள்ளே தங்கியிருந்த ராஜநாராயண சம்புவராயர் தமக்கு எங்கிருந்தாவது ஏதாவது உதவி வரும் என்று எண்ணியிருந்தார்.

ஆனால் எந்த உதவியும் வருதற்கில்லை என்று நான்கு நாட்களில் தெரிந்து விட்டது.

கம்பணரின் படைகள் இதற்கிடையில் தங்கள் தாக்குதலை உக்கிரமாக்கிக் கோட்டையை உடைக்க முயலவே,

சம்புவராயர் இரவுக்கிரவே மகனுடனும் படைத் தளபதிகளுடனும் கோட்டையை விட்டு வெளியேறி நேராகத் தமது தலைநகரான ராஜ கம்பீர மலைக்குச் சென்று விட்டார்.

காஞ்சீபுரம் கோட்டை கம்பணரிடம் சரண் அடைந்தது.

தர்மத்தை மீண்டும் நிலை நிறுத்துவதற்காக, மாபெரும் விஜய நகர சேனை வந்திருக்கிறது என்று தெரிந்து, வீடுகளையும், வீதிகளையும் மக்கள் அலங்கரித்து வைத்திருந்தார்கள்.

காஞ்சீபுரத்து வீதிகளில் கம்பணர் நுழைந்த போது, ''வீர கம்பணர் வாழ்க! குமார கம்பணர் வாழ்க!'' என்ற வாழ்த்தொலிகள் எங்கும் பரந்தன.

நகரமே ஒரு வெறியான ஆர்ப்பரிப்பில் பொங்கி எழுந்து கொண்டிருந்தது.

நகரின் அரண்மனைக்குச் சென்று தண்டு இறங்கிய கம்பணர், தமது ராணி கங்காதேவியை அழைத்து,

''கங்கா! பிரசித்தி பெற்ற காஞ்சி நகரைப் பார்க்க வேண்டும் என்றாயே! நீயே போய்ப் பார்! கோவில்களையும் மடங்களையும் மனதாரப் பார்த்து விட்டு வா'' என்று கூறினார்

—தொடரும்

---

# கதிர்போ
# கதிர்போஸ்
# கதிர்போஸ்ட்



கதிரில் இப்போது தரமான விஷயங்கள் ஏராளம் வருகிறதே? ஆசிரியர் ஒரு பக்கம் இலக்கியச் சுவையான கட்டுரைகள் தருகிறார் என்றால் இன்னொரு பக்கம் இலக்கிய நயமான நாடகங்களையும் தேடிப் பிடித்துப் பிரசுரம் செய்கிறீர்களே? 'நினைவில் நல்லது வேண்டும்' நாடகம் பிரமாதம்!

சென்னை-81. எம். சண்முகவேல்

உலகத்து உயிர்களையெல்லாம் உய்விக்க வந்த 'உலகநாத பெருமானிடம்' உள்ள உறவை மறந்து வேறு பல இடைக்கால கவர்ச்சிகளின் உறவால் மயங்கி நிற்பவர்கள் அனைவரும், துன்பத்தின் பிடியில் சிக்கி, நிறைவற்ற வாழ்வை இறுதிக் காலத்தில் ஏற்கநேரிடும் என்பதை, ஆசிரியர் பகுதியில் எவ்வளவு அருமையாக உணர்த்தியுள்ளார்.

திரு நீலகண்டன் அவர்கள் கதைதான் எழுதுவார் என்றிருந்த எங்களுக்கு எதிர்பாராமல் கிடைத்த அவரது அனுபவ விருந்து கண்டு மிக்க மகிழ்ச்சி கொள்கிறோம். முதல் அத்தியாயத்திலேயே எங்களை அதிகமாகக் கவர்ந்து விட்டாரே!

மேட்டுப்பாளையம் பி. பீட்டர், கே. அம்மாசாமி

ஓவிய மேதை 'சில்பி' அவர்களின் கைவண்ணத்தில் இவ்வாரத்தில் மலர்ந்த (14-7-78) திருவள்ளூர் ஸ்ரீ வீரராகவ சுவாமி சன்னிதியின் சித்திரங்களும் ஸ்ரீராமர் சன்னிதியின் மூலவர்கள் உற்சவ மூர்த்திகளின் சித்திரங்களும் என்னை மெய்சிலிர்க்கச் செய்து விட்டன.

பண்ணைப்புரம். என். சங்கர்



'இவள் ஒரு சீதை' பட விமரிசனத்தில் அருமையாக வசனம் எழுதியிருந்த புகழ் மணியைப் பற்றி பாராட்டி எழுதியிருந்தால் பேனாவில் உள்ள மையா தீர்ந்து போய் விடும்?

சென்னை-4. கே. பாஸ்கர்

'நீன்காவது இரவில் நடந்தது' கதை என் கண் முன்னால் நடந்தது போல இருக்கிறது. வெரி குட் கிருஷ்ணபிரியா!

இராசிபுரம் ஆர்.டி. பாரதமணி

லட்சுமி ராஜரத்னம் எழுதும் 'உனக்காக மட்டும்' தொடர் கதை படிக்கும் பொழுதே மிகவும் விறுவிறுப்புடனும் அடுத்த பகுதி எப்பொழுது வரும் என்று ஆவலுடனும் எதிர்பார்க்க வைக்கிறது.

கிழக்குதாம்பரம். ஆர். தேவன்





கதிரின் நடுப் பக்கத்தில் வெளியான திரு சில்பியின் திருவள்ளூர் கோயிலையும் அதனைச் சுற்றியுள்ள இடங்களின் பிரும்மாண்டமான ஓவியத்தையும் கண்டு பிரமித்துப் போனேன்.!

நங்கைநல்லூர் இ. சங்கர்

கல்லூரி மாணவிகள் என்றால் இப்படித் தான் இருப்பார்களோ என எண்ணத் தோன்றுகிறது அபர்ணா நாயுடுவின் 'வீ லு-மை-டார்லிங்'கைப் படித்தவுடன்.

போளூர். இளந்தேன்

---

Printed & Published on behalf of Indian Express (Madurai) Ltd. by R. RAMAKRISHNAN at the DINAMANI PRESS Express Estate Madras-600 002. Acting Editor: K. R. VASUDEVAN.

"நகரைச் சுற்றிப் பார்ப்பதுதானே?" என்று அரசர் கூறியதும், கங்காதேவி மிகவும் மகிழ்ச்சி அடைந்தாள்.

"ஆமாம், சுவாமி! நான் சீக்கிரமே பார்த்தாக வேண்டும். பாரவி சொன்னதைத் தாங்கள் கேட்டதில்லையா?" என்று கேட்டாள்.

"என்ன சொன்னார் பாரவி?" என்றார் அரசர்.

கங்கா உடனே இனிதான குரலில்,

"புஷ்பேஷு ஜாதி:
புருஷேஷு விஷ்ணு:,
நாரீஷு ரம்பா,
நகரேஷு காஞ்சி!"

என்று இராகமிட்டுக் கூறினாள்.

இதைக் கேட்ட குமார கம்பணர், "கங்கா உன் அளவு வடமொழியில் பாண்டித்தியம் எனக்குக் கிடையாதே! இதன் அர்த்தத்தைச் சொல்!" என்று கூறினார்.

"சொல்கிறேன். மலர்களில் அழகானது ஜாதி! புருஷர்களில் அழகானவர் விஷ்ணு! பெண்களில் அழகானவள் ரம்பா! நகரங்களில் அழகானது காஞ்சி!" என்றாள் கங்கா!

"பாரவி எப்போது வாழ்ந்தார்?" என்றார் மன்னர்.

"கிட்டத்தட்ட அறுநூறு ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்ததாகப் பெரியவர்கள் கூறுகிறார்கள்" என்றாள் கங்கா.

"அடேயப்பா! அறுநூறு ஆண்டுகளுக்கு முன்பா? அவர் இப்போது வாழ்ந்தால் என்ன சொல்வார் தெரியுமா?" என்று கேட்டார், மன்னர்.

"சொல்லுங்கள்!" என்றாள் ராணி

"புஷ்பேஷு ஜாதி,
புருஷேஷு விஷ்ணு,
நாரீஷு கங்கா,
நகரேஷு காஞ்சி"

என்று முடித்தார் மன்னர்.

கங்கா கலகலவென்று சிரித்தாள். "ஏது, நீங்களே ஒரு கவி போல இருக்கிறதே!" என்றாள்.

"கவி ஆகத்தான் பார்க்கிறேன். ஆனால் நாட்டு நிலைமை அதற்கு அனுகூலமாக இல்லையே!" என்றார் மன்னர்.

மாலையில் ராணி கங்காதேவி நகரத்தை வலம் வர ஆரம்பித்தாள்.

எங்கும் மக்கள் திரள்திரளாக நின்று ஜய கோஷங்களை வழங்கினார்கள்!

அவர்கள் உற்சாகம் கரை புரண்டு ஓடிக் கொண்டிருந்தது.

சம்புவராயர் வேதசமயத்தையேசார்ந்தவர்என்றாலும், சுல்தானுக்கு அவர் அடிபணிந்து போனதால் மக்களுக்கு அவர் மீது அதிகமாக அதிருப்தி இருந்தது.

வழிபாடுகளிலும் பண்டிகை உற்சவங்களிலும் பூர்ணமான சுதந்திரத்தைக் காண முடியவில்லையே என்று வருத்தப்பட்டார்கள் அவர்கள்.

எனவே அந்த ஆட்சி இப்பொழுது அழிகிறது என்று தெரிந்த போது அவர்களுக்கு மகிழ்ச்சி கரை புரண்டு வந்தது.

விடுதலை கிடைத்த ஒரு உணர்ச்சி எல்லோரது முகங்களிலும் தனியாகத் தெரிந்தது.

முதன் முறையாகத் தமிழ் பேசும் நாட்டில் உள்ள கோவில்களைத் தரிசிக்கும் பேறு கங்காவுக்குக் கிடைத்தது. புகழ் பெற்ற காஞ்சி வரதரையும், ஏகாம்பரேசுவரரையும், மற்றும் பிரசித்த பெற்ற அநேக காஞ்சித் தல கோவில்களையும் தீர்த்தங்களையும் அவள் தரிசித்தாள்.

எல்லாவற்றையும் முடித்துவிட்டு அரண்மனை திரும்பும் போது, கங்காவின் மனம் அதுநாள் வரை அனுபவித்தறியாத இன்பத்தை அனுபவித்தது.




இரவில் கங்காதேவியை, "நகரம் எப்படி இருந்தது?" என்று கம்பணர் கேட்ட போது,

"சுவாமி பாரவி சொன்னது நிச்சயம் சரிதான்! நகரம் அற்புத அழகாக இருக்கிறது. இனி நாம் காஞ்சியைத்தான் நம் தலைநகரமாக்கிக் கொள்ள வேண்டும்" என்று கூறினாள்.

"செய்வோம். முதலில் சம்புவராயர் ராஜ்யத்தைப் பிடித்து விட்டு அதைச் செய்வோம். நாளை நாங்கள் ராஜகம்பீரன் மலைக்குப் புறப்படுகிறோம்" என்றார் மன்னர்.

அகழிக் தரையோரம் அரண்மனை அடிவாரத்தில் விழுந்திருந்த வல்லபனும், தத்தனும் இரு நாட்கள் பட்டினி கிடந்தார்கள்.

இதற்கு மேலும் என்ன நடக்கும் என்று நினைத்த போது, வல்லபனுக்குச் சில விசித்திரமான நினைவுகள் தோன்றின.

தனது மதுரா மட்டும் உண்மையில் ஓர் அறிவுள்ள பெண்ணாக இருந்தால் அவன் அங்கிருப்பதைஉணர்ந்து விடுவாள் என்று நினைத்தான்.

மேலும் அவனைப் போலவே அவளுக்குப் பிரேமை இருக்குமானால் அவன் இருக்கும் இடம் த்ருஷ்டியில் உதிப்பதுபோல அவள் மனத்தில் உதித்து விடும்.

பிரேமைக்கு அத்தகைய அபூர்வ சக்தி உண்டு.

ஒருவர் நினைப்பதை மற்றவர் தானாகவே நினைத்து விடுவர்;

ஒருவர் இருக்கும் இடத்தை மற்றவர் தானாகவே உணர்ந்து விடுவர்;

ஆகவே நிச்சயம் அந்த ராஜகுமாரி மதுராதேவி- அவள் மனத்தில் தூய பிரேமை இருக்குமானால்-அவன் இருக்கும் இடத்தையும், அவன் படும் துயரத்தையும் அறிந்து விடுவாள் என்று நினைத்தான்.

மூன்றாம் நாளும் பட்டினி கிடக்கவே, தத்தன் அவனை நோக்கி, "வல்லபா! வழியில் பிறழாதே என்று உன்

தாயார் கூறியிருந்தாளே! அவள் சொல்படி நடந்திருந்தால் இந்த இக்கட்டில் அகப்பட்டிருப்போமா? நாம் நமது வழியே போயிருப்போம் அல்லவா!'' என்று புலம்பினான்.

அவனுக்கு மறுமொழி சொல்லத் தெரியாமல் வல்லபன் மௌனமாக இருந்து விட்டான்.

நான்காம் நாள் காலையில் வயிற்றுப் பசி கிள்ளி, இதனால் மயக்கம் ஏற்படுமோ என்று பயப்படும் தறுவாயில், தத்தன் வல்லபனை நோக்கி,

''வல்லபா! நம் உடலில் பலம் எஞ்சியிருக்கும் போது தப்பிக்க ஏதாவது வழி செய்தால்தான் நல்லது. இல்லாவிடில் அசக்தர்களாகி விடுவோம்'' என்று எச்சரித்தான்.

வல்லபனுக்குக் குழப்பமாக இருந்தது. அவன் செய்த காரியம் தவறோ என்று கூடத் தோன்ற ஆரம்பித்தது.

எனினும் மனத்தில் அவன் தன் பிரேமை மீது வைத்திருந்த நம்பிக்கை தளரவில்லை.

தூய பிரேமை மட்டும் இருந்தால் நடக்க முடியாததெல்லாம் நடக்கும் என்று இன்னும் எண்ணினான் அவன்.

எனினும் என்ன செய்வோம் என்ற தத்தளிப்புடன் கீழ் தாழ்வாரப் பதவலை விட்டு வெளியே வந்து மேலே பார்த்த போது, திடீரென்று ஒரு கூடை இறங்குவதைப் பார்த்துத் திடுக்கிட்டான்.

அந்தச் சிறு கூடை ஒரு கயிற்றுடன் கீழே இறங்கி, தரையில் அந்தப் புறமும் இந்தப் புறமும் தலையை ஆட்டி அவர்களை அழைத்தது.

வல்லபன் தீவிரமாக யோசித்து, பிறகு நீண்ட மரக்குச்சி ஒன்றை எடுத்து, கூடையிலிருந்து ஓலையை மட்டும் மெள்ள எடுத்துக் கொண்டான்.

ஆவலோடு பிரித்த போது அதில்,

''இளவரசியார்மதுராங்கனியின்அந்தரங்கத் தாதி விசுவப்ரியா தெரிவிப்பது. எமது அரசியார் நீங்கள் இங்கேதான் இருக்க வேண்டும் என்று ஊகம் வைத்திருக்கிறார். இங்கே இருப்பீர்களானால் உத்தரம் அனுப்பவும்.''

என்று கண்டிருந்தது.

ஒரு கணத்தில் உணர்ச்சிகள் பெருக்கெடுத்து வந்தாலும், இதில் ஏதாவது சூழ்ச்சி இருக்கும் என்று சந்தேகித்து அந்த ஓலையை மறுபடியும் அந்தக் கூடைக்குள் போட்டு விட, கூடையும் சிறிது நேரத்தில் மேலே சென்று விட்டது.

அப்பால் கால் நாழிகை கழித்துக் கூடை கீழே இறங்கியது.

இந்தத் தடவை அதே பழைய ஓலையுடன் ஒரு கங்கணமும் வைக்கப்பட்டிருந்தது.

கங்கணத்தின் மீது மீன் உருவங்கள் பொறிக்கப்பட்டிருப்பதைப் பார்த்து,நிச்சயம் இதுஅரச குமாரியின் கங்கணந்தான், அவர்களுக்கு உறுதி அளிக்கவே இதை அனுப்பியிருக்கிறாள் என்று நிச்சயித்தான்.

ஓலையை எடுத்து அதன் மறுபுறத்தில், ''நானும் என் சிநேகிதனும் இங்கே அகப்பட்டிருக்கிறோம். ஒரே பசி! ஏதாவது அனுப்புங்கள்! தப்பிக்க வழி செய்யுங்கள்!'' என்று எழுதி மேலே அனுப்பினான்.

சிறிது நேரத்தில் உணவுப் பண்டங்களுடன் கூடை இறங்கியது. ''சீக்கிரம் நீங்கள் தப்பிக்க ஏற்பாடு செய்கிறோம்'' என்று விசுவப்ரியா ஓலையில் எழுதி இருந்தாள்.

ஒரு வாரம் இதுபோல் பண்டங்கள் போக்குவரத்து நடந்த பிறகு, ஒரு நாள் காலையில் இரு இளைஞர்களும் நூலேணி மூலமாக மேலே ஏறறப்பட்டார்கள்.

அங்கே அவர்களுக்கு ஒரு பழைய கொடிக்கம்பு வைக்கும் அறை ஒதுக்கப்பட்டது.

அதில் மூன்று நாட்கள் தங்கிய பிறகு, முதலில் தத்தனை தப்புவிப்பதற்காக விசுவப்ரியா அழைத்துப் போனாள்.

அவன் போய் இரண்டு நாட்களிலும் வல்லபனுக்கு எந்தவிதச் செய்தியும் வரவில்லை.

யாரிடமாவது தாதிகளிடம் கேட்கலாமா என்று பார்த்தால் அது போல் செய்யக் கூடாது என்று விசுவப்ரியா எச்சரித்திருந்தாள்.

அறையும் எப்போதும் மூடியே இருந்தது. அதைத் திறந்தால் என்ன ஆகுமோ என்று பயம் வேறு.

இப்படித் தத்தளித்துத் தடுமாறிக் கொண்டிருந்த போது,மூன்றும் நாள் ''ஐயா! ஐயா!'' என்று இனிதான ஒரு மொழி கேட்டது.

வல்லபன் குரல் வரும் திசை தெரியாது குழம்பினான்.

''ஐயா! ஐயா! உங்களைத்தான்! நீங்கள் என் குரலைத்தான் கேட்க முடியும். என்னைப் பார்க்க முடியாது. அப்படி ஒரு இடத்தில்நான் இருக்கிறேன்'' என்றது குரல்.

''சொல்லுங்கள்! நீங்கள் யார்? என்னிடம் என்ன சொல்ல விரும்புகிறீர்கள்? நான் இங்கிருந்து தப்ப முடியுமா? என் நண்பன் எங்கே போனான்?'' என்று சரமாரியாகக் கேள்விகளைக் கேட்டான் அவன்.

''ஐயா! ஒரேயடியாகக் கேள்விகளை அடுக்கிக் கொண்டே போகிறீரே! ஒவ்வொன்றாகக் கேளுங்கள்'' என்றாள்.

''சரி முதல் கேள்வியைக் கேட்கிறேன், நீங்கள் யார்?'' என்றான் அவன்.

''அதற்கு முன் நீங்கள் சொல்லுங்கள், நீங்கள் யார்?'' என்றாள் அவள்.

குரல் வரும் திசையைப் பார்த்தால்,அவள் ஏதோ ஒரு சாளரத்தின் ஓரத்தில் இருந்து கொண்டு பேசுவது போலிருந்தது. இது யாராக இருக்கும்?

''இது தெரியாதா, உங்களுக்கு? ரத்தின வியாபாரி!'' என்றான் அவன்.

''இல்லையே! நீங்கள் வேஷம் போட்டிருக்கிறீர்கள்! எனக்குத் தெரிந்து விட்டது.'' என்றது குரல்.

''வேஷமா? நானா? எப்படிச் சொல்கிறீர்கள்?''என்றான் அவன்.

''நீங்கள் இரு இளைஞர்களும் வழிப் பிரயாணத்தின் போது தாடி மீசை ஏதும்இல்லாமல் இருந்தீர்கள்.''

அவன் திடுக்கிட்டான்.

''அது உங்களுக்குத் தெரியுமா? அப்படியானால் நீங்கள் யார்?'' என்றான் அவன் பரபரப்புடன்.

''வழியில் ஒரு பெண்ணைப் பார்த்தீர்களே, அந்தப் பெண்தான் நான்'' என்றது குரல்.

வல்லபனது முகத்தில் இரத்தம் ஏறியது.

''நிச்சயமாகத்தானா?'' என்றான் அவன். அவன் உடலெல்லாம் குறுகுறுத்தது.

''நான் உங்கள் இருவருக்கும் அனுப்பிய மகர கண்டிகையும், மகர கங்கணமுமே அதற்குச் சாட்சி!'' என்றாள் அவள்.

வல்லபன் திடுக்கிட்டான்.

''அப்படியானால் தாங்கள்...'' என்று இழுத்தான்.

''பாண்டிய இளவரசி!'' என்றது குரல்.

''தாங்களா?......'' என்றான் அவன் உணர்ச்சிப் பெருக்குடன். பிறகு தன் உணர்ச்சி அதிகமாகி விட்டதென்று தன் நாக்கைக் கடித்துக் கொண்டான்.

''ஆமாம், நானேதான்! வழிப்பயணத்தில் உங்கள் இருவருக்கும் அதைக் குறிப்பால் உணர்த்தினேன். நீங்கள் புரிந்து கொள்ளவில்லை'' என்றாள் அவள்.

''நீங்கள் குறிப்புக் கொடுக்கிறீர்கள் என்பது தெரிந்தது. ஆனால் அதைப் புரிந்து கொள்ள முடியவில்லை'' என்றான் அவன்!

''திருக்குறுங்குடிக்கே என்னை உயர்த்திடுமுன் என்று பாடினேனே! அது தெரியவில்லையா?''

''இரு முறை அதே வார்த்தைகளை அழுத்திப்பாடினது எங்களுக்குத் தெரியும். ஆனால் அதன் உட்பொருளை எங்களால் கணிக்க முடியவில்லை.''

''பாண்டிய நாட்டுக்கே என்னை அனுப்பி விடுங்கள் என்று அர்த்தம். சரி, அது போகட்டும்! மகரகண்டிகையைச் சத்திரத்தில் போட்டேன். ஓலையும் வைத்தேன். இதுபற்றி வண்டி ஏறினதும் அபிநயித்தேன்! அதையும் புரிந்து கொள்ளவில்லை.''

வல்லபனுக்கு அவள் சொல்லச் சொல்ல உடலில் எங்கேயோ உறைத்துக் கொண்டிருந்தது.

துப்பு ஆயும் திறன் இல்லாமல் போய் விட்டதே! இவளை அப்போதே காப்பாற்ற முடியவில்லையே என்று நினைத்தான்.

''என்ன மௌனமாகி விட்டீர்கள்! நான் சொல்வதெல்லாம் உண்மைதானே?'' என்றது குரல்.

ஆமாம்!'' என்றான் அவன.

''இவ்வளவு குறிப்புகள் நான் கொடுப்பதற்கும் ஒரே ஒரு காரணம் இருந்தது'' என்றது குரல்.

''என்ன காரணம்?''

''உங்கள் இருவரில் ஒருவர் எனக்காக உயிரை விடவும் துணிந்தீர்கள்!'' என்றாள் அவள்.



''அது நான்தான்! நான்தான்!'' என்ருன் அவன் அவசரமாக. பிறகு தனது படபடப்பைக் கண்டு அவனே வெட்கப்பட்டான்.

''நல்லது! உங்களது அந்தத் துணிச்சல்தான் உங்கள் இருவர் மீதும் நம்பிக்கையைக் கொடுத்தது. அதனுல்தான் நான் யார் என்பதை உங்களுக்கு வெளிப்படுத்த முயன்றேன். ஓலையில் விவரமாக எழுதியிருப்பேன். அதற்கு அவகாசம் இல்லாமல் போய்விட்டது. ஆனுல் கடைசியில் நான் யார் என்பதை எப்படியோ கண்டு பிடித்து இவ்வளவு தூரம் வந்திருக்கிறீர்களே! அது எப்படி முடிந்தது?'' என்று கேட்டாள் அவள்.

''அதை நாங்கள் கண்டுபிடிக்கவில்லை. வேருெருவர் கண்டு பிடித்தார்.''

''யார் அது?''

''அந்தக் கற்பூர வியாபாரி! சத்திரத்தில் பார்த்தோமே!'' என்ருன் அவன்.

''அந்தக் கோமாளி வியாபாரியா?'' என்ருள் அவள்.

''நானும் கோமாளி என்றுதான் நினைத்தேன். ஆனுல் அவன் பெரிய விசித்திர சித்தன்.''

''அவர் பேசியதைப் பார்த்தே அது தெரிகிறது. யார் அவர்?''

''சொல்கிறேன். விஜயநகரத்து தென்மண்டலத்தின் ஒற்றர் தலைவர் அவர். கற்பூரகாந்தன் என்று பெயர்.''

''அவரா! என்னைக் கண்டுபிடித்து விட்டார்?''

''ஆமாம் இளவரசி! அவர் யமகாதகராக இருக்கிருர். அவரது அறிவையும் திறமையையும் பார்த்து நான் அதிசயிக்கிறேன். அவர் சொல்லுக்கு நான் மந்திரம் போல் கட்டுப்படுகிறேன். அவர்தான் தாங்கள் இன்னுர் என்று கூறி, தங்களுக்கு ஒரு ஓலையையும்கொடுத்து அனுப்பினுர். நீங்கள் அந்தப்புரத்தில் சிறைவாழ்ந்து, நொந்து போய் தற்கொலை செய்து கொண்டுவிடக் கூடாதே என்பது அவர் கவலை. அதற்காகத்தான் எங்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பினுர். நாங்களும் இரத்தின வியாபாரிகளாக இங்கே வந்தோம். எவ்வளவோ அவர் எங்களுக்குச் சொல்லிக் கொடுத்திருந்தார். ஆனுல் சரியான சந்தர்ப்பத்தில் கோட்டை விட்டு விட்டோம். இப்படி நேர்ந்ததுகூட எங்கள் சிறுபிள்ளைத்தனத்தால்தான்......''

அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே தடால் என்று தாம்பாளம் மறுபுறத்தில் விழும்பெரும் ஓசை கேட்டது.

தொடர்ந்து அரவங்களும் கேட்டன.

வல்லபன் பயந்து போய் மௌனமாஞன்.

—தொடரும்



# ஸெராமிக் என்ருல் ....

ஒரு சமயம் புதுப் பெரியவாள் ஸ்ரீ ஜயேந்திர சரசுவதி சுவாமிகளைப் பார்த்து ஒரு பக்தர் ஒரு கேள்வி கேட்டார்.

''சுவாமி! கல் ஒன்றுதான். அதிலிருந்து செதுக்கப்படும் ஓர் உருவத்தைக் கடவுளாக மதிக்கும் அதே சமயம், அதே கல்லின் மற்ருெரு பகுதி வண்ணுனுக்குத் துணி துவைக்கப் பயன்படுகிறது. முற்றிலும் துறந்த தங்களைப் போன்ற ஞானிகளுக்கு ஒரே பொருள் இரண்டு வித்தியாசமான தோற்றங்களைத் தர இயலாது. அனைத்தையும் சமமாகப் பார்ப்பது என்ருல் ஒன்று கல்லாகவும், மற்ருென்று கடவுளாகவும் மதிக்கப்படுவது ஏன்? நான் கல்லைக் கடவுளாகவும், கடவுளைக் கல்லாகவும் ஏன் மாற்றிச் சொல்லக் கூடாது? இதற்கு விளக்கம் கூற முடியுமா சுவாமி?'' என்ருராம்.

''நல்ல கேள்விதான்!'' என்று புன்னகை புரிந்த சுவாமிகள், சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டு, ''தங்கள் வீடு எங்கே இருக்கிறது?'' என்று கேட்டிருக்கிருர்.

''பக்கத்தில்தான் இருக்கிறது சுவாமி. புது வீடு கட்டி சமீபத்தில்தான் கிரகப்பிரவேசம் செய்தேன்'' என்ருர் அந்த பக்தர்.

''புது வீடா? அதில் எத்தனை அறைகள் இருக்கின்றன?'' என்று கேட்க ஆரம்பித்து, பேசிக் கொண்டே, ''லெட்ரின் பம்பாய் மாடலா?'' என்று கேட்டார்.

''ஆமாம்! பாம்பே கக்கூஸ் தான்.''

''அங்கே எதை நிலத்தில் பதித்திருக்கிறீர்கள்?'' புதுப் பெரியவர் கேட்டார்.

''ஸெராமிக்.''

''தமிழில் சொல்லுங்கள்.''

''பீங்கான்.''

''உங்கள் வீட்டிற்கு விருந்தாளி வந்தால் என்ன செய்வீர்கள்?''

''காப்பி கொடுத்து உபசரிப்பேன்.''

''எதில் காப்பி கொடுப்பீர்கள்?'

''கப் அண்ட் ஸாஸரில்.''

''அது எதில் செய்தது?''

''அதுவும் பீங்கான்தான்.''

''அதாவது கக்கூஸில் பதித்திருப்பதாகச் சொன்னீர்களே, அந்த ஸெராமிக்கா?''

புதுப் பெரியவாள் இப்படிக் கேட்டதும், குயுக்தியாகக் கேள்வி கேட்ட பக்தர் தன் தவறை உணர்ந்து, ''என்னை மன்னிக்க வேண்டும் சுவாமி'' என்று காலில் விழுந்து விட்டார்.

நீடாமங்கலம் கிருஷ்ணமூர்த்தி பாகவதர் கூறியது.

-திலைரஞானி



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

அடுத்த அறையில் தாம்பாளம் விழுந்த சப்தம் கேட்டது. அந்தப் பெண் குரல் உடன் நின்று விட்டது. தொடர்ந்து உள்ளே அரவங்கள் கேட்டன.

ஏதோ அங்கே நடக்கிறது என்று வல்லபன் நினைத்தான். அந்தப் பெண் பேசியதை யாராவது கேட்டிருப்பார்கள். யாருடன் பேசினாள் என்பதை அறியச் சோதனை போட வந்திருப்பார்கள். அப்படிச் செய்யும் போது அடுத்தாற் போல் இந்த அறைக்கும் வருவார்கள். நம்மைப் பிடித்தாலும் பிடிப்பார்கள்.

அறைக்குள் சுற்றி வரப் பார்த்தான். ஒளிய இடம் இருக்கிறதா?

மேலே உச்சாணி வரை கொடிக் கம்பங்கள் நீண்டு கிடந்தன. பழைய கொடித்துணிகள் தாறுமாறாகத் தொங்கிக் கொண்டிருந்தன.

வல்லபன் ஒரு கம்பத்தைப் பிடித்து மேலே ஏறினான். அங்கே சித்திர வேலைப்பாட்டுடன் ஒரு தாமரைப் பட்டிகை காணப்பட்டது. அதில் காலை ஊன்றுவதற்குத்தான் இடம் இருந்தது. ஏறி அதின் கீழ் அமர்ந்து கொடிக் கம்பங்களை மெதுவாக நகர்த்தி, கொடித் துணிகளால் தன்னை மறைத்துக் கொண்டான்.

அவன் நினைத்தது வீண் போகவில்லை. சில விநாடிகளில் சில அலிகளும், பெண் வீரர்களும் கொடிக்கம்ப அறைக்குள் வந்தார்கள்.

இந்தக் கதை நடக்கும் காலத்தில் அரண்மனையில் வேலை செய்யும் பெண் பரிவாரங்கள் எல்லாவிதப் பயிற்சிகளையும் பெறுவது வழக்கம். குதிரை ஏற்றம், யானை ஏற்றம், வாள் பயிற்சி, மல் யுத்தம், வில் பயிற்சி, ஆகியவைகளில் ஈடுபட்டு வீராங்கனைகளாகத் திகழ்வார்கள்.

ராணிகள் யாத்திரை போவதானால், இந்தப்பெண்கள் ஈட்டிகளும், வில்களும் தாங்கி, குதிரைமீது ஆரோகணித்துப் போவார்கள்.

அப்படிப்பட்ட பெண் வீரர்கள் பலர், கொடிக் கம்ப அறைக்குள் நுழைந்து, சுற்றிவரப் பார்த்தார்கள். கிடந்த துணிப் பொதிகளைக் காலால் உதைத்தார்கள். மாடத்தின் பக்கம் சென்று கைப்பிடிச்சுவரிலிருந்து குனிந்து ' அரணையும், அகழியையும் பார்த்தார்கள். பிறகு அறைக்கு வந்து, அதை மூடிக் கொண்டு வெளியே போனார்கள்.

வல்லபனுக்குக் கதக் கதக் கென்றிருந்தது. அகப்பட்டால் என்ன செய்வோம் என்று நினைத்தான். இந்தப் பெண் புலிகளுடன் போராடி வெற்றி பெற முடியும்; ஆனால் விசாலமான அரண்மனைக்குள் அகப்பட்டிருப்பதால், மற்ற வீரர்கள் ஓடி வந்து அவனைச் சூழ்ந்து விடுவார்கள்.

ஆகவே பேசாமல் இருப்பதுதான் ஒரே வழி என்று இருந்து விட்டான்.

இப்போது பெண் வீரர்கள் போன பின் பட்டிகையிலேயே அப்படியே அமர்ந்திருந்தான். நாழிகையாகியும் இறங்கவில்லை.

ஒரு முகூர்த்தம் ஓடியிருக்கும்.

கதவு மெள்ளத் திறந்தது. போர்வை போர்த்திய தாதி ஒருத்தி உள்ளே நுழைந்து, ''ஐயா! ஐயா''என்று அழைத்தாள்.

''இவள் நமக்குச் சாதகமானவளா? அல்லது நம்மைப் பிடிக்க மற்றவர்கள் சூழ்ச்சி செய்கிறார்களா?''

வல்லபன் அசையாது இருந்தான்.

அந்தத் தாதி அறை முழுதும் தேடினாள். பிறகு மாடத்திற்குச் சென்று கீழே பார்த்தாள். மீண்டும் அறைக்குள் வந்தாள்.

''ஐயா, ஐயா! எங்கிருக்கிறீர்கள்? நான்தான் வந்திருக்கிறேன். நீங்கள் வெளியே வரலாம்'' என்றாள்.

அந்தக் குரல் அவனுக்குத் தெரிந்தது போல் இருக்கவே ஆச்சரியப்பட்டு, தன்னை மறைத்த கொடிக் கம்பை அவன் நகர்த்த, அந்தச் சப்தம் கேட்டு அவள் தலையை நிமிர்த்தினாள்.

அவன் பிரமித்து விட்டான்.

அங்கே நின்று கொண்டிருந்தது யார்? பாண்டிய இளவரசிதானா?

கம்பத்தின் வழியே கீழே இறங்கி அவள் முன்னால் நின்றான். ''நீங்களா?'' என்று சொல்லித் தடுமாறினான்.

உணர்ச்சி வசத்தில் அவன் பார்வை மறைந்துவிட்டது. ராஜகுமாரியின் தோற்றம் ஒரு உருவெளியாகத் தெரிந்தது. அவளை ஏறிட்டுப் பார்க்கவும் அவனுக்குத் திறன் இல்லை.

''ஐயா, புத்திக் கூர்மையுடன் நடந்திருக்கிறீர்கள். இல்லாவிடில் இந்நேரம் சிறைப் பட்டிருப்பீர்கள். உங்களுக்கு என்ன நேர்ந்ததோ என்று பார்க்கவே வந்தேன்'' என்றாள்.

அந்த இனிய குரலை—அவனது மகர விழியாளின் தீங்குரலை அருகில் கேட்கவே கரும்பாக இருந்தது.

உடலில் எங்கெல்லாமோ உணர்வுகள் கொழித்து வந்தன. பேச நா எழவில்லை. எனினும் தடுமாறிக் கொண்டு, ''எனக்கு நேர்வது அவ்வளவு முக்கியமல்ல, இளவரசி! தங்களுக்கு ஏதாவது நேராமல் இருப்பதுதான் முக்கியம்! ஏனெனில் தங்களது உயிர் எவ்வளவு முக்கியமானது என்பதை கற்பூர காந்தன் என்ற ஒற்றர் தலைவனே விளக்கி விட்டார். அவர் விஜயநகரம் நோக்கிப் போயிருக்கிறார். அவசியம் படைகளுடன் சீக்கிரம் வருவார். தங்களை மீட்டுத் தங்கள் ராஜ்யத்தில் சென்று ஒப்படைப்பார். அதுவரை, இளவரசி தாங்கள் மனந் தளராது, நம்பிக்கை குறையாது இருக்க வேண்டும். அதைத்தான் கற்பூர காந்தனும் விரும்பினார்'' என்று கூறினான்.




பேசும்போது அவன் ஓரிரு முறை நிமிர்ந்து விட்டுக் குனிந்து கொண்டான்.

''ஐயா!'' என்றாள் இளவரசி! ''இனம் தெரியாத யார் யாரோ எங்களுக்கு உதவி செய்ய முன் வந்துள்ளார்கள் என்றால், அது எங்கள் குறுங்குடி வாழும் நாராயணரின் அருளால்தான்! உயிர் துறக்க வேண்டும் என்று அடிக்கடி நான் நினைத்தேன். ஆனால் எனது பெண்மைக்கு ஏதும் பங்கம் வராத வரையில் அப்படிச் செய்யக் கூடாது என்று இருந்து வந்தேன். அதுவே நன்மையாகப் போய் விட்டது. கடவுள் உங்கள் உருவிலும், கற்பூரகாந்தன் உருவிலும் எனக்கு அருள் புரிகிறார். இதுவே எனக்கு மேலும் உயிரைத் தரிக்க உதவி புரிகிறது! ஐயா! எனக்கு அதிக அவகாசம் இல்லை... இங்கே எனக்குக் கண்காணிப்பு அதிகம். அதனால்தான் தாதி உடை உடுத்திக்கொண்டு இங்கேவந்தேன். நீங்கள் இங்கே ஒளிந்தவாறே இருங்கள்! ஏனெனில் என் மீது பெண் பாதுகாவலர்களுக்குச் சந்தேகம் வந்துவிட்டது. இந்த அறைக்குத் திடீரென வந்து அவர்கள் பார்ப்பார்

கள். எப்போதும் ஒளிந்து கொண்டே இருங்கள்'' என்று சொல்லி விட்டுப் போகப் புறப்பட்டாள்.

''இளவரசி!'' என்முன் அவன். அவள் நின்முள்.

''என் நண்பன் எங்கே? விசுவப்பிரியா அழைத்துப் போனுளே!'' என்முன்.

''விசுவப்பிரியாவைக் காவலாட்கள் பிடித்து விட்டார்கள். துரோகச் செயலுக்காக அவளைச் சிறையில் தள்ளி விட்டார்கள். உங்கள் நண்பர் பிடிபடவில்லை. அதற்குள் தப்பி விட்டார். இந்த நகரத்திற்குள் எங்கேயாவது ஒளிந்து இருக்க வேண்டும். இதை விட்டு அவர் சென்றிருக்க முடியாது. அவ்வளவு பலத்த பாதுகாப்புகள் கோட்டைக்கு உண்டு. நீங்கள் கவலை கொள்ளாது இருங்கள். ஆண்டவன் நமக்கு நிச்சயம் வழி காட்டுவார். நான் வருகிறேன். நாழிகை ஆகி விட்டது'' என்று கூறி உடனே வெளியே போனுள் இளவரசி.

அவள் வந்தது, போனது எல்லாம் ஒரு நாழிகை வரையிலும் அவனுக்குப் பிரமையாகவே இருந்தது.

நடந்ததெல்லாம் கனவா என்று பலமுறை தன்னைக் கேட்டுக் கொண்டான்.

அவளை நன்முகப் பார்க்காமல் இருந்து விட்டோமே என்று மனம் இடித்துக் காட்டியது.

மனத்தில் அவளது உருவைப் பல முறை பிடிக்க முயன்று, முடியாமல் தவித்தான் அவன்.

சீ! இவ்வளவு அருகில் இருந்தாளே அவள்! ஒரு முறை நன்முகப் பார்த்திருக்கக் கூடாதா?

''இல்லை, பார்க்கத்தான் முயன்றேன். ஆனுல், என் உணர்ச்சிகளே என் கண்களை மறைத்து விட்டன!'' என்று ஒரு மனம் சமாதானம் கூறியது.

உருவத்தைப் பார்க்காததற்கு ஒருவாறு சமாதானம் அடைந்த பின், அவளிடம் சரியாகப் பேசினுேமா என்று மனம் சஞ்சலப்பட ஆரம்பித்தது.

இன்னும் அவளிடம் இரண்டு வார்த்தைகள் அதிகமாகப் பேசியிருக்கலாம். அவளது நிலையைக் குறித்து ஏதாவது அனுதாபமாகப் பேசியிருக்கலாம், அவளைக் கவலைப் படாதிருக்கும்படி தைரியம் சொல்லி இருக்கலாம், வழிப் பயணத்தில் அவளுக்கு நேர்ந்த கஷ்டங்களைக் குறித்துத் தனது வருத்தத்தைத் தெரிவித்திருக்கலாம் - இன்னும் இப்படி எத்தனையோ நுண்ணிதான வழிகளில் அவன் மனம் பாய்ந்து சென்று, அவன் செய்யாத காரியங்களேயும், சொல்லாத வார்த்தைகளையும் நினைத்துச் சஞ்சலப்பட்டது.

கடைசியில் ஒரு வார்த்தை, அவள் கூறிய ஒரே வார்த்தை, அவன் மனத்தில் விடாப்பிடியாகத் தைத்து நின்று அவனுக்குப் புளகிதமான இன்பத்தை வாரி வழங்கியது.

''ஆண்டவன் நமக்கு நிச்சயம் வழி காட்டுவார்!'' என்முள். எவ்வளவுஆதரவான,அன்புகனிந்த வார்த்தை அது! இருவரையும் அதில் பிணைத்துக் கூறி விட்டாளே! அதை யதேச்சையாகச் சொல்லி இருப்பாளா? உணர்ந்தே சொல்லியிருப்பாளா?

இருவருக்கும் ஒரே அனுபவமாக,இப்போது ஒரே தன்மையான கஷ்டம் இருந்தது.

ஆனுல் அந்தக் கஷ்டமே அவனுக்கு இன்பமாகத் தோன்றியிருந்தது; ஏனெனில் அவளுடன் அவன் சேர்ந்து அனுபவிப்பதால்.

இரவெல்லாம் உறங்கவே இல்லை அவன்.

ஒவ்வொரு தினமாக ஓடியது. ஒரு வாரமும் சென்று விட்டது. வல்லபன் தத்தளித்து விட்டான். ஏனெனில் மதுராங்கனி மீண்டும் வரவேயில்லை. அடுத்த அறையிலிருந்து பேசவும் இல்லை.

வேளா வேளைக்கு உணவு வந்து கொண்டிருந்தது. அதைக் கொணர்ந்து கொடுத்த சேடியிடம் அவன்ஏதும் பேசக் கூடாது என்று உத்தரவாகி இருந்தது. நினைவு பொறுக்காமல் ஒரு நாள் அவளிடம் பேசிய போதுதான் அவள் ஊமை என்றும் தெரிந்தது.

சோதனையாக எட்டாவது நாளிலிருந்து அந்தச் சேடி வருவதும் நின்று விட்டது.

அத்துடன் உணவு வருவதும் நின்று விட்டது.

எதுவும் அருந்தாமல் அவன் நான்கு நாட்கள் பட்டினியாகக் கிடந்தான்.

ஐந்தாம் நாள் காலையில் எழுந்ததும் அவனுக்கு ஆத்திரம் பொங்கிக் கொண்டிருந்தது. இளவரசி மதுராவுக்கு ஏதோ நடந்திருக்க வேண்டும் என்று நினைத்தான்.

அதை நினைக்கும் போதே மனம் நடுங்கியது.

அவளுக்கு உதவாமல் இப்படிப் பேடி போல ஒரு அறையுள் பதுங்கி இருக்கிறேமே என்று நினைத்தான். ஆத்திரம் பொங்கி வந்தது.

எழுந்தான். மறைத்து வைத்திருந்த தன் உடைவாள் சரியாக இருக்கிறதா என்று பார்த்தான், அதை எடுத்து இடுப்பில் கட்டிக் கொண்டான். இனி என்ன ஆனுலும் பொருட்டில்லை. தன் வாள் ஒன்றையே நம்பித் தப்பித்து ஓட வேண்டும் என்று நினைத்தான். புறப்பட்டதுதான் தாமதம், காதுகளில் 'ஓ' என்று ஒரு இரைச்சல் கேட்டது.

''இதென்ன?'' என்று திடுக்கிட்டு நின்முன்.

காதுகளைக் கூர்மையாக்கி சப்தங்களைக் கேட்டான்.



''தீச்சோளி அம்பு' என்ற மலையாளப் படத்தில் வில்லனுக நடிக்கிருர் நம்பியார். அவரிடம் பேசிக் கொண்டிருந்தபோது-

''திடீரென்று சில கம்பெனிகள் என்னை நல்லவனுக நடிக்கச் சொல்லி என் பிழைப்பிலேயே மண்ணை அள்ளிப் போடப் பார்க்கிருர்கள். இது எப்படி இருக்கிறதென்ருல் பல சரக்குக் கடைக்காரனை 'உப்பு மட்டும்தான் விற்கலாம். புளி, பருப்பெல்லாம் விற்கக் கூடாது'ன்னு சொல்கிற மாதிரி இல்லே?

''அடுத்த மாதம் 'சுப்ரபாதம்' என்று ஒரு புதிய படம் ஆரம்பமாகிறது. அதில் நான் விஷ்ணு பக்தனுக நடிக்கிறேன். நேபாளத்திலிருந்து துவாரகா, மதுரா, பண்டரிபுரம், பத்ரிநாத், கேதார்நாத், பத்ராசலம், திருப்பதி, திருவனந்தபுரம், வர்க்காலா இப்படி பல விஷ்ணு ஸ்தலங்களுக்குப் போய் படப்பிடிப்பில் கலந்து கொள்ள இருக்கிறேன். புண்ணியம் தேடிக்கொண்டு வருகிறது பார்த்தீர்களா?''

-மன்னை சௌரிராஜன்.

ஓ... ஓ... ஓ... தூரத்தில் ஏதோ கடல் உடைந்தாற் போல் ஓசை கேட்டது.

இதென்ன ஓசை!

எங்கேயாவது சூறாவளி வருகிறதா? ஊழி மழை வருகிறதா? பூமி நகர்ந்து வருகிறதா?

வல்லபன் அதிசயத்துடன் நின்றான்.

சப்தம் வரும் திசையைப் பார்க்க நினைத்தான். மாடம் வரை வந்தான். ஆனால் அவன் இருந்த அறை உயரம் குறைவாக இருந்ததால் மாடத்திலிருந்து எதுவும் தெரியவில்லை. அரண் போன்ற கோட்டை அவன் பார்வையை மறைத்தது.

அறைக்குள் அங்குமிங்கும் சென்று எதுவும் தோன்றாமற் போகவே, யோசித்தவாறு நின்றான்.

நாழிகை ஏறியது.

சப்தங்கள் மிகுந்து கொண்டே வந்தன.

எத்தனையோ வித ஓசைகளால் அந்த முழு சப்தமும் எழுந்து கொண்டிருந்தது.

ஏதாவது படை வந்து கொண்டிருக்கிறதா?

அவன் மனம் பரபரத்தது.

அப்போது அரண்மனையிலிருந்தும் அதன் வெளிப்புறங்களிலிருந்தும் நகராக்களின் ஓசைகள் திடீரென்று எழ ஆரம்பித்தன.

யுத்த ஆயத்தத்திற்கான முழக்கங்கள்தான் இவை!

ஆகா! யுத்தம் வருகிறதா? யார் படையெடுத்து வருகிறார்கள்? விஜயநகரராஜ்யக்காரர்களா? நிச்சயமாக அவர்கள்தானா? வேறு யாராவது இருப்பார்களா? ஊஹூம், இருக்க மாட்டார்கள். சம்புவராயர்களை எதிர்ப்பவர்கள் விஜயநகரத்தாராகத்தான் இருக்க வேண்டும். ஆகா! இந்நேரத்தில் இந்த அறைக்குள் அகப்பட்டிருக்கிறோமே! வெளியிலே நான் இருக்கக் கூடாதா? வரும் படையாட்களில் ஒருத்தனாக நான் இருக்கக் கூடாதா?

நாழிகை ஆக ஆக எங்கிருந்தெல்லாமோ எத்தனையோ விதங்களில் சப்தங்கள் வர ஆரம்பித்தன.

நகரமும் அரண்மனையும் பரபரப்பது போலிருந்தது.

''இப்போது நான் என்ன செய்ய? இந்த இடத்தை விட்டு வெளியே போய் விடுவோமா?''

வல்லபனின் மூளை குழம்பியது.

''கடவுளே! என்னை இப்படி ஒரு இக்கட்டான நிலையில் வைத்துவிட்டாயே!'' என்று அவன் நினைத்தபோது, ''ஐயா!'' என்று குரல் கேட்டது.

மதுராவின் குரல்தான் அது.

விருட்டென்று மாடத்தின் பக்கம் திரும்பினான் அவன்.

''ஐயா!'' என்று மீண்டும் குரல் கொடுத்தாள் அவள்.

''இதோ இருக்கிறேன், இளவரசி!'' என்றான் அவன்.

''ஐயா, படைகள் வருகின்றன, படைகள்' என்றாள் அவள்.

''அப்படியா! எங்கே வருகின்றன?'' என்று இரைந்தான் அவன்.

''தூரத்தில் வருகின்றன! இங்கே நான் இருக்கும் மாடத்திலிருந்து நன்றாகத் தெரிகிறது. உங்களால் பார்க்க முடியாது!'' என்றாள் அவள்.

அவன் தவித்துப் போய் நின்றான்.

''இளவரசி நீங்கள் ஜாக்கிரதையாக அங்கே இருக்கிறீர்களா?'' என்று கூவினான் அவன்.

''இருக்கிறேன். அரண்மனையிலிருந்து வீரர்களும், பெண் காவலாளிகளும் கோட்டைக்கு ஓடியிருக்கிறார்கள். ஆகவேதான் நான் இங்கே வந்து நின்று பேசுகிறேன். சென்ற நான்கு நாட்களில் என்னை இவர்கள் கீழ் அரண்மனையில் முழுக்காவலில் வைத்திருந்தார்கள். அதனால்தான் தங்களுக்கு உணவு என்னால் அனுப்ப முடியவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் அனுப்பி வைக்கிறேன்'' என்றாள் அவள்.

''உணவு இருக்கட்டும் இளவரசி; வருகிற படைகள் யாருடைய படைகள்?'' என்றான் அவன்.

''அதுதான் தெரியவில்லை. சமுத்திரம் போல் பெரிய சேனைகள் வருகின்றன. கொடிகளின் சின்னங்கள் இன்னும் நன்றாகத் தெரியவில்லை. தெரிந்ததும் சொல்கிறேன்.'' என்றாள் அவள்.

பரபரத்த வல்லபன், ''அது விஜயநகர சேனையாகத்தான் இருக்க வேண்டும். அவர்கள்தாம் வருவார்கள். சீக்கிரம் கண்டுபிடித்துச் சொல்லுங்கள், இளவரசி!'' என்றான் அவன்.

கோட்டைக்கு அடுத்தாற் போல உள் அகழியும், அந்த அகழியை அடுத்து அரண்மனையும் இருந்தன.

அரண்மனை மேல் உப்பரிகைகளிலிருந்து பார்க்க, கோட்டையும், அதன் முகப்புகளும், வெளிப்புறங்களும் நன்றாகத் தெரிந்தன.

ஆனால் வல்லபன் இருந்த கொடிக்கம்ப அறை தாழ்ச்சியில் இருந்ததால் எதுவும் தெரியவில்லை.

இளவரசியிடமிருந்து சிறிதுநேரம் வரை எந்த மறுமொழியும் வரவில்லை.

''இளவரசி!'' என்று இரைந்தான் அவன்.

மறுமொழி இல்லை.

''இளவரசி!''

தடால் என்று தாம்பாளம் விழும் ஓசை கேட்டது.

திடுக்கிட்டான் அவன். —தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

தாம்பாளம் விழும் சப்தம் கேட்டதும் வல்லபன் எச்சரிக்கை ஆனான். மதுரா ஏதோ சமிக்ஞை செய்கிறாள் என்று நினைத்தான்.

அவசரமாக உள்ளே போய், கொடிக்கம்பில் ஏறிப் பட்டிகையில் அமர்ந்து கொண்டான்.

அவன் எதிர்பார்த்தபடியே சிறிது நேரத்தில் பெண் காவலாளிகள் உள்ளே வந்து, யாராவது இருக்கிறார்களா என்று தேடி விட்டு, யாரையும் காணாமல் அறை வாசலிலேயே சிறிது நின்றார்கள்.

"அந்தப் பெண்ணுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது. தனக்குத் தானே பேசுகிறாள் என்று சொன்னேன். நீ கேட்கவில்லை. இப்போது உனக்கே தெரிகிறதா?" என்று ஒரு பெண் காவலாளி கேட்க,

மற்றவளும், "ஆமாம்! அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டது" என்று சொன்னாள்.

அவர்கள் போன பிறகு வல்லபனுக்கும் பரபரப்பு ஏற்பட்டது. வெளியே அந்த சமுத்திர ஓசை தெளிவாகக் கேட்கலாயிற்று.

எப்படிப்பட்ட நேரத்தில் இங்கே அகப்பட்டுக் கொண்டோம்? பேடி போல் இருக்கிறோமே! வெளியே குதித்து ஓடிப் போய் சண்டையில் இறங்க வேண்டாமா?

அது முடியுமா?

அவன் ஒருவனால் என்ன செய்ய முடியும்?

தத்தன் எங்கே போய் அகப்பட்டானோ தெரியவில்லையே! தப்பித்தாலும் கோட்டையை விட்டுப்போயிருக்க மாட்டான். அது முடியாத காரியம். ஒருவேளை உள்ளே எங்கேயாவது அகப்பட்டு, ராஜ சேவகர்கள் அவனைச் சிரச்சேதம் செய்து விட்டார்களோ?

நினைக்கவே பகீர் என்றது. உடம்பு பதறியது.

தத்தன் கூறியதைக் கேட்காமல் போய் விட்டோம். கற்பூர கந்தனுக்கு உதவப் போயிரா விட்டால் நேராக சத்தியமங்கலம் போயிருக்கலாம்! அங்கே தாயாரைப் பார்த்திருக்கலாம்! எல்லா விஷயங்களையும் விவரமாகக் கூறி இருக்கலாம். பாவம்! ஆறு மாதம் ஆயிற்று, அவளைப் பிரிந்து! தவியாய்த் தவித்துக் கொண்டிருப்பாள். மெலிந்து போனாலும்போயிருப்பாள்! என்னைப் பற்றியே நினைத்துக் கண்ணீர்விட்டுக் கொண்டிருப்பாள்! அப்படிப்பட்டவளிடம் போய், 'அம்மா, இதோ வந்து விட்டேன்!' என்று சொல்லி அவளை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தியிருக்கலாம். அதை யெல்லாம் செய்யாமல் யாருக்கோ உதவப் போய், எங்கேயோ போய் மாட்டிக் கொண்டேனே! தத்தா! நீ சொன்னதுதான் சரியா? வழியில் பிறழாதே, என்றாயே! நான் உன் சொல்லையும் என் தாய் சொல்லையும் தட்டி விட்டேனா?

இப்படிக் குழம்பும் போது, வேறு விதத்தில் அவன் சமாதானப்பட்டுக் கொண்டான்.

சொல்லப் போனால் திருவரங்கனுக்காகத்தான் அவன் இந்தக் காரியங்களில் இறங்கியிருக்கிறான். ஆமாம்! நிச்சயமாகத்தான். அரங்கன் திருவரங்க நகரை அடைய வேண்டுமானால் ராஜரீகமாகப் பல காரியங்கள் நடக்க வேண்டும். சம்புவராயர், மதுரை சுல்தான் ஆகியோருடன் போருக்குப் போக வேண்டும். இதெல்லாம் நல்லபடியாக நடந்தால்தான் அரங்கன் திருவரங்கத்தை அடைய முடியும்! இவை சரியாக நடப்பதற்கு எத்தனையோ வித முன்னேற்பாடுகள் செய்ய வேண்டி உள்ளது. அந்த முன்னேற்பாடுகளில் ஒன்றுதான் இந்தப் பாண்டிய குலப் பெண்ணைக் காப்பாற்றுவது! இந்தக் காரியத்தை நம்மிடம் பொறுப்பாகக் கொடுத்திருக்கிறார் விஜயநகர ஒற்றர் தலைவர். ஆக, இதுவும் அரங்கனுக்காகச் செய்யப்படும் ஒரு காரியந்தான்! நிச்சயம் அதுதான்!

அவன் யோசித்துக் கொண்டிருக்கும்போது, திடீரென்று குரல் மெல்லிதாக, "ஐயா! ஐயா!" என்றது. அது மதுராவின் குரல்தான்!

வல்லபன் விருட்டென்று கொடிக் கம்பத்தின் வழியே இறங்கினான். மாடத்திற்குச் சென்று, "இளவரசி!" என்று மெல்லிதாக இரைந்தான்.

"ஐயா, நான் இங்கேதான் இருக்கிறேன்" என்று மதுராவின் குரல் கேட்டது.

"உங்களுக்கு என்ன நடந்தது? உங்கள் குரல் ஏன் மெல்லிதாகி விட்டது?" என்று கேட்டான் அவன்.

"என் கால்களில் சங்கிலி போட்டுக் கட்டியிருக்கிறார்கள். சங்கிலியின் நீளத்தில் நான் இந்த அறை முழுதும் நடமாடலாம். அதைத் தாண்டிப் போக முடியாது!" என்றாள் அவள்.

"இளவரசி! கேட்க வருத்தமாக இருக்கிறது. நான் இங்கே ஒரு ஆண்பிள்ளை இருந்தும் பிரயோசனம் இல்லாமல் இருக்கிறேன்! சொல்லுங்கள்! நான் மேலே வந்து எந்தவித உதவி வேண்டுமானாலும் செய்கிறேன். எனக்கு வெறுமனே இருப்பது அவமானமாக இருக்கிறது" என்றான்.

"ஐயா, அவசரப்பட்டு ஏதாவது செய்து விடாதீர்கள். அரண்மனை எல்லாமே அல்லோலகல்லோலமாயிருக்கிறது. சம்புவராய அரசரும் குடும்பமும் காஞ்சிபுரத்திலிருந்து இங்கே வந்திருக்கிறார்கள். எல்லோரும் வெகு ஆத்திரமாக இருக்கிறார்கள். நீங்கள் தனியாக அகப்பட்டீர்களானால் உங்களை உடனே கொன்று விடுவார்கள். அதனால் எதுவும் செய்ய வேண்டாம். நடப்பது நடக்கும். திருக்குறுங்குடி வாழும் எம்பெருமாள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறேன்" என்றாள் அவள்.

அவளது பட்டான குரலே அவனைத் தாலாட்டுவது போலிருந்தது.

அவள் சொற்களின் பொருளைவிட அவைகளின் ஓசை நயமே அவன் மனத்திற்குள் சென்று இனிமையாக நிரம்பிக் கொண்டிருந்தது.

எங்கேயோ ஒரு ஆபத்தில் அகப்பட்டிருக்கும்வேளையில், ஒரு துளி இன்பத்தை யாரோ நல்குவது போலிருந்தது.

இவ்வாறு எண்ணிக் கொண்டிருக்கும் போது திடீரென்று வானில் நாரைக் கும்பல்கள் கூட்டமாகப் பறந்து சென்றன.

அதைத் தொடர்ந்து நகராக்கள், எக்காளங்கள், துந்துபிகள், சேமக்கலங்கள் எல்லாம் ஒருசேர ஒலித்துப் பெரும் ஓசைக் கடலை ஏற்படுத்தி விட்டன.

அது அடங்கியதும், வல்லபன். ''இளவரசி வெளிப்புறம் தெரிகிறதா? அங்கே என்ன நடக்கிறது?'' என்று கேட்டான்.

''ஐயா! ஐயா!'' என்று பல முறை கூறிய அவள் சில கணங்கள் மௌனமாகி, கடைசியில், ''ஐயா! இப்போது நல்ல இடமாகத் தேர்ந்து அமர்ந்து விட்டேன். வெளி உலகமெல்லாம் நன்கு தெரிகிறது! அடேயப்பா! கோட்டையைப் பெரிய சேனா சமுத்திரம் சூழ்ந்து கிடக்கிறதே! ஐயா! ஐயா!.... நீங்கள் கேட்டீர்களே! அவர்கள் கொடிகளின் சின்னங்கள் தெரிகின்றன. வராகம் (பன்றி உருவம்) தான் அதில் பொறிக்கப்பட்டிருக்கிறது. அவர்கள்விஜயநகரக்காரர்கள்தானே?'' என்று கேட்டாள் அவள்.

''ஆமாம், இளவரசி! யார் யார் வந்திருக்கிறார்கள்?'' என்று கேட்டான் அவன்.

''ஐயா! ஐயா!'' அவள் குரல் மகிழ்ச்சியில் தத்தளித்தது. ''ஐயா! ஐயா! யார் யார் என்று எனக்குத் தெரியாதே! கம்பீரமான சேனாபதிகள் குதிரை மீது ஆரோகணித்திருக்கிறார்கள்! அவர்கள் ஒவ்வொருத்தர் அருகிலும் ஒரு வராகக் கொடி பறக்கிறது. எல்லோரும் கவசம் அணிந்திருக்கிறார்கள். குதிரைகளுக்கும் கவசம் பூட்டியிருக்கிறார்கள். அவைகளைப் பார்த்தாலே ஏதோ விசித்திரப் பிராணிகள் போல் தோன்றுகின்றன'' என்றாள் அவள்.

''இளவரசி! இளவரசி!'' என்று இடைமறித்தான் அவன். ''நான் துரதிர்ஷ்டசாலியாக இருக்கிறேனே. நானும் அவர்களுடன் சேர்ந்து கொண்டு இந்தச் சம்புவராயக் கோட்டையை உடைக்க முடியாமல் இருக்கிறேனே! இளவரசி! என் உடலும் உள்ளமும் துடிக்கிறதே'' என்று கூறினான்.



அதற்கு அவள், ''ஐயா! பதட்டம் அடையாதீர்கள்! சரியான வேளை வரும் வரை பொறுத்திருங்கள்! உங்களை ஆண்டவனே இங்கே அனுப்பினார் என்று நினைக்கிறேன். இல்லாவிடில் நானே கலவரப்பட்டிருப்பேன். எனக்கு நீங்கள் துணையாக இருப்பது ஒருவழிக்கு நல்லதாக இருக்கிறது'' என்று சொன்னவள், ''ஐயா!..... ஐயா!'' என்று பரபரப்புடன் கூறி மௌனமானாள்.

வல்லபன் ஒரு கணம் துடித்துப் போனான். அவளுக்கு என்ன நேர்ந்தது? அல்லது எதைப் பார்த்து அவள் பரபரப்பு அடைந்தாள்?

கணங்கள் யுகங்களாக நகர்ந்தன.

பிறகு, ''ஐயா!'' என்று அவள் குரல் மெதுவாகக் கேட்டது.

''என்ன இளவரசி?''

''இங்கே ஒரு பிடிச்சுவரிலிருந்து விழ ஏதுவானேன். தப்பித்து விட்டேன்'' என்றாள் அவள்.

''ஜாக்கிரதை இளவரசி! பத்திரமாக இருங்கள்.''

''இப்போது நல்ல பிடிப்போடு இருக்கிறேன். முன்னைவிட யுத்த களத்தை நேர்த்தியாகப் பார்க்கிறேன். தூரத்தில் பட்டத்து யானை பொன் கவசம் தரித்துச் சிங்காரமாக நடந்து வருகிறது. வராகக்கொடி அதன் அம்பாரியில் பறக்கிறது. சுற்றிவரக் குதிரை ஆட்கள் ஈட்டிகளோடு வருகிறார்கள். ஐயா! அவர் தானே அரசர்?'' என்று கேட்டாள் அவள்.

''ஆமாம் இளவரசி! அவர் அரசராகத்தான் இருப்பார். அவர்தான் யானை மீது ஆரோகணித்து வருவார்; இளவரசி! நான் அதிர்ஷ்டமில்லாதவன்! யுத்தகளத்தைக் கூட நான் பார்க்க முடியாமல் அரணும் கொத்தளங்களும் என்னை மறைக்கின்றனவே!'' என்றான் அவன்.



''ஐயா கவலை கொள்ளாதீர்கள்! உங்களுக்கு நானே பார்த்துச் சொல்லி வருகிறேனே!'' என்றாள்.

அவள் அப்படிச் சொன்னது அவனது இதய ஆழத்திலிருந்து பலவித உணர்வுகளை எழுப்பிவிட்டது. ''உங்களுக்கு நானே பார்த்துச் சொல்லி வருகிறேனே!'' என்ற பேச்சில் அவனையும் அவளையும் பிணைக்கும் ஒரு அன்னியோன்யம் அவனுக்குத் தெரிந்தது. இதை அவள் உணர்ந்து சொன்னாளா? உணராமல் சொன்னாளா?

ராஜகம்பீர மலை என்ற கோட்டை வட ஆற்காடு மாவட்டத்தில் தற்போதுள்ள ஜவாது மலையின் ஒரு பகுதியில் இருந்தது. இந்தக் கோட்டையையும் அதன் அடிவாரச் சமவெளியில் இருந்த நகரத்தையும் படைவீடு என்று அந்த நாளில் அழைப்பார்கள்.

தற்போதுள்ள படைவீடு (படவேடு என்றும் இப்போது கூறுகிறார்கள்) பழைய படைவீடு இருந்த இடத்திலிருந்து சற்று அப்பால் இருக்கிறது. பழைய படைவீடு நகரம் பாழடைந்து போய், அது இருந்த இடத்தில் இப்போது காடு மண்டிக் கிடக்கிறது

விஜயநகரப் படைகள் முதலில் படை வீட்டு நகரத்தைத் தாக்கின

நகரக் கோட்டையின் அதிபதி சீக்கிரமே சரண் அடைந்தார்

நகரத்தின் உள்ளே சென்று பார்க்கும்போது சம்புவராயர் குடும்பம் ராஜகம்பீரன் மலைக் கோட்டைக்குள் போய் விட்டது தெரிய வந்தது.

அடுத்தாற்போல் படைகள் அந்தக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டன

மலைமீது கோட்டை இருந்ததால் அது நல்ல பாதுகாப்பான இடமாக இருந்தது. எந்தப் போர் நேர்ந்தாலும் சம்புவராயர்கள் இந்தக் கோட்டைக்குள் புகுந்து கவலைப்படாமல் இருந்து விடுவார்கள். கோட்டை எளிதில் சரண் அடையாது

கோட்டைக்குள் எப்படி ஏறுவது என்பதைச் சர்வ சைனியாதிபதி கோபணவும், கண்டாரகுளி மாரய்ய நாயகரும் யோசித்தார்கள். சில குறிப்பிட்ட பரிகங்களைத் தேர்ந்தெடுத்து அந்தப் பகுதிகளில் தாக்குதல் நடத்த ஆரம்பித்தார்கள். அதே நேரத்தில் வேறு சில பகுதிகளில் மணல் பொதிகளை எவருக்கும் தெரியாமல் அடுக்கி வைத்து அவை வழியாகப் வீரர்கள் கோட்டை மீது ஏற முயற்சி செய்தார்கள்.

இரு தரத்தாருக்கும் யுத்தம் நாள் முழுதும் கடுமையாக நடந்தது.

மறுநாள் காலையில் மீண்டும் யுத்தம் ஆரம்பித்தது. பகலில் நான்கு முகூர்த்தங்கள் ஓடின வாறே, விஜயநகரப் படைகள் பல பகுதிகளில் கோட்டை மீது ஏறிவிட்டன.

இதைக் கண்ட சம்புவராயரின் படைகள் கதி கலங்கி விட்டன.

படைவீரர்கள் தங்கள் தங்கள் தற்காப்புகளுக்காக உள்ளே ஓட ஆரம்பித்தார்கள். கோட்டையின் கதவுகள் சீக்கிரமே பிளக்கப்பட்டன.

வல்லபன் தன் மாடத்திலிருந்து கொண்டே, ''இளவரசி! என்ன நடந்தது?'' என்று தவிப்புடன் கேட்டான்.

''கோட்டைக் கதவு உடைந்து விட்டது!''

''வாழ்க! வாழ்க! விஜயநகரத்தார் வாழ்க!'' என்று சொல்லித் துள்ளினான் வல்லபன். பிறகு ஆத்திரத்துடன், ''படைகள் உள்ளே நுழைந்து விட்டனவா?' என்று கேட்டான்.

''இல்லை, முயல்கிறார்கள். வாசலில் சில வீரர்கள் கூடி எதிர்த்துக் கொண்டிருக்கிறார்கள். அவர்கள் சீக்கிரமே விழுந்து விடுவார்கள்.'' என்றாள் மதுரா.

வலலபன் சிறிது நேரம் மௌனமாக இருந்தான்.

பிறகு, இப்போது என்ன நடக்கிறது, இளவரசி?' என்றான் வேட்கையுடன்.

''ஐயா! எதிர்ப்புக்காரர்கள் விழுந்து விட்டார்கள். எஞ்சியவர்கள் பின் வாங்கி ஓடுகிறார்கள். விஜய நகரப் படைவீரர்கள் உள்ளே நுழைந்து கொண்டிருக்கிறார்கள்'' என்றாள்.

வல்லபன் மீண்டும் குதித்தான்.

கோட்டை விழுந்து கொண்டிருந்தது. அரசர் ராஜநாராயண சம்புவராயர் மிகுந்த கோபத்தில் இருந்தார். திரும்பி ஓடும் தம் வீரர்களைக் கண்டு,''வீரர்களே! வாருங்கள், கோட்டையைக் காப்போம்.'' என்று கூவி, தம்முடன் சேர்ந்த வீரர் குழுவுடன் கோட்டை வாயிலில் வந்து நின்றார்.

அதே நேரத்தில் கம்பணரும், அவரது படையாட்களும் உள்ளே நுழையவே இரு தரத்தாருக்கும் வாயிலில் பெரும் பூசல் ஏற்பட்டது.

கம்பணரை இனம் கண்டு கொண்ட சம்புவராயர், உடனே அவர் மீது பாய்ந்தார்.

“ஐயா! ஐயா! விஜயநகரப் படையுடன் வந்த அரசர் இருக்கிறாரே! அவர்மீது சம்புவராயர் தனியாகப் போர் தொடுக்கிறார்.'' என்று இரைந்தாள் மதுரா.

''இளவரசி! நம் கட்சி வெற்றி பெறுவதற்காகப் பிரார்த்தனை செய்யுங்கள்!'' என்றான் வல்லபன்.

“ஐயா! இந்த விஜயநகர அரசரைப் பார்த்தால் எங்கேயோ பார்த்தது போல இருக்கிறதே! ஆஜானுபாகுவாய், வெகு கம்பீரமாகக் காணப்படுகிறாரே! அப்பா! என்ன விதமாக வாளைச் சுழற்றிப் போர் புரிகிறார்! உடம்பு ஒரு இடத்தில் தரித்து நிற்கவில்லையே! அங்குமிங்கும் மின்னல் போலப் பாய்கிறாரே! ஐயா! இப்போது அவர் சாயல் எனக்குத் தெரிகிறது. நமது கற்பூர வியாபாரி போல்தான் அவர் இருக்கிறார்!'' என்று பரபரத்துக் கூறினாள் மதுரா.

''இளவரசி! என்ன சொல்லுகிறீர்கள்?'' என்று துள்ளிக்கொண்டு கேட்டான் வல்லபன்.

''ஆமாம். ஐயா! கற்பூர வியாபாரி போலத்தான் அரசர் இருக்கிறார். இப்போது அவர் உக்கிரமாகப் போர் புரிகிறார். சம்புவராயரின் கிரீடம் இதோ விழுந்து விட்டது. இன்னும் வாளை விடாது சுழற்றிக் காற்றாடியாகப் புரள்கிறார் விஜயநகர அரசர். இதோ.. இதோ.. ஐயா! ஐயா... சம்புவராயர் கீழே விழ்ந்து விட்டார்'' என்று இரைந்தாள் மதுரா.

அதைத் தொடர்ந்து ஆரவாரங்களும் வாழ்த்தொலிகளும் எங்கும் எழுவது கேட்டது.

''கம்பணர் வாழ்க! கம்பணர் வாழ்க!'' என்ற ஒலிகளுடன் படைகள் கோட்டைக்குள் புகுந்து வரும் ஓசை கேட்டது

வல்லபன் பரபரத்தான். இனி என்ன செய்வது? விஜயநகரப் படைகள் அரண்மனைக்குள் வந்து அவர்கள் யாவரையும் விடுதலை செய்யும் வரை பொறுத்திருப்பதா?

அதற்குள் பாண்டிய இளவரசிக்கு யாராவது தீங்கு செய்ய முனைந்தால்?

தோற்றுப் போன ஆத்திரத்தில் யாரும் என்ன வேண்டுமானாலும் செய்வார்களே!

''இளவரசி! இளவரசி!'' என்று அவன் கூப்பிட்டான்.

மறுமொழி இல்லை

மேலும் இருமுறை கூப்பிட்டும், உத்தரம் வராமல் போகவே, அவனுக்குச் சந்தேகங்கள் தோன்றின.

உடன் உடைவாளை அணிந்து கொண்டான். தன் கவச அணிகளையும் தரித்துக் கொண்டான். கொடிக் கம்ப அறையை விட்டு வெளியே வந்தான்.

வெளிப்பக்கம் நீண்ட தாழ்வாரமாக இருந்தது. இதில் எங்கே போனால் இளவரசி இருக்கும் அறையை அடையலாம்?

முன்னால் போனான். எல்லா இடங்களும் வெறிச்சென்றிருந்தன. யாருமே இல்லை.

இரண்டு அறைகளைத் தாண்டியதும் மாடிப்படிகளைக் கண்டான். அவைமீது ஏறிச் சென்று மேல் மாடத்தை அடைந்தான். அங்கு வலப்பக்க அறைகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, திடீரென்று ஒரு பெண்ணின் தீனக்குரல் ,கேட்டது. குரல் வந்த திசை நோக்கி இடது சாரியில் ஓடி, அகலமான மாடம் ஒன்றை அடைந்த போது அங்கே கண்ட காட்சி அவனைத் திடுக்கிட வைத்தது.

மதுராவைக் கையில் விலங்குடன் ஒரு வீரன் இழுத்துச் சென்று கொண்டிருந்தான். அப்போது நடந்த சண்டையில் அவன் பங்கெடுத்து விட்டு அரண்மனைக்கு ஓடி வந்திருக்க வேண்டும். ஏனெனில் அவன் உடல்மீது ஆங்காங்கே சிறு சிறு காயங்களும், அதனால் ஏற்பட்ட இரத்தக் கறைகளும் தென்பட்டன. அவன் ராஜகுடும்பத்தைச் சேர்ந்தவனாக இருக்க வேண்டும் என்பது அவன் முகத்தைப் பார்த்தாலே தெரிந்தது.

அவன் அந்தப் பாண்டிய இளவரசியை இழுத்துப் போக, அவள் திமிறியவாறு மெல்ல விசித்துக் கொண்டிருந்தாள்.

அந்தக் காட்சி அவனை உலுக்கி விடவே, உடனே அவர்கள் முன் குதித்து, ''ஐயா! எச்சரிக்கை! இளவரசியை விட்டு விடுங்கள்!'' என்று கூறினான்.

அந்த வீரன் திடுக்கிட்டு வல்லபனைப் பார்த்தான். அவன் முகத்தில் ஒரே ஆத்திரம் கொழித்தது.

''நீ யார்? இங்கே எப்படி வந்தாய்?'' என்று மிரட்டிக் கேட்டான்.

சிரித்தான் வல்லபன்.

''உன் கேள்விக்கு என் வாய் உத்தரம் சொல்லாது. என் வாள்தான் சொல்லும்!'' என்று வாளை உருவினான்.

அந்த வீரனும், வாளை உருவ, அந்த இருவருக்கும் அங்கே ஒரு சண்டை நடந்தது.

வீரன் அப்போதுதான் சண்டை போட்டு வந்ததால் களைத்திருந்தான்.

வல்லபன் ஐந்து தினங்களாக உண்ணாமல் இருந்ததால் களைத்திருந்தான். ஆகவே இருவருக்கும் ஒரு சமமான களைப்பு உடலில் இருக்க, இருவரும் ஆத்திரத்துடன் சண்டை இட்டார்கள்.

சமபலத்துடன் அரை முகூர்த்தம் சண்டை இட்ட பின், வல்லபனின் ஒரு வீச்சில் அந்த வீரன் நெஞ்சில் அடிபட்டுக் கீழே சாய்ந்தான். விழுந்தவன், ''குலசேகரா'' என்று முணுமுணுத்தபோது வல்லபன் திடுக்கிட்டான்.

—தொடரும்.



''ஏன் சார்! அங்கே பாடுவது மணி அய்யர்தானே?''

''பூச...சே! காருகுறிச்சி அருணாசலம். பூ! இது கூடவா உனக்குத் தெரியல்லே?''

''சுதர்ஸன்''

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

விழுந்த வீரனை, வல்லபன் அதிசயத்தோடு பார்க்க, அவன், ''அம்மா! அம்மா!'' என்று புலம்பினான்.

உடன் அந்த வீரனை மடியில் எடுத்து வைத்து, அவனது இரத்தத்தைத் துடைத்து, ''வீரரே, வீரரே!'' என்றான்.

''என் அம்மாவிடம் சொல்லுங்கள்! அவளைத் தான் கடைசிவரை நினைத்தேன் என்று'' என்று வீரன் முனகினான்.

''தங்கள் தாயார் யார்? நான் அவசியம் செய்கிறேன்'' என்றான் வல்லபன்.

''பரகூரில் இருக்கிறார்!'' என்று புலம்பினான்வீரன்.

''பெயர் என்ன?''

''ராணி கிருஷ்ணாயி!''

தீயை மிதித்தவன் போல் வல்லபன் தலை நிமிர்ந்தான்.

''ஐயா! என்ன சொல்கிறீர்கள்? ராணி கிருஷ்ணாயியா?'' என்று கேட்டான்.

''ஆமாம்.''

''இப்போது இன்னொரு பெயரும் சொன்னீர்களே, குலசேகரன் என்று? அது யார்?''

''என் பெயர்தான் குலசேகரன்! என் தாயார் என்னை அழைக்கும் விதமே எனக்குப் பிடிக்கும். ஒரே கனிவாக இருக்கும். இந்தக் கடைசி நேரத்தில் அவளே என்னைக் கூப்பிடுவது போலக் கற்பனை செய்தேன். அதை என் காதாரக் கேட்பதில் எனக்கு ஒரு திருப்தி!'' என்றான் வீரன் திக்கியவாறு.

''ஐயா! தங்கள் தந்தை யார்?'' என்றான் வல்லபன்.

''என் வளர்ப்புத் தந்தை வல்லாள ராஜர்! பெற்ற தந்தை குலசேகரர்!''

அந்த வார்த்தைகளைச் சொன்னதுதான் தாமதம். வல்லபனின் கண்களில் நீர் குபுக்கென்று வந்தது. ஆவேசம் கொண்டவன் போல அந்த வீரனை அணைத்தான். ''சகோதரா! என் தமையனையா நான் கொன்றேன்? என் தமையனையா நான் கொன்றேன்! என்ன அநியாயம் இது! இந்த அக்கிரமம் எந்த உலகத்திலும்உண்டா? நான் ஒரு பாபி! நான் ஒரு பாபி!'' என்று கூவிக் கோவென அழ ஆரம்பித்தான்.

''திருவரங்கன் உலா' வாசித்தவர்களுக்கு ராணி கிருஷ்ணாயி யார் என்று தெரிந்திருக்கும். துளுவ நாட்டின் ராணி அவள்! ஒய்சள அரசரான வல்லாள தேவர் அவளைத் தமது வயோதிகத் தசையில் திருமணம் செய்து கொண்டார். தமது ராஜ்யம் மேலைக்கடல் வரை விஸ்தரிக்கும் என்ற எண்ணத்திலேயே இந்தத் திருமணம் செய்து கொண்டார்.

இந்தத் தம்பதிகளுக்குக் குழந்தை ஏதும் பிறக்கவில்லை. ராணி கிருஷ்ணாயியிக்கு ஒரு குழந்தை பெற்றெடுத்து அதற்குத் தாயாக ஆக வேண்டும் என்று ஆசை இருந்தது. ஆனால், அது வல்லாளர் மூலமாக நிறைவேற வழியில்லை. ஆகவே அவள் வேறு ஒரு வழியை அணுகினாள்.

துளுவ நாட்டு மலை இனத்துப் பெண்களிடையே அந்நாளில் ஒரு பழக்கம் இருந்தது. அதை 'அலிய சந்தான' முறை என்று சொல்வார்கள். அந்த முறைப்படி ஒரு பெண் பல தாற்காலிகக் கணவர்களை ஏற்றுக்கொள்ளலாம். அதற்கான உரிமை அவளிடம் இருந்தது. அந்நாளில் அந்த மலை இனத்தவரிடையே அந்த முறை கேவலமாகக் கருதப்படவில்லை. எத்தனையோ வித வழக்கங்களில் அதுவும் ஒன்றாக இருந்தது.

இந்த 'அலிய சந்தான' முறைப்படி ராணி கிருஷ்ணாயி குலசேகரன் என்ற இளைஞரைத் தனது மறு கணவராக வரித்தாள். (குலசேகரன் 'திருவரங்கன் உலா'வில் வரும் கதாநாயகன்). அவன் மூலம் ஒரு ஆண் மகவைப் பெற்றுக்கொண்டாள். அதற்குத் தனது ஆசைநாயகன் குலசேகரனது பெயரையே சூட்டினாள். அந்த மகன் தான் இங்கே வல்லபன் முன்னால் விழுந்து கிடந்தவீரன்.

தானும் அந்த வீரனும் ஒரு தந்தைக்குப் பிறந்த புதல்வர்கள் என்று தெரிந்ததும் அந்த வீர குலசேகரனை அணைத்துக் கண்ணீர் வெகுவாக உகுத்தான் வல்லபன்.

அவன் செய்கையைப் புரியாமல் அந்தக் குலசேகரன் ஆச்சரியம் காட்ட, வல்லபனும் அவனுக்குத் தான் இன்னார் என்று விளக்கினான்.

அவ்வளவில் வீரனும் அவனை அணைத்துக்கொள்ள முயற்சிசெய்து முடியாமல் உணர்ச்சிகளில் தளும்பினான்.

பிறகு வல்லபன் அவனை ஒரு கல் மேடையில் கிடத்தி, ''ஐயா! எனக்கு ஒரு சகோதரன் இல்லையே என்று நினைத்தேன். நீங்கள் கிடைத்தீர்கள். உங்களை அடைந்தேன் என்று நினைப்பதற்கு முன் இழக்கிறேனே! தாங்கள் சம்புவராயர் பக்கம் இருப்பது எனக்குத் தெரியாமல் போயிற்றே! தங்களை முன்னரே அடையாளம் கண்டுபிடிக்காது போனேனே!'' என்று புலம்பினான்.

அந்த வீரன் அவனைத்தேற்றும் முறையில் திக்கிப் பேசியவாறு, ''சகோதரா! எங்கள் குடும்பம் நாட்டை இழந்தபிறகு தான் சம்புவராயர் படையில் ஒரு தளபதியாகச் சேர்ந்தேன். சம்புவராயர்கள் மூலம் மதுரை சுல்தானை ஒழித்து எங்கள் ராஜ்யத்தை மீண்டும் பெறலாம் என்ற ஒரே நோக்கந்தான் இதற்குக் காரணம்.'' என்று கூறினான். அதற்குமேல் அவனால் பேச முடியவில்லை.

வல்லபன் அவனைக் கனிவுடன் பார்த்து, ''சகோதரா! தாங்கள் சம்புவராயர் மீது நம்பிக்கை வைத்தது சரியல்ல. அவர்கள் அந்த சுல்தானுக்கு அடிபணிந்தே இருந்தவர்கள். எதிர்காலத்தில் இந்தக் கொள்கையை விடுவார்களா என்று சொல்ல முடியாது. தாங்கள் நினைத்ததை இப்போது விஜயநகரத்தார் செய்து வருகிறார்கள்'' என்றான் வல்லபன்.

அவன் கூறியதை அந்த வீரகுலசேகரன் ஒத்துக் கொள்வது போலிருந்தது. கைகளை மட்டும் எடுத்து ஆட்டினான். அது அவனை ஆசீர்வதிப்பது போலவும் இருந்தது.

பிறகு கண்களை நிரந்தரமாக மூடினான்.

வல்லபன் த்வய மந்திரத்தைக் கூறி அவனை இறுகத் தழுவினான். கண்ணீர் பொலுபொலு என்று வழிந்தது.

இவ்வளவு நேரமும் இந்தச் சம்பவம் முழுவதையும் பார்த்துக் கொண்டிருந்த மதுரா அருகில் வந்தாள்.

''ஐயா! என்ன அநியாயம்! இருவரும் சகோதரர்கள் என்று தெரியாது ஒருவருக்கொருவர் சண்டை போட்டிருக்கிறீர்களே!'' என்று கூறித் துக்கித்து நின்றாள்.

வல்லபன் அவளை நிமிர்ந்துகூடப் பார்க்கவில்லை. அவன் தலை குனிந்து தேம்பிக் கொண்டிருந்தான்.

பின்னர் தனக்குத் தானே புலம்புவது போல்' ''எனக்கு எல்லாவற்றிலும் விரக்தி ஏற்படுகிறது. குடும்பங்களைப் பாதுகாக்கவே ராஜாக்களை வைத்திருக்கிறோம். ஆனால் அந்த ராஜாக்களுக்காகக் குடும்பங்களைப் பாழ்படுத்துகிறோமே!'' என்றான்.

வீதியில் அப்போது கூச்சல் பெருகியது. அரண்மனைக்குள் சத்தங்கள் பெருகிவிட்டன.

சற்றைக்கெல்லாம் விஜயநகர வீரர்கள் அரண்மனையில் ஒவ்வொரு பகுதியாகத் தேடிவிட்டு மாடத்திற்கு வந்துவிட்டார்கள். அவர்கள் முன்னணியில் தத்தன் நின்று கொண்டிருந்தான்.

மேலே பெரிய மாடத்தில் வல்லபன் இருக்கும் காட்சியைப் பார்த்ததும் எல்லோரும் திடுக்கிட்டு நின்றார்கள்.



'இந்த வீணை மேலே சத்தியமாக உன்னைக் கைவிட மாட்டேன்' என்று ஜெய், ஜெயசித்ராவிடம் சொல்வதற்குச் சான்று: வீணை ஒன்று, கைகள் இரண்டு.
படம்: வண்டிக்காரன் மகன். எஸ்ஸார்

தத்தன் ஓடிப்போய்த் தன் நண்பனை அணைத்துக் கொண்டு கரைகாணா இன்பம் அடைந்தான். அதே நேரத்தில் வல்லபன் தனது துக்கத்தைப் பற்றிச் சொல்லவும் அவனும் வெகுவாகத் துக்கித்து வல்லபனைச் சமாதானம் செய்வித்தான்.

அந்த இரவுக்குள் அந்தக் கோட்டை அமைதியாகிவிட்டது. இது யுத்தம் நடந்த கோட்டையா என்று தெரியவில்லை. ஜனங்கள் பழையபடி தங்கள் தங்கள் காரியங்களில் ஈடுபடத் தொடங்கினார்கள். எங்கும் ஒருவித மகிழ்ச்சியே தென்பட்டது.

இரவு மன்னர் அழைக்கிறார் என்று இரு இளைஞர்களுக்கும் செய்தி வந்தது.

சபைக்குள் நுழைந்ததும் இருவரும் குமார கம்பணரை முதன்முறை பார்த்ததும் அதிசயம் அடைந்தார்கள். வல்லபன் ஏற்கெனவே அறிந்திருந்ததால் அவனிடம் குறும்புப் புன்னகை ஒன்றுதான் ஏற்பட்டது. எதிரே மேடையில், கற்பூர வியாபாரியின் முக ஜாடையோடும், புன்னகையோடும் குமார கம்பணர் ஒரு ஆதனத்தில் வீற்றிருந்தார்.

இளைஞர்களைப் பார்த்ததும், ''வாருங்கள்! வாருங்கள்!'' என்று உபசரித்த அவர், தாமே எழுந்திருந்து வந்து அவர்களைத் தழுவிக் கொண்டார்.

தத்தன் அதி ஆச்சரியத்துடன் சிலிர்த்துப்போக, வல்லபன் அவரை நோக்கி, ''பிரபோ! வியாபாரியாக வந்து எம்மைத் திக்குமுக்காட வைத்துவிட்டீர்களே! தங்களிடம் மரியாதை இல்லாமல் பலமுறை நடந்து கொண்டிருக்கிறோமே! இதற்கெல்லாம் எங்களுக்கு என்ன தண்டனை கொடுத்தாலும் தகும்'' என்று கூறினான்.

''வல்லபா! நிச்சயம் உங்களுக்குத் தண்டனை கொடுக்கத்தான் போகிறேன். அதையும் இதோ சொல்லி விடுகிறேன். உங்களுக்கு நிறைய வேலைகள் இங்கே காத்திருக்கிறது'' என்று கூறினார்.

வல்லபனும் தத்தனும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள்.

''பிரபோ!'' என்று தயங்கினான் வல்லபன்.

''என்ன? தைரியமாகச் சொல்!'' என்றார் மன்னர்.

''நாங்கள் எங்கள் ஊருக்கு அவசியம் போயாக வேண்டும். எங்கள் உற்றார் கவலையோடு இருப்பார்கள்!'' என்றான் வல்லபன்.

''நல்லது வல்லபா! அதையும் நான் அறிவேன். நீங்கள் வீட்டை விட்டு வந்து எத்தனையோ மாதங்கள் ஆகிவிட்டன! அவசியம் போக வேண்டும்! அதைவிட மற்றொரு காரணமுமுண்டு. அரங்கன் கிடைத்து விட்டார் என்ற செய்தியையும் சொல்ல வேண்டும். அதை எல்லாம் நான் உணர்கிறேன். ஆகவே உங்கள்விருப்பத்திற்கு இசைந்தவாறுதான் நான் கொடுக்கப் போகிற புது வேலையும் இருக்கும்.'' என்றார் மன்னர்.

''நல்லது'' என்றான் வல்லபன்.

''கேள் வல்லபா! நாம் பாண்டிய வம்சத்தாரிடம் ஒரு நல்லதனமான உறவை உடனே ஏற்படுத்திக் கொள்ள வேண்டும். அதற்குச் சிறந்த வழி இளவரசி மதுராங்கனியை அவர்களிடம் பாதுகாப்போடு சேர்த்து விடுவதுதான்!'' என்றார் மன்னர்.

''நல்லது'' என்றான் வல்லபன்.

''இந்தப் பாதுகாப்புக்குப் பொறுப்பாக நீங்கள் இருவரும் போக வேண்டும்.'' என்றார் மன்னர்.

வல்லபன் திடுக்கிட்டான். இதுபோல் அவர் சொல்வார் என்று எதிர்பார்க்கவில்லை.

''பிரபோ! இதை எங்களால் செய்ய முடியுமா? நாங்கள் வயதில் மிகச் சிறியவர்களாயிற்றே!'' என்றான் வல்லபன்.

''நிச்சயமாக முடியும்! அதற்கான தகுதி உங்கள் இருவரிடமும் இருக்கிறது. நான் ஏற்கனவே அதை அனுமானித்தேன். ஆகவே, தயங்காமல் இதில் சென்று வாருங்கள். உங்களுக்குத் துணையாக நூறு குதிரை



வீரர்களையும் அனுப்புகிறேன். எதற்கும் கவலை வேண்டாம்!'' என்றார் மன்னர்.

வல்லபன் தயங்கினான்.

''பிரபோ!'' என்றான்.

''சொல்லு, வல்லபா!''

''இந்தக் காரியத்தில் ஈடுபட்டால் எங்கள் பெற்றோர்களை எப்படிப் பார்ப்பது?'' என்றான்.

''நல்லது!'' என்று சிரித்தார் மன்னர். ''எல்லாவற்றையும் யோசித்துத்தான் வைத்திருக்கிறேன். சொல்கிறேன் கேள். நீங்கள் இளவரசியை அழைத்துப் போகும்போது சுல்தானின் ராஜ்யம் வழியாகப் போக முடியாது! ஆகவே நீங்கள் எமது கர்நாடக நாட்டு வழியாகத்தான் போகப் போகிறீர்கள். அப்படிப் போகும் வழியில், முள்வாய் நகரத்திலோ திருநாராயண புரத்திலோ கோஷ்டியை நிறுத்தி விட்டு நீங்கள் சத்திய மங்கலம் சென்று உங்கள் உறவினர்களைப் பார்த்து மீண்டும் கோஷ்டியுடன் சேர்ந்து கொள்ளளலாம்'' என்றார்.

வல்லபன் திகைத்து நின்றான்.

"தயங்காதே, வல்லபா! இப்போதிருக்கும் சோதனைகளில் உன் போன்றவர்கள் உதவினால்தான் நல்லது. சம்புவராய ராஜ்யத்தைப் பிடித்து விட்டோம். இதனால் மதுரை கல்தான். என்ன காரியம் செய்யப் போகிறாரோ, தெரியாது. நாங்கள் ஜாக்கிரதையாக இருக்க வேண்டும். இந்த நிலையில் உன் போன்றோரின் உதவியை நாங்கள் கேட்கிறோம். இவை எல்லாம் உனது நோக்கத்திற்குப் புறம்பானவை என்று நினைக்காதே! அரங்கன் திருவரங்கத்திற்குச் செல்வதற்காக நீ புரியும் சேவை என்றே நினை! நாங்கள் செய்யும் காரியமும் நீ கோரும் காரியமும் ஒன்றேதான்!" என்றார் மன்னர்.

வல்லபன் யோசனையில் ஆழ்ந்தான். ஒரு நாட்டு மன்னரே அவனிடம் யாசித்து நிற்பது போலத் தோன்றியது. அரங்கனுக்காக என்று அவர் விளக்கம் கொடுத்தது அவனுக்குப் பொருத்தமாகக் கூடப் பட்டது.

"என்ன சொல்கிறாய்?" என்று மன்னர் திருப்பிக் கேட்டதும்,

"தங்கள் விருப்பப்படியே செய்கிறேன்" என்றான் வல்லபன்.

அவ்வளவில் அவன் தோளைத் தட்டிய மன்னர், "வல்லபா! நீ யோசிப்பது கூட எனக்குப் பிடிக்கிறது. யோசித்து முடிவு செய்வது எப்போதும் நல்லது. இன்னொன்றும் கூறுகிறேன். நீ இரண்டு காரியங்கள் செய்கிறாய். உன் ஊருக்குப் போகிறாய். இரண்டாவது இளவரசியைப் பாண்டிய நாட்டில் கொண்டு விட்டுப் போகிறாய். இவை இரண்டும் செய்த பிறகு, நேராக எம்மிடம் வந்து விடப் போகிறாய்!" என்றார்.

மீண்டும் திடுக்கிட்டான் வல்லபன்.

"ஆமாம், வல்லபா, லட்சியத்தைப் பெரிதாகப் போட்டுக் கொண்டு விட்டோமே! எல்லோரும் வடம் பிடிக்க வேண்டாமா? உன் தந்தையார் எவ்வளவு பெரும் தீரர்? எப்படி ஒரு நோக்கத்திற்காக வாழ்ந்தார். உயிர் விட்டார் என்றெல்லாம் கேள்விப்பட்டேன். அவர் விட்டுப் போயுள்ள குறைக் காரியங்களையும் நீ தான் நிறைவேற்ற வேண்டும். அதற்காக நீ எம்முடன் பணி செய்துதான் ஆக வேண்டும்" என்று கூறினார்.

மறுநாள் காலையில் பாண்டிய இளவரசியோடும் நூறு குதிரை வீரர்களோடும் இளைஞர்கள் கர்நாடக நாட்டை நோக்கிப் பிரயாணமானார்கள்.

வல்லபனின் மனம் துடித்தது. 'இந்தப் பயணத்தில் மதுரா அவனிடம் பேசி ஒரு பிரேமையை வளர்ப்பாளா? அவளது மனத்தில் அவன் குடிபுக முடியுமா?' என்றெல்லாம் நினைத்தான்.

—தொடரும்.

## அலமாரி

## பாட்டுடைத் தலைவி

நாவல் நம் கால இலக்கிய வடிவங்களில் சிறந்த மதிப்பைப் பெற்றது. வாழ்வின் வருணனையான இலக்கியம் வாழ்வை மாற்றியமைக்கும் இலக்கைப் பெற்று இலக்கியமாகத் திகழ வேண்டும் என்னும் நோக்கம் லட்சுமி ராஜரத்தினம் அவர்களின் "பாட்டுடைத் தலைவி" நாவலில் நிறைவு கண்டுள்ளது. வக்கிரங்கள் இல்லாத பண்பாட்டுத்தளங் கொண்ட நாகரிகமே மறைமுகமான லட்சியமாக ஏற்ற இலக்கியவாதியே பாட்டுடைத் தலைவி நிர்மலாவின் பாத்திரத்தை மனக்கண்முன் நிறுத்த முடியும் என்று நாவலில் தோய்பவர் உணர்வார்கள்.

எழுத்தாளர் ரவி, இசைவாணி நிர்மலா, ராதா, சுந்தர், பிரேமா ஆகிய பாத்திரங்களில்-சில சமயம் மட்டுமே ரவிக்கு முரணாக, நடந்து கொண்ட ராதா தவிர, எல்லாருமே சிறியன சிந்தியாதவர்களாக மேற்பட்டு நிற்கின்றனர்; பண்பாட்டின் உயர்மட்டத்தில் ஏற்படும் சிக்கல்களையும் எதிர்பாராத நிகழ்ச்சிகளையும் வைத்துப் பின்னப்பட்ட நாவல் இது.

ரவியும் ராதாவும் முறைப்படி திருமணம் செய்து இல்லறம் துவக்கும் போது குறுக்கிட்டு ராதாவுக்கு வீண் சலனமும் அதனால் ரவிக்குக் குழப்பமும் உண்டாக்கும் ரவியின் நண்பன் சத்யன் சமூகத் தீமையைக் காட்டும் வெற்றியான பாத்திரம். பளபளப்பான புறத் தோற்றத்தின் அடியில் போலித்தனமும் கயமையும் ஒளிந்திருப்பதை சத்யன் மூலம் நாவலாசிரியை நன்றாகத் திட்டியுள்ளார்.

நிர்மலாவின் அன்புத் தொடர்பு ஏற்படும் முன்பே ராதாவை தமக்கை பிரேமாவுடன் பெண் பார்த்து, ராதாவின் தமக்கை ஓடிப் போன குற்றம் அக்குடும்பத்திற்குக் களங்கமானதையும் பொருட்படுத்தாமல் ரவி ஏற்றுக் கொள்வதும், கணவன் ரவியின் அருமை புரியாமல் ராதா நடந்து கொள்வதும்- மரகதமும் சத்யனும் ராதா தாய் வீட்டில் வாழாவெட்டியாக இருக்கும்படி சூழ்ச்சி செய்ததும் புனையப்பட்டுள்ள திறமை தேர்ந்த எழுத்துக்குப் பட்டயமாகும்.

இசைக் கலைவாணி நிர்மலா ரவியை மனத்தில் என்றும் சுழலும் ராகமாக வரித்துக் கொண்டு அவன் கணவனாக வாய்க்காத நிலையைப் பொறுத்துக் கொள்ளும் போதும்- ரவியிடம் அவள் ஒப்படைத்திருந்த நகைகளை மீண்டும் திருப்பித் தரும் போது அவன் மனைவி ராதாவுக்கே அன்பளிப்பாகத் தரும் போதும் நிர்மலா-குணச்சித்திரம் கொடி கட்டிப் பறக்கிறது. "மனத்துக்குள் எனக்கு ஒரு தனி சுருதியில் ஒரு ராகம் ஒலித்துக் கொண்டே இருக்கிறது. அதை நான் மணந்து கொண்டு விட்டேன். அதை இரவு பகலாக நாதத்தால் உபாசிப்பேன்" என வரும் நிர்மலாவின் சொற்கள் பாத்திரப் படைப்புக்கே உரிய உரையாடல். நிர்மலாவின் சிரிப்பை, "இந்தச் சிரிப்பும் ஓர் இசைதான். இதை இவள் எந்த ராகத்தில் சிரிக்கிறாள்... மோகன ராகமாகத்தான் இருக்க வேண்டும்" என்று ஆசிரியை வருணிப்பது பாத்திரத்திற்கேற்ற வருணனை.

ஒரு காலத்தில் ரவியை நேசித்து அடைய முடியாத நிர்மலாவைத் தான் அடைய முயன்று முடியாத சமயமும் ரவியை வெறுக்காத மனப் பக்குவம் உடையவனாக சுந்தர் காட்டப்பட்டவகை மகிழத்தக்கது. ரவியையும் நிர்மலாவையும் தாமதமாகப் புரிந்து கொள்ளும் ராதா, ரவியின் பாராட்டு விழா அரங்கில் நடந்த இசை நிகழ்ச்சியைச் சுவைத்து "பாட்டுடைத் தலைவி" நிர்மலாவை அழைக்கும் வாய்ப்பில் நம் மனத்தில் இழந்த மதிப்பை மீட்டு நாவலுக்கொரு பெயரும் தந்தவளாகின்றாள்.

ரவியை 'கண்ணன்-என் சேவகன்' பாத்திரம் போல் கண்ணிமை போல் காக்கும் சின்னான் உருக்கமான படைப்பு. சங்கீதா பங்கு குறைவானாலும் அவள் கடிதங்களால் மனத்தைக் காட்டியவள்.

இந் நாவலின் வருணனை தெளிந்த நீரோடையாகி நாவலுக்கு ஒளியூட்டுகிறது. பழங்கால நாணயங்கள் சரித்திர ஆய்வுக்கான ஆர்வத்துக்குரியவையாக இருக்கலாம். ஆனால் தற்கால வணிகத்துக்கும் செலாவணிக்கும் பயன்படுமா? அதுபோல பழங்காலச் சொற்களும் தொடர்களும் இலக்கியத்தில் இடம் பற்றுவதும் என்று அஸ்லிட் (Hazlitt) சொன்ன கருத்தை நினைத்தால் நாவலாசிரியை கையாளும் நடையைப் பாராட்டத் தோன்றுகிறது.

- மின்னூர் சீனிவாசன்

-ஆசிரியர் லட்சுமி ராஜரத்தினம்; விலை ரூ. 7-50 வெளியிட்டோர்: அன்னபூர்ணா பதிப்பகம் 5, சிவா விஷ்ணு ப்ளாட், 28, பிஞ்சாலா சுப்ரமணியம் தெரு, தி.நகர் சென்னை-17.

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

கோஷ்டி புறப்படுமுன், கம்பணரின் ராணியான கங்காதேவி இரு இளைஞர்களையும் அழைத்து அவர்கள் செய்த உதவிகளையெல்லாம் பாராட்டி,

''பாண்டிய இளவரசியைப் பத்திரமாக அழைத்துச் செல்லுங்கள். போகும் வழியில் முள்வாய் நகரத்தில் தங்குங்கள்! பாண்டியகுல இராணிமார்களை நான் வணங்கியதாகத் தெரிவியுங்கள். அவர்களிடம் இந்தப் பட்டு ஆடைகளையும். இரத்தினங்களையும் காணிக்கைகளாக அளியுங்கள். இவ்வளவும் செய்துவிட்டு, நீங்கள் இருவரும் திரும்ப வரும் போது ஒரு காரியம் செய்ய வேண்டும்'' என்று கூறினாள்.

''என்ன செய்ய வேண்டும், மகாராணி?'' என்றான் வல்லபன்.

''சுல்தானியர்கள் மதுரையைக் கைப்பற்றிய முப்பத்தெட்டு ஆண்டுகளாகப் பாண்டிய நாட்டாருடன் தொடர்புகள் விட்டுவிட்டன. தெற்கே அவர்கள் நெல்லைச் சீமையில் இருந்து வருகிறார்கள். இவர்கள் ராஜ்யத்திலே புலவர்களும், கவிஞர்களும் அநேகம் பேர் இருந்திருப்பார்கள். இந்த வித்வான்கள் எழுதிய காவிய கிரந்தங்கள் ஏதாவது இருந்தால் தயை செய்து படி எடுத்துக் கொள்ளும்படி ஏற்பாடு செய்து அவைகளைக் கொண்டு வாருங்கள்'' என்று கூறினாள்.

''சரி!'' என்று சொல்லி இளைஞர்கள் புறப்பட்டார்கள்.

முதல் ஏழு நாள் வரையில் பிரயாணத்தில் ஏதும் நடக்கவில்லை. தமிழ்ப் பேசும் பூமியை விட்டுக் கர்நாடக ராஜ்யத்தின் வழியாகப் போனார்கள். எங்கும் மலைப்பிரதேசமாக இருந்தது. அதன் பசுமையும் குளிர்ச்சியும் வல்லபனைப் பெரிதும் கவர்ந்தன. மனத்தில் நிச்சிந்தையாக இயற்கையை அனுபவித்துக் கொண்டு சென்றது புதிய அனுபவமாக இருந்தது. வாழ்க்கைச் சங்கடங்களிலிருந்து விடுபட்டு ஆத்மா மேலே மிதப்பது போலிருந்தது.

வழியில் பல்வேறு சத்திரங்களில் தங்கி அவர்கள் பிரயாணத்தை மேற்கொண்டார்கள். அப்படித் தங்கும் போதெல்லாம், முன்கூட்டியே வீரர்கள் மூலம் ராஜகட்டளை போயிருந்ததால் சத்திரங்களில் உபசாரங்களும், மரியாதைகளும் அபரிமிதமாக இருந்தன.

பாண்டிய இளவரசி மதுராவுக்கு ஒரு பட்டத்து ராணிக்குரிய மரியாதைகள் அளிக்கப்பட்டன. பல ஊர்களிலும், கோவில்களிலும் பூரண கும்ப மரியாதைகளும் வழங்கப்பட்டன.

இளவரசியின் விருப்பங்களை அறிவதற்கு அந்தரங்கத் தாதிகளும் அவற்றை நிறைவேற்றப் பெண் காவலாளிகளும் எப்போதும் சித்தமாக இருந்தார்கள்.

அந்தப்புரத்தில் தலைமை அதிகாரியாக இருக்கும் வயதான பெண்மணி - அந்தப்புரக் காரியம் என்பது அவளது பதவியின் பெயர் - பாண்டிய இளவரசிக்கு எல்லா விதங்களிலும் உதவிக் கொண்டிருந்தாள். சிறு கூற்றத் தலைவர்களும், வளநாட்டுத் தலைவர்களும் இளவரசிக்கு வரவேற்பளிக்கும்போது அவர்களிடம் பேசும் முறை, நடந்து கொள்ளும் முறை, விடைபெறும் முறை எல்லாவற்றையும் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்தாள்.

இவ்விதம் ஒரு அரச பரிவாரமே அவளைச் சூழ்ந்திருக்கும் சமயத்தில் கோஷ்டிப் பாதுகாப்புக்காகப் போயிருந்த வல்லபனுக்கும் இளவரசிக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லாமலேயே இருந்தது.

இது ஒரு விதத்தில் வல்லபனது மனத்தில் கிலேசத்தைக் கொடுத்தது. ஒவ்வொரு பகலும் போய் இரவு வரும் போதெல்லாம், ''இன்று ஒரு தினமும் போய் விட்டது. அவளிடம் பேச முடியவில்லையே'' என்று எண்ணினான் அவன்

அந்தத் தாபம் நாள் செல்லச் செல்ல அதிகமாகி வர இரவு வரும்போதெல்லாம் தனிமையில் இருந்து கொண்டு தானே மனம் கசிந்து உள்ளே நெகிழ ஆரம்பித்தான்.

ஏழாம் நாள் மாலையில், அஸ்தமிப்பதற்கு ஒரு முகூர்த்த அளவுக்கு முன் அவனுக்கும் அந்தப்புரக் காரியத்திற்கும் சிறிய அபிப்பிராயப் பிளவு ஏற்பட்டது.

கோஷ்டி அப்போது ஒரு சிற்றூரை அடைந்திருந்தது. மாலையாகி விட்டதால் அங்கேயே தங்கிவிடலாம் என்று காரியப் பெண்மணி கூற,

இரண்டு முகூர்த்தம் பிரயாணம் செய்து அடுத்துள்ள பெரிய சத்திரத்தை அடைந்துவிடலாம்'' என்று வல்லபன் கூறினான்.

இது குறித்து இருவரும் இளவரசியிடம் செல்ல இளவரசியும், ''இங்கேயே தங்கி விடலாம்'' என்று அபிப்பிராயம் கூறினாள். வல்லபன் அதைக் கேட்டுக் கொண்டு தலைகுனிந்தவாறு வந்து விட்டான்.

இந்த நிகழ்ச்சி அவனைப் பெரிதும் பாதித்தது. அங்கேயே தங்கலாம் என்று சொன்னது கூட அவனுக்குத் தவறாகப் படவில்லை. இளவரசி ஒரு ராஜரீக பீடத்தில் சென்றுவிட்டாள் என்பதுதான் அவனை வருத்தியது. ஒரு தேசத்து ராணி போல் அவளுக்கு ஆலோசகர்கள், காரியஸ்தர்கள், பணியாட்கள்எல்லோரும் தோன்றி விட்டார்கள். இதனால் அவனுக்கும் அவளுக்கும் தூரம் அதிகமாகி விட்டது. அவளும் தனது ஸ்தானத்தின் வரை முறைகளுக்கு ஏற்ப, 'வீரரே!' என்று அழைத்துத் தனது விருப்பத்தை, பாதி விருப்பமும் பாதி கட்டளையுமான பாஷையில் தெரிவிக்கத் தொடங்கினாள். தி

அட்டையில்



## மஞ்சுளா நரசிம்மன்

ஜெனிவாவில் இருந்து சென்னைக்கு வந்து பரதநாட்டியமாடினர் குமாரி மஞ்சுளா நரசிம்மன்.

''சுவிட்சர்லாந்தில் என் தந்தை நரசிம்மன் அவர்களோடு இருந்து வரும் நான் மாடிக் கட்டடத்தில் நாட்டியப் பயிற்சி செய்தால் கீழே குடியிருப்பவர்களுக்குத் தொல்லையாக இருக்கும். எனவே பாத்ரூமில் நாட்டிய ஒத்திகை செய்து கொண்டு தமிழ்நாட்டிற்கு வந்தேன்!'' என்று அழகாகச் சிரித்துக் கொண்டே சொன்னர் மஞ்சுளா.

சென்னை கலைவாணர் அரங்கில் இவரை ஆட்டி வைத்தார் குற்றுலம் கணேசப் பிள்ளை. ''சதிராடி வருகிருள்'' என்ற காபி ராகப் பாடலுக்கு இவர் அபிநயித்த விதம் ''அபாரம்!'' என்று சொல்ல வைத்தது.

---

ரென்று இளவரசிக்கு ஏற்பட்ட இந்த மாற்றந்தான் அவனைத் திகைக்க வைத்தது.

இரவு மனத்தில் இனம் காணு வேதனை ஏற்பட்டது. 'இவளுக்கும் எனக்கும் என்ன? நான் ஏன் இவளுக்காக வருத்தப்படுகிறேன்? நாஞக அவள் மீது ஒரு எண்ணத்தை நிர்மாணித்துக் கொண்டு, மனத்தில் நாஞகக் கற்பனைகளை வளர்த்துக் கொண்டு, இப்போது என் அனுமானங்களுக்கு எதிராக ஏதாவது நடக்கும் போது ஏன் வருத்தப்பட வேண்டும்?'

மனத்தை அவன் இவ்வாறு சமாதானம் செய்ய முயன்றுலும், காவியங்களில் வரையப்பட்ட நாயகன் போல் அவனும்ஒருவன் என்றும்,அவனுக்கு அந்தக் காவியங்களில் தோன்றுவது போலவே பிரேமை தோன்றி விட்டது என்றும், அந்த பிரேமை முழுமை பெறு வண்ணம் பல சோதனைகள் வருகின்றன என்றும், இதற்கெல்லாம் அவனும் அந்த நாயகர்களைப் போலவே தனிமையாக,இரகசியமாக, அந்தரங்கமாக, மனத்துள், உள்ளத்துள், ஜீவனுக்குள் நொந்து வருந்தி அழ வேண்டும் என்று நினைத்தான்.

பிரேமைக்குக் கண்ணீர்தான் அருமையான தோழி என்று எங்கேயோ படித்ததன் நினைவு அவனுக்குவந்தது.

ஆகவே, இளவரசி அவனை நினைத்தாலும் நினைக்காவிட்டாலும் அவனுக- அவளை நினைப்பதிலோ, அதன் மூலம் ஒரு பிரேமையை வளர்ப்பதிலோ தவறில்லை என்று நினைத்தான்.

ஒருவரைப் பிரேமித்து, அதனுல் எழும் சோகத்தில் அழுந்துவதே ஒரு பெரும் சுகம் என்று அவன் எண்ணினுன்.

'ஆமாம், இந்த விரகமும், தாபமும், ஏக்கமும் அதனுல் உருக்கும் கண்ணீருமே என் மனத்திற்கு இதமான சுகத்தை அளிக்கின்றன. பிரேமை சோகமாக மாறினுலும் அது ஒரு சுகமான சோகம்' என்று நினைத்தான் அவன்.

இரவு அவன் உண்ணுது உறங்கி விட்டான்.

அடுந்த இரு நாள் பிரயாணங்களும் எந்த நிகழ்ச்சியுமின்றி நடந்தன.

மூன்றும் நாள் வல்லபனுக்கு ஜுரம் கண்டிருந்தது. அன்று மாலையில் சீக்கிரமே ஒரு சிற்றூரில் தங்க வேண்டி வந்தது. கூடாரம் அடித்துத் தண்டு இறங்கினர்கள்.

இரவில் வல்லபன் புலம்பினுன். அவனது சகோதரன் வீரக் குலசேகரன் அடிக்கடி நினைவில் வந்து கொண்டிருந்தான். தாயார், வாசந்திகா தோன்றி, ''வல்லபா! நான் சொன்னதை எல்லாம் செய்தாயா? இன்னும் திரும்பிப்பாராமல் இருக்கிருயே! வழியில் பிறழ்ந்து விட்டாயா!'' என்று கேட்டாள்.

''இல்லை அம்மா! இல்லை!'' ''என்று உளறினுன் அவன். கண்கள் அப்போது விழித்தன. ஜுரம் கத கத என்றிருந்தது. அருகில் தத்தனைக் காணவில்லை. பாதுகாப்பு வேலைக்குப் போயிருப்பான். தண்ணீர் வேண்டும் போலிருந்தது.

''தண்ணீர்''என்று சொல்லித் திரும்பினுன் அவன் முன்னே ஒரு யட்சிணி நின்று கொண்டிருந்தாள். அவனுக்கே ஆச்சரியமாக இருந்தது!

இதுவரை அவன் யட்சிணியைப் பார்த்ததில்லை. யட்சிணியின் கால் எல்லாம் காற்றில் கரைந்திருப்பது போல் தென்பட்டது. அவன் கண்களில் உள்ள ஜுர ஜ்வாலை அந்த உருவத்தை நீராவிக்குள் 'பார்ப்பது போல் பிரமையை உண்டாக்கியது.

''யார் இது! யட்சிணிதானு?''

உற்றுப் பார்த்தான். கண்களைக் கசக்கினுன். கண்ணின் மறைப்பு பனிச்சென்று மறைந்தது. அகல விரித்துப் பார்த்தான். நிற்பது யார்? இன்னும் பிரமை நீங்கவில்லையா? இளவரசி மதுராவாவது, இந்தக் கூடாரத்துள் வருவதாவது!

நேரில் இருக்கும் உருவம் அவள் இல்லை என்றுல் வேறு யார்?

அந்தப் பெண் அங்குள்ள பாத்திரத்திலிருந்து தண்ணீர் எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

ஆச்சரிய மிகுதியுடன் வல்லபன் அவளைப் பார்த்தான். 'இது யார்? பழக்கமான உருவம்! பழக்கமான புன்னகை!'



''அருந்துங்கள்! என்னைத் தெரியவில்லையா?' என்று கேட்டது உருவம்.

இளவரசியா இவள்! மதுராவா இவள்! என் கூடாரத்துக்குள் வந்திருக்கிறாளா?

''தாங்கள் இளவரசியா? நான் காண்பது பிரமை இல்லையே!'' என்றான் அவன்.

''நீங்கள் அருந்தினீர்களே, அந்த நீர் உண்மையானால், நானும் உண்மை!'' என்றாள் அவள்.

அவன் மிரள விழித்தான்! ''இல்லை இளவரசி! நான் கனவுக்கும் நனவுக்கும் இடையே ஊசலாடுகிறேன். நனவு எதையோ பார்க்கிறது. கனவு அதை மறைத்து விடுகிறது. நீங்கள் மட்டுமல்ல! நீங்களே பேசும் பேச்சுக் கூட எனக்குக் கனவில் கேட்பது போல இருக்கிறது'' என்றான் அவன்.

பிறகு அவன் கண்களை மூடினான். இமைகள் ஒரே வெம்மையாக விழிகளை மூடின. கபகப என்று உடம்பு முழுதும் எரிந்தது. இளவரசி வீரக் குல சேகரன், வாசந்திகா ஆகியவர்களின் பேச்சு சப்தங்கள் கலவையாகக் கலகலத்துக் கேட்டன. ஒரு குழப்பமான ஆழத்தில் மூழ்கினான் அவன்.



ஒரு நீண்ட நேரத்திற்குப் பின்னர் மெதுவாக அவன் கண் விழித்தான். அந்த உருவம் அவன் அருகில் கனிவான பார்வையுடன் நின்று கொண்டிருந்தது. "இளவரசி! தாங்களா! தாங்கள்தானா!" என்றான் அவன்.

"நானேதான்!" என்றாள் அவள்.

"நம்ப முடியவில்லையே!" என்றான் அவன்.

"ஏன்?" என்றாள் அவள்.

"தாங்கள் ராணிக்குச் சமமானவர்கள். இங்கே வரலாமா? அதை அந்தப்புரக் காரியம் ஒத்துக் கொள்ள மாட்டார்களே?" என்றான் அவன்.

"எனக்கு என்று இஷ்டங்கள் இருந்தால் யாராவது அதைத் தடை செய்ய முடியுமா?" என்றாள் அவள்.

"மிகவும் நன்றி உடையேன்! இளவரசி!" என்றான் அவன்.

வல்லபனின் காய்ச்சல் இரண்டு நாட்களில் சிறிது இறங்கியது. அவன் இனிமேல் பிரயாணம் செய்யலாம் என்று தெரிந்த பின் கோஷ்டி புறப்பட்டது. வல்லபன் குதிரை மீது செல்வது கடினம் என்று அறிந்து அவனுக்கு பல்லக்கு ஒன்று கொடுக்கப் பட்டது. அதன் பஞ்சணைகளில் கிடந்த அவன் பாதி உறக்கத்திலும், பாதி விழிப்பிலும் பிரயாணம் செய்தான்.

நான்காவது நாள் எல்லோரும் முள்வாய் நகரத்தை அடைந்தார்கள்.

அங்கே போனதும், கோவிலை அடுத்துள்ள ஆதுர சாலையில் வல்லபனைக் கொண்டு போய்க்கிடத்தினார்கள்.

சாலையில் தலைமை வைத்தியர் அவனைக் கவனிக்க ஆரம்பித்தார்.





## அமெரிக்க மீனாவும் ஆடினார்

அமெரிக்காவில் இருந்து குமாரி மீனா அழகப்பன் சென்னைகு வந்து அற்புதமாகபரதநாட்டியமாடினார். தாசப்பிரகாஷ் ஓட்டல் கலை அரங்கில் நடைபெற்ற அந்த நிகழ்ச்சிக்கு நகரிலுள்ள பிரமுகர்களும் கலைஞர்களும் திரளாக வருகை தந்து இருந்தனர்.

நியூயார்க் நகரில் குமாரி மீனாவின் நாட்டிய அரங்கேற்றம் ஒரு மாதத்திற்கு முன் நடந்தது, மாபெரும் வரவேற்புக் கிடைத்தது என்று சொன்னார்கள்.

குமாரி மீனா அழகப்பன் அமெரிக்காவில் உள்ள திருமதி பத்மினியின் முதல் மாணவி என்று அறிந்த போது அவர் ஆனந்த நடனம் ஆடுவதற்குக் கேட்பானேன்?

---

வல்லபன் முழுதுமாகக் குணம் ஆக ஒரு வாரம் ஆகியது. நன்றாக எழுந்து வளைய வர ஆரம்பித்தவுடன் அவன் தத்தனைப் பார்த்து, "தத்தா! எனக்கு ஒரு விஷயம் உண்மையா, பொய்யா என்று தெரியவில்லை. நீ சொல்வாயா?" என்று கேட்டான்.

"கேள்" என்றான் தத்தன்.

"வழியில் தண்டு இறங்கியபோது இளவரசி என் கூடாரத்துள் வந்து என்னைப் பார்த்துப் பேசிப் போனாள் என்று எனக்குத் தோன்றியது. இது உண்மையா, அல்லது என் பிரமையா?" என்றான் வல்லபன்.

"சரியான பைத்தியம் நீ! இளவரசியாவது, உன் கூடாரம் தேடி வருவதாவது! கனவு கண்டாயா? இளவரசியை நீ என்ன, சாதாரண மனுஷி என்று நினைத்து விட்டாயா? ஒரு ராணிக்கும் மேலான கௌரவம் அவளுக்கு வந்து விட்டது. நம்மிடம் ஏதோ ஒரு ஆபத்தில் பேசி விட்டாள் என்பதற்காக, எப்போதுமே அவள் சமதையோடு நம்மிடம் வந்து அளவளாவுவாள் என்று பார்த்தாயா?" என்று கேட்டான் அவன்.

வல்லபன் திகைத்து நின்றான்.

"நீ சொல்வதெல்லாம் சரி, தத்தா! அவள் என் கூடாரத்திற்குள் நுழைந்ததை நீ காண நேர்ந்ததா?" என்றான்.

"இல்லை" என்றான் தத்தன்.

"வேறு யாராவது அதைப் பார்த்தார்களா?"

"தெரியாது."

வல்லபன் திக்பிரமையோடு நின்றான்.

அவள் அவனது கூடாரத்துக்குள் வந்து அவனை விசாரித்து விட்டுப் போனாள் என்ற நினைவில், அவன் எழுப்பிய இன்ப மயமான கோட்டைகளை எல்லாம் இடிக்க வேண்டியிருக்கிறதே என்று நினைத்தான்.

மனம் ஒரு ஓரமாகத் தளும்பியது.

தனியாக ஒருவர், மற்றவருக்குத் தெரியாமல் பிரேமை கொண்டால் இந்த அவஸ்தைகளை எல்லாம் தான் பட வேண்டும். கனவானது நனவு போலவும், நனவு கனவு போலவும் தெரியும். மனம் அதீதமாகக் கற்பனை பண்ணி வேதனை உறும் என்று நினைத்தான் அவன்.

இனி இவைகளைப் பற்றி எதுவும் நினைக்க வேண்டாம் என்று நினைத்தபோது வாயிலில், "ஹை, ஹை" என்று குரல் கேட்டது. ஒரு கம்பீரமான பல்லக்கு அந்த ஆதுரசாலை வாயிலில் இறங்கியது.

தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

வாயிலில் வந்த பல்லக்கிலிருந்து இளவரசி இறங்குவாளோ என்று வல்லபன் எதிர்பார்த்தான். ஆனால் ஒரு அதிகாரி உள்ளே வந்து, ''ஐயா! தாங்கள் சத்தியமங்கலம் செல்வதற்காக அரண்மனைக் காரியம் இதை அனுப்பியிருக்கிறார்கள்'' என்றார்.

வல்லபனுக்குச் சப்பென்று இருந்தது. பிரேமை கொண்டவர்களுக்குச் சிறு சிறு ஏமாற்றங்களே எவ்வளவு பெரிதாகத் தோன்றிவிடுகிறது? அவனுக்கு மனத்தில் ஒரு சூன்யம் விழுந்தாற் போலிருந்தது.

எனினும் அதை வெளியே காட்டிக் கொள்ளாமல், ''எனக்கு எதற்கு இந்தப் பல்லக்கு?'' என்று கேட்டான்.

'இல்லை, தாங்கள் நோயிலிருந்து குணமாகி வருகிறீர்கள். வீண் சிரமங்கள் வேண்டாம் என்று ஏற்பாடு செய்திருக்கிறார்கள்'' என்றார் அதிகாரி.

ஏற்பாடு செய்திருக்கிறார்கள் என்றால் யார்? இளவரசி என்று சொல்லியிருக்கக் கூடாதா? வல்லபனின் மனம் வெதும்பியது. யார் செய்திருக்கிறார்கள் என்று அவனே கேட்டுத் தெரிந்து கொள்வது மதிப்புக் குறைவாகத் தோன்றியது.

''நல்லது'' என்று சொல்லி, அவரை அனுப்பி விட்டு, வல்லபன் உள்ளே போய்ச் சோர்ந்து அமர்ந்தான்.

தத்தன் பிறகு அவனிடம் வந்து, ''ம், புறப்படு, நாழியாகிறது'' என்ற போதுதான் எழுந்தான்.

இருவரும் புறப்பட்டார்கள்.

வெளியில் வந்து பார்த்த போதுதான் இருபது வீரர்கள் நிறைந்த ஒரு சைனியமே காத்திருப்பது தெரிந்தது.

''இத்தனை பேர்கள் எதற்கு? நாம் போகும் இடம் கொங்குநாடு அல்லவா? அந்த நாடு இன்னும் மதுரை சுல்தானுக்கு அல்லவா கப்பம் செலுத்திவருகிறது? அப்படியிருக்க, விஜயநகர வீரர்கள் வந்தால் அது பூசலுக்கு இடமாயிற்றே!'' என்றான் வல்லபன்.

அதிகாரி தலை குனிந்தார்.

''ஐயா! தங்களுக்கு இங்கே நேர்ந்துள்ளது தெரியாதா?'' என்று கேட்டார்.

''ஏன்? என்ன நடந்தது?'' என்றான் வல்லபன்.

''சம்புவராயர் வீழ்ந்தார் என்னும் செய்தி கேள்விப்பட்டவுடன், கொங்கு நாட்டின் கூற்றம், வளநாடுகளைச் சேர்ந்த தலைவர்களும் தளபதிகளும், 'இனி சுல்தானுக்குக் கப்பம் கட்ட மாட்டோம்! விஜயநகருக்கே எங்கள் நாடுகள் சொந்தம்' என்று அறிவித்து விட்டார்கள். எம் மகாராஜரைக் தேடி ஒரு பெரிய குழுவே ராஜகம்பீரன் மலைக்குப் போயிருக்கிறது. எம் மகாராஜரும் இதனை ஒத்துக் கொண்டு விடுவார். ஆனால் அதற்குள் இந்த முள்வாய்த் தலைநகரில் இருக்கும் பிரதானி தாம் ஒத்துக் கொள்வதாகத் தெரிவித்து விட்டார். ஆகையால் இனி கொங்கு நாடும் எங்கள் நாடு தான்'' என்றார் அதிகாரி.

வல்லபனுக்கு மகிழ்ச்சி ததும்பி வந்தது.

''தலைவரே! தாங்கள் சொல்வதெல்லாம் உண்மையா?'' எனறு ஒரே உற்சாகமுடன் கேட்டான்.

''ஆமாம், ஐயா! போகிற வழியில் காட்டுவதற்கு என்று இதோ வராக இலச்சினை கொண்டு வந்திருக்கிறோம். இந்த இலச்சினையின் கட்டளைகள் செல்லுபடியாகிற நாடெல்லாம் எங்கள் நாடுதான்!'' என்று சொல்லி வராக இலச்சினையை எடுத்துக் காட்டினார் அதிகாரி.

''ஆகா! என் நாடும் சுதந்திரமாகிவிட்டதா? பெருமையாக இருக்கிறது தலைவரே!'' என்றான் வல்லபன்.

''எல்லோருக்கும் பெருமைதான் ஐயா! இந்தப் பிரயாணத்தைக் கூட அதனால் ஒரு பரீட்சார்த்தமாகவே செய்ய விரும்புகிறோம்.'' என்றார் அதிகாரி.

''ஏன், என்ன காரணம்?'' என்றான் வல்லபன்.

''தொண்டை மண்டலம் (சம்புவராயர்ராஜ்யம்) கொங்கு நாடு இரண்டையும் இழந்திருக்கிறார் மதுரை சுல்தான்! அவர் இனி என்ன செய்யப் போகிறார் என்ற யோசனையும் எங்களுக்கு இருக்கிறது. கொங்குநாட்டில் எம் படை ஒன்றையே கொண்டு நிறுத்தலாமா என்று யோசனை! தவிர இன்னொரு விஷயமும் உண்டு. இந்தப் பிரதேசம் பத்திரமானதாகவும் பாதுகாப்பாகவும்இருக்கிறதா என்று பார்க்க வேண்டும். பாதுகாப்பாக இருந்தால், பாண்டிய இளவரசியை நாம் மலையாளம் சுற்றிக் கொண்டு போக வேண்டியதில்லை. இப்படியே குறுக்காகத் தென் பாண்டியத்திற்குப் போய்விடலாம்'' என்றார் அதிகாரி.

''அதுவும் நல்லதுதான்!'' என்றான் வல்லபன்.

அப்படிச் சொன்ன ஒரு கணத்தில், இளவரசி மதுரா சத்தியமங்கலத்திற்கு வருவது போலவும் அவனது தாயார் வாசந்திகா அவளை வரவேற்பது போலவும் காட்சிகள் அவன் மனத்தில் தோன்றி மறைந்தன.

எல்லோரும் புறப்பட்டார்கள்.

நான்கு தினங்கள் சென்றவாறே கூட்டம் சத்தியமங்கலத்தை அடைய அதன் சூழலில் தெரிந்த சோலைகளையும், தோப்புகளையும், பூ வனங்களையும் கண்ட வல்லபன் பரவசனாகி பல்லக்கின் சீலையை விரித்தது விரித்தபடியே வைத்திருந்தான்.

வைரமணிகளைப் போல் கண்ணீர் முத்துக்கள் கன்னங்களில் விழுந்து ஓடின.

விறு விறுவென ஒரு தாய்ப்பாசமும், ஊர்ப்பாசமும் அவனைப் பிடித்து இழுக்க,

இத்தனை நாளும் என்னென்னமோ செய்து காலத்தைக் கழித்தோமே என்று நினைத்தான் அவன்.

ஊரின் கோபுரம் தெரிந்தது. அதன் கலசத்தைக் கண்டதுமே, பழைய ஜன்ம நினைவு வந்ததுபோல அவனது பழமை எல்லாம் வந்து அவனை அப்பிக் கொண்டது.

பிறகு ஊரின் மாடங்களும் கூரைகளும், அவற்றிடையே தென்னோலையின் கோலங்களும் தெரிய, அவன்

அந்தரங்கம் எல்லாம் ஒரு கங்கை போல பிரவகித்து எழுந்தது.

யுகாந்தரத்திற்குப் பிறகு தன் பிறந்த பூமியை மிதிப்பது போல் நினைத்தான்.

பிரதான பாட்டையில் நுழைந்ததும் ஆங்காங்கே மக்கள் வெளியே வந்து, அந்தக் கூட்டத்தைப் பார்த்தார்கள்.

சிலர் அந்தப் பல்லக்கை வியப்போடு கவனித்தார்கள்.

மாட வீதிக்குள் நுழைந்ததும் வல்லபன் உணர்ச்சி வசமாகித் தன் வயம் இழந்துவிட்டான். ஒரே பரபரப்பு அவனை ஆட்கொண்டது.

அவன் வீட்டு வாயிலில் பல்லக்கு நின்ற போது அவன் கனவு உலகில் இருந்தான். இறங்கும் போது கண்களில் நீர்த் திரை மூடியது.

படிகளில் ஏறி, ''அம்மா'' என்று அழைத்தான். உடன் தயார் தென்படாததால், உள்ளே நெடுக நடந்து செல்ல,



அதே நேரத்தில் பின் அடுக்கில் துளசி மாடத்தில் பூ வைத்துக் கொண்டிருந்த வாசந்திகாவும் ஏதோ அரவம் கேட்டு உள்ளே பார்க்க,

ஆளுருவமாய் நிழல் தெரிவது கண்டு அவள் உள்ளே வர,

இவன், ''அம்மா'' என்று கன்றின் குரல்போல் கனிவாய் விளிக்க.

அவளும் ஆச்சரியத்தில் ஸ்தம்பித்து, நாத் தத்தளித்து, ''வல்லபா'' சொல்லமுதாய்ப் பொழிந்து, நடை தடுமாறி ஓடி வர,

இருவரும் கடலும் கடலும் கலந்தாற்போல் நீக்கமறத் தழுவிக்கொண்டு கண்ணீர்ப் புனலில் ஆழ்ந்தார்கள்.

தாயின் வாட்டமும், இடையிலே அவளுக்கு வந்துள்ள முதுமையும் கண்டு மகன் துணுக்கமுற,

அவளும் இவனது இடைக்கால வளர்ச்சியையும், ஒரு யுவனைப் போன்ற ஆகிருதியையும், கம்பீரத்தையும். பார்வையின் நேர்த்தியையும் கண்டு புளகாங்கிதம் அடைந்தாள்.

அவ்வளவில் வாசந்திகா, ''வல்லபா என் கண்ணே எம் கனவை நிறைவேற்றினாயோ?'' என்று கேட்க,

''ஆமாம், அம்மா அரங்கனைக் கண்டேன்'' என்று பெருமையுடன் சொன்னான் அவன்.

''என்ன? அரங்கனைக் கண்டாயா?'' என்று பாதி நம்பிக்கையும் பாதி அவநம்பிக்கையுமாய் அவள் வினவ,

''ஆமாம், அம்மா! கண்டேன் அரங்கனை! கண் குளிரக் கண்டேன். மனதாரக் கண்டேன். காட்டில் கண்டுபிடித்து அவரை நாட்டில் எழுந்தருள வைத்தேன்'' என்று சொன்னான்.

''இப்போது எங்கே அவர் இருக்கிறார்?'' என்று அவள் கேட்க, ''திருப்பதியிலே இருக்கிறாரம்மா! எல்லாமே உனக்கு விஸ்தாரமாகச் சொல்கிறேன், நீ எப்படி இருக்கிறாயம்மா, அதைச் சொல்லு!'' என்று அவளைக் குசலம் விசாரிக்க ஆரம்பித்தான்!

தாயும் சேயும் ஒரு அன்னியோன்யமான, பரஸ்பரமான, அன்புமயமான பாச வலையில் வீழ்ந்து தம் மனங்களில் இருந்ததையெல்லாம் கொட்டிக் கவிழ்த்து அன்று பகலும் இரவுமெல்லாம் உறவாடினார்கள்.

இருவரும் உண்ணவோ உறங்கவோ மறந்தார்கள்.

வாசந்திகாவுக்கு ஒரு நலிந்த நம்பிக்கை திடீரெனத் துளிர்த்துப் பூவும் கப்புமாக வளர்ந்து, கனி குலுங்க நிற்பது போல் தோன்றியது.

சின்னாட்களுக்கு முன்பு மைந்தன் திரும்பி வராததை எண்ணி, இனி எல்லாமே போய்விட்டது என்று மகனையும் தன் கனவையும் ஒருங்கே தள்ளியிருந்தாள் அவள்.

வாழ்க்கையில் கடந்த நாற்பது ஆண்டு காலமாய் வெற்றியை விடத் தோல்விகளையே அதிகம் கண்டிருந்தவள் அவள். ஏதோ ஒரு ஆசையில் நம்பிக்கை வைத்து, தன் மகனையே அந்த ஆசையின் பின்னே துரத்திய பிறகு தான் செய்தது சரியோ, சரியில்லையோ என்று யோசித்திருந்தாள் அவள். வெகு மாதங்களாய் வல்லபனிடமிருந்து செய்தியொன்றும் வராமல் தவியாய்த் தவித்து, அப்பால் காஞ்சிபுரத்திலிருந்து வந்த ஒரு வைணவர் மூலம் வல்லபன் செய்தி அனுப்பக்கேட்டு அதிலேயே சிறுது ஜீவன் துளிர்த்து, பின்பு அதுவும் நிராசையாய் மாறும் வேளையில் வல்லபனே முழுமையாக, நிதரிசனமாக, ஒரு புனர் ஜன்மம் எடுத்தவன் போல் வந்து நின்று விட்டான்.

வந்தது மட்டுமில்லை. பெரிதான ஒரு நல்ல செய்தியையும் கொண்டு வந்து அவளை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்தி விட்டான்.

தன் புதல்வன் செய்த வீரசாகசச் செயல்களையும், அலைந்து திரிந்து செய்த சாதனைகளையும் கேட்டுக் கொண்ட அவள், மானசீகமாகத் தன் கணவர் குலசேகரனை நினைத்து. ''என் அன்புக்குரியவரே! தங்கள் மகன் தங்களை நிகர்த்து விளங்குகிறான். தாங்கள் கொண்ட ஆசையைப் பாதி நிறைவேற்றி விட்டான். இனிப் பாதியும் நிறைவேற்றுவான்.'' என்று சொல்லிச் சந்தோஷமும் பட்டாள்.

மறுநாள் காலையில் அன்னையுடன் மீண்டும் அளவளாவி விட்டு வல்லபன், ''அம்மா ஒரே ஒரு விண்ணப்பம்! முள்வாய் ராஜ்ய மகாராஜாவான கம்பணர் எனக்கு இன்னும் பல காரியங்கள் வைத்துள்ளார். அம்மா! இதெல்லாம் மதுரையைப் பிடிப்பதற்கு முன் செய்ய வேண்டிய பூர்வாங்க வேலைகள் என்று சொல்லியிருக்கிறார். ஆகவே இவைகளையும் நிறைவேற்ற நான் மீண்டும் போக வேண்டியதம்மா!'' என்று கூற,

அதைக் கேட்ட வாசந்திகா திகைத்து வெகு நேரம் வரை பேசாமல் இருந்து விட்டாள்.

பின்னர் அவளிடம் வல்லபன் நாட்டு நடப்புகளையும் எடுத்து [illegible] அவளும் [illegible] தேறி, அரங்கன் திருவரங்கம் சேர வேண்டும் என்ற அபிலாஷையில், இதுவரை சரியாக நடந்தது இனிமேலும் சரியாக நடக்கும் என்று நம்பிக்கை [illegible] வல்லப[illegible] நோக்கி,

''வல்லபா! அரங்கன் சித்தம் [illegible] போய் வா!'' என்று கனிவுடன் கூறி[illegible]

மறுதினம் காலையில் வல்லபன் மீண்[illegible] புறப்பட்டான். சத்திரத்தில் [illegible] கோஷ்டி மீண்டும் அவனுடன் [illegible] சேர்ந்து கொண்டது.

நல்முகூர்த்தம் பார்த்துப் புறப்படும் வேளையில், தாயார் வாசந்திகா மீண்டும் ததும்பும் கண்களுடன் அவனிடம் வந்து,

''வல்லபா! நான் கொடுத்த ஓலை நறுக்கைப் பார்த்தாயா?'' என்று கேட்க,

அவனும், ''பார்த்தேன் அம்மா!'' என்று சொல்ல,

''மொழியில் பிறழாதே, வழியில் பிறழாதே, விழியில் பிறழாதே!'' என்றாள் அவள்.

பிறகு அவள் மேலும் தொடர்ந்து, ''வல்லபா! மற்றொன்று....' ஒரு தாயார் கேட்கக் கூடாததைக் கேட்கிறேன். முன்பும் இதையே கேட்டேன்! அரங்கன் திருவரங்கம் சேர்ந்து உன் பெற்றோர்களின் லட்சிய விருப்பம் முடியும் வரை நீ உன் மண வாழ்க்கையைப் பற்றி நினைக்கக் கூடாது!'' என்றாள்

''ஆகட்டும், அம்மா!'' என்றான் வல்லபன் புன்னகையோடு.

''இன்னும் ஒன்று! வெகு சீக்கிரத்தில் பரகூர் சென்று ராணி கிருஷ்ணையியைப் பார்!'' என்றாள் வாசந்திகா. அப்போது அவள் குரல்தழதழத்திருந்தது.

''ஆகட்டும், அம்மா!'' என்று சொல்லி அவன் அவளை ஏறிட்டுப் பார்த்தான். அவன் கண்களில் நீர் துளித்திருந்தது. அவளும் உணர்ச்சியில் கண்ணீர் ததும்ப நின்று கொண்டிருந்தாள்..முந்திய இரவில் அவன் அவளுக்கு வீர குலசேகரனின் மரணத்தைப் பற்றியும் அது நிகழ்ந்த விதம் எப்படி என்பதையும் கூறி, அந்தப் பாதகச் செயல் தன் கையால் நிகழ்ந்தது என்று மனம் உடைந்து அரற்றி அவளது பாதங்களைப் பற்றிக் கொண்டு அழுதிருக்கிறான். அவளும் வெகுவாக அழுது, பிறகு, 'எல்லாம் தெய்வச் செயல்' என்று சொல்லி அவனைச் சமாதானப்படுத்தி யிருக்கிறாள். அத்துடன் தன் கணவனுக்கு நேர்ந்த ஒரு அசம்பாவித புத்திர பாக்கியத்தையும், அதன் தொடர்பையும் அவள் மறந்து விடுவாள் என்று நினைத்திருந்தபோது, அவளே இப்போது பரகூர் போய் கிருஷ்ணையியைப் பார் என்று கூறிவிட்டாள். என்ன விசாலமான இதயம் தன் தாயாருக்கு என்று நினைத்தான் அவன்!

வாசந்திகா பின்னர் தத்தனை அழைத்து அவனையும் ஆசீர்வதித்து, ''சென்று வாருங்கள்!'' என்று சொல்லி அனுப்ப,

இரு இளைஞர்களும் தங்கள் பரிவாரத்தோடு புறப்பட்டார்கள்.

நான்கே நாட்களில் மீண்டும் அவர்கள் முள்வாய் நகரம் எட்டி விட,

அங்கே இளைப்பாறிவிட்டு மூன்றாம் நாளில் மீண்டும் பாண்டிய இளவரசி மதுராவுடன் கோஷ்டியாகப் புறப்பட்டார்கள்.

கொங்கு தேசம் அமைதியாக இருக்கிறது என்று தெரிந்து விட்டமையால், அந்தக் கூட்டம் இந்த நாட்டின் ஓரமாகப் போய், மலைத் தாழ்வாரங்கள் வழியே தென் பாண்டியத்திற்குப் போய்ச் சேர நினைத்தார்கள்.

இரு நாட்கள் பிரயாணத்தில் மலைப் பிரதேசம் அவர்களை வந்து அணவியது. இளவரசியின் பல்லக்கு அந்த மலைவழியில் ஏற்றங்களில் ஏற ஆரம்பித்தது.

பல்லக்கின் முன்னும் பின்னும் குதிரைகள் செல்ல, அந்தப் பெரும் கோஷ்டியே, அந்தப் பச்சை நிற மலைப் பிரதேசத்தில் வெகு துல்யமாகத் தெரிந்தது.

வளைந்து வளைந்து செல்லும் மேட்டு வழியில் கூட்டம் ஒரு சர்ப்பம் போல் வளைந்து ஏறியது.

கூட்டத்தின் முதல் அணி இரு வளைவுகளுக்கு மேலே செல்லும்போது, அதன் வால் பகுதி கீழே ஒரு நெடும் பள்ளத்திலிருந்து ஏறிக் கொண்டிருப்பது அழகாகத் தெரிந்தது.

அப்படி மேலே வளைந்து போகும் போதெல்லாம் இளவரசியின் பல்லக்கு கீழேயிருந்து வந்து கொண்டிருந்த வல்லபனுக்கு நன்கு தெரிந்தது.

சமயங்களில் மேலே வளைவில் செல்லும் பல்லக்கும் அதன் கீழ் வளைவில் செல்லும் அவனும் கிட்டத்தட்ட ஒரே செங்குத்துக் கோட்டில் இருப்பதை அவன் உணர்ந்தான்.

மேலே மதுராவின் பல்லக்கைப் பார்க்கும்போது அவன் மனம் பக்கென்று வேகமாக அடித்துக் கொண்டது.

அந்தப் பல்லக்கில் மூடிய பட்டுத் திரைச்சீலைகள் பளபளத்துத் துடிக்கும்போது, அவன்இதயத்தின் உணர்வுகள் அதே விதமாய்த் துடித்துக் கொண்டிருந்தன.

இளவரசிக்கு மட்டும் உண்மையாக அவன்மீது பிரேமை இருக்குமானால், அவள் இந்தச் சந்தர்ப்பத்தை விடாமல் அவனைப் பார்த்திருப்பாள் என்று நினைத்தான்.

அப்படி அவள் அவனைப் பார்க்காதது அவன் மனத்தைப் பிழிந்து எடுத்துக் கொண்டிருந்தது.

சில சமயங்களில் தாபம் பொங்கி வர, மேலே வளைவில் தனக்கு நேராகப் போகும் பல்லக்கை ஒரு ஏக்கத்துடன் வெறித்துப் பார்த்து,

''மதுரா! நீங்கள் எவ்வளவுக் கல் நெஞ்சுக்காரர்களாக இருக்கிறீர்கள்! என்னிடம் பேச வேண்டாம்! நான் பாதுகாப்பு அளிப்பதற்காகவும் பாராட்ட வேண்டாம். ஆனால் எதேச்சையாக எங்கேயோ பார்க்கும் பார்வையில், ஒரு மரத்தையோ பறவையையோ சாதாரணமாகப் பார்ப்பீர்களே, அதே சாதாரணப் பார்வையில் என்னைப் பார்க்கக் கூடாதா? சாதாரணப் பார்வை போதும்! பிரேமை வேண்டாம். உங்கள் பார்வை பட்டால் என் வாடுகிற மனம் தளிர்த்து விடுமே! மதுரா, மதுரா'' என்று மனத்துள் கூவினான்.

சில சமயங்களில் அவன் கண்கள் அந்த பல்லக்கை விட்டு அகலாமலேயே தொடர்ந்து சென்றன.

சில சமயங்களில் அதனின்று கண்ணீரும் வழிந்தது.

ஒரு முகூர்த்தம் போயிருக்கும்.

திடீரென்று பிளிறல் ஒலி ஒன்று கேட்டது. கூட்டம் பிரமித்தது.

— தொடரும்



உம்மர் இப்போதெல்லாம் ஹீரோவாக நடிக்க விரும்புகிறாராம்! வில்லன் வேஷம் அலுத்து விட்டதா? படம்: ஜெயபாரதியோடு காலேஜ் பியூட்டி (மலையாளம்) -எல்லை.

# மதுரா விஜயம்

**ஸ்ரீவேணுகோபாலன்**

பிளிறல் கேட்டதும், கூட்டம் திகைத்தது. இரண்டு மத யானைகள் திடீரென்று முன்னே எதிர்ப்பட்டன. அவ்வளவில் எல்லோரும் குழம்பிப் போனார்கள். குதிரைகள் கால்களை மேலே தூக்கிக் கனைத்தன. எல்லா வீரர்களும் கீழே குதித்தார்கள்.

ஈட்டிகளை எறிந்தும், தீப்பந்தங்களை வீசியும், தமுக்குகளை ஓங்கி அடித்தும் யானைகளை விரட்டப் பார்த்தார்கள். எதற்கும் மசியாமல் அவை அவர்களை நோக்கி வரவே,

எல்லோரும் பீதி அடைந்து ஓடினார்கள்.

பல்லக்கைச் சுமப்போரும் ஓடிவிடவே இளவரசி மதுரா பல்லக்கிலிருந்து குதித்தாள். சுற்றிவரப் பார்த்த போது நிலைமை பயங்கரமாக இருந்தது. ஒரு யானை தத்தனை விரட்டிக் கொண்டிருக்க, மற்றொரு யானை அவளது பல்லக்கை நோக்கி வந்தது.

ஒரு கணம் அவள் இதயம் நின்றது. பக்கென்று ஒரு பயம் பற்றிக் கொள்ளும்போது, ''இளவரசி'' என்று குரல் கேட்டது.

கீழே, வளைவுப் பாதையில் வல்லபன் நின்றுகொண்டிருந்தான்.

''இளவரசி உருண்டு விடுங்கள்!'' என்று அவன் கத்தினான்.

அவ்வளவுதான்! உடம்பைப் போர்த்தி மூடிக் கொண்டு அந்தச் சரிவிலே அவள் விருட்டென்று உருண்டாள். செடி, கொடி, புதர் எல்லாவற்றிலும் முட்டி மோதிக் கொண்டு காற்று வேகத்தில் கீழே போய்க் கொண்டிருந்தாள்.

பத்து ஆள் பிரும்ம (ஆழத்தைக் குறிக்கும் சொல்) ஆழமான சரிவில் அவள் உருண்டு வர,

வல்லபன் தன் கைகளை நீட்டித் தடுத்து அவளை ஏந்திக் கொண்டான்.

இருவரும் உடனே அங்கே கண நேரம் கூட நிற்காமல்,

அடுத்தாற் போல் இரண்டு சரிவிலும் உருண்டு, அப்பால் தழை, கொடிகள் அடர்ந்த வனப்பிரதேசத்தில் புகுந்து மூச்சிறைக்க நின்றார்கள்.

யானையின் பிளிறல் இப்போது மேலே எங்கோ தொலைவில் பலமுறை கேட்டது.

அது கேட்ட போதெல்லாம் மதுராவின் மெல்லிய உடல் நடுங்கியது.

மௌனமாக இருந்த அவள் சிறிது நேரத்தில் ஒரு தழைப்புதரின் பின்னால் சென்று, தனது கிழிந்த ஆடைகளைச் சரி செய்து கொண்டு வந்தாள்.

வந்தவள் பேசாமலேயே நின்றாள்.

வல்லபனின் மனம் கரைந்தது. இந்த இளவரசி ஏன் பேசாமல் இருக்கிறாள்; தன்னுடைய மதிப்பிற்குக் குறைவாக இருக்கும் என்று நினைக்கிறாளோ என்று எண்ணினான்.

அவன் உடம்பில் நுண்ணிய உணர்ச்சியின் ஊசிகள் ஆயிரம் குத்திக் கொண்டிருந்தன. மதுராவின் மெல்லிய பூ உடலை ஏந்திய போது ஏற்பட்ட அதிர்ச்சிமயமான இன்பம் இன்னும் மயிர்க்கால்களில் வடிந்தோடிக்கொண்டிருந்தது. அவன் உடலே மெல்ல எழுந்து பறப்பது போல் ஒரு ஆனந்த அனுபவம் தோன்றியது.

அதே நேரத்தில் ஒருவித துக்கமும் மனத்தில் எழுந்தது. இந்த இளவரசி இப்படிப் பேசாமல் இருக்கிறாளே? இவ்வளவு ஆபத்துக்களிலிருந்து தப்பித்து வந்ததும் தனது நன்றியையோ மகிழ்ச்சியையோ தெரிவிக்காமல் இருக்கிறாளே! ஒருவேளை என்னிடம் பேசினால் அதைக் கௌரவக் குறைவாக நினைக்கிறாளோ? இப்படி ஒரு சாதாரண வீரனிடம் பாதுகாப்புக்காக அகப்பட்டுக் கொண்டதையே கேவலமாகக் கருதுகிறாளோ?

இப்படி இருவித உணர்வுகளும் மனத்தில் குமைந்து கொண்டு வர,

அதனால் ஏற்படும் உள்ளத் தாழ்ச்சியில் கண்ணீர் கசிந்துவிட,

இமைகளைக் கொட்டி, அதை அடக்கிக் கொண்டே கீழே பார்த்து,

''இளவரசி இந்தப் பாறை மீது ஏறி அமர்ந்து கொள்ளுங்கள்! நான் மற்றவர்கள் என்ன ஆனார்கள் என்று பார்த்து வருகிறேன்''

என்று கீழே பார்த்தவாறே கூறி அவள் விடைக்குக் காத்திராமல் புறப்பட்டுச் சென்றான்.

போகும் போது, அவன் மனம், ''பிரேமை கொள்ளாதே! அதில் இன்பத்தை விடத் துன்பந்தான் அதிகம்! பிரேமையில் அகப்பட்டோர் வாழ்க்கை எல்லாம் கண்ணீர் வாழ்க்கைதான்! பிரேமை ஒருவரது வாழ்க்கையைக் கனவுகளால் மூடிப் பாழடைத்து விடும்'' என்று கூறியது.

சூடாகக் கண்ணீர்த் துளி கன்னத்தில் சிந்த அவன் நடந்து சென்றான்.

அதிக தூரம் போய்விடாமல் சுற்று வட்டாரத்திலேயே நோட்டம் பார்க்க, மனிதர்களையோ பாதைகளையோ காணாமல் யோசனையோடு திரும்பி வரும் வேளையில்,

'களுக்' என்று குமிழி உடைந்தாற் போல் சப்தம் கேட்க,

அது வந்த திசையைப் பார்க்கும் போது, அங்கு பசுமையாய் இரு யௌவன முதுவ இனத்து ஆணும் பெண்ணும் நிற்பதைப் பார்த்து,

அவர்கள் அருகே சென்று, தனக்கும் தன் கூட்டத்தாருக்கும் நடந்ததைக் கூறி, இரவு தங்குவதற்கு இடம் கிடைக்குமோ என்று கேட்டான்.

அவர்களும் மனமுவந்து, ''சீக்கிரம் வாருங்கள்! இடம் தருகிறோம்'' என்று கூற.

உடன் வல்லபனும் பாறைப் பக்கம் போய் இளவரசி மதுராவை அழைத்து வந்தான்.




அந்த முதுவ இனத்து யௌவனங்கள் அவர்களை அழைத்துப் போய் தங்கள் இருப்பிடமான ஒரு குகையில் கொண்டுபோய் விட்டார்கள்.

அந்தக் குகை தரை மட்டத்திற்குச் சற்று உயரத்திலிருந்தது. பாறைகள் மீது ஜாக்கிரதையாகக் கால்களை வைத்து ஏறினால்தான் அந்த இடத்தை அடைய முடியும். உயரத்தில் இருந்ததால், இரவில் எந்த துஷ்ட ஜந்துக்களும் அதை அண்டிட முடியாது.

குகைக்குள் ஏறி மதுரா அமர்ந்து கொள்ள, வல்லபன் இறங்கி அந்த மலைஜாதி யௌவனங்களோடு சேர்ந்து கொண்டான்.

பொழுது போய் இரவு வந்ததும் அந்த யௌவனங்கள் ஒரு பெரும் தீப்பந்தத்தை ஏற்றித் தரையில் நட்டு வைத்து விட்டு ஒருவரை ஒருவர் ஓடிப் பிடித்துப் பல வித விளையாட்டுக்களை விளையாட ஆரம்பித்தார்கள்.

சில சமயங்களில் வல்லபனையும் இழுத்து தாச்சியாக இருக்க வைத்து, கண்ணாமூச்சி போன்ற பல ஆட்டங்களை ஆடினார்கள்.

சமயங்களில் ஒருவருக்கொருவர் பொய்ச் சண்டையிட்டு வல்லபனிடம் மத்தியஸ்தத்திற்கு வந்தார்கள்.

அந்தப் பெண்ணுக்குப் பதினாறு வயதிருக்கும். ஆணுக்குப் பதினெட்டு வயதிருக்கும். புஷ்டியான மேனியுடன் பசுமையும் செழுமையும் நிறைந்த அங்கப் பெருமைகளுடன் அந்த யௌவனங்கள் சிரித்துக் கலகலத்துத் துள்ளி ஆடுவதே ஒரு காட்சியாக இருந்தது.

ஒரு நாழிகை போனவாறே, அவர்களும் வல்லபனும் அமர்ந்து வெறும் கதைகளைப் பேச ஆரம்பித்தார்கள்.

அந்த இளம் பெண் அவனைப் புன்னகையுடன், ''அண்ணா'' என்று அழைத்துப் பேசினாள்.

பிறகு ஓய்ந்த பின்னர், அந்த ஆணின் மடியில் பெண் படுத்துக் கொண்டு தமிழும் மலையாளமும் கலந்த மலைப் பாஷையில் ஒரு பாட்டுப் பாட,

அந்த ஆணும், அவள் கூந்தலை மட்டுமின்றி அவளது உடம்பின் எல்லாப் பாகங்களையும் நீவி விட்டுக் கொண்டிருந்தான்.

வெட்கமறியா அந்தக் காட்சியில் இயற்கையின் இரு அன்றில் பட்சிகள் புறஉலகை மறந்து மழலைமொழி

யில் பேசி ரதி- மன்மத ஆட்டல்களில் திளைப்பது போலிருந்தது.

அந்தப் பெண்ணின் மிக இனிமையான, கத்தி போல் கூர்மையான குரல் அந்த அரண்ய நிசப்தங்களைக் கிழித்துக் கொண்டு ஒரு வெள்ளி இழைபோல் ஜில்ஜிலுத்துக் கொண்டு ஓடியது.

அந்தக் குரலிலோ அதில் இழையூடும் வார்த்தைகளிலோ ஒரு சோகம் பிழிந்து சென்று எங்கும் நீவிப் பரவுவது போன்றிருந்தது.

வல்லபனின் அப்போதைய மனத்திற்கு அது மிகவும் ஏற்றதாக இருந்தது.

அதில் அவன் மெய்மறந்து ஈடுபட்டிருக்க,

அருகில் திடீரென யாரோ நிற்பதை உணர்ந்து நிமிர்ந்து பார்த்தான்.

மதுரா அவனருகில் நின்று கொண்டிருந்தாள்.

உடனே வல்லபன் சட்டென்று எழுந்திருக்க, சப்தமிடாதீர்கள்' என்பது போல் சமிக்ஞை செய்து, இளவரசி அவனை அழைத்துப் போய்ச் சற்றுக் கிட்டத்தில் உள்ள பாறை மீது அமர்ந்து கொண்டாள்.

குகையிலிருந்து அவள் இறங்கி வந்ததும், அவனை அழைத்துப் பாறையை நோக்கிச் சென்றதும் வல்லபனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''இந்த இருவரும் யார்?'' என்றாள் இளவரசி மெதுவாக.

''இவர்கள் முதுவ குலத்தைச் சேர்ந்தவர்கள். மலைஜாதியினர்.'' என்றான் வல்லபன்.

''இவர்கள் மட்டும் காட்டில் தனியே இருக்கிறார்களே!'' என்றாள் மதுரா.

''ஆமாம்! இவர்களது உறவினர்கள் இங்கிருந்து ஒரு முகூர்த்த தூரத்தில் குடி இருக்கிறார்கள்'' என்றான் வல்லபன்.

''இவர்கள் மட்டும் ஏன் இங்கே இருக்கிறார்கள்?''

''இவர்கள் மணம் செய்து கொள்ளப் போகிறார்கள்!'' என்றான் வல்லபன்.

''என்ன? மணம் ஆகாமலேயா இப்படி எல்லாம் நடந்து கொள்கிறார்கள்?'' என்று திடுக்கிட்டுக் கேட்டாள் மதுரா.





''ஏதாவது நினைவில் என் விரலைக் கடித்துவிடாதீர்கள்!'' என்று சுமித்ரா சிவகுமாரிடம் சொல்கிறார் போல இருக்கிறது! படம்: முதல் இரவு

—ஆனந்த்

''ஆமாம்; அது அவர்கள் பழக்கம்! திருமணத்தைத் தீர்மானித்த உடனேயே ஆணும் பெண்ணும் இப்படித் தனியாக வந்து விடுவார்கள்!'' என்றான் வல்லபன்.

''திருமணம் ஆவதற்கு முன்பேயா?'' என்றாள் மதுரா.

''ஆமாம்! மணமாவதற்கு முன்னர் தான்! இப்படித் தனியாக வந்து ஒருவாரம் வாழக்கை நடத்துவார்கள்'' என்றான் வல்லபன்.

''அதிசயமாக இருக்கிறதே! இது அவர்களது பெற்றோர்களுக்குத் தெரியுமா?'' என்று கேட்டாள் அவள்.

''நன்றாகத் தெரியும்! அவர்கள்தான் இவர்களை இங்கே கொண்டு வந்து விட்டுவிட்டுப் போவார்கள்'' என்றான் வல்லபன்.

''அப்புறம் என்ன நடக்கும்?''

''ஒரு வாரத்திற்குப் பின்னர் இவர்கள் திரும்புவார்கள்!''

''உடனே திருமணம் நடக்குமா?''

''நடக்கும்! இந்த ஒரு வார வாழ்க்கையில் இவர்களுக்கு ஒருவர் மேல் ஒருவர்க்குப் பிடிப்பு ஏற்பட்டால் தான்.'

''பிடிப்பு ஏற்படா விட்டால்?''

''திருமணம் செய்து கொள்ள மாட்டார்கள். வேறு யாரையாவது தேடி வரிக்கப் போவார்கள்.''

மதுரா ஸ்தம்பித்து விட்டாள்.

அந்த யௌவனங்கள் இருவரும் அப்போது எழுந்து ஒருவரை ஒருவர் அணைத்துக்கொண்டு இருட்டின் ஆழங்களை நோக்கிச் சென்றார்கள்.

உடன் மதுராவும் மௌனமாக எழுந்து அவனிடம் விடை பெற்றுப் பாறைகளில் ஏறி மேலே குகைக்குள் சென்றாள்.

அவள் குகையுள் மறைந்த பிறகும் அவள் விட்டுச் சென்ற மகிழம் பூவின் வாசம் இறக்கையடித்துப் பறந்து வல்லபனைப் பலமுறை சுற்றி வந்தது.

மதுரா அவனிடம் பேசியது அவன் மனத்தில் மகிழ்ச்சியைக் கொடுத்தாலும், இன்னும் தாராளமாக

எவ்வளவோ விஷயங்களைப் பற்றிப் பேசாமல் திடீரென்று வந்தது போல் திடீரென்று போய்விட்டாளே என்று தோன்றியது.

''நம் மனம்தான் பிரேமையில் தவிக்கிறது. அவள் மனத்தில் அது இல்லை'' என்று விசனத்துடன் அவன் எண்ணிய வேளையில்,

''ஐயா!'' என்று குரல் கேட்டது.

மேலே பார்த்த போது அங்கே மதுரா நின்று கொண்டிருந்தாள். குகை வாயிலில் நின்று அவனைப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

''என்ன இளவரசி?'' என்றான் அவன்.

''நீங்கள் படுத்துக் கொள்ள வசதி இருக்கிறதா? இந்தத் துணியைக் கொடுக்கட்டுமா?'' என்று அவளது மேல் போர்வையைக் காட்டினாள்.

''வேண்டாம், இளவரசி! எனக்கு என் உத்திரியமே இருக்கிறது'' என்று சொல்லிவிட்டுத் தலைகுனிந்தான் அவன்.

சில கணங்கள் சென்றவாறே, அவள் போய் விட்டாளா என்று பார்க்கும் பாவனையில் மேலே பார்க்க,

இன்னும் அவள் அங்கேயே நின்று அவனைப் பார்த்துக் கொண்டிருப்பது தெரிந்தது.

அவன் அதிசயத்துடன் அவளைப் பார்க்க, அந்தப் பார்வைகள் இரண்டும் பிரபஞ்சத்தின் எல்லையில்லாத கால வெளியின் ஒரு சிறு துணுக்கான விநாடியில் அப்படியே உறைந்து நின்று விட்டன.

உடன் வல்லபன் சடக்கெனத் தன் பார்வையை இழுத்துப் பின்வாங்கிக் கீழே குனிந்தான்.

பிறகு மனத்தில் உணர்வுகள் உந்த மேலேநோக்கி,

''இளவரசி! தங்களுக்கு எல்லாம் வசதியாக இருக்கிறதா?'' என்று கேட்க,

''வசதியாகவே உள்ளது.'' என்று கூறிவிட்டு உள்ளே போய் விட்டாள் அவள்.

அவள் போனதும்தான் தாமதம், வல்லபனின் மனம் பொறி கலங்கி நின்றது. சற்று முன் அவன் பெறுதற்கு அரிதான ஒரு அனுபவத்தைப் பெற்றது போலிருந்தது.

பாதத்திலிருந்து உச்சிவரை உணர்ச்சிகள் ஜலதரங்கமிட்டு ஊடுருவிச் சென்றன.

தன்னைத் தானே பிடித்துக் கொண்டான். அவ்வளவு தூரத்திற்கு உடம்பில் ஒரு வேகத்தினால் ஆட்டம் கண்டிருந்தது.

''மதுரா! இப்போது நீங்கள் வந்தது, குகை வாயிலில் நின்றது, என் மீது அக்கறையோடு கேட்டது, பிறகு ஒரு பார்வையாய் என்னைப் பார்த்து நின்றது, எல்லாமே என்னைப் பரவசத்தில் ஆழ்த்திவிட்டன. இவையெல்லாம் தங்களது பிரேமையினால் எழுந்ததல்ல என்று தெரிந்தால்கூட நான் கவலைப்பட மாட்டேன். இன்றைய இந்த நிகழ்ச்சிகளை மட்டும் மனத்துள் நினைத்து வாழ் நாட்கள் முழுதையும் கழித்து விடுவேன். பெரியவர்கள் சொல்லும் ஒரு விஷயத்தைக் கேள்விப்பட்டிருக்கிறீர்களா? சுவாதி நட்சத்திரம் உச்சத்தில் இருக்கும் போது, ஆகாயத்தை நோக்கி, வாயைப் பிளந்து கொண்டே இருக்குமாம் நத்தை. ஆகாயத்திலிருந்து ஒரே ஒரு சிறு மழைத்துளி வாயில் விழுந்தாலும் போதுமாம்! அப்படியே வாயை மூடிக்கொண்டு தண்ணீருக்கடியில் போய் அந்த மழைத்துளியையே முத்தாக்கி விடுமாம்! அந்த நத்தை போலவே ஏங்கிக் கிடந்த எனக்கு இன்று தங்கள் கருணையால் சில குளிர்வான மழைத்துளிகளை வீசி விட்டீர்கள்! இது போதும்! இதைக் கொண்டே மனத்தில் ஒரு முத்தான கனவு உலகத்தைச் சிருஷ்டித்து விடுவேன்'' என்று தனக்குள் கூறிக் கொண்டான் அவன்.

அப்போது அவன் தோள்மீது யாரோ கையை வைத்தார்கள். வல்லபன் திடுக்கிட்டுத் திரும்பினான்.

— தொடரும்

தோளைத் தொட்டது யார் என்று திரும்பிப் பார்க்க, அங்கே தத்தன் இருப்பது கண்டு ஆச்சரியப் பட்டு, அவனை ஆரத் தழுவி,

"தத்தா! யானையிடமிருந்து தப்பினுயோ! கவலைப் பட்டு விட்டேனே!" என்று கூற,

தத்தனும், தான் தப்பி வந்த செய்திகளைச் சம் பிரமமாகக் கூறி,

"எல்லோரும் மேலே ஒரு காடர் குடியிருப்பில் இருக்கிருர்கள். நாம் காலையில் போகலாம். குதிரை களை எல்லாம் பறிகொடுத்துவிட்டோம்! ஓடி விட்டன" என்று கூறினுன்.

பிறகு இளவரசியிடமும் தத்தன் நடந்ததைக் கூற அவளும் உறங்குவதற்குக் கவலையில்லாமல் போனுள்.

அப்பால் இரு இளைஞர்களும் சற்று தூரம் சென்று தனியிடமாய்ப் பார்த்து அமர்ந்து கொள்ள,

வல்லபன் தத்தனை நோக்கி, "தத்தா! என் வாழ்க் கையில் மிக இனிமையான சுவர்க்கத்தில் நான் ஆழ்ந் திருக்கிறேன்" என்று கூற,

தத்தனும் அவனை ஒரு விதமாய்ப் பார்த்து, "என்ன?" என்று வினவ,

வல்லபனும் சிரித்துக் கொண்டு, மதுராவின் பார்வை ஒன்றுக்காக அவன் ஏங்கித் தவித்ததையும், அது தற்போது கிடைத்து விட்டதையும் கூறினுன்.

தொடர்ந்து வல்லபன், "தத்தா! அந்த ஒரு பார் வையின் சுகத்தை என்னுல் வர்ணிக்க முடியவில்லை. திடீரென்று ஒரு மின்னல் சொடுக்கிக் கொண்டு உடம் பில் பாய்ந்தது போல் இருக்கிறது. உயிரே பல கணம் தத்தளிக்கிறது. நாம் யார், எங்கிருக்கிருேம் என்பதே மறந்து விடுகிறது. உணர்வுகள் எல்லாம் ஜிவுஜிவு என்று ஓரேயடியாய்த் துடித்து, நம்மைப் பரவசத்தில் ஆழ்த்துகின்றன. சுய நினைவு வருவதற்கே பல நிமிட காலம் ஆகி விடுகிறது" என்ருன்.

தத்தன் சிறிது நேரம் மௌனமாயிருந்தான்.

வல்லபனுக்கு நிலை கொள்ளாது தத்தளித்தது.

"தத்தா, ஏன் மௌனமாகி விட்டாய்? என்போல் நீயும் இந்த அனுபவத்தைப் பெற்றிருப்பாயே! மஞ்சரி யின் கண்கள் உனக்கு இந்த சுகானுபவத்தைத் தர வில்லையோ?" என்று கேட்க,

தத்தன் அவனைப் பார்த்துத் திரும்பி, "வல்லபா! ஒரு விவாகமும், ஒரு விவாதமும் சம அந்தஸ்து உள்ள வர்களிடம்தான் சோபிக்கிறது. ஏற்றத்தாழ்வு இருந் தால் சோபிக்காமல் போய் விடுகிறது. பிரேமையும் அப் படித்தான்!" என்ருன்.

அதற்கு வல்லபன், "தத்தா! நீ என்ன சொல்கிருய்? எனக்கு இந்தப் பிரேமை பொருத்தமற்றது என்று கூறு கிருயா?" என்று கேட்க,

"அப்படிச் சொல்லவில்லை, வல்லபா! நிறைவு பெருத பிரேமை வாழ்க்கை முழுவதிலும் சஞ்சலத்தைக் கொடுத்து விடுகிறது. மனிதன் இதனுல் பைத்தியமாகி விடுகிருன். உன்மத்தன் போல் திரிகிருன். வேறு எதி லும் அவன் நாட்டம் செல்வதில்லை. அதனுல் அவன் தன்னைப் பாழடித்துக்கொள்வதன்றித் தன் குடும்பத்தை யும் பாழ் செய்து விடுகிருன்! ஆகவே நிறைவேருத பிரேமையை மேற்கொள்வதை விட, நிறைவுறும் பிரேமையை மேற்கொள்வது மேல்" என்ருன்.

வல்லபன் சிறிது யோசித்தான்.

"தத்தா! நிறைவுபெருது என்று ஏன் நாம் நினைத் துக் கொள்ள வேண்டும்?" என்ருன்.

இதற்கு தத்தன், "அதைத்தான் முன்னமேயே சொன்னேனே! சம அந்தஸ்து உள்ளவர்களிடையே எழும் பிரேமைதான் நிறைவேற வாய்ப்பு இருக்கிறது. நிறைவுபெருத பிரேமையில் அழுந்திப் புழுப்போல் துடிப்பதை விடப் பிரேமை கொள்ளாமலேயே இருந்து விடுவது நல்லது" என்ருன்.

"ஏன், உனக்கு இதில் அனுபவமா?" என்ருன் வல்லபன்.



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

"ஆமாம்!" என்று சொல்லி, சத்திய மங்கலத்தில் அவனது தந்தை வாராந்திர பூஜை செய்யப்போகும் ஒரு செல்வந்தர் வீட்டுக்கு அவன் வாரந்தோறும்சென் றதையும், அங்கே செல்வந்தர் மகளுடன் நயனமொழி யில் பேச நேர்ந்ததையும், அது பின்னர் அவன் வாழ்க் கையை ஒரே சஞ்சலமாக்கி விட்டதையும் கூறினுன்.

"கண்களைப் பேச விடுவது தவறு வல்லபா! அத னுல்தான் விழியில் பிறழாதே என்று உன் தாயே சொல் லியிருக்கிருள். இது காரணமாகத்தான் நான் மஞ்சரி யின் கண்களுக்குச் சிக்காமல் தப்பி வந்து விட்டேன். ஏனெனில் எனது பழைய பிரேமையின் வடு என் மனத் தில் அப்படியே கனமாக இருக்கிறது. புது வடுவைச் சம் பாதித்துக் கொள்ள நான் விரும்பவில்லை" என்று கூறி னுன்.

வலலபனுக்கு வாசுதத்தனின் பேசசு அவ்வளவு எடுபடவில்லை. "தத்தா! நான் வேறுவிதமாக நினைக்கி றேன். எனக்குப்பிரேமை சுகத்தைத் தந்தாலும் இன்ப மாக இருக்கிறது. சோகத்தைத் தந்தாலும் இன்பமாக இருக்கிறது" என்ருன்.

தத்தன் மறுமொழி கூறவில்லை.

---

மறுநாள் காலையில் இளைஞர்கள் எழுந்து, மதுராவையும் அழைத்துக் கொண்டு ஒரே உறக்கத்தில் ஆழ்ந்திருக்கும் அந்தக்காட்டு யௌவனங்களைத் தட்டி எழுப்பி, விடைகொண்டு மலைப்பாதையின் மேல் ஏறலானார்கள்.

மதியம் கழிந்தவாறே, அவர்கள் காடர் பகுதியை அடைய,

அவ்வளவில் அந்த வீரர்கள் எல்லோரும் ஆரவாரத்தோடு அவர்களைச் சூழ்ந்து கொண்டார்கள்.

சிறிது நேரம் சிரமப் பரிகாரம் செய்து கொண்டபின், அவர்கள் கொங்கு தேசச் சமவெளிகளை நோக்கி நடக்க ஆரம்பித்தார்கள்.

யானைகள் உடைத்துப் போட்ட பல்லக்கை அவர்கள் சீர்செய்து விட்டதால், இளவரசி மதுரா முன் போலப் பிரயாணம் செய்யலானாள்.

மலைப்பாதை இறங்குமுகமாக இருந்ததால் அநேக வளைவுகளில், பல்லக்கின் திரைக்கூடுகள் மெல்ல விலகிக் கொள்வதையும், பிறகு மூடிக் கொள்வதையும் கவனித்தபோது வல்லபனுக்குப் பெரும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

இளவரசி அவனைப் பார்ப்பதற்காகத்தான் அப்படிச் செய்கிறாள் என்று நினைத்தான் அவன்.

இதில் அவனுக்கு ஒரே ஒரு குறை! தூரத்திலிருந்து பல்லக்கைப் பார்த்தால், திரை விலகிய இடம் கறுமையாகத் தெரிந்ததே தவிர, அதில் இளவரசியின் முகமோ, கண்களோ தெரியவில்லை.

எனினும் வளைவுகளில் மாத்திரம் விலகுவது, அவனை அவள் பார்ப்பதற்காகச் செய்யும் காரியம்தான் என்று நினைத்து மிகவும் சந்தோஷப் பட்டான் அவன்.

சமவெளியை அன்று பொழுது சாயும்போது அடைந்து விட்டார்கள்.

அங்கே தண்டு இறங்கிய பிறகு, இனி நடந்து போனால் தென் பாண்டியம் போய்ச் சேருவதற்குப் பல வாரங்கள் ஆகிவிடும் என்று உணர்ந்து, தத்தன் அங்கு அருகாமையிலுள்ளகூற்றத்து முக்கிய ஊருக்குப் போய், தன்னிடம் உள்ள பொருள் உதவியால் மூன்று குதிரைகளை வாங்கி வந்தான்.

மறுநாள் காலையில் வீரர்கள் யாவரையும் அங்கேயே இருக்கப் பணித்து விட்டு, இளவரசி மதுராவை அழைத்துக் கொண்டு மூன்று புரவிகளில் அவர்கள் புறப்பட்டார்கள்.

அங்கங்கே சத்திரங்களில் தங்கி, யாருடைய கவனத்தையும் ஈர்க்காமல் பிரயாணம் செய்து,

ஆறும் நாள் பகல் வேளையில், பொதிய மலைச் சாரலில் இருந்த குலசேகரன்புதூரை அடைந்தார்கள்.

அது ஒரு சிற்றூர். சுற்றியுள்ள மலைக்காடுகளின் இடையே மிக அழகான ஊராக அது விளங்கியது. அதன் அருகில் அகத்திய தீர்த்தம் என்ற சிறு நதி ஓடிக்கொண்டிருந்தது.

தென் நாடுகளின் மீது துருக்கியர் படையெடுத்து வந்தபோது, சிதறிப் போன பாண்டிய ராஜ வம்சத்தினர் தெற்கே உள்ள வளநாடுகளில் சிதறுண்டு போனார்கள். அவர்களில் குலசேகரப் பாண்டியனின் குடும்பம் இந்த ஊருக்கு வந்து சேர்ந்திருந்தது. இப்போது இந்த ஊரில் இருப்பவர் அந்த குலசேகரனின் பேரர் ஆவார். இவர் பெயரும் குலசேகரர்தான்.

புதூரை அடைந்து, வீதியில் சென்று அரசு மாளிகையை அடைய, "அப்பா!" என்று பீறிட்டுக் கொண்டு மதுரா உள்ளே ஓடி, நோய்வாய்ப் பட்டிருந்த குலசேகரரைத் தழுவிக் கொண்டாள்.

அதைத் தொடர்ந்து மாளிகையில் உள்ளே எல்லோரும் கூடத்துள் சூழ,

அந்த இடமே நெடுநேரம் அமளிதுமளிப் பட்டது.

ஒருவாறு முதல் ஆரவாரம் அடங்கியதும், மதுரா அந்த இரு இளைஞர்களையும் அழைத்துப் போய் குலசேகரருக்கு அறிமுகம் செய்வித்து, அவர்கள் இருவரால் தான் அவள் விடுதலை அடைந்தாள் என்று பெருமிதத்துடன் கூற,

குறுமன்னரும் மிகச் சந்தோஷப்பட்டு, "பிள்ளைகாள்! எனக்கு ஒரே மகள் இவள்தான்! மகன்கள் கிடையாது. பெரும் சாம்ராஜ்யத்தை உண்டாக்கியவர்கள் எம் முன்னோர். இப்போது நாங்கள் பெயருக்குத்தான் மன்னர்களாக இருக்கிறோம். நான் கேவலம் இந்த வள நாட்டுக்குத்தான் அதிபதி! ஆனால் எம் குடிகள் இன்னும் என்னைப் பாண்டியாதிபதி என்றுதான்கூப்பிடுகிறார்கள். அது அவர்கள் அபிமானம்! அவ்வளவே! ஆனால் எங்கள் வம்சத்தின் மாண்பு என்றைக்கோஅழிந்து போயிற்று" என்று பாதி வருத்தமாய்க் கூறி, அவர்களைக் குசலம் விசாரித்து மேலே பேச முடியாமல் பெரும் இழுப்புக்கும் இருமலுக்கும் ஆளானார்.

அன்று நேரம் முழுவதும் அவர்கள் ஒருவருக்கொருவர், நடந்த கதைகளைக்கூறுவதிலேயேபோயிற்று.

இரவில் தமக்கு அளிக்கப்பட்ட மாளிகையில் இளைஞர்கள் படுக்கும் வேளையில், ஒரு புகழ்பெற்ற ராஜவம்சத்திற்கு நேர்ந்த கதியை நினைத்து வருத்தப்பட்டார்கள்.

பாரதப் போர் முடிந்த நாளிலிருந்தே பாண்டியர்கள் அரசு புரிந்தவர்கள்! நூற்றாண்டுகள் பலவாய் இடையறாது வாழ்ந்து விட்டு, சமீப காலத்திலே குடும்பப்பூசல் காரணமாய் எப்படி ஐந்து பேர்களின் தலைமையில், ஐந்து கிளைகளாகப் பிரிந்தார்கள்; அதனால் எந்தஅளவு பாண்டிய நாடு க்ஷீணம் அடைந்து அந்நியர் வருவதற்கு வழிகோலி விட்டது என்பதையும்,

இப்போதும்கூட அந்த ஐந்து கிளை வம்சத்தினர் ஒன்று சேராது, தெற்கே பொதிய மலையை அடுத்துள்ள தென் பாண்டியத்தில் வெவ்வேறு வள நாடுகளைத்தனித்

---

டாக்டர் ரிச்சர்ட் செல்ஜரின் மருத்துவமனை. அறுவை சிகிச்சை மேஜை மேல் ஓர் இளம் பெண். அழகின் மறுஉரு. அழகைக் கொடுத்த இறைவன், அதை முழுமையாகக் கொடுக்கக் கூடாதா? பார்வையில்லாக் கண்கள், பழுது பட்ட கால். அவளின் கணைக் கால் ஒன்றில் ஆறாத புண். தாங்கமுடியாத வேதனை. அழுகிக் கொண்டிருக்கிறது.

நடுவில் எத்தனையோ அறுவை சிகிச்சைகள். புரையோடி உடலின் ஏனைய பாகங்களுக்குப் பழுது ஏற்படாவண்ணம் அழுகிக் கொண்டிருக்கும் காலை வெட்டிவிட முடிவு.

மயக்க மருந்து செலுத்தப்படுகிறது. டாக்டரின் உள்ளத்தில் எண்ண அலைகள். 'இந்தக் காலால் எத்தனை துன்பம் இந்த அழகிக்கு? இனி வாழ்நாள் முழுவதும் தொடர் துன்பந்தானே?

"டாக்டர் நீங்கள் தொடங்கலாம்." நர்ஸின் வார்த்தைகள் டாக்டரின் சிந்தனை ஓட்டத்தை நிறுத்தியது. தூக்க நிலையிலே துவண்டு கிடக்கும் பெண்ணின் முழங்கால்வரை மூடிக் கிடந்த துணியை அகற்றுகிறார் டாக்டர். முழங்காலைச் சுற்றியிருந்த துணிப் பட்டையிலிருந்த ஓர் உருவம் டாக்டரைப் பார்த்துச் சிரித்தது. கண்ணொளியில்லா அப்பெண் வரைந்திருந்தாள்முகமென்று காட்ட ஒரு வட்டம், இரு காதுகள், இரு கண்கள், மூக்கு, சிரித்துக் கொண்டிருக்கும் பாவனையில் உதடுகள். இந்த வரை படத்தின் கீழே எழுதியிருந்தாள்: 'சிரியுங்கள் டாக்டர்!'

மார்டல்லெசன்ஸிலிருந்து.

-அக்வின் அருள்தாஸ்.

தனியாக ஆண்டார்கள் என்பதையும் அவர்கள் நினைத்துப் பார்த்தார்கள்.●

பாண்டிய வமிசம் நியாயமான முறையில் தொடர்ந்து சென்றிருந்தால், இந்தக் குலசேகரர்தான்

● இடையறாது நீண்ட நூற்றுண்டுகள் பூமியை ஆண்ட பெருமை உலகில் சில வம்சங்களுக்கே உண்டு. அந்த வம்சங்களில் பாண்டிய வம்சமும் ஒன்று.

மன்னராக விளங்கியிருப்பார் என்பதையும் நினைத்தார்கள்.

இப்போது இவரைச் சுற்றிச் சொற்ப வீரர்களே இருந்து வருவதையும், அவர்களும் ஒரு பழைய மரியாதை காரணமாக இருந்து வருவதன்றி மன்னரிடமிருந்து கிடைக்கும் வருவாயில் இருக்கவில்லை என்பதையும் அறிந்தார்கள்.

உண்மையில் மன்னரது சாதாரண வாழ்க்கைக்கு அவரது வருவாய் போதுமானதாக இருக்குமா என்று இளைஞர்கள் யோசித்தார்கள்.



அவர்களுக்கு அறுசுவையாக விருந்து அளித்து, அவர்களது எல்லா வசதிகளையும் மன்னர் குறைவறக் கவனித்துக் கொண்டாலும்,

அந்த மாளிகை இருந்த தோற்றம், அதன் சாதனங்களின் பழமை, சுவர்களில் வர்ணங்கள் அழிந்து போயிருந்த நிலைமை, மாளிகையில் பரிசனங்கள் எளிய ஆடை உடுத்தியிருந்த கோலம் யாவுமே இளைஞர்களுக்குப் பெரிதும் வருத்தத்தை அளித்தன.

எனினும் அம் மன்னர் மீது மக்களும், சுற்றமும் வைத்துள்ள மரியாதை மிகவும் அவர்களைக் கவர்ந்தது.

இரண்டு நாட்கள் தங்கி, மன்னரின் உபசாரங்களுக்கும், மதுராவின் உபசாரத்திற்கும் ஆளானபின்,

மூன்றாம் நாள்-வருத்தமுடன் விடைபெறும் வேளையில்,

மன்னர் அவர்களை அணைத்துக்கொண்டு, ''பிள்ளைகாள்! துங்கபத்திரைக் கரையில் புதிய ராஜ்யம் தோன்றித் துருக்கியர்களுக்கு யமனாக வந்திருப்பதைக் குறித்து மகிழ்ச்சி!பெரிய சாம்ராஜ்யங்கள் தோன்றினால்தான்இந்தத் துருக்கியர்களைமுறியடிக்கமுடியும். ஆகவே விஜயநகர ராஜ்யம் தோன்றியிருப்பது குறித்து மிகுந்த மகிழ்ச்சி! என் ஆசிகளை புக்க மகாராஜருக்கும், கம்பண ராஜருக்கும் தெரிவியுங்கள்! சிக்கிரம் இந்த மதுரையை ஜெயிக்கச் சொல்லுங்கள்! நாங்கள்என்றுமேஅவர்பக்கம் இருந்து உதவி புரிவோம். சம்புவராயர்கள் ஒழிந்தது எங்களுக்குப் பெரும் மகிழ்ச்சி! எம் மகளை அபகரித்து, எவ்விதம் எங்கள் நாட்டைத் தங்களதாக்கிக் கொள்ளப் பார்த்தார்கள், கவனித்தார்களா? துரோகிகள்'' என்று கூறி,

கொற்கை முத்துக்களை அவர்களுக்கு வெகுமதிகளாகக் கொடுத்து அவர்களை அனுப்பி வைத்தார்.

## மூன்றாம் ஆண்டு நினைவு நாள்



திருமதி. அபிதா சந்திரன்

8-1-22 17-9-75

அன்பின் நிலைக்களனாய் அறிவின் சுடராய் வாழ்ந்த நீ, நீங்கா நினைவாக எங்கள் இதயத்தில் என்றென்றும் நிறைந்து இருக்கிறாய். உனது ஆத்மா சாந்தி அடைய இறைவனைப் பிரார்த்திக்கும்

17-9-'78 திருவண்ணாமலை சந்திரன்.




மாளிகையை விட்டுப் புறப்படும் வேளையில் வல்லபனின் மனம் கனத்தது.

அவன் கடந்த இரண்டு தினங்களில் ஒரு சுவர்க்கத்திலேயே வாழ்ந்து வந்தான்.

இளவரசி மதுரா அவனை எல்லாவித உபசரணைகளுக்கும் ஆளாக்கிக் கொண்டிருந்தாள்.

அரைநிமிடம் கூட வெறுமையாய் இராமல், அவனது எல்லாத் தேவைகளையும் கவனித்துக்கொண்டாள்.

அவ்வப்போது. அவள் வீசும் ஒரு பார்வை, ஒரு புன்னகை அவனை ஒரே இன்பத்தில் ஆழ வைத்தது.

அந்தப் பார்வைகளில் தயக்கமும், அந்தப் புன்னகையில் தீர்க்கமும்தான் அவனை வெகுவாகக் கலக்கி விட்டன.

இந்த இரண்டு தினங்களில் இருவரும் எண்ணற்ற முறைகள் பார்த்துக் கொண்டார்கள்.

சொல்லப்போனால் இருவரது பார்வைகளும், ஒன்றுக்கொன்று எங்கே சந்திக்கப் போகிறோம் என்பதை நன்றாகத் தெரிந்து வைத்திருந்தன.

அப்படித் தெரிந்து வைத்திருந்து, அவைகள் சந்தித்தபோது, இரண்டுமே ஒன்றின் இரகசியத்தை மற்றது அறிந்தது போல் ஒரு பரஸ்பர விசாரிப்பையோ, குசலத்தையோ காட்டிக் கொண்டன. விழிகளால் அவைகள் கேள்விகள் கேட்டன, விடைகள் கூறின, முடிவுகள் செய்தன, இந்த நுண்ணிய செய்கைகள் மூலம் இரண்டும் மானசீகமாகக் கைகோத்து உல்லாசமாய் உலவத் தொடங்கின.

இப்படிப்பட்ட இனிமை மயமான அனுவபவங்களில்ஆழ்ந்து வாழ்வில் அதுவரை கண்டறியாஉணர்ச்சிகளைப் பெற்ற வல்லபன்,

புறப்படும் அந்த வேளையில் மனத்தில் பெரும் கல் கட்டித் தொங்குவதுபோல் ஒரு உணர்ச்சியைஅடைந்தான்.

துக்கம் பாறை போல் நெஞ்சில் அடைத்தது. உணர்ச்சிகள் அலைவீசிப் புரண்டன. உண்மையில் காலையிலிருந்து பல நாழிகைகளாய் என்ன செய்கிறோம், என்ன பேசுகிறோம் என்பதுகூடச் சரியாகத் தெரியவில்லை.

இளவரசி மதுரா புன்னகையுடன் விடை கொடுத்தாள்.

''வருகிறேன், இளவரசி!'' என்றான் அவன். அவனது விழி நீரில் ஆழ்ந்திருந்தது. இளவரசிக்குப் பேச நா எழவில்லை. தலையை மட்டும் அசைத்தாள்.

வாயிலில் குதிரைகள் கனைத்தன.

கண்ணில் உள்ள நீர் சிந்திவிடக்கூடாதே என்பதற்காக, வேகமாக நடந்து குதிரைமீது தொத்தி ஏறினான்.

கடைசி முறை மன்னரையும், மகளையும் பார்த்ததும், கண்ணீர் ததும்பி வர, அது மற்றவர்களுக்குத்தெரியக்கூடாதேஎன்பதற்காகக் குதிரையை உடனே தட்டி, வேகமாக விரட்டி, அந்த வேகத்தில், கண்ணிலிருந்து உருளும் கண்ணீரைத் தன் கன்னங்களிலேயே ஏந்திக் கொண்டான்.

—தொடரும்

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

ஊர்ப்புறத்தில் சிறிது தூரம் கூடப் போயிருக்க மாட்டார்கள். பின்புறத்தில் குளம்பொலிகள் கேட்டு இருவரும் திரும்பினார்கள்.

அங்கே குதிரை மீது இளவரசி மதுரா கையை ஆட்டிக்கொண்டு வருவதைப் பார்த்ததும் ஆச்சரியத்தில் மூழ்கினார்கள்.

"வல்லபா! கையைக் காட்டி அழைக்கிறாள்! போய் விசாரி!" என்று தத்தன் கூற,

வல்லபனும் விரைவாகத் திரும்பிச் சென்றான்.

சில கணங்களில் அவள் முன்னால் நின்றான்.

அவளைப் பார்த்ததுமே பௌர்ணமிக் கடல்போல் மனம் சீறி விளையாடியது. கண்களில் ஆர்வம் மழை போல் மூடியது.

"இளவரசி!" என்றான். மேலே பேசவில்லை.

இருவரது விழிகளும் ஒன்றை ஒன்று கவர்ந்து இழுப்பது போல் பல கணங்கள் இருந்த பிறகு,

மதுரா மெதுவாகத் தன் பிரமையினின்றும் கழன்று, "ஐயா!" என்றாள்.

"இளவரசி!" என்றான் அவன்.

இருவரும் குதிரையிலிருந்து இறங்கினார்கள். நிழலுக்காக அருகில் உள்ள தங்கு மண்டபத்தில் ஒதுங்கினார்கள்.

"ஐயா! தங்கள் பயணத்தை நிறுத்தியதற்குப் பொறுக்க வேண்டும். தாங்கள் புறப்படும் வரை எங்களுக்கு ஒரு குறை இருந்தது. புகழுக்கு ஏற்றவாறு தங்களுக்குப் பரிசில் அளிக்கவில்லையே என்று என் தந்தை வருந்திக் கொண்டிருந்தார்" என்றாள் மதுரா.

"ஏன் இளவரசி! எங்களுக்குத்தான் கொற்கை முத்துக்களைப் பரிசளித்திருக்கிறீரே!" என்றான் வல்லபன்.

"இல்லை, எங்கள் கீர்த்திக்கு இது போதாது! இதனால் என் தந்தை மனம் ஒடிந்து போய்விட்டார்" என்றாள் மதுரா..

"அவர் நிலைமையை என்னால் நன்றாக உணர்ந்து கொள்ள முடிகிறது, இளவரசி!" என்றான் வல்லபன்.

"நீங்கள் போன பின்தான் எனக்கு ஒரு யோசனை தோன்றியது. எங்கள் பரம்பரையில் வழிவழியாக வந்துள்ள ஆபரணங்களில் இந்த இரத்தினக் கத்தியும் ஒன்று. எங்கள் மன்னர்கள் பட்டம் சூட்டும் போதெல்லாம் இந்தக் குறுக்கத்தியையும் தரிப்பார்கள். இந்தப் பெருமை வாய்ந்த கத்தியைத் தங்களுக்கு அளிக்கலாம் என்று என் தந்தையிடம் கூறினேன். அவரும் உடன் அதை ஆமோதித்தார். நான் அதற்காகப் பறந்தோடி வந்தேன்" என்றாள் அவள்.

அப்படியே தனது இடையில் கட்டியிருந்த குறுக்கத்தியை அதன் உறையுடன் எடுத்து அவனிடம் கொடுத்தாள்.

வல்லபன் மிகுந்த பரவசத்துடனும் விநயத்துடனும் அதை வாங்கிக் கொண்டான். உறையிலிருந்து கத்தியை எடுத்தான். கத்தி முழுவதிலும் இரத்தினக் கற்களும் மரகதக் கற்களும் பதிக்கப்பட்டு அது ஒரு அலங்காரக் கத்தியாக இருந்தது.

"இளவரசி!" என்று நன்றிப் பெருக்காகக் கூறினான் அவன். "இந்த வெகுமதி என்னை மிகவும் கவருகிறது. தங்களுக்கு எவ்விதம் என் உணர்ச்சிகளைக் கூறுவதென்று தெரியவில்லை" என்று சொல்லி நிறுத்தினான்.

அவளை ஆதுரமாகப் பார்த்தான்.

அவள் கண்களிலும் ஒரு உணர்வின் ஒளி இந்திர நீலமாக ஒளிர்ந்தது.

இருவரும் பல கணங்கள் வரை மௌனமாக நின்றார்கள்.

அந்த மௌனமே அவர்கள் மனங்களில் வெளிவரத் துடித்துக் கொண்டிருக்கும், ஆனால் வெளியே வரமுடியாத, ஆயிரக்கணக்கான வார்த்தைகளைப் பூடகமாக ஒருவர்க்கொருவர் சுட்டிக் காட்டுவது போலிருந்தது.

முடிவில் அவன், இளவரசி! மிகவும் தன்யன் ஆனேன். தங்கள் தந்தைக்கு என் நமஸ்காரங்களைத் தெரிவியுங்கள்" என்றான்.

தலையை அசைத்தாள் அவள்.

தயக்கத்துடன், "வருகிறேன்" என்றான் அவன்.

முறுவலித்தாள் அவள்.

குதிரையின் மீது ஏறினான் அவன்.

புரவியை ஒரு வட்டமாகத் திருப்பி மீண்டும் அவளைப் பார்த்தபோது அவன் கண்கள் அவள் விழிகளில் லயித்து நின்றன. அவளது இமை சிதறாத பார்வையில் வல்லபனின் மனம் மெள்ளத் தோய்ந்து எழுந்தது.

"வருகிறேன்" என்றான் அவன்.

குதிரையை இழுத்து விட்டான். அது பறந்தது.

சிறிது நேரத்திலேயே தத்தனின் இருப்பிடத்திற்கு போய்ச் சேர்ந்தான். தத்தன் குதிரையை மரத்தில் கட்டி வைத்து நிழலில் படுத்திருந்தான். அவனைப் பார்த்ததும் ஆச்சரியத்துடன் வல்லபன், "தத்தா இதென்ன? நேரமாக்கி விட்டேனா?" என்றான்.

தத்தன் சாவகாசமாக எழுந்து குதிரையை அவிழ்த்தான்.

''உனக்கு இதைவிடக் கூட அவகாசம் கொடுக்கச் சித்தமாக இருந்தேன். இதில் நான் பழக்கப்பட்டவன்தானே!'' என்று அர்த்த புஷ்டியுடன் சொன்னான்.

வல்லபனுக்கு அவன் சொன்னது மிகவும் பிடித்திருந்தது.

அன்று மாலை மறையும் தருவாயில் அவர்கள் ஒரு சத்திரத்தை அணுகினர்கள்.

சத்திரம் ஒரு அழகான சூழலில் இருந்தது. அதன் மேற்கே நீல வண்ணமாய் மேலே மலைகள் ஒன்றின் மேல் ஒன்ருக அடுக்கடுக்காகத் தென்பட்டன.

மலையின் பச்சை நிறக் காடுகளை அணைத்துக் கொண்டு வந்த தென்மேல் காற்று மனேரம்யமாய் அவர்கள் மீது வழிந்தோடியது.

இருவரும் குளித்து, சிரமப் பரிகாரம் செய்து, சத்திரத்தின் அறுசுவை உணவை உண்டு, வெளியே வந்து அமர்ந்தபோது,

எங்கேயோ ஒரே ஒரு அன்றிலின் குரல் மிலு மிலுவென்று சிலிர்த்து வந்தது.

அதன் சோகமான தொனி அங்கங்கே மரங்களிலும், கிளைகளிலும் முட்டிக் கொண்டு தொலைவில் எங்கேயோ போய் ரீங்கரித்து அமிழ்ந்தது.

அந்த அன்றிலின் வேதனைத் துடிப்புகள் அங்கே, அந்தப் பகுதியிலேயே நின்று விட்டன போல், தோன்றியது.

வல்லபனுக்கு ஏனே தெரியவில்லை. திடீரென்று கண்களில் நீர் வழிந்தது. மனத்தில் இனமில்லா சோகம் நிரம்பிக் கொண்டது.

'நான் ஏன் சோகம் கொள்கிறேன்?' என்று நினைத்தான் அவன்.

'இது தெரியாதா? நீ விரகத்தில் இருக்கிருய்!' என்றது மனம். 'அதனுல்தான் நீ இப்போது சரியாக உணவு அருந்தவில்லை! தத்தனிடம் முழு மனதுடனும் பேசவில்லை.'

அவன் மனம் கூறியது அவனுக்குச் சரி என்று தோன்றியது.

ஊமை நிலவு வெள்ளியாய் புன்னை மர கிளைகளில் மினுமினுத்தபோது,

அவன், தான் கடந்து வந்த பாதையில் கிழக்கு முகமாக நின்று கொண்டான்.

இந்தப் பாதை நீண்டு நெளிந்து குலசேகரன்புதூர் வரை போகும் என்றும்,

அந்த ஊரின் வீதிக்குள் சென்று மதுராவின் மாளிகை வாயிற்படியில் தொட்டு தொங்கியவாறு நிற்கும் என்றும் அவன் கற்பனை ஓடியது.

''ஆகா! வெறும் மண்ணுல் ஆகிய இந்தப் பாதைக்கு என்ன அதிர்ஷ்டம்! மதுராவின் மெல்லிய பூப்பஞ்சுக் காலடிகள் இதன் மீது அடிக்கடி படுவதற்கு வாய்ப்புக் கிடைக்குமே!'' என்று நினைத்தான் அவன்.

அதை நினைத்த மாத்திரத்திலேயே பரவசமாகி அவன் கீழே குனிந்து அந்த மண் தரையை முத்தமிட்டான்.

பிறகு நிமிரும்போது யாராவது தன்னைக் கவனித்தார்களா என்று எண்ணினன்.

ஆழ்வார்களில் ஒருவர் 'படியாய்க் கிடப்பேனே!' என்று விரக மிகுதியால் பாடியதை நினைத்தான். பக்தியும் சரி, பிரேமையும் சரி, முதிர்ந்து போனல், இப்படித்தான்; மனிதனை உன்மத்தமாக்கி விடுகிறது.

இந்தப் புதுமையான அனுபவங்களின் தொடக்கத்தில் இருந்த வல்லபன் வெகுநேரம் அந்தப் பாதையிலேயே நின்று கண்ணீர் மல்கி, கசிந்து உருகிக் கொண்டிருந்தான்.

பொழுது போனதையோ, வெள்ளிய நிலா வானின் மீது ஏறியதையோ, அவன் உணரவே இல்லை.

அவனைப் பொறுத்த வரையில் அவன் இருந்தான். அந்தப் பாதை இருந்தது. மனத்தில் அவன் பற்றி இருந்தாள்! அவ்வளவுதான்!

மற்றவை எல்லாம் மறைந்து ஒழிந்து விட்டன!

இப்படி ஒன்றைப் பற்றியே நினைவு உடையவனுய், உள் நெகிழ்ந்து கண்ணீர் விடுபவனுய், இடம், நேரம் எல்லாம் இழந்தவனுய் நிற்கும் அவனை,

தத்தன் மெள்ளப் பிடித்து உலுக்கியபோது அவன் உடலே சிலிர்த்து விட்டது.

திடுக்கிட்டு நினைவுக்கு வந்தான்.

''வா, வல்லபா! நடுநிசியாகி விட்டது!'' என்ருன் தத்தன்.

அதைக் கேட்டும் வல்லபன் திடுக்கிட்டான்.

தத்தன் உடனே, ''வல்லபா! பிரேமை என்பது க்ஷயம் போல் ஒரு வியாதி! உன்னை உருக்கிக் கொன்று விடும். சிதை போல் அது ஒரு நெருப்பு! உன் உடலை தகித்து எரித்து விடும். நல்ல மனதைக் கலக்கி விடும். அறிவை எல்லாம் மழுக்கி விடும். வாழ்க்கையையே பாழடித்து விடும்.'' என்ருன்.

வல்லபன் திரும்பினன். அவன் கண்களில் பிரேமை பிரவகித்துக் கொண்டிருந்தது.

''தத்தா! நீ இவ்வளவு சொல்லினும் நான் பிரேமையையே விரும்புகிறேன். ஏனெனில் அதன் முடிவு நித்திகிறதோ இல்லையோ, அதன் வழியே நித்திக்கிறது. இந்த இனிதான அனுபவத்தை நான் எப்படி உதறி விட முடியும்?'' என்ருன்.

தத்தன் அவனைப் பிடித்து இழுத்துச் சென்ருன்.

# கழற்றுவாய் காலைவிட்டு



கண்ணுடி அறைக்குள்
கெளரவமாகக்
காட்சிக்கிருந்த என்னை அற்பம்
காசு கொடுத்து
கைக்கொண்டு
காலிலிட்டபடி
கன்னுபின்னுவென்று
கடும்வெயிலில்
கனத்த மழையிலும் நடக்கின்ருய்? சீ!
கழற்றடா
காலைவிட்டு.

கார்மேக வண்ணன் இராமபிரான்
காடாண்ட பொழுதெல்லாம்
அயோத்தி நாடாண்ட
வரலாறு எனக்குண்டு; என்னை...சீ
கழற்றடா
காலைவிட்டு.

கம்பன் கையாண்ட
காப்பியம் எனக்குமுண்டு.
காலிலிட்டு என்னை நீயும், சீ
கழற்றடா
காலைவிட்டு.

இல்லையெனில்
கடிப்பேன்
கால் புண்ணுன பின் தாளுகக்
கழற்றுவாய்
காலைவிட்டு.

நெல்லை. ஜ. முத்து

# தட் மேன் போல்ட்



ஒரு மில்லியன் டாலர்களை ஒரு கைப் பெட்டியில் வைத்து, ஹாங்காங்கிலிருந்து மெக்ஸிகோ நகரத்திற்கு லாஸ் ஏஞ்சல் வழியாக போல்ட் எடுத்துப் போகும் போது இப்பணத்தை அபகரிக்கப் பல சங்கடங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்த போதிலும், தன்னிடமுள்ள வீர விளையாட்டுக் கலைகளால் எல்லாவற்றையும் சமாளித்து வெற்றி வாகை சூடிப் பணத்தைக் காப்பாற்றிக் கொள்கிறான்.

'புட்-பால்' விளையாட்டில் அதிசமர்த்தரான பிரட் வில்லியாம்சன் போல்டாக ஆரம்ப முதல் இறுதி வரை விடாமல் வந்து கராத்தே கலையில்— குங் ஃபூ, ஜூடோ அகிடோ, ஜூ ஜுட்சு ஆகிய அத்தனை அம்சங்களையும் வெளிப்படுத்தியுள்ளார்.

ஹாங்காங், கெய்லூன், தேசிய சீனா ஆகிய இடங்களில் காட்சிகள் நேர்த்தியாக, கண்ணுக்குக் குளுமையாகப் படமாக்கப்பட்டுள்ளன. படப் பிடிப்பாளர்கள் அனைவரும் சீனர்கள். ஒலி, ஒளிப்பதிவு ஆஸ்திரேலியர்களுடையது. வில்லியாம்சனுடன் உலகப் புகழ் பளு தூக்கும் கராத்தே பயில்வான் மைக் ஸ்டோன், ஜப்பானிய மல்யுத்த பயில்வான் கென் கஸாமா, ஐரோப்பிய கராத்தே வல்லுநர் ஏமில் பார்காஸ், முந்நாளைய கலிபோர்னியோ மாகாணத்து ஜூடோ பயில்வான் டேவின் செள ஆகியோர் மோதுகின்றனர். இது தவிர இவருடன் பிரிட்டிஷ், ஜப்பானிய, சீன தேசத்து நடிகர்களும் நடித்துள்ளனர்.

படத்தில் நடிக்கத் துவங்கும் முன், ஆறு வார காலத்தில் கராத்தே கலையை முறையாகவும் விரைவாகவும் வில்லி கற்றது, ஒவ்வொரு வித்தியாசமான கராத்தே சண்டைக் காட்சியிலும் அவர் குறிக்கோளோடு சரியாகச் சண்டையிட்டது, கம்பு-மரத்துண்டு, கத்தி போன்ற உபகரணங்கள் சண்டைக் காட்சிகளில் பயன்படுத்தியது ஆகியவை படத்தின் புகழுக்குரிய அம்சங்கள்.

ரசிகர்களை முழு அளவில் திருப்திப்படுத்தும் அளவில் சண்டைக் காட்சிகள், வெடிக் காட்சிகள், கார் துரத்தல்கள், சங்கீதக் காட்சிகள் அனைத்தையும் மொத்தமாக வடித்துத் தந்து ஹென்ரியும் டேவிட்டும் இணைந்து இப்படத்தை உருவாக்கியுள்ளார்கள்.

-த. மு. ரா.

இரவு முழுதும் அவன் உறங்கவில்லை. அவன் கைகள் அந்த இரத்தினக் கத்தியை வருடிய வண்ணம் இருந்தன. இது அவள் கை பட்ட இடம், இது அவளது இடை பட்ட இடம் என்று அவன் மனம் புலம்பிக்கொண்டே இருந்தது.

நினைவுகள் மதுராவைப் பற்றியே நினைத்துப் பறந்தோடின.

காலையில் சீக்கிரமே குளித்து விட்டு, அவன் மூச்சிறைக்க, தலைக்கூந்தல் சிதறிக் கிடக்க, தத்தனின் முன் வந்து நின்றான்.

"தத்தா, நான் இப்போது ஒரு காரியம் செய்யப் போகிறேன். அதைக் கேட்டதும் நீ சிரிக்கக்கூடாது!" என்று கூறினான் நயந்து.

"வல்லபா! நீ எதைச் செய்தாலும் நான் சிரிக்க மாட்டேன்! எனக்குப் பிரேமையைப் பற்றி எல்லாம் தெரியும்." என்றான் தத்தன்.

"தத்தா எனக்கு மதுரா கடைசியாகத் தங்கு மண்டபத்தில் வந்து விடை கொடுத்தாள். அந்த மண்டபமே எனக்குப் புனிதமாகப் போய்விட்டது. அதை மீண்டும் தரிசித்து விட்டு வந்தால் ஒழிய என் மனம் வேதனையைத் தாங்காது. இங்கேயே அது உடைந்து இரண்டாகி விடும். ஆகவே அரைநாள் அவகாசம் கொடு! கடிதில் போய் வந்து விடுகிறேன்." என்றான்.

தத்தன் அவனை உற்றுப் பார்த்தான்.

"நல்லது, போய் வா!" என்றான்.

உடன் வல்லபன், "நீ என் இனிய நண்பன்" என்று தழுவி, ஒரே பாய்ச்சலில் குதிரைமீது தாவி ஏறினான்.

காற்றுதான் அப்படிப் பறக்குமா? அல்லது ஊழிக் கால மேகங்கள்தான் அவ்விதம் பாயுமா? அவன் கல்லையும், மண்ணையும் பார்க்காமல் பாய்ந்து சென்றான்.

இரு புறங்களிலும் மரங்கள் விருட்டென்று பின்னோக்கி ஓடின. பட்சி ஜாலங்கள் குதிரையின் வேகம் கண்டு மிரண்டு பறந்தன. குதிரையின் வாயிலிருந்து நுரை தரையெல்லாம் சிதறி ஓடியது.

பாய்ந்த பூமியில் தூள் பறக்க, ஒரே உன்மத்தமாய் வெறி பிடித்தவன் போல் குதிரையைச் செலுத்தினான் வல்லபன்.

அவன் மனத்தில் வேறு நினைவு ஏதும் இல்லை. கண்கள் ஒரே திக்கில் ஈட்டிபோல் பாய்ந்து சென்றன. கடக் கடக் என்ற ஓசைதான் காதுகளில் விழுந்தது. தறி கெட்டு, நிலை கெட்டு, கட்டுக்கடங்கா வேகத்தில் பாய்ந்து சென்றான் அவன்.

மூன்று நாழிகை நேரங்கள்தான். முந்திய நாள் பகல் முழுதும் செய்த பிரயாணத்தை இந்த மூன்றே நாழிகையில் முடித்து அந்த தங்கு மண்டபத்தை அடைந்தான்.

கீழே குதித்தான்.

குதிரையின் தலைக் கயிற்றைத் தூக்கி எறிந்தான்.

குதிரை நாக்கை நீட்டித் தரையில் ஒருமுறை புரண்டு எழுந்தது.

அதற்கு உலகமே இப்போதுதான் ஓடாமல் நின்றது போல் தோன்றியது.

உடல் முன்னும் பின்னும் மூச்சினால் தள்ளிக் கொண்டிருக்க, இழைத்த வண்ணம் அப்படியே பூமியில் சரிந்து கொண்டது.

வல்லபனின் உடலும் தள்ளாடியது. பூமியைப் பிடித்துக் கொண்டான். உடலின் வியர்வை வழிந்து குளமாகியிருந்தது. ஆடைகள் தெப்பலாகியிருந்தன. தலையிலெல்லாம் புழுதி அடித்துச் செம்பட்டையாகி இருந்தது. கண்கள் இன்னும் நிதானமாகவில்லை. எங்கும் காட்சிகள் ஓடுவது போன்றே பிரமை ஏற்பட்டது. இரண்டுமுறை தள்ளாடிவிழுந்து மண்டபத்தின் தூணைப் பிடித்துக் கொண்டான். உடம்பில் வேகம் இன்னும் அடங்கவில்லை. கடக் கடக் என்ற இரைச்சல் இன்னும்



இயேசுகிறிஸ்துவின் வாழ்க்கை வரலாற்றை 'கருணமாயிடு' என்ற பெயரில் தெலுங்கில் படமாகத் தயாரிக்கிறார்கள். தயாரிப்பாளர் விஜயசந்தர் இதில் இயேசுவாக நடிக்கிறார். இதை எல்லா இந்திய மொழிகளிலும், ஆங்கிலம், பிரெஞ்சு, ஸ்பானிஷ் போன்ற அயல் மொழிகளிலும் 'டப்' செய்து வெளியிடப் போகிறார்களாம்! தெலுங்கில் பிரபலமாக உள்ள பல நட்சத்திரங்கள் இதில் நடித்திருக்கிறார்கள்.

- எஸ்ஸார்

காதுகளில் விழுந்து கொண்டிருந்தது. தூணின் பிடியை விட்டால் எங்கே உடம்பு பறந்து விடுமோ என்று நினைத்து அதை இறுகப் பிடித்துக் கொண்டான்.

மூச்சு பெரும் ஓசையாய் இழைத்தது. கண்கள் மல்லாடின. தலையெல்லாம் கொதிப்பாய்க்கொதித்தது.

கால் நாழிகையில் மெள்ள மெள்ள ஒரு ஆசுவாசம் ஏற்பட்டது.

கண்கள் நிலைக்கு வந்தன. உடல் அவன் பிடிக்குள் வந்தது. வல்லபனே மெதுவாக வல்லபனாகிக் கொண்டிருந்தான்.

தான் தானேயான பின், கண்ணில் நீர் பெருகியது. மதுராவை அவன் நினைத்தது, உன்மத்தமாகியது; ஓடி வந்தது எல்லாவற்றையுமே நினைத்தான்.

சோகமும், தாபமும் பொங்கி வர, ''மதுரா!'' என்று வாய்விட்டுக் கூறினான்.

அவ்வளவுதான்!

''இதோ இருக்கிறேன் ஐயா!'' ஒருகுரல் கேட்டது.

அவன் திடுக்கிட்டான். பிரமையா? தன் மனக் குரலே தன்னை ஏமாற்றுகிறதா? மீண்டும் அழைத்துப் பார்க்க நினைத்தான். ''மதுரா!'' என்றான்.

''இதோ இருக்கிறேன், ஐயா!'' என்று குரல் கேட்டது.

திடுக்கிட்டான் அவன்.

கண்களைத் திருப்பினான். பார்வை இன்னும் கூடச் சரியாகவில்லை. அதன் பளபளப்புக்கிடையே ஒரு உருவெளி தெரிந்தது. மதுராதானா அவள்? அவன் உடல் நடுங்கியது. ''மதுரா!'' என்று உணர்ச்சியோடு அழைத்தான். அந்த உணர்ச்சியிலேயே மூர்ச்சித்துப் படியில் சாய்ந்து விட்டான்.

குளிர் காற்றை யாரோ வீசிக்கொண்டிருந்தார்கள். வல்லபன் மெள்ள மெள்ள நினைவுக்கு வந்து கொண்டிருந்தான். எங்கே இருக்கிறோம்? தங்கு மண்டபந்தான்! இது யார், பக்கத்தில்? மதுராவா?

திடுக்கிட்டு எழுந்தான்.

எல்லாம் சொப்பனம் இல்லை, நிஜம் என்றே தெரிந்தது. மதுரா அவனைக் குளிர்ந்த கண்களோடு பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் பார்வையில் இரக்கமும் சுரந்து கொண்டிருந்தது.

''மதுரா! நீங்கள் இங்கே எப்படி வந்தீர்கள்?'' என்று கேட்டான், நிமிர்ந்து கொண்டே.

கனிவாக அவள் நோக்கினாள்.

மெதுவாக, ''ஐயா! நீங்கள் எதற்கு வந்தீர்களோ அதற்காகத்தான் நானும் வந்தேன்.'' என்றாள் அவள்.

அந்த மொழி அவனது பொறியைக் கலக்கியது. மதுரா உண்மையைத்தான் சொல்கிறாளோ?

''நீங்கள் என்ன சொல்கிறீர்கள், மதுரா! உண்மையைத்தானா சொல்கிறீர்கள்?''

மெள்ள நிமிர்ந்தாள் அவள்.

''நீங்கள் நேற்று போனீர்கள்! இன்று ஏன் இங்கு வந்தீர்கள்? நீங்கள் சொல்லுங்கள்'' என்றாள் அவள்.

அவன் மறுமொழி சொல்ல இயலவில்லை. ''மதுரா! தயவு செய்து என்னைக் கேட்காதீர்கள். என்னால் உத்தரம் சொல்ல முடியாது. உண்மையில்லாத ஒன்றைத்தான் சொல்ல வேண்டியிருக்கும். நீங்கள் சொல்லுங்கள்! நான் எதற்கு வந்தேனோ அதற்காகத்தான் நீங்களும் வந்தீர்கள் என்றீர்களே! எதற்கு நீங்கள் வந்தீர்கள்?'' என்றான் அவன்.

அவள் முகத்தில் முறுவல் படர்ந்தது.

''ஐயா! ஹர்ஷர் எழுதிய நாகானந்தத்தில் நாயகி ஒரு பூங்காவிற்கு வருகிறாள். நாயகனும் அதே பூங்காவிற்கு வருகிறான். இருவரும் ஒருவருக் கொருவர் முன்

ளுல் பேசிக் கொண்டதில்லை. தீர்மானம் செய்து கொண்டதுமில்லை. அப்படியானுல் ஏன் தாமாகவே இருவரும் அங்கே வந்தார்கள்?'' என்ருள் அவள்.

அவன் அந்த நாடகத்தைப் படித்திருக்கிருன். அந்த நாயக, நாயகியர்கள் பிரேமை வசமாகி அங்கு வந்ததும் அவனுக்குத் தெரியும். அதையேதான் மதுரா கூறுகிருளா? அப்படியானுல் அவளுக்கும் அவன் மீது பிரேமை இருக்கிறதா?

''மதுரா!'' என்று உணர்ச்சியுடன் அழைததான்.

அவள் மறுமொழி கூறவில்லை. கண்கள் தயங்கி நின்றன. அவன் விரும்பியதை அவளது விழிகளே கூறுவது போலிருந்தது.

''மதுரா!'' என்ருன் அவன் மீண்டும் உணர்ச்சி வசப்பட்டு.

''கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுங்கள்!'' என்று கூறி எழுந்து வந்து, தன் முன் துகிலால் அவன் கண்களைத் துடைத்து விட்டாள் அவள்.

அவன் அவளைப் பார்க்க, இருவர் கண்களிலும் புன்னகை மிதந்தது.

அந்த இரு யௌவன இணைகளும், அடுத்த மூன்று நாழிகை நேரம் தங்கள் தங்கள் மனங்களை வெளிக் கொணர்ந்து பேசின. கட்டுண்ட இருபெருநதிகள் அணைகளை உடைத்துக்கொண்டு வந்தாற்போலப் பரஸ்பரம் ஒன்றை ஒன்று அன்பில் கலந்து கொண்டு ஆரவாரமாய்ப் பேசின.

பொழுது உச்சியைத் தாண்டியதும் வல்லபன் எழுந்தான். அவனுக்கு விடை பெறும் நேரம் வந்து விட்டது.

மதுரா தயங்கி நின்ருள். கண்களில் நீர் தளும்பி
து. ''சுவாமி!'' என்ருள் துக்கத்துடன். ''இனி என்று
ந்திக்கிறோமோ! அதற்குள் ஒன்று செய்வோம்'' என்
ள் தழைந்து கொண்டே.

''என்ன?'' என்ருன் அவன்.

''நாம காந்தருவ விவாகம் இக்கணமே இங்கேயே செய்து கொள்வோம்! இல்லாவிடில் என்னுல் வாழ முடியாது'' என்ருள் கண்ணீருடன் அவள்.

வல்லபனுக்கு மீண்டும் உணர்ச்சிகள் ஆர்ப்பரித்து எழுந்து அடங்கின. அவன் காதுகளில் ''விழியில் பிறழாதே!'' என்ற சொல் கேட்டது. அரங்கன் திருவரங்கத்திற்குப் போகும் வரை தனது திருமணத்தைப் பற்றியே சிந்தனை செய்ய மாட்டேன் என்று சொல்லிய வாக்குறுதியும் அவன் நினைவுக்கு வந்தது.

''மதுரா! நம் மனங்கள் கூடி விட்டது! மணம் ஆவதற்குச் சற்றுப் பொறு! நான் ஒரு வாக்குறுதியில் இருக்கிறேன். அரங்கன் திருவரங்கம் போகும் வரை என் சொந்த வாழ்க்கையை நினைக்கக் கூடாது என்று வாக்குறுதி அளித்திருக்கிறேன் சீக்கிரம் அரங்கன் திருவரங்கம் போய்ச் சேர்ந்து அது நிறைவேறி விட்டால், நம் மணமும் உடனே நடந்தேறும்'' என்ருன் அவன்.

அப்படிச் சொல்லும் போதே அவனுக்குக் கண்ணீர் பெருகி ஓடியது.

மதுரா அதனைப் பொருட் படுத்தினுளில்லை. மேலும் பொறுமலுடன் கெஞ்சியவாறு அவனிடம் பேசினுள்.

அவன் அவளைப் பலவிதங்களிலும் சமாதானம் செய்தான். தன் தாய்க்குக் கொடுத்த வாக்குறுதியை விஸ்தாரமாக எடுத்துக் கூறினுன். அதன் புனிதத்தையும் விளக்கிக் கூறினுன். முடிவில், ''மதுரா! என்றென்றும் எந்தக் கணத்திலும் உன்னை நினைத்துக் கொண்டே இருப்பேன். நம் மனங்கள் ஒன்று பட்டு விட்டன என்பதை உறுதியோடு நினை. மற்றபடி வாழ்வு நமக்குத் தானுகவே அமைந்துவிடும். அதற்காக நம் அரங்கனிடம் பிரார்த்தனை செய்து கொள்!'' என்ருன்.

இருவரும் ஒருவருக் கொருவர் தேறுதலும் தைரியமும் சொல்லிக் கொண்டு, ஒருவாறு மன ஆறுதல் அடைந்து தாபத்துடனும் தயக்கத்துடனும் விடை பெற்ருர்கள்.

வல்லபன் குதிரை ஏறி அதே மின்னல் பாய்ச்சலில் பாய்ந்து சென்ருன்.

—தொடரும்.




பத்து கோடைகளும் பத்து குளிர் காலங்களும் வந்து போகின்றன.

பத்து முறை ஆடிக் காற்றுகளும், பத்து முறை ஐப்பசி மழைகளும் அடித்துவிட்டுப் போகின்றன.

இயற்கையின் பருவ நியதிகள் பிட்டத்தட்ட ஒரே ஒழுக்க ரீதியாய் நடந்து வரும் காலவெளியில் பத்து ஆண்டுகள் மெள்ளமெள்ள ஓடிவிட்டிருக்கின்றன.

இந்த இடைவெளிக்குப் பிறகு அரங்கர் எங்கிருக்கிறார் என்று தேடுகிறேன்.

தென் நாடுகளை உற்றுப் பார்க்கும்போது, ஐந்து துர்க்கங்களும் அழகான ஒரு சிற்றூரும் சேர்ந்த ஒரு ரம்மியமான சூழ்நிலையில் அரங்கர் அதே யோக மயமான புன்னகையுடன் எழுந்தருளியிருப்பது தென்படுகிறது.

இந்த மலைகள் திருப்பதி மலைகள் அல்ல.

தொண்டை மண்டலத்தின் தென் எல்லையில் திருவண்ணாமலைக்குக் கிழக்கே உள்ள செஞ்சி மலைகள் தான் அவை.

அந்நாளில் அந்தப் பகுதிக்குக் கிருஷ்ணாபுரம் என்று பெயர்.

பின்னர் அங்கே குடிகொண்டிருந்த செஞ்சி அம்மனின் புகழை ஒட்டி அந்தப் பகுதிக்கு செஞ்சி என்ற பெயர் வந்து விட்டது.

அந்நாட்களில் செஞ்சி என்பது, விஷ்ணு செஞ்சி என்றும் சிவ செஞ்சி என்றும் இரு பகுதிகளாக இருந்தது. இந்த இரண்டு ஊர்களையும், மலைகளையும், வயல்களையும் வளைத்துக் கொண்டு பெரிய கோட்டை ஒன்று இருந்தது. (தற்போதுள்ள கோட்டைகள் பிற்காலத்தில் கட்டப்பட்டவை).

விஷ்ணு செஞ்சி என்ற பகுதியில்தான் புகழ் பெற்ற சிங்கவரம் கோயில் இருந்தது. சிறிய மலை மேல் உள்ள பாறையைக் குடைந்து ஏற்படுத்திய கற்றளி இது! பல்லவர்கள் செய்த வேலைப்பாடு! கருவறையில் உள்ள மூலவரான அரங்கநாத உருவம் அங்குள்ள பாறையிலேயே செதுக்கப்பட்டது. திருவரங்கத்தில் உள்ள மூலவரான அரங்கநாதனை விட இவர் உருவத்தில் பெரியவர்.

இந்தச் சிங்கவரம் அரங்கநாதர் கோவிலில்தான் திருவரங்கத்து அரங்கன் [உற்சவ விக்கிரகம்] தற்போது எழுந்தருளியிருக்கிறார்.

[தற்போதுள்ள செஞ்சியிலிருந்து சிங்கவரம் இரண்டரை மலை தொலைவில் இருக்கிறது].

சிங்கவரக் கோவிலுக்கு திருவரங்கர் எழுந்தருளிய விதம் எப்படி?

சர்வ சைனியாதிபதியான கோபணுவுக்கு அரங்கன் மீது ஏற்பட்டிருந்த ஆரூ பக்திதான் அதற்குக் காரணம்.

சம்புவராயரைத் தோற்கடித்த பிறகு தொண்டை மண்டலத்தை விஜயநகர ராஜ்யமுடன் கம்பணர் சேர்த்துக் கொண்டு விட்டார்.

அதைத் தொடர்ந்து தமது தலைநகரான முள்வாய் நகரத்தை விட்டு விட்டு காஞ்சிபுரத்தில் அவர் குடி புகுந்து விட்டார்.

தமது சைனியாதிபதி கோபணாவைத் தமது புதிய நாட்டின் தெற்கு எல்லைக்கு அனுப்பி வைத்தார்.

தெற்கு எல்லையில் கோபணா செஞ்சியைத் தேர்ந்தெடுத்து அதில் தமது ராஜ்ய பரிபாலனத்தைச் செவ்வனே நடத்தி வந்தார்.

திருவரங்கத்து அரங்கரை நேரில் பார்க்கா விட்டாலும் அவரது பிம்பம்போல் உள்ள சிங்கவரத்து அரங்கரையாவது பார்த்து வருகிறோம் என்று திருப்தி அவரிடம் இருந்தது.

ஆனால் செஞ்சியில் இருந்தாலும் அவர் மனம் என்னவோ அடிக்கடி திருப்பதி மலை மேலே வட்டமிட்டுக் கொண்டிருந்தது.

அவரது நினைவுகள் எல்லாம் திருவரங்கத்து அரங்கனின் சுழல்களின் மீதே லயித்திருந்தன.

புதிய ராஜ்யத்தை ஏற்றுக் கொண்ட பிறகு அவர் மும்மாதங்களுக்கு ஒரு முறை திருப்பதிக்குச் சென்று அரங்கனைத் தரிசித்து வந்து கொண்டிருந்தார்.

அரங்கரைப் பிரிந்திருக்கும் மூன்று மாத காலம் அவருக்கு ஒரு ஊழிபோல் நீண்டிருப்பதாகத் தோன்றியது.

அதனால்ஏற்பட்ட பக்தி பூர்வமான விரகம் அவரைத் தகித்து எரிக்க ஆரம்பித்தது.

''இனியும் பொறுக்ககில்லேன்'' என்றொரு நிலை வந்தபோது கோபணா அரங்கரை வேங்கட மலையிலிருந்து சிங்கவரத்திற்குக் கொணர விருப்பப்பட்டார்.

சீக்கிரமே காரியத்தில் இறங்கி, திருவரங்கத்து அரங்கரை சகல மரியாதைகளுடனும் செஞ்சியைச் சேர்ந்த சிங்கவரத்திற்கு அழைத்து வந்தார்.

அங்கே ஏற்கெனவே கோவில் கொண்டிருக்கும் அரங்கநாதர் சன்னிதியில் திருவரங்கத்து அரங்கனையும் எழுந்தருளச் செய்தார்.

இரு அரங்க உற்சவ விக்கிரகங்களும் ஒருசேரச் சாதிக்கும் சேவை அவருக்குக் கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

தினமும்மலைப்படிகளில் ஏறித் தம் இஷ்ட தெய்வமான திருவரங்கத்து அரங்கரைச் சேவிப்பதில் அவர் பக்திப் பரவசத்தைப் பெரிதும் அடைந்து வந்தார்.

இப்படி இருக்கும் நாளையிலே,
ஒரு வைகாசி மாத நிலா நாளிலே,

கோவிலிலே விசேஷ பூஜைகளைக் கண் குளிரக் கண்டு விட்டு கோபணு வெளியே திரும்பி வரும்போது,

வாயில் நிலைக்கட்டில் பூரண யௌவனனான ஒரு மனிதனும்,மூச்சு இழைத்துக் கொண்டிருக்கும் ஒரு மூதாட்டியும் நிற்பதைக் கண்டார்.

அந்த யௌவன மனிதன் கோபணுவைக் கண்டதும், "சுவாமி!" என்று சொல்லிக் கீழே விழுந்து அவரை நமஸ்கரித்தான்.

மூதாட்டியும் தன் இரு கைகளைக் கூப்பி அஞ்சலி செய்தவாறு நின்றாள்.

கோபணு அந்த மனிதனைப் பார்த்து, "போதும் வல்லபா! எழுந்திரு!" என்றார்.

வல்லபன் எழுந்திருந்து நின்றான்.

"சுவாமி! இது என் தாயார்! ஏற்கெனவே இரு முறை பார்த்திருக்கிறீர்கள்! தங்களை அவசியம் காண வேண்டும் என்று சத்தியமங்கலத்திலிருந்து வந்துள்ளாள்!" என்றான்.

கோபணு அந்த மூதாட்டி வாசந்திகாவைப் பார்க்க, அவளும் உடனே, "சுவாமி! சுவாமி! என்று நீங்கள் படை எடுக்கப் போகிறீர்கள்? என்று என் அரங்கனைத் திருவரங்கம் அழைத்துப் போகப் போகிறீர்கள்? என்று என் ஆசைகள் எல்லாம் நிறைவேறப் போகின்றன?" என்று பொருமலோடு கூறி அடிப்படியே அழுகையுடன் கீழே சரிந்து விட்டாள்.

கோபணுவும் வல்லபனும் அவளைத்தூக்கி எடுத்து, கோவில் முகப்புப்படி மீது அமர வைத்தார்கள்.

அவர் கண்களில் நீர் மளமளவென்று சுரந்து கொண்டிருந்தது.

"அம்மா வாசந்திகா! சற்றுப்பொறுங்கள் அம்மா!" என்றார் அவர் தழதழத்த குரலில்.

"சுவாமி எத்தனை நாள் பொறுப்பது? பத்து ஆண்டுகள் பொறுத்தாகி விட்டது. சம்புவராயரை ஜெயித்ததும் நீங்கள் உடனே மதுரை மீது படை எடுப்பீர்களென நினைத்தேன். நீங்கள் செய்யவே இல்லை. இதோ, அதோ என்று சொல்லிப் பத்து ஆண்டுகள் ஓடிவிட்டனவே! எம் அரங்கர் எத்தனை நாள்தான் இனியும் அன்னியர் கோவிலில் இருந்து வரவேண்டும்?" என்று பொருமிக் கொண்டு வெடித்தாள் அவள்.



திருவரங்கன் இதுவரை போயுள்ள வழி.

கோபணு சில கணங்கள் வரை ஸ்தம்பித்து விட்டார்! பிறகு மெதுவாக, "அம்மா!" என்று தொடங்கினார். "நீ சொல்வது முற்றிலும் உண்மை, அம்மா! சம்புவராயரை நாங்கள் ஜெயித்ததும் நேரே தெற்கே தமிழ் தேசத்திற்குள் புகுந்து மதுரையைத் தாக்கிப் பிடித்துவிடுவோம் என்று நினைத்தோம். ஆனால் அது முடியாமல் போய்விட்டதம்மா!" என்றார் அவர்.

"ஏன், சுவாமி?" என்றாள் அவள்.

"வடக்கே, விஜயநகரத்திற்கு வடக்கே, பாமனிக்காரர்கள் படை எடுத்து வந்துவிட்டார்களம்மா."

'யார் இந்த பாமினிக்காரர்கள்?"

"உனக்குத் தெரியாதா? நம் விஜயநகரத்தின் வட எல்லையில் இருக்கும் நாடுதான் இந்த பாமினியரின் ராஜ்யம். இங்குள்ள துருக்கிய வம்சத்தினர் நம் விஜயநகரத்திற்கு அடிக்கடி தொல்லைகள் தந்து வருகிறார்கள். எனவே, நமது சேனைகள் எல்லாவற்றையும் அந்த எல்லைக்கு உடனே அனுப்ப வேண்டி வந்தது. தெற்கே நம்முடன் வந்த சேனையையும் கூட அனுப்ப வேண்டி வந்தது. நான் இதை எதிர்பார்க்கவே இல்லை" என்றார் கோபணு.

"ஏன் சுவாமி, வட எல்லைக்கு எல்லாச் சேனைகளையும் அனுப்பினால்தான் ஆயிற்றா?" என்று கேட்டாள் வாசந்திகா.

"நிச்சயமாக அம்மா! பாமனிப் படைகள் பெரிதானது. மிகக் கொடூரமானது. அதற்கு நேராக நம் படைகள் அனைத்தையும் அனுப்பினால்தான் நம் வட எல்லையைக் காப்பாற்ற முடியும்! தெற்கே படைகளை நிறுத்தி வைத்திருந்தால் வட எல்லையில் பாமனிக்காரர்களை முறியடிப்பது மிகவும் கடினம். இதனால்தான் சம்புவராயரை வென்ற கையோடே நம் படைகள் அனைத்தையும் வட எல்லைக்கு அனுப்ப வேண்டி வந்து விட்டது. இதற்கு மிகவும் நான் வருந்துகிறேன்" என்றார் கோபணு.

"சரி, சுவாமி! விளையாட்டுப் போல் பத்து ஆண்டுகள் ஓடிவிட்டனவே! இன்னமுமா வடக்கிலிருந்த படைகளை இங்கே கொண்டுவர முடியவில்லை?" என்று கேட்டாள் வாசந்திகா.

கோபணுவின் முகம் வேதனையில் தோய்ந்தது.

"இதுவும் விதிதான் அம்மா! வடக்கே நமக்கும் பாமனிக்கும் இடையறாது பல சண்டைகள் நடந்துவிட்டன. இப்பவும் நடக்கின்றன. பத்து ஆண்டுகள் ஓடியும் பூரண சமாதானம் ஏற்படவே இல்லை. இதனால் நமது மாமண்டலேசுவரர் புக்க மகராராஜா தமது கவனம் முழுவதையும் வடக்கேயே வைத்துள்ளார். தெற்கே அவரால் ஏதும் செய்ய முடியவில்லை. செய்ய முடியாது என்றும் எனக்குத் தெரியும்" என்றார் கோபணு.

"செய்ய முடியாதா? சுவாமி? தாங்கள் என்ன சொல்கிறீர்கள்! செய்ய முடியாதா? அப்படியானால் எம் அரங்கரின் கதி இப்படியே இருந்து விடுமா?" என்று பாதிப் புலம்பலும் பாதிக் கேள்வியுமாகக் கூறிவிட்டு மூர்ச்சை ஆனாள் அவள்.

வல்லபன் உள்ளே ஓடோடிப் போய் நீர் கொணர்ந்தான். கோபணு அவளுக்கு விசிறி விட்டார்.

வாசந்திகாவிற்கு வெகுநேரம் வரை நினைவு வரவில்லை. வல்லபன் அப்போது கோபணுவைப் பார்த்து, "சுவாமி! தாங்கள் மாளிகைக்குச் செல்லுங்கள்! நான் இவர்களைக்கவனித்துக் கொள்கிறேன்" என்று சொல்ல,

"வல்லபா நான் போய் வைத்தியரை அனுப்புகிறேன்" என்று கூறி விட்டு கோபணு புறப்பட்டார்.

தம் மாளிகைக்கு வந்து, வைத்தியரையும் அனுப்பி வைத்துவிட்டு, மனச் சஞ்சலத்துடன் அவர் மாடத்து மேடையில் அமர்ந்தார்.




உள்ளே வேதனை நெருடியது! "எத்தனை ஆண்டுகள்! பத்து ஆண்டுகள்! எவ்வளவு துரிதமாக ஓடிவிட்டன. தமிழ்த் தேசம் துருக்கியருக்கு அடிமையாகிப் போனமுப்பத்துமூன்றுஆண்டுகளையும் இந்தப் பத்துடன் சேர்த்தால், மொத்தம் நாற்பத்து மூன்று ஆண்டுகள் ஆகி விட்டனவே! இன்னும் இந்தத் தேசத்தின் அல்லல் தீரவில்லையே! இன்று விடியும், நாளை விடியும் என்று நானே நாட்களைக் கடத்தி விட்டேனே! உண்மையில் இது தவறுதானே! வடக்கே பயம் இருக்கிறது. கிழக்கே பயம் இருக்கிறது என்று சொன்னால் பாமரமக்கள்என்ன புரிந்து கொள்ளப் போகிறார்கள்? நாம் ஏதோ காரணம் காட்டி வாளாவிருக்கிறோம் என்றுதானே நினைப்பார்கள். நாம் காரியத்தில் இறங்க வேறு வழியே கிடையாதா? மதுரையை மீட்பதற்கு மார்க்கமே கிடையாதா?" என்று வேகமாகச் சிந்தித்தார். வெகு நேரம் இந்தச் சிந்தனை அவரை அலைக்கழித்தது.

பிறகு அவரது மனைவியார் உணவுக்காக அழைக்க வந்ததையும். பொருட்படுத்தாது அவர் அவசரமாக வெளியே சென்றார்.

அப்போது அர்த்த ஜாமம் நெருங்கிக் கொண்டிருந்த நேரம்.

விறுவிறுவென நடந்து வீதிகளைக் கடந்தார். நேராகக் கோவில் அர்ச்சகரின் வீட்டுக்குச் சென்று கதவைத் தட்டினார்.

அர்ச்சகர் எழுந்து வெளியே வந்து கோபணாவைக் கண்டு பதறிப்போய், "தாங்களா? தாங்களா?" என்று சொல்லி நாத் தடுமாற,

"அர்ச்சக ஸ்வாமிகளே, அடியேனுக்கு ஒரு தயவு வேண்டும்!" என்று சொன்னார்.

"பிரபோ! தாங்களா என்னிடம் தயவு கேட்பது? தங்கள் கட்டளைக்கு அல்லவா காத்திருக்கிறேன்" என்றார் அர்ச்சகர்.

"தாங்கள் இப்போது அடியேனுடன் வந்து கோவிலைத் திறக்க வேண்டும்" என்றார் கோபணா.

"சித்தம் பிரபோ!" என்றார் அர்ச்சகர்.

அவர் திறவுகோலை எடுத்துவர, இருவரும் அந்த இரவில் நிச்சிந்தையான நேரத்தில் மலைப்படிகள் மீது ஏறினார்கள்.

மேலே போய், கதவுகளைத் திறந்ததும் கோபணா பிரமை பிடித்தவர் போல ஒவ்வொரு அடியாக எடுத்து வைத்து அரங்கனை நோக்கிச் சென்றார்.

பத்து அடிகள் சென்றிருக்க மாட்டார். காலில் ஜில்லென்று ஏதோ பட்டது. ஏதோ திரவமாக இருக்கிறதே என்று கைகளில் தொட்டுத் தூங்கா விளக்கு வெளிச்சத்தில் பார்த்தபோது அது இரத்தமாக இருந்தது.

''ஏது இரத்தம்?'' என்று திடுக்கிட்டுக் கேட்டார் அவர்.

''இதுவா! அந்தப் பிள்ளையாண்டானும், அவனது தாயாரும் இங்கேதான் அமர்ந்திருந்தார்கள். இரத்தத்தைத் தாயார் வாந்தி எடுத்திருப்பார்கள்!'' என்றார் அர்ச்சகர்.




கோபணா மீண்டும் திடுக்கிட்டார்.

''ஆபத்தாயிற்றே!'' என்று சொல்லி அர்ச்சகரைப் பார்த்து, ''தாங்கள் சற்று இருங்கள்! இதோ வந்துவிடுகிறேன்'' என்று கூறி, படிகளில் விரைவாக இறங்கிக் கீழே சென்றார்.

விஷ்ணு செஞ்சியில் மொத்தம் மூன்று சத்திரங்களும் இரண்டு மடங்களும் இருந்தன. இந்த ஐந்திலும் சென்று வல்லபனையும் அவன் தாயாரையும் அவர் தேடினார். கடைசி மடத்திலிருந்து செய்தி கிடைத்தது. வல்லபனின்தாயாருக்கு நினைவு வந்து விட்டது என்றும், அவர் உடனே காஞ்சிபுரம் போக விரும்பினார் என்றும், இந்த உடல் நிலையில் போகக் கூடாது என்று வல்லபனும் இதரர்களும் எவ்வளவோ எடுத்துச் சொல்லியும் அதைப் பொருட்படுத்தாமல், போவதிலேயே குறியாக இருந்தாள் என்றும் மடத்துக்காரியம் கூறினார். ''இந்த அம்மாள் ஒரு வெறியில் இருந்தாள். யார் தடுத்தாலும் அவர்களை உதறிவிட்டுப் போய் விடுவாள் போலிருந்தது'' என்று சொல்லி முடித்தார் அவர்.

கோபணா மனம் வெதும்பினார். வேதனையுடன் கோவிலை நோக்கித் திரும்பினார்.

''எதற்காக அந்த அம்மாளுக்கு இப்படி ஒரு ஆவேசம் வந்திருக்கும்? அரங்கன் கதியை நினைத்துத்தானே வந்திருக்கும்? என்ன விசித்திரமான பக்தை இவள்?'' என்று நினைத்துக் கொண்டே மலையருகே வந்து படிகளில் ஏறிக் கோவிலை மீண்டும் அடைந்தார்.

அர்ச்சகர் கோபணாவைக் கண்டதும் எழுந்திருந்தார்.

''அர்ச்சக சுவாமி! இந்தப் பெண்மணி நான் போன பின் மூர்ச்சை தெளிந்தாளோ? தெளிந்த பின் என்ன செய்தாள்?'' என்று கேட்டார்.

அதற்கு அர்ச்சகர், ''பிரபோ! அந்த அம்மாள் மூர்ச்சை தெளிந்து எழுந்ததும், அவளது குமாரன், அவளை சன்னிதிக்கு அழைத்துப் போக விரும்பினான். அவள் அதை விரும்பவில்லை. கையை உதறினாள். அவளுக்குப் பைத்தியம் பிடித்து விட்டதோ என்று தெரியவில்லை. இங்கிருந்தே சன்னிதியைப் பார்த்துக் கத்தினாள்! ''ஏ ரங்கா! நீ இயக்கும் மனிதருக்குத்தான் சக்தி இல்லை என்றால் உனக்குமா இல்லை! கேவலம் உன் திருவை* நீ மீட்டுக் கொள்ளவில்லையே! உனக்கு வெட்கமில்லை? உன்னை நான் பார்க்கப் போவதில்லை. பார்த்தால் என்னால் தாங்க முடியாது. இருதயம் பிளந்து விழுந்து விடுவேன். இதோ போகிறேன்! நான் ஒரு பெண்! உன்னை நான் இங்கிருந்து நகர்த்துகிறேனா, இல்லையா, பார்!'' என்று சூளுரைத்தாள். பிறகு அவள் அரங்கனைப் பாராமலேயே போய் விட்டாள்!'' என்றார்.

கோபணாவுக்கு இருதயத்தில் யாரோ அடித்தது போலிருந்தது.

அவர் மனத்தில் அதுவரை அடக்கி வைத்திருந்த உணர்ச்சிகள் எல்லாம் திரண்டு வருவது போலிருந்தது. திடீரென்று தூணில் தம் தலையை மோதிக் கொண்டார்.

-தொடரும்

* திருவரங்கம் என்னும் திரு

## அரட்டை

''நீ திருமணம் செய்யும் பெண் எப்படி இருக்க வேண்டும்?''

''அடுக்களையில் கஞ்சத்தனமாக நாலு பேர் மத்தியில் நடமாடும் பணக்காரியாக, படுக்கையறையில் தாசி போல இருக்க வேண்டும்.''

''பேஷ்! திருமணம் நடந்ததே, எப்படி இருக்கிறாள் மனைவி?''

''சமையல் அறையில் பணக்காரியாக இருக்கிறாள்; படுக்கை அறையில் கஞ்சத்தனமாக இருக்கிறாள். நாலு பேர் மத்தியில் தாசியைப் போல பழகுகிறாள்!''

சொர்க்கத்தின் வாசலில் பெண்ணொருத்தி வந்து நின்றாள்.

''யார் நீ?''

''சொர்க்கத்திற்குள் போக வேண்டும்.''

''சோதனைகள் இங்கு நடத்துவார்கள். பிறகே போக முடியும்.''

சொர்க்கத்தில் பெண்ணொருத்தி வந்து சோதனை நடத்தினாள்.

''கணவனைத் தவிர்த்து, ஒரே ஓர் ஆடவன் ருசித்த கனி இவள்.''

''பரவாயில்லை. மன்னித்து விடலாம்; உன் பெயர் என்ன?''

''அகலிகை'' என்றாள் வந்தவள்.

''என் கட்சிக்காரர் சோடா புட்டியை எடுத்துக் கொண்டு உம்மை அடிக்க வந்தார். அடித்தார். உமது கையில் ஒன்றுமில்லையா?''

''இருந்தது, அவரது அழகு மனைவி! சண்டை போடும் தைரியம் அவளுக்குப் போதாது'' என்றான் அகப்பட்டுக் கொண்ட நபர்.

-அய்யாவு



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

**கோ**பணா கல்தூண் மீது மோதியதைப் பார்த்ததும் அர்ச்சகர் பதறிப்போய் அவரைப் பிடித்து இழுத்து, ''ப்ரபோ! அபசாரம்! அபசாரம்! இப்படிச் செய்யலாமோ? இது அடுக்குமோ?'' என்று நடுக்கமுடன் கூற,

கோபணா ஆசுவாசமுடன் நிமிர்ந்து,

''அர்ச்சக சுவாமி! இது ஒரு தண்டனை! தனக்குத் தானே கொடுத்துக் கொள்ளும் தண்டனை! அவ்வளவு தான்.'' என்று கூறினார்.

''பிரபோ! தாங்கள் என்ன தவறு செய்தீர்கள், தங்களுக்குத் தாங்களே தண்டனை கொடுப்பதற்கு?'' என்று அர்ச்சகர் கேட்க,

''சுவாமி! அதைச் சொல்கிறேன். கேளுங்கள்! அரங்கனை அழைத்துப் போய் திருவரங்கத்தில் சேர்த்து விடுவதாகச் சபதம் எடுத்தேன்; இன்றல்ல நேற்றல்ல! பத்து வருடங்களுக்கு முன்பு! அதன் முதல்படியாக சம்புவராய ராஜ்யத்தின் மீது படையெடுத்து அதை நம் ராஜ்யத்துடன் இணைத்துக் கொண்டோம். அவ்வளவு தான்! அதற்குப் பின் எதுவுமே நிகழவில்லை! எதுவும் நிகழவில்லை'' என்று குலுங்கினார் கோபணா.

அர்ச்சகர் கலவரத்துடன் நின்றார்.

''பிரபோ! இன்னும் நேரம் வரவில்லை. அப்படித் தான் நாம் எடுத்துக் கொள்ள வேண்டியது'' என்றார் அவர்.

''நேரமா? அது எப்படி வரும்? நாமாக உண்டாக்கிக் கொண்டால்தானே அது வரும்! அதற்கு நாம் முயற்சி எடுக்க வேண்டாமா? நான் என்னசெய்தேன்? செஞ்சிக்கு வந்தேன். இது நமது தெற்கு எல்லை! இங்கிருந்து கொண்டு சுல்தானின் ராஜ்யத்தைப் பார்த்துக் கொண்டே இருந்தேனே ஒழிய ஏதும் செய்ய வில்லையே! அப்படிச் செய்யவும் தோன்றவில்லையே! என் வீரத்திலும் பலத்திலும் நம்பிக்கை வைத்து வெளி உதவி மீது சாராமல் இருந்திருந்தால் ஒரு வேளை என் சபதத்தை முடித்திருப்பேனோ என்னவோ! அதை இப்போதுதான் உணர்கிறேன்'' என்றார் கோபணா.

பிறகு அவர் சரேலென்று எழுந்து, ''அர்ச்சக சுவாமி! இரண்டு பூப் பந்து கட்டிக் கொடுங்கள், ஒன்றில் துளசி இலையும் மற்றொன்றில் அரளி இலையும் வைத்துக் கொடுங்கள். நான் திருவுளக் குறிப்புப் போட்டுப் பார்க்கப் போகிறேன்'' என்றார்.

அர்ச்சகர் பந்துகளைச் சித்தம் செய்ய, இருவரும் சன்னிதி முன்னால் சென்று பிரார்த்தனை செய்து பந்துகளைக் குலுக்கிப் போட்டார்கள்.

அவற்றில் ஒன்றை கோபணா பக்தி சிரத்தையோடு எடுத்துப் பிரித்துப் பார்க்க, உள்ளே துளசி இலை இருந்தது.

உடன் அவர் ஆனந்தம் எய்தினவராய்ப் பரவசத்துடன் எழுந்து, ''அர்ச்சக சுவாமி! நான் நினைத்ததற்கு அரங்கன் ஒப்புதல் கொடுத்து விட்டார். சொந்த வீரத்திலும் சொந்த முயற்சியிலும் இறங்கலாம் என்று சாதித்து விட்டார்'' என்று கூறி, கீழே விழுந்து சாஷ்டாங்கமாக அரங்கனை வணங்கிவிட்டுப் பரபரவென்று கோவிலை விட்டுச் சென்றார்.

மறுநாள் காலையில் நல்ல வேளையில் அவர் காஞ்சிபுரத்தை நோக்கிப் புறப்பட்டார்.

**பி**ரசித்தி பெற்ற காஞ்சிபுரம் நகரம் பழையபடி தன் மகோன்னத வாழ்க்கையை ஆரம்பித்திருந்தது.

பலமுறை பல மன்னர்களின் கை மாறி வந்த அந்தப் புண்ணியத் தலம் இதுவரை தனது கீர்த்தியில் எவ்விதக் குறைவும் பெறாமல் இருந்து வந்தது.

ஆனால் சமீபத்தில் சம்புவராயர்கள் ஆட்சி புரிந்த காலத்தில் அதன் சமய வாழ்வுக்குச் சில தடங்கல்கள் ஏற்பட்டு வந்தன. சம்புவராயர்கள் மதுரை சுல்தானியருக்கு அடிமை மன்னர்களாக இருந்தபடியால் காஞ்சிபுரம் தனது சமய வாழ்வில் பூரணமான சுதந்திரமும் தன்னிச்சையான வாழ்வும் காணாமல் இருந்து வந்தது.

ஆனால், இப்போது விஜய நகரத்தாரின் கைக்கு நகரம் சென்ற பிறகு, மீண்டும் அது பழைய மகோன்னதத்தைப் பெற்று விட்டது.

அதன் சமய வாழ்க்கை மீண்டும் பழைய பொலிவுடன் இயங்க ஆரம்பித்தது.

பழைய வியாபாரங்களும், போக்குவரத்துக்களும் மீண்டும் தளிர்த்து விடவே எங்கும் கலகல என்று ஒரு சுறுசுறுப்பு ஓடிக் கொண்டிருந்தது.

சம்புவராய ராஜ்யத்தை ஜெயித்ததிலிருந்து கம்பணர் காஞ்சிபுரத்தைத் தமது தலைநகரமாக வைத்துக்

கொண்டார். முள்வாய் நகரத்திலிருந்து தம் மனைவிகளையும், ஊழியர்களையும் இங்கேயே தருவித்துக் கொண்டார்.

நகரில் பெரிதாக அரண்மனையும், அதை அடுத்து சித்திரத்தடாகமும் கட்டிக் கொண்டு அரசர்களுக்கான எல்லாவித விளையாட்டுக்களிலும் ஈடுபட்டிருந்தார்.

வேனில் காலம்! காலை நேரம் சிறிது சிறிதாகக் கரைந்து கொண்டிருந்த வேளையில், மன்னர் கம்பணர் தமது ராணிகளுடன் தடாகத்தில் ஜலக்கிரீடையில் ஈடுபடுவதற்காகப் போய்க் கொண்டிருக்கிறார்.

அந்நாளைய அரசர்களுக்கு இது ஒரு இன்றியமையாத விளையாட்டு.

இந்த விளையாட்டில் கம்பணரும் மனம் விட்டுக் களித்துக் கொண்டிருக்க, அங்கு நடப்பவைகளை அவரது புலமை மிக்க மனைவி கங்காதேவி தனது சிருங்கார மிக்க நடையில் எப்படி வர்ணிக்கிறாள் என்பதைக் கவனிப்போம்.

''இந்திரன் தமது தெய்வலோக அழகிகளுடன் போவது போல், கம்பணர் தம் அழகான ராணிகளுடன் உய்யான வனத்தில் நடந்து போனார்.

''தெற்கிலிருந்து பலத்த காற்று எழுமுன் வண்டினங்கள் முரல்வது போல், பெண்களின் மேகலை ஆபரணங்கள் கிணுங்கி முணுமுணுத்தன.

''பெண்களின் இடை அணிகள் குலுங்கும் போதெல்லாம் மன்னர் கம்பணரை மாரனின் அம்பு ரீங்கரித்துத் தாக்குவது போலிருந்தது.

''சித்திரத்தடாகத்தின் தாமரை மலர் மீது அரசர் நீரைத் தெளித்து விளையாடினார். அது ஒரு பெண்ணின் பொறுமையைக் கிளறி விட, அவள் கண்கள் நீரால் நிறைந்து விட்டது.

''ஜலக்கிரீடையில் மன்னர் ஒரு பெண்ணின் தொடை மீது கையை வைத்துக் கிள்ளியபோது, அவள் தன்னை ஒரு மீன் கடிக்கிறது என்பது போல் வேண்டுமென்றே ஒரு பாவனையை ஏற்படுத்திக் கொண்டு இதர பெண்கள் பார்த்திருக்கும் நேரத்திலேயே மன்னர் மீது சரிந்து விட்டாள்.

''குளத்தின் நீர் முதலில் பெண்களின் காலைத் தொட்டது. பிறகு தொடைகளைத் தொட்டது. பிறகு இடையைத் தொட்டது. கடைசியில் மார்புகளைத் தொட்டு நின்றது.

''நீரில் ஜலக்கிரீடை செய்த பெண்கள் கலவை சுகம் துய்த்தவர்கள் போல் தென்பட்டார்கள். ஏனெனில் அவர்கள் உதடுகளில் வர்ணங்கள் அழிந்துவிட்டன. கண்களில் மை கரைந்து விட்டது. நெற்றியில் திலகம் அழிந்துவிட்டது. இதைப் பார்க்கும் போதே மன்னருக்குப் பெரும் மகிழ்ச்சி ஏற்பட்டது.

''முடிவில் எல்லோரும் களைத்துப்போய் நீரிலிருந்து எழுந்து வந்தார்கள். பெண்கள் எழுந்து வரும்போது அவர்கள் தொடைகளில் உள்ள நகக் குறிகள், மெல்லிதான, ஈரம் பொருந்திய துகில் வழியாகத் தெரிவதைக் கண்டு மன்னர் பெரிதும் ரசித்தார்.

''பெண்கள் தங்கள் கூந்தலைத் தூக்கி முடிந்து, புதிய துகில்களை அணியும் நேரத்தில் மன்னர் அவர்கள் மேனிகளைக் கண்டு மிகுந்த ரசனையில் ஆழ்ந்தார்.

''பிறகு அரசர் அந்தப் பெண்களுடன் அந்தப்புரம் சென்று, புதிதுகள் அணிந்து, பயபக்தியுடன் பூஜைக்காகச் செல்லத் தொடங்கினார்.''

அந்நாட்களில் போர் செய்வதும் குடிகளைப் காப்பதும் எப்படி ஒரு மன்னருக்குக் கடமையாகக் கருதப்பட்டதோ, அதே போல, பல விளையாட்டுக்களில் ஈடுபட்டுத் தன்னையும், தன்னைச் சாந்தவர்களையும் மகிழ்விப்பது கூட ஒரு கடமையாகக் கருதப்பட்டது.

மன்னர் கம்பணர் அன்று நீர் ஆடி முடிந்து, பின்னர் போஜனம் செய்து, ராஜரீகக் காரியங்களைக் கவனிக்கத் தொடங்கி, குறுநில மன்னர்கள் பலரை வரவேற்றுப் பேசி அனுப்பிவிட்டு, கடைசியில் பொழுது சாய்ந்து, அந்தப்புரத்திற்கு மீண்டும் ஏகிய போது அவர் பெரிதும் களைத்துப் போயிருந்தார்.

''கங்கா! என்னவோ தெரியவில்லை. எனக்கு இன்று மனமும் சரியில்லை! உடம்பும் சரியில்லை!'' என்றார்.

''ஏன், சுவாமி! இன்று ஜலத்தில் அதிக நேரம் இருந்ததாலோ?'' என்று முகத்தில் குங்குமம் குழையக் கேட்டாள் ராணி கங்காதேவி!

''நீ ஒரு கவி! உனக்கு சிருங்கார வார்த்தைகளும் செயல்களும் நிறையப் பிடிக்கும். எந்த விஷயத்தையுமே சிருங்காரத்தால் உற்பவித்தது போல் ஒரு பாவனையை கொடுத்து விடுவாய்! கங்கா! எனக்கு இன்று தலையை வலிக்கிறது. கடமைகள் பலவற்றில் இன்று ஈடுபட்டாலும் மனம் சரியில்லை'' என்றார்.

''ஏன் சுவாமி?'' என்றாள் கங்கா.

''நம் பிரதானி மாரய்ய நாயகரின் பேத்திக்கு அடுத்த வாரம் பிறந்த தினம் வருகிறதாம்'' என்றார் மன்னர்.



''அதனால் என்ன?'' என்று ஆச்சரியமுடன் கேட்டாள் கங்கா!

''உனக்கு ஞாபகம் இருக்கிறதா, மாரய்ய நாயகரின் மகள் சூல் உற்றிருந்த போதுதான் நாம் காஞ்சீபுரம் கோட்டையைப் பிடித்தோம்'' என்றார் அரசர்.

''ஆமாம்! நினைவிருக்கிறது'' என்றாள் கங்கா,

''அந்த மகளுக்கு மகள் பிறந்து பத்து ஆண்டுகள் ஆகிவிட்டன'' என்றார் மன்னர்.

''அதற்கு என்ன?''

''காலம் எவ்வளவு சீக்கிரம் ஓடிவிட்டது? நாம் இன்னும் நம் லட்சியத்தில் வெற்றி பெற முடியவில்லையே என்று வருந்துகிறேன். மதுரை இன்னும் சுல்தானியர் வசம்தான் இருக்கிறது. இன்று காலையில் இதெல்லாம் நினைவுக்கு வந்தது. மனம் சோர்வு அடைந்து விட்டது'' என்றார் மன்னர்.

அவர் சொன்னது நியாயமாகப் படவே கங்கா மௌனம் சாதித்தாள். அவளது மனத்திலும் நினைவுகள் ஓடின.

மன்னர் அப்படியே மஞ்சத்தில் சாய்ந்து கொண்டார். அப்போது இரு தாதிகள் வீணை வாசிக்க ஆரம்பிக்க, கங்கா அவர்களை நிறுத்தி, 'போகலாம்' என்று சமிக்ஞை செய்தாள்.

பிறகு அவள் சுவாதீனமாக மன்னர் அருகில் அமர்ந்து கொண்டு, ''சுவாமி! தங்கள் மனத்தில் உள்ள இந்த வருத்தம் எனக்கும் இருந்து வருகிறது. நெடு நாட்களாக இருந்து வருகிறது. ஆடல் பாடல்களில் நான் ஈடுபட்டிருந்தாலும் ஒரு சுருதி போல் இந்த சோக நினைவு என் மனத்தில் மீட்டிக் கொண்டே இருக்கிறது! ஆனால் வாழ்க்கையில் சோகங்களை எப்போதும் ஒதுக்குப்புறமாகவே வைத்துப் பேசினால்தான் நமக்கு இன்பம் ஏற்பட வழி கிடைக்கும் இல்லையா?'' என்றாள் கங்கா.



மன்னர் அவளை ஆமோதித்துக் கொண்டே பஞ்சணை மீது சாய்ந்தார். கங்கா அவரது நெற்றியைத் தொட்டு விட்டு, ''ஐயோ சுடுகிறதே! உங்களுக்குக் காய்ச்சலா?'' என்று சொல்லிப் போர்வையை இழுத்து விட்டாள்.

இரண்டு நாட்களாக கம்பணருக்கு ஜுரம் கடுமையாக இருந்தது. மூன்றும் நாள் சற்றுத் தணிந்தது.

அந்தப்புரத்தை விட்டு வெளியே வந்து அவர் தமது பிரத்தியேக மாளிகையின் கூடத்தில் படுத்துக் கொண்டார்.

அன்று பொழுது சாய்ந்து விட்டது. விளக்கு வைத்தாகி விட்டது. வெளியே கறு கறு என்று எங்கும் இருள் பரவி விட்டது.

கம்பணர் மஞ்சத்தில் படுத்துக் கொண்டு பெரிய நிலை வாயில்கள் வழியே வெளியே வானத்தையும், நட்சத்திரங்களையும் பார்த்துக் கொண்டிருந்தார்.

காற்று அப்போது ஜிலுஜிலுவென்று வீசி அடித்து சிலைகளை ஆட்டி அசைத்த வண்ணம் இருந்தது.

மன்னரின் மனம் நனவுக்கும் பிரமைக்கும் இடையே சஞ்சரித்துக் கொண்டிருந்தது. கண்களை மூடினால் போதும், பிரமை. கண்களைத் திறந்தால் பிரமை கலந்த நனவு. உடம்பு இன்னும் சரியாகவில்லை.

உள்ளே எத்தனையோ வித எண்ணங்கள் அலைக்கழிக்கக் கண்களை அவர் மூடினார்.

தளதள என்று ஒரு வேதனை! அவர் செய்ய முடியாத காரியங்களைக் குறித்த வேதனை. செய்ய முடியாத காரியங்களில் தலையானது மதுரையை வெல்ல முடியாதது. அந்த வேதனைதான் பெரும் வேதனை.

அதை நினைக்கும் போது திடீரென்று ஏதோ ஒரு வித ஓசை கேட்டது. திடுக்கிட்டு கம்பணர் கண்களைத் திறந்தார்.

நிலைவாயிலின் திரைகள் உலைந்து அலைய, அதன் நடுவில் ஒரு உருவெளி தெரிந்தது. உற்றுப் பார்த்தார். யார் அது பெண்ணா? மாயையா?

கம்பணருக்கு வியர்த்து விட்டது. உருவத்தையே வெறித்துப் பார்த்தார். அது உருவந்தான்! சிலை போலும், தெய்வம் போலும் அசையாமல் நின்றது.

''யார் அது? நான் காண்பது கனவில்லையே! எந்த தேவதையைப் பார்க்கிறேன்? யார் நீங்கள்? மகாலட்சுமியா? அரங்கநாயகியா? அல்லது பரமேச்வரியா? யார் நீங்கள்!'' என்று வாய் விட்டுக் கூறிக்கொண்டே இருந்தார் அவர்.

உருவம் அசைந்தது.

தத்தளித்த கம்பணர், ''மீனாட்சியா? மதுரை மீனாட்சியா?'' என்று பரபரப்புடன் கேட்டார்.

'ஆமாம்' என்பது போல் உருவம் தலை அசைத்தது.

கம்பணருக்கு எதுவும் ஓடவில்லை. மார்பு படபடவென்று அடித்தது.

''தாயே, மீனாட்சி!'' என்றார் அவர்.

''கம்பணா!'' என்றது உருவம். ''இன்னமும் நீ பேசாமல் இருக்கிறாய். என் இருப்பிடம் பாழாகிக் கிடக்கிறது! நான் தங்குமிடம் இல்லாமல் அலைகிறேன்'' என்றது.

கம்பணருக்கு உணர்ச்சி பீறிட்டது. ''தேவி!'' என்று நடுக்கமுடன் அழைத்தார்.

உருவம் பேச ஆரம்பித்தது. (அதன் பேச்சு முழுவதும் கங்காதேவியினால் 'மதுரா விஜய'த்தில் எழுதப் பட்டவை. அதைக் கீழே தருகிறேன்.)

''கம்பணா! திருவரங்கத்தைப் பார்! அங்கே ஆதிசேடன் என்ன செய்கிறார் தெரியுமா! மூலவர் மீது கோவில் இடிந்து விழாமல் இருக்கத் தன் படத்தை வளைத்துக் காத்துக் கொண்டிருக்கிறார். கோவில் இடிந்து பாழாய்க் கிடக்கிறது.

''திருவரங்கம் மட்டுமல்ல! தமிழ் பேசும் நாடுகளில் உள்ள இதர கடவுளரின் கோவில்களை நினைத்தாலே என் வருத்தம் எல்லை கொள்ளாமல் விரிகிறது. கோவில் கதவுகளைக் கரையான்கள் அரித்து உண்டு விட்டன. மதில் மேலும், விதானம் மேலும் செடிகொடிகள் முளைத்துக் காடாகி விட்டன.

''மிருதங்கம் எதிரொலித்த கோவில்களில் இன்று ஓநாய்கள் ஓலமே கேட்கிறது.

''காவேரியை அங்கங்கே தடுக்க அணைகளோ, சேதுக்களோ இல்லாமல் அது தன் இஷ்டப்படித் தனது வழியை மாற்றிக்கொண்டு ஜனங்களை வருத்தியவாறு ஓடுகிறது.

''வேதம் கேட்ட அந்தணர் வீதிகளில் மாமிசத்தின் நெடி எழுகிறது.

''மதுரை நகரின் சோலைகள் எல்லாம் மறைந்து விட்டன. தென்னைகள் நின்ற இடத்தில் இப்போது கழு மரங்கள் நிற்கின்றன. அவற்றின் முனைகளில் மண்டையோடுகள் தொங்கிக் கொண்டிருக்கின்றன.

''முன்னாட்களில் அழகான நங்கைகளின் பாதசர ஒலிகள் கேட்ட சாலைகளில் இப்போது கை விலங்கு இட்டு இழுக்கப்படும் மக்களின் ஓலம் கேட்கிறது.

''பட்டுத் திரைகள் ஆடிய அரண்மனைகளில் இப்போது சிலந்தி வலைகள் ஆடுகின்றன. சிறைச்சாலைகளில் மக்களின் அழுகைகள் அபரிமிதமாய்க் கேட்கின்றன.

''தாமிரவருணியின் தூய நீரில் ஒரு காலத்தில் சந்தனம் மிதந்து வரும்! இப்போது கொலை செய்யப் பட்டவர்களின் இரத்தம் மிதந்து வருகிறது.

''திராவிட தேச மக்களின் பரிதாபமான, கண்ணீர் நிறைந்த முகங்களையும், அவர்களது பெருமூச்சுகளையும்,



லதா தன் தோளில் கையைப் போட்டுக் கொண்டு ஒய்யாரமாக நிற்பதைக் மகேந்திரன் பெருமையாக நினைக்கிறார் போல இருக்கிறது!

படம்: புரட்சிப் பெண் —எஸ்வார்

அலங்கோலத் தலைகளையும் கண்டு நான் மிகவும் வேதனைப்படுகிறேன்!

''கம்பனே! கலி முற்றிவிட்டது! ஒழுக்கம் போய் விட்டது! நேர்மை ஒழிந்து விட்டது! தர்மம் அழிந்து விட்டது!

''கம்பனே! இதோ பார்!''

கம்பனர் விதிர்விதிர்த்து அந்த உருவத்தைப் பார்த்தார். அவர் கண்களை நம்ப முடியவில்லை. அந்த உருவத்தின் கையில் ஒரு குறுவாள் உறையுடன் கிடந்தது.

கரும் உறையிலான அந்த வாளை அந்த உருவம் அவன் முன்னே கொண்டு வந்தது.

''அரசே! இந்த வாள் விசுவகர்மரால் சிவபிரானிடம் கொடுக்கப்பட்டது. சிவபிரானும் இதைப் புகழ் பெற்ற பாண்டியர்களிடம் கொடுத்தார். அவர்களும் காலம் காலமாய் இதைத் தம்மிடமே வைத்திருந்தார்கள். அழிக்க முடியாத கீர்த்தியை அடைந்தார்கள்.



அப்பா: அடே ராமு, நீ என்னடா இப்படிக் கணக்கிலே நூற்றுக்கு இருபது வாங்கிட்டு வந்திருக்கே?

மகன்: என்னப்பா செய்யறது? தம்பி லட்சுமணன் தான் 80ஐ வாங்கிட்டானே? பாக்கியைத்தானே ஆசிரியர் எனக்குப் போடுவார்!

-கே.ஆர்.எம்.

''ஆனால் காலப் போக்கினால் அவர்கள் கீர்த்தி மங்கி விட்டதை உணர்ந்த அகத்திய முனிவர், இதை உனக்கே அனுப்பி வைத்துள்ளார்!

''நீ இயல்பிலேயே தைரியசாலி! சாகசங்கள் நிறையச் செய்தவன். இந்தக் குறுவாள் உன்னிடம் இருந்தால் பெரிய பராக்கிரமசாலியாக நீ வாழ்வாய்!

''இதைத் தரித்திருக்கும் வரையில் உன்னை எந்த ஆபத்தும் அணுகாது! எந்தத் தோல்வியும் உன்னை அடையாது! கடவுளர்கள் வந்தால்கூட உன்னை எதிர்க்க முடியாது.

''நீ மதுரைக்குப் புறப்படுவாய். அன்று வடமதுரையில் கண்ணன் கம்சனைக் கொன்றது போல் யவன அரசரைக் கொன்று விடுவாய்!

''துருக்கியர்களை எல்லாம் விரட்டி அடிப்பாய்! தர்மத்தை நிலை நிறுத்துவாய்! ஆறாய் இரத்தத்தை ஓட வைப்பாய்!

''துருக்கிய அரசரைக் கொன்று விட்டு, சேதுக் கரைக்குச் சென்று ஒரு ஜய ஸ்தம்பம் நாட்டுவாய்!

''நீ தமிழ்ப் பேசும் நாட்டை சீக்கிரமே ஆளத் தொடங்குவாய்!

''உன் ஆட்சி ஏற்பட்டால், காவேரி, பழக்கப்பட்ட யானை போல், அமைதியாக இனி அடங்கி ஒடுங்கி ஓடி வருவாள்! ஜய விஜயீபவ!''

இவ்வளவு நீண்ட உரையை முடித்து விட்டு அந்தப் பெண்ணுருவம் புன்னகையோடு அவனைப் பார்த்தது! கையைத் தூக்கி ஆசீர்வதித்தது.

கம்பனர் எழ முயன்றார். பலவீனம் அவரைத் தடுத்தது. குபீரென்று வானவெளியில் மேகக் கூட்டங்கள் பறந்தன. பெரும் காற்று உள்ளே ஓடி வந்து விளக்குகளை அணைத்தது. எங்கும் இருள் சூழ்ந்துவிட்டது.

''மீனாட்சி! மீனாட்சி!'' என்றார் கம்பனர். மறுமொழி கேட்கவே இல்லை.

—தொடரும்



# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

எங்கும் வெளிச்சம் மறைந்த பிறகு அந்த உருவத்தைக் காணவில்லை. அதன் பேச்சும் கேட்கவில்லை.

கம்பணருக்கு வியப்பாக இருந்தது. தான் கண்டது பிரமையா, உண்மையா என்று தெரியவில்லை. உள்ளே காற்று பலமாக வீசியது. கோடை நாளின் திடீர் மழை அடையாய் விழத் தொடங்கியது.

சிறிது நேரம் அப்படியே இருந்தார். பிறகு தன் புலன்களையே தாம் நம்பாதது போல் எழுந்திருந்தார். உருவம் நின்ற இடத்தில் போய் நின்று பார்த்தார். அந்த இடம் மட்டும் வெம்மையாக இருந்தது. அதுவே அவரைத் தூக்கிவாரிப் போட்டது.

மெதுவாகக் கதவைச் சார்த்தினார். மனம் குழம்பியது! நடந்ததெல்லாம் உண்மைதானா? மதுரை மீனாட்சியே தனக்குக் கட்டளையிடுவதற்கு வந்தாளா என்று நினைத்தார்.

பளிச்சென்று ஒரு எண்ணம் உதயமாகியது. மீனாட்சி அவருக்கு ஒரு குறுவாளைப் பரிசில் அளித்தாளே! நிஜமாக அவள் அளித்திருந்தால் அது ஆதனத்தின்மீது இருக்க வேண்டுமே!

இருட்டில் துழாவிக்கொண்டு நடந்தார். ஆதனத்தின் அருகே சென்று குனிந்தார். கைகளால் அதன் மேல்புறத்தைத் தடவியபோது ஏதோ தென்பட்டது. அது அந்தக் குறுவாள்தான்!

குறு வியர்வை அரும்பி வர, கண்களில் மல்கும் நீருடன் அப்படியே மண்டியிட்டு அமர்ந்தார்.

''தாயே மீனாட்சி! நீ இந்த மானிடனைத் தேடி வந்தாயா? கேவலம் இந்த நரனிடம் உதவி கேட்க வந்தாயா? ஏல்லாம் உன் ஆணையினால்தானே, அம்மா நடக்கிறது! எங்களை எல்லாம் நீ உபகரணங்களாகத் தானே வைத்திருக்கிறாய்! கட்டளை இடம்மா! அப்படியே செய்து வைக்கிறேன்'' என்று சொல்லி அந்தக் குறுவாளைப் பன்முறை கண்களில் ஒத்திக்கொண்டார்.

•

கம்பணர் தெய்வ அருளை நினைத்துப் புளகிதம் அடைந்துகொண்டிருந்த அதே தருணத்தில் காஞ்சிபுரம் சத்திரம் ஒன்றில் வாசந்திகா மேல்மூச்சு கீழ்மூச்சு வாங்க ஒரு மேடைமீது அமர்ந்துகொண்டிருந்தாள்.

அவள் முன்னால் நின்ற வல்லபன், ''அம்மா! நீ செய்தது தவறு! இது தெய்வத்திற்கு ஏற்காது!'' என்று சொன்னான்.

''எது ஏற்காது, வல்லபா! தெய்வத்திற்காகத் தானே இதை நான் செய்தேன். ஏமாற்ற வேண்டுமென்று எண்ணி நான் இந்தக் காரியத்தில் இறங்கவில்லையே! கம்பண ராஜாவிடம் முறையிட வேண்டுமென்று போனேன். அவர் தனியாக இருக்கக் கூடிய சந்தர்ப்பத்தை எதிர்பார்த்திருந்தேன். நல்ல வேளை; அவருக்கு உடம்பு குணமாகி வருவதால் தனியே இருந்தார். அந்தப்புரப் பெண் ஒருத்தியின் துணையை இரகசியமாகப் பெற்று அவர் முன்னால்போய் நின்றேன். நான் வந்த காரியத்தை அவரிடம் முறையிட்டுக்கொள்ளலாம் என்று வாய் திறந்தேன். ஆனால் அவர் அரைக் கனவில் இருந்தார் என்று நினைக்கிறேன். என்னை ஒரு தெய்வம் என்று அவர் நம்பினார். மதுரை மீனாட்சி என்று என்னை அழைத்தார். நானும் யோசித்தேன். எனக்கு அவர் பிரமையே ஆதாயமாகத் தோன்றியது. நன்மை பயக்குமானால் பொய்யும் வாய்மைக்கு நிகரானதே என்று நினைத்தேன். என்னை மீனாட்சியாக மாற்றிக்கொள்ள நான் எந்தத் தயக்கமும் காட்டவில்லை. தமிழ் பேசும் நாடுகளின் நிலையை அவருக்கு எடுத்துரைத்து, சீக்கிரம் காரியத்தில் இறங்கச் சொன்னேன். நான் சொன்னதை அவர் தெய்வக் கட்டளையாக எடுத்துக்கொண்டு விட்டார் என்பது அவர் முகத்தைப் பார்த்தவுடனேயே தெரிந்துவிட்டது'' என்று கூறி முடித்தாள் வாசந்திகா.

''அம்மா!'' என்றான் வல்லபன். ''எனக்கு என்னவோ நீ செய்தது சரியாகப்படவில்லை'' என்றான் தலை குனிந்துகொண்டு.

''வல்லபா! இது தவிர நான் இன்னொரு காரியமும் செய்தேன். நீ என்னைப் பொறுத்தருள வேண்டும்'' என்றாள் வாசந்திகா.

''என்ன செய்தாயம்மா?'' என்றான் வல்லபன்.

''பாண்டிய அரசர் உனக்குப் பரிசாக அளித்திருந்தார் என்றாயே, ஒரு குறுவாளை! அந்த வாளை கம்பண ராஜருக்கு நான் பரிசிலாகக் கொடுத்துவிட்டேன்'' என்றாள் வாசந்திகா.

''அம்மா!'' என்று தீயை மிதித்தவன் போல் கூவினான் வல்லபன். அவன் உடல் அதிர்ந்தது. அவன் நினைவெல்லாம் ஒருகணம் சூன்யமாகப் போய் பிறகு உணர்வு திரும்பியது.

வாசந்திகா திடுக்கிட்டாள். ''என்ன வல்லபா?'' என்று கேட்டாள்.

''அம்மா அதையா கொடுத்தாய்?'' என்று வேதனையுடன் கூறி நெஞ்சின்மீது கையை அழுத்தினான் வல்லபன்.

''ஏன் வல்லபா! பரம்பரை ராஜவம்சத்து வாள் ஆயிற்றே! அதுவும் கீர்த்தி வாய்ந்த பாண்டிய குலத்தாரின் வழிவழிச் சொத்து ஆயிற்றே! அது ராஜகுலத்தாரிடம் போவதுதானே முறை?'' என்றாள் வாசந்திகா.

வல்லபன் முகத்தைத் திருப்பிக்கொண்டான்.

''முறைதான் அம்மா! இருந்தாலும், என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்கலாமே! அந்த வாளை என் உயிரினும் உயிராய் மதித்தேனே! என் வாழ்க்கைக்கு அதை ஒரு ரட்சையாய் நினைத்தேனே! எனக்கு அது எல்லாவிதத்திலுமே உற்சாகமும் ஊக்கமும் தர வல்ல

தாக இருந்ததே! அதைப் போய்க் கொடுத்துவிட்டாயே! என்னிடம் ஒரு வார்த்தை கேட்டிருக்கலாகாதா, அம்மா, அம்மா!'' என்று புலம்பினன் அவன்.

மேடைமீது சோகமாய் அமர்ந்துகொண்ட அவனை வாசந்திகா மெதுவாகப் பற்றினுள்.

''வல்லபா!'' என்றுள் இதமாக. ''அதில் இத்தனை அபிமானம் வைத்திருக்கிருயா?'' என்றுள்.

''ஆமாம்மா!'' என்றுன் வல்லபன்.

''பாண்டியப் பரிசில்மீது உனக்கு ஏன் அவ்வளவு அபிமானமப்பா? ஒரு ராஜவம்சப் பரிசிலுக்கு நாம் தகுதியுடையவர்கள் அல்லவே! அது நமக்கு உகந்ததும் அல்லவே!'' என்றுள் வாசந்திகா.

வல்லபன் மனத்தில் அந்த வார்த்தைகள் கூர் அம்புகள்போல் தைத்தன. ராஜவம்சப் பரிசிலுக்கு அவன் தகுதியற்றவனு? ஏன் தகுதியற்றவன்? சாதாரணக் குடியில் பிறந்ததாலா?

மனத்தில் இந்த நினைவுகள் நெகிழ்ச்சி ஏற்படுத்தவே கண்ணில் நீர் பெருகியது. ''ஐயோ, அம்மா! அப்பரிசில் சாதாரணப் பரிசில் அல்ல! இதன் பின்னுல் ஒரு பெரும் பிரேமையின் காவியமே அடங்கியிருக்கிறது. என்னைப் பொறுத்தவரையில், இந்தப் பரிசிலும், பரிசிலைக் கொடுத்தவரும் ஒன்றுதானம்மா! இந்தப் பரிசில் மூலம் அதைக் கொடுத்தவரே என்னை அடைந்து என் மனத்தில் வாழ்கிருரம்மா!'' என்று தன் உள்ளத்திலேயே தன் தாயாரிடம் அழுது முறையிட்டான் அவன். வெளிப்படையாக எதுவும் பேசவேயில்லை. கண்ணீர் தான் கண்களில் கழன்று வந்தது.

அவன் வெகுநேரம் பேசாமல் இருப்பதையும், அவன் மனத்துள் ஏதோ நிகழ்வதையும் உணர்ந்துகொண்ட வாசந்திகா துணுக்குற்று, அவன் தலையை மெள்ள வருடி,

''வல்லபா! நீ இவ்வளவு வேதனைப் படும்படியாய் அந்தப் பாண்டிய அரசர் கொடுத்த பரிசிலில் என்ன இருக்கிறது? கேவலம் அதன் இரத்தினங்களும், முத்துக்களும் உன்னைக் கொள்ளை கொண்டுவிட்டனவா? நீ தினமும் அதை விருப்பத்தோடு பார்க்கும் பார்வையைப் பார்த்தே நான் ஆச்சர்யப் பட்டுக்கொள்வேன். வேண்டாம், அப்பா! வல்லபா! உயர்ந்ததை எண்ணி ஏக்கப்படாதே! உயர்ந்ததை அடையவும் நினையாதே! வாழ்க்கையில் நிரந்தரமான பொருளைத் தேடுவதைவிட ராஜவம்சத்துப் பொருளை நாடாதே!'' என்று கூறினுள்.

வல்லபன் பேசவே இல்லை. அவள் வார்த்தைகள் இரண்டு வித அர்த்தங்கள் காட்டி அவனை என்னவோ செய்தன. தன் தாயாருக்குக் காட்டாமல் தன் பீறி வரும் கண்ணீரை உள்ளே அழுத்திக்கொண்டான்.

இரவில் தூங்குவதற்கு அவன் தனியானபோது தான், அவன் தன்னிச்சையாய்க் கண்ணீரை விட முடிந்தது. குபீரென்று கடல்மடை திறந்தாற்போல் அவன் ஏக்கத்தை எல்லாம் வாரி அடித்துக்கொண்டு பளிங்கு மயமான கண்ணீர் பிரவகித்து வெளியே வந்தது.

அவனைப் பொறுத்தவரையில் அந்தக் குறுவாள் அவனது மதுராவேதான்! தன் விழி ஒன்றையே எடுத்துத் தந்தாளோ என்று சொல்லும்படி அந்தக் குறுவாள் மீன்போல் வளைந்து கூர்வோடு மின்னிக்கொண்டிருந்தது. அதைக் காணும்போதெல்லாம் வாளைப்போன்ற அவள் விழியும், அதில் தவழும் புன்னகையும், மோகனமான அதன் நீல விதானமும், கனவோ காவியமோ எனும்படி அதில் எப்போதும் வருடுகிற ஒரு பாவனையும் அவனை வெகுவாகக் கலக்கி விடுவதுண்டு.

தன் மதுராவே அந்த வாளில் உயிருடன் ஆவிர்ப்பவித்திருக்கிருள் என்று அவனுக்குத் தோன்றுவதும், அதன் காரணமாய் சிற்சில பிரேமை மயக்கத்தில் அதை நோக்கிச் சிரிப்பதும், குழைவதும், கொஞ்சுவதும் அவனது இனிமை மயமான பொழுதுபோக்காக இருந்து வந்தது.

இப்போது அவனது அந்த மன இன்பங்கள் எல்லா வற்றுக்குமே முற்றுப்புள்ளி வைத்தாற்போல் அவனது பிரேமையின் சின்னமே பறிக்கப்பட்டுவிட்டது போல் தோன்றியது.

கண்ணீர் கங்கை போல் பெருகி அதில் தத்தளித்தான் அவன்.

செஞ்சியிலிருந்து புறப்பட்ட மூன்றும் நாள் மாலையில் கோபணு தம் மெய்க்காப்பாளருடன் காஞ்சிபுரம் வந்து சேர்ந்தார்.

சிரமப்பரிகாரங்கள் செய்துகொண்டு, வரதராஜப் பெருமானை வணங்கிவிட்டு கம்பணரின் அரண்மனைக்குப் போய்ச் சேர்ந்தார்.

அவரைக் கம்பணர் பார்த்ததும், ''கோபணு சுவாமி! தங்களை வரச்சொல்லி ஆள் அனுப்பவேண்டும் என்று நினைத்திருந்தேன். தாங்களே வந்துவிட்டீர்களே! ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றுர்.

அதற்கு கோபணு, ''மன்னவ! தாங்கள் நினைத்ததே ஒரு சுபசூசகம்! இன்று நம் பிரதானிகளோடு நாம் மந்திராலோசனை நடத்தவேண்டும். விஷயம் இருக்கிறது'' என்றுர்.

ஒரு முகூர்த்த நேரத்தில் சோமப்பர், மாரப்ப நாயகர், விட்டப்பர், கோபணு, கம்பணர், கங்கா தேவி ஆகியோர் ஒரு ஆலோசனைக்குக் கூடினுர்கள்.

முதலில் கோபணு எழுந்து, சென்ற சில தினங்களுக்கு முன் தனக்கு நேர்ந்த அனுபவங்களை விவரித்து,

அன்றைய நாளிலிருந்து அவர் மனம் அல்லல் படுவதை எடுத்துக்கூறி,

''மண்டலேசுவரரே, பிரதானிகளே! இத்தனை காலம் நாம் மதுரை மீது படை யெடுக்காததை

## அலமாரி

## வேடிக்கைக் கதைகள்

அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் பிஞ்சு உள்ளங்களில் வேகமாக இருப்பதைப் போல பெரியோர் உள்ளங்களில் பொது வாக இருப்பதில்லை. எனவேதான் 'இளமையில் கல்' என்ற அர்த்த முள்ள வாசகம் அறிஞர் பாட்டில் எழுந்தது. பள்ளிப் பருவத்திலேயே நல்ல பழக்க வழக்கங்களைப் பற்றிய பாட்டுக் கதைகளைக்கூறி, படிக்கும் மாணவர்களின் நெஞ்சத்தைப் பண்படுத்த இயலும். அன்னை பாலோடு ஊட்டிய வீரக் கதைகளே, மன்னன் சிவாஜியின் தீரச் செயல்களுக்குக் காரணமாயின. இந் நோக்கில் நாளைய வீரர்களும், தியாகிகளும், விவேகிகளும் நிறைந்த மாணவர் உலகம் உயர வேண்டி, வேடிக்கைச் கதை சொல்லியும், விளையாட்டுப் பாட்டு பாடியும், கொஞ்சியும், கெஞ்சியும் மகிழ்விக்கிருர் இந்நூலாசிரியர்.

மாணவர்களுக்கு மான் விளையாட்டைச் சொல்லிக் கொடுத்துவிட்டு, மானைப் போல மானமாக வாழ வேண்டும் என்று அறிவுரை கூறுவது மிகவும் இரசிக்கத் தக்கதாகும். சின்னஞ்சிறு சிங்காரக்கதைகள் மூலம் மாணவர்களைச் சிந்திக்க வைத்தும், சிரிக்க வைத்தும் இந்நூலை ஆசிரியர் மாணவர் உரையாடலாக எழுதியிருக்கிருர்.

உவமைக்கவிஞர் சுரதா, எழுத்தாளர் எதிரொலி விசுவநாதன் ஆகியோர் அளித்துள்ள முன்னுரை முகத்திலிருந்து, இந்நூலாசிரியர் திரு. எஸ். நடராஜன் பள்ளிதோறும் சென்று நடத்தும் வேடிக்கை நிகழ்ச்சிகளும், விளையாட்டுக்கதைகளுமே இந்நூல் உருக் கொண்டன என்பதை அறிகிருேம்.

மாணவ சமுதாயம் உயர, ஞானி போல் பயன்படும் இந்நூலைத் துணைப் பாடமாகப் பள்ளிகளில் வைத்துப் போற்றுதல் தகும்.

வேடிக்கைக் கதைகள்: ஆசிரியர்: எஸ். நடராஜன். சாமு பப்ளிகேஷன்ஸ், 34, மகாலட்சுமி தெரு சென்னை-17; பக்கங்கள் 112. விலை 4-50.

—தேவு



ஒரு இழுக்காகக் கருதுகிறேன். அதை நினைத்து, இப்போது கணத்திற்குக் கணம் மனம் நொந்துகொண்டு இருக்கிறேன். நாம் இனி உடனடியாக ஏதாவது செய்தாஞக வேண்டும்'' என்று கூறினர்.

உடன் கம்பணரும் தமது அனுபவங்களையெல்லாம் கூறி, தன் நம்பிக்கையில் மீனுட்சி தேவியே தனக்குப் பிரசன்னமாகிக் குறுவாளைப் பரிசிலாகத் தந்தாள் என்பதைத்தெரிவிக்கவே, எல்லோரும் மெய்மறந்து அதனைக் கேட்டார்கள். ''பிரதானிகளே! நானும் மிக்கவருத்தமடைகிறேன். சம்புவராயரை ஜெயித்துப் பத்து ஆண்டுகள் ஆகியும் நாம் மதுரையைப் பிடிக்க ஏதுவுமே செய்யவில்லை என்று அறியும்போது என் மனமும் புழுவாகத் துடிக்கின்றது. என் கடமையிலிருந்து நான் பிறழ்ந்துவிட்டேனே என்று நினைக்கிறேன்'' என்ருர்

இப்படி இவர்கள் இருவரும் தாங்கள் செய்யாததை நினைத்து வேதனைப்பட்டதை அடுத்து சோமப்பர் பேசினார்.

''மன்னரும், சைனியாதிபதியும் வீணே மனத்தில் வருத்தப்பட்டிருக்கிறார்கள். இது உணர்ச்சி வசத்தில் நேர்ந்தது என்று நினைக்கிறேன். ஏனெனில், கடந்து போன ஆண்டுகளில் நமது ராஜ்யம் பல சோதனைகளைத் தாண்டி வெளி வந்திருக்கிறது. வடக்கே பாமனித் துருக்கியர்களால் அடிக்கடி தொந்திரவு இருந்தது நமக்குத் தெரிந்த விஷயம், இதனால் வடக்கே யுத்தங்கள் நடத்துவதிலேதான் நம் புக்க மகாராஜரின் கவனம் முழுவதும் இருந்தது. நம் மகாராஜர் தெற்கே காஞ்சிபுரத்தை வந்து தரிசிக்க நினைத்தும், அவரால் அது முடியவில்லை என்றால், வடக்கே அவரது கவனம் எவ்வளவு வேண்டியிருக்கிறது என்பதை அறிவோம். வடக்குதான் நம் பெரும் கவலையாக இருந்து வந்தது. இப்போதும் இருந்து வருகிறது......'' என்றார்.

''ஆமாம்! ஒவ்வொரு வருடமும் நாம் இங்கிருந்து படைக்கு ஆட்களைத் திரட்டியும், பொருள் வசதிகளைச் சேகரித்தும் வடக்கே அனுப்பிக்கொண்டு வருகிறோம். நாம் வெறுமனே இருந்து விடவில்லை'' என்றார் விட்டப்பர்.

''அதைத்தான் நானும் சொல்கிறேன். நம் ஆட்களும் பொருட்களும் வடக்கே தேவைப்பட்டு வரும் போது, தெற்கை நாம் கவனியாமல் இருந்தது குற்றமே அல்ல! பத்து வருடங்கள் என்பது நீண்ட காலம்தான்! ஆனால் இந்தப் பத்து வருடமும் வடக்கைக் காப்பாற்றுவதில்தான் நமது பெரும் நேரமும் போயிற்று'' என்றார் சோமப்பர்.

கோபணு உடனே, ''சோமப்பரே, இதை நான் நன்கு உணர்ந்தவன்தான்! இருப்பினும் நம் சொந்த முயற்சியில் ஏதாவது செய்திருக்கலாமே என்று தோன்றியது'' என்று கூறினார்.

''சொந்த முயற்சி ஏது? நம் அனைவருடைய முயற்சியும் வட எல்லைக்காகத்தானே வேண்டி வந்தது!'' என்றார் சோமப்பர்.

''சோமப்பா!'' என்றார் கம்பணர். ''ஒரு காரியம் நிச்சயம் ஒத்துக் கொள்கிறேன். சென்ற பத்து ஆண்டு காலமும் வடக்கே படை அனுப்புவதில்தான் நம் காலமெல்லாம் போயிற்று. எனினும் இனிமேல் நாம் ஏதாவது செய்துதான் ஆகவேண்டும்'' என்றார் அழுத்தமாக.

''என்னதைச் செய்து விட முடியும், சொல்லுங்கள்! மதுரை சுல்தானிடம் இரண்டு லட்சம் யவனப் படைகள் இருக்கின்றன. அவைகளை அசைத்து விட முடியுமா?'' என்று கேட்டார் விட்டப்பர்.

அவர் கேள்வி அப்படியே ரீங்காரித்து அங்கே நின்றது. எல்லோரும் மௌனம் சாதித்தார்கள்.

''ஆளுக்கு ஆள் வேண்டும் என்றாலும் இரண்டு லட்சம் வீரர்கள் தேவப்படுமே! நம்மிடம் ஆட்கள் ஏது?'' என்றார் சோமப்பர்.

''எல்லா வீரர்களையும் திரட்டி வடக்கேதான் வழக்கமாக அனுப்பி வருகிறோம். இப்போது இருக்கும் நிலையில் சுல்தான் நம் மீது படையெடுத்து வந்தால் கூட நாம் அவரை எதிர்க்க முடியாது. நம்மிடம் போதிய பலம் கிடையாது.'' என்றார் விட்டப்பர்.

கம்பணர் திரும்பினார்.

''சுல்தானியரின் இரண்டு லட்ச யவனப் படைகள் தானே நமக்கு உறுத்தலாக இருக்கிறது?'' என்றார் அவர்.

''ஆமாம், மன்னவ! இதனை எதிர்க்க நமக்குப்பலம் பற்றாது.'' என்றார் சோமப்பர்.

எல்லோரும் மௌனத்தில் ஆழ்ந்தார்கள். யாராலும் எதுவும் பேச முடியவில்லை. கோபணுவும் பெருத்த யோசனையில் ஆழ்ந்து விட்டார்.

சிறிது நேரத்தில் அவர் நிமிர்ந்தார். அவர் முகத்தில் ஒரு உறுதி தெரிந்தது.

''பிரதானிகளே! எப்படியும் நாம் இதில் இறங்கித்தான் ஆகவேண்டும்'' என்றார் தீர்மானமாக.

''என்ன வழி?'' என்றார் சோமப்பர்.

''இரண்டு லட்ச யவன வீரர்கள்! அதுதானே உங்கள் கவலை?'' என்றார் கோபணு.

''ஆமாம்.''

''இவர்களைத் தந்திரத்தால் வெல்வோம்.''

மீண்டும் மௌனம்.

''முடியுமா?'' என்றார் விட்டப்பர்.

''என்ன தந்திரம்?'' என்றார் சோமப்பர்.

''அதை நாம் யோசித்தால் என்ன?'' என்றார் கோபணு.

''கோபணு சுவாமி! தாங்கள் கூறியது ஒரு வழியைத் திறந்தாற் போல் இருக்கிறது. நாம் யோசனை செய்யலாம்!'' என்றார் கம்பணர்.

''மன்னவ!'' என்றார் கோபணு, ''இரண்டு லட்சத்தில் ஒரு லட்சம் படை சமயபுரத்தில் இருக்கிறது. மீதி ஒரு லட்சம் படை மதுரையில் இருக்கிறது.''

''சரியான இடங்களில்தான் படைகளை வைத்திருக்கிறார் சுல்தான்'' என்றார் கம்பணர்.

''இதில் முதல் லட்சத்தைத்தாக்கிப் பாதிப்பேரைக் கொன்று பாதிப்பேரை அடிமைப் படுத்திவிட்டால், அந்த அடிமைகளைக் கொண்டே மற்றொரு லட்சத்தைத் தாக்கிச் சின்னபின்னப்படுத்தலாம்'' என்றார் கோபணு.

''முதல் லட்சத்தைத் தாக்குவது எப்படி?'' என்றார் சோமப்பர்.

''நம் படையில் முப்பதினாயிரத்திலிருந்து நாற்பதினாயிரம் வரை சேர்க்க முடியுமா? அது போதும்'' என்றார் கோபணு.

'இப்போது தெற்கில் நம்மிடம் உள்ள படைகளைச் சேர்த்தால் இருபதினாயிரம்தான் தேறும்'' என்றார் சோமப்பர்.

''இன்னும் இருபதினாயிரமாவது சேர்க்க வழிசெய்வோம்'' என்றார் கோபணு.

''நிச்சயம் செய்வோம்! நம் வளநாட்டுக் கூற்றத் த? ர்கள் அனைவரையும் அழைத்து இவ்வளவு வ் களை நீங்கள் தரவேண்டும் என்று சொல்லி விடுவோம்'' என்றார் கம்பணர்.

''இது ஒரு தர்மப்போர்! இதில் எல்லோருடைய பூரணமான ஆதரவும் ஒத்துழைப்பும் தேவை என்று சொல்லுவோம்'' என்றார் கோபணு.

''ஏற்கெனவே படை வீரர்களைத் திரட்டித் திரட்டி அவர்கள் அலுப்பு அடைந்திருப்பார்கள். இதுதெற்கே நடக்க வேண்டிய தர்மப்போர் என்று சொல்லிக் கூற்றத் தலைவர்களை யெல்லாம் ஊக்கப் படுத்தினால் நல்லது!'' என்றார் விட்டப்பர்.

''சரி! இந்தப் படையைத் திரட்டினோம் என்று வைத்துக் கொள்வோம். பிறகு என்ன செய்யலாம்?'' என்றார் சோமப்பர்.

மீண்டும் மௌனம் விழுந்தது.

அப்போது கம்பணர் பார்வை எதேச்சையாக கங்காதேவி மீது விழ அவள் இலேசாகச் சலசலத்தாள்.

''தேவி!'' என்றார் கம்பணர்.

''சுவாமி! இந்தப் பெரியவர்கள் ஆலோசனையில் அடியாள் பேசலாமா?'' என்றாள் அவள்.

''ஏன் கங்காதேவி! நிச்சயமாகப் பேசலாம். யாரிடமிருந்து நல்ல ஆலோசனை வந்தாலும் அது நல்லது தானே!'' என்றார் கோபணு.

''தந்திரத்தால் நாம் சுல்தானியர்களை வெல்ல வேண்டும் என்றீர்கள். அது நல்லது! தந்திரத்தால் தான் முன்பு சுல்தானியர்கள் வல்லாளரின் லட்சம் வீரர்களை முறியடித்தார்கள்! இது எப்படி முடிந்தது? தந்திரத்துடன் ஒற்றும் சேரவேண்டும். முதலில் சுல்தானிய ராஜ்யத்திற்குச் சரியான ஒற்றரை அனுப்ப வேண்டும். சுல்தானிய மன்னரின் வாழ்க்கை முறை, பழக்க வழக்கங்கள். அவரது படை இயங்கும் வகை, அவற்றின் தளபதிகளின் சொந்தமான வாழ்க்கைகள். விருப்பு வெறுப்புகள், இன்னும் இதுபோன்ற பல விஷயங்களையும் தெரிந்து வந்தால் அது நமது தந்திரச் செயலுக்கோ திடீர்த் தாக்குதலுக்கோ மிக்க உதவியாக இருக்கும். இந்தச்சிறியவளின் ஆலோசனை பொருத்தமற்றதாகத் தோன்றினால், என்னைப் பொறுத்தருள வேண்டும்'' என்றாள் கங்காதேவி.

கோபணு முகம் பிரகாசமாகியது.

''ஏன் கங்காதேவி! இது கூட ஒரு அருமையான யோசனை'' என்றார் அவர்.

''எனக்கும் அதுதான் தோன்றுகிறது'' என்றார் கம்பணர்.

''நம் வல்லபனையே ஒற்றனாக அனுப்பலாம்'' என்றார் கோபணு.

—தொடரும்

'பாட்டு பாகவதர், ஹரிகதை பாகவதர், பஜனை பாகவதர் இத்தனை பேரும் என்னிடம் பந்தயம் கட்டி தோற்றுப் போனாங்க'.



என்ன! பாட்டுப் போட்டியா?



ஊஹும்! கடந்த முப்பது வருஷமாக ஒரு கச்சேரி கூட செய்யாதவர்கள் யார்? என்ற போட்டி. நான் ஜெயிச்சேன்.



காந்தி ஜெயந்தி
விசேஷ தள்ளுபடி

**30% வரை**

பருத்தி
பட்டு
கம்பளம் துணிகளுக்கு

# காதி

கவர்ச்சிகரமானவை
பகட்டானவை
சவுகரியமானவை.



நவீனம்
நாகரிகம்
நாணமுடைமை



காதி, கிராமத் தொழில்
உற்பத்திப்
பொருட்களில்
உங்களுக்கு
ஏற்ற விலையில்
சிறந்ததை
தெரிந்தெடுக்க

# விஜயம் செய்யவும்

அருகிலுள்ள
காதி பவன்
அல்லது பந்தர்

- காதி, கிராம கைத்தொழில் கமிஷன் சான்றிதழ் பெற்றது -

# மங்காத விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

மந்திராலோசனை நடந்த ஒரு வாரத்தில் வல்லபனும் அவன் நண்பன் தத்தனும் 'பக்கிரிகள்' போல் உடை தரித்து ஒற்றுக்காகப் புறப்பட்டார்கள். இதற்காக அவர்களுக்கு யவன பழக்க வழக்கங்களும், சிறிது யவன பாஷை ஞானமும் கற்றுக் கொடுக்கப்பட்டிருந்தது.

இருவரும் செஞ்சி மார்க்கமாய்ச் சென்று சுல்தானிய ராஜ்யத்தில் பிரவேசித்தார்கள்.

காதவழி நடந்து முதல் பெரும் ஊரை அடைந்த போது அவர்களுக்குப் பல விஷயங்கள் புலனாகத் தொடங்கின.

மக்கள் ஆங்காங்கே தங்கள் கிராமங்களை விட்டு வெகுதூரம் போய், யாரும் அண்டமுடியாத இடங்களில் புதுக் குடியிருப்புகளை ஏற்படுத்திக்கொண்டிருந்தார்கள்.

தங்கள் குடியிருப்புகளை எந்த அன்னியருக்கும் எளிதில் அவர்கள் காட்டுவதாக இல்லை.

இப்படிப் புறக்கணிக்கப்பட்ட கிராமங்கள் கேட்பாரற்றுப் பாழடைந்து கொண்டிருந்தன.

வயல் வெளிகள் ஆங்காங்கே தரிசைகளாகக் கிடந்தன.

ராஜரீகக் கொடுமைகள் தாளாமல் பலர் துருக்கிய மதத்தையே தழுவி இருந்தார்கள்.

இப்படி நாட்டு நடப்பே அலங்கோலமாகப் போயிருந்த ராஜ்யத்தில் ஒரு ஊரை விட்டு ஒரு ஊருக்குச் செல்வதே கடினமாக இருந்தது.

மக்கள் நடைப் பிணங்களாகப் போயிருந்தார்கள். வருங்காலத்தில் எதுவுமே நடக்காது என்ற ஒரு மனப்பான்மைக்கு வந்திருந்தார்கள்.

தமிழ் ராஜ்யங்கள் சுல்தானியரின் கைவசமாகி 47-ஆண்டுகள் ஆகிவிட்டன. ஆகையால் ஒரு தலைமுறை கிட்டத்தட்ட அழிந்து மற்றொரு தலைமுறை உருவாகியிருந்தது. இவர்கள் தங்கள் பண்பு, சமயம், பழக்க வழக்கங்களை இரகசியமாகவே கடைப்பிடிக்க வேண்டி வந்தது.

கோவில்கள் எல்லாம் அழிந்து போயிருந்தன.

இன்னொரு விஷயத்தை வல்லபனும் தத்தனும் கவனித்திருந்தார்கள்.

அநேகமாகப் போகும் இடம் எல்லாவற்றிலும், இரவு வேளைகளில் மக்கள் ஒதுக்குப்புறமாகக் கூடி ஒய்சள வள்ளாளதேவரின் சரித்திரத்தைக் கதையாகப் படித்தோ, நாடகமாக நடித்தோ கவிதையாகப் பாடியோ அவரது வீரவரலாற்றை ரசித்துக்கொண்டிருந்தார்கள்.

வீரவள்ளாளரின் வாழ்வும் போர்களும் மக்களுக்கு ஒரு அழியாத காவியக் கதை போல் தோன்றிக் கொண்டிருந்தன.

போகும் வழியில் இவை எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டு ஏழு தினங்கள் பிரயாணம் செய்து இளைஞர்கள் கண்ணனூரை (சமயபுரம்) நெருங்கியிருந்தார்கள்.

மதுரை சுல்தான் அப்போது கண்ணனூரில் இருக்கிறார் என்று கேள்விப்பட்டதும் இளைஞர்களுக்கிடையே ஒரு சர்ச்சை எழுந்தது.

கண்ணனூருக்குள்ளேயே சென்று அங்குள்ள நிலைமையை ஆராயலாமா என்று சிறிது நினைத்தார்கள்.

அப்படிச் செல்ல வேண்டுமானால், ஒரு நம்பகமான மனிதருடன் செல்வதுதான் நல்லது என்பதைப் புரிந்து கொண்டார்கள்.

அப்போது திடீரென்று வல்லபன் தத்தனைப் பார்த்து, "தத்தா! நாம் காவேரிக் கரை வரை சென்றால் என்ன?" என்று கேட்டான்.

"எங்கே? திருவரங்கம் போகலாம் என்கிறாயா?" என்றான் தத்தன்.

அதற்கு வல்லபன், "எனக்கு அப்படி ஒரு ஆசையும் உண்டு. ஏன் உனக்கில்லையா?" என்று கேட்டான்.

"ஏன் எனக்கும்தான் உண்டு! நாம் இருவருமே பிறந்ததிலிருந்து திருவரங்கத்தைப் பார்த்ததில்லையே!" என்றான் தத்தன்.

"ஆமாம்! ஆனால் அதற்குச் சந்தர்ப்பம் இடம் கொடுக்குமோ என்னவோ! இப்போது நான் சொல்வது வேறு. காவேரியைக் கடக்காமல் அதற்கு வடகரையிலே இருக்கும் சிற்றூர்களுக்குப் போனால் யாராவது பழைய நாளையக்காரர்கள் தென்பட்டாலும் படுவார்கள். வடகரையில் அழகிய மணவாளம் என்ற கிராமம் இருப்பதையும், அங்கே சிங்கப்பிரான் என்பவர் இருந்ததையும் என் தாயார் பல முறை குறிப்பிட்டுள்ளார். அங்கு போய்ப் பார்த்தால் என்ன?" என்று கேட்டான்.

"செய்வோம்!" என்றான் தத்தன்.

பிறகு இருவரும் ஒரு நாளெல்லாம் பிரயாணம் செய்து அழகிய மணவாளம் என்ற கிராமத்தை அடைந்தார்கள்.

அந்தக் கிராமமும் பாழாகக் கிடந்தது. இரு இளைஞர்களும் யவன நாட்டார் போல் தோற்றம் அளித்ததால், வெளிவந்த கிராமவாசிகள் ஓரிருவர் கூட வீட்டுக்குள் சென்று கதவைத் தாழிட்டுக் கொண்டார்கள்.

அவர்கள் பயப்படுகிறார்கள் என்று யோசித்த போது, எதிரே ஒருவரின் வீட்டுக் கதவு திறந்தது. அந்தப் புதிய மனிதர் வெளியே வந்து அவ்விருவர்களையும் அழைத்துச் சென்றார்.



வீட்டுக்குள் போனதும் இரு பெண்கள் காலில் தண்டைகள் கொஞ்ச, ஜிலுஜிலுந்து முன்னால் வந்தார்கள். மணங்களைத் தெளித்தார்கள். மலர்களைத் தூவினார்கள். இளைஞர்களை அந்தரங்கமாக அழைப்பது போல் நயன பாஷைகள் புரிந்தார்கள்.

அதை அறிந்து கொண்டதும் வல்லபன் தத்தனின் காதோரமாக, ''தத்தா! தமிழ் ஊர்களில் இவர்கள் வாழும் முறையைப் பார்த்தாயா? தேவதாசிகளைக் கொண்டு யவனர்களைத் திருப்திப்படுத்தித் தங்களுக்கு எந்தவிதத் தீங்கும் வராமல் பார்த்துக் கொள்கிறார்கள்'' என்று கன்னடத்தில் கூறினான்.

அந்தப் புதிய மனிதர் குழைந்து கொண்டே வந்து, ''பிரபுக்கள் பொறுத்தருள வேண்டும்! பருகுவதற்கு மது அளிக்க இயலவில்லை. ஊரிலே அது பஞ்சமாயிருக்கிறது'' என்றார்.

வல்லபனுக்குச் சிரிப்பு வந்தது.

அவனும் தத்தனும் எழுந்து நடனத்தை நிறுத்தினார்கள். புதிய மனிதரை அப்பால் அழைத்துப் போனார்கள்.

''சுவாமி! தேவரீர் ஒரு வைணவரோ?'' என்று கேட்க,

அந்தப புதிய மனிதர் அவ்விருவர்களையும் மாறி மாறிப் பார்த்தார்.

உடன் வல்லபன், ''ஏன் சுவாமி! நாங்கள் என்ன தங்களைக் கண்ணுஞ்சுழலையிடப் பண்ணுகிறோமோ? கூழுக்காள் படாதீர்கள்! எம்மை யாரோ என்று நினைத்துக் கால் வாங்குதல் வேண்டா!'' என்று கூறினான்

[இதன் பொருள்: நாங்கள் தங்களை மருளுமாறு பண்ணுகிறோமோ? சந்தேகப்படாதீர்கள்! எம்மை யாரோ என்று நினைத்துப் பின்வாங்க வேண்டாம்.]

வைணவப் பரிபாஷையில் வல்லபன் பேசுவதைக் கேட்டுப் புதியவரும்,

''சுவாமி யார்? இங்குத்தைக்கான இடையாட்டம் என்னென்றறிய மாட்டிற்றிலேன்!'' என்றார்.

[சுவாமி யார்? இவ்விடத்திற்கு வந்ததற்கான காரியம் என்ன என்று அறிய சக்தியில்லாமல் இருக்கிறேன்.]

அவ்வளவில் ஒருவர்க்கொருவர் வைணவர் என்று தெரிந்துவிட்டது. வல்லபன் அவரை நோக்கி ,''சுவாமி! நாங்கள் ராஜகாரியமாக வடக்கிலிருந்து வந்திருக்கிறோம். இங்கே சிங்கப்பிரானின் சந்ததியார் யாரேனும் இருக்கிறார்களோ?'' என்று கேட்டான்.

சிங்கப்பிரான் என்று சொன்னதும் புதியவரின் முகம் பளிச்சென்று பிரசன்னமாகியது.

''அவரது குமாரர் திருமணத்தூண் நம்பி என்பார் இருக்கிறாரே வாருங்கள்'' என்று சொல்லி அவர்களை அழைத்துப் போனார்.

போகும் வழியில் நின்று கொண்டிருந்த தேவதாசிகளில் இளமையானவள் தன் இளம் தனங்களை



மென்மையாகச் சிலும்பும் வண்ணம் திரும்பி, தன் நீள் விழிகளை வண்டுபோல் பல கணங்கள் கொட்டி வல்லபனைத் தீர்க்கமாகப் பார்த்து ஒரு பெருமூச்செறிந்தாள். ஒரு கணமே வல்லபனும் அதைக் கவனித்துக் கொண்டான்.

பின்னர் அந்தப் புதியவர் ஒரு குடியிருப்புக்குள் நுழைந்து அங்கு ஒரு வீட்டில் வசித்து வந்த திருமணத்தூண் நம்பியை வல்லபனுக்கு அறிமுகம் செய்வித்தார்.

வல்லபனும் அவரை நமஸ்கரித்து, ''தங்கள் தந்தை சிங்கப்பிரானைப் பற்றி என் தாயார் நிறையச் சொல்லியிருக்கிறார்'' என்று சொல்லி, தன்னை இன்னார் என்று அறிமுகம் செய்து கொண்டான். நம்பியும் மிக்க மகிழ்ச்சி அடைந்து, ''நானும் தங்கள் தந்தை குலசேகரரைப் பற்றிக் கேள்விப்பட்டிருக்கிறேன்'' என்று சொன்னார்.

அப்பால் வல்லபன் வடக்கே விஜயநகர ராஜ்யத்தைப்பற்றிக் கூறி, கம்பணர், கோபணு முதலியவர்களைப் பற்றியும் விரிவாகக் கூறி,

''இப்போது எம் மண்டலேசுவரர் கம்பணர் இந்த ராஜ்யத்தின் நிலைமை குறித்து ஒற்று அறிந்து வர என்னை அனுப்பியுள்ளார். தாங்கள் எனக்கு உதவி புரிந்தால் நல்லது'' என்று சொல்லி முடித்தான்.

அதற்குத் திருமணத்தூண் நம்பி, ''ஐயா! என் தந்தையார் ஒய்சள வள்ளால ராஜருக்கு ஒற்றுச் சொல்லி உதவி புரிந்தார். நானும் நிச்சயம் விஜயநகரத்தாருக்கு உதவி புரிவேன். ஆனால் எங்களிடம் ஒரு வருத்தம்!'' என்று கூறினார்.

''என்ன வருத்தம், சுவாமி?'' என்றான் வல்லபன்.

''விஜயநகரத்தார் இவ்வளவு ஆண்டு காலமாய் இந்த ராஜ்யத்தின் மீது கண் திருப்பாது இருந்துவிட்டார்களே! இது நீதியோ?'' என்று கேட்டார் நம்பி.

அதற்கு வல்லபன் வடக்கே விஜயநகரத்தார் அடிக்கடி பாமினித் துருக்கியருடன் சண்டை இட நேர்ந்ததை விவரித்துக் கூறி,

''வடக்கைப் பாதுகாத்தால்தான் தென்னகத்தை வாழவைக்க முடியும். ஆகவே எல்லோரது கவனமும் வடக்கேதான் இருந்து வந்தது'' என்று சொன்னான்.

''அப்படியானால் தெற்கை மீட்பதற்கு வழியே இல்லையா?'' என்று ஆதங்கத்துடன் கேட்டார் திருமணத்தூண் நம்பி.

''இருக்கிறது. அதற்கான வழிகளை ஆராயத்தான் இப்போது தென்பிரதேச சைனியாதிபதி கோபணு முனைந்திருக்கிறார். சுல்தானிய ராஜ்யத்தின் நிலைமையும், இதன் படை விசேஷங்களையும் அறிந்து வரத்தான் எம்மை அனுப்பித்திருக்கிறார். இங்கே தங்களைப் போன்றோர் இருப்பது ஆச்சரியமாக உள்ளது'' என்றான் வல்லபன்.

''ஏன் ஆச்சரியப்படுகிறீர்கள்?'' என்று கேட்டார் திருமணத்தூண் நம்பி.

''இல்லை, 47-வருடங்களாக, அன்னியரின் கொடுமைகளைச் சகித்துக் கொண்டு இங்கே திருவரங்கத்தின் சுற்று வட்டாரத்திலேயே நீங்கள் வாழ்ந்து வருவது ஆச்சரிமாக உள்ளது'' என்றான் வல்லபன்.

''எல்லாம் திருவரங்கத்தின் மீதுள்ள அபிமானத்தால்தான்'' என்றார் நம்பி.

''அது தங்கள் பக்திக்கு எடுத்துக்காட்டாகவும் இருக்கிறது'' என்றான் வல்லபன்.

''என் பக்தி மட்டுமல்ல! இங்குள்ளோரின் வைராக்கியத்தைக் கூடக் காட்டுகிறது. உங்களுக்குத் தெரியுமா? இந்தக் கிராமத்தில் இருக்கும் அனைவரும் தினமும் காவேரிக் கரை போய் அக்கரையில் தெரியும் திருவரங்கக் கோவிலின் கோபுரத்தைத் தரிசிக்கிறார்கள். அப்படித் தரிசித்து வந்த பிறகுதான் உணவு அருந்துகிறார்கள்.''

''ஆச்சரியமாக இருக்கிறதே!'' என்றான் வல்லபன்.

''இதைவிட ஆச்சரியம் இருக்கிறது. முன்பு திருவரங்கத்தை விட்டு ஓடிப் போனவர்களின் குடும்பங்கள் சிலவும் திருவரங்கப் பிரேமையினால் மீண்டும் இங்கே திரும்பி வந்துவிட்டன. இவர்களில் அநேகர் திருவரங்கத்திலேயே வாழ்கிறார்கள்'' என்றார் நம்பி.

''என்ன? திருவரங்கத்தில் வாழ்கிறார்களா?'' என்று கேட்டான் வல்லபன்.



கமலஹாசன் குல்லாப் போட்ட நவாப்பாகத் தோன்றி ஆறு பெண்களைப் பலி கொடுக்கும் படம்தான் "வயநாடன் தம்பான்" (மலையாளம்). இதில் இவருக்கு ஜோடி லதா.

எஸ். எல். மணி.

"ஆமாம். துருக்கியக் காவலாளருக்குப் பரிசில்கள் கொடுத்து, தொந்திரவுகள் ஏதும் ஏற்படாவண்ணம் பார்த்துக் கொண்டு அந்தப் புண்ணிய நகரிலேயே இரகசியமாக வாழ்கிறார்கள்" என்று கூறினார் நம்பி.

"மிகவும் ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றான் வல்லபன்.

"இதைவிட ஆச்சரியம் ஒன்று உண்டு" என்றார் நம்பி.

"என்ன?" என்றான் வல்லபன்.

"அங்கே திருவரங்கனுக்குப் பூஜைகள் செய்தும் வருகிறார்கள்!"

வல்லபனுக்குத் தூக்கிவாரிப் போட்டது.

"தாங்கள் சொல்வது உண்மையா, சுவாமி?" என்று கேட்டான்.

"உண்மைதான்! ஆனால் கோவிலைத் திறந்து செய்வதில்லை. கோவிலின் திக்கை நோக்கிச் செய்கிறார்கள். கோவில் ஓர மாளிகையில் திருவரங்கனின் விக்கிரகத்தை வைத்துப் பூஜை செய்து கொண்டு வருகிறார்கள்!" என்றார் நம்பி.

"திருவரங்கன் விக்கிரகமா?" என்று துள்ளிக் கொண்டு கேட்டான் வல்லபன்.

"ஆமாம். அவரது விக்கிரகம்தான்!" என்றார் நம்பி.

வல்லபனது ஆச்சரியம் தாளவில்லை. "சுவாமி! இங்கே ஏது சுவாமி திருவரங்க விக்கிரகம்? அந்த விக்கிரகம் நகரை விட்டுப் போய் வெகுகாலம் ஆயிற்றே, உமக்குத் தெரியாதா?" என்றான்.

"தெரியும்! விக்கிரகத்தை எங்கோ சத்தியமங்கலத்தில் எழுந்தருள வைத்ததாகக் கேள்விப்பட்டிருக்கிறேன்!" என்றார் நம்பி.

"கேள்விதான் பட்டிருக்கிறீர்களா? அந்த விக்கிரகம் என்னவாயிற்று என்று எதுவும் தெரியாதா?" என்றான் வல்லபன்.

"அது தெரியாது! ஆனால் பல வருடங்களுக்கு முன் மேற்கேயிருந்துதான் யாரோ ஒருவர் அந்த அரங்க விக்கிரகத்தை இரகசியமாக இந்த ஊருக்குக் கொணர்ந்து வந்தார்கள்."

"அரங்க விக்கிரகத்தையா? கொண்டு வந்தவர் யார்? அவர் எங்கிருந்து கொண்டு வந்தார்?"

"அது தெரியாது. கொண்டு வந்தவர் அன்று ராத்திரியிலேயே திடீரென்று இறந்து விட்டார். அவர் எங்கிருந்து, எப்படிக் கொண்டு வந்தார் என்று எதுவும் தெரிந்து கொள்ளவில்லை. ஆனால் இது திருவரங்க விக்கிரகம் என்று அவர் சொன்னதை மட்டும் நாங்கள் ஏற்றுக் கொண்டோம். அரங்கனை இந்த க்ஷேத்திரத்திற்கு இரகசியமாகக் கொண்டு வந்துவிட்டேன். இனி வழிபடுவது உங்கள் பொறுப்பு என்று சொன்னார்" என்றார் நம்பி.

வல்லபனுக்கு எல்லாம் வேடிக்கையாக இருந்தது.

"சுவாமி! அரங்கர் எவ்விதமாக சத்தியமங்கலம் போனார், அதன் பிறகு என்ன நடந்தது என்று எதுவும் தங்களுக்குத் தெரியாதா?" என்று கேட்டான் வல்லபன்.

"அப்படி ஏதாவது விசேஷமாய் நடந்ததா?" என்று கேட்டார் நம்பி.

அப்போதுதான் வல்லபனுக்கு ஒன்று பளிச்சிட்டது. கடந்த 47-வருடங்களுக்குள் ஒருதலைமுறை கிட்டத்தட்ட மறைந்து மறுதலைமுறைவந்து விட்டது. பழைய கதை எல்லாம் பழைய தலைமுறையோடு மறைந்து விட்டது. புதிய தலைமுறைக்கு எதுவும் தெரியாமல் போய்விட்டது.

அவனுக்கு அதனால் வருத்தம் பெருகியது.

-தொடரும்



# மதுரா விஜயம்

### ஸ்ரீவேணுகோபாலன்

வல்லபன் யோசனையில் ஆழ்ந்தான்.

ஒரு புதிய தலைமுறையே உருவானதால் ஒரு பழைய கதை அப்படியே மறைந்துவிட்டது.

பழைய கதையா அது?

ஆமாம், பழைய கதைதான் என்று நினைத்தான் வல்லபன். ஆனால் அந்தக் கதை அவன் மனத்தில் சதா வாழ்ந்து கொண்டே இருந்து விட்டதால் அவனுக்கு எப்போதும் அது புதிதாகவும், நேற்றுத்தான் நடந்தது போலவும் பிரமை கொடுத்துக் கொண்டிருந்தது.

மற்றவர்களுக்கு அப்படியில்லை.

47 வருடங்களுக்கு முன் அரங்கன் ஊரைவிட்டுப் புறப்பட்டவர்.

அவர் சத்தியமங்கலத்தில் கடைசியாக இருந்தது கூட 28 ஆண்டுகளுக்கு முன்பு!

இப்படி நீண்ட கால இடைவெளிகள் ஓடியிருக்கும் போது, மக்கள் நினைவுகளிலிருந்து அரங்கனைப் பற்றிய கதை பையப் பையத் தேய்ந்து மறைந்து போனதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

அதைச் சொல்வதற்கான பெரியவர்களும் கிட்டத் தட்ட மறைந்து விட்டிருந்தார்கள்.

வல்லபன் மனத்திலே மட்டும் நினைவு எதனால் இருந்து வந்தது?

வாசந்திகாவைப் போன்ற ஒரு தாயார் தூண்டி விட்டுக் கொண்டே இருந்ததனால்தானே!

இப்படியெல்லாம் நினைத்து அவன் யோசனையில் ஆழ்ந்துவிட்டதை அறிந்த நம்பி, ''ஐயா! என்ன யோசனை?'' என்று கேட்டார்.

வல்லபன் திடுக்கிட்டு நிமிர்ந்து பார்த்தான்.

''இல்லை! உங்களிடம் ஒரு நீண்ட இராமாயணத்தையே கூற வேண்டியிருக்கிறது'' என்றான்.

''ஏன்?'' என்று கேட்டார் நம்பி.

''திருவரங்கனின் விக்கிரகம் இப்போது செஞ்சியில் எழுந்தருளி உள்ளது'' என்றான் வல்லபன்.

''என்ன? திருவரங்கனின் விக்கிரகமா? செஞ்சியிலா?'' என்று நம்பாதவர் போலக் கேட்டார் நம்பி.

அங்கிருந்த மற்றவர்களும் ஏதோ புதிரைக் கேட்டவர்கள் போல் வல்லபனைப் பார்த்தார்கள்.

''ஆமாம்! நான் சொல்வதே உங்களுக்கு விசித்திரமாக இருக்கும். அதன் பின்னால் ஒரு 47 வருடக் கதையே இருக்கிறது. அந்தக் கதையைத்தான் நான் இராமாயணம் என்றேன்'' என்றான் வல்லபன்.

''அப்படியானால் நாங்கள் திருவரங்கத்திலே இரகசியமாக வைத்துக் கும்பிடும் மூர்த்தி அரங்கனின் விக்கிரகம் இல்லையா?'' என்று கேட்டார் புதியவர்.

''நிச்சயமாக இல்லை'' என்றான் வல்லபன்.

அங்குள்ளவர்கள் அவன் சொல்லை ஏற்றுக்கொண்டவர்கள் போல் தெரியவில்லை. அதுவே வல்லபனுக்கு விசித்திரத்தையும் வேதனையையும் கொடுத்தது.

''அப்போது அந்த இராமாயணக் கதையை எம்மிடம் சொல்லுங்கள்!'' என்றார் நம்பி.

''சொல்கிறேன்'' என்றான் வல்லபன்.

பிறகு ஒரு முகூர்த்த நேரம் வல்லபன் அரங்கன் திருவரங்கத்திலிருந்து புறப்பட்டதிலிருந்து நடந்ததை எல்லாம் கூறி சத்தியமங்கலத்தில் வாழ்ந்தது, சந்திரிகிரிக்காட்டில் உறைந்தது, கடைசியில் சிங்கவரம் (செஞ்சி) அடைந்திருப்பது வரையுள்ள வரலாறுகளைச் சுருக்கமாகக் கூறி முடித்தான்.

அவன் சொல்வதைக் கேட்ட திருமணத்தூண் நம்பி அப்படியே யோசனையில் ஆழ்ந்தார்.

அப்போது தத்தன், ''சுவாமிக்கு இன்னும் சந்தேகமோ?'' என்று கேட்க,

அவரும், ''அப்படி இல்லை! நடந்ததை நேரில் பார்த்தவர்கள் இராமையாலே, அது சந்தேகத்திற்கிடமாகப் போக வாய்ப்பிருக்கிறது. ஆனால் இங்கே அரங்கனைப் பற்றிய செய்தி எப்படியானால் என்ன? நமக்கு வேண்டியது இந்த ராஜ்யத்தின் மீட்புதானே! அதற்கான முயற்சிகளில் உடனே இறங்கிவிடுவோம். அதற்கு மேல் நடக்க வேண்டியவை நடக்கவிருக்கும்படி நடந்து விட்டுப் போகிறது'' என்று கூறினார்.

ஒருவர் அதுவரை கேட்டிராத ஒரு விருத்தாந்தத்தை ஏற்றுக் கொள்வது என்பதற்கு எப்படியும் சிறிது காலம் பிடிக்கத்தான் செய்யும் என்று எண்ணினான் வல்லபன்.

அன்று இரவு நம்பியின் வீட்டில் அவர்கள் உணவு அருந்தி விட்டு உறங்கச் சென்ற போது, வல்லபனுக்குத் திடீரென்று அந்த இளைய தேவதாசியின் தோற்றமும், பார்வையும், பெருமூச்சும் நினைவிற்கு வந்தன. அவனுக்கு அவை மதுராவை நினைப்பூட்டி விட்டதால், ''யாரைப் பார்த்தாலும், மதுரா, நீயாகவே இருக்கிறாய்!'' என்று புலம்பி வெகு நேரம் உணர்ச்சிகளில் தேம்பி நித்திரை போனான் அவன்.

மறுநாள் காலையில் திருமணத்தூண் நம்பி இரு இளைஞர்களின் இருப்பிடம் வந்து, "சித்தமாக இருங்கள்! மதியத்தில் கண்ணனூர் போகிறோம்" என்று கூறினார்.

ஆச்சரியமடைந்த வல்லபன், "கண்ணனூர் நாம் போக முடியுமா?" என்று பாதி சந்தேகத்தோடு கேட்டான்.

"ஏன், நிச்சயமாகப் போகிறோம்" என்றார் நம்பி.

"இரகசியமாகத்தானே?" என்றான் வல்லபன்.

"இல்லை! பகிரங்கமாகவே போகிறோம்!" என்றார் நம்பி.

"என்ன சுவாமி பரிகசிக்கிறீர்கள்? சுல்தானியர் நம்மை அடையாளம் கண்டு கொள்ள மாட்டார்களா?" என்றான் தத்தன் இடைமறித்து.

"கண்டு கொள்வார்கள். ஆனால் நாங்கள் சுல்தானிய அரசரின் நன்மதிப்பைப் பெற்றிருக்கிறோம். என் தந்தை சிங்கப்பிரான் பல காணிக்கைகளை சுல்தானுக்குக் கொடுத்து அவரது தயவைப் பெரிய அளவு பெற்றிருந்தார். அதன் மூலம் திருவரங்கக் கோவிலை முழு அழிவிலிருந்தும் காப்பாற்றினார். நானும் என் தந்தை வழியைத்தான் பின்பற்றுகிறேன். அதன் மூலம் கோவிலை யவனர்கள் மேலும் பாழ் செய்யாமல் காப்பதும் அன்றி இந்த வட்டாரத்தில் உள்ள வைணவப் பரிசனங்களையும், குடும்பங்களையும் காப்பாற்றி வருகிறேன்" என்றார்.

பிறகு திருமணத்தூண் நம்பி எதையோ சொல்ல வாயெடுத்து அதைப் பேசாமல் இருப்பதைப் பார்த்து வல்லபன், "ஐயா! தாங்கள் எதையோ கூற நினைத்துத் தயங்குகிறீர்கள்!" என்றான்.

"ஆமாம்...." என்று இழுத்தார் நம்பி.

"தாராளமாகச் சொல்லலாமே!" என்றான் வல்லபன்.

"சொல்லத்தான் வேண்டும்! எவ்வளவு நாழிகை தயங்க முடியும்!" என்று தம்மைச் சித்தப்படுத்திக் கொண்டு தொடங்கினார்.

"ஐயா! நாங்கள் சுல்தானிய அரசரைப் பார்க்கப் போவதாக இருந்தால், பொன், மது, பெண் மூன்றையும் எடுத்துச் செல்வோம்."

"சரி" என்றான் வல்லபன் சிறிது ஆச்சரியத்துடன்.

"பொன்னும், மதுவும் கிடைத்துவிடும். பெண்ணைத் தேவதாசி குலத்திலிருந்து பெற்றுக் கொள்வோம்."

"நல்லது."

"இதற்குத் தேவதாசிகள் யாராவது முற்பட்டு வருவார்கள். அவர்களுக்கு அது ஒரு தியாகம்!"

"அப்படியா?"

"ஆமாம்! அவர்களின் தியாகம் அளப்பரியது. நம்பிக்கையே வாழ்கிறது."

"சரி!"

"இப்படித் தியாகம் செய்ய முன் வரும் பெண், ஒன்று சுல்தானிய அந்தப்புரத்தில் ஆயுட் பூராவும் அகப்பட்டுக் கொண்டு விடுவாள். அல்லது அவளைச் சுகித்த பிறகு சுல்தான் அவளைப் போக விடுத்தால், இங்கே வந்து 'யவன எச்சில் பட்டவள்' என்று எந்தக் குலத்தாருடனும் சேராமல் தனியாக ஒதுக்குப்புறத்தில் வாழ்வாள்!"

"ஆச்சரியமாக இருக்கிறதே!" என்றான் வல்லபன்.

"எவ்வகையிலும் அந்தப் பெண்ணின் வாழ்க்கை சோகமாகவே இருக்கும். ஆகவே இந்தத் தியாகத்தை அவர்கள் செய்ய வருமுன், நாங்கள் அவளுக்கு விருப்பமான வரம் ஒன்றைக் கொடுப்போம்!"

"அது நியாயந்தான்" என்றான் வல்லபன்.

"இம்முறைக்குத் தாரா என்ற பெண் தியாகம் செய்ய வந்திருக்கிறாள். அவளிடம் அவள் விருப்பத்தைக் கேட்டோம். அவள்......" என்று இழுத்தார் நம்பி.

"என்ன சொல்லுங்கள்!" என்றான் வல்லபன்.

"அவள் தங்களுடன் இரு நாழிகை தனியாக இருக்க வேண்டும் என்று சொன்னாள்" என்றார் நம்பி.

திடுக்கிட்டான் வல்லபன்.

"என்ன சுவாமி சொல்கிறீர்கள்?" என்று கலக்கமுடன் கேட்டான்.

நம்பி தலைகுனிந்து நின்றார். பிறகு மெள்ள நிமிர்ந்து, "ஐயா! தங்கள் கலக்கத்தை அறிவேன். சங்கடத்தையும் அறிவேன். ஏனெனில் நாங்கள் இதில் எதுவும் செய்வதற்கில்லை" என்றார்.

"சுவாமி! பொறுக்க வேண்டும். நான் இதற்கு உடன்படேன்" என்றான் வல்லபன்.

"ஐயா!" என்றார் நம்பி. அவர் கண்களே தழதழத்திருந்தன. "ஐயா! நான் சொல்வதைக் கேளுங்கள்! இது அளப்பரிய தியாகம். ஒரு பெண் தானாகவே முன் வந்து தன் வாழ்க்கையைச் சூன்யம் ஆக்கிக் கொள்கிறாள். நிச்சயம் இது ஒரு மகத்தான தியாகம். இதற்கு ஈடு எங்கும் கிடையாது. யாருக்காக இந்தத் தியாகத்தைச் செய்கிறாள்? அதை யோசியுங்கள்! அரங்கனுக்காக! எமக்காக! உமக்காக. உம் விஜயநகரத்திற்காக! ஆமாம்! இவை எல்லாவற்றின் விமோசனமே இந்தப் பெண்ணின் தியாகத்தில்தான் அடங்கி இருக்கிறது. ஐயா! அதைக் கவனித்தீர்களா? இவள் உதவியால் நாட்டுக்கே விமோசனம் ஏற்படலாம் என்று இருக்கும் போது, இவள் கடைசி விருப்பத்தை நிறைவேற்றுவது நம் கடமை! நம் தர்மம்! அதுதான் நியாயம்!" என்று உணர்ச்சி பொங்கக் கூறினார்.

அடுத்த அரை நாழிகையில், வல்லபனும் தாரா என்ற தேவதாசியும், ஒரு மச்சு அறைக்குள் தனியாக விடப்பட்டு இருந்தார்கள். வல்லபன் சோகத்தோடும். விரக்தியோடும் இருந்தான். தன் எதிரே கதவோரம் வந்து நிற்கும் பெண்ணை அவன் வெகுநேரம் கண்ணெடுத்தும் பார்க்கவில்லை.

பிறகு யார்தான் இப்படி ஒரு விசித்திர வரத்தைக் கேட்டார்கள் என்று அறியத் தலையை நிமிர்த்தியபோது அங்கே முந்திய நாள் வரவேற்பில் பார்த்த இளமையான தேவதாசி நிற்பதைக் கண்டான்.

அதைக் கண்டு திடுக்கிடும்போது, அவளது கண்ணிலும் முகத்திலும் ததும்பிய சோகமான குழைவு அவன் நெஞ்சத்தைத் தொட்டது.

அவன் பார்த்ததைக் கண்டு அவள் தன் கரிய விழிகளால் ஆழ்ந்து அவனைப் பார்த்தாள். பிறகு, "ஐயா!" என்றாள்.

அவன் அவளைப் பார்த்தான்.

"நான் தங்களை இங்கே ஏதோ கேவல நோக்கத்துடன் அழைத்தேன் என்று நினைத்து விடாதீர்கள்! என் விருப்பமே இவ்வளவுதான்! தங்களுடன் இரு நாழிகை தனிமையாக இருக்க வேண்டும்! அவ்வளவுதான்! இதற்கு மேல் எதுவும் வேண்டாம்!" என்றாள்.

வல்லபன் பேசாமலிருந்தான். பிறகு, "இதனால் உனக்கு என்ன பிரயோசனம்?" என்று கேட்டான் வல்லபன்.

"அப்படிச் சொல்ல முடியுமா?" என்றாள் அவள். பிறகு, "என் வாழ்க்கையில் சுவர்க்க மயமான சிறிது நேரத்தை அனுபவிக்கிறேன். அவ்வளவுதான்! இறைவனையே மணாளராக வரித்த பின் இனி வாழ்க்கையில் என்ன இருக்கிறது? இருந்தாலும் பூமியில் சில மானிடர்களையே தெய்வ அம்சங்களோடு பார்க்கும்போது மனம் அவர்கள்பால் செல்கிறது. தெய்வம் மனுஷ்ய ரூபேண என்றுதானே சொல்வார்கள்! தங்களைப் பார்த்ததுமே தாங்கள் தெய்வ அம்சம் உள்ளவர் என்று தெரிந்தது!" என்றாள்.

''எப்படிச் சொல்கிறீர்கள்?'' என்று குறுக்கிட்டுக் கேட்டான் வல்லபன்.

''ஐயா! நடனம் ஆடும்போது தங்களைப் பார்த்தேன். தங்கள் கண் என் மீது விழவில்லை. பிறகு போகும் போதும் குறுக்கே நின்று உங்களைப் பார்த்தேன். அப்போதும் உங்கள் பார்வை என்னை வழுவியே சென்றது. என்னைச் சாதாரணமாக எல்லோரும் ரூபவதி என்று தான் சொல்வார்கள். என்னைத் தாங்கள் உதாசீனப் படுத்த வேண்டுமானால் இரண்டு காரணங்கள் இருக்க வேண்டும்'' என்றாள் தாரா.

''என்ன காரணங்கள்?''

''ஒன்று. மனத்தில் உள்துறவு கொண்டு பெண்களை விலக்கி இருக்கிறீர்கள். அல்லது தாங்கள் யார் மீதோ பிரேமை கொண்டு அவளை நினைத்திருப்பதால் மற்ற எல்லாப் பெண்களையும் வெறுத்திருக்கவேண்டும். இந்த இரண்டு காரணங்களில் எது இருந்தாலும் தாங்கள் தெய்வாம்சம் கொண்டவர்தான். கடவுளை நினைத்தாலும் சரி, பெண்ணை நினைத்தாலும் சரி, ஒன்றையே நினைத்து ஒன்றிலேயே உருகுகிறவர்கள் தெய்வ அம்சம் உடையவர்கள்தான்!'' என்றாள் தாரா.

வல்லபனின் மனம் அதிர்ந்தது. அவள் சொன்னது அவனை வெகுவாகப் பாதித்தது. மதுராவை நினைத்தான். 'மதுரா! உன்னை நினைப்பதால் மற்ற யாரையும் நான் விலக்குகிறேன். என் பிரேமைக்கு இந்த தேவதாசிப் பெண்ணின் சொல்லே சாட்சி' என்றான்.

அவன் கண்களில் நீர் பனித்து விட்டதை அறிந்த தாரா, ''ஐயா ஐயா! தங்களுக்குக் கலக்கம் ஏன்? தங்கள் மெல்லிய மனத்தைத் துன்புறுத்தி விட்டேனா? தாங்கள் என்ன, பிரேமையில் சிக்கியவரா? அவர்களுக்குத்தான் நொடியில் கண்ணீர் வரும். அவர்களது இதயம் பஞ்சு போன்றது'' என்றாள்.

அவளது மிருதுவான மொழிகள் மேலும் அவன் மனத்தைத் தூண்டிக் கரைய வைத்தன. ஸ்படிகக் கற்கள் உருளுவது போல் கண்ணீர் மளமளவென்று உருண்டு ஓடியது.

கண்களை இறுக மூடினான்.

''ஐயா!'' என்றாள் அவள் கனிவுடன. அருகில் வந்து நின்றாள்.

அவனால் மறுமொழி சொல்ல இயலவில்லை.

''ஐயா! தாங்கள் பக்திக்கு ஆட்பட்டீரோ?'' என்று கேட்டாள். அவன் பேச முடியாததை உணர்ந்து. ''பிரேமைதானே?'' என்று அவளே கேட்டாள்.

அவன் கண்கள் ஆனந்த பாஷ்பமாக உதிர்த்தன. முகத்தில் மழையை ஊடுருவிக் கொண்டு வரும் இளவெய்யில் போல் அவனது சோகத்தைத் தாண்டி ஒரு முறுவல் வெளிப் பட்டது. ''ஆமாம்!'' என்பது போல் தலை அசைத்தான் அவன்.

அவள் பச்சா தாபத்துடனும், மகிழ்ச்சியோடும் பின் நகர்ந்தாள்.

''ஐயா! தூய பிரேமை கொண்டவரைப் பார்ப்பது கூட ஓர் இன்பம். அவர்கள் முகம் ஓர் ஆன்ம வெளிச்சத்தில் எப்போதும் பிரசன்னமாயிருக்கும். நொடியில் கண்ணீர் வரும். இனமறியாமல் வரும் புன்னகை. மெழுகாக வரும் வார்த்தைகள். தூரத்தையே அடிக்கடி பார்க்கும் கண் இவையெல்லாம் தூய பிரேமையின் வெளி அறிகுறிகள். அதை நேற்றே சந்தேகித்து விட்டேன். இன்று தங்கள் வாயால் அதை உறுதியாக்கி விட்டீர்கள். ஐயா! நான் இந்தக் கணமே பரவசமாகிறேன். இந்தச் சிறிது நாழிகையில் ஒரு பிரேமையின் சன்னிதியில் நிற்க வாய்ப்புக் கிடைக்க நான் பெரிய அதிர்ஷ்டசாலி! இந்தக் கண்களையே நான் வாழ்நாள் முழுதும் நினைத்துக் கொண்டிருப்பேன். இவை தான் வருங்காலம் முழுவதும் நான் அசை போட இருக்கும் இன்பங்கள்! இவைகளை நினைத்துக் கொண்டே இருந்தால், என் தியாகத்தின் துயரங்கள் பொடிப் பொடியாக மறைந்து விடும். ஐயா! உங்களுக்கு நான் மிகவும் நன்றியுடையேன்! உங்களுடைய இந்த நேரத்தைக் கவர்ந்தது கூட எவ்வளவு பாபம்! ஏனெனில் பிரேமிக்கிறவர்களின் நினைவுகள் ஓசையில்லாமல் வழுக்கிக் கொண்டே சீராய்ப் பாத்திரத்திலிருந்து பாத்திரம் விழும் எண்ணெயின் தாரை போல், பிரேமிக்கப்பட்டவரையே சதா நினைத்துக் கொண்டிருக்கும்.. அந்த இடையறுது ஓடும் புண்ணிய நினைவுகளில் சிறிது நேரம் தடை செய்ததற்குக் கூட நான் வருந்துகிறேன். பொறுத்தருள வேண்டும், ஐயா! வருகிறேன்'' என்று சொன்னாள்.

அவனை வாத்சல்யத்துடனும், கருணையுடனும், இரக்கத்துடனும் பவித்திரமான அன்புடனும் பார்த்தாள்.

ஏதோ மகானைப் பார்த்தது போன்ற புளகிதம் அடைந்து கீழே விழுந்து நமஸ்கரித்தாள்.

''வருகிறேன்!'' என்றாள்.

கதவோரம் போய் நின்றாள்.

''வருகிறேன்'' என்றாள்.

திரும்பிப் பார்த்தாள்.

''வருகிறேன்!'' என்றாள்.

தயங்கினாள்.

கனிவுடன் அவனைப் பார்த்தாள்.

முறுவலித்தாள்.

''நீங்கள் பிரேமை வைத்திருக்கும் பெண் உங்களை எப்போது நினைத்துக் கொண்டிருப்பாள்!'' என்றான்.

''இப்போது கூட நினைத்துக் கொண்டிருப்பாள்'' என்றான்.

''இந்தக் கணத்திலும் கூட!''

''அழாதீர்கள்! அவள் உங்களை மறக்க மாட்டாள்'' என்றாள்.

டக்கென்று கதவை மூடினாள்.

வெளியே அவள் கண்ணீரில் விழுந்தாள்.

உள்ளே அவன் கண்ணீரில் விழுந்தான்.

—தொடரும்.

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

மச்சுக்குள் வல்லபன் கண்ணீர் உகுத்தான். மதுராவைப் பாராமல் கழிந்த ஆண்டுகளை எண்ணிப் பார்த்தான். இத்தனை வருஷம் அவள் தன்னை நினைத்து இருந்திருப்பாளோ என்று நினைவு ஓடியது. 'நிச்சயம் நினைத்திருப்பாள். மறந்திருக்க மாட்டாள். எங்கள் பிரேமை பொய்யாகி விடாது' என்று எண்ணினான் அவன்!

மதுராவை அவள் வீட்டில் கொண்டுபோய் விட்ட பிறகு, ஒரே ஒரு முறைதான் மீண்டும் இந்தப் பத்து வருடங்களில் தென்பாண்டியத்திற்கு அவன் போயிருக்கிறான். வடக்கே விஜயநகரத்தார் பாமனிக்காரர்களுடன் சண்டையிட்டு எதிர்பாராமல் தோல்வி அடைந்த நேரம் அது! வீரர்கள் தேவைப்பட்டதால் தென்பாண்டியர்கள் ஏதாவது உதவுவார்களோ என்ற ஆசையில் கம்பணர் அவனை அங்கே அனுப்பியிருந்தார்.

அப்போது எவ்வளவு ஆவலுடன் போனான் அவன்! அவளுடன் எவ்வளவு பேச நினைத்தான் அவன்!

ஆனால் நடந்தது என்ன?

குலசேகரப் பாண்டியர் குடிபெயர்ந்து மலையாளம் போய்விட்டார்.

பாண்டிய நாட்டில் இருந்தால் தன் மகளை மீண்டும் யாராவது அபகரித்துச் சென்று விடுவார்களோ என்று அவருக்குப் பயம்!

ஏனெனில் பாண்டிய சிங்காதனத்திற்கு, நேர்மை வழியில் பார்த்தால், குலசேகரப் பாண்டியர்தான் உண்மையாக உரிமை உள்ளவராக இருந்தார். இதனால் இதர பாண்டியக் கிளைக் குடும்பத்தினரால் தன் மகளுக்கு ஆபத்து எப்போதும் வரும் என்று நம்பினார்.

மதுராவை எந்த விதத்திலும் தீங்கு நேராமல் காப்பாற்ற வேண்டும் என்று நினைத்தார்.

எனவே, குடும்பத்தின் பாதுகாப்புக்கு மலையாள ராஜ்யந்தான் சிறந்தது என்று அங்கு போய்விட்டார்.

அதை அறிந்து கொண்ட வல்லபன், அவர் போயுள்ள ஊர் எது என்று எங்கெங்கோ விசாரித்துப் பார்த்தும் யாராலும் சொல்ல முடியவில்லை.

இது வல்லபனுக்குப் பெரும் மனக்குறை!

இதுவே ஏமாற்றமாகவும் தாபமாகவும் பல்லாண்டுகளாக நீடித்து விட்டன.

இந்த ஆண்டுகளிடையே மதுரா அவனை மறந்திருப்பாளோ என்ற பயமும் பெரிதாய் அவனிடம் வளர ஆரம்பித்தது.

மதுராவின் சின்னமாக விளங்கிய அவளது பரிசிலான குறுவாள் அவனை விட்டுப்போனது அவனது துன்பத்தைப் பெரிதாக வளர்த்தது.

அந்த அதிர்ச்சியிலிருந்து அவன் இன்னமும் மீளாமல் இருந்தான்.

மதுரா அவனது வாழ்க்கையை விட்டு மறைந்ததற்கு இது சூசகமாக அமைந்து விட்டதோ என்று கூட எண்ணினான்.

இப்படிப்பட்ட சமயத்தில் முன்பின் தெரியாத இந்தத் தேவதாசி, ''உன் பிரேமைக்கு உகந்தவள் உன்னை இன்னும் நினைத்துக் கொண்டிருக்கிறாள்'' என்று சொன்னது எவ்வளவு அமிர்தமாக இருந்தது! எவ்வளவு ஆறுதலாக இருந்தது.

வல்லபன் கண்ணீர் அடங்க வெகு நேரம் ஆயிற்று.

அன்று மதியத்தில் வல்லபன், தத்தன், திருமணந்தூண் நம்பி, தாரா, இன்னும் வேலையாட்கள் யாவரும் புறப்பட்டார்கள்.

வல்லபனும் தத்தனும் சாதாரணப் பணியாட்கள் போல் வேடம் தரித்துக் கொண்டார்கள். தாரா ஒரு பல்லக்கில் ஏறி வந்தாள்.

நம்பியைக் கண்டதும் கண்ணனூர்க் கோட்டையின யவன வீரர்கள் வணக்கத்துடன் வழி விட்டார்கள்.

உள்ளே ஊருக்குள் சென்று சுல்தானிய மன்னரைத் தேடும் போது அவர் அரண்மனையில் இல்லை,

## பழகிப்போன பொய்கள்

''இதை உங்க வீடுன்னு நெனச்சுக்குங்க!''

''இன்று வரை நான் ஒரு பைசாக் கூடக் கை நீட்டி வாங்கினதில்லை!''

''இப்பத்தான் சார், காப்பி சாப்பிட்டு வந்தேன். இப்ப எதுக்குங்க காப்பி?''

''ஆபீசிலே எல்லா வேலையையும் நானே இழுத்துப் போட்டுக் கொண்டு வேலை செய்யறேன்!''

''நீங்க எதுக்கு சார் வந்தீங்க? ஒரு வார்த்தை சொன்னா நானே வந்திருப்பேனே?''

''நான் ஏன் பொய் பேசணும்?''

''உங்க மாதிரி ஆளுங்க இருப்பதினால்தான் மழையே பெய்யறது சார்!''

''அடடா, இப்பத்தான் ஒருத்தருக்கு ஐம்பது ரூபாய் கொடுத்தேன். கொஞ்சம் முன்னாடி வந்திருந்தா கொடுத்திருப்பேனே?''

''இந்தத் துணி பத்து வருசத்துக்குச் சாயமே போகாதுங்க!''

''உலகம் கெட்டுப் போச்சு சார்.!''

பருக்.



யானப் பூங்காவில் இருக்கிறார் என்று தெரிய வந்

அதற்காக நம்பி தயங்கி விடாமல் நேராக உய்
ா வனந்திற்குப் போனார். அங்குள்ள காவலாளி அலி
ம் தம் பெயரைச் சொல்லிவிட, அடுத்த சிறிது
ிகைக்குள் அவர் உள்ளே அழைக்கப்பட்டார்.

அந்த வனத்தின் பளிங்கு நிற மாளிகையில் சுல்
் முப்ராக்ஷா சுகமாகத் தலையணைகளில் சாய்ந்து
ண்டு, ''வா! நம்பி வா! இன்று என்ன கொண்டு
தாய்? மது கிடைத்ததா? மேற்கத்திய மது! அதை
ந்தாமல் என் நாக்கு உலர்ந்துவிட்டது'' என்றார்.

அவர் வார்த்தையில் இழுத்து இழுத்துப் பேசுவ
ருந்து அவர் பாதியும் போதையில் இருக்கிறார் என்று
ிந்தது. சுற்றிவர விதவிதமான அழகிகள் தங்கள்
டியான உடம்புகளைக் காண்பித்துக் கொண்டு வெவ்
ு நிலைகளில் அமர்ந்திருந்தார்கள்.

அவர்கள் எல்லோருமாய்ச் சேர்ந்து வல்லபனைப்
க்கும் போது நூறு நீலோத்பலங்கள் அவனைத் திடீ
ென்று எதிர்ப்பட்டாற் போலிருந்தது.

நம்பி சுவாதீனமாக சுல்தான் முன் வணங்கி
ு, ''பிரபு! அடியேனால் ஆன பிரயத்தனங்களை முழு
செய்து விட்டேன். மலையாளத்திற்குக்கூட ஆட்
களை அனுப்பினேன். மேற்கத்திய மது கிடைத்த பாடி
ல்லை! சீக்கிரம் கிடைத்துவிடும்'' என்றார் வினயமாக.

''நீ சுத்த மோசம்! மோசம்! என்ன நீ சொல்றே,
லேலா!'' என்று பக்கத்தில் ஒரு பெண்ணை நிமிண்டினார்,

லேலா நிரம்ப அழகாக நெளிந்தாள்.

''அப்போ வேறே என்ன கொண்டு வந்திருக்
கிறாய்?'' என்றார் சுல்தான்.

நம்பி சமிக்ஞை காட்ட, பல்லக்கு முன்னே வந்து
நிற்க, அதிலிருந்து தாரா கீழே இறங்கினாள்.

சுல்தானின் கண்கள் பளிச்சிட்டன.

''பா! பா! பா!'' என்றார்.

தன் நீள் விழிகளால் சுற்றி வரப் பார்த்துக்
கொண்டு தாரா அடி எடுத்து நடந்தாள்.

சுல்தானின் அருகில் போனதுதான் தாமதம், லபக்
கென்று அவர் அவளை இழுத்து இறுக அணைத்து அவளது
அதர அமுதத்தை நீண்ட நேரம் பருகினார்.

வல்லபனுக்கு இரத்தம் கொதித்தது. தூய பிரே
மையைப் பற்றிப் பேசிய பெண் பலவந்தமாக இச்
சைக்கு ஆளாவது எவ்வளவு கொடுமையாக இருந்தது!

சுல்தானிடமிருந்து தன்னை விடுவித்துக் கொண்ட
தாரா சடக்கெனத் திரும்பி வல்லபனை ஒருமுறை



பார்த்து விட்டுப் பிறகு துக்கத்துடன் வேறுபுறம் திரும்பிக் கண்களைப் படபடவென்று கொட்டினாள்.

சுல்தான் முன்னால் நம்பி பொன் நகைகளைக் காணிக்கைகளாக வைத்தார். பட்டு வஸ்திரங்களையும் அடுக்கினார்.

சுல்தானின் கண்கள் பளபளத்தன.

கோவில் நிலங்களின் கணக்குகளைக் கேட்டுவிட்டு, (நிலங்களை சுல்தான் தமக்கு எடுத்துக்கொண்டிருந்தார்) நம்பியை அனுப்பிவிட்டார் சுல்தான்.

இரவு கண்ணனூர்ச் சத்திரத்தில் எல்லோரும் தங்கினார்கள். நம்பி எதுவும் உண்ணவில்லை. மற்றவர்கள் பழங்களை அருந்தினார்கள். ஊரில் வேத மார்க்கத்தைச் சேர்ந்த எந்த மனிதருமே இல்லை. சத்திரங்களில் மாமிச வாடை அடித்துக் கொண்டிருந்தது.

மறுநாள் நம்பி யவனத் தளபதியைப் பார்க்கப் போனார். அவரும் போதையில் இருந்தது வல்லபனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

நம்பி கொண்டு வந்த பொன் காணிக்கைகளைப் பெற்றுக் கொண்டு, ''ரொம்ப சந்தோஷம். ரொம்ப சந்தோஷம்!'' என்று கூறினார் அவர்.

''தளபதிகளே! என் உறவினர்கள் இவர்கள்! ஊர், கோட்டை, கொத்தளங்கள் எல்லாவற்றையும் பார்க்க வந்திருக்கிறார்கள்!'' என்றார் நம்பி.

''நன்றாகப் பார்க்கட்டும்! துணைக்கு ஆளை அனுப்பி வைக்கிறேன்'' என்று ஏவலாள் ஒருவனை அனுப்பிவைத்தார் தளபதி.

மேலும் ஒரு நாள் கண்ணனூருக்குள் இருந்து கோட்டை, கொத்தளம், வீதிகள், பாசறைகள் எல்லாவற்றையும் பார்த்து விட்டு அவர்கள் ஊருக்குத் திரும்பினார்கள்.

ஊருக்குள் வந்தபின் எலுமிச்சையின் ரசத்தைச் சிறிது குடித்துத் தனது உபவாசத்தை முடித்தார் நம்பி.

அவர் மிகவும் களைப்பாகவும் சோகமாகவும் காணப்பட்டார்.

''சுவாமி! என்னால் தங்களுக்கு நிறையத் தொந்திரவுகள் வந்து விட்டன!'' என்றான் வல்லபன்.

''இல்லை, வல்லபா! கண்ணனூருக்குப் போய் வருவது என்றாலே ஒரு நரகம்! அங்கே போகும் நாட்கள் எனக்கு உபவாச நாட்கள். நான் இப்படிச் செய்வதெல்லாம் மகா பாதகமோ என்று நினைப்பேன். ஆனால் அதனால் எத்தனையோ குடும்பங்களும் பரிசனங்களும் இங்கே நிம்மதியாக வாழ முடிகிறது. அரங்கனது கோவிலையும் எங்களால் முடிந்த அளவு காக்க முடிகிறது. இந்த பலன்கள் இருப்பதனால்தான் எனக்கு இழிநரகம் கிடைத்தாலும் கிடைக்கட்டும் என்று இந்தப் பாதகமான செயல்களைச் செய்து வருகிறேன்'' என்றார் அவர்.

அன்று இரவு எல்லோரும் மீண்டும் கூடியபோது, நம்பி வல்லபனைப் பார்த்து, ''வல்லபா! தாங்கள் என்ன முடிவு எடுத்தீர்கள்? கண்ணனூர் எப்படி இருந்தது?'' என்று கேட்டார்.

வல்லபன் உடனே, ''ஐயா! லட்சம் யவன வீரர்கள் கண்ணனூரில் இருப்பதாகக் கூறினார்கள். இதில் பாதிப் பேர்தான் யவனவர்கள். இவர்கள் கோட்டைக்குள் இருக்கிறார்கள். சுகபோகங்களில் ஆழ்ந்திருக்கிறார்கள். மீதிப் பாதிப் பேர் பலதரப்பட்ட வீரர்கள். இவர்கள் கோட்டைக்கு வெளியே இருக்கிறார்கள்'' என்றான்.

''இவர்களை நீங்கள் வெல்ல முடியுமா?'' என்று கேட்டார் நம்பி.

''நேரிடையான யுத்தமானால் வெல்ல முடியாது!'' என்றான் தத்தன்.

''தந்திரத்தால் வெல்ல முடியுமா?'' என்று கேட்டார் நம்பி.

''நிச்சயமாக முடியும்!'' என்றான் தத்தன்.

வல்லபன் தத்தனைப் பார்த்தான்.

''என்ன செய்யலாம் என்கிறாய்?'' என்று கேட்டான் வல்லபன்.

''நான் பெரிய திட்டம் வைத்திருக்கிறேன்'' என்றான் தத்தன்.

''சொல்லு தத்தா!'' என்றான் வல்லபன்.

தத்தன் ஆரம்பித்தான்.

''சுல்தானது இரண்டு லட்சம் படைகளில் பாதிப் பேர்தான் யவனர்கள். மீதிப் பேர் இந்நாட்டில் பிறந்து வளர்ந்தவர்கள். இந்தப் பெரும் படையில் ஒரு லட்சம் மதுரையில் இருக்கிறது. மற்றொரு லட்சம் கண்ணனூரில் இருக்கிறது. நாம் கண்ணனூரைச் சுற்றிப் பார்க்கும் போது, அந்த ஏவலாளிடம் கேட்டுத் தெரிந்து கொண்ட விஷயம் பல உண்டு. சுல்தான் உத்தரவு இட்டால்தான் யவன வீரர்கள் சண்டைக்குப் போவார்கள்! வேறு யார் சொன்னாலும் கேட்க மாட்டார்கள். அவர்களுக்கு அப்படிக் கடுமையான உத்தரவு. நாம் என்ன செய்ய வேண்டும் என்றால் அந்த உத்தரவு பிறப்பிக்க விடாமல் சந்தர்ப்பங்களை ஏற்படுத்த வேண்டும்' என்றான்.

''அது முடியுமா?'' என்றார் நம்பி.

''முடியும்'' என்றான் தத்தன்.

''எப்படி?'' என்றான் வல்லபன்.

''எனக்கு ஒன்று தெரிய வேண்டும்!'' என்றான் தத்தன்.

''என்ன?'' என்று கேட்டார் நம்பி.

''சுல்தானுக்கு மதுவிலோ உணவிலோ எதையாவது கலந்து கொடுக்க முடியுமா?'' என்றான் தத்தன்.

''முடியாது! எதைக் கொடுத்தாலும் வைத்தியர்கள் பரீட்சித்துப் பார்த்து விட்டுத்தான் சுல்தானுக்குக் கொடுக்கிறார்கள். நாம்போன போதுகூட வைத்தியர்கள் இருந்தார்கள், பார்க்கவில்லையா?'' என்றார் நம்பி.

தத்தன் சிறிது யோசித்தான்.

பிறகு மகிழ்ச்சியுடன் திரும்பி, ''அதற்கும் ஒரு வழி இருக்கிறது!'' என்றான்.

''சொல்லு!'' என்றான் வல்லபன்.

''காலில் ஒரு ரணம் ஏற்பட்ட போது அதைத் தன் வைத்தியரால் குணப்படுத்த முடியவில்லை என்று அறிந்து அவரைச் சிரச்சேதம் செய்யச் சொன்னாராமே, இந்த சுல்தான்! அது உண்மைதானா?'' என்று கேட்டான் தத்தன்.

''ஆமாம்! நீங்கள் இந்த விஷயத்தை ஏவலாளியிடமிருந்து தெரிந்து கொண்டீர்களா?'' என்று கேட்டார் நம்பி.

''ஆமாம்!'' என்றான் தத்தன். ''நான் சொல்லப் போவது விசித்திரமாகப் படலாம். இருந்தாலும் சொல்கிறேன்! சுல்தானுக்கு நாம் பெண் நோயை வரவழைக்க வேண்டும்.''

நம்பியும் வல்லபனும் யோசித்தார்கள்.

''முடியுமா?'' என்றான் வல்லபன்.

''ஏன்? இப்போது ஒரு தாராவைக் கொடுத்தீர்களே! இன்னொரு மாலாவை அவரிடம் அனுப்புங்கள்! அவள் போவதற்கு முன் அவளுக்குப் பெண் நோயை வரவழையுங்கள்!''

''முடியுமா?'' என்றான் வல்லபன்.

''நிச்சயம் முடியும்! இன்னொரு தேவதாசியின் தியாகம்தான் நமக்குத் தேவை, சீக்குள்ள ஆணுடன் நிரந்தரச் சகவாசம் பெற வைத்து அவளுக்கு நோயை உண்டாக்கி விடுவோம். பிறகு அவளையே சுல்தானுக்குக் காணிக்கையாகக் கொடுப்போம்'' என்றான் தத்தன்.

''தத்தா! உன் திட்டங்கள் எல்லாம் பிரமாதமாக இருக்கின்றனவே! இப்படிச் செய்வதால் என்ன நடக்கும்?'' என்று கேட்டான் வல்லபன்.

''நேற்று இரவிலிருந்து எனக்கு இதே யோசனைகள்தான். கடவுள்தான் எனக்கு இந்தத் திட்டத்தை அளித்திருக்கிறார் என்று எண்ணுகிறேன். கண்ணனூரில் ஏவலாள் நம்முடன் வந்தானே, அவனிடம் பல விஷயங்கள் நான் தெரிந்து கொண்டேன். ரணத்தைக் குணப்படுத்த முடியாத வைத்தியரைச் சிரச்சேதம் செய்வித்தார் அல்லவா இந்த சுல்தான்! அவர் அப்படிச் செய்ததைப் பார்த்ததும் மற்ற வைத்தியர்கள் ஊரை விட்டு ஓடிவிட்டார்களாம்.''

''சரி.''

''அது போல் இப்போதும் ஒரு நிகழ்ச்சியை நடத்த விரும்புகிறேன். சுல்தானுக்குப் பயங்கரப் பெண் நோயை வரவழைத்து விட்டால், யவன வைத்தியர்கள் அதை எளிதில் குணப்படுத்த முடியாது. இதனால் எங்கே சுல்தானின் கோபம் கிளர்ந்துவிடுமோ என்று பயந்து வைத்தியர்கள் ஊரை விட்டு ஓடிவிடுவார்கள்.

அந்தச் சமயத்தில் நம்மவர்கள் சுல்தானிடம் போய் அந்த நோயைக் குணப்படுத்துவதற்கான சித்தர் ஒருவர் மதுரைக்கு அடுத்துள்ள பெரியமலையில் இருக்கிறார் என்றும், மலையிலுள்ள மூலிகைகளின் வாசனைக் காற்றே நோயைக் குணப்படுத்தி விடும் என்றும் கூறி சுல்தானை தெற்கே பெரியமலைக்குப் போக வைக்க வேண்டும். அங்கே அவர் போனால், அவருக்கு மதுவகைகளில் விஷப் பொருள்களைக் கலந்து கொடுத்து விட வேண்டும். வைத்தியர்கள் ஓடிவிட்டிருக்கிற நேரத்தில் அந்த மது வகைகளைப் பரீட்சித்துப் பார்க்க யாருமே இருக்க மாட்டார்கள். மற்றவர்களால் முடியவும் முடியாது. சுல்தானும் அவைகளை அருந்துவார்! சீக்கிரம் புத்தி மழுங்கிப் போவார்! இந்தத் திட்டத்தினால் நான் இரண்டு காரியங்களைச் சாதிக்கிறேன். ஒன்று சுல்தானைக் கண்ணனூரை விட்டுத் தெற்கே கொண்டு போகிறேன். இரண்டாவது அவரை மலைமேல் ஏற்றி அவருக்கு நிரந்தரப் போதையைக் கொடுத்து விடுகிறேன். இப்படிச் செய்வதன் மூலம் சுல்தான் ஆபத்து வேளையில் உடனடியாக உத்தரவு பிறப்பிக்க முடியாத விதம் செய்து விடுகிறேன். இதைப் பயன்படுத்தி நாம் இதர வேலைகளில் இறங்கி விடலாம்'' என்றான்.

மற்ற இருவரும் யோசனையில் ஆழ்ந்தார்கள்.

''இது சிறிது சுற்று வழியாக இருக்கிறது'' என்றான் வல்லபன்.

''வல்லபா! சுற்று வழியானாலும் ஒரு நிச்சய வழியாக இருக்கிறது. நான் இவைகளை எல்லாம் சொன்னேனே! இவற்றின் பின்னால் மற்றொரு பயங்கரமும் ஒளிந்திருக்கிறது'' என்றான் தத்தன்.

''என்ன பயங்கரம்?'' என்றான் வல்லபன்.

''சுல்தான் இப்போது ஸ்திரீலோலராகவும் மதுப்பிரியராகவும் இருக்கிறார். இதனால் அவரது நிர்வாகத் திறமை வெகுவாகக் குறைந்துவிட்டது. இதன் சின்னங்களை கண்ணனூர் முழுதும் கண்டேன். தளபதிகள் உப தளபதிகள், உத்தியோகஸ்தர்கள் எல்லோருமே அரச பயம் இல்லாமல் தன்னிச்சையாக இருக்கிறார்கள். அநேக சேவகர்களும், வீரர்களும் சுல்தானை நையாண்டி செய்து பேசுவதைக் கூட நான் பார்த்தேன். இவ்வளவு தூரம் போய் விட்டால் சுல்தானிய அரச குடும்பதினரும், பிரபுக்களும் என்ன செய்வார்கள், தெரியுமா?'' என்று கேட்டான் தத்தன்.

''சுல்தானைக் கவிழ்த்துவிட்டுத் தாங்கள் பட்டத்திற்கு வரப் பார்ப்பார்கள். இதுதான் அவர்கள் வழக்கமாயிற்றே!'' என்றான் வல்லபன்.

''ஆமாம்! இப்போதே நிர்வாகம் க்ஷீணமாகி வருவதை அவர்கள் ஆவலோடு கவனித்துக் கொண்டிருப்பார்கள். சுல்தானுக்கு நாம் வேறு ரோகங்களைக் கொடுத்து விட்டு, அவரது புத்தியையும் பேதலிக்கச் செய்து விட்டால், பிரபுக்கள் சூழ்ச்சி செய்து அவரைக் கொன்றாலும் கொன்று விடுவார்கள். அப்படி நடக்கும் பட்சத்தில் உள் பூசலும், சண்டையும் கிளர்ந்து விடும். இந்தக் குழப்பங்களைப் பயன்படுத்திக் கொண்டு நாம் படை எடுத்து எல்லாவற்றையும் சீக்கிரமாக முடித்து விட வேண்டும். நேரம்தான் இதில் முக்கியம். இவ்வளவுதான் யோசனை! இனிப் படை எடுப்பது பற்றித் திட்டம் செய்வது சைனியாதிபதிகளின் பொறுப்பு'' என்று சொல்லி முடித்தான் தத்தன்.

வல்லபனுக்கு ஏனோ சந்தோஷமாகப் பொங்கி வந்தது.

''தத்தா! இவ்வளவு சூசகமாக ஒரே பிரயாணத்தில் ராஜ்ய நடப்பு, அதன் பலவீனங்கள், அந்தப் பலவீனங்களை நம் இலாபமாக மாற்றிக் கொள்ளும் வழி இவைகளை எல்லாம் ஒரு பழக்கப்பட்ட ஒற்றனைப்போல் எவ்வளவு அழகாகக் கண்டுபிடித்து வைத்திருக்கிறாய்? உன்னை நினைத்து மிகவும் பெருமைப் படுகிறேன்'' என்றான் வல்லபன்.

''தத்தா!'' என்றார் நம்பி. ''உன் திட்டம் மிகவும் பிரமாதமப்பா! நாம் செயலில் இறங்குவோம்.''

–தொடரும்

---

கண்டக்டர் 'குமரேசன் லீவில் போய்
பெண் பார்த்து முடிச்சுட்டுத் திரும்பி வந்தான்.
'பெண்ணைப் பார்த்தாயா? பிடிச்சிருக்கா?'ன்னு
''ரைட், ரைட்'' சொல்லி விசிலடிச்சான்!

ஜி. ராஜாமணி




தத்தனின் ஆலோசனைகளைக் குறித்து காஞ்சி புரத்தில் கம்பணர், கோபணு, இதர பிரதானிகள் எல்லோரும் சர்ச்சை செய்தார்கள்.

''யுத்தத்தில் நேருக்கு நேர் நின்று போர் புரிந்து வெற்றி பெறுவதுதான் அழியாத கீர்த்தியைத் தரும். மற்றவை புகழைத் தராது'' என்று சோமப்பர் கூறினர்.

அப்போது கோபணு எழுந்து, ''பிரதானிகளே. இனியும் தர்மங்களைக் குறித்துப் பேசுவது தகாது! நம் எதிரிகள் தர்மத்தைக் கடைப்பிடிக்க வில்லை! சூழ்ச்சிகளையும், தந்திரங்களையும் கையாளுகிறார்கள். வீர வல்லாள தேவரை அவர்கள் போரில் எப்படி முறியடித்தார்கள்? அதர்ம வழிகளால் தானே? முறியடித்த பிறகு அவரை அவர்கள் நடத்திய விதம் எப்படி? நயவஞ்சகமாக அவரிடமிருந்து யானை பலம், குதிரை பலம், பொக்கிஷங்கள், யாவற்றையும் பணயமாக வாங்கிக் கொண்டு கடைசியில் என்ன செய்தார்கள்? பணயத்தின் நிபந்தனைப்படி வல்லாளதேவரை விடுதலை செய்தார்களா? இல்லை. நிராயுதபாணியாக அவரை நிறுத்திக் கொன்றார்கள். அந்தப் புனித மன்னரின் தோலை உரித்தார்கள். வைக்கோல் அடைத்து மதுரைக் கோட்டை வாசலிலே தொங்கவிட்டார்கள்.

''இவ்வளவு அநியாயங்களைச் செய்து ஒருநாட்டை அபகரித்தவர்களை நாம் வாளாவிடலாமா?

''பழிக்குப் பழி. சூழ்ச்சியாலேயே சுல்தானைக் கொல்வதுதான் முறை! அது அதர்மம் ஆகாது'' என்று கூறி முடித்தார்.

கம்பணர் எழுந்து, ''பிரதானிகளே! நான் கோபணு கூறியதைத்தான் ஆமோதிக்கிறேன். மதுரையை நோக்கி இந்த மாதம் போவோம். அடுத்த மாதம் போவோம் என்று சொல்லியே பத்து ஆண்டுகள் ஓடிவிட்டன. இந்த ஆண்டுகளில் நாம் வெறுமனே இராமல் வட எல்லைக்காகப் படைகளையும் பொருள்களையும் சேகரித்து அனுப்பி வந்தாலும், மதுரையை ஜெயிக்காதது நம் மனங்களில் பெரும் பாரமாக இருந்து வந்திருக்கிறது. இந்த நிலையில் இப்போது நமக்குத் தெய்வ அனுகூலம் கூடிவந்திருக்கிறது. இல்லாவிடில் எனக்கும் கோபணுவுக்கும் இந்த வேகம் வந்திருக்காது! நம் மனங்களில் நம்மை அறியாமலே ஒரு உந்துதல் ஏற்பட்டால், அது தெய்வத்தின் செயல் தான்! எனக்கு மீனாட்சியின் கட்டளை பிறந்துவிட்டது. கோபணு சுவாமிக்குத் திருவரங்கனின் கட்டளை பிறந்து விட்டது. சகோதரரும் சகோதரியும் கட்டளை பிறப்பித்த பிறகு மற்ற தடங்கல்களுக்கு நாம் கவலைப்படுவானேன்? தைரியமாகக் காரியத்தில் இறங்குவோம்'' என்று கூறி முடித்தார்.

மந்திராலோசனை ஒரு முடிவுக்கு வந்த பிறகு காரியங்கள் மளமள என்று நடக்கத் தொடங்கின.

அழகிய மணவாள கிராமத்தில் இருக்கும் திருமணத்தூண் நம்பிக்கும் செய்தி பறந்தது.

அவரும் திருவரங்கனின் மீது பாரத்தைப் போட்டு விட்டுக் காரியத்தில் இறங்கினர்

முதல் காரியமாக ஒரு ரோகமுள்ள. பெண்ணைத் தேடி அவரும், அவர் ஆட்களும் எல்லா இடங்களிலும் அலைந்தார்கள்.

அத்தகைய பெண் கிடைப்பது கஷ்டமாக இருந்தது. அப்படி யாரேனும் கிடைத்தால் அந்தப் பெண் முப்பதுக்குமேல் வயது படைத்தவளாகவும் விகாரமுள்ளவளாகவும் இருந்தாள்.

இனி என்ன செய்வோம் என்று அவர்கள் பிரமித்து விட்டபோது திருமணத்தூண் நம்பிக்கு ஒரு விஷயப் நினைவுக்கு வந்தது.

---

# யார் அந்தச் சிறுவன்?

மத்தாப்புக்களின் வெளிச்சமும் எங்கும். வெடிகளின் சப்தமும் அந்த ஊரையே கிடுகிடுக்க வைக்கும் அழகான தோரணங்கள். செடிகளிலெல்லாம் தீபங்கள். வீடுகள் முழுதும் பிரகாசமான விளக்குகள். தேவலோகம் போல் காட்சி யளிக்கும் அந்தப் பெரிய வீட்டில் ஆனந்தத்திற்குக் குறைவேயில்லை. அந்த பவனத்தில் அப்படி என்ன விசேஷம்?

அந்தச் செல்வந்தரின் ஒரே பிள்ளைக்குப் பிறந்த நாள். வாழ்த்துச் சொல்லப் பெரியோர் வந்தார்கள். அன்று விருந்து சாப்பிட்டார்கள். அந்தச் சிறுவனோடு கை கோத்துக் கொண்டு, ஆடிப் பாடினார்கள். அந்தச் சிறுவன் தன்னோடு விளையாடியவர்களிடம் அன்பு செலுத்தினன். மறுநாள் எல்லாரும் போய் விட்டார்கள். அவன் மட்டும் தனியாக இருந்தான். தனிமை அவனுக்குப் பிடிக்கவில்லை. வருத்தப்பட்டான். தன்னோடு எப்போதும் விளையாடிக் கொண்டிருக்க ஒரு தங்கை அல்லது தம்பியை, தரும்படி ஆண்டவனை வேண்டினன்.

ஆண்டவன் அவன் பிரார்த்தனைக்கு இரங்கினர். சிலகாலம் கழித்து ஒரு தங்கைப் பாப்பாவைக் கொடுத்தார். சிறுவனின் மகிழ்ச்சிக்கு அளவேயில்லை. ஆடினன். பாடினன். ஓடினன். மகிழ்ச்சிக் கடலில் ஆழ்ந்து போனன். தங்கையைப் பாசத்தோடு பார்த்தான். அதனோடு விளையாடினன். சீண்டிவிட்டு வேடிக்கை 'பார்த்தான். பெரியவன் ஆன பிறகு இந்த நாட்டுப் பிள்ளைகளின் நடுவே விளையாடினன். பாசத்தைக் கொட்டினன். தனது பிறந்த நாளையே சிறுவர் நாளாகக் கொண்டாடிய பாசம் நிறைந்த அந்தச் சிறுவன் நம்முடைய....



தாரா என்னும் தேவதாசியை கண்ணனூரில் கொண்டு போய் விட்டதிலிருந்து இதுவரை நான்கு முறை அவர் அவ்வூருக்குப் போய் வந்திருக்கிறார்.

சுல்தானது கேளிக்கைக் கூடமான உய்யான வனத்தில் அவர் சுல்தானைப் பார்க்கச் சென்றிருந்த போதெல்லாம் தேவதாசியான தாரா சுல்தானுக்கு மிகவும் பிரியமாகிவிட்ட பெண்ணாக இருப்பதைக் கண்டு கொண்டார்.

தாராவும் இரகசியமான ஜாடைகளால் சுல்தான் தனது மையலில் சிக்கி அடிமையாகி விட்டதை மிக நயமாகத் தெரிவித்திருந்தாள்.

இப்போது அந்த தாராவை உபயோகித்து, அவள் மூலமாகவே சுல்தானுக்கு ரோகத்தை வரவழைத்தால் என்ன? இப்படித்தான் நம்பியின் எண்ணம் ஓடியது.

ஒரு யௌவனமான, அழகிய பெண் தன் மீது ரோகத்தை ஏற்றுக் கொள்ளச் சித்தமாக இருப்பாளா? அதையும் யோசித்தார் அவர்.

ஏற்கெனவே அந்தப்புரத்தில் நரக வாழ்க்கையை அனுபவிக்கும் அவளுக்கு மேலும் ஒரு கொடுமையை அவரே கொடுக்கலாமா?

கொடுக்கக் கூடாதுதான்! ஆனால் வேறு என்ன வழி?

அவர் மூளை வெகுவாகக் குழம்பியது.

ஆனால் தாரா எந்தத் தியாகத்திற்கும் சித்தமாக இருப்பாள் என்று நினைத்தார் அவர்.

இந்த யோசனை வந்ததும் தாராவைச் சீக்கிரம் சந்தித்துத் துணிவுடன் தன் திட்டத்தை வெளியிட நினைத்தார் அவர்.



உடனடியாகக் கண்ணனூருக்கு அவர் பிரயாணமானார். அங்கே உய்யான வனத்திற்குச் சென்று, தாராவுக்குப் புஷ்பமாலை கொடுப்பது போல் அதனுள்ளே ஒரு நூலுக்குள் ஓலையை வைத்துக்கொடுத்துவிட, அவளும் அந்த நறுக்கை இரகசியமாகப் படித்து விட்டு, தனது விருப்பத்தை மிகவும் சந்தோஷத்தோடு மறுநாள் ஜாடைகளில் தெரிவித்து விட்டாள்.

அதை அடுத்து நம்பி சுல்தானிடம், ''பிரபோ! தங்கள் பிரியத்திற்கு உகந்தவளான தாராவை ஒரே ஒரு மாதம் எம் கிராமத்திற்கு அனுப்பி வைத்து அனுக்கிரகிக்க வேண்டும். அவளது தாயார் மிகவும் நோய் வாய்ப்பட்டிருக்கிறாள். தனது ஒரே மகளைப் பார்ப்பதற்கு மிகவும் ஆசைப்பட்டுக் கொண்டிருக்கிறாள். தயவு செய்ய வேண்டும்'' என்று விண்ணப்பித்தார்.

சுல்தான் முதலில் அதற்கு இணங்கவில்லை. பிறகு நம்பியின் வற்புறுத்தலின் பேரில் சிறிது தளர்ந்து,

''இரண்டே இரண்டு வாரத்தில் நீர் தாராவை எம்மிடம் கொண்டு வந்து விட வேண்டும். வரும்போது மேற்கத்திய மதுவை எப்படியாவது கொண்டு வரவேண்டும்!'' என்று கட்டளை இட்டு, அவளை அவருடன் போக விடுத்தார்.

வரலாறுகளைப் படிக்கும் போது ஒரு குறிப்பிட்ட காலத்தில் நடந்த காரியங்களையும், நிகழ்ச்சிகளையும் தற்கால நோக்கோடு பார்த்து அவற்றை இகழ்வதோ, குறை கூறுவதோ சரியல்ல.

அந்தக் காலத்தில்பரவியிருந்த அறிவின் அளவுக்குத் தகுந்தாற் போலவே அந்தந்தக் காலத்துச் செய்கைகளும், வழக்கங்களும் பெரும்பாலும் அமைந்து விடும்.

தற்காலக் கண்ணோட்டத்திலிருந்து பார்க்கும் போது அவை விகாரமாகவும், கொடூரமாகவும், மூட நம்பிக்கையாகவும் நமக்குத் தோன்றி விடும். எனினும் அவைகளைக் குறை கூறுவது உயர்ந்த பண்புக்கு அடையாளம் ஆகாது.

அறிவு மயமான காலத்தில் இருக்கிறோம் என்று நம்புகிற நம்மைக்கூட நமக்குப் பின்னால் ஐந்நூறு ஆண்டுகளுக்குப் பின் வரப் போகிற மனிதன், அவனும் பரந்த அனுபவ பூர்வமான அறிவு பெற்றிரா விட்டால், கேலி செய்யத்தான் போகிறான்.

இவ்வளவையும் இங்கே ஏன் சொல்கிறேன் என்றால் தேவதாசிகளை ஒழித்து விட்ட ஒரு கால வரம்புக்குள் இருக்கும் நாம், அந்தப் பழைய நாட்களில் தேவதாசிகளால் நடத்தப்பட்ட சில காரியங்களை அருவருப்போடு பார்க்கக் கூடாது.

அந்தந்தக் காலத்திற்கு அதது ஏற்றதாக இருந்தது என்று நினைத்துக் கொள்ள வேண்டும்.

தாரா என்னும் தேவதாசி இருவாரங்கள் கிராமத்தில் தங்கி விட்டு, கண்ணனூருக்கு ஒருநாள் புறப்பட்டாள்.

கண்ணனூரை அடைந்ததும் அவளைக் கொண்டு விட வந்திருந்த திருமணத்தூண் நம்பி, உய்யான வனத்தின் எல்லையில் பல்லக்கின் திரையை விலக்கி, ''அம்மா, தாரா! போய் வருகிறாயா?'' என்று கனிவு ததும்பக் கேட்டார்.

அந்தப் பெண் விக்கித்துப் போய் அவரைப் பார்த்தாள். அவள் குரல்வளையில் பேச்சு எழவில்லை.

நம்பியின் மனதில் உடனே எண்ணங்கள் ஓடின. 'ஆகா. இந்தப் பெண் பூரண சந்திரிகை போல் இருந்தாளே! இப்போது பாசிக் குளத்தில் தெரியும் சந்திரன் போல் விமரிசை இல்லாமல் இருக்கிறாளே! அந்த அளவுக்கு இவள் ரோகம் கொண்டு விட்டாளே! தெரிந்து கொண்டே 'ஒரு பெண்ணின் ஆரோக்கியத்தைக் குறைப்பதற்கு நான் உடந்தை ஆனேனே! அதன் மூலம் அவள் ஆயுளையும் குறைப்பதற்கு ஏதுவாயிருக்கிறேனே?' என்று நினைத்தார்.

வருத்தம் தோய்ந்திருக்கும் அவரை, தாராவும் ஆழ்ந்து பார்த்து,

''ஐயா! வருத்தம் ஏனோ? எல்லாம் அரங்கனுக்காக நானே மனமுவந்து செய்கிறேன்.. எனக்குப் பிற்காலங்களில் அமைதியோடு அரங்கனை வழிபடப் போகும் எத்தனையோ லட்சோப லட்சமான ஜனங்களில் யாராவது ஒருவர் மனம் கசிந்து, என்னையும் என் இனத்தாரையும் நன்றியுடன் நினைவு கூர்ந்தார்களானால் அதுவே எங்கள் எல்லோருடைய ஆத்மாக்களையும் திருப்திப் படுத்தியதாக இருக்க முடியும்! இந்த சுல்தான் அழிந்து, நமது கோவில் நமக்குக் கிடைக்கும் வரை நான் உயிர் வாழ்வேனோ, என்னவோ! என் நோய் அவ்வளவு கடுமையான நோய்! அப்படி என்னை வாழ விடாது அரங்கன்பால் என்னை அழைத்துக் கொண்டு விட்டால் தாங்கள் அவசியம் இந்த ஏழையை நினைவுகூர வேண்டும்! ஜனங்களிடையே என்னைப் பற்றிப் பெருமையோடு கூற வேண்டும். அப்படிக் கிடைக்கும் புகழ் மூலமாகத்தான் நான் வானுலகில் உயர்ந்த ஒரு ஸ்தானத்தை அடைய முடியும்! ஐயா, எனக்காக இதைச் செய்வீர்களா? ஒரு சிலரையாவது நன்றியோடு, அன்போடு, வெறுப்பும் உதாசீனமும் ஏதும் இன்றி இந்த அபலையை நினைக்க விடுவீர்களா? ஐயா, தாங்கள் ஏன் அழுகிறீர்கள்? தங்கள் திருக் கண்களிலிருந்து இவ்விதம் முத்துக்கள் சிதறலாமோ? தங்கள் கண்ணீரை நிறுத்துங்கள்! தங்கள் மனம் தாபப் படும்படி ஏதாவது சொல்லிவிட்டேனோ! என்னைப் பாருங்கள்! தாங்கள் அழுதால் நானும் அழுதுவிடுவேன்! ஐயா எங்கே என்னைப் பார்த்துச் சொல்லுங்கள்! என் சிந்தூரப் பொட்டு சரியாக இருக்கிறதா? பார்த்துச் சொல்லுங்கள்!'' என்றாள் மிகவும் கெஞ்சிக் கொண்டே.

திருமணத்தூண் நம்பி தமது திருமுகத்தை நிமிர்த்தவேயில்லை. குழந்தை போல் தேம்பிக் கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்தார். உத்திரியத்தால் கண்களைத் துடைத்து அடிக்கடி மூக்குறிஞ்சிக் கொண்டிருந்தார்.

சிறிது நேரம் கழித்து அவர் தம்முள் தாமே தேறி அந்தத் தாரா என்னும் தியாகச் சிகரத்தை நோக்கி,

''அம்மா தாரா! நீ என்னிலும் மேலானவள்! என்றைக்கும் அழியாத புகழைப் பெறப் போகிறவள்! உன்னை வருங்காலமெல்லாம் போற்றி நினைக்கும், உன்னைப் பற்றி நான் ஊராரிடம் சொல்லாவிட்டால் நான் நன்றியுடையவனாக இருக்க மாட்டேன். அரங்கனுக்கு உகந்தவனாகவும் இருக்க மாட்டேன். நீ இந்தச் சிறுவயதில் பெரும் புகழைப் பெற்று விட்டாயம்மா! அரும் பெரும் தியாகம் ஒன்றை அரங்கனுக்காகச் செய்து விட்டாயம்மா! உன்னையும் நினைப்போம். உன் இனத்தாரையும் இதய பூர்வமாக நினைப்போம். அம்மா! உன்னிடம் இந்த அடியவன் பிரார்த்திப்பது ஒன்று உண்டம்மா!'' என்றார் தேம்பலுடன்.

''சுவாமி அபசாரம்! அபசாரம்! தங்களை அடியவன் என்று கூறுகிறீர்களே! பிரார்த்திக்கிறேன் என்று என்னிடம் சொல்கிறீர்களே! தங்கள் பாத தூசிக்கும் அடி பணிந்து போகும் அடியாள்தான் நான்! கட்டளை இடுங்கள்!'' என்றாள் தாரா.

''அம்மா தாரா! அழகாகப் பேசுகிறாயம்மா! ஒன்று கேள்! இது என் பிரார்த்தனைதான்! கட்டளை இட என் மனம் துணியவில்லை. அதற்குண்டான அருகதையும் என்னிடம் இல்லை. அம்மா, தாரா! உனக்குக் கொடிய ரோகம் வரவழைத்து விட்டோம். இப்படி ஒரு காரியம் நிறைவேற உடந்தையாக இருந்தவன் நான்! பின்னால் இந்த ரோகம் முற்றும் போது தேகத்தின் உள்ளும் புறமும் அழுகி, மெத்தவும் நீ அவஸ்தைப் படுவாய்! வலியினாலும் நெடியினாலும் ரணத்தினாலும் நீ அவஸ்தைப் படும் போது என்னை நினைத்து, 'இவர்தானே இந்தத் திட்டம் செய்தவர்!' என்று மனம் நொந்து என்னைச் சபித்து விடாதே அம்மா! அதற்கு மாறாக, ஒரு பரம்பரைக்காக, ஒரு சமுதாயத்திற்காக, ஒரு ராஜ்யத்திற்காக ஒரு வைணவத் தொண்டன் தன் கடமையைச் செய்தான், பிரயோசனம் எதிர்பாராத தனது சேவையைச் செய்தான் என்று நினைத்தே என்னைப் பொறுத்தருளி விடுவாயா அம்மா? உன்னதமானவளே! என்னைப் பொறுத்தனுவாயாம்மா?'' என்று தழதழப்புடன் கெஞ்சிக் கேட்டார் அவர்.

''ஐயா!'' என்று குரல் உடைந்து கூறினாள் தாரா. ''தங்களை நான் நொந்து கொள்வேனோ? அபசாரம்! அபசாரம்! அப்படிச் செய்தால் எனக்கு ஈரேழு ஜன்மங்களிலும் நரகம்தான் கிடைக்கும். இந்த ஏழை அப்படிச் செய்யவே மாட்டாள்! தாங்கள் ஒருவர் தான் ஆபத்துக் காலத்தில் மற்ற நாடுகளுக்கு ஓடி விடாமல் இந்தத் தமிழ் பேசும் நாட்டில் மக்களோடு வாழ்ந்துகொண்டு அவர்களது சுகதுக்கங்களில் பகிர்ந்து கொண்டு, அவர்களுக்கு நல்லனவே செய்து வருகிறீர்கள். பெரும் உத்தமர் தாங்கள்! தாங்கள் செய்வதெல்லாம் உத்தமத் தொண்டு! தங்களை நிச்சயம் நொந்து கொள்ள மாட்டேன்! தாங்கள் எனக்குக் கிடைக்க வழி செய்துள்ள ரோகம் உண்மையில் நான் அரங்கனுக்காக அணிந்துள்ள நவரத்தின ஆரம்! இதை அடைந்ததற்கு நான் பாக்கியம்தான் செய்திருக்கிறேன். இதில் சந்தேகமே இல்லை, ஐயா! மனத்தின் தாபத்தை விடுங்கள்! வருத்தப்படாதீர்கள். சந்தோஷமாக இருங்கள்!'' என்றாள் அவள்.

அவ்வளவில் நம்பிக்கு உள்ளத்தில் பெரும் ஆறுதல் ஏற்பட்டது.

நிம்மதியுடன் அவர் பல்லக்கின் திரையை மூட முற்பட்ட போது, ''ஐயா!'' என்று சொல்லி நிறுத்தினாள் அவள்.

''என்ன?''

அவள் மென்று முழுங்கினாள்

''சொல்லு, தாரா!'' என்றார் அவர்- அவள் கண்கள் ஒரு கணம் பனித்தன.

''சொல்லு தாரா!''

அவள் எங்கேயோ ஆழ்ந்து பார்த்துக் கொண்டு இருந்தாள்

பிறகு, ''அவரிடம் சொல்லுங்கள்!'' என்று பாதிப் புலம்பலாகக் கூறினாள்.

''யாரிடம்?'' என்றார் அவர்.

அவள் பார்வை இன்னும் தூரத்தில் சென்றது.

''யாரிடம் ?''

''அந்த இளைஞர் வல்லபனிடம்'' என்றாள் அவள்.

தொடர்ந்து என்னென்னவோ வார்த்தைகளைத் தெளிவில்லாமல் தடுமாறிக் கூறி,

''விசாரித்தேன் என்று சொல்லுங்கள்'' என்று தத்தளித்தவாறு நிறுத்தினாள் அவள்.

அவள் பார்வை இப்போது தூர வெளிகளைத் தாண்டி எங்கேயோ அண்டங்களைக் கடந்து ஒரு பெரும் கனவு லோகத்தில் ஆழ்ந்து நின்று விட்டது.

—தொடரும்



## காமிராவின் ஏக்கம்

என்னுள்
உங்களை
அடக்கி
வெளிக்
கொணர்பவன்
நான்-
ஆனால்
நீங்கள்
என்னைப்
பாராட்டாமல்
''அருமையான போட்டோ
கிராபர்''
என
என்
எஜமானரை
அல்லவா
பாராட்டுகிறீர்கள்?
இது என்ன நியாயம்?

மயிலை ஸ்ரீதரன்.



# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்

கண்ணனூரில் உள்ள சுல்தானின் உய்யான வனத்தில் தேவதாசி தாராவை திருமணத்தூண் நம்பி விட்டுச் சென்று மூன்று மாத காலம் போன பின்னர் சுல்தானுக்கு மெள்ள நோயின் அறிகுறி தோன்ற ஆரம்பித்தது.

உடலில் நமைச்சலும், அரிப்பும் உபாதைகளும் ஏற்பட ஆரம்பித்தன.

காலின் கணுக்களில் மெள்ள இரணங்கள் தோன்றி நீர் படியத் தொடங்கியது.

சுல்தான் முக்கால் வேளையும் போதையிலேயே இருந்ததால் இவற்றைப் பொருட்படுத்தாமல் இருந்தார்.

ஆனல் உபாதைகள் அதிகமானபோதுதான் அவருக்கு விழிப்பு ஏற்பட ஆரம்பித்தது.

இதற்குள் சுல்தானின் உடலில் இரணங்களைக் கண்ட ராஜவைத்தியர் முதன் முதலில் கண்ணனூரை விட்டு ஓட்டம் பிடித்தார்.

ஏனெனில் சுல்தானின் குணங்கள் அவருக்குத் தெரியும்.

ஏதாவது நோய் ஏற்பட்டு அதை வைத்தியர் குணப்படுத்த முடியாமல் போனல் 'இந்த வைத்தியர்கள் ஏமாற்றுக்காரர்கள்' என்று சொல்லி அவர்களைச் சிரச்சேதம் செய்யச் சொல்லிவிடுவார்.

மதுரையில் இந்த சுல்தான் அப்படிச் செய்ததன் காரணமாய் வைத்திய இனம் முழுவதும் அந்த ஊரை விட்டு ஓடிவிட்டது.

அதே போன்றுதான் கண்ணனூரிலும் நிகழ ஆரம்பித்தது.

வைத்தியர்கள் ஒவ்வொருவராக ஊரை விட்டுச் சொல்லாமல் கொள்ளாமல் ஓட ஆரம்பித்தார்கள்.

முடிவில் சுல்தான் வைத்தியரைத் தேடும் போது யாரும் அகப்படவில்லை.

''அகப்படவில்லை'' என்று வந்து கூறிய அதிகாரியை அந்தக் கணமே சிறையில் தள்ளினர் சுல்தான்.

இந்த விஷயம் காஞ்சீபுரத்திற்கு எட்டவே தாங்கள் நினைத்தபடி நடந்துவிட்டது என்று ராஜாங்கத்தில் எல்லோரும் சந்தோஷப்பட்டார்கள்.

ஆனல் சுல்தான் மதுரைக்குப் போய்விடுவார் என்று அவர்கள் எதிர்பார்த்த போது, அந்தக் காரியம் மட்டும் நடவாமல் போய்விட்டது.

என்ன காரணத்தினலோ சுல்தான் கண்ணனூரிலேயே இருந்து விட்டார்.

இரண்டு மாதங்களும் ஓடிவிட்டன.

திருமணத்தூண் நம்பி தவித்துப் போய்விட்டார். 'நாம் ஒன்று நினைக்க நடப்பது வேறொன்றாக இருக்கிறதே' என்று வருத்தப்பட்டார்.

அவருக்கு இன்னொரு பயமும் இருந்தது. 'தாராவின் நிலை எப்படி இருக்கிறதோ? அவளைப் பார்த்து நாளாகிவிட்டதே! ஒரு நடை கண்ணனூருக்குப் போய் விஷயங்களைத் தெரிந்து கொண்டு வந்தால் என்ன' என்று தோன்றியது.

ஒரு நாள் காலையில் புறப்பட்டார். கண்ணனூர்க் கோட்டைக்குள் போனதும் எல்லோரும் கும்பல் கும்பலாக நின்று கொண்டு சுல்தானது உடல் நிலை குறித்துப் பேசிக் கொண்டிருந்தார்கள்.

உய்யான வனத்திற்குப் போகும் போது நம்பிக்கு பலவிதத் தயக்கங்கள் இருந்தன.

அனுமதி பெற்று வனத்துக்குள் போய், அங்கே தனியான மாளிகையில் இருந்த சுல்தானைக் கண்டதும் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து, ''பிரபோ! தாங்கள் நோய்வாய்ப்படலாமோ? ஆண்டவன் இப்படிச் சோதனை செய்யலாமோ?'' என்று பிரலாபித்துப் புலம்பிக் கண்ணீர் விட்டார்.

படுத்திருந்த சுல்தானும் பிரீதி அடைந்து அவரைப் பார்த்து, ''நம்பி! உன்னை நினைத்தேன். நீ வந்தாய்! எனக்கு வைத்தியர் வேண்டுமே! உங்கள் வைத்தியர் யாராவது இருப்பார்களோ?'' என்று வினவினர்.

சுல்தான் மீது ஈக்கள் மொய்க்காமல் நான்கு பணிப் பெண்கள் விசிறி வீசிக் கொண்டிருந்தார்கள். உள்ளே ஒருவித நெடி பரவியிருந்தது. சுல்தான் தமது காலில் கட்டுகள் போட்டிருந்தார்.

''பிரபோ! வைத்தியர் இருந்தால் அழைத்து வந்திருப்பேனே! கிடைக்கவில்லையே! இருந்தாலும் தேடுகிறேன்'' என்று சொல்ல—

''உடனே தேடு! சீக்கிரம் போ! யாரையாவது நல்ல ஆளை அழைத்து வா! என்ன வேண்டுமானலும் கொடுக்கிறேன்'' என்றார் சுல்தான்.

''இதோ!'' என்று சொல்லி நம்பி புறப்பட்டு வெளியில் வர, ஒரு மகிழ மரத்தடியில் அவர் போகும்போது 'சுவாமி' என்று குரல் கேட்க, அங்கே தாரா என்னும் அடியாள் பிரசன்ன வதனத்துடன் நின்று கொண்டிருந்தாள்.



''தாரா! நீயா! உன்னை உள்ளே எல்லாம் தேடினேனே! சௌக்கியந்தானே அம்மா!'' என்று சொன்னவர், அவளை மேலும் கீழும் நன்றாகப் பார்த்து, ''இதென்ன தாரா! நீ புஷ்டியும் ஆரோக்கியமுமாக இருக்கிறாய்! உன்னை நோய்படுத்தவில்லைபோலும்!'' என்று ஆச்சரியத்துடன் கூறினார்.

தாராவும், ''சுவாமி! நான் விரதங்களையும் அனுஷ்டானங்களையும் காப்பவள் அன்றோ! நான் இப்போது என்னிடம் கற்பித்துக் கொண்ட மாசு தவிர வேறு மாசு எதுவும் கிடையாதே! ஆகவே என் உடல் தாங்குகிறது. நோய் அதனை அதிகமாக ஏதும் செய்யமுடியவில்லை! இது எல்லாம் திருவரங்கன் அருள்!'' என்றாள். அப்பால் சுல்தான் தமது வாழ்க்கையில் அதிக இன்பங்களைத் துய்த்ததால் பலவீனமாகிவிட்டார் என்றும், அவரை நோய் அதிகமாகப் பீடித்து விட்டதில் அதிசயமில்லை என்றும் கூறினாள்.

''அம்மா! கேட்க மிக சந்தோஷமாக இருக்கிறது! எல்லாம் அரங்கன் அருள்! இன்னொரு காரியம் நீ செய்ய வேண்டும் அம்மா!'' என்றார்.

''சொல்லுங்கள் சுவாமி!'' என்றாள் அவள்.

''சுல்தானை இங்கிருந்து நகர்த்தி மதுரைக்குக் கொண்டு போய் விட வேண்டும் அம்மா! அதற்கு ஏதாவது உபாயம் இருந்தால் செய்! இது அவசியமான காரியம்!'' என்றார் நம்பி.

''நல்லது. அரங்கன் அருள் புரிவார். அப்படியே செய்கிறேன்'' என்றாள் தாரா.

அப்பால் அவர் விடை பெற்றுப் புறப்பட தாராவும் தயங்கி, ''சுவாமி!'' என்றாள்.

''என்ன?'' என்று அவர் கேட்க,

தலை குனிந்தவாறு, ''அவரை விசாரித்தேன் என்று கூறுங்கள்!'' என்றாள்.



நம்பியும் புரிந்துகொண்டு, ''நிச்சயம் சொல்கிறேன் அம்மா!'' என்ருர்.

சுல்தானிடம் தாரா அன்றிலிருந்து, ''நாம் மதுரைக்குப் போக வேண்டும்! அந்த ஊர்தான் தங்கள் வியாதியைக் குணமாக்கும்'' என்று அடிக்கடி சொல்ல ஆரம்பித்தாள். அதற்காகப் பல சாகசங்களையும் செய்ய ஆரம்பித்தாள்.

போகப் போக சுல்தானுக்கு அதில் மனம் செல்ல ஆரம்பித்தது.

தம் அந்தரங்க ஆட்களை அழைத்து அவர் வினவ அவர்களும், ''அதுவே நல்லது'' என்று சொல்லத் தொடங்கினுர்கள்.

கடைசியில் சுல்தானும் ஒரு நாள் புறப்பட்டுப் பரிவாரங்களுடன் மதுரை போய்ச் சேர்ந்தார்.

இந்த விஷயம் காஞ்சிபுரத்திற்குத் தெரிந்தது தான் தாமதம்! இதர வேலைகள் மளமள என்று நடக்கத் தொடங்கின.

படை திரட்டும் வேலை ஆரம்பமாகியது. தென் பாண்டியருக்கும், கேரள மன்னருக்கும் உதவி கோரித் தூதுகள் பறந்தன. வடக்கே உள்ள சிற்றரசர்களுக்கு ஒருதூதுவக் குழு சென்றது. கோபணு அவசர அவசரமாக முள்வாய் நகருக்குச் சென்ருர். இதரப் பிரதானிகள் வட மேற்கிலும், கிழக்கிலும் சென்ருர்கள்.

கன்னட, தெலுங்கு நாடுகளின் நகரங்களில் எல்லாம் கோபணு முரசு முழங்கச் செய்தார். ''தர்மத்திற்கு ஒரு யுத்தம்! படை எழுப்புவீர்! பொருள் தாருவீர்!'' என்ற கோஷங்கள் எங்கும எழுந்தன.

ஜனங்களிடையே அதுவரை கண்டறியாத பரபரப்பும், உற்சாகமும் [illegible]. வடக்கி[illegible] பாமனி[illegible] துருக்கியருடன் நடத்தும் போர்களுக்கு ஆயுதம் [illegible] முறை அவர்கள் செய்திருக்கிருர்கள். அதற்குப் பொதுவாக ஒரு உற்சாகம் இருந்தாலும் இந்தத் தென்னுட்டுப் போருக்கு அதிக அளவு உற்சாகம் எழுந்தது.

முக்கியமாகத் தென்னுட்டு க்ஷேத்திரங்களான திருவரங்கம், இராமேசுவரம், மதுரை முதலியவற்றின் ஆலயங்களை அவர்கள் கடந்த 40 ஆண்டுகளுக்கு மேலாக தரிசித்ததே இல்லை. புதிதாகப் பிறந்து வளர்ந்த சமுதாயத்தினருக்கு அந்த ஊரைப் பற்றிய மாண்பு தெரியுமே ஒழிய வேறு எதுவும் தெரியாது. நேரில் சென்று அவர்கள் பார்த்தவர்கள் அல்ல!

அந்தப் புனித ஊர்களையும், இன்னும் நதிகளையும், தீர்த்தங்களையும், ஆழ்வார்கள், நாயன்மார்கள் பாடி அருளிய ஆலயங்களையும் பார்க்க வேண்டும் என்று துடியாய்த் துடித்துக் கொண்டிருந்தார்சள்.

இப்போது படையடுத்து அந்நாடுகளை ஜயிப்பதன் மூலம் அவைகளைப் போய்ப் பார்க்க வழி [illegible]ாகிறது என்று அவர்கள் நினைத்ததும் அவர்களுக்கு உற்சாகம் கரை புரண்டது.

நகரங்களும், ஊர்களும் திருவிழா போல் கோலம் பூண்டன. எங்கும் மக்கள் பொற்காசுகளையும், நவரத்தினங்களையும் பண்டாரங்களில் கொண்டு போய்ச் சேர்த்தார்கள்.

படைவீரர்களுக்கான வேல், வாள், அம்புகளைப் பெருவாரியாக உற்பத்தி செய்தார்கள்.

மெத்தை போன்ற கவசங்களையும், இரும்புக் கவசங்களையும் பெருவாரியாகச் செய்து குவித்தார்கள்.

தாங்கள் வளர்க்கும் குதிரைகளையும், பொதி மாடுகளையும் போர்ப் படைகளுக்கு இலவசமாக அளித்தார்கள்.

ஆங்காங்கே மக்கள் வில், வாள் பயிற்சியிலும் குதிரை, யானை ஏற்றத்திலும் பழக ஆரம்பித்தார்கள்.

ஊரில் உள்ள வணிகர்கள் எல்லாம் தங்கள் பார வண்டிகளையும் தாமகவே படைகளுக்கு மனமுவந்து கொடுத்தார்கள்.

மேற்கே துளுவ நாட்டிலிருந்து கிழக்கே ஓரங்கல் நாடு வரை மக்கள் ஒரே லட்சியத்துடன் பரபரப்பாக இயங்கத் தொடங்கினுர்கள்.

முள்வாய் நகரத்தில் யுத்த ஆயத்தங்களைச் செய்துவிட்டு கோபணு நேராக திருநாராயணபுரத்திற்குப் பறந்து சென்ருர்.

அங்கே குன்றின் மேலேறி, வேதாந்த தேசிகரின் குடிலை அடைந்து அவர் முன்னிலையில், ''சுவாமி!'' என்று சொல்லி சாஷ்டாங்கமாக, விழுந்தார்.

'போதும்!' என்று சொல்லும் வரை மீண்டும் மீண்டும் கீழே விழுந்து நமஸ்கரித்து, பிறகு கைகட்டி வாய் புதைத்து தேசிகரின் முன் மிகுந்த பக்தியுடன் நின்ருர் அவர்.

வேதாந்த தேசிகரை இப்போது, இந்நிலையில் பார்ப்பதே அவருக்குப் புல்லரித்தது.

தேசிகருக்கு அப்போது 102 பிராயம் ஆகியிருந்தது. நூறு கோடைகளையும், நூறு வசந்தங்களையும் தாண்டி இப்போது உள்ளும் புறமும் ஞான சொரூபமாகி, தெய்வ

காந்தியுடன் ஒரு அபூர்வ ஜோதி போல் இருந்தார் அவர்.

அவரது திருமேனி இளைத்து இருந்தும், சந்தனம் போல் விகசித்தது.

திருமுடிகள் எல்லாம் தும்பையாய் நரைத்திருந்தும், அதில் ஒரு தெய்வ அழகு திகழ்ந்தது.

திருக்கண்களைப் பார்த்தால் ஜீவகளை மட்டுமின்றி ஒரு ஆன்ம களை தோன்றிப் பார்ப்பவர்களை எல்லாம் பரவசமடையச் செய்தது.

வான் உலகில் வாழும் ஒரு தேவரே இங்கே மண்ணுலகில் வந்திருக்கிறார் என்று சொல்லும்படி அவர் திருத் தோற்றத்திலேயே ஒரு அதிசயமான தெய்வ சான்னித்தியம் திகழ்ந்து கொண்டிருந்தது.

அவர் முன்னால் விழுந்து எழுந்த கோபணா மெய் சிலிர்க்க, விதிர் விதிக்க, மெள்ள நிமிர்ந்து, தேசிகரின் திருக்கண்களைக் கண்டு அந்தப் பார்வையின் ஸ்பர்சத்தினாலேயே உடம்பெல்லாம் நடுக்கம் கொள்ள, மெள்ளத் தழதழத்து, ''சுவாமி!'' என்றார்.

தேசிகரும் தமது முறுவல் திருவாயைத் திறந்து, ''கோபணா! வேளை வந்ததுவோ?'' என்று திருச்சொற்களைக் கூற,

''ஆமாம், சுவாமி! ஆமாம் சுவாமி!'' என்று ஏதோ இதுவரை தாம் செய்யாததை நினைத்துத் தாமே தம் முன் குற்றம் கருதுபவர் போல் கூறினார்.

''நல்லது கோபணா! திருவரங்கத் திருவை நீ பெறுவாய்! அதனால் வற்றாத ஒரு செல்வத்தை உன் நாடு அடையப் போகிறது. இனி எந்த யவனர்களாலும் இது போன்ற ஒரு பெரும் துக்கம் அரங்கன் கோவிலுக்குச் சம்பவிக்கப் போவதில்லை. நாடுகளும், ஊர்களும், கோவில்களும் இனி செழித்து வளரும்! கோபணா! அரங்கன் மீது பாரத்தைப் போட்டு, அஷ்டாட்சரத்தை ஜபித்துக் கொண்டு, தைரியமாகப் போரில் இறங்கு! வெற்றி சித்திக்கும்!'' என்று திருவாய் மலர்ந்து அருளினார்.

கோபணா அதைக் கேட்டு மெய்யுருகி நின்று, ''சுவாமி! அடியேன் மனத்தில் ஒரு கிலேசம் இருந்து வருகிறது. மதுரை மீது போர் தொடுப்பதில் அடியேன் காலம் கடத்தி விட்டேனோ என்று அவ்வப்போது ஐயுற்று மனத்தில் நைகின்றேன். இந்த ஐயங்கள் என் ஆன்மாவையே அரிக்கின்றன. தாங்கள்தான் அடியேனுக்குப் புத்தி கூற வேண்டும்'' என்று இறைஞ்சினார்.

தேசிகரின் திருக் கண்களிலேயே இப்போது முறுவல் தவழ்ந்தது.

''கோபணா!'' என்று திருவாய் மலர்ந்த அவர், ''கீதையில் பகவான் கூறியதை நீ அறிந்ததில்லையோ? விசுவரூபம் எடுத்தபோது அவர் கடைவாயிலே எதிரிகள் ஏற்கெனவே அரைபட்டிருப்பதை அர்ச்சுனனுக்குப் பகவான் காட்டியதின் உள் அர்த்தம் என்ன? அவர் நம்மை ஒரு கருவியாக வைத்து ஒரு காரியத்தைச் செய்ய வைக்கிறார். ஆனால் உண்மையில் காரியத்தை அவரே செய்து முடிக்கிறார். அது போல இங்கேயும் பகவான் உன்னைக் கருவியாகக் கொண்டு காரியத்தில் இறங்கி விட்டார். உன்னால் இது நாள் வரை செய்ய முடியவில்லை என்று மனத்தில் தாபப்படாதே! பகவான் அதுபற்றி நினைக்கவில்லை என்று மனத்தை சமாதானம் செய்து கொள்!'' என்று கனிவு என்னும் குரலில் மெதுவாகக் கூறினார்.

அவரின் அந்தத் திருமொழிகளைக் கேட்டதுமே கோபணாவின் நெஞ்சில் ஒரு குளிர்ச்சி ஏற்பட்டது போலிருந்தது.

இத்தனை நாளும் அவரை விரட்டிக் கொண்டிருந்த ஒரு தாபம் திடீரென்று கரைந்தது போல் தோன்றியது.

அப்படியே, ''சுவாமி'' என்று தழதழப்புடன் கூவி அவரது பாதாரவிந்தங்களில் விழுந்தார் கோபணா.

''சுவாமி! தங்களால் இந்த நாடு பாக்கியம் பெறுகிறது. நாங்களும் பக்கியம் பெறுகிறோம்'' என்று கண்ணீர் சொரியக் கூறி பல முறை தண்டனிட்டுக் கடைசியில் விடை பெற்றார் அவர்.

பரிதாபி (கி.பி. 1371) வருடம் ஜனித்த சித்திரை மாதக் கடைசியில் இரு திசைகளிலிருந்து இரு படைகள் புறப்பட்டன.

வடக்கே காஞ்சிபுரத்லிருந்து ஒரு படையும், வடமேற்கே சத்தியமங்கலத்திலிருந்து ஒரு படையும் மதுரை நோக்கித் தனித் தனியாகப் புறப்பட்டன.

விஜயநகர ராஜ்யமே அதுவரை காணாத ஒரு உற்சாகமுடன் இந்தப் படைகள் புறப்பட்டன.

அதனிடையே காணப்பட்ட உத்வேகமும் ஆர்ப்பரிப்பும் அளவிறந்ததாய் இருந்தது.

காஞ்சிபுரப் பகுதிப் படையில் கோபணாவும், கம்பணரும் இருந்தார்கள்.

அந்தப் படை ஒரே நாளில் பிரயாணம் செய்து சுல்தானின் ராஜ்யத்தை மிதித்தது.

—தொடரும்



# மதுரா விஜயம்

ஸ்ரீ வேணுகோபாலன்

சுல்தானிய ராஜ்யத்தின் மண்ணை மிதித்ததும் கம்பணரும் கோபணுவும் பூஜை நடத்தினர்கள். பிறகு வீர கோஷங்கள் முழங்கிக் கொண்டு அந்த ராஜ்யத்துள் நுழைந்தார்கள்.

ராஜ்யத்தின் முதல் துர்க்கம் ஒரு நாழிகை தூரத்தில் இருந்தது. இருந்த இருபது சுல்தானியர்கள் அதில் விஜயநகரப் படையைக் கண்டதும் கீழே இறங்கி ஓட்டம் பிடித்தார்கள்.

அந்த மண் துர்க்கத்தின்மீது முதன் முறையாக வராகக் கொடியைப் பறக்க விட்டு விட்டு,

அடுத்தாற் . 'போலிருந்த முதல் கிராமத்தில் கம்பணரும், கோபணுவும் நுழைந்தார்கள்.

ஊர் ஜனங்களுக்குத் தங்கள் கண்களை நம்ப முடியவில்லை. இந்நாட்டு மன்னர்கள் இப்படித் தைரியமாக சுல்தான் ராஜ்யத்திற்குள் வந்து விட்டார்களா என்று ஆச்சரியப்பட்டார்கள்.

உற்சாகம் பிறந்து பக்கத்திலுள்ள காட்டிற்குச் சென்று அங்கு ஒளிந்து வாழ்ந்த மக்களை அழைத்து வந்தார்கள்.

மக்கள் எல்லாம் திரண்டு தாரை, தப்பட்டைகளை அதிர்த்து கம்பணரை வரவேற்றார்கள்.

பெண்களில் பெரும்பாலோர் ஆரத்தி எடுப்பது எப்படி என்பது கூடத் தெரியாமல் இருந்தார்கள். 48 வருட அந்நியர் ஆட்சியில் அவர்களது பழக்க வழக்கங்கள் நிறைய அழிந்து விட்டிருந்தன. வயதில் முதிர்ந்தவர்கள் அவர்களுக்கு அந்த முறைகளை முதன் முறையாகக் கற்றுக் கொடுத்தார்கள்.

உற்சாகம் பொங்கிய ஜனங்களிடம் கோபணு, ''இனி பயமின்றி வாழுங்கள்! உங்கள் வழிபாடுகளைக் கவலையில்லாமல் நடத்துங்கள்'' என்று கூறினர்.

''கம்பணர் வாழ்க, கோபணு வாழ்க! விஜயநகரம் வாழ்க!'' என்று எங்கும் கோஷங்கள் எழுந்தன.

முதல் ஊரைப் பிடித்தவுடன் செஞ்சியிலிருந்து திருவரங்கம் வரை எழுந்தருள வைத்து தமக்குப் பின்னலேயே அழைத்துச் செல்ல வேண்டும் என்பது கோபணுவின் ஆசை!

அதற்காக இரண்டு ஆட்களை அனுப்பி வைக்க மறுநாள் மதிய வேளைக்குள் திருவரங்கன் சிங்கவரத்திலிருந்து கோலாகலமாய் வந்து சேர்ந்தார். மன்னரும் சைனியாதிபதியும் உணர்ச்சி வசமாகி அவரது சந்நிதி முன் நெடுஞ்சாண் கிடையாக விழுந்து, அரங்கனுக்கு வேண்டிய உபசாரங்களை எல்லாம் செய்யத் தொடங்கினர்கள்.

கிராம ஜனங்கள் எல்லோரும் பரவசரானர்கள். அவர்களில் ஐம்பது வயதுக்கு உள்ளானவர்கள் எல்லோரும் வாழ்க்கையில் முதன் முறையாக சுவாமிக்கு வழிபாடுகள் நடத்தப்படுவதைப் பார்த்தார்கள். மனங்களில் அறியாத ஆனந்தத்தை அனுபவித்தார்கள்.

அறுபதுக்கு மேல் வயதானவர்கள் தங்கள் சிறு பிள்ளைப் பருவத்தில் இதுபோன்ற வழிபாடுகளைப் பார்த்தவர்கள். பலருக்கு அந்த ஞாபகம் கனவு போல் போய் விட்டது. எனவே இப்போது வாழ்க்கையில் காணக் கிடைக்காததைக் காண்பது போல் சந்தோஷப் பட்டார்கள்.

கம்பண ராஜாவைப் போய் ஊர்ப் பெரியவர்கள் வீழ்ந்து வணங்கி காணிக்கைகள் கொடுத்து விட்டு தங்கள் இளைஞர்களை யுத்தத்திற்கு அனுப்புவதாகக் கூறினர்கள்.

கோபணுவுக்கு அந்தக் காட்சி கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது அவர் கண்களில் நீர் துளிர்த்தது. கம்பணரிடம் தனியாகப் போய், ''மன்னவ, நாம் ஒரு வகையில் தப்புக் கணக்குப் போட்டு விட்டோம்'' என்று கூறினர்.

''எந்த வகையில்?'' என்று கேட்டார் கம்பணர்.

''முப்பதினுயிரம் படைபோடு புறப்பட்டிருக்கிறோம். எதிரிகளின் கண்ணனூர்ப் படையே ஒரு லட்சம் இருக்கிறது என்று நினைத்து சிறிது கவலைப்பட்டோம். நமக்கு அரங்கன் வழி காண்பித்துவிட்டார் பார்த்தீர்களா?'' என்றார் கோபணு.

''இந்த கிராம இளைஞர்கள் நூறு பேர் தானே இருப்பார்கள்?'' என்றார் கம்பணர்.

---



## மனிதன் பறப்பது எதனுலே?

எறும்பின் முயற்சிதான்
யானையையே பயப்பட வைக்கிறது.
கடினமான முயற்சிதான், நிலக்கடலை விவசாயி
ஒருவரை அமெரிக்காவுக்கு அதிபராக்கியது.
பறவைகளின் முயற்சிதான்
மனிதனை வானத்தில் பறக்கும்படி செய்தன!
ஒரு சிறு குண்டூசி எத்தனை பெரிய
முயற்சியாளர்களை உருவாக்குகிறது!
முயற்சி ஒரு பேரழகி! அவளை நீ
கட்டிக் காப்பதில்தான் உன் திறமை இருக்கிறது!

- பருக்.

''அப்படி இல்லையே! போகும் கிராமம் எல்லாம் படைகளைத் திரட்டலாமே நாம்! தவிர நம் வழியில் இல்லாத பிரதேசங்களுக்கும் ஆட்கள் அனுப்புவோம். எதிரியின் தேசத்திலேயே படை திரட்டுவோம்'' என்றார் கோபணா.

மறுநாள் காலையில் கம்பணரும் கோபணாவும் ஊர் ஜனங்களிடம் விடை பெற்று புறப்பட்டார்கள்.

முன்னே செல்லும் மலை இனத்துக் காவல் படையினர் கம்பணர் கோபணாக்களின் வருகையை அறிவித்துக் கொண்டே போய் விட்டபடியால் போகு மிடமெல்லாம் மக்கள் ஆரவாரத்தோடு நின்று அவர்களை வரவேற்க ஆரம்பித்தார்கள்.

தமது மண்ணுக்கும் பண்பாட்டுக்கும் உரித்த ஒரு மன்னர் ஒருவரைப் பார்ப்பதற்கு அவர்களுக்குச் சந்தோஷமாக இருந்தது.

படைக்கு ஆட்களைக் கொடுப்பதிலிருந்து வேல், வாள் முதலிய உபரகணங்களையும் மன சேகரித்துக் கொடுப்பது வரை எல்லாம் செய்தார்கள்.

அரங்கனும் படைகளுக்குப் பின்னாலேயே வந்து கொண்டிருந்ததால் மக்களின் உற்சாகம் கரை புரண்டு ஓடியது.

நான்காம் நாள் காலையில் விஜயநகரப் படைகள் கண்ணனூரை (தற்கால சமயபுரம்) நெருங்கி நின்று விட்டன.

அதே நேரத்தில் பிரதானி சோமப்பரின் தலைமையில் சத்தியமங்கலத்திலிருந்து புறப்பட்ட படையும், வழியில் கோலாகலமான வரவேற்புகளைப் பெற்றுக் கொண்டு கண்ணனூருக்கு மேற்கே ஒரு நாழிகை தூரத்தில் வந்து நின்றது.



இரு படைகளும் ஒற்றர்களை அனுப்பி தங்கள் தங்கள் பரஸ்பர இடங்களைத் தெரிவித்துக் கொண்டன.

இனி, இந்தப் படைகள் சிறிது நகர்ந்தால் கூட யுத்தந்தான்.

ஆனால் அவைகள் நகரவில்லை.

ஒரு வசதியான இடத்தில் படைகளை வரிசைகளாக வகுத்து கோபணா நிறுத்தியிருந்தார். அவருக்கு ஒரே ஒரு கவலை. கண்ணனூர்க் கோட்டைக்குள் ஐம்பதினாயிரம் பேர்கள் கொண்ட யவனப் படை இருந்தது. கோட்டைக்கு வெளியே யவனரல்லாத இதரப் படைகள் ஐம்பதினாயிரம் பேரோடு இருந்தது. இந்த இரண்டு படைகளும் ஒன்று சேர்ந்து தம்மை எதிர்க்க வந்து விடக் கூடாது என்பதுதான் அவரது கவலை.

இப்படிச் சேர்வதைத் தவிர்ப்பதற்காக ஒரு ராஜ தந்திரம் செய்திருந்தார்.

வல்லபனையும், தத்தனையும் ஒற்றர்களாக அனுப்பி அவர்களுக்குப் பலவித முக்கிய அலுவல்களைக் கொடுத்திருந்தார்.

காரியங்கள் முடிந்ததும் அவர்கள் வந்து அவரிடம் செய்தி கூற வேண்டும் என்றும் ஏற்பாடாகியிருந்தது.

இதுவரை அவர் சொல்படி எல்லாம் நடந்திருந்தால், இதற்குள் அந்த இளைஞர்கள் அவரிடம் வந்திருக்க வேண்டும்.

அவர்கள் வராததுதான் அவருக்குப் பெரும் கவலையைக் கொடுத்தது.

வழியில் அவர்களுக்கு ஏதாவது நிகழ்ந்திருக்குமா அல்லது தமது திட்டம் நிறைவேறாமல் வேறு ஏதாவது இடையூறுகள் அவர்களுக்கு ஏற்பட்டிருக்குமா?

என்ன காரணம் தெரியவில்லையே!

ஒரு பெரும் படையோடு இங்கே வந்து நிற்கும் வேளையில் எந்தச் செய்தியும் வராமல் இருக்கிறதே! இது போல் சோதனை இருக்குமா என்று நினைத்தார்.

மேலும் ஒரு நாள் ஓடியது.

இரண்டு நாட்களும் ஓடிவிட்டன.

கோபணாவுக்கு பெரிய தவிப்பு ஏற்பட்டது. கம்பணர் அவரிடம் வந்து, ''கோபண சுவாமி! இனி என்ன செய்வோம்?'' என்று கேட்டார். அரசர் முகத்திலும் கவலைக் குறிகள் தோன்ற ஆரம்பித்திருந்தன.

''இல்லை மன்னவ! இரண்டு இளைஞர்களும் திறமை வாய்ந்தவர்கள். நிச்சயம் வந்து விடுவார்கள். காரணம் ஏதோ இருக்க வேண்டும்'' என்றார் கோபணா.

இன்னும் ஒரு நாள் ஓடியது.

படைகளின் கடைசியில் வந்து கொண்டிருந்த அந்தப்புர பகுதியும் அதற்குள் வந்து சேர்ந்து விட்டது. பெண்கள் வீராங்கனைகளாகக் குதிரைகளில் வந்து இறங்கினர்கள். அவர்களுக்கு நாயகமாக விளங்கிய கம்பணரின் மனைவியான கங்காதேவியும் வந்து இறங்கிவிட்டாள்.

மன்னர் யுத்த களத்திற்குப் போனால் அவரைத் தொடர்ந்து மனைவிகளும் செல்வது அந்நாளின் வழக்கமாக இருந்தது. வசதிக் குறைவுகள் நிறைய இருக்குமானால் தான் ராணிகள் போகாமல் இருப்பார்கள்.

இந்தப் படை எடுப்பின் போது அரசி கங்காதேவி தானும் அவசியம் வரப் போவதாகக் கூறிவிட்டிருந்தாள்.

மன்னரும் அதைத் தடை செய்யவில்லை.

ராணி கங்காதேவி இப்போது கம்பணரிடம் வந்து, ''சுவாமி! என் இடது கண்களும் தோள்களும் துடிக்கின்றன. ஏன் தாமதிக்கிறீர்கள்! கோட்டையை நோக்கிப் போவதுதானே? ஏன் யோசிக்கிறீர்கள்!'' என்று கேட்டாள்.



''கங்கா! செய்தி வர வேண்டும், ஒற்றுச் செய்தி! காத்துக் கொண்டிருக்கிறோம்!'' என்றார் கம்பணர்.

அவர் அப்படிச் சொல்லிக் கொண்டிருக்கும்போதே பின்னால் வெகு தூரத்தில் சின்னங்கள் ஊதும் ஒலி கேட்டது. தீவர்த்திகள் புகையைக் கக்கிக் கொண்டு வருவது தெரிந்தது.

''கோபண சுவாமி!'' என்றார் கம்பணர். ''அரங்கரும் வந்து விட்டார். பரிவாரங்கள் எத்தனை நாட்கள் தான் பின்னால் காத்திருப்பார்கள்?'' என்றார் கம்பணர்.

கோபண யோசித்துக் கொண்டே நின்றார். அவர் மனத்தில் எத்தனையோ சிந்தனைகள் ஓடின. இப்போது என்ன முடிவெடுக்க வேண்டும்? என்ன முடிவு எடுத்தால் என்ன நடக்கும்? எல்லாம் நல்லதாகவே முடியுமா?

குனிந்தவாறே யோசித்தார் அவர். பிறகு சடேரென்று திரும்பினார். அரங்கன் வந்து கொண்டிருக்கும் திசை நோக்கி விரைவாகப் போக ஆரம்பித்தார். ஒரே தீவிரமுடனும் வேட்கையுடனும் வேகமாக அவர் போய்க் கொண்டிருந்தார்.

அரங்கன் வெகு தூரத்தில் வந்து கொண்டிருந்ததால் அவரை அடைய கால் நாழிகையாயிற்று. பாதரட்சைகள் ஏதும் இல்லாமல் வெறும் பாதங்களுடன் கல்லிலும், குழியிலும் நடந்து சென்று, அரங்கனின் பல்லக்கு முன்னால் நின்று, ''ரங்கா!'' என்று சொல்லி மண்டியிட்டுச் சரணம் அடைந்தார்.

''அரங்கா! உம்மைத் திருவரங்கம் கொண்டு சேர்ப்பதாய் ஒரு சபதம் செய்து விட்டு இவ்விதம் ஒரு இக்கட்டான நிலையில் தவிக்கிறேனே! இந்த அடியவனின் நிலையை நீ அறியவில்லையோ! உம்மையும் இப்படி ஊரில்லாக் காட்டிலே கொண்டு நிறுத்தியிருக்கிறேனே! இன்னமும் உமது காட்டுவாசம் தீரவில்லையோ! அரங்கா! அரங்கா! எனக்கு ஒரு வழி அருளுவாய்!'' என்று [illegible] குருகப் பிரார்த்தனை செய்தார்

கண்ணீர் ததும்பிய கண்களுடன் அரங்கனை நிமிர்ந்து பார்த்தார்.

யோகத்திலிருப்பான் போல் பொலிந்த அரங்கனது திருக்கண்கள் இந்தக் கணத்தில் விகசித்துச் சுடர்ப்பது போல் அவருக்குத் தோன்றியது.

குமிழ் அதரமுள்ள வாயில் ஒந புன்னகை மெள்ள முற்றி அழகு சிந்துவது போல் அவருக்குத் தோன்றியது.

அரங்கன் இப்போது விக்கிரமாகவே அவருக்குப் படவில்லை. அதற்கு மாருக அவர் குளிர்ந்து சான்னித்தியம் நிறைந்த ஒரு தெய்வ உருவமாகவே தோன்றினர்.

கோபணவின் அகக் கண்ணில் இந்த உருவம் தோன்றியிருந்தாலும் சரி, அல்லது புறக் கண்ணில் தோன்றியிருந்தாலும் சரி, அது அவர் மனத்தில் குளுமை நிரம்பிய ஒரு மகத்தான அமைதியைக் கொடுப்பதாக இருந்தது.

அதுவரை குழப்பமும் கொந்தளிப்பும் கொண்டிருந்த அவர் எண்ணங்கள் இப்போது சீராகப் படிந்து மெள்ள மெள்ள ஒரு அமைதியில் ஆழ்வது போல் இருந்தது.

அவர் உடலில் ஏதோ புதுசக்தி பிரவகித்து மயிர்க்கால்களிலும் கூட நிரவி ஓடுவது போலிருந்தது.

ஆனந்த பாஷ்பமுடன் எழுந்தார் அவர்.

அஞ்சலி செய்த கைகளுடன் அவர் திரும்பும்போது கிழக்குப் பகுதியில் அவருக்கு ஏதோ சலனமிடுவது தெரிந்தது.

திடுக்கிட்டு அந்தத் திசையை உற்று நோக்கினர்.

இது ஏன் இத்தனை நேரமும் கண்ணில் படவில்லை?

அரங்கன் இருக்கும் மேட்டில் ஏறிய பிறகுதான் அந்தச் சலனம் அவர் கண்களுக்குத் தெரிந்தது.

அரங்கன், தம்மை அங்கு அழைத்ததே, இந்தச் சலனத்தைக் காட்டுவதற்குத் தானே?

அதே திசையில் பார்த்துக் கொண்டிருந்தார் கோபணு.

மரம் நெருங்கிப் படராத அந்தப் பகுதியில், புல்லும் புதர்களும் நின்றிருந்த தரையில் ஏதோ ஒன்று எழும்பி எழும்பிப் படிந்து மெள்ள நகர்ந்து கொண்டிருந்தது.

நிச்சயமாக அந்தச் சலனம் அவர் திசை நோக்கி வருகிறது என்பதை அறிந்ததும், அதில் ஏதோவிசேஷம் இருக்கிறது என்று யோசித்த கோபணு திடீரென்று அந்தத் திசையை நோக்கிப் போக ஆரம்பித்தார்

முதலில் நிச்சயமில்லாமல் சிறிது தூரம் நடந்தவர் பிறகு வேகமாக நடக்க ஆரம்பித்தார்.

கால் முகூர்த்தம் ஓடியிருக்கும்.

சலனத்தை நெருங்க நெருங்க அவருக்கு ஒரு ஆச்சரியம் தோன்றிக் கொண்டிருந்தது.

அந்தச் சலனம் ஒரு மனித உருவமாகத் தெரிந்தது.

அந்த உருவம் காலால் நடக்காமல் தரையில் ஊர்ந்து கொண்டே வருவது போலிருந்தது.

என்ன காரணம் இருக்கும்?

யாராக இருக்கும்?

இப்படிப் பல யோசனைகள் செய்த கோபணு வெகு வேகமாகத் தாவி நடக்க.......

வெகு சீக்கிரத்தில் அந்த ஊர்கிற மனிதர் அருகில் இருந்தார்.

உருவத்தைப் பார்த்ததும் கோபணுவுக்குத் தூக்கி வாரிப் போட்டது.

அவர் ஒரு வைணவர்.

அவரது கால்கள் இரண்டும் ரண காயப்படுத்தப் பட்டிருந்தன.

அவைகளை உபயோகிக்க முடியாமல்தான் அவர் ஊர்ந்து வந்து கொண்டிருந்தார்.

அப்படி ஊர்ந்ததால் அவர் மேனி மீது முள்ளும் கற்களும் குத்தி அங்கங்கே ரணமாக மாறி இருந்தன.

வெகு தூரமும், வெகு நேரமும் அவர் அப்படி ஊர்ந்து வந்திருந்ததால், களைப்பும், சோர்வும் அவரை வெகுவாகப் பீடித்திருந்தன. மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கப் பல்லைக் கடித்தவாறு அவர் தம் கைகளாலேயே ஊர்ந்து கொண்டிருந்தார். கால்கள் சுரணையற்றவை போல் பின்னல் நகர்ந்து வந்து கொண்டிருந்தன.

''சுவாமி! தாங்கள் யார்? ஏன் இப்படி ஊர்கிறீர்கள்?'' என்று கேட்டார் கோபணு.

ஆசுவாசத்தை சிறிது சிறிதாகப் பெற்ற அந்த வைணவர் மெதுவாக நிமிர்ந்து பார்த்து, ''அடியேனது பெயர் கிருஷ்ணராஜ உத்தம நம்பி! • கோபணு சுவாமியை நான் சீக்கிரம் பார்க்க வேண்டும்'' என்று கூறினர்.

அதிசயமடைந்த கோபணு, அவரை நோக்கி, ''சுவாமி! அடியேன் தான் கோபணு! என்ன வேண்டும்?'' என்று கேட்டார்.

''அப்படியா?'' என்று ஆச்சரியத்துடன் கூறிய கிருஷ்ணராஜ உத்தம நம்பி,''இதுவும் அரங்கன் செயல் தான்! சுவாமி! வல்லபன் செய்தி அனுப்பித்தார். தாங்கள் கோட்டையைத் தாக்கலாம்!'' என்று உரக்கக் கூவினர்.

கோபணுவுக்கு ஒரு மின்னல் பாய்வது போல் இருந்தது.

''சுவாமி! சுவாமி! இந்தச் செய்திக்காகத்தான் நான் காத்துக் கொண்டிருக்கிறேன். தாங்கள் யார்? எப்படி இங்கே வந்தீர்கள்? வல்லபன் என்னென்ன சொன்னன்?'' என்று பரபரப்புடன் கேட்டார் கோபணு.

உத்தம நம்பி நீண்ட மூச்சு விட்டார்.

''கோபணு சுவாமி!..... என்னல் அதிகம் பேச முடியவில்லை..... எல்லாவற்றையும்...... மெதுவாகச் சொல்கிறேன்..... இப்போது.... அவசரம்....தாங்கள் படை எடுக்க... உத்தரவிடுங்கள். நான் மற்றவை..... பின்னல் சொல்கிறேன்'' என்று இழைக்க...இழைக்கக் கூறினர்.

''சுவாமி!... நல்லது! நான் உத்தரவிடுகிறேன். தாங்கள் இங்கேயே தயை செய்து இருங்கள்! தங்களுக்கு ஒரு பல்லக்கு அனுப்புகிறேன்'' என்று கூறிவிட்டு கோபணு ஒரே வேகமாய் மேட்டு நிலம் நோக்கி ஓட ஆரம்பித்தார்.

அவர் போன அரை நாழிகையில் படை எடுப்பதற்கான எக்காளங்களும், முரசுகளும், துந்துபிகளும், நகராக்களும் பயங்கரமாய் முழங்க ஆரம்பித்தன.

—தொடரும்

---

## நடிக நடிகையரை நம்புவது இல்லையோ?

படத் தயாரிப்பாளர்கள், நடிக நடிகையரை நம்பிப் படம் எடுப்பதில்லையோ?

| | |
|---|---|
| ஜெகன்மோகினி | —ஆடு, பாம்பு. |
| கண்ணமூச்சி | —பாம்பு |
| சிவப்பு ரோஜாக்கள் | — பூனை |
| மீனாட்சி குங்குமம் | —குரங்கு |
| தாய் மீது சத்தியம் | —குதிரை, நாய். |
| பஞ்ச கல்யாணி | —கழுதை |
| முள்ளும் மலரும் | —மீன் |

• இரா. நாராயணசாமி.

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

விஜயநகர சேனைகள் கொதித்துக் கொண்டு முன்னால் சென்றன. கவசம் தரித்த குதிரைகள் பைசாசங்கள் போலத் தென்பட்டன. அவை மீது தோற் கவசங்கள் தரித்த வீரர்கள் விரித்த விற்களுடன் அமர்ந்திருந்தார்கள்.

யானைகளின் தந்தங்களில் கூரிய கத்திகள் ஒரே நீட்டத்தில் கட்டப்பட்டிருந்தன. அவைகளின் அம்பாரங்களில் எட்டெட்டு வீரர்கள் வில்களுடன் அமர்ந்திருந்தார்கள்.

காலாட்கள் கையில் வில்லும் வாளும் வைத்திருந்தார்கள். அவர்களில் பெரும்பாலோர் கவசம் அணியவில்லை. அதற்கு மாருக உடம்பெல்லாம் எண்ணெய் பூசியிருந்தார்கள்.

ஓ என்ற பேரிரைச்சலுடனும், யானைகளின் கடூரமான பிளிறல்களுடனும், ''ரங்கா ரங்கா!'' என்று ஒரு பக்தி மூர்க்கமான குரலுடனும் சேனைகள் முன்னேறிச் சென்றன.

கண்ணனூர்க் கோட்டையின் கீழ் வசத்தில் யவனரல்லாதாரின் ஐம்பதினாயிரப் படை இருந்தது.

இந்தப் படையுடன்தான் முதன் முதலில் மோதல் ஏற்பட்டது.

மேலே ஆகாயத்தை நோக்கி அம்புகள் விட்டு இரு சேனைகளும் யுத்தத்திற்கான ஆயத்தத்தைத் தெரிவித்ததும், போர் ஆரம்பமாயிற்று.

தர்மத்திற்காகப் போரிடுகிறோம், சொந்த மண்ணை மீட்பதற்காகப் போர் புரிகிறோம் என்ற எண்ணங்கள் விஜயநகரப் படையினருக்கு மிகுந்த உற்சாகத்தை அளித்தது.

அரங்கரே படையோடு வந்திருக்கிறார் என்ற அதிசய நிகழ்ச்சிகூடப் புதிய உத்வேகத்தை அவர்களுக்கு ஊக்குவித்தது.

பிரதானிகள் சாளுவமங்கு, ஆனைகுந்தி விட்டப்பர், மாரய்ய நாயகர் ஆகியவர்கள் குதிரைகளில் ஏறி அங்கங்கே படைகளுக்கு ஆணையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

சர்வசைனியாதிபதி கோபண்ண மின்னல்போல் படையினரிடையே இயங்கிக் கொண்டிருந்தார்.

முதல் நாழிகையில் யுத்தம் இரு தரத்தாருக்கும் சமமாக நடந்தது. இரு பக்கங்களிலும் சேதங்கள் விளைந்தன. இந்த நேரத்தில் அதிகம் கவலைப்பட்டவர் கோபண்ணதான்...! அவர் கொண்டு வந்திருக்கும் படையோ எண்ணிக்கையில் குறைவு! எனவே சம அளவுச் சேதம் நேர்ந்தால்கூடத் தன் படையைத்தான் அது பாதிக்கும் என்று நம்பினார்.

அவரும் பிரதானிகளும் யோசனை நடத்தினார்கள்.

மேலும் இரு நாழிகை நேரம் யுத்தத்தை நடத்துவது என்றும், அதன் பின்னர் யோசிப்பது என்றும் முடிவு கொண்டார்கள்.

இரு நாழிகையும் போய் விட்டது. எதிரியின் மீது கணிசமான சேதத்தை ஏற்படுத்த முடியவில்லை. இதை நினைத்து கோபண்ண கவலைப்படும் போது, ஒரு நிகழ்ச்சி நடந்தது.

சத்தியமங்கலத்திலிருந்து சோமப்பர் துணையோடு வந்த படை மேற்கு வழியே கோட்டையைச் சூழ்ந்தது. வரும் வழியில் பல சிற்றாறுகளைக் கடக்க வேண்டி வந்ததால் தாமதமாகிவிட்டது. ஆனால் அந்தத் தாமதம் முதலில் கோபண்ணவுக்குக் கவலையைக் கொடுத்தாலும், பின்னர் அதுவே பெருத்த நன்மையாகப் போய் விட்டது.

திடீரென்று தங்கள் பின்னால் பெரும் படை ஒன்று வருவதைக் கண்டதும், எதிரிப் படையார் திகைத்துப் போனார்கள். உண்மையில் அது சிறிய படையே யானாலும், எதிரியாட்களுக்கு அது பெரிய படை போல் தென்பட்டது.

பயத்தில் எதிரியின் முதற் பிரிவு களத்தைவிட்டு ஓட ஆரம்பித்தது. அதன் அதிபதி கொல்லப்பட்டு அவரது கொடியும் பறிக்கப்பட்டு விட்டது.

ஒரு பிரிவு ஓடுவதைப் பார்த்ததும், பீதி இதர பிரிவுகளுக்குப் பரவ ஆரம்பித்தது.

அவ்வளவுதான்! எதிரிப் படை முழுவதுமே பயத்தில் கொந்தளிக்க ஆரம்பித்தது. வீரர்கள் களம்விட்டு ஓட ஆரம்பித்தார்கள்.

விஜயநகரத்தார் அவர்களை விடவில்லை. வேட்டையாடுவது போல் விரட்டிச் சென்றார்கள். கும்பல் கும்பலாகப் பிடித்து வந்தார்கள். ஆயிரக்கணக்கானவர்கள் பிடிபட்டார்கள். குதிரைகளையும் ஆயுதங்களையும் அவர்களிடமிருந்து பறித்துத் தங்கள் கூடாரவாயிலில் விஜயநகர வீரர்கள் குவித்தார்கள். பிடிபட்ட வீரர்களைச் சுற்றிப் பலத்த காவல் போட்டார்கள். மாலை நேரம் ஆவதற்குள் யுத்தகளம் எங்கும் பயத்துடன் கூடிய அமைதி கூடிவிட்டது.

வெற்றி அடைந்த பெருமிதத்தில் கோபண்ண, தம் வீரர்களைப் பாராட்டிக் கொண்டிருக்கும்போது பிடிபட்ட எதிரித் தலைவர்களில் ஐவர் பலத்த பாதுகாப்புடன் வந்தார்கள்.

''பிரபோ! எங்களுக்கு உயிர் பிச்சை அருளவேண்டும்! எங்கள் பிரார்த்தனையையும் செவிசாய்க்கவேண்டும். நாங்கள் தங்கள் படையுடன் ஒத்துழைக்க விரும்புகிறோம். அனுமதி வேண்டும்'' என்று கூறினார்கள்.

சிரித்தார் கோபண்ண.

''உங்களை நம்புவதா? எங்களுக்கு உங்கள் உதவியில் விருப்பமில்லை'' என்றார்.

''பிரபோ!'' என்று சொல்லி முன்னால் வந்தான் ஒருவன்.'' நாங்கள் எல்லோரும் இந்தமண்ணில் பிறந்தவர்கள். பலாத்காரமாக மதம் மாற்றப்பட்டவர்கள். வேறு வழியின்றி எங்கள் பெற்றோர்கள் காலத்திலிருந்து இந்த சுல்தானுக்கு உழைத்து விட்டோம். இதைத் தவிர எங்களுக்கு வேறு வழி எதுவும் தோன்றியதில்லை. இப்போது எங்கள் சொந்த மன்னர்களே இந்த மண்ணில் புகுந்து விட்டதை அறிந்ததும் நாங்கள் மகிழ்ச்சி அடைகிறோம். இந்தத் தருணத்தில் நாங்கள் எல்லோருமே எங்களது பழைய வேதமார்க்கத்திற்குத் திரும்ப விரும்புகிறோம். எங்களை ஏற்றுக் கொண்டு, எங்கள் வாழ்க்கையில் மகிழ்ச்சியைத் தாருங்கள்!'' என்று கூறினான்.



''நல்லது '' என்ருர் கோபணு. ''நீங்கள் சொல்வதையெல்லாம் ஏற்றுக் கொள்கிறேன். உங்களை எப்படி நான் நம்புவது?'' என்று கேட்டார். ஏற்கெனவே இது போன்ற விஷயத்தில் வீர வல்லாளர் ஏமாந்ததை அவர் நன்கு அறிந்திருந்தார்.

''பிரபோ!'' என்ருன் ஒருவன். ''எங்கள் பேச்சில் ஐயம் வேண்டாம். தாங்கள் எங்களுக்கு உத்தரவு தாருங்கள்! நாங்கள் தங்கள் கட்சியில் போர் புரிகிருேம். யவனர்களைக் கொன்று குவிக்கிருேம். அதுவே எங்கள் விசுவாசத்தைக் காட்டும் '' என்று கூறினுன்.

கோபணு அப்போதும் அவர்களை நம்பவில்லை.

''நீங்கள், அதிபதிகள் எத்தனை பேர் எங்களிடம் பிடிபட்டு இருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

'' நூறு பேர்கள் இருப்போம்!'' என்ருன் வந்தவன்.

''இவர்களில் பாதிப் பேர்களை எம்மிடம் பணயமாக வையுங்கள்! மற்றவர்கள் சண்டையிடுங்கள்! நீங்கள் துரோகம் செய்வது தெரிந்தால்இவர்களைக்கொன்று விடுவோம்'' என்ருர் கோபணு.

''நல்லது. நாங்கள் சம்மதிக்கிருேம்'' என்ருர்கள் வந்தவர்கள்.

அவர்களைப் போக விடுத்து விட்டு, இரவு ஒற்றர்களை ஏவி அவர்களைக் கண்காணிக்கும்படிக் கட்டளை இட்டார் கோபணு.

அன்று இரவு, போரின் முதல் கட்டம் முடிந்து விட்டதால், பிரதானிகளோடு ஆலோசனை நடத்திவிட்டு, கடைசியில் கிருஷ்ணராஜ உத்தம நம்பியை கோபணு பார்க்கப் போனுர்.

உத்தம நம்பியை ஒரு கூடாரத்தில் கிடத்தியிருந்தார்கள். அரச வைத்தியர் அவருக்குச் சிகிச்சை செய்திருந்ததால் அவரது உபாதைகள் வெகுவாகக் குறைந்திருந்தன.

கோபணுவைக் கண்டதும் உத்தமநம்பி, படுக்கையிலிருந்தே கைகூப்பினுர்.

கோபணு வேண்டிக் கொண்டதும் அவர் தம் வரலாற்றைக் கூறினுர்.

''சுவாமி! தாங்கள் என்னை அறிந்திருக்க மாட்டீர்கள். நாங்கள் பெரியாழ்வாரின் வம்சத்தினர்! அந்தப் புண்ணியரும் அவரது பிரசித்தி பெற்ற பெண் ஆண்டாளும் எம் முன்னேர்கள்! அவர்கள் தொடக்கமாகப் பல பெரிய புண்ணிய ஆத்மாக்கள் எம் பரம்பரையில் தோன்றியிருக்கிருர்கள். இராமனுஜர் காலத்தில் வாழ்ந்து, ஆழ்வார்கள் சரிதங்களையும் ஆசாரியர் சரித்திரங்களையும் முதன் முதலாக முறைப்படி எழுதிய கருட வாகனப் பண்டிதரும் எம் முன்னேர்தான்.

எம் வம்சத்தவர் இந்தத் திருவரங்கக்கோவிலுக்கு ஆவி, உடல், பொருள்களை எல்லாம் கொடுத்திருக்கிருர்கள். கோவிலை மகோன்னதங்களுக்குக் கொண்டு வந்திருக்கிருர்கள்.

ஆனுல் துருக்கர் முன்பு திருவரங்கத்தைத் தாக்கிய போது ஊரை விட்டு வெளியே போன குடும்பத்தாரில் எம் குடும்பத்தாரும் ஒன்று.

மேற்கு திசை ஊருக்குப் போய் அங்கே ஒரு தலைமுறை வாழ்ந்து விட்டோம். ஆனுல் திருவரங்கத்திற்குத் திரும்ப வேண்டும் என்ற ஆசை எங்களிடம் எப்

---

● ஆழ்வார் காலத்திலிருந்து தற்காலம் வரை தொடர்ந்து வருகிற ஒரு குடும்பத்தின் வம்சாவளி நம்மவரிடையே இருப்பது அதிசயமாகும். உத்தம நம்பி குடும்பத்தாரின் வம்சாவளிதான் அத்தகைய அதிசய வம்சாவளி! பெரியாழ்வார் தொடங்கி அவரது குடும்பப் பரம்பரையில் வாழ்ந்தவர்கள் பெயர்களும், அவர்களது ஆயுட் காலங்களும் (நாட்கள் சுத்தமாக) இந்த வம்சாவளியில் குறிக்கப்பட்டுள்ளன. கிழக்கிந்திய கம்பெனி காலத்தில் வாழ்ந்த மெக்கன்ஸி என்னும் ஆங்கிலேயரால் சேகரிக்கப்பட்ட எண்ணற்ற நூல்களில் இந்த வம்சாவளியைக் கூறும் நூலும் ஒன்று! இந்த உத்தம நம்பி குடும்பத்தார் இன்றும் திருவரங்கத்தில் வாழ்ந்து வருகிருர்கள்.



போதும் இருந்து வந்தது. சில ஆண்டுகளுக்கு முன் திருமணத்தூண் நம்பியைச் சந்திக்கும் சந்தர்ப்பம் ஏற்பட்டது. அவர்தாம் எங்களை இரகசியமாக அழகிய மணவாள கிராமத்திற்கு அழைத்து வந்தார். அது முதல் அந்தக் கிராமத்தில்தான் இருந்து வருகிறோம்.

இது எங்கள் கதை!

இதற்கு மேல் தாங்கள் ஒற்றுக்காக அனுப்பிய வல்லபனும் தத்தனும் என்ன ஆனார்கள் என்று சொல்கிறேன்.

அவர்கள் இருபது ஆட்களோடு எம் கிராமத்திற்கு வந்து ஒரு நாள் தங்கினார்கள். இரவுக்கிரவே அவர்களை காவேரியைக் கடக்கச் செய்து, தொண்டைமான் காட்டுக்குள் விட்டு விட்டு வந்தோம். தினமும் உணவுகளையும் அனுப்பி வந்தோம்.

ஆனால் தாங்கள் போட்டிருந்த திட்டப்படிச் சில காரியங்கள் நடக்கவில்லை. சுல்தான் தமது நோயோடு மதுரைக்குப் போனார் ஆனால், மதுரையை விட்டு வேறு எங்கும் போகவில்லை.

தாங்கள் படையெடுத்து வருகிறீர்கள் என்ற செய்தி நான்கு தினங்களுக்குள் அவருக்குக் கிடைத்து விட்டது.

போதையில் இருந்தாலும் சரியான கட்டளைகளை அவரால் கொடுக்க முடிந்தது. கண்ணனூரில் இருக்கும் யவனப் படைகளைக் கோட்டைக்கு வெளியே வருமாறும் விஜயநகரப் படைகளைத் தாக்குமாறும் கட்டளைகளைப் பிறப்பித்தார்.

அந்தக்கட்டளைகள் அடங்கிய ஓலையைஎடுத்து வந்த வீரர்கள் மதுரையிலிருந்து நாம் எதிர்பார்த்தபடியே தொண்டைமான் காட்டு வழியாகத்தான் கொண்டு வந்தார்கள்.

வல்லபன் தன் இருபது ஆட்களோடு அவர்களை மடக்கினான். இருபது ஆட்கள் எதிரே வரும் இருபது ஆட்களை விரட்டி விடலாம். ஆனால் ஒருவரை விடாமல் கொல்ல முடியுமா?

அந்தச் சாதனையை வல்லபனும் அந்த ஆட்களும் செய்தார்கள். ஆனால் ஒரே ஒரு ஆள்மட்டும் தப்பி விட்டான். சடலங்களை எண்ணியபோதுதான் தெரிந்தது. இவனால் ஏதாவது அபாயம் ஏற்படும் என்று வல்லபனும் இதரர்களும் நினைத்தார்கள்.

அவன் யாரையாவது அழைத்து வருவதற்கு முன் அவர்கள் தப்பி விட நினைத்தார்கள். அவசரமாக காவேரியைக் கடந்தார்கள். அழகியமணவாள கிராமத்திற்கு வந்தார்கள். விரைவாக ஒரு மாற்று ஓலை சித்தம் செய்தார்கள். அதில் எக்காரணம் கொண்டும் யவனப்படைகள் கண்ணனூர்க் கோட்டையை விட்டு வெளியே போகக் கூடாது என்று சுல்தான் கட்டளை இட்டது போல் எழுதி வைத்தார்கள். சுல்தானியரது இலச்சினையும் முத்திரையும் கையில் அகப்பட்டு விட்டதால், அதை எடுத்துக் கொண்டு இரண்டு துணையோடு வல்லபனும், தத்தனும் கண்ணனூர்க் கோட்டைக்குப் புறப்பட்டார்கள். புறப்படும் போது எங்களை நோக்கி, ''உடனே உங்களில் யாராவது கோபண சுவாமியைப் போய்ச் சந்தியுங்கள்! இனிப் போர் தொடுக்கலாம். யவனர்கள் வெளியே வரமாட்டார்கள், என்று சொல்லுங்கள்'' என்று கூறினார்கள். அவர்கள் போனதுதான் தாமதம், திடீரென்று முப்பது சுல்தானியர்கள் எங்கள் கிராமத்தை நோக்கி வருவதை நாங்கள் பார்த்து விட்டோம். தப்பியவன் தான் அவர்களை அழைத்து வருகிறான் என்று தெரிந்து விட்டது.

நாங்கள் கூடி யோசித்தோம். இவர்கள் கண்ணனூருக்குப் போய் விட்டால், வல்லபன் அகப்பட்டு விடுவான். வல்லபன் செய்துள்ள ஏமாற்றுக் காரியங்களும் அம்பலமாகி விடும். இதனால் எல்லாம் பாழாகும். ஆகவே, இந்த முப்பது சுல்தானிய வீரர்களையும் கண்ணனூருக்குப் போக விடாமல் தடுப்பது எங்கள் கடமை என்று நினைத்தோம்.

எங்களுக்கு வெறி வந்துவிட்டது. பெண்டு பிள்ளைகளை வேறு கிராமத்திற்கு அனுப்பினோம். ஆண்கள் எல்லோரும் திரண்டோம்.

எங்களில் பலருக்கு வாள் பயிற்சியும் வில் பயிற்சியும் உண்டு. இது போன்ற ஏதாவது பிரச்னைகள் வரும் என்று திருமணத்தூண் நம்பி ஆயுத சேகரணம் பண்ணியிருந்தார்! ஆகவே அந்த ஆயுதங்கள் எங்களுக்கு வசதியாகப் போய் விட்டது.

ஊரில் நாங்கள் முப்பது பேர் தேறினோம். மற்ற பேர் வயதானவர்கள்.

ஊரைச் சுற்றி மண்சுவர் இருந்தது. அது தான் எங்கள் கோட்டை ஆகியது. எல்லோரும் மிக ஆக்கிரோஷத்தோடு காத்திருந்தோம்.

சுல்தானியர்கள் ஆற்றைக் கடந்து வந்தார்கள். அவர்கள் எந்த வித நினைப்பும் இல்லாமல் எங்கள் மண்கோட்டை அருகில் வந்தார்கள். நாங்கள் சித்தமாக இருந்தோம். திருமணத்தூண்நம்பி கையை அசைத்ததும் சரமாரியாக வேல்களை எறிந்தோம். அம்புகளை எய்தோம். கட்டாரிகளை எறிந்தோம். பதினைந்து பேர் குற்றுயிராக விழுந்து விட்டார்கள். குதிரைகள் பெரும்பாலும் அடிப்பட்டு விட்டன.

எஞ்சிய பதினைந்து பேர் விறுவிறுவென்று வாட்களை எடுத்தார்கள். நாங்கள் மண் கோட்டையிலிருந்து கீழே குதித்தோம். நேருக்கு நேர் சண்டையிட ஆரம்பித்தோம்.

சற்றும் அவர்கள் அந்தத் தாக்குதலை எதிர்பாராததால் அவர்களை நாங்கள் சுலபமாக மடக்க முடிந்தது. பலரைக் கொன்றோம். எனினும் மிஞ்சிய மீதிப் பேர்கள் எங்களுக்குப் பெரும் பாரமாகவே தோன்றினார்கள். எங்களைவிட உக்கிரத்தோடு சண்டை செய்ய ஆரம்பித்தார்கள். நம் கட்சியில் ஒன்பது பேர் மாண்டார்கள்.

மீதிப் பேர் எல்லோருமே காயம் அடைந்தார்கள். அவர்களில் சிலர் மரண அவஸ்தையில் இருக்கிறார்கள். திருமணத்தூண் நம்பியும் அவர்களில் ஒருவர்'' என்று கூறி முடித்தார் கிருஷ்ணராஜ உத்தமநம்பி.

''அப்படியா?'' என்று சொல்லித் திடுக்கிட்டார் கோபனு. ''உத்தமநம்பி! அப்புறம் என்ன ஆயிற்று? சுல்தானியர்கள் தப்பி விட்டார்களா? அது ஆபத்தாயிற்றே!' என்று பரபரப்புடன் கேட்டார்.

''இல்லை, பிரபு! நாங்கள் விடுவோமா? எல்லோரையும் அடித்துத் தள்ளி விட்டோம். குற்றுயிர் குலையுயிர் ஆக்கி விட்டோம். யாரும் ஒரு அங்குலம் கூட நகர முடியாது. இந்த நிலையில் நாங்களும் ஒருவர் தவருமல் அடிபட்டு மண்ணில் கிடந்தோம். எனக்குக் காலில் வெட்டுக் காயம்! நான் கீழே கிடக்கும்போது தான் எனக்கு ஒரு திடீர் எண்ணம் தோன்றியது. ஐயோ வல்லபன் சொன்ன செய்தியை கோபனு சுவாமிக்குப் போய் சொல்ல யாரும் இல்லையே என்று நினைத்தேன். அப்போது ஒருத்தர் மட்டும் எழமுயல்வது தெரிந்தது. அவர்தான் திருமணத்தூண் நம்பி! புறப்படுவதற்காக எழுந்தார்! தடால் என்று விழுந்தார். விழும் போதே என்னைப் பார்த்தார். ''நம்பி எல்லோரும் உபாதைகளில் கீழே நகர முடியாமல் கிடக்கிருர்கள். கோபனு சுவாமியிடம் யாராவது விஷயத்தைச் சொல்ல வேண்டும். அவசரம்! நீங்களாவது போங்கள்'' என்ருர். நான் ஒருத்தன்தான் சிறிதாவது நகரக் கூடியவன். நகர ஆரம்பித்தேன். ஊர்ந்து ஊர்ந்து வந்தேன். இங்கே வருவதற்குப் பாதி நாள் ஆகி விட்டது, சுவாமி!'' என்று சொல்லித் தம் கதையை முடித்தார் உத்தமநம்பி.

கோபனுவின் கண்கள் பனித்தன.

''சுவாமி, தாங்கள் சொல்வது எனக்கு மகிழ்ச்சியையும் சோகத்தையும் ஒருங்கே தருகிறது இப்போது அவர்கள் கதி என்னவாயிற்று? யாராவது அவர்களைக் கவனிக்கிருர்களா? சொல்லுங்கள்'' என்ருர் பரபரப்புடன்.

''அதுதான் தெரியவில்லை. நான் இங்கு வந்து விட்டேன்'' என்ருர் உத்தமநம்பி.



''அப்படியானல் அந்தக் காரியத்தை இதோ கவனிக்கிறேன். தாங்கள் கவலைப்படாமல் இருங்கள்'' என்று கூறி விட்டு விடை பெற்றுச் சென்ருர் கோபனு.

அன்றிரவு வைத்தியர்களையும் இதர உதவிகளையும் அழகிய மணவாள கிராமத்திற்கு அனுப்பிவிட்டு கோபனு படுக்க முயன்ற போது ஜாமக்கோழி கூவ ஆரம்பித்தது.

மறுநாள் காலையில் கண்ணனூர்க் கோட்டையின் முற்றுகை ஆரம்பமாயிற்று.

கோபனு மிகுந்த எச்சரிக்கையுடன் இருந்தார். கோட்டையைச் சுற்றியுள்ள எல்லாப் பகுதிகளையும் கவனமாகக் கண்காணித்தார். மதுரையிலிருந்து சுல்தானின் படை இரகசியமாக வந்துவிடக் கூடாது என்பதற்காக காவேரி ஓரம் இரகசியமாக ஒரு ஐயாயிரப் படையை வைத்திருந்தார்.

சுல்தானின் பொய்க் கட்டளையை வல்லபன்கோட்டைக்குள் எடுத்துப் போயிருப்பதால், உள்ளிருந்து யவன வீரர்கள் வெளியே வந்து சண்டை செய்ய மாட்டார்கள்.

அதுவே கோபனுவுக்கு ஒரு அனுகூலமாகத் தோன்றியது. ஏனெனில் முற்றுகையின் மூலம் உள்ளிருப்பவர்களின் அன்ருட உணவு வகைகளுக்குப் பிரச்னை ஏற்படுத்திவிட்டால் அவர்கள் வாடி வதங்க ஆரம்பித்து விடுவார்கள். யவன வீரர்கள் அன்ருட மாமிச உணவு கிடைக்கவில்லை என்ருல் கூடத் துன்பப்படுவார்கள்.

அவர்களை வாடச் செய்த பிறகு கோட்டையை உடைக்க முற்பட்டால், அதிக எதிர்ப்பு இல்லாமல் காரியம் நிறைவேறிவிடும்.

முற்றுகை இரு வாரம் நீண்டது.

ஒரு நாள் யவனரல்லாப் படைத்தலைவர்கள் (முன்பு சிறைப் பிடிக்கப்பட்டவர்கள்) கோபனுவிடம் வந்து, ''சுவாமி! எங்களுக்கு அனுமதி கொடுங்கள்! நாங்கள் கோட்டை மீது ஏறி உள்ளே போகிருேம். நாங்கள் யார் என்று தெரியுமாதலால் யவன வீரர்கள் எங்களைக் கோட்டைக்குள் வருவதற்கு அனுமதி அளிப்பார்கள். இப்படிக் கணிசமான அளவு உள்ளே போன பிறகு உள்ளிருந்து கொண்டே அவர்களைத் தாக்க ஆரம்பித்து விடுகிருேம். கோட்டைக் கதவையும் திறந்து விடுகிருேம்'' என்ருர்கள்.

யோசித்தார் கோபனு.

இப்போதும் அந்தப் பழைய எதிரித் தலைவர்களை நம்பலாமா என்ற யோசனை.

''ஒரு நிபந்தனை'' என்ருர் கோபனு.

''என்ன?'' என்ருர்கள் தலைவர்கள்.

''உங்களில் பாதிப் பேர்களை இங்கே நிறுத்திக் கொள்வோம். உள்ளே போனவர்கள் எங்களுக்குத் துரோகம் செய்வது தெரிந்தால் அவர்களைத் தாட்சண்யமின்றிச் சிரச்சேதம் செய்து விடுவோம்'' என்ருர் கோபனு.

''சம்மதம், பிரபு!'' என்று வீரத்துடன் கூறினுர்கள் தலைவர்கள்.

எச்சரிக்கையுடன் அந்தத் தலைவர்களும் அவர்களது வீரர்களும் சிறுசிறு குழுக்களாகக் கோட்டை மதில் பக்கம் அனுப்பப்பட்டார்கள்.

அவர்களும் தாங்கள் இன்னுர் என்று மதில் மேல் உள்ளோர்க்குக் கூறி, ''தப்பித்து வந்து விட்டோம். மேலே தூக்குங்கள்!'' என்று கேட்டுக்கொண்டார்கள். மதில் வீரர்களும் நூலேணி மூலமாக அவர்களை மேலே ஏற்றி உள்ளே இறக்கினுர்கள்.

இந்த நிகழ்ச்சிகள் இரவு முழுவதும் நடந்தன.

மறு நாள் காலையில் கோபனு என்ன நடக்கிறது என்பதைப் பார்க்க ஆவலோடு காத்திருந்தார்.

விடிந்து நான்கு நாழிகை வரை ஏதும் நடக்க வில்லை.

போனவர்கள் துரோகம் செய்து விட்டார்களோ என்று ஒரு கணம் நினைத்தார்.

ஆனால் மறு கணமே அவர்களது மத மாற்றமும் அதனால் ஏற்பட்ட மனமாற்றமும் மிகவும் உறுதியானது என்று நம்பிக்கை வைத்தார்.

ஒரு நாழிகை ஓடியது. திடீர் என்று கோட்டைக்குள் பல இடங்களிலிருந்து புகை மண்டலங்கள் புறப்பட்டன.

அவை சீக்கிரத்தில் பெரிதாகி வான மண்டலத்தை நிறைத்தன.

அதைத் தொடர்ந்து உள்ளே கலவரங்கள் போல் பேரிரைச்சலின் மெல்லிய சத்தம் கேட்டது.

உள்ளே ஏதோ நடக்கிறது என்று சீக்கிரம் தெரிந்து விட்டது.

அடுத்த அரை நாழிகையில் தீநாக்குகள் மேலே எழுவது தெரிந்தது.

மதில் மேல் உள்ள வீரர்கள் பதட்டம் அடைந்து அங்கும் இங்கும் பார்ப்பதும் கூப்பாடு போடுவதும் தெரிந்தது.

குதிரைகளின் கனைத்தலும் யானைகளின் பிளிறல்களும் சீக்கிரம் இந்தச் சத்தங்களுடன் சேர்ந்துகொண்டன.

விஜயநகரப் படைகள் எல்லாம் ஆச்சரியத்துடன் இவைகளைப் பார்த்துக் கொண்டிருக்கும் போது, கீழ்க் கோட்டை வாயில் பளீர் என்று திறந்தது.

தொங்கு பாலமும் உடனே அகழி மீது வீசப் பட்டது. . .

## சரிதா

"தீப்புத் தாளங்கள்" படத்தில் கதாநாயகியாக நடித்திருக்கும் சரிதாவின் வீட்டுப் பெயர் அபிலாஷா. 'சரிதா' என்று சினிமாவுக்காகப் பெயர் மாற்றம் செய்தவர் டைரக்டர் பாலசந்தர்.

யவன வீரர்கள் குய்யோ, முறையோ என்று கத்திக் கொண்டு வெளியே ஓடி வந்தார்கள். அவர்கள் முகங்களில் ஒரே பீதி!

அடுத்த கணம் கோபணு சைகை செய்ய, யுத்த பேரிகைகள் முழங்கின.

வெளியே ஓடிவரும் யவன வீரர்களை விஜயநகரப் படைகள் ஆக்கிரோஷத்தோடு தாக்கினார்கள்.

வெளியே வருபவர்களின் தலைகள் எல்லாம் துண்டாகிப் பறந்து, அகழியிலும், சுற்றுப்புறங்களிலும் விழுந்தன.

சிலரது முண்டங்கள் சிறிது தூரம் தாமாக ஓடிப்போய் கீழே விழுந்தன.

உள்ளே இருந்த யவனர்களில் பலர் அகழிப்பக்கம் நூலேணியில் இறங்கினார்கள். இறங்கிய உடனேயே விஜயநகரப் படைகளின் அம்புகளுக்கு இரையானார்கள்.

உள்ளே இருந்த படைகள் யாவும் வெளியேறப் பன்னிரண்டுநாழிகைகள் பிடித்தன. அவர்களில் பாதிப் பேர் கொல்லப்பட்டார்கள். பாதிப் பேர் குற்றுயிர் ஆக்கப்பட்டார்கள்.

மாலை நேரத்திற்குள் போர் நின்றது.

விஜயநகரப் படைகள் வெற்றி முரசங்களைக் கொட்டின.

ஆனந்தமும் மகிழ்ச்சியும் பொங்க கண்ணனூர்க் கோட்டைக்குள் நுழைந்தன. கண்ணனூர் விஜய நகரத்தார் வசமாகியது.

-தொடரும்

(ஆங்கிலம்)

# அப்-பா தி மூவி



ஆஸ்திரேலியாவில்உள்ள சிட்னி ரேடியோ ஸ்டேஷனில் அறிவிப்பாளரான ஆஷ்லி, உலகப் புகழ் பெற்ற "அப்பா" என்கிற "பாப்" இசைக் குழுவைப் பேட்டி காணப் புறப்படுகிறார். முன்பின் அனுபவமில்லாத இவர் சிட்னியிலிருந்து மெல்பர்ன் வரை சென்று, அடிலேய்டு அடைந்தும் தன் முயற்சிகளில் தோல்வியுறுகிறார். கடைசி நேரத்தில், பெர்த் என்னுமிடத்தில், பேட்டியை முடிக்கிறார்.

முழு நீள சங்கீதப் படத்தில், கதைக்கு எங்கே இடமிருக்கப் போகிறது என எண்ணுபவர்களை, நன்றாக ஏமாற்றுகிறார், கதாசிரியர். ஆஷ்லியின் ஒவ்வொரு பேட்டி முயற்சியே கதைக்கு அஸ்திவாரமாய் அமைந்து விடுகிறது. ஆஷ்லியாக வரும் ராபர்ட் ஹூக்ஸ் முழு அப்பாவியாக, அதே நேரத்தில் காரியவாதியாக உள்ளார். அவர் வெளிப்படுத்தும் நளினமான நகைச்சுவை படம் பூராவும் இழைந்தோடி நம்மை மகிழ்விக்கின்றன.

அன்னி பிரிட், பென்னி ஆண்டர்ஸன், பிஜோர்ன், அஜெந்தா குழுவினரின் இசை நம்மை இன்ப வெள்ளத்தில் ஆழ்த்துகிறது. இசையில் அவர்களுக்குள்ள ஆர்வம் அவர்களுடைய ஓட்டம், எழுச்சி, பாவம், நடிப்பு இவைகளில் பிரதிபலிக்கிறது. அதற்கு உறு துணையாக அருமையாகப் பரிமாறித் தரப்படும் கலர் விளக்கொளிகளும் 'பட்'- 'பட்' டென மாறிடும்படப்பிடிப்புக் கோண முறைகளும் இருக்கின்றன. பல பாடல்களில் 'தி நேம் ஆப் தி கேம்' நன்கு நினைவில் நிற்கிறது.

இசை அரங்குகள் தயாராகும் விதம் சுவாரஸ்யமாகக் காட்டப் பட்டுள்ளது..ஸிட்னி நகரக் காட்சிகள் பிரமிப்பூட்டுகின்றன.லாஸ்ஸீ இந்த நவீனத்தை எழுதி அழகாக இயக்கியுள்ளார் ..'அப்-பா' அப்பப்பாதான்!

-"த. மூ. ரா."

# இவரது கையிருப்பு ரூ. 60. இவர் கனவு காண்பதோ ஒரு பாண்ட்டுக்கு.

## எந்த மில் இவரது கனவை நனவாக்கும்?

லக்ஷ்மி. ஏனெனில் ஆடவர்களின் மனத்தை லக்ஷ்மி நன்கு புரிந்து வைத்துள்ளது. அழுத்த மான நிறத்தில், எடுப்பும் கண்ணியமும் மிளிரும் வகையில் பாண்ட் அணியவே ஆடவர் விரும்புவர். (ஷர்ட்களைப் பொறுத்த மட்டிலும் மென்மையான நிறச் சேர்க்கைகள் கொண்ட ஷர்ட்களை அலுவலகத்துக்கும் டிசைன்கள் கொண்ட ஷர்ட்களை மாலை நேரங்களில் வெளியே செல்வதற்கும் ஆடவர் அணிய விரும்புவதையும் அறிவோம்.) எனவேதான் லக்ஷ்மி விசேஷமான பாண்ட் துணி ரகங்களைத் தயாரித்து வழங்குகிறது. அதுவே பாலி கிரௌன்.

பாலி கிரௌன் பாண்ட் துணிகள் (மற்றும் கோல்ட் கிரௌன் ஷர்ட்டிங்குகள்) பாலியெஸ்டர் இழை கலந்தவை. மனதை மயக்கும் பலவித வண்ணங்களில் கிடைக்கின்றன.

அடுத்த முறை பாண்ட் துணி வாங்கச் செல்லும் போது பாலி கிரௌன் ரகங்களைத் தவறாமல் கேட்டுப் பார்வையிடுங்கள். அல்லது லக்ஷ்மி விற்பனை நிலையத்துக்கு விஜயம் செய்யுங்கள்.

உங்களது விருப்பத்துக்கேற்ற துணி வகைகளை லக்ஷ்மி வழங்குகிறது.



லக்ஷ்மியின்

பாலி கிரௌன் சூட்டிங்குகள்



தி
லக்ஷ்மி
மில்ஸ்
கம்பெனி லிமிடெட்
கோயமுத்தூர்

உயர்ந்த துணிகளின்
உன்னதச் சின்னம்

FDS LM 2608 TAM

# மதுரா விஜயம்

## ஸ்ரீவேணுகோபாலன்

ஒரு செயலுக்குப் பிரதிச் செயல் விளைவது உண்டு என்று விஞ்ஞானிகள் கூறுவார்கள். தத்துவஞானிகளும் அதையே கூறுகிறார்கள்.

அப்படி ஒரு பிரதிச் செயல்தான் கண்ணனூரில் அந்தப் பரிதாபி ஆண்டு (கி.பி.1371) வைகாசி மாதத்தில் • நடந்தது.

அதே ஊரில் அதற்கு 29 ஆண்டுகளுக்கு முன்புதான் (கி.பி. 1342) முதல் செயல் நடந்தது.

ஒய்சள வல்லாளரின் சைனியத்தில் அப்போது துருக்கிய சமயத்தைச் சார்ந்த வீரர்கள் ஏராளம் இருந்தார்கள்.

சண்டை நடக்கும்போது அவர்கள் திடீரென்று சுல்தானியரின் படையில் சேர்ந்து கொண்டு ஒய்சளப் படைக்குத் துரோகம் செய்தார்கள்.

இதனால் ஒய்சளரின் படை முறியடிக்கப்பட்டது. வல்லாள தேவரும் பிடிக்கப்பட்டுக் கொல்லப்பட்டார்.

இந்தத் துரோகச் செயல் கிட்டத்தட்ட 29 ஆண்டுகளுக்குப் பிறகு தன் பிரதிச் செயலைக் காட்டி விட்டது.

மதுரை சுல்தானியர்கள் ஏராளமான தமிழ், தெலுங்கு, கன்னட மக்களைத் துருக்கிய சமயத்திற்கு மாற்றியிருந்தார்கள்.

அவர்கள் விஜயநகரப் படை இப்போது வந்ததும் முதலில் மனம் மாறினார்கள். பிறகு மதமும் மாறினார்கள்.

இதன் காரணமாய் தாங்கள் ஊழியம் செய்து வந்த சுல்தானியப் படைக்குத் துரோகம் செய்தார்கள்.

விஜயநகரப் படையுடன் சேர்ந்து, அதன் வெற்றிக்காகப் பாடுபட ஆரம்பித்தார்கள்.

கோபணனிடம் அனுமதி பெற்று கண்ணனூர்க் கோட்டை மீது ஏறிக் குதித்தார்கள்.

மதில் மீது காவல் புரிந்த சுல்தானிய வீரர்களும் அவர்கள் விஜயநகரத்தார் பிடியிலிருந்து தப்பி வந்திருக்கிறார்கள் என்று நினைத்தார்கள்.

கோட்டையுள் போனதும் அவர்கள் இரகசியமாக அணி வகுத்துக் கொண்டார்கள். கோட்டையின் இரு பிரதான வீதிகளில் இரண்டு சுவடுகளாகப் பிரிந்து நின்று திடீரென்று சுல்தானிய வீரர்களைத் தாக்க ஆரம்பித்தார்கள்.

இதைச் சற்றும் எதிர்பாராத சுல்தானியர்கள் திகைத்தார்கள். எதிரிகளை ஊடுருவிக் கொண்டு நகரமத்திக்குப் போக விரும்பினார்கள்.

இதை அறிந்த மனமாற்ற வீரர்கள் ஒரு யுக்தி செய்தார்கள். அவர்கள் போகக் கூடிய வழியிலெல்லாம் தீயை வைத்தார்கள். வீடுகளையும், மாளிகைகளையும் கொளுத்தி விட்டார்கள்.

ஒரு புறம் தீ ஜுவாலை நெருக்கி வர, மறுபுறத்தில் மனமாற்ற வீரர்கள் கடும் தாக்குத் தாக்க, இரண்டையும் பொறுக்க முடியாமல் திணறிப் போய்,

கடைசியில் கிழக்குக் கோட்டைக் கதவைத் திறந்து பிய்த்துக் கொண்டு வெளியே வந்தார்கள்.

வந்ததும் அங்கு சித்தமாக நின்று கொண்டிருக்கும் விஜயநகரப் படையின் வாள்களுக்கும் அம்புகளுக்கும் இரையானார்கள்.

இவ்விதம் ஒரு செயலுக்குப் பிரதிச் செயல் நிகழ்ந்து கண்ணனூர்க் கோட்டையில் விஜயநகரத்தாருக்கு வெற்றி கிடைத்து விட்டது.

வீர முழக்கங்களும், ஆரவாரங்களும், பேரோசைகளுமாக விஜயநகர வீரர்கள் கோட்டைக்குள் பிரவேசித்தார்கள்.

வராகக் கொடிகளை ஆங்காங்கே மாளிகைகளில் பறக்க விட்டார்கள். ஒரு பகுதிப் படையினர் பரவிவரும் தீயை அணைக்க முற்பட்டார்கள். மறுபகுதியினர் எஞ்சியிருந்த சுல்தானியர்கள் எங்கிருக்கிறார்கள் என்று தேடித் தேடிச் சென்று பிடித்து இழுத்து வந்தார்கள்.

கோட்டைக்குள் ஏராளமான தேவதாசிகள் சுல்தானியத் தளபதிகளுக்கு ஆசைநாயகிகளாக இருந்து வந்தார்கள்.

கோட்டைக்குள் விஜயநகரத்தார் நுழைந்ததும் அவர்கள் ஒரே ஆனந்தம் பொங்க அந்த வீரர்களை வரவேற்று, அவர்களை வெவ்வேறு மாளிகையின் இரகசிய இடங்களுக்கெல்லாம் அழைத்துப் போய், அங்கங்கு ஒளிந்திருக்கும் சுல்தானியர்களை எல்லாம் பிடித்துக் கொடுத்தார்கள்.

அந்தத் தேவதாசிகளில் இருவர் கோட்டைக் கிடங்கு ஒன்றில் அடைத்து வைக்கப்பட்டிருக்கும் வல்லபனையும் தத்தனையும் கண்டு பிடிக்க விஜயநகரத்தாருக்கு உதவினார்கள்.

இரு இளைஞர்களும் பொய் ஓலையுடன் கண்ணனூர்க் கோட்டைக்குள் புகுந்தபோது ஓலையுடன் வழக்கமாக வரும் சுல்தானிய வீரர் வராததால், சந்தேகப்பட்டு அவர்களைக் கிடங்கில் தள்ளி விட்டு, மதுரைக்கு இது பற்றி அறிய தூதுவர்களை அனுப்பியிருந்தார்கள் சுல்தானிய தளபதிகள்!

அந்த இரு இளைஞர்களையும் பாதி மயங்கிய நிலையில் கோபணனின் முன்னிலைக்கு அழைத்துச் சென்றார்கள்.

அவர் அவர்களை, "என் அருமைச் சகோதரர்களே!" என்று ஆரத் தழுவிக் கொண்டு,

"உங்கள் சேவைகள் அதி ஆச்சரியமானது! அரங்கன் அருள் உங்கள் மீது என்றும இருக்கும்" என்று சொல்லி, அங்கேயே அவர்கள் கழுத்தில் விலையுயர்ந்த

முத்து மாலைகளை அணிவித்து, ஒய்வுக்கும் சிகிச்சைக்குமாக ஆதுரக் கூடாரத்திற்கு அனுப்பி வைத்தார்.

பின்னர் மனமாற்ற வீரர்களின் தளபதிகளை அழைத்து அவர்கள் விஜயநகரத்தாருக்குச் செய்த பேருதவிக்காக கோபணு அவர்களைப் பாராட்டி, வீர கங்கணங்களால் அவர்களை அலங்கரித்தார்.

நகரத்துள் கோபணு செய்த அடுத்த காரியம் உள்ளே இருந்த ஒய்சளேசுவரர் கோவிலை உடன் சீர்செய்ததுதான். வல்லாளதேவரின்மூதாதையர்களால் கட்டப்பட்ட கோவில் அது! சுல்தானியர் ஆட்சியில் அதன் மூர்த்திகள் அகற்றப்பட்டுந் துருக்கியரின் வழிபாட்டுத் தலமாக மாற்றப்பட்டிருந்தது.

அந்தக் கோவிலை அடைந்த கோபணு உடனே அங்கே மூர்த்திகளைக் கொண்டு வரவும் பூஜைகள்தொடங்கிவிடவும் உத்திரவுகள் வழங்கினுர். (இப்போதும் இந்தக் கோவில் இருந்து வருகிறது. பொய்சலேசுவரர் கோவில் என்ற பெயருடன் சமயபுரத்தில் இருக்கும் கோவில் இந்தக் கோவில்தான்).

இவ்வண்ணம் கோலாகலமாய் ஒரு வெற்றிகொண்டாடிய இரவு தளபதிகளும், கம்பணரும், கோபணுவும் அரங்கரைச் சூழ்ந்து கொண்டு அவருக்கு விசேஷ பூஜைகள் செய்தார்கள்.

கோபணு எல்லோரையும் பார்த்துத் தம் குரலை உயர்த்தி,

''நாளை நம் அரங்கர் திருவரங்கத்துள் பிரவேசிக்கிருர்'' என்று தழதழப்புடன் கூறினுர்.

அவ்வளவில் பூமி வெடித்ததோ எனும்படி ஒரு கரகோஷமும், வானைப் பிளக்கும் வாழ்த்தொலிகளின் பேரோசையும் எழுந்து அந்தப் பிரதேசத்தில் ஒரு உணர்ச்சிப் பெருக்காக நிரப்பியது. எங்கும் அதன் வேகத்தின் ரீங்காரம் பரவியது.




முரசுகளும், தாரைகளும் தும்தும் என்று காற்றை அதிர வைத்தன.

எல்லோரும் ''ரங்கரங்கா!'' என்று பக்தி கோஷத்தை எழுப்பி அரங்கரை நோக்கிக் கைகூப்பினுர்கள்.

மறுநாள் வைகாசி பதினேழாம் நாள் ஒரு மங்களகரமான தினமாக உதித்தது.

எங்கும் காற்றிலே ஒரு சுபம் பூத்திருந்தது. நன் நிமித்தங்களும், நன் மணங்களும் எங்கும் நிரம்பி வழிந்தன.

கண்ணனூரின் வெற்றியும், அரங்கன் புறப்படப் போகும் செய்தியும் அந்தப் பிரதேசம் முழுவதிலும் பரவி விட்டிருந்தது.

கிராமங்களிலிருந்தும், ஒளிவிடங்களிலிருநதும் திரள் திரளாக ஜனங்கள் கூட ஆரம்பித்தார்கள்.

வரும்போது மலர்களையும் தோரணங்களையும் பறித்து வந்தார்கள்.

கடலோ, கடும் காடோ எனும்படியாய் எங்கும் மக்களின் தலைகளே தென்பட்டன.

செய்தி தெரிந்து இவ்வளவு கூட்டம் கூடியதைக் கண்டு கோபணுவே ஆச்சரியமுற்ருர்.

ஜனங்கள் தங்கள் அபிமான தெய்வத்தையும் தங்களைச் சேர்ந்த மன்னரையும் கண்ட வெறியில் பக்திக் கூத்து ஆடத் தொடங்கினுர்கள். வெறி அதிகமான்வர்கள் குணலைக் கூத்தாடினுர்கள் (தலைகீழ் ஆடும் கூத்து)

எங்கும் அரங்கன் நாமமும் அவரது புகழ்பாடலுமே ஒலிக்கத் தொடங்கின.

அந்தணர்கள் கூட்டமும் கூடிவிட்டதால் தமிழ் மறை ஒலியும், வேத கோஷங்களும் இனிமையாய்க் கேட்க ஆரம்பித்தன.

அந்தப் படைவீட்டில் அரங்கனைக் காணும் போது, அரங்கனே ஒரு பெரும் படைக்குத் தலைவனுக அங்கே யுத்தம் நடத்த வந்தது போலவே இருந்தது.

குருக்ஷேத்திரக் களத்தில் தேர் செலுத்திய பெருமானை இங்கே மற்ருெரு யுத்தகளத்தில் அதிசயமான சூழ்நிலையில் பார்ப்பது ஒரு அபூர்வமான் காட்சியாக இருந்தது.

பெரியவர்கள் குறித்துத் தந்த நல்ல நேரத்தில் சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீ விழித்துப் புறப்பட்டாற் போல் திருவரங்கன் புறப்பட்டார்.

அவர் முகம் அன்று ஒரு பேரொளி போல் திகழ்ந்து கொண்டிருந்தது. அவர் முகவிலாசத்தில் பொலிந்து நின்ற ஒரு தேஜ மயம் பிரபஞ்சத்தின் ஆதி உண்மை போல் அப்பழுக்கு ஏதும் இல்லாமல் சுயம் வெளிச்சமாய்ப் பிரகாசித்தது.

அந்த அற்புத ஆதி வெளிச்சத்தைப் பார்க்கும் போது சத்தியமே ஜொலிப்பது போலவும் அது ஒன்று தான் ஜெயிக்கும் என்று அது சொல்வது போலவும் இருந்தது.

அந்த பொன்னிற அரங்கன் அருகில் அழகு அமைதி என்ற இருகுணங்கள் பக்தியில் அடக்கத்துடன் நிற்பது போல் இரு நாச்சிமார்கள் நின்று கொண்டிருந்தார்கள்.

திருப்பதி மலை மேல் அரங்கன் இருந்த போது, சந்திரகிரி அரசர் ரங்கநாத யாதவ ராயர் இந்த நாச்சிமார் ஜோடிகளைச் செய்வித்து அரங்கனேடு இணை சேர்த்து வைத்திருந்தார்.

அந்தப் புனித மன்னர் அரங்கனைக் கண்டெடுத்த இரண்டு ஆண்டுகளுக்குள் அமரராகி விட்டாலும், அவர் அரங்கனுக்காகக் கட்டி முடித்த ரங்க மண்டபம் இன்னும் திருமலை வேங்கடவர் கோவிலில் ஒரு பகுதியாகவே இருந்து வருகிறது.

அரங்கன் கோலாகலமாகப் புறப்பட,

வட காவேரி (கொள்ளிடம்) கரையிலும் திருவரங்கக் கரையிலும் ஜனங்கள் இடைவெளியில்லாமல் நிறைந்து விட்டார்கள்.

சில முகூர்த்த நேரத்தில் அழகிய மணவாள கிராமத்தை அரங்கர் அடைந்து விட்டார்.

அங்கே சண்டையில் உயிர் துறந்தவர்களுக்கு விசேஷ அருளப்பாடு வழங்கப்பட்டது.

அதன் பின்னர் அரங்கர் வடகாவேரி (கொள்ளிடம்) கரையை அடைந்த போது, காவிரித் தாய் பல்லாண்டுகளுக்குப் பிறகு சிரிப்பது போல் காலை ஒளியில் வெள்ளியாய்த் தகதகத்துக் கொண்டிருந்தாள்.

48 ஆண்டுகளுக்கு முன் தென்காவேரியைக்கடந்து தெற்கே சென்ற அரங்கர் இப்போது தமிழ்த் தேசத்தையே ஒரு பூப்பிரதட்சிணம் செய்தவர் போல், வட காவேரிவழியாகத் திருவரங்கத்தை அடைந்து கொண்டிருந்தார்.

அன்று ஒருத்தி மகன் ஒளிந்து போவது போல் இரகசியமாய் வெளியே போன அவர், இன்று பாரதப் போர் நடத்தி விட்டு வெற்றியுடன் வருபவர் போல் பகிரங்கமாய் திருவரங்கத்துள் நுழைந்து கொண்டிருந்தார்.

வட காவேரியைச் சீக்கிரம் கடந்து விட்டார் அவர்.



"ஒன்று சொல்கிறேன். தப்பா நினைக்க மாட்டீங்களே?" என்று பிரபா மேஜரிடம் நயந்து கேட்க, சிவசந்திரன் கவலையோடு எங்கோ பார்த்துக் கொண்டிருப்பதைப் பார்த்தால் குடும்பப் பூசலாக இருக்குமோ?

படம்: 'நீ சிரித்தால் நான் சிரிப்பேன்'

-'வெங்கட்'

திருவரங்கக் கரையை அவர் மிதித்ததும் பலர் அந்தக் கண் கொள்ளாக் காட்சியில் நெகிழ்ந்து போய் மூர்ச்சை அடைந்து விட்டார்கள்.

தம் வாழ்நாளில் காண முடியாததைக் கண்டு விட்டாற் போல், ''ரங்கா! ரங்கா!'' என்று கூறிக் கொண்டு கோபணுவே மெய் மறந்து அந்தப் புனித க்ஷேத்திரத்தின் மண்ணில் புரள ஆரம்பித்துவிட்டார்.

அரசரின் மனைவி கங்காதேவி ஏதோ தெய்வ வெறி வந்தது போல் சரமாரியாக வடமொழித் தோத்திரங்களை உச்ச ஸ்தாயியில் தன்னை மறந்து கூவிக் கொண்டிருந்தாள்.

பிரதானி சாளுவமங்கு, சோமப்பர், மாரய்ய நாயகர் எல்லோரும் அகம் கரைந்து, மெய்யுருகி, ''ரங்க ரங்கா!'' ''ரங்கா ரங்கா!'' என்று ஆவேசம் வந்தவர் போல் வீறிட்டுக் கொண்டிருந்தார்கள்.

மொய்த்திருந்த பெரிய ஜன சமுத்திரத்தை பக்தி வெறி ஒரு புயல் போல் தாக்கிவிடவே,

எங்கும் காணக் கிடைக்காத பரவசங்களின், ஆனந்தங்களின், இன்பங்களின், உற்சாகங்களின் அபரிமிதமான ஆவிர்பவிப்புகள் குதித்து எழுந்தன. பிரம்மானந்தம் என்னும் அந்த அளப்பரிய ஆனந்தமே அந்த வேளையில் அந்தப் புண்ணிய க்ஷேத்திரத்தில் சிறுசிறு ஊற்றுக்களாகக் குமிழ்த்து எங்கும் சிதறிக் கொண்டிருக்கிறதோ என்று சொல்லும்படியாய் அது தோற்றம் அளித்தது.

அப்போது அரங்கனது திருப்பல்லக்கின் ஒரு மூலையை கம்பணர் தம் தோளில் ஏற்றிக் கொள்ள,

மற்ற மூன்று மூலைகளிலும் அவரது பிரதானிகளான சாளுவமங்கு, சோமப்பர், விட்டப்பர் ஆகியோர் தாங்கிக் கொண்டார்கள்.

கோபணு வெண்சாமரத்தை எடுத்துக் கொண்டு அரங்கருக்கு வீச ஆரம்பித்தார்.

எங்கும் பாவசமான ஆர்ப்பரிப்புகளும் கொந்தளிப்புகளும் பரவி அந்தப் பிரதேசத்தையே அமளி துமளியாக்கியது.

ஒரு உற்சாகம் கள்வெறி போல் பரந்து, அந்த ஜனத்திரளையே ஆட்டிக் கொண்டிருந்தது.

அரங்கர் கரை ஏறி கஜ நடையில் கம்பீரமாய் ஆடிச் சென்றபோது, பணியாளர்கள் முன்னரே சென்று திருவரங்கச் சாலைகளையும், வீதிகளையும், சுத்தம் செய்து வைத்தார்கள்.

வடக்கு வாயில் வழியாக அரங்கர் திருவரங்க நகருள் பிரவேசித்தார்.

இடிந்த கட்டடங்களும், மாளிகைகளும், சிதைந்த அரண்களும் கோபுரங்களும் ஒரு பழைய மகோன்னதத்தின் அழிந்து போன சின்னங்களாக அப்போது தோற்றமளித்தன,

எனினும் அரங்கனோடு வரும் மக்களின் கரை காணாத உற்சாகத்தைப் பார்த்தால் இனி வரப்போகும் மகோன்னதம் சூசகமாகத் தெரிந்தது.

அவசரமாகப் புதுப்பிக்கப்பட்டு அலங்கரிக்கப்பட்ட திருவரங்க வீதிகள் அரங்கனுக்கு மனங்கனிந்த வரவேற்பைத் தந்து கொண்டிருந்தன.

எனினும் பிரசித்தி பெற்ற அந்த நகரின் திருவீதிகள் அப்போதிருந்த நிலையைக் கண்டு கோபணு விட்ட கண்ணீர் திருவரங்கனின் கண்ணீர் போலவே இருந்தது.

வீதிகளில் அங்குல அங்குலமாக முன்னேறிக் கோவிலின் முகப்பை அடைந்த போது எங்கும் ஒரு பெரும் ஆரவாரத்தின் பேரோசைதான் இருந்தது.

விஜயநகர வீரர்கள் கோவில் முகப்பில் நின்று ஜனத்திரளை அன்பான மொழிகளால் கட்டுப் படுத்திக் கொண்டிருந்தார்கள்.

காட்டு வாசம் செய்து விட்டு இராமர் அயோத்தி திரும்பியது போல் அரங்கரும் திரும்பி வருகிறார் என்று எண்ணி மக்களில் பெரும்பாலோர் கண்ணீர் சொரிந்தார்கள்.

பணியாளர்கள் இதற்குள் கோவிலை முடிந்த அளவு சுத்தம் செய்திருந்தார்கள்.

பாழடைந்த கருட மண்டபம், அணியரங்கன் முற்றம் இவற்றைக் கடந்து அரங்கன் உள்ளே நுழைந்தார். கோவிலின் நாழிகை கேட்டான் வாயிலைத் தாண்டி உள்ளே போனதும் சன்னிதி வந்து விட்டது.

நெஞ்சம் தழதழக்க அப்போது கோபணு ஒரு கல் மேடை மேல் ஏறிக் கையமர்த்தினார்.

ஆரவார மெல்லாம் சுருண்டு அடங்கி எங்கும் மௌனம் விழுந்து விட்டது.

''அன்பார்ந்த அரங்க பக்தர்களே! இன்று நமக்குப் புனித நாள். நமது எல்லோரது கனவும் இன்று நிறைவேறுகிறது. இன்று அரங்கர் தமது ராஜதானிக்குள் பிரவேசித்து விட்டார். இந்தப் பிரவேசத்திற்குக் காரணமாக நாங்கள் இருந்து விட்டது எங்களது பெரும் பாக்கியம். பெருமாளை முறைப்படி பிரதிஷ்டை செய்யு முன் ஒரு விண்ணப்பம்! மூலவரின் சன்னிதி நல்ல வேளையாக அன்று மூடப்பட்டது போலவே இருந்துவருகிறது. அப்போது வைத்த கல்சுவர் அப்படியே பின்னமாகாமல் இருக்கிறது. இதில் அடியேனுக்கு ஒரு ஆசை! அன்று துருக்கியப் படை எடுப்பின் போது இந்தக் கல்சுவரை எழுப்பியவர் நம் வேதாந்த தேசிகர். அந்த மகான் இன்னும் நம்மிடையே வாழ்ந்து வருவது நமது பூர்வஜென்ம புண்ணியமாகும். அந்த மகான் எழுப்பிய கல்சுவரை அந்த மகானே வந்து விலக்குவதுதான் உத்தமம். அவர் வருவதற்கான ஏற்பாடுகளைச் செய்து கொண்டிருக்கிறோம். அவர் வரும் நாள் வரை யாவரும் பொறுமையாக இருந்து உற்சவ அரங்கரை சேவித்துக் கிருபை பெற்றுக் கொள்ளுமாறு விண்ணப்பித்துக் கொள்கிறேன்'' என்று கூறினார்

கூடியிருந்தோர் கைதட்டி ஆமோதித்தார்கள்.

பிறகு அரங்கரைத் தாற்காலிகமாக சன்னிதி மண்டபத்தில் எழுந்தருளச் செய்து, விசேஷ வழிபாடுகளை எல்லாம் முடித்து விட, ஜனங்கள் திரள் திரளாக உள்ளே வந்து அரங்கரைச் சேவித்த வண்ணம் இருந்தார்கள்.

இந்தக் கோலாகல வைபவங்கள் எல்லாம் நடைபெற்றுக் கொண்டிருக்கும் வேளையில், அவற்றை அமைதியோடு பல ஜீவன்கள் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

---



தமிழ் 'ஞான ஒளி' இந்தியில் 'தேவ்தா' என்ற பெயரில் தயாரித்து வெளியிடப்பட்டுள்ளது. பல 'சூபர் ஸ்டார்' படங்களுக்கு நடுவில் சஞ்சீவ் குமார் நடித்துள்ள இப்படம் பிரமாத ஹிட்டாம்!

இவர்கள்: டைரக்டர் ராமநாதன், தயாரிப்பாளர் சிப்பி, சஞ்சீவ் சிரிப்புக்கு இந்த வெற்றிதான் காரணமோ?

—எல்லார்.

அவர்கள்தான் இப்படி வைபவங்கள் நிறைவேறு வதற்கான காரணத்திற்கே அடிகோலியவர்கள்.

முக்கியமாக வல்லபன்—தத்தன் என்ற இரு இளைஞர்களும் ஆரம்ப முதல் கடைசிவரை கண்ணீர்ப் பெருக்காகவே நின்று கொண்டிருந்தார்கள்.

வல்லபன், தன் தந்தை குலசேகரரே வந்து அவனை ஆசீர்வதிப்பது போல் கற்பனை செய்து கொண்டு ஆருக நீர்ப் பெருக்கிக் கொண்டிருந்தான்.

தன் தந்தையும், தாயும் நடந்த புண்ணியபூமி அது என்று நினைக்கும் போது அவ்வப்போது கண்ணீர்த் திரள் தெறித்து வந்தது.

தத்தன் வழக்கம் போலத் தன் உணர்ச்சிகளை வெளிக்காட்டிக் கொள்ளாமல், வரும் கண்ணீரை அவ்வப்போது துடைத்துக் கொண்டு ஏதும் தனக்கு நேராதது போல் ஒரு பாவனையைக் கொண்டிருந்தான்.

இவர்கள் இருவரைத் தவிர, காயம்பட்டுப் படுத்த படுக்கையாக இருந்த திருமணத்தூண் நம்பியையும், கிருஷ்ணராஜ உத்தமநம்பியையும் கட்டிலோடு அந்த அரங்க க்ஷேத்திரத்திற்குப் பரிசனர்கள் கொண்டு வந்திருந்தார்கள்.

அவர்கள் இருவரும் நீண்டநாள் கனவு ஒன்று பலிதம் ஆனது என்று நினைத்துக் கண்ணீரைக் காவேரியாய் ஓட விட்டிருந்தார்கள்.

இன்னும் காயம்பட்டிருந்த அழகிய மணவாளவாசிகள் பலரும் அந்தக் கோலாகலங்களைப் பெருக்கிய நீரோடு பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

இப்படி எல்லோரும் உணர்ச்சிவசமாய் இருக்கும் வேளையில் பலர் வந்து திருமணத்தூண் நம்பி கட்டிலைச் சூழ்ந்து கொண்டு தீவிரமாகப் பேசுவதை வல்லபன் உன்னிப்பாகக் கவனித்தான்.

அவர்கள் போன பிறகு அவன் நம்பியை அணுகி, ''சுவாமி, என்ன விஷயம்?'' என்று விசாரிக்க,

நம்பியும், ''ஐயா! அவர்கள் என்ன சொல்கிறார்கள் தெரியுமா? கோவிலுக்குள் இந்த அரங்கனைக் கொண்டு போய் விட்டீர்களே! நாங்கள் ஆராதிக்கும் அரங்கரை அல்லவா கொண்டு போக வேண்டும்? அவரல்லவா இவ்வூர் அரங்கர்! அதைச் செய்யாது விட்டு விட்டீர்களே என்றார்கள். நான் அவர்களுக்கு என்ன உத்திரம் சொல்வதென்று தெரியவில்லை'' என்று கூறினார்.

வல்லபனுக்கு அந்த வார்த்தைகள் சுருக்கென்று தைத்தன. ஆத்திரமும் மனதில் பொங்கி எழுந்தது. இந்த அரங்கரைக் காப்பாற்றிக் கொண்டுவர எண்ணற்ற பேர்கள் எத்தனையோ வித தியாகங்களையும், சாகசங்களையும் செய்ய வேண்டிவந்தது! ஒரு தலைமுறை சமுதாயமே இதற்காக எவ்வளவு பாடுபட்டது? அதை உணராமல் இவர்கள் இவ்விதம் மிக எளிதாகப் பேசுகிறார்களே என்று நினைத்தான்.

எனினும் ஆத்திரத்தை அடக்கிக் கொண்டு, ''என்ன சொல்கிறார்கள்? இவர்களது அரங்கனையும் கோவிலுக்குள் எழுந்தருள வைக்க வேண்டும். அவ்வளவுதானே! தாராளமாக செய்து கொள்ளட்டும். இரு அரங்கர்கள் இருப்பதால் நமக்குக் குறை ஒன்றும் ஏற்படாது'' என்று கூறினான்.

நம்பி அதற்கு உத்தரம் ஒன்றும் கூறவில்லை.

அப்பால் கோபணா அழைக்கிறார் என்று சேவகர்கள் வந்து கூற இளைஞர்கள் இருவரும் உடனே புறப்பட்டுச் சென்றார்கள்.

அட்டையில்: தீபா
வண்ணப்படம்: கே. வேதவதி
15-12-78
வெள்ளிக்கிழமை
கதிர் 23 ஒளி 50

''வல்லபா, தத்தா! நாம் எல்லோரும் நாளை மதுரை நோக்கிப் புறப்படுகிறோம்'' என்றார் கோபணா

''நாளையா?'' என்றான் வல்லபன்.

''ஆமாம்; வல்லபா! நாம் ஒரு நாளைக் கூட இனி வீணாகக் கழிக்க முடியாது. ஒரு விஷயம் புரிந்துகொள்! பாதி யுத்தத்தைத்தான் நாம் ஜெயித்திருக்கிறோம். இன்னும் ஒரு பாதி மதுரை உருவில் மீதி இருக்கிறது. இதில் நீங்கள் இருவருமே நேரிடையாகப் பங்கு கொள்ளப் போகிறீர்கள்'' என்றார் கோபணா.

''சந்தோஷம், சுவாமி!'' என்றார்கள் இளைஞர்கள்.

''அரங்கன் அருளால் மதுரையையும் வெல்வோம். அதன் பிறகு திருவரங்கத்திற்குத் திரும்பி வருவோம். வேதாந்த தேசிக சுவாமியை இங்கே எழுந்தருளக் கேட்டுக் கொண்டு ஏற்கெனவே ஓலையையும் பல்லக்குப் பரிவாரங்களையும் அனுப்பி விட்டேன். அவர் வந்த பிறகு அரங்கனைக் கோவிலில் ஸ்தாபிதம் செய்து விடுவோம். அதற்குள் உன் தாயாரையும் காஞ்சியிலிருந்து இங்கே வரவழைத்துக் கொள்! இன்னும் தெரிந்தவர்கள் யாராயிருந்தாலும் அழைத்துக் கொள்!'' என்று கூறினார்.

மறுநாள் காலையில் விஜயநகரப் படைகள் தெற்கு நோக்கிப் புறப்பட, வல்லபனும் தத்தனும் உடல் நிலை காரணத்தால் இரு பல்லக்குகளில் ஏறிக் கொண்டு அதனுடன் புறப்பட்டார்கள்.

பல்லக்கில் படுத்த வசமாயிருந்த வல்லபனின் மனத்தில் கோபணாவின் வார்த்தைகள் மெள்ள ஓடி வந்தன.

''இன்னும் தெரிந்தவர்கள் யாராயிருந்தாலும் அழைத்துக் கொள்!''

என்ன வார்த்தைகள் இவை?

எனக்குத் தெரிந்தவர்கள் யார்?

கண்களை மூடினான்.

அவன் மனத்தில் நிரந்தர சோகத்திற்கும், நிரந்தர இன்பத்திற்கும் காரணமாக இருந்த ஒரு உருவம் எங்கோ வெகு தொலைவிலிருந்து அவனைப் பார்ப்பது போலிருந்தது.

இடத்தினால் மட்டும் தூரம் அல்ல!

காலத்தினாலும் தூரம்தான்!

அந்த உருவம் மெள்ள நலுங்கி, நலுங்கி அவனை நோக்கி முன்னே வர,

சுவர்க்க மயமான கீதங்கள் எங்கெங்கிருந்தெல்லாமோ அவன் மனத்தில் கேட்க ஆரம்பித்தன.

உடலில் ஒவ்வொரு அணுவும் விதிர்க்க உரோமங்கள் சிலிர்த்துப் போய் விரைத்து நிற்க,

அவன் உயிரே ஸ்தம்பித்து நின்று விட்டது.

அவனது மனமென்னும் அரங்கில் மெள்ளப்பாதங்களை வைத்து, புன்னகையைச் சின்னஞ் சிறியதாய்ச்சிந்தி நீல ஸ்படிகம் போன்ற கண்களைக் கொண்டு பார்த்து,

ஓவியமே ஒரு கன்னி உருவில் வந்ததுவோ எனும்படி,

விகசித்து நின்றாள்,

மதுராங்கினி என்னும் அவனது மதுரா!

அவளை நினைத்துக் கண்ணீர் தளுக்கென்று புறப்பட்டது. அவன் மனத்தின் ஒரு பகுதி அவனிடம்,

''வல்லபா! உன் பெற்றோரின் கனவுகள் முடியும் வரை உன் இல்வாழ்வை நினைக்க மாட்டேன் என்று சபதம் எடுத்தாய்! உன் பெற்றோரின் கனவுகள் முடிந்து விட்டன. இனி நீ தாராளமாக விழியில் பிறழ்வாய்! ஆனந்தத்தில் குளிப்பாய்!'' என்றது.

''மதுரா!'' என்று அவன் அப்போது தன்னையும் மீறிக் கூவியது எங்கும் எதிரொலித்தது.

—தொடரும்

Printed & Published on behalf of Indian Express (Madurai) Ltd. by R. RAMAKRISHNAN at the DINAMANI PRESS Express Estate Madras-600 002. Acting Editor: K. R. VASUDEVAN.

வல்லபன் சென்ற இடங்களுக்கெல்லாம் நாமும் கூடவே செல்லுவதுபோன்றபிரமையை ஏற்படுத்துகிறது ஸ்ரீ வேணுகோபாலனின் 'மதுரா விஜயம்'.

சென்னை-5 எம். ஏ. சவுகத்அலி.

முன்பு மார்க் ட்வெயின், இப்போது "ஸ்டீவன் லீக்காக்" ஆ...., ஹா..... ஹா.....என்ன, கதிரை சிரிப்பு மயமாக்கி விடுவது என முடிவு செய்து விட்டீர்களா?

புவனகிரி இராஜசெயபாலன்.

துப்பறியும் நாவலாசிரியர் சிரஞ்சீவி அவர்களைப் பற்றிய நவீனன் அவர்களுடைய கட்டுரை அருமை! படிப்பதற்குச் சுவையாகவும் (சிரஞ்சீவி கதைகளைப் போல) விறுவிறுப்பாகவும் இருந்தது.

புஷ்பா தங்கதுரையின் சிறுகதைக்கான படமும், ப. நீலகண்டனின் வண்ணப் பூக்கள் கட்டுரைக்கான தலைப்பும் மிகப் பொருத்தம். கையில்லாத ரவிக்கையைத்தான் குறிப்பிடுகிறேன்.

அயன்புரம் த. சத்தியநாராயணன்.

# கதிர் போஸ்ட்

'மனிதரில் இத்தனை நிறங்களா?' பட விமரிசனம் உயர்தரம். சிறந்த கண்ணோட்டத்துடன் பார்த்து, தாக்க வேண்டிய இடத்தில் தாக்கி, இறக்க வேண்டிய இடத்தில் இறக்கியுள்ளார் விமரிசகர்.

திருமதி விமலா ரமணியின் "ஒரு பறவை கூண்டை விட்டு வெளியேறுகிறது" ஆரம்பமே அபாரம்! அவருடை புதுமையான அறிமுகம் சுவையாக உள்ளது.

கும்பகோணம் வி.எஸ். ஆனந்தராமன்

"கன்னி வயதிலுனேக் கண்டதில்லேயோ?" தலைப்புக்கு புஷ்பா தங்கதுரை எழுதியுள்ள கதையின் நடுவில் 'கன்னி வயதிலுனேக் கண்டதில்லேயோ?' என நினேத்தேன். (அப்பாடா! டைட்டிலை நிரூபித்து விட்டேன்!)' என்று நிம்மதிப் பெருமூச்சுடன் எழுதியிருப்பதைப் படித்து மிகவும் ரசித்தேன்.

ஒரே தலைப்பு இரண்டு-கதைகள், விமலா ரமணியின் கதை-ராஜேந்திர குமாரின் கதை—தொடர்ந்து விட்டன. கதிருக்கு திருஷ்டி சுற்றிப் போடுங்கள்!

நங்கைநல்லூர் இ. சங்கர்

ஆசிரியர் பக்கத்தில் பெரியார் எழுத்துக்களைத் தந்து விட்டு, அடுத்த பக்கத்திலேயே பெரியாரைப் பற்றி ஒரு மதிப்பீட்டையும் தந்து, பெரியாருக்குப் பெருமை சேர்த்த பெருமை கதிரையே சாரும்.

அரகண்டநல்லூர் எஸ். ஜம்பு ஷண்முகம்

'சாத்திரங்கள் வேண்டேன், நினதின்பம் வேண்டுமடி' என்ற ஆசிரியர் பக்கத்து இலக்கியக் கொத்து நல்ல காவியச்சத்து.

திசையன்விளை ஆர். ஜி. பாலன்

ஆதி கால நெருங்கிய நண்பர்களாயிருந்து இடையில் கொள்கை மாறுபாடுகளால் பிரிந்த போதும் "அன்பான எதிரி நண்பர்களாய்" இணைந்திருந்த இரு பெரும் துருவங்களின் - இரு பெரும் மேதைகளின் - பெரியவர்களின் நூற்றாண்டு விழாவின் காலத்தில் அவர்களைப் பற்றிய அருமையான ஒரு மதிப்பீடுக் கட்டுரையினை வெளியிட்டு "தினமணி கதிர்" அதன் சிறப்பு மகுடத்தில் ஒரு வைரத்தினை இணைத்துக் கொண்டது.

பெங்களூர்-21 ப. மூர்த்தி

# மினி பேட்டி



ஜெயலலிதாவின் வீடான 'வேத விலாஸ்' போர்டிகோவில்-

காரில் ஏறிக் கொண்டிருக்கிறார் ஜெயலலிதா.

"அமெரிக்காவிற்குப் போகிறீர்கள் என்று கேள்விப் பட்டேன்."

"அது எப்படி உங்களுக்குத் தெரிந்தது? சீக்ரெட்டாக வைத்திருந்தேனே?"

"அதுதான் பத்திரிகைக்காரர் என்பது!ம்..அமெரிக்கா போவதின் நோக்கம்?"

"இதுவரை போனதில்லை. போகிறேன்!"

"இங்கே ஒரு புது தமிழ்ப் படத்தில் நடிக்கப் போவதாகப் பத்திரிகையில் விளம்பரம் வந்தது. இந்தச் சமயம் அமெரிக்காபோகிறீர்களே?"

"படத் தயாரிப்பாளரிடம் சொல்லிவிட்டுத்தான் போகிறேன். சொல்லாமல் ஓடவில்லை! (சிரிக்கிறார்) திரும்பி வந்ததும் நடிப்பேன்."

"திரும்பிவர எவ்வளவு நாட்களாகும்?"

"முப்பது நாட்கள்."

"ஏற்கனவே ஏதாவது வெளி நாட்டுக்குப் போயிருக்கிறீர்களா?"

"எக்ஸ்போவின் போது ஜப்பானுக்குப் போயிருக்கிறேன். அப்போது என்னோடு என் தாயார் சந்தியா வந்திருந்தார்."

"இப்போது?"

எனக்குத் துணை நானே!"

காரின் டிக்கியில் ஏற்றப்பட்ட ஒரு பெட்டிக்குரிய சாவியைக் காணுமல் ஜெயலலிதா தவிக்கிறார். ஏகப்பட்ட சாவிகளை மாதவன் கொண்டு வந்து ஒன்று மாற்றி ஒன்றாகப் போட்டுப் பார்த்தும் எதுவும் சேரவில்லை.

சிறு பதற்றம்; பரபரப்பு. கடைசியில் உள்ளேயிருந்து ஓர் இளம் பெண் ஓடிவந்து ஒரு சாவியைக் கொடுக்கிறார். அந்தச் சாவியைப் பார்த்த பிறகு தான் ஜெயலலிதாவின் முகம் மலர்கிறது.

சாவியைஇடுப்பில்செருகிக் கொண்டே ஜெயலலிதா கார், சீட்டில் / உட்கார்ந்து கொண்டதும்-

"உங்கள் உடம்பு இளைக்க வைத்தியம் செய்து கொள்ள அமெரிக்கா போகிறீர்கள் என்பது என் யூகம்..."

ஜெயலலிதா பதில் சொல்லவில்லை.

-எம்.




**ஸ்ரீவேணுகோபாலன்**

மதுரையை நோக்கி விஜயநகரப் படைகள் கோலாகலமாய் முன்னேறின.

அவை வரும் செய்தி காட்டுத் தீ போல் பரவி விட்டதால் வழியெங்கும் ஜனங்கள் கூட்டமாகக் கூடி விஜயகோஷம் வழங்கினார்கள்.

படைகளுக்குத் தேவையான பொருட்களையும் உணவு வகைகளையும் கொண்டு நிரப்பினார்கள்.

வயது வந்தவர்கள் எல்லாம் கையில் வாளையும் வில்லையும் எடுத்துக் கொண்டு வீராவேச கோஷங்களை மொழிந்து படையுடன் சேர்ந்து கொண்டார்கள்.

இதனால் அந்தச் சேனையின் தொகையும் பல்லாயிரக்கணக்கில் பெருக ஆரம்பித்தது.

இதைக் கண்டு மகிழ்ச்சி அடைந்த கோபனா, "ரங்கா! எம்மிடம் படைபலம் இல்லை என்று கவலைப் பட்டேன். எதிர்பாராமல் கொண்டு வந்து நிறைக்கிறாயே!" என்று சொல்லி மனமுருகினார்.

முப்பதினாயிரமாகப் புறப்பட்ட படை மனமாற்ற வீரர்கள் சேர்ந்து கொண்டதால் ஐம்பதினாயிரத்தைத் தாண்டியது.

இப்போது தமிழ் நாடுகளின் வீரர்களும் இளைஞர்களும் சேர்ந்துவிடப் படை பலம் லட்சத்தை நெருங்கி கொண்டிருந்தது.

இனிக் கவலையில்லை; மதுரை நிச்சயம் கிடைத்து விடும் என்று கம்பணரும் கோபனாவும் கருதினார்கள்.

பொதுவாக அந்த நூற்றாண்டின் படைகளுக்கு கண்ணனூரிலிருந்து மதுரைக்குப் போகும் பிரயாண காலம் எட்டிலிருந்து பத்து நாட்கள்.

ஆனால் அளவு கடந்த உற்சாகம் எங்கும் பீறிக் கொண்டு ஓடியதால் விஜயநகரப் படைகள் ஐந்தாம் நாள் காலையில் மதுரையின் வெளிப்புறத்தில் ஆரவாரம் செய்து நின்றன.

வைகையைக் கடந்ததும் கம்பணரும் கங்காவும், அதன் அழகைக் கண்டு நிலைத்து விட்டார்கள்.

அந்தக் கோடை நாளிலும் தெளிந்த நீருடன் சிறு பூங்கொடி வளைந்து வளைந்து செல்வதுபோல் வைகை நிறைவுடன் ஓடிக் கொண்டிருந்தாள்.

இருமருங்கும் பசேல் என்ற சோலைகளும் உபவனங்களும் செழுமையாய் நிறைந்திருந்தன

வைகையைத் தொட்டதும் அரசரும் அரசியும் ஜலத்தைத் தோத்திரங்கள் சொல்லித் தலையில் புரோக்ஷணம் செய்து கொண்டார்கள்.

கங்கா அந்த நதியின் ஓட்டத்தில் மாலையையும், அகல் விளக்குகளையும் மிதக்க விட்டாள்.

அப்பால் அவர் கரைமேட்டில் ஏறியதும் தெற்கே பளிச்சென்று ஏதோ வெட்டியது.

மரங்களின் உச்சிகளுக்கு மேலே ஒரு கோபுரத்தின் தூபி அவரை நோக்கிவீசிய வெளிச்சம்தான் அது.

திடீரென்று பரவசராய், "மீனாக்ஷி" என்று மெய்மறந்து கூறினார்.

அதே நேரத்தில் அந்தத் தூபியையும், அந்தச் சோலைவனங்களையும் வியாபித்துக் கொண்டு யௌவனமான ஒரு நங்கை குறுகுறுப் புன்னகையோடு நின்றாள், அவள் நெற்றியில் நீறு கண்களில் கருணை. மூக்கில் தளுக்கு! முகத்தில் சுடர்ப்பு! காதில் குழை! கழுத்தில் நகை! கையில் கிளி, மெய்யெல்லாம் ஒளி!

"மீனாக்ஷி" என்றார் கம்பணர். விதிர் விதிர்த்து உடல் நடுங்க, அவளைப் பார்த்துக் கைகூப்பினார்.

ஒரு ஆத்ம அனுபவமே அவருக்கு அப்போது ஏற்பட்டுக் கொண்டிருந்தது.

"அம்மா! உன் கட்டளையை நிறைவேற்றுவேனம்மா!" என்று தலைகுனிந்து கூற.

அந்த நங்கையும் தன் செம்பஞ்சுக் கையால் அவரை ஆசீர்வதித்துக் குறுநகை பூத்தாள்.

சிலைபோல் நின்றது நின்றபடி நிற்கும் மன்னரை கங்காதேவி பிடித்துக் கொண்டாள்.

"சுவாமி! தங்களுக்கு நேர்ந்தது என்ன? சுவாமி, சுவாமி" என்று பரபரப்போடு கேட்டாள்.

கம்பணர் கண்களை மூடியபடியே இருந்தார்.

அவர் மேனியெல்லாம் வியர்வை வழிந்தோடியது.

வெள்ளமாக வழியும் அந்த நீரிலிருந்து சந்தனம் போன்ற நறுமணம் பிறப்பதைக் கண்ட கங்கா திடுக்கிட்டு,

"சுவாமி! சுவாமி! இது ஒரு யோக அனுபூதி அல்லவா! காரணமில்லாமல் நன்மணங்கள் மணப்பதும், நல்நாதங்கள் கேட்பதும், நல்ஒளிகள் ஒளிர்வதும் ஒரு யோக நிலையில் உச்சநிலைக் குணங்கள் அல்லவா? சுவாமி நீங்கள் யாரைப் பார்த்தீர்கள்? சொல்லுங்கள்! சொல்லுங்கள்!" என்று அவரைப் பிடித்து உலுக்கியவாறு கேட்டாள்.

கம்பணருக்கு உடல் மெள்ள மெள்ளச் சீராகத் தொடங்கியது.

மெதுவாக அவர் கண்களை விழித்தார்.

"மீனாக்ஷி" என்றார் அவர்.

"மீனாக்ஷியா?" என்றாள் அவள்.

கங்காவுக்குச் சிலிர்த்து விட்டது! "அம்மா" என்று வான் நோக்கிக் கை கூப்பினாள். "உன்னை நான் நேரிலே பார்க்கவில்லை. ஆனால் உன் ஆவிர்பவிப்பை அவரிடத்தில் பார்த்து விட்டேன். இதுவே நான் செய்த பூர்வ ஜன்ம புண்ணியம் அம்மா! தாயே! மதுரைக்கு அரசியே! மதுரா நாயகியே! மதுரையை அடைந்து, உன் சன்னிதியில் விழுந்து வணங்கும் பேறு நான் பெற்றால் எங்கள் விஜயத்தையே நான் மதுரா விஜயமாகப் பாடுவேனம்மா! அதற்கு அருள் புரிவாயம்மா, தேவி மீனாக்ஷி!" என்று நெக்குருக மனமுருகிப் பிரார்த்தித்தாள் அவள்.

கோபனாவைப் பார்த்த கம்பணர், "கோபனா சுவாமி! அரங்கர் தங்களுக்குக் கட்டளை விதித்தார். கண்ணனூர்ப் போரை நடத்தினீர்கள். மீனாக்ஷி எனக்குக் கட்டளை இடுகிறாள். மதுரைப் போரை நான் நடத்துகிறேன்" என்றார்.

மதுரைக் கோட்டையை மதிய நேரத்திற்கு ஒரு சமுத்திர வெள்ளமே தாக்கியது.

வாள், வில், கட்டாரி, வேல், எரி அம்பு, சுரிவாள் எல்லாம் பல்லாயிரக்கணக்கில் தென்பட அவற்றின் மீது பட்ட ஒளி அலைகளில் புரள்வது போல் மின்னியது.

ஜய விஜய கோஷங்கள் ஊழிக்கடலின் ஆர்ப்பரிப்பு போல் கோட்டைச் சுவர்களைத் தாக்கியது.

யானைகள் ஆங்காங்கே திமிங்கலங்கள் போல் இடம் பெயர்ந்து கொண்டிருந்தன.

எல்லாவற்றையும் விட அந்தப் படை வீரர்களின் நம்பிக்கையும் உற்சாகமுமே பெரிய சக்திகள் போன்று மதுரைக் கோட்டையைச் சூழ்ந்து கொண்டன.




எதிரிகளுக்கு ஒரே நாள் மட்டும் அவகாசம் கொடுத்தார்கள்.

அவர்கள் வெளிவரவில்லை என்று தெரிந்ததும் கோட்டையைத் தாக்க ஆரம்பித்தார்கள்.

தமிழ் பேசும் நாடுகளின் ஏகோபித்த ஆத்திரமே கோட்டையைத் தாக்கியது.

பிரளய நாளில் மலையே புரண்டு வந்து மோதுவது போல், ஒரு ஜனசமுத்திரமே பெருகி வந்து கோட்டையை முட்டியது.

கோட்டையின் அகழ் ஒரே நாளில் மூடப் பட்டு விட்டது.

பரிகரங்களில். பல உடைத்துத் தகர்க்கப்பட்டு விட்டன.

எரிகவண்கள் வானமெல்லாம் அடைத்துக் கொண்டு கோட்டைக்குள் சாடி விழுந்தன.

அம்புகளின் பாய்ச்சலில் காற்றே கிழிந்து கொண்டிருந்தது.

எட்டாவது நாழிகையில் கோட்டை மதில் மேலிருந்த எதிர்ப்பு நசிந்துவிட்டது.

அவ்வளவில் மதில் சுவர்களில் பரபர என்று ஏணிகளும், உடும்புக் கயிறுகளும் ஊசலாட ஆரம்பித்தன.

விஜயநகர வீரர்கள் எறும்புகள் போல் சாரிசாரியாக அங்கங்கே அதன் மீது ஏற முற்பட்டார்கள்.

இடியோசைகளைப் போல் பிளிறிக் கொண்டு கதவுகளின் முகப்புகளை யானைகள் முட்டி மோதிக் கொண்டிருந்தன.

இரண்டு நாழிகையில் கோட்டைச் சுவர்களும், மதில் மாடங்களும் விஜயநகரப் படையின் வசமாகின.

பயந்த கண்களுடன் துருக்கிய வீரர்கள் உயிருக்கு அஞ்சி அங்குமிங்கும் ஓட ஆரம்பித்தார்கள்.

வடக்குக் கோட்டை வாசல் ஒரு முகூர்த்தத்தில் திறக்கப்பட்டு விட்டது.

மதகுகளைப் பிடுங்கிக் கொண்டு வரும் நீர் போல் விஜயநகரத்தார் உள்ளே புகுந்தார்கள்.

எங்கும் ஜய கோஷங்கள் காதுகளைக் குடைந்து சென்றது.

ஆயிரக்கணக்கான துருக்கிய வீரர்கள் வீதிகளில் மாண்டு கிடக்க, விஜயநகரத்தார் அவர்கள் சடலங்களைத் தாண்டித் தாண்டி ஓடினார்கள்.

கம்பணர் தம் மெய்க்-காவலோடு சுல்தானின் அரண்மனை வாயிலை அணுகினார்.

வாயிலில் கடும் போர் நிகழ்ந்தது. சுல்தானிய அரண்மனைக் காவல் சீக்கிரம் உடைந்தது.

ஆத்திரம் அடைந்த சுல்தான் பக்கு தின் முப்ராக் ஷா தாமே போரிட வெளியே வந்தார்.

மெய்க்காவலோடு வந்திருந்த வல்லபனும் தத்தனும் சுல்தானை எதிர்க்கப் போக, கம்பணர், "வல்லபா! அந்தக் காரியத்தை என்னிடம் விடு!" என்று சொல்லி வாளைத் தூக்கினூர்.

சுல்தானுக்கும் அவருக்கும் போர் துவங்கியது. இரண்டு புலிகள் சந்தித்தாற் போல் அவர்கள் சண்டையிட்டார்கள்.

இருவரது வாள்கள் பிறிக்கொண்டு பாய, குதித்தும் துள்ளியும் அவர்கள் போரிட்டார்கள்.

ஒரு முகூர்த்தம் முடியுமுன் ஒரு துணிச்சலான இடைவெளியில் ஒரே தாவலில் சுல்தானை ஓங்கி அடிக்க அவர் ஏதோ ஐந்து அடிபட்டது போல்துவண்டு கீழே விழுந்தார்.

கூடியிருந்தோர் ஆரவாரம் செய்தார்கள். ஜய கோஷங்கள் வானைக் கலத்து விட்டன.

மதுரை நகர் எங்கும் வீரர்களின் உற்சாகங்கள் கரை புரண்டு ஓடின. வாழ்த்தொலிகளும், விஜய கோஷங்களும் மாறி மாறி எழுந்து கொண்டிருந்தன.

வராகக் கொடிகள் அரண்மனை, மாளிகைகள் கொத்தளங்கள் மீது பறக்க ஆரம்பித்தன.

மாலை வந்து விட்டது.

கம்பணரும் இதரர்களும் அவசர நீராடிக் கோவிலை நோக்கிச் சென்றூர்கள்.

கதிர் 23 ஒளி 50
22-12-78
வெள்ளிக்கிழமை

திருவரங்கத்தைப் போலவே சுவர் எழுப்பிச் சன்னிதியை மறைத்து இருந்தார்கள்.

புகழ்பெற்ற மீனாக்ஷியின் கோலத்தைப் பார்க்க வேண்டும் என்ற அவசரத்தில் சன்னிதிச் சுவரைச் சீக்கிரம் அகற்றச் சொன்னார் கம்பணர்.

பணியாட்கள் வேலையில் ஈடுபட்டார்கள்.

கம்பணர் கங்காதேவி, கோபணா, சாளுவமங்கு, சோமப்பர், விட்டப்பர் யாருமே ஆயுளில் மீனாக்ஷியைத் தரிசித்திராதவர்கள்.

ஆகவே பரபரப்போடு இருந்தார்கள்.

வேலையாட்கள் அரை முகூர்த்தத்தில் சுவரை உடைத்து சன்னிதியைத் திறந்தார்கள்.

உணர்ச்சிக் கடல் பொங்க, கம்பணர் ஒவ்வொரு அடியாக வைத்துப் போனார்.

பக்தி நிறைந்த கண்களோடு மீனாக்ஷியின் உருவத்தைப் பார்த்தார்.

பார்த்ததுதான் தாமதம்! பொட்டென்று ஒரு அதிர்ச்சி அவரைப் பெரும் தாக்காய்த் தாக்கியது.

மீனாக்ஷியின் மீது சாத்தப்பட்டிருந்த மாலைகளும், சந்தனமும், குங்குமமும் அப்போது சாத்தப்பட்டது போல வாடாமல் வதங்காமல், புதுமை அழியாமல் அப்படியே இருந்தன.

48 ஆண்டுகளுக்கு முன் அன்னையை அலங்கரித்த மாலையும், பூவும், அன்று அலர்ந்தது போலவே இருந்தன.

இந்த அதிசயத்தைப் பார்த்ததுதான் தாமதம், கம்பணர் கன்னத்தில் அடித்துக் கொண்டு தரையில் சாஷ்டாங்கமாக விழுந்தார்.

பிறகு எழுந்து, ''அன்னையே! அதிசயத்தைக் கண்டேன்! அம்மா! கொஞ்ச நஞ்சமிருந்த என் புன்மையான சந்தேகத்தையும் தவிர்த்தேன். தாயே! உன்னை இனி இந்நிலையிலிருந்து மாற்றிப் பெரிய மகோன்னதத்திற்கு அழைத்துச் செல்கிறேன். பாழ்பட்ட உனது வாசஸ்தலத்தைத் திருத்தி அமைத்து உலகோர் வியக்கும் வண்ணம் மாபெரும் கோவிலை எழுப்பிவிடுகிறேன். இது சத்தியம்! தாயே அருள் புரிவாயம்மா'' என்று தழதழக்கக் கூறினார்.



''பைலட் பிரேம்நாத்''தில் நடித்திருக்கும் மாலினி பொன்சேகா, ஏற்கனவே ஸ்ரீலங்காவில் தயாரான 'யார் அவன்?' என்ற தமிழ்ப் படத்தில் நடித்திருக்கிறார். அங்குள்ள மனோகர் என்னும் நடிகர் இவருக்கு ஜோடி.

-மாத்தளை சோமு.

[மதுரைக் கோவிலின் தற்போதுள்ள பிரமாத வளர்ச்சிக்கு கம்பணரும், அவரது வழிவந்த விஜயநகர வம்சத்தாருந்தான் காரணம் ஆவார்கள். இப்போதுள்ள கோபுரங்கள், மண்டபங்கள், பிராகாரங்கள் ஆகியவை பெரும்பாலும் அவர்கள் கட்டியவையே!]

கம்பணர் வெளியே வர, கங்கா தேவி கோபணா இதர பிரதானிகளும் உள்ளே சென்று மீனாக்ஷியையும் அவள் மாலையின் அதிசயத்தையும் தரிசித்து விட்டு மிகவும் பரவசர்களாகி வெளியே வந்தார்கள்.

அடுத்து சுந்தரேசுவரர் சன்னிதிக்குச் சென்றார்கள்.

சுல்தானிய ஆட்சியில் கோவிலின் 14 கோபுரங்களும், பஞ்சாட்சரத் திருமதிலும், அதைச் சுற்றியுள்ள வீடுகளும் நாசமாகியிருந்தன.

இரு பிரதான சன்னிதிகளும், அர்த்த மண்டபம், மகா மண்டபங்களும் மாத்திரமே நாசமடையாமல் நின்றன.

சுவாமி சன்னிதிக்குச் சென்று அதை உடைத்துப் பார்க்குங்கால் சுவாமியின் மீதுள்ள பூமாலை, சந்தன குங்குமங்களும், தூங்கா விளக்கில் சுடரொளியும் அன்று பார்த்தவை போலவே இருந்தன. கீழே விழுந்து கன்னத்தில் போட்டுக் கொண்ட கம்பணர், சுவாமி, அம்மன்களுக்குப் பொன் நகைகளும், தினசரி வழிபாட்டுக்கான திரவியங்களும் உடனே அளிக்கக் கூறி, உத்தரவுகள் வழங்கினார்.

மீனாக்ஷி, சுந்தரேசுவரர்களின் உற்சவமூர்த்திகள் நாஞ்சில் நாட்டில் அடைக்கலம் இருப்பதாகக் கேள்விப்பட்டு உடனே அவைகளை எழுந்தருள வைத்துக் கொண்டு வர தளபதிகளுக்குக் கட்டளை இட்டார்.

அந்த ஒரு வாரத்துள் நாடெங்கும் கோவில்கள் எல்லாம் திறக்கப்பட்டன. கேரளத்திற்கு அடைக்கலம் போய் இருந்த விக்கிரகங்கள் எல்லாம் திரும்பி அழைக்கப் பெற்றன. துருக்கிய பயத்தில் நூற்றுக்கணக்கான விக்கிரகங்கள் மண்ணில் புதைக்கப்பட்டிருந்தபடியால் விஷயம் தெரிந்தவர்களின் உதவி கொண்டு பல ஊர்களில் அவை தோண்டி எடுக்கப்பட்டன. (இப்போதும் ஆங்காங்கே தோண்டும்போது நமக்குக் கிடைக்கும் விக்கிரகங்கள் பெரும்பாலும் மதுரை சுல்தானிய அரசு காலத்தில் பாதுகாப்புக்காக மண்ணில் புதைக்கப்பட்டவையே.)

இந்தச்சமயத்தில் கோபணாவும் சில பிரதானிகளும் உடனே திருவரங்கம் திரும்பினார்கள்.

அரங்கரை ஸ்தாபிதம் செய்ய வேண்டும். மன்னருக்கு வீராபிஷேகம் செய்ய வேண்டும். இதுதான் அவர்கள் குறிக்கோள்.

திருவரங்கம் புதுக்களை கொள்ள ஆரம்பித்தது. ஊரை விட்டு ஓடியிருந்த குடும்பங்கள் திரும்ப ஆரம்பித்தன.

வீதிகள் சுத்தமாகத் தொடங்கின. வீடுகள் மீண்டும் நிமிர ஆரம்பித்தன. கோவிலின் இடிபாடுகள் யாவும் அகற்றப்பட்டு விட்டன.

இந்த நேரத்தில் துரதிருஷ்ட வசமாக அரங்கனைப் பற்றிய சர்ச்சைகளும் வளரத் தொடங்கின.

ஊரில் சில காலம் ரகசியமாக வழிபடப்பட்டு வந்த விக்கிரகந்தான் திருவரங்கர் விக்கிரகமா, அல்லது கோபணா சிங்கவரத்திலிருந்து அழைப்பித்து வந்த விக்கிரகந்தான் திருவரங்கன் விக்கிரமா என்று விவாதிக்கத் தொடங்கினார்கள்.

அரங்க விக்கிரகத்தை இரகசியமாக பூஜை செய்து வந்தவர்கள் தங்கள் நம்பிக்கையிலிருந்து மாறுவதற்குக் கஷ்டப்பட்டார்கள். அவர்களுக்கு அந்த விக்கிரகத்தின் மீது உணர்ச்சிமயமான ஈடுபாடு வந்து விட்டது. புதிதாக ஊரில் குடியேற ஆரம்பித்தவர்களும் அவர்கள் சொல்வது சரி என்று ஆமோதிக்க ஆரம்பித்தார்கள். இதனால் இந்தக் கட்சியாரின் எண்ணிக்கை அதிகமாக வளர்ந்து விட்டது.

இது வல்லபனுக்கு வேதனையைக் கொடுத்தது. இனியும் தவிர்க்க முடியாது என்று நினைத்து கோபணுவிடம் விஷயத்தைத் தெரிவித்தான்.

அவர் திடுக்கிட்டு ஊர்ப் பெரியவர்களை அழைத்துப் பேசினார். அவர்களில் பெரும்பாலோர் கோபணுவின் திருவரங்கரை ஏற்றுக் கொள்ளவில்லை. அரங்கனோடு போன கோஷ்டியில் யாரேனும் ஒருவர் மிச்சமிருந்தால் கூட அவர் சொல்லை ஏற்றுக்கொள்ளச் சித்தமாக இருந்தார்கள். கோபணு உட்பட எல்லோருமே இவர் திருவரங்கர் என்று செவியால் கேள்விப் பட்டவர்கள்தான். பழைய அரங்கரைப் பார்த்தவர்கள் அல்ல.

''ஏன்? என் தயார் வாசந்திகா வரப்போகிறார்கள். அவர்களைக் கொண்டு கண்டு பிடிக்கச் சொல்கிறேன்'' என்றான் வல்லபன்.

''உன் தாயாரும் ஒரு இடைக்காலத்தில் அரங்கரைப் பார்த்ததில்லை. 48 வருடங்களும் அரங்கன் கூட இருந்தவராக இருக்க வேண்டும். இல்லையேல் ஏற்றுக் கொள்வதற்கில்லை'' என்று சொல்லிவிட்டார்கள்.

கோபணுவுக்குத் தர்மசங்கடமாக இருந்தது.

இவ்வளவு பாடுபட்டு, யுத்தங்கள் புரிந்து காப்பாற்றிய ஒரு காரியம் இப்படி நொடியில் வீணாகிறதே என்று நினைத்தபோது துக்கம் தொண்டையை அடைத்தது

எனினும் உணர்ச்சிக்கு ஆளாகாமல் வேதாந்த தேசிகர் வந்தால் அவர் தீர்மானத்திற்கே காரியங்களை விட்டுவிடுவோம் என்று எண்ணி மேலே நடக்க வேண்டிய கோவில் உத்தாரண வேலைகளில் ஈடுபட்டார்.

இரண்டு தினங்களில் தேசிகர் அருள் பழம்போல் வந்து சேர்ந்தார். நூற்றிரண்டு பிராயம் ஆனபடியாலும் பல்லக்கைக் கூட ஒரு சுகபோகம் என்று வெறுத்து உள்ள நடந்து வந்ததாலும் திருவரங்கத்தை அடையப் பதினைந்து தினங்கள் எடுத்திருந்தார்.

திருவரங்கத்தைக் கண்டதும் பழைய நினைவுகள் தோன்றிட அவர் திருக்கண்களில் நீர் நிரம்பி விட்டது.

ஊரில் பாழாக்கப்பட்ட வீதிகளையும் மதில்களையும் பார்த்து மனத்திலே பெரிதும் கிலேசம் அடைந்தார்.

துருக்கர் படையெடுப்புக்குப் பிறகு ஊரில் எல்லாப் பெரியவர்களும் மறைந்து விட்டார்களே என்று நொந்து கொண்டார்.

எனினும் நாட்டில் மீண்டும் வேத மார்க்கத்தின் ஆட்சி வருகிறது என்பது அவருக்குப் பெரும் மகிழ்ச்சியைக் கொடுத்தது.

கோபணு வந்து அவர் முன்னிலையில் சாஷ்டாங்கமாக விழுந்தபோது மிகவும் சந்தோஷப்பட்டு அவரது பக்தி சிரத்தையை மிகவும் மெச்சி, ''நீ ஊழியம் செய்யும் சாம்ராஜ்யம் மேலும் மேலும் விருத்தி அடையும்'' என்று வாழ்த்தி அருளினார்.

பின்னர் கோபணு தயங்கியவாறு திருவரங்கத்தில் நடந்துள்ள சர்ச்சைகளைக்கூறி, இனி என்ன செய்யலாம் என்று ஆலோசனை கேட்டபோது,

தேசிகரும் திருக்கண் மலர்த்தியருளி, ''கோபணு! இந்த அடியவன் எந்த மூர்த்தியைத் தேர்ந்தெடுக்கப் போகிறேன் என்பதைப் பற்றி எண்ணாதே! சீதா பிராட்டி மீது தூஷணைகள் சொன்னபோது இராமபிரான் என்ன செய்தார் என்பதை நினை. அவருக்குத் தெரியும் பிராட்டி அப்பழுக்கற்றவர் என்று! எனினும் உலகோருக்காக அவரைச் சோதனைகளுக்குள்ளாக்க வேண்டிய நிர்ப்பந்தம் ராமருக்குத் தோன்றியது. அது போலவே இங்கு நான் சொல்வதை மட்டும் தீர்மானமாகக் கொள்ளாமல் ஒன்று செய்! இந்த ஊரில் அறுபது வயதுக்கு மேல் உள்ள வயோதிகர்கள் யாராவது இருக்கிறார்களா என்று பார்! அவர்கள் நிச்சயம் பழைய அரங்கரைத் தரிசித்திருப்பார்கள். அவர்களை அழைப்பித்து இரண்டு திருவரங்கர்களையும் காட்டி, இவர்களில் யார் பழைய திருவரங்கன் என்று சொல்லச் சொல்! இந்தக் காரியத்தைச் செய்யும்முன் ஊரார் எல்லோரும் இந்த ஆலோசனைக்கு ஒத்துக் கொள்கிறார்களா என்று கேட்டுக் கொள்!'' என்று கூறினார்.



'ஸ்ரீப்ரியா காற்று அடித்த சைகிள் என்றால் அந்த சைகிளுக்குக்கூட நட்சத்திர மதிப்பு வந்துவிடுமே?

படம்: ''நீலக் கடலின் ஓரத்திலே'.
-டி.ஜெ. நவநீதன்.

கோபணுவுக்கு இது சரி என்று பட்டது. ஊர்ப் பெரியவர்களை அழைத்து அவர்களிடம் கேட்க, அவர்களும் இந்த நிபந்தனைக்கு ஆமோதித்தார்கள்.

மறுநாள் காலையில் திருவரங்கத்திலும் அடுத்துள்ள ஊர்களிலும் முரசம் கொட்டப்பட்டது.

''பழைய அரங்கனை நன்றாகப் பார்த்தவர்கள், அறுபது வயதுக்கு மேற்பட்டவர்கள் யாரேனும் இருந்தால் கோவிலுக்கு வரவேண்டும். பிரதானிகளின் உத்திரவு'' என்று அறிக்கை எங்கும் தெரிவிக்கப்பட்டது.

ஊரை அலசிப் பார்த்ததில் அப்படிப்பட்ட பொருத்தமுடன் வயதானவர்கள் யாரும் கிடைப்பாரில்லை. ஊரை விட்டுப் போன பழைய தலைமுறைகள் எல்லாம் எங்கெங்கோ நசித்து விட்டன என்பது தெரிய வந்தது. இரண்டு நாள் தேடியதில் கடைசியாக ஒரே ஒரு வயோதிகர் அகப்பட்டார்! அவருடைய பிராயம் தொண்ணூறு! பழைய அரங்கரைப் பார்த்திருப்பதாகச் சொன்னதால், அவரை ஆர்வமுடன் கோவிலுக்கு அழைத்து வந்தார்கள்.

இரு அரங்கர்களின் முன்னால் அவரை நிறுத்தி, இதில் பழைய அரங்கன் யார் என்று கேட்டபோதுதான் ஒரு உண்மை வெளிப்பட்டது.

''சுவாமிகளே! என் கண்கள் திறந்திருக்கின்றனவே தவிர நான் திருஷ்டி சுகத்தை இழந்து ஐந்து வருடங்களாகிவிட்டன. என்னால் எதையும் இனம் காண முடியாது'' என்றார்.

எல்லோருக்கும் பெரிய ஏமாற்றமாகிவிட்டது! பிரச்னை தீர்ந்துவிடும் என்று நினைக்கப் போக, பழைய படி ஆகிவிட்டதே என்று கசமுச என்று பேச ஆரம்பித்தார்கள்.

—தொடரும்

# மதுரா விஜயம்

ஸ்ரீவேணுகோபாலன்



எல்லோரும் பிரமித்திருக்க, அந்த வயோதிகர், ''சுவாமிகாள்!'' என்றார். ''அடியேன் சொல்வதைக் கேளுங்கள். நான் இந்தக் கோவிலின் பழைய நாளைய ஈரங்கொல்லி. பெருமானது வஸ்திரங்களை அடியேன்தான் தினமும் துவைத்துக் கொடுப்பேன். அந்தப் பழைய நாட்களிலே அடியேன் ஒரு காரியம் செய்வதுண்டு. பெருமாள் திருமஞ்சன நீராடிய வஸ்திரத்தை அடியேனிடம் துவைக்கக் கொடுக்கும்போது, அடியேன் அந்த ஈர வஸ்திரத்தைப் பிழிந்து அதன் தீர்த்தத்தைப்பெருமாளது பிரசாதமாக உட்கொள்ளுவேன். அந்தத் தீர்த்தத்தின் ருசியே தனியாயிருக்கும். அது பெருமாளது விக்கிரகத்தின் மகிமை என்று அடியேன் நினைத்துக் கொள்வதுண்டு. இப்போது சுவாமிகள் எல்லோரும் ஒன்று செய்யலாம். இரண்டு அரங்கருக்கும் திருமஞ்சனம் செய்து இரண்டு பேருடைய ஈர வஸ்திரங்களையும் அடியேனிடம் தாருங்கள். அடியேன் அவைகளைப் பிழிந்து தீர்த்தத்தைப் பருகுவதன் மூலம் பழைய பெருமாள் யார் என்று ருசியினால் கண்டுபிடிக்க முடிகிறதா என்று பார்க்கிறேன். சுவாமிகள் எல்லாரும் சரி என்று நினைத்தால் இதைச் செய்யலாம்'' என்று விண்ணப்பித்தார்.

எல்லோரும் யோசித்து சரி, என்று அதை ஆமோதித்தார்கள்.

உடனே திருமஞ்சனத்திற்கு ஏற்பாடு செய்யப்பட்டது. மண்டப வாசலிலே பெரும் கூட்டம் கூடிவிட்டது. ஈரம்கொல்லி பயபக்தியோடு நின்று கொண்டிருந்தார்.

திருமஞ்சனம் நிறைவேறியது.

ஈர வஸ்திரங்கள் களையப்பட்டன.

அர்ச்சகர் ஈரம் கொல்லியிடம் முதல் வஸ்திரத்தைக் கொடுத்து, ''இது இடது பக்கப் பெருமாளின் வஸ்திரம்!'' என்றும், இரண்டாவதைக் கொடுத்து, ''இது வலது பக்கப் பெருமாளின் வஸ்திரம்'' என்றும் கூறினார்.

ஈரம்கொல்லி இரண்டு வஸ்திரங்களையும் கையில் வைத்துக் கொண்டார். முதலில் ஒன்றைப் பிழிந்து தீர்த்தத்தைப் பருகினார். பிறகு இரண்டாவதைப் பிழிந்து பருகினார். சிறிது நேரம் கண்ணை மூடி யோசித்தார்.

பிறகு இரண்டாம் முறையும் இரு வஸ்திரங்களையும் பிழிந்து பருகினார்.

அவர் முகம் பிரகாசமாகியது. ''சுவாமிகளே! இடது பக்கம் இருக்கும் பெருமாளே பழைய பெருமாள்! அவரது வஸ்திர தீர்த்தந்தான் முன் போல் என் நாவிற்கு அபிருசியாய் இருக்கிறது'' என்றார்.

வல்லபனும், தத்தனும் துள்ளிக் குதித்தார்கள். இடது அரங்கன்தான் அவர்களது அரங்கன். கோபணு பேரானந்தத்துடன் எழுந்து, ''பெரியீர்காள்! அரங்கன் தம்மைத் தாமே காட்டிக் கொண்டார்'' என்று கூறினார். சபையினர் கரகோஷம் செய்து ஆமோதித்தனர்.

அடுத்து தேசிகர் நேரே சன்னிதிக்குச் சென்றார். 48 ஆண்டுகளுக்கு முன் தாம் கட்டிய சுவர் அப்படியே நின்றது. ''ரங்க ரங்கா!'' என்று சொல்லிக்கொண்டு தம் திருக்கரங்களிலுள்ள உளியால் சுவரைக் கொத்திவிட, அவரைத் தொடர்ந்து இதரர்கள் அதைப் பொழிக்க ஆரம்பித்தார்கள்.

சுவர் அழிய ஒரு முகூர்த்தம் ஆனது. தேசி கைகூப்பிக் கொண்டு, ''திருவரங்கா! திருவரங்க... என்று உள்ளே நுழைந்தார்.



இருட்டின் திரை சிறிது விலகியதும், பெருமாளின் திருவுரு மெள்ள மெள்ள விகசிக்கத் தொடங்கியது.

அப்போதுதான் திருமஞ்சனம் ஆகி, திருவஸ்திரம் தரித்தாற்போல் சுவாமி புதுப் பொலிவுடன் உள்ளே திகழ்ந்தார்.

திரு ஆடைகள் புத்தம்புதியவையாகத் தெரிந்தன.

பூஜைப் பாத்திரங்கள் யாவும் அன்று துலக்கி வைத்தது போன்ற புத்தொளிகள் வீசின.

எல்லோரும் கண்கொள்ளாமல் இந்த அதிசயத்தைக் கண்டு பக்திப் பெருக்கால், "ரங்கா! ரங்கா! என்று கூவினார்கள்.

அப்போது திடீரென்று மேகங்கள் கூடி மழை பொழியத் தொடங்கியது.

கோவிலையும், நகரையும் சுத்தம் செய்வது போல் பல முகூர்த்தங்கள் அடித்துப் பொழிந்தது.

அது குறைகிற வேளையில் தாயார் சன்னிதிக்கு அருகிலுள்ள வில்வ மரத்தின் அடியில் ஒரு அற்புதம் நிகழ்ந்து கொண்டிருந்தது.

மழைநீர் மண்ணைக் கரைத்துக் கொண்டு போக, அங்கே பளபளப்பாக ஏதோ தெரியத் தொடங்கியது.

சீக்கிரம் அது ஒரு கற்சிலையின் தலைப்பகுதி என்று தெரிய வந்தது.

கோபணு உடனே பணியாட்களை அனுப்பி, சிலையைத் தோண்டும்படி கூறினார். தோண்டி எடுத்ததில் அது தாயார் அரங்கநாயகியின் கற்சிலை (மூலவர்) என்று தெரிந்தது.

அன்னியர் படை எடுத்த காலத்தில் அரங்கன் மூலவரைச் சுவர் வைத்து மறைத்தபோது, தாயார் மூலவரை வில்வ மரத்தடியில் புதைத்து விட்டார்கள். அந்தத் தாயார்தான் இப்போது வெளியே வந்துள்ளார். வல்லபன் இதைத் தன் தாயார் மூலம் கேள்விப்பட்டிருக்கிறான். இப்போது அந்தச் செய்தியைக் கோபணுவிடம் தெரிவித்தான்.

கோபணு மகிழ்ச்சி யடைந்தார். ஆனால் கோவிலில் இரகசிய பூஜை செய்தவர்கள் ஏற்கெனவே சில காலம் முன்பே ஒரு தாயார் மூலவரை அங்கே ஸ்தாபிதம் பண்ணி இருந்தார்கள். இதை யோசித்த கோபணு கூடியிருந்த பெரியவர்களுடன் ஆலோசித்து, மரத்தடியில் இருந்த மூலவரையும் உள்ளே ஸ்தாபிதம் செய்யும்படி உத்தரவு வழங்கினார்.

(இன்னும் இந்த இரு மூலவர்கள், தாயார் சன்னிதியில் இருந்து வருகிறார்கள்).

ஆனி பதினேழு! ஊர் விழாக்கோலம் பூண்டது. வேத கோஷங்களும், தமிழ் மறை ஓசைகளும் எங்கும் கேட்டன. கோவிலிலிருந்து ஓமப் புகையும், நன் மணங்களும் எழுந்து ஊர் முழுவதையுமே நிரப்பின. மங்கள வாத்தியங்கள் எங்கும் முழங்கத் தொடங்கின.

விக்கிரக ரூபமாக தேசதேசங்களுக்குச் சென்று, காடுகளில் வாழ்ந்து லீலைகள் செய்த திருவரங்கன் தமது சன்னிதியில் ஸ்தாபனமாகி எழுந்தருளினார்.

அந்தத் திருக் காட்சியைக் கண்டவர்கள் எல்லோரும் மனம் உருகிக் கண்ணீர் பெருக்கினார்கள்.

கோபணு உணர்ச்சிவசத்தில் தம்மையே மறந்தவராக இருந்தார்.

வழிபாடுகள் முடிந்த பிறகு அவர் எழுந்து கம்பணர் சார்பில் பதினாறாயிரம் பொன்னையும், தம் சார்பில் ஆயிரம் பொன்னையும் கோவிலுக்காக வழங்கினார். அவற்றைக் கிருஷ்ணராஜ உத்தமநம்பி பக்தியோடு பெற்றுக் கொண்டார். (பின்னர் உத்தம நம்பி இந்தத் தொகை கொண்டு 52 கிராமங்களைக் கோவிலுக்காக வாங்கினார்.)

பிரதானிகளில் சாளுவ மங்கு, அஷ்டாட்சரத்தின் சின்னமாக எட்டுக் கிராமங்களை வாங்குவதற்கு 60000 பொற்கழஞ்சுகளை அளித்தார். 1000 சாலிக்கிராமங்களையும் மனமுவந்து வழங்கினார்.

மற்ற பிரதானிகளும் தளபதிகளும் தம் தம் பதவிக்கு ஏற்பப் பரிசில்களை வழங்கினார்கள்.

தேசிகர் எல்லா வைபவங்களையும் தம் திருக் கண்களால் அனுபவித்து விட்டு ஒரு சுலோகத்தைப் பாடினார்.

ஆநீயா நீலச்ருங்கத் யுதிரசித ஜகத் ரஞ்ஜ
நாதஞ்ஜாநாத்ரேச்,
செஞ்ஜ்யாமாராத்யகஞ்சித் ஸமய மத நிஹத்
யோத்த நுஷ்காந்ஸ் துலுஷ்காந்
லக்ஷ்மீக்ஷ்மாப்யா முபாப்யாம் ஸஹ நிஜ நிலயே
ஸ்தாபயந் ரங்கநாதம்
ஸம்யக்வர்யாம் ஸபர்யாம் குருத நிஜயஸோ
தர்ப்பணோ கோபணார்ய:

[உலகத்திற்கு ஆனந்தம் தரும் நீல உச்சிகளுடைய அஞ்சனாத்ரி (திருப்பதி) மலையிலிருந்து, ஸ்ரீதேவி, பூதேவி சகிதம் ரங்கநாதரை செஞ்சிக்குக் கொணர்ந்து பூஜை செய்து, பின்னர் துருக்கர்களை வென்று திருவரங்க நகரிலே அவரை மீண்டும் ஸ்தாபிதம் செய்தார், புகழ் வாய்ந்த கோபணார்யர்.]

இந்த சுலோகம் பிறகு தர்மவர்மாவின் திருமதில்களில் கிழண்டை வெளிப்புறத்தில் உள்ள கல்லின் மீது பொறிக்கப்பட்டது.

சகல கோலாகலமான இந்த வைபவங்களை எல்லாம் கண்டு பேரானந்தம் அடைந்த பல்லாயிரக் கணக்கான ஜீவன்களில் ஒரு ஜீவன் மட்டும் தனித்த ஒரு சாயுஜ்யமான சுகானந்தத்தை அனுபவித்தது.

வாசந்திகா என்னும் ஜீவன்தான் அது.

நான்கு நாட்களுக்கு முன்னர் காஞ்சியிலிருந்து வந்த யாத்திரைக் கூட்டத்துடன் வந்திருந்தாள் அவள்.

திருவரங்க மண்ணை மிதித்ததுமே அவளுக்கு மூர்ச்சை போட்டது!

சிறு பருவ நாட்கள் எல்லாம் அவள் கண் முன்னே தோகை விரித்து நர்த்தனம் செய்தன.

அரங்கத்தின் ஒவ்வொரு பிடி மண்ணும் அவளுக்குப் புனிதமாகத் தோன்றியது.

அவளும் அவள் கணவர் குலசேகரனும் கண்ட கனவு இன்று சோபிதமாய் நிறைவேற்றப்படுகிறது. இதை நிறைவேற்றியதில் பெரும்பங்கு அவளது திருக்குமாரனையே சார்ந்தது. அதை நினைத்துத்தான் ஒரு ஆத்மானுபவமான சுகத்தை அனுபவித்துக் கொண்டிருந்தாள் அவள்.

தாயைக் கண்டு ஆனந்தம் அடைந்தாலும் வல்லபனின் கண்கள் வெகு தூரம் நீந்தி மலையாள தேசத்திற்குச் சென்றிருந்தது.

திருவரங்கத்தில் நடக்கும் வீராபிஷேகத்திற்கு எல்லாக் குறுநில மன்னர்களையும், சிற்றரசர்களையும் ஓலை எழுதி அழைத்திருந்தார் கம்பணர்.

தென் பாண்டியத்தில் ஒரு பெரிய துண்டு பூமிக்கு உண்மை பாத்தியதை உடைய மதுராவுக்கும் அழைப்பு ஓலை அனுப்பப்பட்டது.

'பாண்டிய குல மகிஷி ஸ்ரீஸ்ரீ மதுராங்கினி தேவிக்கு!' என்று ஓலையின் திருமுகம் எழுதப்பட்டிருந்ததை வல்லபன் நன்கு அறிவான். நாளை மறுநாள் வீராபிஷேகத் திருநாள்! அன்று வருவாள் என்று எதிர்பார்த்திருந்தான்.

அந்த மங்கள நாள் உதயமாகியது.

நகர் முழுதும் மீண்டும் விழாக் கோலம்! கமுகும் வாழையும் நிறைந்த பந்தல்கள்! சுப வாத்தியங்கள் அதிர்க்கும் முரசுகள்! எல்லை இல்லாத ஜன சமுத்திரங்கள்!.

காலையில் தேசிகர் ஆசீர்வதித்ததுடன் தொடங்கி. கம்பணருக்கு வீராபிஷேகம் நடத்தப் பெற்றது. பார்ப்வருக்கு எல்லாம் அது கண் கொள்ளாக் காட்சியாக இருந்தது.

பின்னர் சிற்றரசர்களுக் கெல்லாம் கம்பணர் பரிசில்கள் வழங்கினார்.

பட்டியம் கூறி மெய்க்காவல் வீரர்கள் வந்தார்கள்.

சிற்றரசர்களும் கம்பணரை வணங்கி வாழ்த்தி அவர் அளித்த பரிசிலை வாங்கிச் சென்றார்கள்.

''தென் பாண்டிய மகிஷி ஸ்ரீஸ்ரீ மதுராங்கினி'' என்று சொல்லி நீளக்கட்டியம் கூறினார்கள்.

சந்திரிகை நடப்பது போல் ஒரு பேரழகி நடந்து வந்தாள். வல்லபன் தன் ஆதனத்திலிருந்து ஆவலோடு பார்த்தான்.

கம்பீர நடை நடந்து, ஹம்சம் போன்ற ஒயிலுடன் கம்பணர் முன் நிற்க, அவரும் பேருவகை அடைந்து தென் பாண்டியத்தின் பகுதியை பாண்டிய வழி வந்த அவளுக்கே வழங்குவதாக கூறி சாசனத்தையும் அவள் கரங்களில் ஒப்புவித்தார். எங்கும் கரகோஷம் பொங்கி நிலவியது.

வல்லபனின் கண்களில் நீர் நிறைந்தது.

''மதுரா, மதுரா! இதோ இருக்கிறேன். இதோ இருக்கிறேன்'' என்று மனசிலேயே கூவினான் அவன்.

மதுராவின் விழிகள் சிறிது கூட இருபக்கமும் அசையவில்லை. தன் வழியைப் பார்த்துக் கொண்டே நடந்தாள்.

இது அவனுக்கு வருத்தத்தைக் கொடுத்தது. பிரேமைக் கண்களோடு அவனைத் தேட வேண்டாமா, அல்லது தேடுகிறேன் என்ற பாவத்தை அவனறியச் செய்ய வேண்டாமா?

அவன் பார்வை திடீரென்று திரும்பியது.

மதுராவின் பின்னால் ஒரு இளைஞர் புன்னகையுடன் சேர்ந்து கொண்டார். அவள் அவருடன் ஏதோ பேச அவரும் புன்னகையுடன் பேசினார். இருவரும் பேசிக் கொண்டே தங்கள் ஆதனங்களில் அமர்ந்தார்கள்.

வல்லபனின் தவிப்பு தாங்கவில்லை. மெள்ள எழுந்தான். ஆனகுந்தி விட்டப்பர்தான் வயதில் சிறிய பிரதானி! அவரிடம் போய், ''அந்த மகிஷி அருகில் இருப்பவர் யார்?'' என்று கேட்டான்.

விட்டப்பரும் புன்னகையுடன், ''ஏன்! அது அவள் கணவர்தான்! பாண்டிய கிளைக் குடும்பத்து இளைஞரை அவள் மணந்திருக்கிறாள்'' என்று கூறினார்.

ஒரு கணம் அந்தக் கோலாகல சபைக் கூட்டமே வெறும் உயிரற்ற படமாகியது! அதன் ஆரவாரங்கள் ஏதும் அவன் காதில் விழவில்லை. இதயம் தடக்கென நின்றது. கால்கள் ஊன்றி நிற்க மறுத்தன.

சிரமத்துடன் ஆதனத்திற்கு வந்தான்: இருக்க முடியவில்லை சபையை விட்டு எழுந்தான். வெளியே போனான். கோயிலை நோக்கி விறுவிறுவென்று ஓடினான். சன்னிதி மண்டபத்தின் படியில் அமர்ந்தான். கண்ணீரைத் திறந்தான்.

ஊழி நாள் மாரிபோல் அழுகை!" கண்ணீர்தான் கடல் என அவன் கண்ணில் உறைந்து இருக்குமோ! துக்கந்தான் மேகம்போல் அவன் மனமெல்லாம் அடைத்திருக்குமோ!

குழந்தைபோல் அழுதான்.

இரு நாழிகை துயரின் கடுமையான எரிவில் அகப்பட்ட இளம் கொடிபோல் கருகி, பசுமை யெல்லாம் அழிய உலர்ந்த பின்,

அவன் மனம் திடீரென்று அலையில்லாக் கடல் போல் அமைதியானது. நலுங்காமல் பார்வை நிலையாய் நின்றது.

மனம் எதையும் நினையாமல் சூனியமாகிவிட்டது.

அப்போது எதிரே இருட்டின் ஆழத்திலிருந்து தேவதை யொன்று உற்பத்தியாகிக் கொண்டிருந்தது. மதுராங்கினியின் உரு அதற்கு இருந்தது.

அதிசயத்துடன் பார்க்கும்போது அந்த உரு அவன் முன்னே வந்து நின்றது.

அவன் உடல் பதறியது. கண்ணைக் கொட்டவில்லை. கொட்டினால் உருவம் அழிந்துவிடும் என்று நினைத்தான்.

''சுவாமி!'' என்ற குரல்.

அதுவும் பிரமையா? உற்றுப் பார்த்தான்.

''சுவாமி!''

இது பிரமையல்ல! அதிசயத்துடன் பார்த்தான். உருவத்தின் கண்களில் நீர்.

''நான்தான் சுவாமி மதுரா! தங்கள் நினைவுகளில் வாழ்ந்த மதுரா!''

நீர் அவள் கண்களில் அலைபோன்று வந்தது.

''பேசுங்கள் சுவாமி. இல்லையேல் என் இதயம் உடைந்து விடும் சுவாமி!''

அவள் நிஜமானவள் என்று அவனுக்குத் தெரிந்து விட்டது.

''சுவாமி அடியாளிடம் பேசுங்கள்!''

தழைந்து கீழே அமர்ந்தாள்.

சோகமாகப் பார்த்தான். பேச முடியவில்லை. உலகில் மகத்தான ஒரு வேதனைக்கு ஆளானது போல் நினைத்தான். வாழ்க்கையில் இத்தனை நாள் வாழ்ந்து, உழைத்து, தியாகம் செய்தது எல்லாமே வீணாகி விட்டது.

''சுவாமி, சுவாமி என்னைப் பாருங்கள்! என்னிடம் பேசுங்கள்! நான் ஒரு பாவி. பாதகம் செய்தவள்! ஏனெனில் தங்களது பிரேமையைத் திருடிக்கொண்டு போய் விட்டேன். பிரேமைதான் தங்களுக்கு உயிர்! அதைத் திருடியவள் கொண்டு போய் என் வாழ்நாள் முழுதும் நானே அனுபவித்தேனில்லை. அதை வீணாக்கித் தூரே எறிந்து விட்டேன். அறிந்தே செய்தேன் சுவாமி! இதனால் தாங்கள் உயிர் இல்லாதவராவீர்கள்! வாழ்நாள் முழுதும் ஜடமாக அலைவீர்கள் என்பதை நன்கு அறிந்திருந்தேன். இருந்தும் செய்தேன்! இருந்தும் செய்தேன்'' என்று சொல்லி அலமந்து அந்தப் படிக்கல்லில் தன் தலையை மோதினாள்.

திடுக்கிட்ட அவன், ''மதுரா! மதுரா!'' என்றான். கைகளால் அவளை எடுக்கப் போனான். பிறகு அதிர்ச்சியுடன் பின் நகர்ந்து, ''மகாராணி மகாராணி, என்ன இது? தாங்கள் இப்படிச் செய்யலாமா? எழுந்திருங்கள் எழுந்திருங்கள்'' என்று பதறினான்.

அவள் நிமிர்ந்தாள். நெற்றியில் ரத்தம் கசிந்திருந்தது.

''சுவாமி, சுவாமி! தங்கள் முன்னிலையில் அழுது சரண் அடைந்தால்தான் என் இதயம் நிர்மலம் ஆகும் போலிருந்தது. அரச சபையிலிருந்து தாங்கள் எழுந்ததும் தெரியும், போனதும் தெரியும். நீங்கள் என்னுடன் வருபவரைப் பார்த்து அதிர்ச்சி அடைந்திருப்பீர்கள்! அதனால் துக்கம் தாளாது போயிருப்பீர்கள் என்பதை நான் அறிந்தவள். ஏனெனில் நானும் அதுபோல் தனியே சென்று அழுதவள்தான். சபை முடிந்து வீடு போனதும் நீங்கள் எங்கே போயிருக்கக் கூடும் என்று யோசித்தேன். தவித்தேன். கடைசியில் அரங்கன் கோயிலில்தான் இருப்பீர்கள் என்று நினைத்தேன். தனியாக இங்கே எப்படியாவது வரவேண்டும் என்று நினைத்தேன். பிரதானி பரிவாரங்களைத் தவிர்த்துப் பின்புற வழியாய் இங்கே வந்தேன்.

''நான் இந்த திருமணத்தைக் கடமைக்காகச்செய்து கொண்டவள். என் தந்தை நோய்வாய்ப்பட்டிருந்தார். மரணத்தை நெருங்கிக் கொண்டிருந்தார். என்னை யாரிடமாவது ஒப்படைக்க விரும்பினார். ராஜரீகம் காரணமாக யாராவது என்னை அபகரித்துப் போய் விடக் கூடாது என்பது அவர் பயம்!

''தடுத்துப் பார்த்தேன். வெகு நாள் முடியவில்லை. ஒரு பெண் கன்னியாக எத்தனை நாள் வாழ்ந்துவிட முடியும்? தமிழ்த் தேசங்களுக்கு நல்கதியும் சீக்கிரம் வருவதாக அப்போது தோன்றவில்லை. தந்தையும் கடைசி நாட்களில் இருந்தார். வழியேதும் இல்லை. சரி என்றேன் திருமணத்திற்கு!

''சுவாமி, அப்படிச் சொன்னேனே, அன்று தங்களைப் போலவே தனியாக ஓடினேன். நெஞ்சத்தைக் கொட்டி அழுதேன். உயிரை மாய்த்துக் கொள்ளலாமா என்று நினைவு! ஆனால் தங்களுக்கு நான் வாழவில்லை என்பதைவிட எங்கேயோ வாழ்கிறேன், தங்களை நினைக்கிறேன் என்ற நினைவே, மகிழ்ச்சி தரும் என்று எண்ணினேன்.

''அந்த நினைப்பில்தான் வாழத் தீர்மானித்தேன். திருமணத்திற்குச் சம்மதித்தேன். சுவாமி! சுவாமி! இது தவறானால் என்னைப் பொறுத்தருளுங்கள். 'நீ வாழ்ந்திருக்க வேண்டாம், இறந்திருந்தால் சந்தோஷப்பட்டிருப்பேன்' என்று கூறுங்கள்! இதோ இந்தக் கணமே இறந்து விடுகிறேன். சுவாமி இந்த அபலையைக் காப்பாற்றுங்கள், ஏதாவது சொல்லுங்கள்'' என்று அரற்றினாள் அவள்.

வல்லபன் பேசவில்லை. அவன் மனம் நிர்மலத் தடாகமாய் விரிந்திருந்தது. மதுராவின் உருவில் பெண்மை அவனிடம் நியாயம் கேட்பது போல் நினைத்தான். மதுரா நேரில் வந்தது, கெஞ்சியது, முறையிட்டது, அழுதது, நியாயம் கேட்டது எல்லாமே அவன் மனத்தின் ரணங்களை ஓரளவு குணப்படுத்திக் கொண்டிருந்தது, பத்து வருடங்களில் அவள் வேறு என்ன செய்திருக்க முடியும்? எதுவும் முடியாது. அதை நினைக்கும்போது அவள் மீது இரக்கமும் பச்சாதாபமுமே மிகுந்தன.

வெகு நேரம் இந்த நினைவுகளில் ஆழ்ந்த பின் அவளைக் குளிர்வுடன் சோகமாகப் பார்த்தான். புயல் இல்லாத அமைதிப் பார்வை அது.

''மகாராணி!'' என்றான். ''தங்களை மதுரா என்று அழைக்கும் பாத்தியதை இழந்தவன். தாங்களும் அழாதீர்கள்! தங்கள் அழுகை என்னைப் பாதிக்கும். தாங்களும் தனிமையில் ஒருநாள் எனக்காக அழுதீர்கள் என்று சொன்னீர்களே. அந்த ஒரு வார்த்தை போதும் எனக்கு! வாழ்நாள் முழுவதும் அசைபோட்டுக் கொண்டிருப்பேன். தங்களது நிரந்தர அமைதிக்காக நானும் தங்களுக்கு ஒரு வார்த்தை கூறுகிறேன். தாங்கள் வாழ்வதையே நான் விரும்புகிறேன்.

''ஒரே ஒரு வரம் மகாராணி. தங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்க எனக்கு உரிமை கொடுங்கள்! அதுவே போதும் என் வாழ்க்கைக்கு! பிரேமை உடைந்து போனதின் துக்கத்தைப் பொறுத்துக் கொண்டு வாழ்வேன்'' என்றான் அவன்.

''தாங்கள் என்னை நினைப்பதற்குப் பூரண உரிமை பெற்றவர்! நம் பிரேமை தூயதாக இருப்பதால் இல்லற வாழ்விலும் ஒரு தூய உணர்வுடன் தங்களை நினைப்பதில் யாரும் என்னைக் குறை கூறவும் முடியாது. அப்படியே நினைப்பேன்'' என்றாள் அவள்.

அந்தப் பேச்சிலேயே இருவருக்கும் எல்லையிலா அமைதியும், நிர்மலமும் விழுந்துவிட்டது.

எழுந்தார்கள்.

அரங்கனை வணங்கினார்கள்.

வெளியே வந்தார்கள்.

பிரிந்தார்கள்.

வல்லபன் பிறகு துறவி போல்தான் வாழ்ந்தான். அவனது தாயார் வாசந்திகா திருவரங்கம் வந்த பின் ஓராண்டு வாழ்ந்தாள். வல்லபன் மணம் செய்து கொள்ள விரும்பாத காரணத்தை மெள்ள மெள்ள தத்தனிடமிருந்து கேட்டுத் தெரிந்து கொண்டாள். ஒரு பிரேமையில் அகப்பட்டு, அதன் காரணத்தால் வழி மாற வேண்டிய நிலை ஏற்பட்டும் தாயின் சொல்லைக் காப்பாற்றுவதற்காக வழி பிறழாமல் இருந்து, கடைசியில் அந்தப் பிரேமை முழுமை பெறுது உடைந்து போய் நிற்கிறான் என்பதை அவள் அறிந்தாள். அவனை மணம் செய்து கொள்ளும்படி வற்புறுத்தவில்லை. தன் கடைசி நேரத்தில் அவனை அழைத்து, ''நிம்மதியோடு வாழ்வாய்!'' என்று ஆசீர்வதித்தாள்.

ஆனால் அதே நேரத்தில் தத்தனிடமிருந்து அவள் ஒரு உறுதிமொழி வாங்கியிருந்தாள். வல்லபனை அவன் கடைசி வரை தன் சகோதரனாக நினைத்துக் காப்பாற்ற வேண்டும். அவன் மனம் நோக விடாமல் எல்லா நேரங்களிலும் நடந்து கொள்ள வேண்டும். இதற்காக தத்தனே ஒரு குடும்பத்தை ஏற்றுக்கொள்ள வேண்டும் என்று கூறியிருந்தாள்.

தத்தனும் கண்ணீரோடு அவளுக்கு வாக்குத்தத்தம் அளித்திருந்தான்.

இதற்காக அவன் மஞ்சரியைத் தேடிப் போய் மணந்து கொண்டான்.

அந்த உத்தம நண்பன்தான் வல்லபனுக்கு வாழ்வில் தாய், தந்தை, மனைவி, மகன் எல்லாமாகவும் மாறினான். வல்லபனின் சுகத்தையே என்றும் கண்காணித்தான்.

இருவரும் சேர்ந்தே திருவரங்கனுக்கு ஈடில்லாத் தொண்டுகளை ஆற்றினார்கள்.

அரங்கனது அருள் அவர்கள் மீது பரிபூரணமாக சுரந்திருந்தது.

அந்த அருட் சுரப்பால் வல்லபனின் பிரேமையெல்லாம் தெய்வீகபக்தியாகக் கனிந்துவிட்டது.

அந்த பக்தியில் அவன் திளைத்து அரங்கனும் அவனும் பாலும் தேனும் கலந்தவொத்தாற் போல் ஒன்றுகி விட்டார்கள்.

சுபம்

---

மதுரா விஜயத்தின் வல்லபனிடமிருந்து விடைகொள்ள எனக்கே 'மனம்' வருந்துகிறது. ஓராண்டு காலம் அவன் சுகதுக்கங்களில் பங்கெடுத்து விட்டேன், ஆசை, நிராசைகளில் ஒன்றி விட்டேன். எனக்கே அவன் மீது ஈடுபாடு வந்து விட்டது. கடைசியில் அவனிடமிருந்து துக்கத்துடன் விடை பெறுகிறேன்.

திருவரங்கன் உலா மதுரா விஜயமாக முடிந்து விட்டது.

ஒரு மகத்தான தெய்வப் பிரயாணத்தை என் ஏழைச் சொற்களால் எழுதி முடித்துவிட்டேன்.

இந்தக் கதை முடிவுக்கு பிறகு தேசிகர் சில மாதங்களே உயிர் தரித்திருந்தார்.

அந்தக் குறுகிய காலத்தில் அவர் மற்றொரு நற்காரியத்தையும் செய்து முடித்தார்.

சில சந்தர்ப்ப நிர்ப்பந்தங்களால், சிதம்பரத்தில் இருந்த கோவிந்தராஜப் பெருமாள் (மூலவர்) திருப்பதியில் அடைக்கலம் புக வேண்டியிருந்தது. ராஜரீக விளைவுகள் காரணமாக திரு இராமானுஜரே இருநூறு ஆண்டுகளுக்கு முன் அந்தப் பெருமாளை திருப்பதியில் எழுந்தருளப் பண்ணியிருந்தார். இப்போது தேசிகர், கோபணுவின் உதவி பெற்று, கோவிந்த ராஜரை மீண்டும் சிதம்பரத்திற்கே எழுந்தருள வைத்து அவரை அங்கே ஸ்தாபிதம் செய்தார்.

இந்த ஒரு நல் காரியத்தையும் முடித்தபின் தென் பூமியில் வேத மார்க்கம் தழைக்க நல்காலம் வந்து விட்டது என்று மனத்தில் உறுதிபூண்டு, பூரண அமைதியுடன் தமது 102 வயதில் பூவுலகம்விட்டுப் பரமபதம் சென்றார் வேதாந்த தேசிகர்.

கோபணுவும் சீக்கிரத்தில் ராஜரீகத்தைத் துறந்து பக்தி-மயமான ஏகாங்கி ஆனார்.

கங்காதேவி தன் சபதத்திற்கிணங்க, அழகான வடமொழிக் கவிதைகளில் தமது மதுரா விஜயத்தைப் பாடி முடித்தார்.

விஜயநகரம் பெரும் சாம்ராஜ்யமாகி வடக்கே துங்கபத்திரையிலிருந்து, தெற்கே கன்னியாகுமரி வரை பரவி, செழிப்பான மகோன்னதங்களைப் பார்த்து சென்று கொண்டிருந்தது. தென்னக வாழ்க்கையில் அது பெரிய திருப்புமுனை.

வரலாற்றில் நிகழ்ந்த இந்த மகத்தான திருப்புமுனையுடன், திருவரங்கரின் உலாவும் ஒன்றாக இழைந்து கலந்துவிட்டது.

திருவரங்கத்தை விட்டு அவர் புறப்பாடு தர்மத்தின் புறப்பாடாகவும், அவரது சேர்வு தர்மத்தின் சேர்வாகவும் சூசகமாக விளங்கிவிட்டது.

மதுரையின் வெற்றியால் அந்நகரில் மீனாட்சியும், ஸ்ரீரங்கத்தில் திருவரங்கரும் ஸ்தாபிதம் ஆனது, தர்மமே தனது அஸ்திவாரங்களில் மீண்டும் நிலை பெற்றது போல் ஆயிற்று.

தென்னகத்தில் இந்த தர்மத்தின் ஸ்தாபிதங்களைச் செய்தவர்கள் கம்பணரும், கோபணுவும் ஆவார்கள்.

தற்கால வரலாற்றின் குறைமிகைகளில் அவர்களது திருப்பெயர்கள் சிறிது மங்கிப் போயிருந்தாலும், விஷயம் அறிந்தவர்கள், அறிய விழைபவர்கள் இவர்களைத் தெரிந்து கொள்வது உத்தமமாக இருக்கும்.

அந்த விழைவுகளை இந்தக் கதை சிறிதாவது தூண்டிவிட்டால் எனக்கு அது மகிழ்ச்சியாக இருக்கும்.

மீண்டும் கூறுகிறேன்.

''தன்னைக் கொண்டு தன்னைப் பாடுவித்தான்'' என்று ஆழ்வார் சொன்னதை இப்போதும் பூரணமாக நம்புகிறேன்.

அவர் கதையை அவரே எழுதிக் கொண்டார். நானும் என் பேனாவும் இடையே தோன்றி மறைபவர்கள்! அவ்வளவுதான்!

இந்தக் கதை எழுத உதவிய எல்லா அன்பர்களுக்கும், படிக்கும்போது ஊக்கமளித்த எல்லா நண்பர்களுக்கும் நன்றி சொல்லிக் கொள்கிறேன்!

அவர்களும் அரங்கனுக்குக் கருவிகளே!

அரங்கன் வாழ்க!

-ஸ்ரீவேணுகோபாலன்

நகைச்சுவை நாயகர்கள் வரிசை-9

# ஸ்டீவன் லீக்காக்

கா.திரவியம் ஐ.ஏ.எஸ்.

“பெர்முடா ஊருக்கு உல்லாசப் பயணம் புறப்பட்டுக் கொண்டிருந்தார் என் நண்பர். டாக்ஸிக்குக் கொடுக்கச் சில்லறை இல்லை என்பதற்காக ஒரு டாலர் கேட்டார். கடனுகத்தான் கேட்டார். நானும் தயங்காது, தடைசொல்லாது, தாராளமாகக்கடன் கொடுத்தேன். பெர்முடா போய்ச் சேர்ந்த பின் என் நண்பர் எனக்குக் கடிதம். ஒன்று எழுதியிருந்தார். கடிதத்துடன் ஒரு டாலரைத் திருப்பி அனுப்பியிருப்பார் என்று எதிர்பார்த்தேன்; ஏமாந்து போனேன் அது பற்றியப் பேச்சுக்கூடக் கடிதத்தில் காணேம்! பயணம் போன நண்பர் திரும்பியும் வந்து விட்டார். அவரை ரயிலடியில் சந்தித்தேன். ''வீட்டுக்கு டாக்ஸியில் போகலாமா?'' என்று குறிப்பாகவே கேட்டேன். டாக்ஸி பற்றிய குறிப்பாகிலும், டாக்ஸிக்காக அவர் முன்பு வாங்கிய ஒரு டாலரை அவருக்கு நினைவு படுத்தும் என்றும் கணக்குப் போட்டேன். ''ஏன், நடந்தே போவோமே?'' என்று தட்டிக் கழித்து விட்டார் என் நண்பர்.

பெர்முடாவைப் பற்றிப் பேசினேம். பொது அறிவைப் பெருக்கிக் கொள்ளும் ஆர்வத்தில் கேட்பது போல், ''அந்த நாட்டிலே அமெரிக்க டாலர் புழங்குவதுண்டா?'' என்று கேட்டு வைத்தேன். அதுவும் அவருக்குக் கடன் வாங்கிய டாலரைக் கருத்தில் கொண்டுவரவில்லை. ஊர் விவகாரங்களையும், உலகப் போக்குகள் பற்றியும் பேசினேம். போலந்து நாடுதான்வாங்கியகடனை திருப்பிக் கொடுக்கும் பழக்கத்தை எப்பொழுதுமே கொண்டதில்லை. என்று உலக நடப்பு பற்றி விமரிசனம் செய்தார். அப்பொழுதும் தான் வாங்கிய கடன் அவருக்கு உறுத்தவில்லை.

கதையை வளர்த்துப் பயன் என்ன? ஒரு டாலர் கடன் வாங்கியதை அவர் மறந்தே விட்டார். ஆனுல் வாழ்நாள் முழுதும் அதை நான் மறக்கவும் மாட்டேன்; மறக்கவும் மனம் இடம் தராது. கடன்களைத் திருப்பிக் கொடுக்கும் கடமையை மக்களுக்கு உணர்த்த, 'நாணய நட்த்தை' இயக்கம் ஒன்றையே தொடங்கலாம் என்று திட்டமிடும் அளவுக்கு எனக்கு வேகம் வந்துவிட்டது. என்னைப் பொறுத்த வரை நான் எவரிட மிருந்தும் வாங்கிய கடனை நிச்சயமாகக் கொடுத்து விடுவேன். இங்குமங்கும் கைம்மாற்ருய்ச் சில்லறை வாங்கினதை நான் மறந்திருக்கக் கூடும். அது மனித இயல்புதானே? ஆனுல் பெர்முடாவுக்குப் புறப்படும்போது டாக்சிக்கு சில்லறை இல்லை என்ற காரணத்திற்காக நான் ஒரு டாலர் கடன் வாங்கியிருந்தால், அதை நிச்சயம் மறக்காமல் திருப்பிக் கொடுத்திருப்பேன்.

“லீக்காக் என்ன பெரிதாகஎழுதிக்கிழித்துவிட்டார்? நடபபதை மிகைப்படுத்தும் கூற்று. கண்கோளாற்ருல் காணும் கோணல் இரண்டையும் கலந்து ஒன்ருகக் குலுக்கி நகைச்சுவை என்று நமக்கு ஊற்றி கொடுக்கிருர்'' என்று ஆங்கிலேய விமரிசகர் ஒருவர் அவரை எள்ளி நகையாடினுர். லீக்காக் ஆத்திரம் கொள்ளவில்லை. அதுதான் உண்மை என்று ஒப்புக்கொண்டார். 'மிகைப் படுத்தல்'- உருவாக இருப்பதை ஊதி, உப்பச் செய்து, பெரிதுப் படுத்திப் பூதாகாரமாக்கிக்காட்டிச் சிரிக்க வைப்பது, கோணல்களைக் குரூரமின்றியும், குதர்க்கங்களைக் கொடுமை யின்றியும், குயுக்திகளைக் குறும்புத்தனமின்றியும், காட்டிச் சிரிக்கவைப்பது. இவை இரண்டும் தான் என் நகைச்சுவை என்கிருர் நண்பர். ''எல்லா நகைச்சுவையும் இரண்டில்தான் அடங்கியுள்ளன'' இவை என்று பொருள்பட அமைதியாக விளக்கினுர் அவர். இவற்றை எப்படிக் குலுக்கினுல் என்ன, நம்மை குலுங்கச் சிரிக்க வைப்பது தான், நகைச்சுவை.

சார்ல்ஸ் டிக்கென்ஸ்-இன் அற்புத நகைச்சுவைப் படைப்புக்கள் பிக்விக், மிக்காபர். ஷேக்ஸ்பியரின் அழியாத நகைச்சுவைப் படைப்பு: ஃபால்ஸாட்ஃப். உயிர்வாழ்ந்த சில மனிதர்கள்தான் இப்படைப்புகளுக்கு மூலஆதரவாக விளங்கினர். தம் தந்தையையே ஆதாரமாகக் கொண்டு மிக்காபரை, சார்ல்ஸ்டிக்கன்ஸ் உருவாக்கினுர் என்று சொல்லப் படுகிறது. நம் கண்ணெதிரே நடமாடும் மனிதரிடமிருந்துதான், நாயகரைக், கதை மாந்தரை, உரு உருவாக்குகின்ருன் ஆசிரியன். உரு அவர்களுடையது; உணர்வு ஆசிரியனுடையது. பாத்திரம் அவர்களுடையது; படைப்பு ஆசிரியனுடையது. முனைப்பு அவர்களுடையது; முழுமை ஆசிரியனுடையது. எத்தனையோ பிக்விக்குகள், ஏராளமான ஃபால்ஸ்டாஃப்கள், எண்ணற்ற சபாபதிகள் இன்னமும் நம்மிடையே வாழ்கின்றனர். அவர்களை இனம் காண அனுபவம் வேண்டும். அடையாளம் கண்ட பின், அழகுறச் சித்திரித்துப் பிறரும் அடையாளம் காணச் செய்ய அபூர்வ ஆற்றல் வேண்டும். இரண்டும் இணைந்ததே, இலக்கியவாதியின் படைப்பு.

எள்ளி நகையாடிப் பிறரைப் புண்படுத்துவது நகைச்சுவை ஆகாது என்று இலக்கணம் வகுத்தார் லீக்காக். ஆனுல் ஒரு நாள் யானைக்கும் அடி சறுக்கி விட்டது. வீட்டில் விருந்து பரிமாற, நாள் கூலிக்கு ஒரு வேலைக்காரனை அமர்த்தியிருந்தார் அவர். மதுபானத்தில் கலக்க ஓர் ஐஸ்கட்டியை எடுத்து வர வேலைக்காரனைப் பணித்தார். ''சிறு ஐஸ் கட்டிபோதும்-உன்மூளை அளவு'' என்று வழக்கத்துக்கு விரோதமாக வம்புப் பேச்சு பேசி விட்டார். வேலைக்காரன் எதிர்த்து எதுவும் பேசவில்லை. உள்ளே போய் மிகப் பெரிய, பாரமான ஐஸ் கட்டி ஒன்றைத் தூக்க முடியாமல் தூக்கி வந்த அவர்முன் வைத்தான். ''உன் மூளையளவு என்று தவறுதலாகச் சொல்லி விட்டேன். என் மூளையளவு என்று சொல்லியிருக்க வேண்டும்'' என்று சமாளித்தார் அவர். மீண்டும் வேலைக்காரன் உள்ளே போய், சிறிய ஐஸ் துண்டு ஒன்றை எடுத்து வந்து வைத்தான்! குதர்க்கமாகப் பேசிவிட்ட தனக்கு, வேலைக்காரன் சரியான பதிலடி கொடுத்து விட்டான் என்பதை ரசித்துப் பாராட்டினுர் லீக்காக்.

கண்ணுக்குத் தெரிவதை எல்லாம் நாம் பார்ப்பதில்லை. பார்ப்பது எல்லாம் நமக்குப் புரிவது இல்லை. புரிந்ததை எல்லாம் நாம் அனுபவிப்பது இல்லை. அனுபவிப்பதை எல்லாம், நாம் ஆக்கல் திறனுடன் படைப்பதில்லை. இலக்கியவாதியோ, இவை அனைத்தையும் சேர்ந்து செய்கிருன்; சிறப்பாகச் செய்கிருன். அதுவே அவன் அற்புதப் படைப்பு. அறிவு மட்டும் போதாது, எழுத்தாளனுக்கு; ஆர்வம் வேண்டும். ஆர்வம் மட்டும் போதாது; ஆற்றல் வேண்டும். ஆற்றல்மட்டும் போதாது; அனுபவம் வேண்டும். அனுபவம் மட்டும் போதாது; ரசனை வேண்டும். ரசனை மட்டும் போதாது; பண்பு வேண்டும். அத்தனையும் ஒருங்கே திரண்டு உருவாய், உணர்வோடு உயிர்ப் படைப்பாய் அமைவதே உயர் உயர் இலக்கியம். அந்த இலக்கியத்தில், நயமும் நாகரிகமும் நளினமும், இதமும், இயல்பும், இனிமையும் கலந்து விளங்குவதே, சிறந்த நகைச்சுவை இலக்கியம்.

-தொடரும்

# திருச்சியில் திருவரங்கத் திருவிழா



'திருவரங்கன் உலா', 'மதுரா விஜயம்' எழுதிய ஸ்ரீ வேணுகோபாலனுக்கு ஒரு திருவிழா நடைபெற்ற இடம் திருச்சி-பழைய தேசியக்கல்லூரிமண்டபம். விழாக் காண நகரப் பிரமுகர்களும், எழுத்தாளர்களும், எழுச்சி கொண்ட வாசகப் பெருமக்களும் திரளாகக் கூடியிருந்தார்கள்.

மனிதர்களின் வாழ்வில் விளையும் சோதனைகளைப் போலவே திருவரங்கப் பெருமாளுக்கும் நேரிட்ட சோதனைகளைப் பக்திச் சுவையோடு தனி உயிரோட்டமுள்ள தமிழ் நடையில் எழுதிய எழுத்தாளர் ஸ்ரீவேணுகோபாலன் எப்படியிருப்பார் என்று காணத் துடிப்புள்ளம் கொண்டோர் எங்கிருந்தோவெல்லாம் வந்திருந்தார்கள்.

முக்கியமாக அரங்கநாதர் ஆலயப் பிரதம பட்டரா[illegible] இருந்து வரும் 'அண்ணா' என [illegible]ரிமையோடும், பெருமையோடு[illegible] அழைக்கப் பெறும் திரு ரெ[illegible]கராஜ பட்டர் அவர்கள் மத்தகஜம்போல முன் வரிசையில் மலர்ந்த முகத்தோடு அமர்ந்திருந்தது, விழாவுக்கு எடுப்பான தோற்றத்தைத் தந்தது.

விழாத் தலைவர் எம்பார் விஜயராகவாச்சாரியார் அவர்களையும், மற்றும் விழாவில் பாராட்டுரை வழங்க வந்திருந்தோரையும் வரவேற்றுப் பேசினார். விழாக் குழுவின் செயலர் டி. ஆர். சந்திரசேகர்.

"திருவரங்கத்துக்கு அருகே இருக்கும் திருச்சிராப்பள்ளியிலேயே இந்த விழாவை நடத்துவதே சாலச் சிறப்புடையது என்ற நற்கருத்தை வெளியிட்டார் தினமணி கதிர் ஆசிரியர் கே.ஆர். வி. அவர்கள். அதற்குப் பொருத்தமான தலைவர் திரு எம்பார் சுவாமிகளே எனத் தீர்மானித்து அவர்களை அணுகினோம். பொள்ளாச்சியில் ஹரிகதா காலட்சேபம் நடத்த ஒப்புக்கொண்டு இருப்பினும், அதை முடித்துக் கொண்டு வருகிறேன் என்று கூறி, அப்படியே வந்து தலைமையேற்றிருப்பது நமக்கெல்லாம் பெருமை" என்றார்.

## எம்பாரின் எடுப்புரை

"ரசிக்க வருகிறேன் என்றுதான் உரைத்தேன். ஆனால் என்னையே தலைமை வகிக்கச் சொல்லிவிட்டார்கள். வந்த இடத்தில் ஏதோ சில வார்த்தைகள் ஒப்புக்குச் சொல்லிவிட்டு என்னால் எழுந்து போக முடியவில்லை. 'தினமணி கதி'ரில் 'திருவரங்கன் உலா'வும், 'மதுரா விஜய'மும் வெளிவந்த பொழுது அதைப் படித்து ரசித்தவர்களில் நானும் ஒருவன். எழுத்தாளர்களை, அவர்களுடைய மேதா விலாசங்களைப் போற்றிக் கொண்டாடும் கடமை நம்மைச்சார்ந்தது. எனவே விழா நாயகர் ஸ்ரீவேணுகோபாலனுக்கு இந்த மாபெரும் பாராட்டு மிகப்பொருத்தமானது" என்று பேசிய விழாத் தலைவர் எம்பார், தமது கைராசிக் கையினால் ஸ்ரீவேணுகோபாலனுக்குப் பொன்னாடை அணிவித்துக் கௌரவித்தார்.

"நம்மையெல்லாம் கொள்ளை கொண்ட ஒருவருக்குப் பாராட்டு விழா" என்று குறிப்பிட்டார் லால்குடியைச் சேர்ந்த ஜி. கனகசபை. "வைரங்கள் சுரங்கத்திலிருந்தால் அவற்றுக்குப் பெருமையில்லை. அவற்றைச் சுரங்கத்திலிருந்து தோண்டியெடுத்துப் பட்டை தீட்டி அழகுபடுத்தி



ஜொலிக்கச் செய்ய வேண்டும். அப்படித்தான் ஸ்ரீவேணுகோபாலனுக்குத் தரும் இந்த பாராட்டு அமைந்துள்ளது.''

கதரில் பஞ்ச கச்சம் அணிந்து, கம்பீரமான குரலில் திருச்சி தமிழ் எழுத்தாளர் சங்கத் தலைவர் 'ரெட்டியார்' என்று சுருக்கமாக அழைக்கப் பெறும் அ.வெ.ரா. கி[illegible]ணசாமி ரெட்டியார் குறிப்[illegible]ர்:

தமிழ்நாட்டு மக்களின் உணர்ச் பிரதிபலிப்பாக இங்கே காணப் பெறுகிறார் ஸ்ரீவேணுகோபாலன். திருவரங்கத்து மக்களின் எழுச்சியையும், உள்ளத் துடிப்பினையும் இவருடைய எழுத்தில் நான் கண்டேன். அரங்கனைக் காப்பாற்ற அடியார்களுக்கு ஏற்பட்ட அதே உணர்வில் நாமும் உருகிப் போய் இருக்கிறோம்.''

''ஸ்ரீவேணுகோபாலன் எழுதிய இந்தச் சரித்திரக் கதையில் தெய்வமே கதாநாயகனாக இருக்கிறார். மனிதர்களைக் கதையின் நாயகனாக வைத்து எழுதுவதைப் போலவே திருவரங்கனை நம்மிடையே உலாவிட்டு, சற்றும் சலிப்புத் தட்டாமல் எழுதியிருப்பதும், பலவிதத் தாபங்களை உண்டாக்கியிருப்பதுமான புரட்சிப் படைப்பு''. என்றார் பிரபல எழுத்தாளர் மாயாவி (திருச்சி ஏ.ஐ.ஆர்.)

## மாலைக் கதாநாயகன்

திருச்சி தேசியக் கல்லூரி முதல்வர் திரு கிருஷ்ணமூர்த்தி, ''மாலைக்



லால்குடி ஜி. கனகசபை

கதாநாயகன் ஸ்ரீவேணுகோபாலன் அவர்களே!'' என்று பேச ஆரம்பித்தபொழுதே களை கட்டிவிட்டது! அதே கல்லூரியின் புகழ் பெற்ற முதல்வராகவிருந்த திரு சாரநாதன் அவர்களுக்கு இலக்கியத்தில் நல்ல ஈடுபாடு உண்டென்றும், அதே துறையில் தனக்கும் ஈடுபாடு தொடர்கிறது என்றும் 'ஒரு ஈடுபாட்டுத் தொடர் கதையை' அவர் விவரித்தார்.



ஸ்ரீவேணுகோபாலன்

'மதுரா விஜயம்' ஒரு 'ஸீக்வெல்' என்றார்.

தமது அன்பளிப்பாகக் கதாசிரியர் ஸ்ரீவேணுகோபாலனுக்கு அழகிய தெரு மேசை மின் விளக்கை அளித்த தேசியக் கல்லூரி முதல்வர் அதை அவருடைய கையில் கொடுத்து, ''ஒளி வீசும் ஒரு விளக்காக இருங்கள்'' என்று வாழ்த்தினார்.

திருச்சியில் தாசில்தாராகப் பணிபுரிந்து வரும் கே.பி. வெங்கடேசன் அவர்கள் கையில் வைத்திருந்த ஏகப்பட்ட குறிப்புகளையும், காகிதக் கட்டுகளையும் கண்ட பொழுது அலுவலகத்திலிருந்து சில ரெகார்டுகளோடு அப்படியே விழாவுக்கு வந்துவிட்டாரோ என்று தோன்றியது. ஆனால் அவர் கொண்டு வந்திருந்தது ஆழமாக ஆய்வு செய்திருந்த வரலாற்றுக் குறிப்புக்கள். திருவரங்கன் துங்கபத்திரா, காவேரி, வைகை ஆகிய மூன்று புண்ணிய நதிகளின் உலாவோடு தொடர்புடையவர் என்றார். 48-ஆண்டு காலம் அவர் ஆயிரம் மைல்களுக்கு மேல் உலாப் போயிருக்கிறார் என்றும் கூறினார். கதாசிரியர். ஸ்ரீவே.யின் இரண்டு மாபெரும் நவீனங்களில் எப்படிப் பட்ட சொல்லாட்சிகளும், எழுச்சிகளும், பக்திப் பெருக்குகளும் நிறைந்து இருக்கின்றன என்று பல இடங்களில் சான்றுகாட்டினார். அரசாங்க அலுவலராகப் பணிபுரியும் இவரால் இவ்வளவு சிறந்த முறையில் எப்படித் திறனாய்வு செய்ய முடிந்தது என்ற வியப்பு உள்ளூர்க்காரர்களுக்கு ஏற்பாடவிட்டாலும் எங்களுக்கு ஏற்பட்டது.

## அவர் திருமேனி!

மேனியென்னவோ மெலிந்த மேனிதான். ஆனால் அவர் திருமேனி! ஆராய்ச்சிக்காக டாக்டர் பட்டம் பெற்றிருந்த அவர், திருவரங்கத்தில் உள்ள அரங்கனின் சிலை 'இக்ஷ்வாகு' வம்ச வழியே துவாபர யுகத்திலிருந்து வந்ததாகும். இது சூரிய குல மன்னர்களில் ஒருவரான மனு வழிபட்ட சிலை என்று, சில ஆதாரங்களைக் காட்டிக் குறிப்பிட்டார். ''நூலாசிரியருக்குப் பாராட்டு வழங்குவது என்பது அவர் எழுதியதைப் படித்து ரசிப்பதுதான். படித்த இடங்களைக் குறிப்பிட்டு அவரை மகிழ்விப்பதுதான் சரியான பாராட்டு. அப்பொழுது அவருக்கேற்படும் இன்பம் வைகுண்டம் அல்லது சிவலோகத்தில்கூடக் கிடைக்காது!'' என்றார் இந்த ஆராய்ச்சியாளர்.

எழுத்தாளர் ஏ.எஸ். ராகவன் ஸ்ரீவேணுகோபாலனை 'இலக்கியப் பிதாமகர் பீஷ்மர்' என்று உவமையிட்டார். அதோடு ஸ்ரீவே ஒரு பண்புள்ள எழுத்தாளர் என்றும் சொன்னார்.



மாயாவி (திருச்சி ஏ.ஐ.ஆர்.)

திருமதி. லெதிகா சாரண் ஐ.பி.எஸ். கூறினர்: ''ஆங்கிலத்தில் சர். வால்டர் ஸ்காட் போன்ற சரித்திர ஆசிரியர் ஸ்ரீ வேணுகோபாலன்.''

திருச்சி வானெலி நிகழ்ச்சிப் பொறுப்பாளர் விஜய திருவேங்கடம் பேசுகையில், இந்த மாபெரும் புதினங்களில் படைக்கப்பட்டிருக்கும் ஒரு கதாபாத்திரமான ராஜ வல்லபனை நம் கண்முன் கொணர்ந்து நிறுத்தினர். 19-ஆண்டு காலம் வல்லமையுள்ள அவ் வல்லபன் விக்கிரக விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டு அரங்கனை எப்படியெல்லாம் காப்பாற்ற அரும்பாடு பட்டார் என்பதை நல்ல தமிழில் உருக்கமாகப் படம் பிடித்துக் காட்டினர்.

## மனிதக் கதை

கம்பீரமான குரல்; நிறைய மேடைகளில் பேசிய அனுபவம்; நடுநடுவே அருணகிரி நாதரின் பாக்களிலிருந்து தேவையான மேற்கோள்கள்-ஆகியவற்ருேடு இலஞ்சி ஏ.இ. முத்துக்குமாரசாமி பாராட்டுத் தந்தார். ''நாட்டிலே பக்தியைப் பரப்ப வந்திருக்கிருர் ஸ்ரீவே. இவருடைய பேரிலேயே 'ஸ்ரீ' இயல்பாகச் சேர்ந்துள்ளது. சரித்திரப் பேராசிரியர் கல்கி அவர்களுக்குப் பிறகு பாரம்பரியம் போதிய அளவு வளரவில்லையே என்ற குறையை இவர் போக்கிவிட்டார். இவருக்கு விரைவில் ஞானபீடப் பரிசு கிடைக்க வேண்டும்'' என்றதும் ரசிகர்கள் பெரிய அளவில் கைதட்டி வரவேற்ருர்கள்.

''மனிதக் கதை எழுதிய இந்த மாபெரும் மனிதருக்கு இங்கே பாராட்டு விழா. தெய்வத்தை மனிதருக்கு மத்தியில் நடமாட விட்ட ஒரு மனிதருக்கு இங்கே விழா'' என்று எடுப்பான குரலில் பேசத் தொடங்கினர் திருச்சி வானெலி நிலையத்தின் நிகழ்ச்சிப் பொறுப்பாளர் அய்யூப்.

''தொடர்ந்து படித்தேன். சில சில பகுதிகளில் இவர் என்னை உசுப்பினர்'' என்று கூறி ரசிகர்களையும் இவர் உசுப்பிவிட்டார்!

—அடுத்த இதழில் முடிவுறும்

நமது நிருபர்

## தாத்தா



கூறட்டை விட்டுத் தூங்கிடுவார்
கோலைக் கையில் தாங்கிடுவார்
அரட்டைப் பேச்சைக் கண்டிப்பார்
அடாது செய்தால் தண்டிப்பார்
பரட்டைத் தலையைப் பார்த்திட்டால்
பாப்பா தலையைச் சீவென்பார்
இருட்டும் போதில் என்னேடே
எங்கே துணைக்கு வாவென்பார்!

பாக்கு கடிக்கப் பல்லில்லை,
பாட்டுப் பாடச் சொல்லில்லை.
தேக்கு போன்ற உடல் அன்று
தேய்ந்த தென்பார் பார் இன்று.
கேட்கும் படியாய் 'நான் பாரீர்
கிழவன், என்பார் 'கி' எழுத்தில்
கோக்கும் கோலே அவர் கோலாம்
குனிந்தே நடந்து ஊன்றிடுங் கோவாம்!

பனிக்காற்றென்ருல் இருமிடுவார்
படிக்காவிட்டால் பொருமிடுவார்.
இனிக்கும் பாட்டை அவர் கேட்பார்.
எழுதும் பாடம் அவர் பார்ப்பார்.
நுனிப்புல் மேயாதே என்பார்
நோக்கம் உயர்வாய்க் கொள் என்பார்
எனக்குப் பிடிக்கும் தாத்தாவை!
யார்க்கும் அவர்போல் குணம் தேவை!

மின்னூர் சீனிவாசன்



## ஸ்ரீப்ரியாவுக்கு வந்த டெலிபோன் கால்

ஒரு நாள் யாரோ டெலிபோன் செய்து "உங்க வீட்டிலே ஃபான் ஓடுதா?' என்று விசாரித்தார். மின்சார இலாகா சம்பந்தப்பட்டவங்க விசாரிக்கிறதா நினைத்து 'ஓடுதே!' என்றேன். 'சட்டுன்னு போய்ப். பிடிங்க.... ஓடிடப் போகுது!' என்று டெலிபோனை வைத்து விட்டார்கள்!

-ஸ்ரீப்ரியா சொன்ன தகவல்.

## என்ன லாபம்?

'படங்களில் நாம என்ன உழைச்சு நடிச்சாலும் அது அப்படியே திரையிலே வந்துடுதா என்ன?படத்தின் நீளம் அதிகம், குறைக்கனும்னு உடனே காமெடி தலையிலே தான் கையை வைக்கிறுங்க!''

-அலுத்துக்கொண்டது வெ. ஆ. மூர்த்தி
-எஸ்ஸார்.

# வாணி மகளிர் மன்றம்





திருச்சி தேசியக் கல்லூரியில் 'பணியாற்றும் ஆசிரியர்களின் துணைவியர் ஒன்று சேர்ந்து, ஓய்வு நேரத்தைச் சமூகத்துக்குப் பயனுள்ள முறையில் செலவிடத் துவக்கியுள்ளதுதான் 'வாணி மகளிர் மன்றம்.'

இதன் திறப்பு விழா பிப்ரவரி மத்தியில் தேசியக் கல்லூரி உயர்நிலைப் பள்ளி சரஸ்வதி ஹாலில் சிறப்பாக நடைபெற்றது. தலைமை வகித்தவர் தினமணி கதிர் ஆசிரியர் திரு கே. ஆர். வாசுதேவன். குத்து விளக்கேற்றித் துவக்கிவைத்தவர் மாவட்ட ஆட்சித் தலைவரின் துணைவியார் திருமதி உமாசங்கர்.

தேசியக் கல்லூரி முதல்வர் திரு கிருஷ்ணமூர்த்தி, திரு மாயாண்டி, திரு ராமநாராயணன், அமுத சுரபி ஆசிரியர் திரு விக்கிரமன், திருமதி ஷெரின், திருமதி [illegible]னிதா, திருமதி விஜயா, திருமதி கோமதி ஆகியோர் ஆசி வழங்கிப் பேசினர். மன்றத் தலைவி திருமதி ராஜம் கிருஷ்ணமூர்த்தி அனைவரையும் வரவேற்றுப் பேசினார்.



# திருவரங்கன் கோவிலிலே

## ஸ்ரீவேணுகோபாலன்



உலாச் சென்ற அரங்கன்

திருவரங்கன் உலா எழுதிய போது பன்றியாழ்வான் சன்னிதி என்று ஒரு சன்னிதியைப் பற்றி எழுதியிருக்கிறேன். முன்னர் திருவரங்கம் போனதுபோது இந்த சன்னிதியை என்னால் கண்டுபிடிக்க முடியவில்லை. 'விசாரித்தபோது சரியான தகவலும் கிடைக்கவில்லை. ஆகவே கோயிலொழுகு என்ற பழங்கால நூலில் குறிக்கப்பட்டிருந்ததுபோல. அந்த சன்னிதி ஆர்யபடாள் வாசலைக் கடந்ததும் இடது பக்கம் இருக்கிறது என்று எழுதி வைத்தேன்.

இந்த முறை திருவரங்கம் போனபோது, திரு. கண்ணரங்கராஜபட்டர் அவர்கள், ''நீங்கள் குறித்துள்ள பன்றியாழ்வான் சன்னிதி இங்கே இருக்கிறது'' என்று அழைத்துப் போனார்.

நான் குறிப்பிட்ட பகுதியிலே இருக்கும் பெரிய மண்டபத்தில்ஏறி ஒரு சின்ன சன்னிதியின் கதவைத் திறக்கச் சொல்லி உள்ளே அழைத்துப் போய் ஒரு மூர்த்தியைக் காண்பித்தார்.

''இவர்தான் நீங்கள் குறிப்பிட்ட பன்றியாழ்வான். காலப் போக்கில் இப்படி ஓரமாய் ஒதுங்கி இருக்கிறார்'' என்று கூறினார்.

கல்லால் ஆன மூலமூர்த்தி அவர். எட்டடிக் குச்சுக்குள்ளே என்பது போல் ஒரு சன்னிதியில் ஓரமாக ஒதுங்கியிருக்கிறார். எத்தனை நூற்றாண்டு காலத்தின் தொலைவிலிருந்து வந்திருக்கிறாரோ! சரித்திரத்தின் ஒரு பெரிய பகுதியைப் பார்த்திருப்பார் என்று நினைக்கிறேன்.

பிறகு ரங்கராஜ பட்டர் திருவரங்கம் என்ற பெயருக்கு ஏற்ப ஒரு அரங்கமே இருந்தது என்ற ஒரு செய்தியை விளக்கினார். அந்த அரங்கம் இருக்கும் அறைக்குள் கொண்டு போய்க் காட்டினார். உற்சவப்பெருமானுக்கு அன்று அணியவிருக்கும் ஒருசிவப்புக் கல் பதக்கத்தைக் காட்டி அதன் தொன்மையையும் வேலைப்பாட்டையும் குறித்துப் பேசினார்.

நான் போன சமயம் உற்சவருக்குத் திருமஞ்சனம் நடைபெற வேண்டியிருந்த நேரம்.

உற்சவரை சன்னிதிக்கு வெளியே உள்ள மண்டபத்தில் எழுந்தருள வைத்திருந்தார்கள்.

எனக்கு அது ஒரு அற்புதக்காட்சி.

ஏனெனில் 'திருவரங்கன் உலா'விலும், 'மதுரா விஜயத்'திலும் நான் எழுதியுள்ளபடி எல்லா இன்ப துன்பங்களுக்கும் ஆளான அந்த உற்சவ மூர்த்தியை சன்னிதிக்குள் இருக்கும் போது தான் தரிசித்திருக்கிறேன். சில அடிகள் எட்ட இருந்து தரிசித்ததால் அவரது திருமேனி எப்படி இருக்கும் என்பதை அதிகம் அறிந்ததில்லை.

எனவே அன்று அந்த மூர்த்தி திருமஞ்சனத்திற்காக நல்ல வெளிச்சமான மண்டபத்தில் எழுந்தருளியிருப்பது ஒரு அரிதான சந்தர்ப்பமாக இருந்தது.

என் இரு நாவல்களிலும் வரும் கதாநாயகனை நேரிலும் அண்மையிலும் பார்க்கக் கூடிய பாக்கியம் பெற்றேன்.

ரங்கராஜபட்டர் அருகிலே நின்று விளக்கினார். என் மனம் நெகிழத் தொடங்கியது.

அந்த விக்கிரக மூர்த்தியின் முகம் தான் வெளியே தெரியும். மீதி எல்லாம் கவசங்களுக்குள்



மாற்று அரங்கன்

பூட்டப்பட்டு மறைக்கப்பட்டு விட்டன. இந்தக் கவசங்கள் பிற்காலங்களில் ஏற்பட்டவை!

திருமுகத்தைப் பார்த்தேன். அறுநூறு ஆண்டுகளுக்கு முன் காடுகளிலும் மேடுகளிலும் அலைந்த முகம். இராமனைப் போல் நீண்ட வருடங்கள் காட்டிலே வாழ்ந்த முகம். மலையிலே இருந்து கீழே உருண்ட முகம். தேவதாசியின் மடியிலே ஆரவணைக்கப்பட்ட முகம். பக்தர்கள் தோளிலே வெய்யிலும் மழையும் பாராது தேசம் தேசமாக அலைந்த முகம். ஒய்சள வல்லாள தேவரின் கண்ணனூர்ப் போரின் (கி.பி. 1342) முடிவுக்குக் காத்திருந்த முகம். சந்திரகிரிக் காட்டிலே வாடிய முகம். திருமலையிலும் செஞ்சியிலும் அடைக்கலமாய் வாழ்ந்த முகம். கோபணருக்கும் கம்பணருக்கும் உத்வேகம் தந்து மீண்டும் திருவரங்கத்தை வெற்றி காண அருள் செய்த முகம். பக்தர்களும், ஆழ்வார்களும் ராஜாக்களும் மக்களும் தரிசித்துப் பரவசமாகிய முகம்.

அந்தத் திருமுகம் இப்போது எப்படி இருக்கிறது?

காலத்தாலும் அபிஷேகத்தாலும், அநேகரது ஸ்பரிசத்தாலும் கரைந்து தேசலாகி மூக்கும் முழியும் வித்தியாசம் இல்லாதது போன்ற ஒரு சேவை தருகிறது. ஏதோ களம் கண்டு அநுபவ முத்திரைகள் முகத்தில் ஏறியது போல் தோற்றம். சரித்திரங்களைக் கண்டு, அநேக அரச பரம்பரைகளின் கஷ்ட நஷ்டங்களையும் நாட்டின் சூழ்வலிகளையும் நேரில் கண்டு அவைகளை எல்லாம் தாண்டி வந்த முகம்.

முகத்தின் உறுப்புகள் குன்றி யிருந்தாலும் அழகு குன்றாத முகம்.

உள்ளே திருமேனி எப்படி?

மார்பும், உடம்பும், கைகால்களும் அதிகம் சிதிலமாகியிருக்கின்றன. மார்பை இப்போது பெரும் பதக்கத்தால் மறைத்திருக்கிறார்கள். தோள் பட்டை அருகே கவச இடுக்குகள் வழியே பார்த்தால் தேகம் வெறும் கூடாக இருப்பது தெரிகிறது.

இந்த உத்சவ மூர்த்திக்குத் திருமஞ்சனம், திருமேனியில் நடப்பது இல்லை.



சங்கராஜபட்டர் மிகுந்த ஈடுபாட்டோடு தரும் விளக்கங்கள் மெய்மறக்க வைக்கின்றன.

எனது இச் சரித்திர நாவலின் கதாநாயகரை மிக நெருக்கமாயும், தீவிரமாகவும் தரிசித்த மனத்துடன் பிரியா விடை பெறுகிறேன். பெரும் சரித்திரப் பெருமைகளோடு பல நூற்றாண்டுகளாக இந்த விக்கிரகம் நம்மிடையே இருந்து வருகிறது என்பது இன்னும் நிறைய பேர்களுக்குத் தெரியாது.

இந்த முன்று ஒய்சளர் சிற்பங்களை ஆற அமரப் பார்த்தேன். இங்கு நான் பார்த்த சில நிர்வாண அழகுகள் உலகப்பிரசித்தி பெற்றவை.

ஒரு சன்னிதி பிராகாரத்தில் இவைகளை ஒய்சளர்கள் தைரியமாகச் செதுக்கி வைத்திருப்பது அதிசயந்தான்.

'மதுரா விஜயம்' முடிந்தபோது அநேக வாசகர்கள் அந்த இரண்டாவது திருவரங்கன் விக்கிரகம் என்ன ஆயிற்று என்று எழுதியிருந்தார்கள்.

இரண்டாவது விக்கிரகமும் சன்னிதியுள்ளேதான் வைக்கப்பட்டுள்ளது. 'யாக பேரர்' என்று அவரைக் குறிப்பிடுகிறார்கள்.

திருவரங்கரைத் தவிர கோவிலில் நான் பார்க்க விரும்பியது மற்றொன்று.

திருவரங்க நகரைத் துலுக்கியரிடமிருந்து ஜயித்தபோது (கி. பி. 1371) வேதாந்த தேசிகர் அந்த வெற்றியைக் குறித்தும், அந்த வெற்றி வாங்கித்தந்த கோபணரைக் குறித்தும் ஒரு பாடல் எழுதியுள்ளார்.

அந்தப் பாடலைக் கல்லிலே வடித்திருக்கிறார்கள் என்று குறிப்பிடுகிறது கோவிலொழுகு.

அது எங்கே இருக்கிறது என்று பார்க்க விரும்பினேன்.

அந்த சுலோகம் சுற்சுவரில் நீட்டமாக ஓரிடத்தில் வெட்டப்பட்டு இருப்பதை ரங்கராஜ பட்டர் காண்பிக்கிறார். வெள்ளை அடித்தலுக்கு ஆளாகி, எந்தவித விசேஷப் பாதுகாப்போ, சுட்டிக் குறித்தலோ இன்றி சாதாரணமாக இருக்கிறது.

எவ்வளவு சரித்திரப் புகழ் வாய்ந்தது அது? அதுவும் திருவரங்க வரலாற்றில் எவ்வளவு முக்கியமான திருப்பத்தைக் குறிக்கிறது அது?

ஏனோ அது இன்று எனக்கு ஏமாற்றத்தையும் வருத்தத்தையும் அளிக்கிறது!

கோவில் ஒரு சரித்திரக் களஞ்சியம்.

அதைச் சுட்டிக் காட்டுவாருமில்லை. பேணுவாருமில்லை.

ஒலி ஒளி ஏற்பாடு வைத்தால் தென்னாட்டுச் சரித்திரம் முழுவதையுமே கோவில் சரித்திரத்தின் மூலம் காட்டலாம். அவ்வளவு கீர்த்தி, வரலாறு வாய்ந்தது இந்தக் கோவில்!

அதற்கெல்லாம் நல்ல காலம் வருமா?



அந்த முகத்தை என்னால் மறக்கவே முடியாது.
ஸ்ரீதேவியின் டயரி
- அடுத்த இதழில்.